# இருக்கு - வேதம்

(இரண்டாம் பாகம்)

தமிழ் மொழி பெயர்ப்பு

எம். ஆர். ஜம்புநாதன்



T. N. A. IYER
Flat No. 8, Second Floor
Rag Mayur
19th Road, Khar Road,
Bombay 400 052.

1991

இரண்டாம் பாகம்
(நான்கு மண்டலங்கள் அடங்கியது)
ஏப்ரல் — 1980
மறு பதிப்பு — 1991



Printed at the *National Press*, Madras 600 002.



# சமர்ப்பணம்

நீண்ட காலமாக நான்கு வேதங்களையும் உபநிஷத்களையும் தமிழில் மொழிபெயர்த்து அவ் வேதக் கருத்துக்களை மக்களிடை பரப்ப என் கணவர் – தமிழ் வேதோபநிஷத ஆசிரியரான ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன் அவர்கள் எடுத்துக்கொண்ட இலட்சியம் இன்று அவரது இருக்கு - வேதம் இரண்டாம் பாகத்துடன் ஈடேறிவிட்ட வகையில் அம் மா முனிவரின் ஆத்ம சாந்திக்கும், என் ஆத்ம திருப்திக்கும் அவரது ரிக் வேத இரண்டாம் பாகத் தமிழ் மொழி பெயர்ப்பினை, இப் பரந்த பாரத மண்ணின் மைந்தர்களுக்கே அவர் சார்பில் சமர்ப்பிக்கிறேன்.

—சாந்தி ஜம்புநாதன்

# முகவுரை

"ஒவ்வொரு ஹிந்துவின் இதயத்திலும் வேதம் ஞான ஒளி பரப்பிப் பிரகாசிக்க வேண்டும். இதற்கு இந்திய மொழிகள் அனைத்திலும் வேதம் மொழி பெயர்க்கப்பட வேண்டும்".

இதுதான் என் கணவர் அமரர் ஸ்ரீ M. R. ஜம்புநாதன் அவர்களின் வாழ்க்கை லட்சியமாக இருந்தது. வாழ்வதே லட்சியம் என்றில்லாமல், லட்சியத்திற்காகவே வாழ்ந்த அவர், இறுதி மூச்சு விடுவதற்கு முன்பாகவே அந்த லட்சிய விரதத்தை நிறைவேற்றியும் காட்டினார்.

"எங்கும் தமிழ், எதிலும் தமிழ்" என்ற கோஷம் முழங்கும் இந்நாளில் தமிழார்வம் என்பது வியப்பளிக்கக் கூடிய ஒன்று அல்ல. ஆனால், சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒருவர் தன்னந்தனியாக – தானே ஒரு இயக்கமாகத் தமிழ்ப் பணிக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு வேதங்களை மொழி பெயர்க்கும் இமாலயப் பணியில் ஈடுபட்டார் என்றால், அந்த ஈடுபாட்டை – சாதனையை என்னவென்று கூறுவது ?

குரு – சிஷ்யன் மரபில் வளர்ந்து வந்த வேத பாராயணம் இன்று குரு, சிஷ்யன் இருவருமே கிடைக்காத நிலையில் இருப்பதைக் காண்கிறோம். வேத ஞானத்தைப் பெற விரும்புகின்ற தமிழ் மக்களுக்கு இந்தப் புத்தகமே இனி குருவாக இருக்கும்.

நான்கு மறைகளில் ரிக் வேதமே முதன்மையானதும் பழமையானதும், மிகப் பெரியதானதுமாகும். ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாக நமது மூதாதையர்கள் எவ்வாறு ஆன்மீகச் சிறப்புடனும், கலாசார, நாகரிக மேம்பாட்டுடனும் வாழ்ந்தார்கள் என்பதற்கு அவை காலத்தை வென்று ஞாலத்தில் நிலை கொண்ட சாசுவதச் சின்னங்களாக விளங்குகின்றன.



என் கணவரின் மொழி பெயர்ப்பு, மூலத்தின் தத்வ சாரத்தை அப்படியே பிரதிபலிக்கும் வகையில் அமைந்திருக்கிறது.

இருக்கு வேதத்தின் 5133 ரிக்குகளையும், 516 சூக்தங்களையும் தமிழ் வடிவில் படித்துணரும் போது அவை நமது நித்திய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருப்பதை உணரலாம்.

ரிக் வேதத்தின் முதல் பகுதி வெளிவந்தபோது நாடு முழுவதும் உள்ள அறிஞர்களும், பிரமுகர்களும் அளித்த ஆதரவு, இந்த இரண்டாம் பகுதியை வெளியிடும் ஆர்வத்தை எங்களுக்கு ஊட்டியது.

முதற் பகுதியை வெளியிட்டு சிறப்புரை ஆற்றிய டாக்டர் ராஜா ராமண்ணா, "நமது கல்வி ரிக் வேதத்திலிருந்து துவங்க வேண்டும். அது ஒரு சுய நூல் என்பதால் அல்ல, அது நமது கலாசாரத்தின் – உலக கலாசாரத்தின் அடிப்படையாக இருப்பதால்" என்று கூறியது நாட்டின் தலைசிறந்த அணுவியல் விஞ்ஞானியின் இதயத்திலிருந்து வந்த அந்த வார்த்தைகள் என் நினைவில் இன்னும் பசுமையாக இருக்கின்றன.

தேவர்கள் பாஷையான சமஸ்கிருதத்தில் உள்ள வேதங்களைத் தமிழில் மொழி பெயர்ப்பதா? என்ற முணுமுணுப்பு அந்தக் காலத்தில் எழுந்ததுண்டு. "தமிழில் மட்டுமல்ல, எல்லா இந்திய மொழிகளிலும் வேதங்கள் மொழி பெயர்க்கப்பட வேண்டும்" என்று கர்ஜித்தார் என் கணவர்.

மற்ற மதத்தவர்களுக்குப் பொதுவான ஒரு சுய நூல் இருப்பதைப் போல, ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொரு

வருக்கும் பொதுவான சுய நூல் நமது வேதம் தான். அதை ஒவ்வொரு ஹிந்துவும் தனது தாய் மொழியில் படித்து உணர வேண்டும்" என்பது அவரது தீர்க்கமான முடிவாக இருந்தது.

வேதங்கள் இறந்த காலத்தின் கால் சுவடுகள் அல்ல; அவை நமது வருங்கால வாழ்வுக்கு – ஆன்மீக மேம்பாட்டுக்கு வழிகாட்டும் ஒளிவிளக்கு – என்றும் அணையாத ஜீவ தீபங்கள் என்று அவர் உறுதியாக நம்பினார்.

10-ம் நூற்றாண்டிலிருந்து பிற மதத்து ஆட்சியாளர்களின் ஆக்ரமிப்பு; 16-ம் நூற்றாண்டிலிருந்து ஐரோப்பிய கலாசார படை எடுப்பு; இவை இரண்டும் ஏற்கனவே உட்பூசல்களால் சிதறுண்டு கிடந்த ஹிந்து சமூகத்தை மேலும் சிறுமைப்படுத்தி விட்டது. ஹிந்துக்களை மீண்டும் ஒருங்கிணைக்கும் ஒரு பாலமாக வேதங்களைக் கண்டார் அவர். ஆனால், வேதங்கள் சமஸ்கிருத மொழியில் மட்டும் உள்ள வரை இந்த லட்சியம் ஈடேற வாய்ப்பில்லை என்பதை உணர்ந்த அவர், இந்த மொழிபெயர்ப்பின் மூலம், வேதங்களுக்கும் தமிழ் உலகுக்கும் ஒரு பாலம் அமைத்துக் கொடுத்திருக்கிறார்.

இந்தப் புத்தகம் என் கணவரின் வாழ்நாளிலேயே வெளிவந்திருக்க வேண்டும். ஆனால், பல காரணங்களால் அது நடைபெறவில்லை. இந்த லட்சியத்தை ஈடேறச் செய்தவர் என் கணவருடன் முப்பதாண்டு காலம் நெருங்கிப் பழகியவரான எங்கள் குடும்ப நண்பர் ஸ்ரீ R. முருகையா அவர்களாவார். அவர்களுக்கு எங்கள் உளம் நிறைந்த நன்றி.

தமிழ் கூறும் நல்லுலகம் ரிக் வேத இரண்டாம் பகுதியை வரவேற்று எங்கள் தமிழ்ப் பணிக்கு ஊக்கம் அளிக்கும் என நம்புகிறேன். குற்றங் கழித்து குணங் கிரகிப்பது கற்றோர்க்கழகு.

—சாந்தி ஜம்புநாதன்

# Life Sketch of
# SHRI M. R. JAMBUNATHAN

## A life time service to the spread of Vedic culture

If India is rich in cultural heritage, it is due to the untiring, selfless and scholarly dedication of a few, who searched for truth and the inner meanings of life. As they strove, they found odds and found issues insoluble; they found what Rabindranath Tagore called "a sense of the inexhaustible that is implicit in life". But yet they strove, delving deeper and deeper. The cultural heritage of this great nation is in fact the fruit of this endless striving — striving for sublime solutions to the eternal play of life. This search for sublime answers to eternal problems has also induced variety and diversity in thoughts propounded and paths recommended. In the historical process of evolution, those thoughts and paths became the preserve of a few, though learned. But there were men who not only imbibed those thoughts and learning but also sought their communication to the general populace. In every language and in every region of this great nation, we have always found such men of learning. The late Shri M. R. Jambunathan, who died on 18th December, 1974 at the age of 78, was one such Vedic and Upanashadic Scholar, who while he lived, lived a rich life and when he died, died with a rich sense of fulfilment.

Born in Manakkal, Tiruchirapalli District, Tamil Nadu on August 23, 1896, the late Shri Manakkal Ramaswamy Jambunathan was educated in Tamil, Sanskrit and English. He attained great scholarship in these languages, particularly in Tamil and Sanskrit. It was yet the firm conviction of the late Shri Jambunathan

that scholarship if treated as an end in itself, would not lend society anywhere; it had to have a purpose and that purpose was to communicate the thoughts of scholarship to the people in their own language. But even for this, the vast majority of the people, remained unprepared because of illiteracy, poverty and general backwardness. Therefore, the late Shri Jambunathan carved out a role for himself in the upliftment of the depressed classes.

As a social worker, the late Shri Jambunathan became the organiser of the Depressed Classes Mission Madras 1918-20. He later shifted to Bombay, which in the years to come, became the centre of all his activities. In Bombay, he worked for the founding in 1924, the first Tamil Primary School for the poor and downtrodden living in the slums of Dharavi. The Golden Jubilee of the School was celebrated in 1974 at his hands. By then there were as many as 45 Municipal Tamil Schools in this great Metropolis for the benefit of the poor, some of them leading upto the Matriculation.

The late Shri Jambunathan's learning and scholarship were deeper and wider, and his accomplishments truly great. He pioneered the translation of the *Vedas* and *Upanishads* into Tamil with the sole purpose of communicating them to the sons and daughters of India. The *Sama*, *Yajur* and *Atharva Veda* were published by him in the forties. After thirty years of devoted work, he completed the translation of *Rig Veda* in his life time.

The late Shri Jambunathan was of the firm conviction that Vedas, if they were truly interpreted and brought within the knowledge of the people, the animosities that unfortunately existed between the different sects would



give place to abiding fellow-feeling and *camraderie*. "In order that Vedas shrine in the heart of every Hindu, the sun of Vedas will have to rise on the horizon of all the languages of India" he said. As every language is sacred, no language can claim monopoly and divinity to itself. Hence it should be translated in all languages and made known to people in their mother tongue.

The late Shri M. R. Jambunathan was associated with several all-India bodies. He had been a member of the All-India P. E. N. Centre, Bombay, from the year 1933, and its Honorary Secretary for many years. He organised the International P. E. N. Conference at Annamalai Nagar in 1954 which was inaugurated by Pandit Jawaharlal Nehru, former Prime Minister of India and presided over by Dr. S. Radhakrishnan, former President of India. Shri M. R. Jambunathan attended the International P. E. N. Congress at Tokyo in 1957, the World Tamil Writers' Congress in Madras 1968, the International Congress of Orientalists and Indologists in New Delhi and the Sanskrit Vishwa Parishad at Somanath. Shri M. R. Jambunathan was also a member of the Vedic Research Institute, Hoshiarpur, the World Academy of Sanskrit, the Bhandarkar Oriental Research Institute, Poona, the World Tamil Writers' Association, the Bharatiya Vidya Bhavan, the Royal Asiatic Society and many other such organisations. He was a regular contributor of articles to Vedic Journals and he contributed several Research papers on Vedic and Upanishadic lore to the Oriental Congress and other Conferences.



# இருக்கு வேதம்

## இரண்டாம் பாகம்

# பொது உரையும் பொருளடக்கமும்

## ஏழாவது மண்டலம்

## எட்டாவது மண்டலம்

| சூக்தம் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 705 | அசுவினிகள் : கிருஷ்ணன் அசுவினிகளை அழைக்கிறான். | 337 |
| 706 | அசுவினிகள் : ஸவிதா சத்தியத்தால் சாந்த மளிக்கிறான். | 338 |
| 707 | அசுவினிகள் : சத்தியத்தைப் பாலிக்கும் அசுவினிகள் காலையில் வருகிறார்கள். | 339 |
| 708 | இந்திரன் : வீரச்செயலாலும் சக்தியாலும் வீரனாயிருக்கவும். | 340 |
| 709 | இந்திரன் : இந்திரன் அபக்குவப் பசுக்களிலே பக்குவப் பாலை வைத்தான். | 341 |
| 710 | இந்திரன் : தாழாத இந்திரன், பகைவர்களைத் தாழ்த்துகிறான். | 342 |
| 711 | இந்திரன் : அபாலை இந்திரனை நேசிக்கிறாள். | 343 |
| 712 | இந்திரன் : செயலாளர்களான நாங்கள் செயல்களில் இயங்குவோமாக. | 344 |
| 713 | இந்திரன் : நான் சாகேன். | 348 |
| 714 | மருத்துக்கள் : அறிஞர்கள் எப்பொழுது பிரகாசிக்கிறார்கள் ? | 352 |
| 715 | திரஸ்சீ ஆங்கிரஸன் : சுத்தனை எங்களில் செல்வத்தை ஸ்தாபிக்கவும். | 353 |
| 716 | இந்திரன் : மருத்துக்களைத் தவிர வேறு தேவர்கள் எல்லாம் இந்திரனைக் கைவிட்டார்கள். | 354 |
| 717 | இந்திரன் : இந்திரன் தன் பலத்தால் அனைவரையும் முந்துகிறான். | 358 |
| 718 | இந்திரன் : இந்திரனே, தாயும் தந்தையுமாகிறான். | 360 |



| சூக்தம் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 719 | இந்திரன் : இந்திரனுடைய அழிக்கும் பலத்தை சோதியும் புவியும் பின்பற்றுகின்றன. | 361 |
| 720 | இந்திரன் : தேவர்கள் தேவியான வாக்கைப் பிறப்பித்தார்கள். | 363 |
| 721 | பலதேவர்கள் : பசு அமிருதத்தின் நாபியாயிருக்கிறாள். | 365 |
| 722 | அக்கினி : அக்கினி செல்வங்களின் தலைவனாயிருக்கிறான். | 368 |
| 723 | அக்கினி : அக்கினி சோதியின் உச்சியிலே அமர்ந்திருக்கிறான். | 370 |

## ஒன்பதாவது மண்டலம்

| சூக்தம் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 724 | பவமான ஸோமன் : ஸோமபானத்திலே இந்திரன் பகைவர்களை அழிக்கிறான். | 373 |
| 725 | பவமான ஸோமன் : ஸோம தாரைகள் அமுதத்தைக் கறக்கின்றன. | 374 |
| 726 | பவமான ஸோமன் : தேவனான அமுதன் பகைவர்களை எதிர்த்துப் பாய்கிறான். | 375 |
| 727 | பவமான ஸோமன் : ஸோமனே எங்களை மேம்படுத்தவும். | 376 |
| 728 | ஆப்பிரீ சூக்தம் : ஸோமன் ஸமிதையாயும் தநூநபாதனாயுமிருக்கிறான். ஸோமன் இந்திரனும் பிரஜாபதியாயுமிருக்கிறான். | 377 |
| 729 | பவமான ஸோமன்: ஸோமன் தன் கவித்தன்மையைப் பாலித்துக் கொள்கிறான். | 379 |
| 730 | பவமான ஸோமன் : ஸோமன் ருத் வழியால் யக்ஞத்தில் பாய்கிறான். | 380 |

## பத்தாவது மண்டலம்

# இருக்கு வேதம்

## ஏழாவது மண்டலம்

### 1. அக்கினி

#### 517. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மனிதர்கள், உத்தமனும், தூரதரிசியும், மனையின் பதியும், இரு அரணிகளில் இருப்பவனும், விரல்களின் மந்தனத்தால் பற்றத் தகுந்தவனுமான அக்கினியைப் பிறப்பிக்கிறார்கள்.

2. வசுக்களான வசிட்டர்கள், நித்தியனும், ஒவ்வொரு மனையிலும் போற்றத் தகுந்தவனும், தோற்றமுள்ளவனுமான அக்கினியை, இடைவிடாது பாலனத்துக்காக மனையிலே ஸ்தாபிக்கிறார்கள்.

3. தருணனே! அக்கினியே! நன்கு சொலிப்பிக்கப்பட்ட நீ, தேயாத சுவாலையோடு எங்கள் முன்னே பிரகாசிக்கவும், உன்னிடம் மிகுந்த அவிகள் வருகின்றன.

4. நல்ல பிறப்புக்களுள்ள யக்ஞகர்த்தாக்கள் அமரும் இடத்திலுள்ள, அந்தப் பிரகாசமாயுள்ள, அனல்கள் மிக்க ஒளியோடு விளங்குகின்றன. அந்த அக்கினிகள் சாதாரண அனல்களைக் காட்டிலும், புகழுள்ள வீரப்புதல்வர்களை அளிப்பவையாயிருக்கின்றன.

5. ஆற்றலுள்ள அக்கினியே! எங்கள் ஸ்தோத்திரத்தால் எங்களுக்கு, தாக்கவிரும்பும் பகைவனால் பற்றப்படாமலிருக்கும் பொருளையும், உத்தம வீரர்களுள்ளதும், உத்தம வம்சங்களுள்ளதும், புகழுள்ளதுமான செல்வத்தையுமளிக்கவும் 5138

6. உத்தம பலமுள்ள அவனை, அவியேந்துவதும் நெய்யையளிப்பதுமான சிருவம், இரவும் பகலும் அணுகுகிறது. அவனுடைய ஒளி வழிபடுபவர்களுக்குச் செல்வத்தை விரும்பிக்கொண்டு சிருவத்தினிடம் செல்லுகிறது.

# இருக்கு வேதம்

## ஏழாவது மண்டலம்

### 1. அக்கினி

#### 517. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மனிதர்கள், உத்தமனும், தூரதரிசியும், மனையின் பதியும், இரு அரணிகளில் இருப்பவனும், விரல்களின் மந்தனத்தால் பற்றத் தகுந்தவனுமான அக்கினியைப் பிறப்பிக்கிறார்கள்.

2. வசுக்களான வசிட்டர்கள், நித்தியனும், ஒவ்வொரு மனையிலும் போற்றத் தகுந்தவனும், தோற்றமுள்ளவனுமான அக்கினியை, இடைவிடாது பாலனத்துக்காக மனையிலே ஸ்தாபிக்கிறார்கள்.

3. தருணனே! அக்கினியே! நன்கு சொலிப்பிக்கப்பட்ட நீ, தேயாத சுவாலையோடு எங்கள் முன்னே பிரகாசிக்கவும், உன்னிடம் மிகுந்த அவிகள் வருகின்றன.

4. நல்ல பிறப்புக்களுள்ள யக்ஞகர்த்தாக்கள் அமரும் இடத்திலுள்ள, அந்தப் பிரகாசமாயுள்ள, அனல்கள் மிக்க ஒளியோடு விளங்குகின்றன. அந்த அக்கினிகள் சாதாரண அனல்களைக் காட்டிலும், புகழுள்ள வீரப்புதல்வர்களை அளிப்பவையாயிருக்கின்றன.

5. ஆற்றலுள்ள அக்கினியே! எங்கள் ஸ்தோத்திரத்தால் எங்களுக்கு, தாக்கவிரும்பும் பகைவனால் பற்றப்படாமலிருக்கும் பொருளையும், உத்தம வீரர்களுள்ளதும், உத்தம வம்சங்களுள்ளதும், புகழுள்ளதுமான செல்வத்தையு மளிக்கவும்
5138

6. உத்தம பலமுள்ள அவனை, அவியேந்துவதும் நெய்யையளிப்பதுமான சிருவம், இரவும் பகலும் அணுகுகிறது. அவனுடைய ஒளி வழிபடுபவர்களுக்குச் செல்வத்தை விரும்பிக்கொண்டு சிருவத்தினிடம் செல்லுகிறது.

7. அக்கினியே! நீ எந்த சுவாலைகளால் பூர்வத்தில் ஜருதனை எரித்தாயோ அந்த சுவாலைகளால் சத்துருக்களை யெல்லாம் பஸ்மப்படுத்தவும். நோயை மௌனமாய் நீக்கவும்.

8. அக்கினியே! வசிஷ்டனே! பிரகாசிக்கும் பாவகனே! உன்னுடைய சுவாலையை ஒளிப்படுத்துபவனிடம், இந்தத் துதிகளோடு உன்னைத் துதிக்கும் எங்களிடமும் நீ விளங்கவும்.

9. அக்கினியே! பிதாக்களுக்கு இதமாயிருக்கும் மானிடர்களும், தலைவர்களும், பல இடங்களில் உன்னுடைய காந்தியைப் பகிர்ந்துகொள்ளுகிறார்கள். எங்களுடைய இந்தத் துதிகளால் துதிக்கப்பட்டு இந்த யக்ஞத்திலே துலங்கவும்.

10. அக்கினியே! என்னுடைய இந்தச் செயலைப் போற்றுபவர்களும், சங்கிராமங்களில் சூரர்களாயிருப்பவனுமான இந்த மனிதர்கள், அசுரிகளின் எல்லா மாயைகளையும் விலக்குவார்களாக. 5143

11. அக்கினியே! நாங்கள் சூன்யமாயிருக்கும் மனையில் வசிக்காமலிருப்போமாக. அந்நிய மனிதர்களுடைய மனையிலும் வசிக்காமலிருப்போமாக. நாங்கள் புதல்வரற்றும், வீரரற்றும் இல்லாமலிருப்போமாக. நாங்கள் மனைகளின் நண்பனான உன்னைப் போற்றி மக்கட்கள் நிறைந்த மனையில் வசிப்போமாக.

12. குதிரைகளுள்ள நீ எந்த யக்ஞத்துக்கு நித்தியமாய்ச் செல்லுகிறாயோ அங்கு அக்கினியே! எங்களுடைய மனையைப் புதல்வர்களோடும், உத்தம வம்சத்தோடும் செழிக்கும் சந்தானங்களோடும் செழிப்பிக்கவும்.

13. அக்கினியே! அன்பற்ற அரக்கர்களிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். கருமியினிடமிருந்தும், பாவம் விரும்புபவனிடமிருந்தும், துன்பப்படுத்துபவனிடமிருந்தும் எங்களை பாலிக்கவும். நாங்கள் நண்பனான உன்னோடு சேர்ந்து பகைவர்களை ஜயிப்போமாக.



14. எந்த அக்கினியிலே திறக்கையுள்ளவனும், ஆயிரம் இடங்கள் இருப்பவனும், வலியனுமான புதல்வன் நித்யத் தோத்திரத்தோடு சேர்கிறானோ என்றால் ஒளிப்பிக்கப்பட்ட அவ்வக்கினி அந்நியர்களால் எழுப்பப்பட்ட அனல்களையெல்லாம் வெல்க!

15. துன்பத்திலிருந்து சுவாலை எழுப்புபவனைப் பாலிப்பவனும், பகைவனிடமிருந்து காப்பவனுமான இவனே அந்த அக்கினி. உத்தம வம்சத்தில் தோன்றிய வீரர்கள் அவனையே போற்றுகிறார்கள். 5148

16. செல்வத்தை விரும்பி அவியளிப்பவனால் சொலிப்பிக்கப்படுபவனும் யக்ஞங்களில் ஹோதாவால் சுற்றப்பட்டு வருபவனுமான இந்த அக்கினி பல இடங்களிலே அழைக்கப்படுகிறான்.

17. அக்கினியே! செல்வர்களின் தலைவர்களான நாங்கள் துதியையும், தோத்திரத்தையுங்கூறி யக்ஞத்துக்கு உன்னைக் கவர்ந்து உனக்குப் பல நித்திய அவிகளை அளிப்போமாக.

18. அக்கினியே! அழியாத நீ, இந்த மிக்க விரும்பத் தகுந்த அவிகளைத் தேவசமூகத்தின் முகப்பிலே ஏந்திச் செல்வாயாக. எங்களுடைய சுகந்தமான அவிகள் அவர்களைத் திருப்தி செய்க.

19. அக்கினியே! வீரர்களின் தேவைக்கு - அவசியத் திற்கு - எங்களைச் செலுத்தாதே. இழிவான ஆடைக்கும் அழிவுக்கும் உட்படுத்தாதே. பசிகளிலும் அரக்கர்களிலும் செலுத்தாதே. எங்களைப் பசிக்கும் அரக்கர்களுக்கும் நீட்டாதே. சத்தியத்தைப் பாலிப்பவனே! வனத்திலோ, மனையிலோ எங்களைத் துன்பத்துக்கிரைப்படுத்தாதே.

20. அக்கினியே! தோத்திரங்களைக்கூறும் எனக்குப் பலத்தை அளிக்கவும். தேவனான அக்கினியே! அவிச்செல்வர்களான எங்களுக்கு உணவை அளிக்கவும். அறிஞர்களும் செல்வர்களுமான நாங்கள் உன் தானத்தில் சிறப்போமாக.

நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளால் பாலியுங்கள். 5153

21. அக்கினியே! இனிய தோற்றமுள்ளவனும், ஆர்வத்தோடு அழைக்கப்படுபவனும், ஆற்றலின் மகனுமான நீ மிகுந்த ஒளியோடு பிரகாசிக்கவும். பிறப்பிக்கப்பட்டு உன்னால் சேரப்படும் புதல்வனை நாசப்படுத்தாதே. எங்களுடைய மானிடருக்கும் நலமாயுள்ள ஆண்மகன் அழியாமலிருப்பானாக.

22. எங்களுக்குத் தீமை செய்ய அறிஞர்களால் மூட்டப்பட்டவையும், உன்னோடு இணைக்கப்பட்டவையுமான, அனல்களை இயங்கச் செய்யாதே! பலத்தின் மகனும், தேவனுமான உன்னுடைய துன்மதிகள் பிரமையிலும் எங்களிடம் தோன்றாமலாகுக.

23. ஒளியுள்ள அக்கினியே! அமிருதனான உனக்கு அவிகளையளிக்கும் மனிதன் செல்வனாகிறான். செல்வத்தைத் தேடிச்செல்லும் அறிஞனுக்குத் தேவன் செல்வத்தைத் தருகிறான்.

24. அக்கினியே! எங்களுடைய மகத்தான செயலை அறியும் நீ, வழிபடுபவர்களுக்கு மிகுந்த செல்வங்களை ஏந்தி வா. ஆற்றலுள்ள அக்கினியே! நாங்கள் பூரணாயுஸோடும் உத்தம வீரர்களோடும் இன்புறுவோமாக.

25. அக்கினியே! தோத்திரங்களைக் கூறும் எனக்குப் பலத்தையளிக்கவும். தேவனான அக்கினியே! எங்களுக்கு உணவைச் செலுத்தவும். அறிஞர்களும் செல்வர்களுமான நாங்கள் உன் தானத்தில் சிறப்போமாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளால் பாலியுங்கள். 5158

## 2. ஆப்பிரீ சூக்தம்

### 518. மைத்திராவருணி வசிஷ்டன்

#### சமித்தனம்

*1.* அக்கினியே! எங்களால் ஒளிப்பிக்கப்பட்டு மிகுந்த போற்றத் தகுந்த புகையை எழுப்பும் நீ, இன்று எங்கள்



சமிதையை இன்பமாய்ப் பெற்றுக்கொள்ளவும். உன்னுடைய தாபப்படுத்தும் சுவாலைகளால் திவ்விய உச்சியைப் பரிசிக்கவும். நீ சூரியனுடைய ரசிமிகளோடு சேரவும்.

#### நராசம்ஸன்

2 உத்தமச் செயல்களை நடத்துபவர்களும், மிக்கப் பிரகாசிப்பவர்களும், யக்ஞங்களைத் தாங்குபவர்களும், இருவித அவிகளைச் சுமப்பவர்களுமான தேவர்களின் நடுவே நராசம்ஸனின் மகிமையை நாங்கள் போற்றுகிறோம்.

#### இளை

3. நாங்கள் போற்றத் தகுந்தவனும், ஆற்றலுள்ளவனும், பேரறிஞனும் சோதிபுவிகளின் நடுவே தூதனும், சத்தியத்தைக் கூறுபவனும், இப்பொழுது மனிதர்களைப்போல் பூர்வத்தில் மநுவால் எழுப்பப்பட்டவனுமான அக்கினி, யக்ஞத்துக்கு வர அவனை எப்பொழுதும் போற்றுவோமாக.

#### தருப்பை

4. வழிபடுபவர்கள் தருப்பையை ஏந்தி, முழந்தாள்களோடு பணிந்து அக்கினிக்குப் பரத்துகிறார்கள். அத்வர்யுக்களே! நெய் சிந்தப்பட்டிருப்பதும் பந்துக்களிடமிருப்பதுமான தருப்பைக்கு அவனை அழைத்து நீங்கள் அவியால் அலங்கரியுங்கள்.

#### கதவுகள்

5. சுத்தச் செயல்களோடு தேவர்களை விரும்பும் தலைவர்கள், கதவுகளைத் திறந்தார்கள். பூருவத்திலே வைக்கப்பட்டிருக்கும் சிறுவர்கள் யக்ஞங்களிலே அக்கினியை நெய்யால், கன்றை நக்கிச் சுத்தப்படுத்தும் பசுக்களைப் போலும், நிலங்களை வளப்படுத்தி எழில் செய்யும் நதிகளைப்போலும், ஊட்டி எழில்படுத்துகின்றன. 5163

#### இரவும் பகலும்

6. செல்வமுள்ளவர்களும், பலரால் அழைக்கப்படுபவர்களும், தருப்பையில் அமர்ந்திருப்பவர்களும், துதியாருகர்களும், ஒளியிலிருந்து தோன்றியவர்களும், மகத்தானவர்

களும், யுவதிகளுமான இரவும் பகலும் எங்களுடைய க்ஷேமத்துக்கு எங்களோடு சுலபமாய்க் கறக்கப்படும் பசுவைப்போல் இருப்பார்களாக.

### இரு ஹோதாக்கள்

7. நான் விப்பிரர்களும், ஜாதவேதஸர்களும், மானிடர்கள் செய்யும் யக்ஞங்களிலே கர்த்தாக்களுமான உங்கள் இருவர்களையும் போற்ற நினைக்கிறேன். துதிகள் கூறப்படுங்கால் எங்கள் யக்ஞத்தை உயர்த்துங்கள். தேவர்களின் நடுவே பாலிக்கப்படும் அரிய செல்வங்களை எங்களுக்காகப் பெறுங்கள்.

### மூன்று தேவிகள்

8. பாரதிகளோடு சேர்ந்திருக்கும் பாரதியும், தேவர்களோடும் மனிதர்களோடும் சேர்ந்திருக்கும் இளையும், ஸாரஸ்வதர்களோடு அக்கினியும், ஸரஸ்வதியும் வருவார்களாக. மூன்று தேவிகளும் இந்தத் தருப்பையின் மீது எங்கள் முன்னே அமருவார்களாக.

### துவஷ்டா

9. தேவனான துவஷ்டாவே! நீ இன்பமாகி, எங்களுக்குத் திறச்செயலுள்ளவனும், உத்தம பலமிருப்பவனும், தேவபக்தனுமான வீரப்புதல்வனைப் பிறப்பிப்பதுமான புஷ்டிகர ரேதஸை ஊக்கமாய்ப் புலப்படுத்தவும்.

### வனஸ்பதி

10. வனஸ்பதியே! தேவர்களை அருகிலே அழைத்து வா. சாந்தப்படுத்தும் அக்கினி, அவியைப் பக்குவப்படுத்துவானாக. ஸத்தியனாயிருக்கும் அவன் ஹோதாவாக யஜிப்பானாக. ஏனெனில், அவன் தேவர்களின் சன்மங்களை அறிகிறான்.

### சுவாஹா

11. அக்கினியே! சொலிப்பிக்கப்பட்ட நீ, ருத்திரனோடு ஒரே தேரிலே துரிதமாயுள்ள தேவர்களோடு எங்கள் முன்னே வா. உத்தம புதல்வர்களுடைய தாயாரான அதிதி, தருப்பையின்மீது அமர்வாளாக. எங்களுடைய சுவாஹா அமிருதர்களான தேவர்களை இன்புறுத்துக. 5169



# 3. அக்கினி

## 519. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அறிஞர்களே! மனிதர்களின் நடுவே நித்தியமாய் நிலைத்திருப்பவனும், சத்தியத்தைப் பாலிப்பவனும் சுவாலைக் கிரீடமுள்ளவனும், சுத்தப்படுத்துபவனும், நெய்யை உணவாக உள்ளவனும், தேவனும், வேறு அனல்களோடு சேர்ந்திருப்பவனுமான அக்கினியைத் தூதனாக நியமியுங்கள்.

2. புல்லுக்கு ஆர்வமுடன் கனைக்கும் குதிரையைப்போல் அவன் மகத்தான அடைப்பிலிருந்து-வனத்திலிருந்து-வெளிவந்தவுடன் காற்று அவனுடைய சுவாலையை ஆட்டுகிறது-வீசுகிறது. பிறகு-அக்கினியே! நீ சென்ற வழி கருப்பாயிருக்கிறது.

3. அக்கினியே! புதியவனாய்ப் பிறந்தவனும், பொழிபவனுமான உன்னுடைய சொலிபட்ட தேயாத சுவாலைகள் மேலே எழுகின்றன. பிரகாசிக்கும் புகை வானெங்கும் பரவுகிறது. நீ தூதனாகத் தேவர்களிடஞ் செல்லுகிறாய்.

4. அவன் சுவாலையின் பற்களால் உணவைப் புசிக்கும் போது அவனுடைய ஒளி புவியின்மீது துரிதமாய்ப் பரவுகிறது. அழகனே! நீ மரங்களைப் புற்களைப்போல் உன்னுடைய சுவாலையால் புசிக்குங்கால் உன்னுடைய சுவாலை எதிர்க்கும் சேனையைப்போல் பாய்கிறது.

5. மனிதர்கள் தருணனான அக்கினியை மாலையிலும் காலையிலும் குதிரையைப்போல் பாலிக்கிறார்கள். அவர்கள் அவனை அவனுக்குரிய இடத்திலே ஒளிப்படுத்துகிறார்கள். போற்றப்படும் வீரனுடைய சோதியானது ஒளியுடன் பிரகாசிக்கிறது. 5174

6. மிகுந்த ஒளியுள்ள அக்கினியே! நீ அருகிலே தங்கத்தைப்போல் துலங்குங்கால் உன்னுடைய உருவம் அழகாயிருக்கிறது. உன்னுடைய பலம் வானிலிருந்து இடியைப்போல் தோன்றுகிறது. நீ அழகான சூரியனைப்போல் ஒளியை புலப்படுத்துகிறாய்.

7. அக்கினியே! நாங்கள் உன்னை நெய்யும் பாலும் கலந்த அவிகளோடும் சுவாஹாவோடும் போற்றுங்கால் நீ எங்களை அபரிமிதமான, மகத்தான சிறப்புகளால் நூறு இரும்புக்கோட்டைகளைப்போல் பாலிக்கவும்.

8. சக்திமானே! ஜாதவேதஸனே! அளிப்பவனுக்கு உன்னிடமிருக்கும் தடைபடாத எல்லா சுவாஸ்கைளோடும், சந்ததியோடும், சலங்களைப் பாலிக்கும் பாக்களோடும் ஆதரவளிக்கும் நீ, அறிஞர்களும், வழிபடுபவர்களுமான எங்களைப் பாலிக்கவும்.

9. தன் சொந்தமான ஒளியால் காந்தியுள்ளவனும் பிரகாசிப்பவனுமான அக்கினி, அரணியிலிருந்து கூரிய கோடாரியைப்போல் தோன்றுங்கால் விரும்பத் தகுந்தவனும் பெரிய செயல்களை நடத்துபவனும், சுத்தனுமான அவன், குரு தாய்மார்களிடமிருந்து- அரணிகளிலிருந்து - பிறக்கிறான். அவன் தேவயஜனத்துக்காக வருகிறான்.

10. அக்கினியே! எங்களுக்கு இந்த சௌபாக்கிய செல்வங்களை ஒளிப்படுத்தவும். நாங்கள் மனத்திட்பத்தையும் பேரறிவையும் அடைவோமாக. உன்னைத் துதிப்பவனுக்கும் வழிபடுபவர்களுக்கும் எல்லா நலன்களும் தோன்றுக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5179

## 4. அக்கினி

### 520. மைத்திராவருணி அக்கினி

1. எல்லாத் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் நடுவே அறிவோடு செல்பவனும், சுக்கானும் சோதியுமான அக்கினிக்கு, சுத்தமான அவியையும் துதியையும் அளியுங்கள்.

2. பிரகாசிக்கும் பல்லுள்ளவனும், வனங்களைப்பற்றிக் கொள்பவனும், மிகுந்த உணவுகளைத் துரிதமாய்ப் புசிப்பவனும், தாயினிடமிருந்து பிறக்குங்கால் மிக்க இளைஞனாயிருப்பவனும், அறிஞனுமான அக்கினி எங்களுடைய தாரகனாயிருப்பானாக.



3. வீரப்புதல்வர்களின் துதியை ஏற்பவனும், மனிதர்களின் நன்மைக்காகப் பிரகாசிப்பவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், மனிதர்களால் பற்றப்பட்ட வெண்மையான சோதியுள்ளவனுமான அவன் முன்னே நாம் அனைவரும் சேரவேண்டும்.

4. கவியும், அமுதனும், பேரறிஞனுமான இந்த அக்கினி கவித்தன்மைகளற்ற —அற்ப அறிவுள்ள — மானிடர்களிலே வைக்கப்பட்டிருக்கிறான். ஆற்றலுள்ள அக்கினியே! நாங்கள் எப்பொழுதும் உன்னிடம் நல்ல மனங்களுடனிருக்க நீ எங்களை இங்கு துன்புறுத்தாதே.

5. அமுதர்களுக்கு அவிகளை எடுத்துச்செல்ல தேவர்களால் கற்பிக்கப்பட்ட இடத்தில் இருப்பவனும், அனைத்தையும் தாங்குபவனுமான அக்கினியை ஓஷதிகளும், மரங்களும், புவியும் கருவாக ஏந்துகின்றன. 5184

6. மிகுந்த உணவை அளிக்கும் ஆற்றலை அக்கினி அடைந்திருக்கிறான். ஆண் சந்ததியுடனுள்ள செல்வங்களை அளிக்கும் சக்தனாயிருக்கிறான். ஆற்றலுள்ள அக்கினியே! நாங்கள் வீரப்புதல்வரற்றும், எழிலற்றும், துதியற்றும் உன்னிடம் அமராமலிருப்போமாக.

7. கடனற்றவனுடைய செல்வம் போதுமானதாயிருக்கிறது. நாங்கள் நித்திய செல்வங்களின் அதிபதிகளாயிருப்போமாக. அந்நியனால் பிறப்பிக்கப்பட்டவன் புதல்வனாகான். அறிவிலியின் வழிகளை நீட்டாதே.

8. வேறொரு புதல்வனைச் சுவீகரிப்பது விரும்பத்தகுந்ததில்லை. ஏனெனில் அவனை மற்றவனுடைய புதல்வன் என நினைக்கவேண்டும். கடன்களைத் தீர்க்காதவன் மதிப்புக்குரியவனாகலாம். ஆனால் மற்றவனுடைய புதல்வனை ஏற்பது என் பழைய மனத்திலும் நினைக்கலாகாது. ஏற்கப்பட்ட புதல்வன்

மெய்யாகவே அவனுடைய மனைக்கே திரும்புவான். ஆதலால் உணவுள்ளவனும், பகைவர்களை ஜயிப்பவனும், புதிய பிறப்புமுள்ள மகன் எங்களுக்குத் தோன்றுவானாக.

9. அக்கினியே! எங்களைத் துன்புறுத்துபவனிடமிருந்து பாலிக்கவும். ஆற்றலுள்ள நீ எங்களைப் பாவத்திலிருந்து காக்கவும். மாசற்ற உணவு உன்னிடமிருந்து வருக. நாங்கள் விரும்பும் செல்வங்கள் ஆயிரக்கணக்காய்த் தோன்றுக.

10. அக்கினியே! எங்களுக்கு இந்த சௌபாக்ய செல்வங்களை ஒளிப்படுத்தவும். நாங்கள் மனத்திட்பத்தையும் பேரறிவையும் அடைவோமாக. உன்னைத் துதிப்பவனுக்கும், வழிபடுபவர்களுக்கும் எல்லா நலன்களும் தோன்றுக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5189

## 5. அக்கினி வைசுவாநரன்

### 521. மைத்திராவருணி வசிஷ்டன்

1. எல்லா அமிருதர்களுடைய யக்ஞங்களிலே வைசுவாநரனாக வளர்பவனும், விழித்திருக்கும் தேவர்களோடு சேர்ந்திருப்பவனும், சோதி புவிகளின் நடுவே தடைபடாமல் செல்பவனும், வலியனுமான அக்கினிக்குத் தோத்திரத்தைக் கூறுங்கள்.

2. நதிகளின் தயவனும், சலங்களைப் பொழிபவனும், சோதியனுமான அக்கினி, வானிலும் புவியிலும் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறான். வைசுவாநரன் மிக்க உத்தம அவியோடு வளர்ந்து மானிடப் பிரசைகளின் மீது பிரகாசிக்கிறான்.

3. அக்கினியே! வைசுவாநரனே! நீ புருவுக்காகப் பிரகாசமாகி அவனுடைய சத்துருக்களின் கோட்டைகளை இடித்து பஸ்மப்படுத்துங்கால் உனக்குப் பயந்து கருமை நிறமுள்ள சனங்கள் வெவ்வேறு மனமுள்ளவர்களாகி செல்வங்களை விட்டு விட்டு ஓடினார்கள்.

4 அக்கினியே! வைசுவாநரனே! சோதியும், புவியும், வானும் உன் விரதத்துக்கு - நியமத்துக்கு - பணிகின்றன. நீ நித்திய ஒளியோடு பிரகாசித்து உன்னுடைய சோதியால் வானையும் விண்ணையும் உடுத்துகிறாய்.

5. அக்கினியே! இந்திரனுடைய ஊக்கம் நிறைந்த குதிரைகள் உன்னைப் போற்றுகின்றன. மனிதர்களுடைய பாபத்தை நீக்குபவவையும் அவிகளோடுள்ளவையுமான பாக்கள் சனங்களின் தலைவனும், செல்வங்களைச் செலுத்துபவனும், தினங்களைப் புலப்படுத்துபவனும், உஷைகளின் வைசுவாநரனுமான உன்னைப் பாடுகின்றன. 5194

6. நண்பர்களைப் போற்றுபவனே! அக்கினியே! வசுக்கள் உன்னிலே ஆற்றலை ஒருமிக்கச் சேர்த்தார்கள். உன் வினைத்திட்பத்தை விரும்பினார்கள். அக்கினியே! நீ ஆரியனுக்காகப் பரந்த சோதியைப் பிறப்பித்து, மனையிலிருந்து தஸ்யுக்களை விலக்கவும்.

7. நீ உத்தம சோதியிலே தோன்றி, வாயுவைப்போல் எப்பொழுதும் ஸோமத்தைப் பருகுகிறாய். நீரைத் தோற்றுவித்து மின்னல் வடிவத்தோடு நீ கர்ச்சிக்கிறாய். வழிபடுபவனுக்குப் புதல்வனைப் போல் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறாய்.

8. அக்கினியே! வைசுவாநர ஜாதவேதஸனான நீ, எந்த ஒளியுள்ள மழையால் செல்வத்தைப் பாலிக்கிறாயோ அந்த மழையைச் செலுத்தவும். அனைவராலும் விரும்பப் படும் அக்கினியே! நீ அவியளிக்கும் மானிடனுக்கு மிகுந்த உணவைத் தருகிறாய்.

9. அக்கினியே! அவிச் செல்வர்களான எங்களுக்கு மிகுந்த உணவையும், புகழுள்ள செல்வத்தையும், பலத்தையுமளிக்கவும். அக்கினி வைசுவாநரனே! நீ வசுக்களோடும் ருத்திரர்களோடும் சேர்ந்து எங்களுக்கு மகத்தான சுகத்தை யளிக்கவும். 5198

## 6. அக்கினி வைசுவாநரன்

### 522. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நான் கோட்டைகளை இடிக்கும் அக்கினியை வந்திக்கிறேன். அனைவராலும் போற்றத் தகுந்த சக்கரவர்த்தியும், ஆற்றலுமுள்ள வீரனுடைய புகழைப் பாடுகிறேன். நான் மகத்தான இந்திரனைப்போல் வீரச் செயல்களுள்ள அக்கினியின் வீரச் செயல்களைக் கூறுகிறேன்.

2. தேவர்கள், கவியும், புலப்படுத்துபவனும், தாங்குபவனும், வழிபடுபவனைத் துலக்குபவனும், சுகப்படுத்துபவனும், வையத்தையும் விண்ணையும் அரசு புரிபவனுமான அக்கினியைப் போற்றுகிறார்கள். நான் பாக்களால் புரங்களை இடிப்பவனான அக்கினியின் பழைய மகத்தான செயல்களைப் பாடுகிறேன்.

3. அக்கினி, செயல்களற்றவர்களும், பிதற்றுபவர்களும், கடுஞ்சொல் கூறுபவர்களும், கருமிகளும், சிரத்தையற்றவர்களும், யக்ஞம் செய்யாதவர்களுமான தஸ்யுக்களை மிக்கத் தூரத்தில் விலக்குவானாக. அக்கினி முன்னேறி யஜிக்காதவர்களைத் தாழ்த்துகிறான்.

4. மேற்திசை இருளிலே இன்புறும் யுவதிகளான உஷைகளைத் தன் ஆண்மை மிகுந்த ஆற்றலால் கீழ்த் திசையிலே புலப்படுத்துபவனும், செல்வங்களின் தலைவனும், தாழாதவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனுமான அக்கினியை நான் போற்றுகிறேன்.

5. மகானான அக்கினி தன்னுடைய பயங்கராயுதங்களால் அசுரர்களின் மாயைகளை விலக்குகிறான். உஷைகளுக்கு உத்தமக் கணவனைத் தந்தான். அவன் தன் ஜயிக்கும் சக்தியால் நஹுஷப் பிரசைகளை ஜயித்து, அவர்களை அரசனுக்கு நிறையளிக்கச் செய்தான்.

6. சுகத்துக்காகச் செயல்களோடு எல்லா சனங்களாலும் நாடப்பட்டு சுமதி விரும்பப்படும் வைசுவாநர அக்கினி, சூரியனாகி, பெற்றோர்களான சோதி புவிகளின் உத்தம ஸ்தானமான வானுக்கு வந்திருக்கிறான்.



7. தேவனான அக்கினி வைசுவாநரன் சூரியனுடைய உதயத்திலே வானை மறைத்திருக்கும் தமங்களை நீக்குகிறான். அவன் அவற்றைப் புவியிலிருந்தும், வானிலிருந்தும், அடிக் கடலிலிருந்தும், மேலிருக்கும் கடலிலிருந்தும் விலக்குகிறான். 5205

## 7. அக்கினி

### 523. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நான் அவிகளோடு தேவனும், ஜயிப்பவனும், குதிரையைப்போல் வேகமாயுள்ள அக்கினியைப் போற்றுகிறேன். எங்கள் விருப்பங்களை அறியும் நீ, யக்ஞத்தின் தூதனாகவும், அவன் சுயமாகவே தேவர்களின் நடுவே காடுகளை எரிப்பவன்போல் புலனாகிறான்.

2. அக்கினியே! உன்னுடைய வதிகளால் இன்பமாகி தேவர்களுடைய நட்பால் திருப்தியடைந்து வா. உன்னுடைய கோபத்தாலே புவியின் உச்சிகளை கர்ச்சிக்கச் செய்து கூரிய பற்களால் வனங்களையெல்லாம் எரித்துக் கொண்டு வா.

3. யக்ஞம் தோன்றுகிறது. தருப்பைப் பரத்தப்படுகிறது. அக்கினி துதியாகித் திருப்தியாகிறான். தேவர்களில் இளைஞனும், சுகப்படுத்துபவனுமான அக்கினியாம் நீ, பிறக்குங்கால் ஹோதாவாகி அனைவராலும் விரும்பப்படும் தாய்மார்களான விண்ணையும் வையத்தையும் அழைக்கிறாய்.

4. பேரறிஞர்களான மனிதர்கள் தங்கள் அவிகளை ஏந்திச்செல்ல தலைவனான அக்கினியை யக்ஞத்திலே தோற்றுவிக்கிறார்கள். விசுவத்தின் தலைவனும், இன்புறுத்துபவனும், இனிய மொழியுள்ளவனும், யக்ஞங்களை நடத்துப

வனுமான அக்கினி மனிதர்களின் மனையிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான்.

5. ஹோதாச் செயலால் அவியை வகிப்பவனும், பிரமனும், விசுவத்தைத் தாங்குபவனும், சோதிபுவிகளால் போற்றப்படுபவனும், அனைவராலும் விரும்பப்படுபவனும், மனித ஹோதாவால் யஜிக்கப்படுபவனும், சோதியிலிருந்து வருபவனுமான அக்கினி, ஹோதா ஸ்தானத்திலே அமர்த்தப்பட்டிருக்கிறான்.

6. உரிய துதியை அக்கினிக்குக் கூறும் இவர்கள் உணவுகளால் விசுவத்தைச் செழிப்பிக்கிறார்கள். இந்த ஸத்தியனான தேவனைப் போற்றும் என்னுடைய இந்த நண்பர்களைப் போல் அவனுக்குக் கூறப்படும் துதியைக் கவனமுடன் கேட்கும் சனங்களும் விசுவத்தைச் செழிப்பிக்கிறார்கள்.

7. அவிச்செல்வர்களான எங்களுக்கு நீ துரிதமாய் உணவையளிக்க ஆற்றலின் புதல்வனான அக்கினியே! வசிஷ்டாக்களான நாங்கள் உன்னிடம் வேண்டுகிறோம். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5212

## 8. அக்கினி

### 524. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நெய்யால் ஆஹுதமாகும் உருவமுள்ளவனும், சேர்ந்துள்ள மனிதர்களால் அவியோடு போற்றப்படுபவனும், உஷைக்கு முன்னால் ஒளிப்படுத்தப்படுபவனும், அரசனும், தலைவனுமான அக்கினி, துதிகளோடு சோபிப்பிக்கப்படுகிறான்.

2. இந்த மகானான அக்கினி மனிதர்களின் நடுவே இன்பமளிப்பவனாகவும், மேலான மகானாகவும், ஹோதாவாகவும் அறியப்படுகிறான். அவன் வானிலே ஒளியைப்பரத்துகிறான். கருப்பு வழியுள்ள அவன் புவியின்மீது விடப்பட்டு சுதந்திரமாய்ச் சென்று ஓஷதிகளால் வளர்கிறான்.



3. அக்கினியே! நீ எங்களுடைய தோத்திரத்தை எப்படி வண்ணப்படுத்துகிறாய்? நீ போற்றப்படுங்கால் எந்த அவியை ஏற்றுக்கொள்கிறாய்? நலத்தையளிப்பவனே! நாங்கள் செல்வங்களின் தலைவர்களாயும், ஒருவராலும் வெல்ல இயலாத அரிய செல்வத்தை ஜயிப்பவர்களாயிருப்போமாக.

4. போர்களிலே புருவை ஜயித்தவனும், தேவர்களின் அதிதியாகப் புகழோடு பிரகாசித்தவனுமான இந்த அக்கினி சூரியனைப்போல் பிரகாசிக்குங்கால் யக்ஞத்தை நடத்தும் என்னால் மிக்கப் போற்றப்படுகிறான்.

5. அக்கினியே! உன்னில் பல அவிகள் உண்டு. நீ உன்னுடைய எல்லா சுவாலைகளோடும் எங்களிடம் நல்ல மனமுள்ளவனாகவும், வழிபடுபவனுடைய தோத்திரத்தைக் கேட்கவும், ஸுஜாதனே! நீ புகழப்பட்டு, சுயமாகவே உன் தேகத்தைச் செழிப்பித்துக் கொள்ளவும்.

6. புகழையளிப்பதும், நோயை நீக்குவதும், அரக்கரையழிப்பதும், துதிப்பவர்களுக்கும் அவர்களுடைய உறவினர்களுக்கும் சுகத்தையளிப்பதுமான இந்தத் துதியை அக்கினிக்கு சோதியிலும் புவியிலும் மகானாயிருப்பவனும், நூறும் ஆயிரமுமான செல்வங்களுள்ளவனுமான வசிட்டன் கூறுகிறான்.

7. அவிச்செல்வர்களான எங்களுக்கு, நீ துரிதமாய் உணவையளிக்க ஆற்றலின் புதல்வனான அக்கினியே! வசிட்டர்களான நாங்கள் உன்னிடம் வேண்டுகிறோம். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5219

## 9. அக்கினி

### 525. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பிராணிகளைத் தேய்ப்பவனும், ஹோதாவும், இன்பத்தைத் தருபவனும், கவிகளிலே மிக்கக் கவித்தன்மையுள்ளவனும், சுத்தப்படுத்துபவனுமான அக்கினி, உஷையின் அங்கத்திலிருந்து சொலிப்பிக்கப்படுகிறான். அவன் நல்ல செயல்களை நடத்துபவர்களுக்குச் செல்வத்தையும், தேவர்களுக்கு அவிகளையும், பிராணிகளுக்கும் மனிதர்களுக்கும் சைதன்னியத்தையுமளிக்கிறான்.

2. நல்ல செயல்களை நடத்துபவனும், பணிகளின் கதவுகளைத் திறந்து மிக்கப் பாலளிக்கும் பசுக்களை மீட்பவனும், தேவர்களை அழைப்பவனும், இன்பமளிப்பவனும், தானமனமுள்ளவனுமான அவன் சனங்களுடைய இரவுகளின் தமங்களை நீக்குபவனாய்த் தென்படுகிறான்.

3. அவன் அமூடன்; கவி; அதிதி; சோதிமான்; நன்கு செலுத்துபவன்; விருந்தினன்; எங்களுக்குச் சுகத்தையளிப்பவன்; அற்புத காந்தியுள்ளவன். உஷையின் முகப்பிலே பிரகாசிக்கும் அவன் சலங்களின் கருவாகி மூலிக்கு ஓஷதிகளினுள் நுழைகிறான்.

4. அக்கினியே! நீ மனிதனுடைய எல்லா யுகங்களிலும் போற்றத் தகுந்தவன்; ஜாதவேதஸனே! நீ சமரிலே போராடுங்கால் சிறப்புற்றவன். அழகிய ஒளியோடு பிரகாசிப்பவனான அக்கினி சொலிப்பிக்கப்படுங்கால் எங்களுடைய துதிகள் அவனை எழுப்புகின்றன.

5. அக்கினியே! நீ உன்னுடைய தூதக் கடமையோடு தேவர்களிடஞ் செல்லவும். குழுவோடு தோத்திரஞ்செய்யும் எங்களைத் துன்புறுத்தாதே. ஸரஸ்வதியையும், மருத்துக்களையும், அசுவினிகளையும், சலங்களையும், விசுவேதேவர்களையும் அவர்கள் எங்களுக்குச் செல்வங்களை வழங்க யஜிக்கவும்



6. அக்கினியே! உன்னை வசிஷ்டன் எழுப்புகிறான். ஜருதனைக் கொல்லவும், செல்வனான யக்ஞகர்த்தாவுக்காகப் புரந்தியைப் போற்றவும். ஜாதவேதஸனே! பலவிதப் பாக்களோடு தேவர்களை ஏத்தவும், நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5225

## 10. அக்கினி

### 526. மைத்திராவருணி வசிட்டன்

1. பிரபையும், பிரகாசமும், காந்தியுமுள்ள அக்கினி உஷையின் காதலனைப்போல், சூரியனைப்போல் தன் பரந்த ஒளியைப் புலப்படுத்துகிறான். நலன்களை வர்ஷிக்கும் அவன் அவிகளைப் பெறுபவன். அவன் கிரணத்தோடு பிரகாசித்து செயல்களை ஊக்கப்படுத்துகிறான். அவனுடைய வரவை விரும்பும் மனிதர்களை எழுப்புகிறான்.

2. அக்கினி உஷையை முந்துகிறான். தினத்தில் சூரியனைப்போல் துலங்குகிறான். அறிஞர்கள் யக்ஞத்தைப் பரத்தி அவனைப் போற்றுகிறார்கள். தேவனும், தானசீலனும், தூதனும், சனங்களை அறிபவனுமான அக்கினி தேவர்களிடம் பலவிதமாய்ச் செல்லுகிறான்.

3. துதி வடிவங்களுள்ளவையும், தேவர்களை விரும்புபவையும், செல்வத்தை நாடுபவையுமான மொழிகள், இனிய தோற்றமுள்ளவனும், இனிய அங்கமிருப்பவனும், இனிமையாய்ச் செல்பவனும், மனிதர்களின் தலைவனுமான அக்கினியிடஞ் செல்லுகின்றனர்.

4. அக்கினியே! நீ வசுக்களோடு சேர்ந்து இந்திரனையும், உருத்திரர்களோடு சேர்ந்து மகானான உருத்திரனையும், ஆதித்தியர்களோடு சேர்ந்து எல்லா சனங்களுக்கும் இதமாயிருக்கும் அதிதியையும், துதியாருகர்களான அங்கிரஸர்களோடு சேர்ந்து அனைவராலும் விரும்பப்படும் பிரகஸ்பதியையும் ஏந்தி வா.

5. மனிதர்கள் அக்கினியை விரும்பி யக்ஞங்களிலே, மிக்க இளைஞனும், இன்பந்தருபவனும், ஹோதாவுமான அவனைப் போற்றுகிறார்கள். இரவின் தலைவனான அக்கினி, தேவர்களை யஜிக்க யக்ஞங்களை நடத்தும் செல்வர்களின் ணக்கமுற்ற தூதனாகிறான். 5230

## 11. அக்கினி

### 527. மைத்திராவருணி வசிட்டன்

1. அக்கினியே ! நீ மகான். யக்ஞத்தைப் புலப்படுத்துபவன். நீ இல்லையேல் அமிருதர்கள் இன்பமாகார். நீ எல்லாத் தேவர்களோடும் ஒரே தேரில் வா. அக்கினியே ! நீ இங்கு முதல் ஹோதாவாக அமரவும்.

2. அவிகளை அளிக்கும் மனிதர்கள் நீ தூதக் கடமையைச் செய்யத் துரிதமாய்ச் செல்லும் உன்னை நாடுகிறார்கள். நீ தேவர்களோடு எவனுடைய தருப்பையிலே அமருகிறாயோ அவனுக்கு மங்களமான தினங்கள் தோன்றுகின்றன.

3. அக்கினியே ! அளிக்கும் மானிடனுடைய நலத்துக்காக உனக்குத் தினம் மும்முறை அறிஞர்கள் அவிச் செல்வங்களைப் புலப்படுத்துகிறார்கள். அக்கினியே ! நீ பூர்வத்திலே மனுவுக்குச் செய்ததுபோல இப்பொழுதும் தேவர்களை யஜிக்கவும். எங்களுடைய தூதனாயிருக்கவும். எங்களைப் பழிச் சொற்களிலிருந்து பாலிக்கவும்.

4. அக்கினி மகத்தான யக்ஞத்தின் தலைவனாயிருக்கிறான். அக்கினி நன்களிக்கப்படும் ஒவ்வொரு அவிக்கும் தலைவனாயிருக்கிறான். வசுக்கள் அவனுடைய செயல்களைப் போற்றுகிறார்கள். தேவர்கள் அவனை அவி ஏந்துபவனாகச் செய்கிறார்கள்.

5. அக்கினியே ! அவிகளைப் புசிக்கத் தேவர்களை ஏந்தி வா. இந்திரனை முதல்வனாகவுள்ள தேவர்கள் இந்த



யக்ஞத்தில் இன்புறுவார்களாக. சோதியிலுள்ள தேவர்களிடம் இந்த யக்ஞத்தைச் செலுத்தவும். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5235

## 12. அக்கினி

### 528. மைத்திராவருணி வசிட்டன்

1. சொலிப்பிக்கப்பட்டவுடன் தன்னுடைய சொந்த இடத்திலே பிரகாசிப்பவனும், சோதி புவிகளின் நடுவே அற்புதமாய்த் துலங்குபவனும், நன்கழைக்கப்பட்டு எங்கிருந்தும் வருபவனும், மிக்க இளைஞனுமான அக்கினியை நாங்கள் மகத்தான வணக்கத்தோடு அணுகுவோமாக.

2. தன்னுடைய மகிமையால் தீமைகளையெல்லாம் தகர்ப்பவனும், யக்ஞ சதனத்திலே ஜாதவேதஸன் எனப் புகழப்படுபவனுமான அக்கினி, அவிச்செல்வர்களான எங்களால் புகழப்பட்டு எங்களைத் தீமையிலிருந்தும், நிந்தையிலிருந்தும் பாலிப்பானாக.

3. அக்கினியே ! நீ மித்திரன். நீ வருணன். வசிட்டர்கள் உன்னைத் துதிகளால் மேம்படுத்துகிறார்கள். உன்னிடமிருக்கும் செல்வங்கள் தாராளமாய் வழங்கப்படுக. நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5238

## 13. அக்கினி

### 529. மைத்திராவருணி வசிட்டன்

1. விசுவத்தை விளக்குபவனும், அசுரர்களை அழிப்பவனும், யக்ஞச் செயலை ஏற்றுக்கொள்பவனுமான அக்கினிக்குத் தோத்திரத்தையும், வணக்கத்தையும், உபசரிப்பையும் அளியுங்கள். நான் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் வைசுவாநரனுக்குத் தருப்பையின்மீது இப்பொழுது அவியையளிக்கிறேன்.

2. அக்கினியே! காந்தியோடு பிரகாசிக்கும் நீ, பிறந்தவுடன் சோதியையும் புவியையும் ஒளியால் நிரப்புகிறாய். ஜாதவேதஸனே! வைசுவாநரனே! நீ தேவர்களை உன்னுடைய மகிமையால் தூற்றும் பகைவர்களிடமிருந்து விடுவித்தாய்.

3. அக்கினியே! தலைவனும் சூழ்ந்திருப்பவனுமான நீ பிறந்தவுடன் எல்லாப் பிராணிகளையும் பசுக்களைக் காக்கும் கோபனைப் போல் பாலிக்கிறாய். வைசுவாநரனே! நீ பிரம்மத்துக்கு வழியைப் புலப்படுத்தவும். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5241

## 14. அக்கினி

### 530. மைத்திராவருணி வசிட்டன்

1. அவிகளை ஏந்தும் நாங்கள் ஸமிதையோடும், தேவ ஸ்துதிகளோடும், தேவனான ஜாதவேதஸனுக்கும் சுத்த சோதியுள்ள அக்கினிக்கும் வணக்கத்தை அளிப்போமாக.

2. அக்கினியே! நாங்கள் உன்னை ஸமிந்தனத்தோடு உபசரிப்போமாக. போற்றத் தகுந்தவனே! நாங்கள் நல்ல துதியோடு உன்னை உபசரிப்போமாக. யக்ஞத்தின் ஹோதாவே! நாங்கள் உன்னை நெய்யோடு போற்றுவோமாக. மங்கள ஜுவாலையுள்ளவனே! தேவனே! நாங்கள் அவியோடு ஏந்துவோமாக.

3. அக்கினியே! வஷட் ஹவிகளால் திருப்தியாகும் நீ, எங்களுடைய யக்ஞத்துக்குத் தேவர்களோடு வா. தேவனான உனக்கு நாங்கள் வணக்கமளிப்பவர்களாயிருப்போமாக, நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5244



## 15. அக்கினி

### 531. மைத்திராவருணி வசிட்டன்

1. வர்ஷிப்பவனும் விளங்குபவனுமான அக்கினிக்கு அவியை அளியுங்கள். நம்மோடு பந்துத்வமுள்ள அவனுடைய வாயினுள் பொழியுங்கள்.

2. கவியும், கிரகபதியும், இளைஞனும், பஞ்சசனங்களோடு ஒவ்வொரு மனையிலும் வசிப்பவனுமான அக்கினிக்கு அவியையளியுங்கள்.

3. அவன் எங்கள் செல்வமான உடைமையைப் பாலிப்பானாக. எங்களைப் பாவத்திலிருந்து காப்பானாக.

4. சோதியிலிருக்கும் பருந்தைப்போல் துரிதமாயிருக்கும் அவனுக்கு நான் இந்தப் புதிய துதியைக் கூறுகிறேன். அவன் எங்களுக்கு மிகுந்த செல்வத்தை அளிப்பானாக.

5. யக்ஞத்தின் முகத்திலே சொலிப்பவனுடைய காந்திகள் வீரப்புதல்வர்களுடனிருப்பவனுடைய செல்வத்தைப் போல் பார்க்க விரும்பத் தகுந்தவையாயிருக்கின்றன. 5249

6. அவிகளை ஏந்திச் செல்பவனும், மிக்கப் போற்றத் தகுந்தவனுமான அந்த அக்கினி எங்கள் வஷட் அவியைப் பெற்றுக்கொள்வானாக. துதிகளை விரும்புவானாக.

7. தேவனான அக்கினியே! நீ அணுகத் தகுந்தவன். நீ சனங்களின் தலைவன். அனைவராலும் அழைக்கப்படுபவன். நாங்கள், பிரகாசிப்பவனும், நன்கு புகழப்படுபவனுமான உன்னை வேதியின்போது ஸ்தாபிக்கிறோம்.

8. அக்கினியே! நாங்கள் நல்ல அனல்களுள்ளவர்களாக நீ இரவிலும் பகலிலும் பிரகாசிக்கவும். எங்களை விரும்பும் நீ நன்றாய்ப் போற்றப்படவும்.

9. அறிவுள்ள மனிதர்கள் யக்ஞச் செயல்களோடு செல்வ லாபத்துக்காக உன்னிடம் வருகிறார்கள். ஆயிரக் கணக்கான தோத்திரங்கள் உன்னிடம் சேர்கின்றன.

10. சுத்த சுவாலையுள்ளவனும், சாகாதவனும், சுத்தனும், சுத்தப்படுத்துபவனும், சாற்றத் தகுந்தவனுமான அக்கினி அரக்கர்களைச் சாய்ப்பானாக. 5254

11. ஆற்றல் மகனும், அனைத்தின் தலைவனுமான அக்கினி, எங்களுக்குச் செல்வங்களைத் தருவானாக. பகனும் எங்களுக்கு நிதியைத் தருவானாக.

12. அக்கினியே! நீ வீரப் புதல்வர்களோடு புகழையளிக்கவும். தேவனான ஸவிதாவும், பகனும், திதியும் எங்களுக்குச் செல்வத்தையளிப்பார்களாக.

13. அக்கினியே! எங்களைப் பாவத்திலிருந்து பாலிக்கவும். தேய்வில்லாதவனும், தேவனுமான அக்கினியே! நீ உன்னுடைய தாபப்படுத்தும் சுவாலைகளால் பகைவர்களைப் பற்பப்படுத்தவும்.

14. தடைபடாத நீ, எங்களுடைய சனங்களின் பாலனத்துக்காக, இரும்பால் கட்டப்பட்டவையும், மிக்கப் பரந்துள்ளவையும், மகத்தாயுமுள்ள கோட்டைகளைப்போல் இருக்கவும்.

15. அக்கினியே! துன்பமற்றவனும், இருளை நீக்குபவனுமான நீ, எங்களை இரவிலும் பகலிலும் பாவத்திலிருந்து, பாவத்தைச் செய்யும் பகைவர்களிடமிருந்தும் பாலிக்கவும். 5259

## 16. அக்கினி

### 532. மைத்திராவருணி வசிட்டன்

1. நான் உங்களுக்காக இந்தத் துதியால் பலத்தின் மகனும், பிரியனும், மிக்க அறிபவனும், தடைபடாதவனும், நல்ல யக்ஞனும், எல்லா அமிருதர்களுக்கும் தூதனுமான அக்கினியை அழைக்கிறேன்.



2. நன்கு அழைக்கப்படுங்கால் அவன் தன் விசுவத்தைத் தாங்கும் சிகப்புக் குதிரைகளைத் தேரில் இணைப்பானாக. அவன் தேவர்களை ஏந்தி வரத் துரிதமாவானாக. மிருந்த உணவைத் தருபவனும், துதியாருகனும், நல்ல செயல்களை நடத்துபவனுமான தேவனுக்கு வழிபடுபவர்களுடைய யக்ஞச் செல்வம் செல்க.

3. நன்கழைக்கப்படும் பொழிபவனுடைய காந்தியானது, மனிதர்கள் அக்கினியை மூட்டுங்கால் எழும் அழகான, விண் பற்றும் புகையைப் போல் எழுகிறது.

4. நாங்கள் உன்னை மிக்கப் புகழுள்ள தூதனாக நியமிக்கிறோம். தேவர்களை அவர்கள் அவியை அருந்த ஏந்தி வா. ஆற்றல் மகனே! எங்களுக்கு எல்லா மானிடச் செல்வங்களையுமளிக்கவும். நாங்கள் விரும்பும் எதையும் நல்கவும்.

5. அனைவராலும் விரும்பப்படும் அக்கினியே! நீ எங்களுடைய யக்ஞத்திலே மனைத் தலைவனாயிருக்கிறாய். நீ எங்களுடைய ஹோதா. நீ போதா. பேரறிஞனான நீ, தேவர்களுக்கு அவியையளிக்கவும். நீயும் அருந்தவும். 5264

6. நல்ல செயல்களை நடத்தும் நீ, யக்ஞக் கருத்தாவான எனக்குச் செல்வத்வையளிக்கவும். ஏனெனில் நீ செல்வத்தைத் தருபவன். யக்ஞத்திலே அறிஞர்களையெல்லாம் ஊக்கப்படுத்தவும். நல்ல துதியைக் கூறி செழித்திருப்பவனைச் செழிப்பிக்கவும்.

7. அக்கினியே! செல்வர்களும், அளிப்பவர்களும், சனங்களுக்குப் பசுக்களின் மந்தைகளை அளிப்பவர்களுமான வழிபடுபவர்கள் நன்கு அழைக்கப்படும் உனக்குப் பிரியமுள்ளவர்களாவார்களாக.

8. ஆற்றலுள்ள அக்கினியே! எவருடைய மனையிலே நெய் கையுள்ள இளை திருப்தியோடு அமருகிறுளோ அவர்களை நிந்திப்பவர்களிலிருந்தும், துரோகிகளிடமிருந்தும் பாலிக்கவும். நீண்ட புகழுள்ள சுகத்தையளிக்கவும்.

9. மிக்க அறிஞுனை அக்கினியே! இனிய நாக்குள்ள நீ, தேவர்களுடைய வாயைப் போல் அவிகளை ஏந்துகிருய். அக்கினியே! யக்ஞச் செல்வனுக்குச் செல்வங்களை அளிக்கவும். அவியளிப்பவனை ஊக்கப்படுத்தவும்.

10. மிக்க இளைஞுனை அக்கினியே! மகத்தான புகழை விரும்பி, குதிரைகளும் பொருள்களும் நிறைந்த செல்வங்களை அளிப்பவர்களுக்கு நூறு நகரங்களை அளித்து அவர்களை உன் பாலனங்களால் துன்பத்திலிருந்து நீக்கிப் பாலிக்கவும்.

11. செல்வத்தையளிக்கும் தேவனுன அக்கினி நெய் நிறைந்த சிருவத்தை விரும்புகிருன். பாத்திரத்திலுள்ள ஸோமத்தை ஊற்றுங்கள். மீண்டும் பாத்திரத்தை நிரப்புங்கள். பிறகு தேவன் உங்களுடைய அவிகளை ஏந்திச் செல்லுகிருன்.

12. தேவர்கள் பேரறிஞுனை அக்கினியை ஹோதாவாகவும், யக்ஞத்தை ஏந்துபவனுகவும் நியமித்தார்கள். அக்கினி அவியளிப்பவனும் போற்றுபவனுமான மனிதனுக்கு உத்தம வீரப் புதல்வர்களோடு செல்வத்தைத் தருகிருன். 5271

## 17. அக்கினி

### 533 மைத்திராவருணி வசிட்டன்

1. அக்கினியே! நீ நல்ல ஸமிந்தனத்தால் சொலிப்பிக்கப்படவும். அறிஞன் தருப்பையை மிக்கப் பரத்துவானுக.

2. தேவர்களை விரும்பும் கதவுகள் திறக்கப்படுக. விருப்பமுள்ள தேவர்களை இங்கு ஏந்தி வா.



3. அக்கினி ஜாதவேதஸனே! தேவர்களிடம் செல்லவும். அவர்களை அவியோடு யஜிக்கவும். அவர்களை யக்ஞத்தால் இன்புறுத்தவும்.

4. ஜாதவேதஸன் அமிருதர்களான தேவர்களை யக்ஞத்தால் இன்புறுத்துவானுக. அவன் அவர்களுக்கு யக்ஞத்தைச் செய்வானுக. அவர்களைத் துதியால் திருப்தி செய்வானுக.

5. பேரறிஞுனை அக்கினியே! விரும்பத் தகுந்த எல்லாச் செல்வங்களையும் எங்களுக்களிக்கவும். எங்களுக்களிக்கப்படும் வாழ்த்துக்கள் சத்தியமாகுக.

6. அக்கினியே! தேவர்கள் ஆற்றலின் மகனுன உன்னை அவி வகிப்பவனுகச் செய்தார்கள்.

7. நாங்கள் தேவனுன உனக்கு அவிகள் அளிப்பவர்களாயிருப்போமாக. மகானுன நீ, நாடும் செல்வங்களை எங்களுக்கு அளிக்கவும். 5278

## 18. இந்திரன்

### 534. மைத்திராவருணி வசிட்டன்

1. இந்திரனே! எங்களுடைய பூர்வ பிதாக்கள் உன்னைப் போற்றி விரும்பத் தகுந்த எல்லாச் செல்வங்களையும் பெற்ருர்கள். குதிரைகளும், கறப்பதற்குச் சுலபமாயிருக்கும் பசுக்களும் உன்னிடமிருக்கின்றன. தேவனுன உன்னை விரும்பும் தலைவனுக்கு நீ செல்வத்தைத் தருபவன்.

2 நீ உன்னுடைய சிறப்புக்களோடு, மனைவிகளோடுள்ள அரசனைப்போல் வசிக்கிருய். கவியும், அறிஞுனான நீ, எங்களைப் பொன்னுலும், புரவிகளாலும், பசுக்களாலும் பாலிக்கவும். உன்னை விரும்பும் எங்களைச் செல்வத்துக்குச் செலுத்தவும்.

3. பரஸ்பரம் முந்துபவையும், உன்னை இன்புறுத்துபவையும், துதிப்பவையுமான இந்த மொழிகள் உனக்கு இப்

பொழுது கூறப்படுகின்றன. உன்னுடைய செல்வங்களின் வழி எங்களிடம் வருக. உன்னுடைய சுமதியிலிருக்கும் நாங்கள் சுகத்திலிருப்போமாக.

4. மேய் தரையிலுள்ள பசுவைப்போல் உன்னைக் கறக்க விரும்பும் வசிட்டன் தோத்திரங்களை விடுவித்திருக்கிறான். என்னுடைய சனங்களில் ஒவ்வொருவனும் உன்னைக் கோபதி என அறிவிக்கிறான். எங்களுடைய தோத்திரத்துக்கு இந்திரன் வருவானாகை.

5. போற்றத் தகுந்த இந்திரன், பருஷ்ணியின் பரந்தவையும், ஆழமுள்ளவையுமான சலங்களை ஸுதாஸனுக்குக் கடக்கத் தக்கவையாகச் செய்தான். எங்கள் துதியின் சத்துருவான சிம்யு - ஓடும் பகைவன் - பிரவாக சலங்களின் உக்கிரத்தை சபிக்க அவனை இந்திரன் துரிதப்படுத்தினான். 5283

6. யக்ஞங்களில் முந்துபவனும், யக்ஞத்தில் கவனமுள்ளவனுமான துர்வசன், செல்வத்தைப்பற்ற ஸுதாஸனை எதிர்த்தான். சலத்துக்குட்பட்ட மீன்களைப்போல் பிருகுக்களும், துர்ஹ்யுக்களும், துர்வசனுக்கு உதவி செய்யப் போரிலே கலந்தார்கள். இங்குமங்கும் சென்று சமர் செய்த இந்த இருவர்களில் ஒருவனான ஸுதாஸனை நண்பனான இந்திரன் மீட்டான்.

7. பக்தாஸர்களும், அவிகளைப் பக்குவப்படுத்துபவர்களும், பலானஸர்களும், இனிய மொழிகளைக் கூறுபவர்களும், அலி நாஸர்களும், தவத்தால் வளர்ந்தவர்களும், கைகளில் கொம்புகளை ஏந்துபவர்களும், தீட்சையுள்ளவர்களும், சிவாஸர்களும், உலகத்துக்கு சுகத்தைத் தருபவர்களும், கள்வர்களிடமிருந்து ஆரியனுடைய பசுக்களை மீட்டவனும், போரிலே பகைவர்களைக் கொன்றவனுமான அந்த இந்திரனைப் போற்றுகிறார்கள்.

8. ஸுதாஸனுடைய துர்ச்சிந்தையுள்ள, மந்த அறிவுள்ள பகைவர்கள், பணிவுள்ள பருஷ்ணி நதியைக் கடந்து



அதன் கரைகளை உடைத்தார்கள். ஆனால் ஸுதாஸன் தன் மகிமையால் புவியில் பரவுகிறான். சாயமானனுடைய புதல்வனான கவி, விழுந்த பலியைப்போல் நித்தியமாய்ச் சயனிக்கிறான்.

9. சலங்கள் பருஷ்ணிக்குத் தங்கள் கிரமமான வழியால் பாய்ந்தன. அதற்கப்பால் நதியைக் கடந்து பெருகவில்லை. உரிய இடங்களுக்கு ஸுதாசனுடைய குதிரை வந்தது. இந்திரன் ஸுதாஸனுக்கு அவனுடைய சனங்களின் நடுவே பிதற்றும் பகைவர்களையும் அவர்களுடைய பல மக்கட்களையும் வசப்படுத்தினான்.

10. பிருசினியால் பிரேரிக்கப்பட்டு, பல பசுக்களின் மீது ஏறியுள்ள மருத்துக்கள், நண்பனான இந்திரனோடு பூர்வத்திலே செய்துகொண்ட உடன்பாட்டை ஞாபகஞ்செய்துகொண்டு மேய் தரையிலிருந்து கோபனில்லாமல் வரும் பசுக்களைப்போல் வந்தார்கள். உற்சாகமுள்ள நியுதக் குதிரைகள், அவர்களை, பகைவர்களை எதிர்க்க ஏந்தி வந்தன. 5288

11. புகழை விரும்பி, பருஷ்ணியின் இரு கரைகளிலே பகை சனங்களை, யக்ஞஸ்தனத்திலே, தருப்பையை நறுக்கும் சுந்தரமான ஹோதாவைப் போல் கொன்ற அரசனுக்கு உதவி செய்யச் சூரனான இந்திரன் மருத்துக்களைத் தோற்றுவித்தான்.

12. வச்சிரமேந்தும் இந்திரனான நீ, சுருதனையும், கவஷனையும், விருத்தனையும், அப்பால் துருஹ்யுவையும், சலங்களினுள் அமிழ்த்தினாய். இந்திரனே! உன்னை விரும்பிப் போற்றுபவர்கள் உன் நட்பை நாடி அதைப்பெற்று இன்புறுகிறார்கள்.

13. இந்திரன் தன் வலிமையால் அவர்களுடைய எல்லாக் கோட்டைகளையும் ஏழுவித நகரங்களையும் வேகமாய் இடித்தான். அனுவின் புதல்வனுடைய மனையைத் திரித்ஸுவுக்களித்தான். நாங்கள் போரில் தீச்சொல் கூறும் மனிதனை ஜயிப்போமாக.

14. போற்றும் ஸுதாஸனுடைய பகைவர்களான, அநுவினுடைய துருஹ்யுவினுடைய 66,660 வீரர்கள், பசுக்களைப் பறிக்க விரும்பி மடிந்தார்கள். இவையனைத்தும் இந்திரனுடைய வீரச்செயல்களாகின்றன.

15. இந்தத் துஷ்ட நண்பர்களான திருத்ஸவர்கள் அறியாமையால் இந்திரனோடு போராடி தோற்கடிக்கப்பட்டு இறக்கத்திலே ஓடும் நதிகளைப்போல் ஓடினார்கள். அவர்கள் துன்பப்பட்டு தங்களுடைய செல்வங்களையெல்லாம் ஸுதாஸனுக்கு விட்டுவிட்டுச் சென்றார்கள். 5298

16. இந்திரனை மறப்பவனும், அவியைப் பறிப்பவனும், சூரனான ஸுதாஸனை எதிர்ப்பவனுமான பகைவனை இந்திரன் புவியிலே சிதறடித்தான். இந்திரன் கோபமுள்ள சத்துருவின் கோபத்தை நீக்கினான். ஸுதாஸனை எதிர்த்து முன்னேறிய சத்துரு புறம் ஓடும் வழியைப் பற்றினான்.

17. இந்திரன், மெலிந்தவனால் இந்த ஒப்பற்ற வீரச் செயலை நடத்தினான். அவன் ஆட்டினால் சிங்கத்தைக் கொன்றான். அவன் ஊசியால் யூபந்தின் கோணங்களைச் சீவினான். பறிக்கப்பட்ட செல்வங்களையெல்லாம் ஸுதாஸனுக்களித்தான்.

18. இந்திரனே! உன்னுடைய பல சத்துருக்கள் வசப்பட்டார்கள். உக்கிரனான பேதனையும் நீ வசப்படுத்தினாய். இந்திரனே! நீ உன்னுடைய கூரிய வச்சிராயுதத்தை உன் துதிகளைப் பாடும் மனிதர்களைத் துன்புறுத்துபவன் மீது செலுத்தவும்.

19. போரிலே அவன் பேதனைக் கொன்றபோது யமுனைக் கரையில் வசித்தவர்களும், திரித்ஸவர்களும் இந்திரனைப் புகழ்ந்தார்கள். அஜாஸர்களும், சிகருக்களும், யக்ஷவர்களும் அவனுக்குப் போரிலே கொல்லப்பட்ட குதிரைகளின் தலைகளைப் பலியாக்கி நிறையாக அளித்தார்கள்.

20. இந்திரனே! உன்னுடைய பழைய, புதிய ஆதரவுகளும், தானங்களும், தினந்தோறும் உஷைகளைப்போல் எண்ண இயலாதவை. நீ மன்யமானனுடைய மகனான தேவகனைக் கொன்றாய். நீ சுயமாகவே, சம்பரனை மகத்தான மலையிலிருந்து கீழே தள்ளினாய்.



21. நூற்றுக்கணக்கான அரக்கர்களைக் கொன்ற பராசரனும், வசிஷ்டனும் உன்னை விரும்பினார்கள். ஒவ்வொரு மனையிலும் உன்னை அவர்கள் போற்றினார்கள். அவர்கள் பாலகனான உன்னுடைய நட்பை மறக்காமலிருக்கிறார்கள். ஆதலால் துதிப்பவர்களுக்கும் செழிப்பான தினங்கள் தோன்றுகின்றன. 5299

### ஸுதாபிஜவனன்

22. தேவவதனுடைய பேரனும் பிஜவனனுடைய புதல்வனும் இருநூறு பசுக்களையும், இரு மனைவிகளோடு இரு தேர்களை எனக்கு அளித்தவனுமான ஸுதாஸனுடைய தானத்தைப் போற்றி அத்தானத்துக்கு அருகனாயிருந்த நான், அக்கினியே! யக்ஞஸ்தானத்தில் ஹோதாவைப் போல் உன்னைப் பிரதக்கணம் செய்கிறேன்.

23. பிஜவனனுடைய புதல்வனான ஸுதாஸனால் எனக்களிக்கப்பட்ட பொன் கோலமுள்ளவையும், கடின வழியிலே நிலையாகச் செல்பவையும், புவியில் புகழப்படுபவையும், விரும்பத்தகுந்த செல்வங்களாயுமுள்ள நான்கு குதிரைகள் உணவையும் வம்சத்தையும் பெற, புதல்வனைப் போல் என்னை ஏந்திச் செல்லுகின்றன.

24. ஏழு உலகங்களும், பரந்த சோதியிலும், புவியிலும் பரவிய புகழுள்ளவனும் ஒவ்வொரு உத்தமனுக்கும் செல்வத்தை அளித்த தானசீலனும், அவனுக்காகப் போரிலே யுத்தியாமதியை அழித்த நதிகள் உள்ளவனுமான ஸுதாஸனை இந்திரனைப் போல் போற்றுகின்றன.

25. மருத்துக்களே! தலைவர்களே! நீங்கள் ஸுதாஸனுடைய திவோதாஸனை அனுசரித்ததுபோல் இந்த அரசனைப் பணியுங்கள். பிஜவனனுடைய புதல்வனான ஸுதாஸனுடைய மந்திரத்தைப் பாலியுங்கள். அவனுடைய க்ஷத்திரம் தேயாமலும் தளராமலுமாகுக. 5303

## 19. இந்திரன்

### 535. மைத்திராவருணி வசிஷ்டன்

1. கூரிய கொம்புகளுள்ள காளையைப்போல் பயங்கர மாயிருக்கும் இந்திரன் தானே, எல்லாப் பகைவர்களையும் விலக்குகிறான். அளிக்காதவனுடைய மிகுந்த செல்வத்தைப் பற்றும் நீ, மிக்க அவியளிப்பவனுக்குத் தருபவனாயிருக்கிறாய்.

2. இந்திரனே! நீ தாஸனையும், சுஷ்ணனையும், குயவனையும் வசப்படுத்தி அர்சுன்யனுடைய புதல்வனான குத்ஸனுக்கு அவர்களுடைய செல்வத்தைத் தந்தபோது நீ போரிலே குத்ஸனை உன் தேகத்தால் ஆதரித்துப் பாலித்தாய்.

3. தீரனே! நீ அவிகளை அளித்தவனான ஸுதாஸனை உன்னுடைய எல்லாப் பாலனங்களாலும் பாலித்தாய். புவியைப் பற்ற பகைவர்களோடு நடத்தப்பட்ட போர்களிலே நீ, புருகுத்ஸனுடைய புதல்வனான திரஸதஸ்யுவையும், புருவையும் பாலித்தாய்.

4. குதிரைகளின் தலைவனும் மனிதர்களால் போற்றப்படுபவனுமான நீ, மருத்துக்களோடு சேர்ந்து, தேவர்களுக்காகச் செய்யப்படும் யக்ஞத்திலே, பல பகைவர்களைக் கொன்றாய். நீ தபீதிக்காக, தஸ்யுவையும், சுமுரியையும், துனியையும் உன்னுடைய வச்சிராயுதத்தால் சயனப் படுத்தினாய்.

5. வச்சிராயுதமேந்துபவனே! நீ பகைவர்களின் 99 கோட்டைகளை இடித்தாய். நூறுவது கோட்டையை உன்னுடைய இடமாகச் செய்துகொண்டாய். இவை உன்னுடைய மகத்தான வலிய செயல்கள். நீ விருத்திரனை அழித்தாய். நீ நமூசியைக் கொன்றாய். 5308

6. இந்திரனே! அவிகளை அளித்த ஸுதாஸனுக்கு உன் ஆதரவுகள் அனந்தம். வர்ஷிப்பவனே! நான் உனக்காகக் குதிரைகளை இணைக்கிறேன். பல யக்ஞங்கள் அளிக்



கப்படுபவனும் மிகுந்த பலமுள்ளவனுமான உனக்கு எங்கள் துதிகள் செல்க.

7. மிகுந்த பலமுள்ள இந்திரனே! குதிரைகளின் தலைவனே! உனக்கு அளிக்கப்படும் இந்த யக்ஞத்திலே நாங்கள் கொலைபாதகனுக்குப் புலப்படாமலிருப்போமாக. வெல்லுவதற்கியலாத காப்புக்களோடு நீ எங்களைப் பாலிக்கவும். வழிபடுபவர்களின் நடுவே நாங்கள் உன் அன்பர்களாவோமாக.

8. மகவானே! துதிப்பவர்களில், தலைவர்களில் தலைவர்களாயிருக்கும் நாங்கள், பிரியான நண்பர்கள் எனக் கருதப்படும் நாங்கள், எங்கள் மனைகளிலே இன்பமாயிருப்போமாக. நீ அதிதிக்வனுக்குத் துதியாருக சுகத்தையளித்து துர்வசனையும் யதுவின் மகனையும் தாழ்த்தவும்.

9. மகவானே! தலைவர்களும் துதிகளைக் கூறுபவர்களும், உன்னை வணங்சத் தோத்திரங்களைக் கூறுகிறார்கள். அவர்கள் கருமிகளின் செல்வத்தைப் பற்றினார்கள். நீ உன்னுடைய நட்புக்காக எங்களைக் கிரகித்துக்கொள்ளவும்.

10. உத்தமத் தலைவனே! உனக்குக் கூறப்படும் மனிதர்களுடைய இந்தத் தோத்திரங்கள் அவிச் செல்வர்களான எங்களிடம் திரும்புகின்றன. இந்திரனே! அம்மனிதர்களான எங்களுக்கு நாங்கள் பகைவர்களோடு போராடுங்கால், நீ மங்களமளிப்பவனாகவும், நண்பனாகவும், வீரனாகவும், பாலகனாகவும்.

11. சூரனே! இந்திரனே! நீ இப்பொழுது எங்களால் துதிக்கப்பட்டு, தோத்திரத்தால் ஊக்கமாகி நீ எங்களுடைய பாலனத்துக்காக உன்னுடைய தேகத்தைத் திறப்படுத்திக் கொள்ளவும். நீ எங்களுக்கு மனைகளையும் உணவையுமளிக்கவும். 5314

## 20. இந்திரன்

### 536. மைத்திராவருணி வசிஷ்டன்

1. உக்கிரனும், ஊக்கமுள்ளவனுமான இந்திரன் வீரச்

செயல்களை நடத்தப் பிறந்தான். மானிடரின் நண்பனான அவன் விரும்பும் எந்தச் செயலையும் நடத்துகிருன். நித்தியத் தருணனான அவன் யக்ஞ ஸதனத்தைப் பாலனங்களால் தாங்குகிருன். இந்திரனே! பாவத்திலிருந்து எங்களைப் பாலிக்கவும்.

2. இந்திரன் வலிமையில் வளர்ந்து விருத்திரனைக் கொல்லுகிருன். தீரன் தன் பாலனத்தால் போற்றுபவனைப் பாலித்தான். அவன் ஸுதாஸனுக்கு உலகத்தை யளித்தான். அவியளிப்பவனுக்கு அடிக்கடி செல்வத்தைத் தந்தான்.

3. போரிலே புறமோடாதவனும், போரை எழுப்பு பவனும், போராடும் வீரனும், பூர்வத்திலிருந்தே ஜயிக்கப் படாதவனும், எப்பொழுதும் ஜயிப்பவனும், மிக்கத் திற முள்ளவனுமான இந்த இந்திரன், பகைப் படைகளைச் சிதறடிக்கிருன். எல்லாப் பகைவர்களையும் அழிக்கிருன்.

4. செல்வனான இந்திரனே! நீ சோதியையும் புவியை யும் உன் மகிமையாலும் வாய்மைகளாலும் நிரப்புகிருய். பகைவர்களின்மீது வச்சிராயுதத்தைச் செலுத்தும் குதிரை களின் தலைவனான இந்திரன் யக்ஞங்களிலே ஸோமத்தால் இன்புறுகிருன்.

5. விருஷபன், விருஷபனைப் போருக்காகப் பிறப்பித் தான். தாய், மானிடனின் நண்பனான அவனைப் பிறப்பித் தாள். மனிதர்களுக்கு முதல்வனயிருக்கும் அவன் படை களின் தலைவனயிருக்கிருன். அவன் நடத்துபவன். ஜயிப் பவன். பசுக்களை மீட்பவன். பகைவர்களைப் புடைப்பவன். 5819

6. உக்கிரனான இந்திரனிடம் மனத்தைச் செலுத்து பவன். தளரான்; தேயான் ருதத்தில் பிறந்தவனும், ருத பாலகனுமான இந்திரன் யக்ஞங்களோடு தோத்திரங்களை யும், துதிகளையுமளிப்பவனுக்குச் செல்வங்களைத் தருகிருன்.

7. அற்புதனான இந்திரனே! முதல்வனல் அடுத்தவ னுக்கு அளிக்கப்படுவதும், மூத்தவனல் இளைஞனுக்குச்



செலுத்தப்படுவதும், தந்தையினிடம் பெற்று, அவனிட மிருந்து நீங்கி தூரத்தில் வசித்தாலும், சீவிக்க உதவுவதும் விரும்பத் தகுந்ததுமான அற்புத செல்வத்தை எங்களுக், களிக்கவும்

8. இந்திரனே! உனக்குப் பிரியமாயுள்ள மனிதன் அவிகளை அளிப்பானக. வச்சிராயுதம் ஏந்துபவனே! உன் னுடைய நண்பன் உன்னுடைய தானத்திலிருப்பானக: உன்னுடைய இந்த ஆதரவால் நாங்கள் மிகுந்த தானமுள்ள வர்களாவோமாக, மனிதர்களுக்குப் பாலனமளிக்கும் மனையிலே நாங்கள் இன்புறுவோமாக.

9. மகவானே! வர்ஷிக்கும் இந்த ஸ்தோமம், ஸோமம்- உனக்கு முழங்குகிறது. வழிபடுபவன் துதிக்கிருன். வழி படுபவனான எனக்குச் செல்வத்தில் விருப்பம் வருகிறது. சக்கரனே! ஆதலால் எங்களுக்குச் செல்வத்தைத் துரிதமா யளிக்கவும்.

10. இந்திரனே! எங்களுக்கும். அவிகளைத் தாமாகவே அளிக்கும் அவிச்செல்வர்களுக்கும் உன்னல் தரப்படும் உணவை அருந்தும் திறத்தை அளிக்கவும். பல துதிகளைக் கூறும் ஆற்றல் வழிபடுபவனுக்குத் தோன்றுக. நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5824

## 21. இந்திரன்

### 537. மைத்திராவருணி வசிட்டன்

1. ஸோமம் பிழியப்பட்டிருக்கிறது. பிரகாசிக்கும் இது பாலோடு சேர்ந்திருக்கிறது. இந்திரன் பிறந்ததிலிருந்து இந்த ஸோமத்திலே இன்புறுகிருன். குதிரைகளோடிருப்ப வனே! நாங்கள் யக்ஞங்களால் உன்னை எழுப்புகிருேம். ஸோமத்திலே எங்களுடைய ஸ்தோமத்தை அறிந்து கொள்ளவும்.

2. அவர்கள் யக்ஞத்துக்குச் செல்லுகிருர்கள். அவர் கள் தருப்பையைப் பரத்துகிருர்கள். ஸோமத்தைப் பருகும்

இவர்கள் யக்ஞத்திலே முழங்குகிறார்கள். தூரத்திலே கேட்கப்படும் குரல்களுள்ள தலைவர்களான ரித்விஜர்கள் மனையின் உட்புறத்திலிருந்து கள்ளை ஏந்தி வருகிறார்கள்.

3. சூரனே! நீ அஹியினால் தடைப்பட்ட சலங்களைப் பெருகச் செய்தாய். உன்னால் நதிகள் தேரிலிருப்பவர்களைப் போல் பாய்ந்தன. எல்லா உலகங்களும் உனக்குப் பயந்து நடுங்கின.

4. பயங்கரனான இந்திரன் மானிடர்களுக்கு நலமளிக்கும் எல்லாச் செயல்களையுமறிந்து தன் ஆயுதங்களால் அசுரர்களை அதீனப்படுத்தினான். அவன் மதமாகி அவர்களுடைய நகரங்களை ஆட்டினான். வச்சிரமேந்திய அவன் தன் பலத்தால் அவர்களைக் கொன்றான்.

5. இந்திரனே! அரக்கர்கள் எங்களைத் துன்புறுத்தாமலிருப்பார்களாக. மிக்க வலியனான இந்திரனே! தீயோர்களும் எங்கள் பிரஜைகளுக்குத் தீமை செய்யாமலிருப்பார்களாக. சிசனதேவர்கள் – சிற்றின்பர்கள் – எங்கள் யக்ஞத்தைக் கலைக்காமலிருக்க, தலைவனான இந்திரன் விஷம ஜந்துக்களைத் தடுக்க ஊக்கமுள்ளவனாவானாக. 5,329

6. இந்திரனே! ந உன் வினைத்திட்பத்தால் புவியிலுள்ள ஜந்துக்களை அதீனப்படுத்துகிறாய். உன் மகிமையை முந்த எந்த உலகமும் இல்லை, நீ உன்னுடைய சுய பலத்தால் விருத்திரனைக் கொன்றாய். போரிலே எந்தப் பகைவனும் உன்னைத் துன்பப்படுத்தவில்லை.

7. பூர்வத்திலிருந்த தேவர்கள் உன்னுடைய ஆற்றல் அவர்களுடைய அசுரபலத்தைக் கடந்தது எனக் கூறினார்கள். இந்திரன் தன் சத்துருக்களை ஜயித்து, பறித்த செல்வங்களை வழிபடுபவர்களுக்களிக்கிறான். அவர்கள் உணவை அடைய இந்திரனை அழைக்கிறார்கள்.

8. தொழுபவன் தலைவனான இந்திரனைப் பாலனத்துக்காக அழைக்கிறான். பலரைப் பாலிக்கும் நீ, எங்களுடைய மகத்தான சௌபாக்கியத்தின் பாலகனாயிருக்கிறாய். ஒவ்வொரு சத்துருவினிடமிருந்தும் நாங்கள் தப்பிக்க உன்னைப் போலிருக்கும் நீ, எங்கள் பாலகனாயிருக்கவும்.



9. இந்திரனே! வணக்கத்தில் தினந்தோறும் வளரும் நாங்கள் உன்னுடைய நண்பர்களாகக் கருதப்படுவோமாக. மகிமையில் முந்தும் உன் பாலனத்தால், வழிபடுபவர்கள், போரிலே எதிர்ப்பையும் துன்புறுத்துபவனின் பலத்தையும் தாழ்த்துவார்களாக.

10. இந்திரனே! எங்களுக்கும், அவிகளைத் தாமாகவே அளிக்கும் அவிச்செல்வர்களுக்கும் உன்னால் தரப்படும் உணவை அருந்தும் திறத்தை அளிக்கவும். வழிபடுபவனுக்கு ஆற்றல் தோன்றுக. நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாவியுங்கள். 5334

## 22. இந்திரன்

### 538. மைத்திராவருணி வசிட்டன்

1. இந்திரனே! நீ ஸோமத்தைப் பருகவும். நன்கு செலுத்தப்பட்ட குதிரையைப் போல் இருக்கும் ஸோமத்தைப் பிழியுங்கல்லானது பிழியச்செய்பவனுடைய கைகளால் பிரேரிக்கப்பட்டு இரஸத்தைப் பிழிந்திருக்கிறது.

2. இந்திரனே! மிகுந்த செல்வங்களிருப்பவனே! குதிரைகளின் தலைவனே! நட்புள்ளதும் மதமளிப்பதுமான எந்த பானத்தால் நீ பகைவர்களைக் கொல்லுகிறாயோ அந்தப் பானம் உன்னை இன்புறுத்துக.

3. மகவனே! நான் கூறும் இந்த மொழியை நன்கறிந்து கொள்ளவும். இந்தத் துதியை வசிட்டன் கூறுகிறான். யக்ஞத்திலே இந்தத் துதிகளால் நீ இன்பமாகவும்

4. ஸோமத்தைப் பருகும், பிழியும் கல்லின் அழைப்பைக் கேட்கவும். உன்னைப் போற்றும் விப்பிரனுடைய தோத்திரத்தை அறிந்து கொள்ளவும். இந்தத் துதிகளை உன் மனத்துக்குள் ஏற்றுக்கொள்ளவும்.

5. நான் உன்னுடைய பலத்தை அறிந்து உன்னைப் போற்றவும், புகழவும் தவருமலிருக்கிறேன். மிக்க புகழுள்ள உன்னுடைய தோத்திரத்தை நான் எப்பொழுதும் கூறு கிறேன். 5139

6. மகவானே! மனிதர்களின் நடுவே உனக்குப் பல யக்ஞங்கள் அளிக்கப்படுகின்றன. வழிபடுபவன் உன்னை எப்பொழுதும் அழைக்கிருன். எங்களிடமிருந்து விலகி தூரத்திலிருக்காதே. வெகு காலமும் தங்காதே.

7. நான் உனக்கே இந்த யக்ஞங்களையெல்லாம் அளிக்கிறேன். நான் மேம்படுத்தும் துதிகளையும் கூறு கிறேன். நீ எல்லா வழிகளிலும் மனிதர்களால் அழைக்கப் படவேண்டும்.

8. சுந்தர வடிவமுள்ள இந்திரனே! துதியாருகனுன உன்னுடைய மகிமையை எவனும் அடையான். உக்கிரனே! உன் வீர்யத்தையும் செல்வத்தையும் எவனும் அடையான்.

9. இந்திரனே! உன் துதிகளைக் கற்பித்து, பழைய, புதிய அறிஞர்களான ரிஷிகளுக்கு நீ புலப்படுத்திய மங்கள கரமான நட்புத் தன்மைகளை எங்களிடம் செலுத்தவும். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலனஞ் செய்யுங்கள். 5343

## 23. இந்திரன்

### 539. மைத்திராவருணி வசிட்டன்

1. அறிஞர்கள் உணவுக்காக இந்திரனைப் போற்று கிருர்கள். வசிட்டனே! யக்ஞத்திலே இந்திரனைப் போற்ற வும். இந்திரன் தன் பலத்தால் உலகங்களையெல்லாம் பரத்துவானுக. நான் அவனிடம் செல்லுங்கால் அவன் என்னுடைய மொழிகளைக் கேட்பானுக.

2. இந்திரனே! ஓஷதிகள் வளருங்கால் தேவர்கள் ஏற்கத் தகுந்த துதிகோஷம் வழிபடுபவனுல் எழுப்பப்படு கிறது. மானிடர்களிலே எவனும் தன் சுய சீவனை



அறியான். அவன் எங்கள் ஆயுளைக் குறைக்கும் எல்லாத் துன்பங்களிலிருந்தும் எங்களைக் கடத்திச் செல்லவும்.

3. நான் துதிகளால் குதிரைகளோடுள்ள இந்திரனு டைய பசுக்களைத் தரும் தேரை இணைக்கிறேன். என்னு டைய தோத்திரங்கள் பக்தியால் இன்பமாகும் இந்திரனிடம் செல்லுகின்றன. அவர் எதிர் நில்லாத பகைவர்களை அழித்து, தன் மகிமையால் சோதியையும் புவியையும் முந்துகிருன்.

4. மலட்டுப் பசுக்களைப் போல் சலங்கள் பெருகுக. இந்திரனே! துதிப்பவர்கள் ருதத்தை அடைவார்கள். நீ நியுத குதிரைகளோடு காற்றைப் போல் வரவும். நீ யக்ஞங் களால் எங்களுக்கு உணவைத் தருகிருய்.

5. இந்திரனே! மதமளிக்கும் இந்தப் பானங்கள் உன்னை மதப்படுத்துக. துதிப்பவனுக்கு வலியனும் மிக்கச் செல்வனுமான புதல்வனை அளிக்கவும். நீ ஒருவனே தேவர்களின் நடுவே மானிடர்களிடம் தயையுடனிருக்கிருய். நீ இந்த யக்ஞத்திலே மதப்படவும்.

6. இங்ஙனம் வசிட்டர்கள் வச்சிரமேந்துபவனும், வர்ஷிப்பவனுமான இந்திரனைப் போற்றுகிருர்கள். போற் றப்படும் இந்திரன், எங்களுக்கு வீரப் புதல்வர்களும் பசுக் களும் சேர்ந்திருக்கும் செல்வத்தை அளிப்பானுக. 5349

## 24. இந்திரன்

### 540. இந்திராவருணி வசிட்டன்

1. யக்ஞ ஸ்தனத்திலே உனக்கு இடம் செய்யப்பட் டிருக்கிறது. பலரால் போற்றப்படும் நீ, தலைவர்களோடு அங்கு செல்லவும். நீ எங்களுடைய பாலகனுவதால் எங் களைச் செல்வப்படுத்தவும். எங்களுக்குப் பொருள்களை அளிக்கவும். ஸோமத்தால் மதப்படவும்.

2. இந்திரனே! இரு உலகங்களிலும் ஆற்றலுள்ள வனுயிருக்கும் உன்னுடைய மனம் அறியப்படுகிறது.

ஸோமம் பிழியப்பட்டிருக்கிறது. பாத்திரங்களிலுள்ள ஸோம ரஸங்கள் ஊற்றப்படுகின்றன. மத்தியம ஸ்வரத்தோடு உச்சரிக்கப்படும் தளர்ந்த நாக்கோடு கூறப்படும். இந்த உத்தமத்துவம் அடிக்கடி அழைக்கும் பாக்களோடு இந்திரனைப் போற்றுகின்றன.

3. ரிஜீஷினனே! நீ ஸோமத்தைப் பருக இந்தத் தருப்பைக்கு வானிலிருந்தோ விண்ணிலிருந்தோ வா. உன்னுடைய குதிரைகள், நீ எங்களுடைய துதிகளைக் கேட்கவும், இன்பமாகவும் உன்னை இங்கு என்னிடம் ஏந்தி வருக.

4. குதிரைகளுள்ளவனே! அழகிய மோவாயுள்ள இந்திரனே! எங்கள் துதியால் ஏந்தப்பட்டு உன்னுடைய எல்லாப் பாலனங்கோடு பழைய மருந்துக்களுடன் இசைந்து அடிக்கடி பகைவர்களை ஜயிப்பவனும், எங்களுக்கு வலிமையும் வீர்யமுமுள்ள மகனை அளிப்பவனுயும் எங்களிடம் வா.

5. மகானும், உக்கிரனும், உலகத்தைத் தாங்குபவனுமான இந்திரனுக்கு இந்தத் துதியானது தேருக்குக் குதிரையைப் போல் தோன்றுகிறது. இந்திரனே வழிபடும் இவன் உன்னிடம் செல்வங்களை விரும்புகிறன். எங்களுக்கு வானிலே சோதியைப் போல் சிறப்பாயிருக்கும் உணவையளிக்கவும்.

6. இந்திரனே! இங்ஙனம் விரும்பத் தகுந்த செல்வத்தால் எங்களைத் திருப்தி செய்யவும். நாங்கள் உன்னுடைய மகத்தான சுமதியை மீண்டும் மீண்டும் அடைவோமாக. அவிச்செல்வர்களான எங்களுக்கு வீரப் புதல்வர்களோடு உணவையளிக்கவும். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாவியுங்கள். 5355



# 25. இந்திரன்

## 541. மைத்திராவருணி வசிஷ்டன்

1. உக்கிரனன இந்திரனே! உக்கிரப்படைகள் எதிர்க்குங்கால் நீ அவற்றேடு போர் செய்யவும். வலியனும் மனிதனுடைய நண்பனுமான உன்னுடைய கைகளிலே ஏந்தப்பட்டிருக்கும் பளபளப்பான ஆயுதம் எங்களுடைய பாலனத்துக்கு வருக. உன்னுடைய எங்கும் பரவும் மனமானது எங்களிடமிருந்து வேறு எங்கும் செல்லாமலிருக்க

2. இந்திரனே! எங்களை ஜயிக்கும் சத்துருக்களைப் போரிலே ஜயிக்கவும். நிந்திப்பவனுடைய பழிச்சொல்லை எங்களிடமிருந்து தூரத்திலே விலக்கவும். எங்களுக்குச் செல்வக் குவியலையளிக்கவும்.

3. சுந்தரமாயுள்ளவனே! உன்னுடைய நூற்றுக்கணக்கான பாலனங்கள் ஸுதாஸனன எனக்குத் தோன்றுக. ஆயிரம் வாழ்த்துக்களும், செல்வமும் எனக்கு அளிக்கப்படுக. துன்புறுத்தும் மானிடன் மீது வதைக்கும் படையைச் செலுத்தவும். எங்களுக்கு உணவையும் செல்வத்தையுமளிக்கவும்.

4. இந்திரனே! நான் உனக்கு ஒப்பாயிருக்கும் உன்னுடைய செயல்களினுலே, சூரனே! உனக்கு ஒப்பாயிருக்கும் பாலகனன உன்னுடைய பெருந்தன்மையிலே நான் சாய்ந்திருக்கிறேன். வலியனும் உக்கிரனுமான இந்திரனே! எங்களுக்கு எப்பொழுதுமிருக்க மனையை அளிக்கவும். குதிரைகளிருப்பவனே! எங்களைத் துன்புறுத்தாதே.

5. இந்த வசிட்டர்கள் குதிரைகளுள்ள இந்திரனுக்கு சுகந்தரும் துதியைக் கூறுகிறர்கள். தேவர்களால் அவனிடம் பிரேரிக்கப்பட்ட பலத்தை நாடுகிறர்கள். இந்திரனே! எங்கள் பகைவர்கள் ஜயிக்கப்பட சுலபப்படுத்தவும். சூரனே! நாங்கள் விபத்திலிருந்து பாலனமாகி செல்வத்தைப் பற்றுவோமாக.

6. இந்திரனே! இங்ஙனம் விரும்பப்படும் செல்வத்தால் எங்களைத் திருப்தி செய்யவும். நாங்கள் உன்னுடைய மகத்தான சுமதியை மீண்டும் மீண்டும் அடைவோமாக. அவ்வச்செல்வர்களான எங்களுக்கு வீரப் புதல்வர்களோடு உணவையளிக்கவும். நீங்கள் எப்பொழுதும் எங்களைச் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5361

## 26. இந்திரன்

### 542. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பிழியப்படாத ஸோமம் இந்திரனை மதப்படுத்தாது. பிழியப்பட்ட ஸோமம் தோத்திரத்தோடு சேரவில்லையானால் அது பகவானை இன்புறுத்தாது. ஆதலால் அவனுக்கு நான் புதிய துதியை அவன் அரசனைப் போல் செவியுறவும். அதனால் அவன் இன்பமாகவும் கூறுகிறேன்.

2. ஒவ்வொரு ஸோமத்திலும் ஸோமம் இந்திரனை இன்புறுத்துகிறது. ஒவ்வொரு துதியும் துதிக்கப்படுங்கால் பிழிந்த ரஸங்கள் அவனை இன்புறுத்துகின்றன. ஆதலால் ரித்விஜர்கள் பரஸ்பரம் சேர்ந்து ஸம ஊக்கமாகி பாலனத்துக்காக இந்திரனைத் தந்தையை நாடும் புதல்வர்களைப் போல அழைக்கிறார்கள்.

3. ஸோமம் பொழியப்படுங்கால் வழிபடுபவர்களால் கூறப்படும் வீரச்செயல்களை இந்திரன் இப்பொழுது நடத்துவானாக. செயலுக்குத் தகுந்தவனுயுள்ள இந்திரன் தனியனாகவே அசுரர்களுடைய நகரங்களையெல்லாம் தங்கள் மனைவிகளைப் பற்றும் கணவனைப் போல் பற்றுவானாக.

4. அவர்கள் இங்ஙனம் அவனுடைய புகழைப் போற்றினார்கள். இந்திரன் செல்வங்களை வழங்குபவனாகவும், ஜயிப்பவனாகவும் புகழப்படுகிறான். அவனுடைய பிரியமான செல்வங்கள் எங்களுக்குத் தோன்றுக. அவனுடைய பலபாலனங்கள் இடைவிடாமல் எங்களிடம் வருகின்றன.



5. இங்ஙனம், வசிட்டன் மானிடர்களுக்குப் பாலனமளிக்க பிரஜைகளுக்கு நன்மைகளை வர்ஷிக்கும் இந்திரனைப் போற்றுகிறான். இந்திரனே! எங்களுக்கு ஆயிரஞ் செல்வங்களை அளிக்கவும். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5366

## 27. இந்திரன்

### 543. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மனிதர்கள் போரிலே ஜயத்துக்குச் செலுத்தும் செயல்களை நடத்துங்கால் இந்திரனை அழைக்கிறார்கள். சூரனும் மனிதர்களுக்கு நலத்தைச் செய்பவனும், ஆற்றலை விரும்புபவனுமான நீ, எங்களிடம் பசுக்கள் நிறைந்த கோசாலையைச் செலுத்தவும்.

2. இந்திரனே! மகவானே! நீ உன்னுடைய நண்பர்களான மனிதர்களுக்கு ஆற்றலை அளிக்கவும். புருஹூதனே! மகவானே! நீ கெட்டியாய் மூடப்பட்டிருந்த புரங்களின் கதவுகளைத் திறந்தாய். பேரறிவுள்ள நீ எங்கோ மறைக்கப்பட்டிருக்கும் செல்வத்தை இப்பொழுது புலப்படுத்தவும்.

3. இந்திரன் பிராணிகளுக்கும் மனிதர்களுக்கும் அரசன். புவியிலிருக்கும் பலவிதமான செல்வத்துக்கும் அவன் அரசன். ஆதலால் அவன் அவிகள் அளிப்பவனுக்குச் செல்வங்களைத் தருகிறான். அவன் எங்களால் போற்றப்பட்டு எங்களுக்குச் செல்வத்தை அளிப்பானாக.

4. இந்திரனுடைய பூரணமாயிருப்பதும், தவறாதுள்ளதுமான தானம், நண்பர்களான மனிதர்களுக்குச் செல்வத்தைத் தருகிறது. மகவானும், தான சீலருமான அவன் மருத்துகளோடு அழைக்கப்படுங்கால் எங்களுடைய பாலனத்துக்காகத் துரிதமாய் உணவை அளிப்பானாக.

5. இந்திரனே! எங்களைச் செல்வப்படுத்த துரிதமாய் எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். நாங்கள் எங்கள்

துதியால் உன் மனதைக் கவருவோமாக. பசுக்களும், குதிரைகளும், தேர்களும் நிறைந்த செல்வத்தை எங்களுக்கு அளிக்கவும். நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்தி களோடு பாலியுங்கள். 5371

## 28. இந்திரன்

### 544. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திரனே! அறிஞனை நீ, எங்களுடைய பிரம்மத்துக்கு – தோத்திரத்துக்கு வா. உன்னுடைய குதிரைகள் எங்கள் முன்னே இணைக்கப்படுக. விசுவத்தைச் செலுத்துபவனே! எல்லா மனிதர்களும் உன்னை ஒவ்வொரு பக்கத்திலும் அழைத்தபோதிலும் நீ எங்கள் அழைப்பைக் கேட்கவும்.

2. ஆற்றலுள்ளவனே! நீ ரிஷிகளின் தோத்திரத்தைப் பாலிப்பதால், இந்திரனே! உன்னுடைய மகிமை துதிப்ப வனிடம் செல்க. உக்கிரனை நீ, வச்சிரத்தை ஏந்துங்கால் நீ உன்னுடைய வீரச்செயல்களால் பயங்கரனுகி பகைவர் களால் ஜயிக்கப்படாதவனுகிருய்.

3. இந்திரனே! நீ ஊக்கமாய் வழிபடுபவர்களை, சோதியிலும் புவியிலும் உன் நெறியால் செலுத்துங்கால் அவர்களுக்கு மகத்தான க்ஷத்திரத்தையும் சக்தியையும் அளிக்கத் தோன்றுகிருய். அதனுல் ஊக்கமுள்ளவன் ஊக்கமற்றவனை ஜயிக்கிருன்.

4. இந்திரனே! எங்களை இத் தினங்களிலே பாலிக்க வும். ஏனெனில் நட்பற்றவர்கள் எங்களிடம் வருகிருர்கள். புலவனும், பாபமற்றவனுமான வருணன் எங்களிடம் காணும் அசத்தியம், இந்திரனே! உன்னுதரவால் தேகத் திலிருந்தும், மனத்திலிருந்தும் மறைக.

5. வழிபடுபவனுடைய தோத்திரத்தை மிக்கப் பாலிப் பவனும், செல்வனுமான அந்த இந்திரனை அவன் எங்க ளுக்கு மகத்தாயும் மென்மையாயுமுள்ள செல்வங்களை அளிக்க நாம் போற்றுவோமாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5376



## 29. இந்திரன்

### 545. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திரனே! உனக்காக இந்த ஸோமம் பிழியப்பட் டிருக்கிறது. குதிரைகளுள்ளவனே! இங்கு வா. ஏனெனில் நீ இதை விரும்புகிருய். சுந்தரமான நன்கு பிழியப் பட்ட இந்த ரஸத்தைப் பருகவும். மகவானே! நாங்கள் விரும்புங்கால் எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும்.

2. வீரனே! நீ உன்னுடைய குதிரைகளோடு துரித மாய் எங்கள் துதியை ஏற்றுக்கொண்டு தோத்திரத்துக்கு வா. இந்த யக்ஞத்திலே நீ மதப்படவும். எங்களுடைய இந்த தோத்திரங்களைக் கேட்கவும்.

3. இந்திரனே! உனக்கு எங்கள் சூக்தங்களால் என்ன திருப்தி தோன்றுகிறது! மகவானே! நாங்கள் எப்பொழுது உனக்கு அவிகளை அளிப்போம்? துதிகளை, துதிகளையே உன்னிடம் அன்புள்ளவனுகி நான் உனக்கு நெய்கிறேன். இந்திரனே! நீ என்னுடைய இந்த அழைப்புக்களைக் கேட் கவும்.

4. மகவானே! உன்னுல் செவியுறப்பட்ட பழைய ரிஷிகள் மனிதர்களிடம் நட்புடனிருந்தார்கள். ஆதலால் நான் உன்னை அடிக்கடி அழைக்கிறேன். இந்திரனே! நீ எங்களிடம் தந்தையைப்போல் பந்துவாயிருக்கிருய்.

5. வழிபடுபவனுடைய தோத்திரத்தை மிக்கப் பாலிப் பவனும், செல்வனுமான அந்த இந்திரனை அவன் எங்க ளுக்கு மகத்தாயும், மேன்மையாயுமுள்ள செல்வங்களை அளிக்க நாம் போற்றுவோமாக. நீங்கள் எப்பொழுதும் எங்களைச் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5381

## 30. இந்திரன்

### 546. மைத்திராவருணி வசிஷ்டன்

1. தேவனும் திட்பனுமான இந்திரனே! நீ உன் திண்மையோடு எங்களிடம் வா. எங்களுடைய செல்வங் களைச் செழிப்பிப்பவனுகவும். மனிதர்களின் அரசனே!

வச்சிரமேந்துபவனே! நீ மகத்தான ஆண்மைக்கும், மேன்மையான க்ஷத்திரத்துக்கும், வீரத்துக்கும் தோன்றுகிறாய்.

2. வீரர்கள் போரின் முழக்கத்திலே அழைப்பதற்கருகனான உன்னை, சமரிலே, உயிருக்காகவும், சூரியனுடைய ஒளிக்காகவும் அழைக்கிறார்கள். எல்லா சனங்களின் நடுவே நீ போர் புரிவதில் முதல்வனாயிருக்கிறாய். நீ பகைவர்களை உன்னுடைய கொடும் படையால் எங்களுக்கு வசப்படுத்தவும்.

3. இந்திரனே! நல்ல தினங்கள் தோன்றுங்கால், நீ போர்களிலே உன்னுடைய கொடியை முன்னேற்றுங்கால், ஆற்றலுள்ளவனும், ஹோதாவுமான அக்கினி இங்கு எங்களைச் செல்வப்படுத்த தேவர்களை அழைக்கிறான். எங்கள் யக்ஞத்திலே அமருகிறான்.

4. சூரனே! தேவனே! இந்திரனே! உன்னைத் துதிப்பவர்களும் உனக்கு அவிகளை அளிப்பவர்களுமான நாங்கள் உன்னுடையவர்கள். உன்னைத் துதிப்பவர்களுக்கு உத்தம மனையை யளிக்கவும்; அவர்கள் செழிப்போடு மூப்புக்குச் செல்வார்களாக.

5. வழிபடுபவனுடைய தோத்திரத்தை மிக்கப் பாலிப்பவனும், செல்வனுமான அந்த இந்திரனை அவன் எங்களுக்கு மகத்தாயும், மேன்மையாயுமுள்ள செல்வங்களை யளிக்க நாம் போற்றுவோமாக. நீங்கள் எப்பொழுதும் எங்களைச் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 6386

## 31. இந்திரன்

### 547. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நண்பர்களே! பொன்னிறக் குதிரைகளுள்ளவனும், ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரனுக்கு மதமளிக்கும் ஸ்தோமத்தைப் பாடுங்கள்.



2. தானசீலனான இந்திரனுக்குத் துதியைக் கூறவும். சத்தியச் செல்வமுள்ள அவனுக்கு மற்ற மனிதர்களைப்போல் உத்தம துதியை நாம் கூறுவோமாக.

3. இந்திரனே! எங்களுக்கு உணவையளிக்க விரும்பவும். சதக்கிரதுவே! எங்களுக்குப் பசுக்களை அளிக்க விரும்பவும். மணிகளை அளிப்பவனே! எங்களுக்குப் பொன்னை அளிக்க விரும்பவும்.

4. வர்ஷிப்பவனே! உன்னை விரும்பும் நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். மணிகளை அளிப்பவனே! எங்களுடைய இந்தத் துதியை அறிந்து கொள்ளவும்.

5. ஆரியனான நீ, எங்களைத் திட்டுபவனுக்கும், பழிப்பவனுக்கும், வழிபடாதவனுக்கும் அதீனப்படுத்தாதே என் தோத்திரம் உன்னிடம் ஆதரவைப் பெறுக.

6. பகைவர்களைக் கொல்பவனே! நீ எங்களுக்குப் பரந்த கவசமாயிருக்கிறாய். போரிலே எங்களை முந்துகிறாய் உன்னுதவியால் பகைவர்களை அழிக்கிறேன்.

7. ஆம்! இந்திரனே! நீ மகான். உணவு மிகுந்த சோதியும் புவியும் உன் ஆற்றலைப் போற்றுகின்றன.

8. வழிபடுபவர்களுடைய தோத்திரங்கள் நீ போகும் இடங்களில் எல்லாம் உன்னைப் பின்பற்றி உன்னைக் காந்தியோடு சூழ்ந்து பதவி உன்னிடம் சேர்க.

9. இந்திரனே! சோதியிலே சுந்தரனாயிருக்கும் ஏறும் இரஸங்கள் வருகின்றன. மனிதர்கள் உனக்கு வணக்கமளிக்கிறார்கள்.

**விராடன்**

10. மகத்தான செல்வத்தைத் தரும் மகத்தான இந்திரனுக்கு ஸோமங்களை ஏந்தி வாருங்கள். பேரறிஞனான இந்திரனுக்குத் துதியைக் கூறுங்கள். சனங்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் நீ, பல அவிகளையளிக்கும் பிரஜைகளிடம் வரவும்.

11. விரிந்து, பரவி மகத்தாயிருக்கும் இந்திரனுக்கு விப்பிரர்கள் துதியையும் அவியையும் தோற்றுவிக்கிறார்கள். விப்பிரர்கள் அவனுடைய விரதங்களை மீறார்கள்.

12. துதிகள் தடைப்படாத கோபமுள்ளவனும் அனேத்தின் தலேவனுமான இந்திரனேப் பகைவர் கொல்லப் பலப்படுத்துகின்றன. வழிபடுபவனே! நீயும் உன்னுடைய பந்துக்களே இந்திரனேப் போற்ற ஊக்கப்படுத்தவும். 5398

## 32. இந்திரன்

### 548. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திரனே! வழிபடும் வேறு சனங்கள் உன்னே, நீ எங்களிடம் வருவதைத் தாமதப்படுத்தாமலிருப்பார்களாக. நீ எத்தனே தூரத்திலிருந்தாலும், அங்கிருந்து எங்கள் யக்ஞத்துக்கு வா. நீ இந்த யக்ஞத்திலே பிரஸன்னமாயிருக்கவும். எங்கள் துதிகளேக் கேட்கவும்.

2. உனக்காக ஸோமம் ஊற்றப்படுங்கால், வழிபடுபவர்கள் தேனேச் சூழும் ஈக்களேப் போல ரஸத்தைச் சூழ்ந்து அமருகிறார்கள். செல்வத்தை விரும்பும் ஸ்தோதாக்கள் தேரிலே காலே வைக்கும் மனிதர்களேப்போல் உன்னிலே ஆசையை வைக்கிறார்கள்.

3. செல்வங்களே விரும்பும் நான் தானசீலனும், வச்சிராயுதம் ஏந்துபவனுமான இந்திரனே, தந்தையை அழைக்கும் மகனேப்போல அழைக்கிறேன்.

4. தயிருடன் கலக்கப்பட்ட இந்த ஸோமங்கள் இந்திரனுக்காக ஊற்றப்படுகின்றன. வச்சிராயுதமேந்துபவனே! உன் மதத்துக்காக நீ பருக, எங்கள் மனேக்கு உன் குதிரைகளிலே வா.

5. செவிச் செல்வமுற்ற இந்திரன், செல்வங்களே யாசிக்கும் எங்களேச் செவியுறுவானுக. எங்கள் மொழிகளேப் புறக்கணிக்காமலிருப்பானுக. உடனே 100 செல்வங்களேயும் ஆயிரம் தானங்களேயுமளிக்கும் அவனே, அவன் அளிக்க விரும்புங்கால் எவனும் தடைப்படுத்தாமலிருப்பானுக 5403.

6. பகைவனேக் கொல்பவனே! எந்த வீரன் உனக்கு யக்ஞங்களே அளித்து, துதிகளோடு ஊக்கமாய் அணுகு



கிறுனே அவன் இந்திரனுல் பாலனமாகி எவனுலும் தடைப்படாமலாகிறுன். அவன் மனிதர்களால் போற்றப்படுகிறுன்.

7. மகவானே! நீ அவிச்செல்வர்களுக்குக் கவசமாயிருக்கவும். நீ எங்களே ஜயிப்பவனுயிருக்கிருய். உன்னுல் கொல்லப்பட்ட சத்துருவின் செல்வத்தை நாம் பகிர்ந்து கொள்வோமாக. நாசமற்ற நீ எங்களுக்கு மனேயையளிக்கவும்.

8. வச்சிரத்தை ஏந்துபவனும் ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரனுக்கு பாத்திரத்திலே ஸோமத்தை ஊற்றுங்கள். அவனேத் திருப்தி செய்ய புரோட ரசங்களேப் பக்குவப்படுத்துங்கள். அவனுக்கு இனியவற்றைச் செய்யுங்கள். அவனே இன்புறுத்தி வழிபடுபவனுக்கு சுகத்தை-யளிக்கிறுன்.

9. ஸோமத்தை யளிப்பவர்களே! நீங்கள் தயங்காதீர்கள்; ஊக்கமாயிருங்கள்; செல்வங்களுக்காக நலத்தை யளிக்கும் மகத்தான இந்திரனுக்குச் செயல்களே நடத்துங்கள். ஊக்கமாய் வழிபடுபவன் பகைவர்களே ஜயிக்கிறுன். மனேயிலே வசிக்கிறுன்; செழிக்கிறுன். தேவர்கள் குறையுள்ள செயலே ஆதரியார்கள்.

10. ஸுதாஸனுடைய தேரை எவனும் கவிழ்க்கான்; எவனும் தடுக்கான். இந்திரனுலும் பசுக்களாலும் பாலிக்கப்படுபவன் பசுக்கள் நிறைந்த மேய்தரைகளிலே நடப்பான். 5408

11. இந்திரனே! உன்னுல் பாலனமாகும் மனிதன் துதியால் உன்னே ஊக்கப்படுத்தி மிகுந்த உணவை அனுபவிப்பானுக. தீரனே! எங்களுடைய தேர்களேப் பாலிப்பவனுகவும்; எங்கள் ஜனங்களேப் பாலிப்பவனுகவும்.

12. ஜயித்தவனுடைய செல்வத்தைப் போல இந்திரனுடைய ஸோமத்தின் பாகம் மற்ற தேவர்களேக் காட்டிலும் அதிகமாயிருக்கிறது. பழுப்பான குதிரைகளுள்ளவனும், ஸோமமளிப்பவனேப் பலப்படுத்துபவனுமான இந்திரனே பகைப்பவர்கள் தாழ்த்தார்கள்.

13. யக்ஞாருகர்களான தேவர்களின் நடுவிலிருக்கும் இந்திரனுக்கு அற்பமற்ற அழகான நன்கு கூறப்படும் தோத்திரத்தை எழுப்புங்கள். செயலால்—நற்செயலோடு—இந்திரனிடம் நிலைப்பவன் பல பாசங்களால் பந்தப்படான்

14. இந்திரனே! உன் தனச்செல்வமாக அடைந்தவனை, எவன்-எந்த மனிதன் எதிர்ப்பான்? மகவானே! உனக்குச் சிரத்தையோடு அவியைத் தருபவன் இறுதி தினத்திலே உணவை-செல்வத்தை-அடைகிறான்.

15. செல்வமுள்ளவனே! உனக்கு எந்த ஜனங்கள் பிரியமான திதிகளைத் தருகிறார்களோ அவர்களைப் போர்களிலே ஊக்கப்படுத்தவும். பொன் குதிரைகளின் தலைவனே! நாங்கள் உன்னை வழிபடுபவர்களோடு உன் தலைமையிலே எல்லாத் துன்பங்களையும் கடப்போமாக. 5413

16. இந்திரனே! அதமச் செல்வம் உன்னுடையது. நீ நடுத்தர செல்வத்தைப் பாலிக்கிறாய். நீ மிக்க உத்தம செல்வத்தையெல்லாம் நடத்துகிறாய். பசுக்களை மீட்டுங்கால் உன்னை எவனும் தடைப்படுத்தான்.

17. போர்கள் நடைபெறும் இடங்களிலே நீ அனைவருக்கும் செல்வத்தையளிப்பவன் எனப் போற்றப்படுகிறாய். புருஹூதனே! புவியிலிருக்கும் ஜனங்கள் எல்லாம் பாலனத்தை விரும்பி உன்னிடம் உணவை வேண்டுகிறார்கள்.

18. இந்திரனே! நான் உன்னைப்போல் மிகுந்த செல்வத்தின் தலைவனாயிருந்தால், செல்வந்தருபவனே! போற்றுபவனைப் பாலிக்கவேண்டும். அவனைத் துன்பத்தில் கைவிடாமலிருக்கவேண்டும்.

19. போற்றத் தகுந்தவன் எங்கிருந்தாலும் நான் தினந்தோறும் அவனுக்குச் செல்வத்தை அளிப்பேனாக. மகவானே! உன்னையன்றி வேறு எவனும் நாடுவதற்கருகனில்லை. உன்னைப்போல் உத்தம பாலகன் வேறு எவனுமில்லை.



20. செயல்களிலே ஊக்கமுள்ளவன் மகத்தான அறிவின் உதவியால் செல்வத்தை அடைகிறான். இந்திரனே! பலரால் அழைக்கப்படுபவனே! நான் துதியோடு என்னை உனக்குச் சக்கரத்தின் மர மையவட்டத்தை இசைப்படுத்தும் தச்சனைப்போல் இசைப்படுத்த வணங்குகிறேன். 5418

21. மனிதன் தகுதியற்ற துதியால் செல்வத்தை அடையான். கருமிக்கும் செல்வம் தோன்றாது. மகவானே! இறுதி தினத்திலே என்னைப்போலுள்ளவனுக்கு அளிக்கும் பணி உன்னால் எனக்கு மிக்க சுலபமாயிருக்கிறது.

22. சூரனே! இந்திரனே! நாங்கள் எல்லாத் தாவர ஜங்கமப் பொருள்களின் தலைவனும், அனைத்தையுங் காண்பவனுமான உன்னை, கறக்கப்போகும் பசுக்களின் ஆபீனங்களைப் போலிருக்கும் ஸோமம் நிறைந்த சிறுவங்களோடு போற்றுகிறோம்.

23. மகவானே! இந்திரனே! புவியிலோ, சோதியிலோ உனக்கு ஒப்பாய் எவனும் பிறக்கவில்லை. இனி பிறக்கப் போவதுமில்லை. நாங்கள் குதிரைகளையும், உணவையும், பசுக்களையும் விரும்பி உன்னை அழைக்கிறோம்.

24. மகவானே! இந்திரனே! நீ மூத்தவன்; நான் கனிஷ்டன். எனக்கு அந்தச் செல்வத்தையளிக்கவும். துவக்கத்திலிருந்தே உன்னிடம் மிகுந்த செல்வமிருக்கிறது. நீ ஒவ்வொரு போரிலும் அழைக்கப்படவேண்டும்.

25. மகவானே! எங்களுடைய சத்துருக்களை விலக்கவும். செல்வங்களைப் பற்ற சுலபப்படுத்தவும்.

**சக்தி வாசிட்டர்கள்**

போரிலே எங்களைப் பாலிப்பவனாயிருக்கவும். உன்னுடைய நண்பர்களைச் செழிப்பிக்கவும்.

26. இந்திரனே! எங்களுக்கு அறிவை, புதல்வர்களுக்குக் கற்பிக்கும் தந்தையைப் போல் அளிக்கவும். இப்பொழுது எங்களுக்குச் செல்வத்தை நல்கவும். புருஹூதனே!

யக்ஞத்திலே வாழும் நாங்கள் வாழ்க்கையின் சோதியைத் தினந்தோறும் காண்போமாக.

27. அறியாமல் வருபவர்களும், துன்புறுத்துபவர்களும், கயவர்களும், காதகர்களும் எங்களைத் தாழ்த்தாமலிருப்பார்களாக. நாங்கள் உன்னால் பல சலங்களைக் கடப்போமாக. 5425

## 33. வசிஷ்டருடைய புதல்வர்கள்

### 549. மைத்திராவருணி வசிஷ்டன்

1. என்னுடைய புதல்வர்களான வசிஷ்டர்கள் என்னிடத்திலிருந்து தூரத்தில் இருக்கலாகாது எனக் கூறி, நான் எழுந்து தருப்பைக்குத் தலைவர்களை அழைக்குங்கால், வெண்ணிறமுள்ளவர்களும், செயல்களை நிறைவேற்றுபவர்களும், வலதுபக்கத்தில் குடுமியை வைத்திருப்பவர்களுமான என் மைந்தர்கள் என்னை இன்புறுத்துகிறார்கள்.

2. என்னுடைய புதல்வர்கள் பாசத்தியுமனனுடைய யக்ஞத்திலே பாத்திரத்திலிருந்து ஸோமத்தைப் பருகிக்கொண்டிருந்த உக்கிரனான இந்திரனைத் தூரத்திலிருந்து ஸுதாஸனுடைய ஸோமத்தைப் பருக பாசத்தியுமனனை அவமதித்து வருவித்தார்கள். வாயதனுடைய புதல்வனான பாசத்தியுமனனுடைய ஸோமத்திலிருந்து இந்திரன் துரிதமானான்.

3. இங்ஙனமே ஸுதாஸன் வசிட்டர்களால் சுலபமாய்ச் சிந்துவைக் கடந்தான். இங்ஙனம் வசிட்டர்களால் ஸுதாஸன் பேதனைச் சுலபமாய்க் கொன்றான். வசிட்டர்களே! உங்களுடைய தோத்திரத்தால் ஸுதாஸனைப் பத்து அரசர்களோடு நடத்தப்பட்ட போரிலே இந்திரன் பாலித்தான்.

4. யக்ஞத்தலைவர்களே! உங்களுடைய பிரம்மத்தால்—தோத்திரத்தால்—பிதுருக்கள் திருப்தியாகிறார்கள். நான் தேரின் அச்சைச் செலுத்துகிறேன். வசிட்டர்களே! நீங்கள் தளராதீர்கள். உரத்த குரலோடு இசைக்கப்படும் உங்களுடைய சந்தங்களால் இந்திரனுடைய பலத்தை ஏந்துகிறீர்கள்.



5. தாகத்தால் தகித்தவர்களும், மழையை வேண்டுபவர்களும், பத்து அரசர்களோடு செய்யப்பட்ட போரிலே திருத்ஸுக்களால் பாலிக்கப்பட்டவர்களுமான வசிட்டர்கள், இந்திரனைச் சூரியனைப்போல் ஒளியுள்ளவனாகச் செய்தார்கள். இந்திரன் வசிட்டர்களால் புகழப்படும் துதிகளைக் கேட்டான். அவன் திருத்ஸுக்களுக்குப் பரந்த உலகத்தைத் தந்தான். 5430

6. பகைவர்களுக்குச் சமமாயிராமல் தாழ்ந்திருந்த பரதர்கள் — திருத்ஸுக்கள்—பசுக்களை ஓட்டும் இலைகளும் கிளைகளுமற்ற கம்புகளைப்போல் பொருளற்று இருந்தார்கள். பிறகு திருத்ஸுக்களுக்கு வசிட்டன் புரோகிதனான தலைவனானான். அப்பால் திருத்ஸுப் பிரசைகள் செழித்தார்கள்.

7. மூவர்கள்—அக்கினி, வாயு, சூரியன் – மூவ்வுலகங்களிலே—புவியிலே, வானிலே, சோதியிலே—ரேதஸைப் பொழிகிறார்கள். அவர்களுக்கு மூன்று—வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள்—உத்தமப் பிரஜைகள் உண்டு. முதல்வன் சூரியன். தாபத்தைப்பரத்தும் மூவர்களும்—அக்கினியும், வாயுவும், சூரியனும்—உஷையைப் பின்பற்றுகிறார்கள். வசிட்டர்கள் இவற்றை அறிகிறார்கள்.

8. வசிட்டர்களே! உங்களுடைய மகிமை சூரியனுடைய சோதியைப்போல் பிரகாசிக்கிறது. உங்கள் மகிமை கடலைப் போல் ஆழமாயிருக்கிறது. உங்களுடைய ஸ்தோமம் காற்றைப் போல் வேகமாயிருக்கிறது. உங்கள் ஸ்தோமத்தை வேறு எந்த நேரத்திலும் முந்தாது.

9. வசிட்டர்கள் தங்கள் இருதயத்தில் மறைந்திருக்கும் ஞானங்களால் ஆயிரங் கிளைகளைப்பரத்தும் அந்த மரத்துக்குச் செல்லுகிறார்கள். அப்ஸரஸர்கள், யமனால் நெய்யப்பட்ட ஆடையையணிந்திருந்த வசிட்டர்களை இங்கே ஏந்தி வந்தார்கள்.

## வசிட்டன்

### வசிட்டர்களுடைய புதல்வர்கள்

10. வசிட்டனே! மித்திரா வருணர்கள் உன்னைப் பார்த்தபோது நீ மின்னலிலிருந்து தோன்றிய சோதியின் ஒரு வடிவமாயிருந்தாய். அப்பொழுது உன்னுடைய சனனங்களிலே ஒரு சன்னம் தோன்றிற்று. உன்னுடைய பழைய ஸ்தானத்திலிருந்து உன்னை இங்கே அகஸ்தியன் ஏந்தி வந்தான். அகஸ்தியனும் வசிட்டனைப்போலவே இங்ஙனம் பிறந்தான். 5485

11. வசிட்டனே! நீ மித்திராவருணர்களின் புதல்வன். பிரம்மனே! அவர்கள் ஊர்வசியை விரும்பி ரேதஸை நலிதஞ் செய்தவுடன் நீ பிறந்தாய். தேவத்தன்மையும் பிரம்மதவமுள்ள உன்னை எல்லாத் தேவர்களும் புஷ்கரத்திலே ஏந்தினார்கள்.

12. பேரறிஞன் இரு உலகங்களையும் அறிந்து, ஆயிரங்களை அளிப்பவனானன். எல்லாத்தானங்களும் உள்ளவனானன். யமனால் நெசவு செய்யப்பட்ட ஆடையை அணிந்து வசிட்டன் அப்சரஸர்களிடமிருந்து பிறந்தான்.

13. யக்ஞத்திலே பிறந்தவர்களும், துதிகளால் ஏத்தப் பட்டவர்களுமான மித்திராவருணர்கள் ஸாமானிய ரேதஸை, கும்பத்தினுள் பொழிந்தார்கள். அக்கும்பத்தின் நடுவிலிருந்து மானன்—அகஸ்தியன் — தோன்றினான். அங்கிருந்தே வசிஷ்டனும் பிறந்தான் என அவர்கள் கூறுகிறார்கள்.

14. பிரதிருதர்களே! நிருத்ஸவர்களே! உங்களிடம் வசிட்டன் வருகிறான். அவனை நல்ல மனங்களுடன் உபசரியுங்கள். அவன் தலைவனாகி-பிரம்மனாகி-ஸ்தோமங் கூறுபவனையும் ஸாமம் பாடுபவனையும் ஏந்துகிறான். ஸோமத்தைப் பிழிபவனையும் – அத்வர்யுவையும்-ஏந்துகிறான். கூறுவர்க் குரியதைக் கூறுகிறான். 5489



## 34. விசுவேதேவர்கள்

### 550. மைத்திராவருணி வசிட்டன்

1. சுத்தமாயிருப்பதும், விருப்பங்களைப் பூர்த்தி செய்வதுமான தோத்திரம் எங்களிடமிருந்து தேவர்களிடம் நன்கு கற்பிக்கப்பட்டதும் துரிதமாயுமுள்ள தேரைப் போல் செல்க.

2. சலங்கள் பெருகுங்கால் துதிகளையும் செவியுறுகின்றன. அவை சோதியினுடைய, புவியினுடைய உற்பத்தியை யறிகின்றன.

3. பரந்த சலங்கள் இந்திரனுக்குப் புட்டியைத் தருகின்றன. பகைவர்களோடு போராடும் உக்கிர வீரர்கள் அவனையே போற்றுகிறார்கள்.

4. அவனுக்காகத் தேரிலே குதிரைகளை இணையுங்கள். ஏனெனில் இந்திரன் வச்சிராயுதத்தை ஏந்துபவன். பொன் கையுள்ளவன்.

5. வழியையனுசரித்து செல்பவனைப் போல் யக்ஞத்துக்குச் செல்லுங்கள். நீங்கள் சுயமாகவே செல்லுங்கள். 5444

6. நீங்கள் சுயமாகவே போர்களுக்குச் செல்லுங்கள்; யக்ஞத்துக்குச் செல்லுங்கள்; சனங்களுக்குக் கொடியையும் வீரனையும் அளியுங்கள்.

7. இந்த யக்ஞத்தின் பலத்திலிருந்து சூரியன் எழுகிறான். அவன் உலகின் சுமையை, பல பொருள்களைத் தாங்கும் புவியைப் போல் தாங்குகிறான்.

8. அக்கினியே! நான் அரக்கனை வெல்ல தேவர்களை அழைக்கிறேன். நான் ருதத்தால் பூர்த்திசெயலை, தோத்திரத்தைக் கற்பிக்கிறேன்.

9. நீங்கள் திவ்யச் செயலை நடத்துங்கள். உங்கள் குரலைத் தேவர்களிடம் செலுத்துங்கள்.

10. ஆயிரங் கண்களுள்ளவனும், உக்கிரனுமான வருணன் இந்நதிகள் சேரும் வழிகளை அறிகிறான். 5449

11. அவன் அரசர்களின் அரசன்; அவன் நதிகளின் எழில்; அவனுடைய தடைபடாத் க்ஷத்திரம் சீவனுள்ள அனைத்தையும் நடத்துகிறது.

12. தேவர்களே! எல்லா சனங்களின் நடுவே எங்களைப் பாலியுங்கள். துன்புறுத்துபவனின் பழிச்சொல்லை நீக்குங்கள்.

13. பகைவர்களுடைய சுடர்ப் படைகள் எங்களைத் துன்புறுத்தாமல் விலகிச் செல்க. தேவர்களே! எங்கள் அங்கங்களின் பாவத்தை எங்களிடமிருந்து அடியோடு விலக்குங்கள்.

14. அவி புசிக்கும் அக்கினி எங்கள் வணக்கத்தால் வந்திக்கப்பட்டு, எங்களைப் பாலிப்பானாக. அவனுக்கு எங்களுடைய துதிகள் கூறப்படுகின்றன.

15. சலங்களின் பேரனான எங்கள் நண்பனைத் தேவர்களோடு சேர்ந்து போற்றுங்கள். அவன் எங்களைச் சுகப்படுத்துவானாக. 5454

அஹி

16. நான் வானிலே மேகங் கலைப்பவனைத் துதிகளோடு போற்றுகிறேன். நான் நதிகளின் சலங்களின் நடுவே அமர்ந்திருக்கும் சலமகனை – அக்கினியைப் போற்றுகிறேன்.

அஹிர்ப்புத்னியன்

17. அஹிர்ப்புத்னியன் எங்களைத் துன்புறுத்த விரும்பாமலிருப்பானாக. வழிபடுபவனுடைய யக்ஞம் அவமதிக்கப்படாமலாகுக.

விசுவேதேவர்கள்

18. தேவர்கள் எங்களுக்கு உணவையளிப்பார்களாக. செல்வங்களுக்குப் போராடும் பகைவர்கள் அழிவார்களாக.

19. மகத்தான சேனைகளின் தலைவர்கள் இந்தத் தேவர்களின் ஆற்றலால் பகைவர்களை, புவியை எரிக்கும் சூரியனைப்போல் எரிப்பார்களாக.



20. மனைவிகள், எங்களிடம் வருங்கால், திறக்கையுள்ள துவஷ்டா எங்களுக்கு வீரப்புதல்வர்களை அளிப்பானாக. 5459

21. எங்களுடைய இந்த ஸ்தோமத்தால் துவஷ்டா போற்றப்படுக. பூரணப் புலனுள்ள துவஷ்டா எங்களுக்குச் செல்வத்தையளிக்க விரும்புவானாக.

22. செல்வங்களை அளிக்கும் அவர்கள் எங்களுக்கு நாங்கள் விரும்பும் செல்வங்களை அளிப்பார்களாக. ரோதனியும் வருணானியும் எங்களைச் செவியுறுவார்களாக. கையுள்ள துவஷ்டா பாலகிகளோடு தேவபத்தினிகளுடன் எங்களுக்குத் தகுந்த தஞ்சனாயிருப்பானாக. அவன் எங்களுக்குச் செல்வங்களை அளிப்பானாக.

23. மலைகளும், சலங்களும், தானச்சீலர்களான தேவபத்தினிகளும், ஓஷதிகளும், சோதியும், வனஸ்பதிகளோடு சேர்ந்து, வானமும் வையமும், விண்ணுமான இருவர்களும் எங்களுக்காக விரும்பப்படும் செல்வங்களைப் பாலிப்பார்களாக.

24. பரந்த சோதியும் புவியும் சம்மதிப்பார்களாக. இந்திரனை நண்பனாக அடைந்தவனும், பிரகாசிப்பவனுமான வருணன் சம்மதிப்பானாக. நாங்கள் செல்வங்களை ஏந்தும் கலசமாக ஜயமுள்ள எல்லா மருத்துக்களும் சம்மதிப்பார்களாக.

25. இந்திரனும், வருணனும், மித்திரனும், அக்கினியும், சலங்களும், ஓஷதிகளும், மரங்களும், எங்கள் தோத்திரத்தை விரும்புவார்களாக. நாங்கள் மருத்துக்களின் அங்கத்திலே சுகத்தைக் காண்போமாக. நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலனஞ் செய்யுங்கள். 5464

## 35. விசுவேதேவர்கள்

### 551. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திரனும் அக்கினியும் எங்களுடைய சாந்திக்கு, சுகத்துக்கு, இன்பத்துக்கு—பாலனங்களுடன் எங்களோடிருப்பார்களாக. அவிகள் அளிக்கப்படும் இந்திரனும்,

வருணனும், எங்களுடைய சுகத்துக்கு எங்களோடிருப்பார்களாக. இந்திரனும், ஸோமனும், எங்களுடைய சுகத்துக்கும், செல்வத்துக்கும், நலத்துக்கும் எங்களோடிருப்பார்களாக. நாங்கள் போரிலே ஜயமாக இந்திரனும் பூஷாவும் எங்களோடிருப்பார்களாக.

2. பகன் எங்களைச் சுகப்படுத்துவானாக: சுகப்படுத்த சம்ஸன் தோன்றுக. சுகப்படுத்த எங்களுடன் புரந்தீ இருப்பாளாக. செல்வங்கள் சுகத்துக்காகத் தோன்றுக. சத்தியத்தின் ஒழுக்கத்தின் வாழ்த்து எங்களுக்குச் சுகத்தையளிக்க பலவிதத் தோற்றமுள்ள அரியமான் எங்களுடைய இன்பத்துக்கு எங்களுடனிருப்பானாக.

3. படைப்பவன் இன்பத்துக்காக எங்களுடனிருப்பானாக. பாவத்தையும் புண்ணியத்தையும் அறியும் வருணன் எங்களுடைய இன்பத்துக்காக எங்களுடனிருப்பானாக. பரந்த பூமி எங்களுடைய சுகத்துக்காக உணவோடு எங்களைத் தாங்குவாளாக. பரந்த விண்ணும், வையமும் எங்களுடைய இன்பத்துக்காக எங்களோடிருப்பார்களாக. மலைகள் எங்களுக்குச் சுகத்தையளிக்கட்டும். தேவர்களின் நல்ல துதிகளும் எங்களுக்குச் சுகத்தையளிக்கட்டும்.

4. ஒளிமுகமுள்ள அக்கினி எங்களுடைய சுகத்துக்கு எங்களோடிருப்பானாக. மித்திராவருணர்களும், அசுவினிகளும், எங்களுடைய சுகத்துக்குத் தோன்றுவார்களாக. சான்றோர்கள் எங்கள் சுகத்தைச் செல்வப்படுத்துவார்களாக. அமைதியற்ற காற்று எங்களுடைய சுகத்துக்காக வீசுவானாக.

5. பூர்வத்தில் அழைக்கப்படும் சோதியும், புவியும் எங்களுடைய சுகத்தைச் சிறப்பிப்பார்களாக. வானம் எங்களுடைய தோற்றத்துக்கு சுகமுடன் தோன்றுக. ஓஷதிகளும் மரங்களும் எங்களுக்குச் சுகத்தைத் தருக. ஜயிப்பவனும் உலகத்தின் தலைவனுமான இந்திரன் எங்கள் சுகத்துக்கு அனுகூலமாவானாக. 5469



6. தேவனான இந்திரன் வசுக்களோடு எங்களுக்கு சாந்தியைத் தருவானாக. நன்கு துதிக்கப்படும் வருணன் ஆதித்தியர்களோடு எங்களுடைய சுகத்துக்கு நட்புடனிருப்பானாக. துயரைத் துடைக்கும் ருத்திரன், ருத்திரர்களோடு சேர்ந்து எங்களுடைய சுகத்துக்கு விளங்குவானாக. தேவபத்தினிகளோடு துவஷ்டா எங்களுடைய சுகத்துக்கு எங்களுடனிருப்பானாக. இந்த யக்ஞத்திலே செவியுறுவானாக.

7. எங்களுடைய சுகத்துக்கு ஸோமம் அளிக்கப்படுக. எங்களுடைய இன்பத்துக்குத் தோத்திரம் கூறப்படுக. எங்களுடைய சுகத்துக்குக் கற்கள் ஸோமத்தைப் பிழிக. யக்ஞம் செய்யப்படுக. யூபங் அளவு பரிமானங்களும் எங்கள் சுகத்துக்காகுக. தருப்பை எங்கள் சுகத்துக்குப் பரத்தப்படுக. வேதிகை எங்கள் சுகத்துக்கு எழுப்பப்படுக.

8. பரந்து காணும் சூரியன் எங்களைச் சுகப்படுத்த எழுவானாக. திகந்தத்தின் நான்கு திசைகளும் எங்களுடைய சுகத்துக்குத் துலங்குக. திறமாயிருக்கும் மலைகளும் எங்கள் சுகத்துக்கு நிலைக்க. நதிகளும், சலங்களும் எங்கள் சுகத்துக்குப் பரத்தப்படுக.

9. அதிதி விரதங்களோடு எங்கள் சுகத்துக்கு இருப்பாளாக. புகழப்பட்ட மருத்துக்கள் எங்களுடைய சுகத்துக்கு நட்புடனிருப்பார்களாக. விஷ்ணுவும் பூஷாவும் எங்கள் இன்பத்தை வளர்ப்பார்களாக. வானம் எங்களுக்கு சுகத்தைத் தருக. வாயு எங்களுக்குச் சுகத்தை வீசுவானாக.

10. தேவனும், துணைபுரிபவனுமான ஸவிதா எங்களுடைய சுகத்துக்குத் துலங்குவானாக. உதிக்கும் உஷைகள் எங்களுடைய சுகத்துக்காக உதிப்பார்களாக. பர்ஜன்யன் எங்கள் பிரஜைகளுக்குச் சுகத்தைத் தருவானாக. க்ஷேத்திரத்தின் தலைவனான சம்பு எங்களுக்குச் சுகத்தைத் தருபவனாயிருப்பானாக. 5474

11. தேவர்களான விசுவேதேவர்கள் எங்கள் சுகத்துக்கு அனுகூலமாயிருப்பார்களாக. ஸரஸ்வதி செயல்களோடு எங்களுக்குச் சந்தோஷமாகுக. யக்ஞங்களிலே

உதவுபவர்களும், ஈகை செய்பவர்களும் எங்களுடைய சுகத்துக்கு ஆதரவாயிருப்பார்களாக. சோதியிலும், புவியிலும், சலத்திருப்பவர்களும் எங்களுடைய சுகத்துக்கு அனுகூலமாயிருப்பார்களாக.

12. சத்தியத்தைப் பாலிப்பவர்கள் எங்களைச் சுகப்படுத்த பாலிப்பார்களாக. குதிரைகளும், பசுக்களும் எங்களுக்குச் சுகத்தைத் தருக. நல்ல செயல்களைச் செய்பவர்களும் நல்ல கைப்பழக்கமுள்ளவர்களுமான ரிபுகள் எங்களுடைய சுகத்துக்கு விளங்குவார்களாக. எங்கள் அழைப்புகளிலே பிதுருக்கள் எங்களிடம் பிரியமுடனிருப்பார்களாக.

13. தேவனான அஜஏகபாதன் எங்களுடைய சுகத்துக்கு அனுகூலமாயிருப்பானாக. அஹிர்ப்புத்னியனும், வானமும் எங்கள் சுகத்துக்கு அன்புடனிருப்பார்களாக. பாலகனான சலத்தின் பேரன் - அக்கினி - எங்களுக்குச் சுகத்தைத் தருபவனாயிருப்பானாக. தேவர்களால் பாலிக்கப்படும் பிருசினி எங்களுக்குச் சுகத்தைத் தருபவளாயிருப்பாளாக.

14. எங்களுடைய இந்தப் புதிய இப்பொழுது கூறப்படும் தோத்திரத்தை ஆதித்தியர்களும், ருத்திரர்களும், வசுக்களும் விரும்புவார்களாக. சோதியிலிருந்தும், புவியிலிருந்தும் தோன்றியவர்களும், பசுவிலிருந்து வந்தவளும் - பிருசினியும் - யக்ஞாருகர்களாயிருப்பவர்களும் எங்களுடைய அழைப்பைக் கேட்பார்களாக.

15. யக்ஞாருகத் தேவர்களிலே மிகுந்த யக்ஞாருகர்களாயிருப்பவர்களும், மநுவால் போற்றப்பட்டவர்களும், அமுதர்களாயிருப்பவர்களும், சத்தியத்தை அறிபவர்களுமான எல்லாத் தேவர்களும் எங்களுக்கு நாங்கள் செல்ல பரந்தவழிகளை இன்று அளிப்பார்களாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை ஸ்வஸ்திகளோடு பாலியுங்கள். 5476

## 36. விசுவேதேவர்கள்

### 552. மைத்திராவருணி வசிஷ்டன்

1. யக்ஞ ஸதனத்திலிருந்து தோத்திரம் சூரியனிடம் செல்க. ஏனெனில் சூரியன் தன் கிரணங்களால் பசுக்களை விடுவிக்கிறான். மலைகளோடிருக்கும் பரந்த நிலம் பரவுகிறது. அக்கினி விரிந்த யக்ஞ பூமியிலே பிரகாசிக்கிறான்.



2. ஆற்றலுள்ள மித்திராவருணர்களே! நான் உங்களுக்கு இந்தப் புதிய தோத்திரத்தை அவியைப் போல் அளிக்கிறேன். உங்களில் ஒருவனான வருணன் தடைபடாத தலைவனாயிருக்கிறான். அவன் தருமத்துக்கு வழியைப் புலப்படுத்துகிறான். மித்திரன் போற்றப்படுங்கால் மனிதர்களை உழைக்க ஊக்கப்படுத்துகிறான்.

3. இயங்கும் காற்றின் சலனங்கள் சுற்றிலும் விளையாடுகின்றன. பால் தரும் பசுக்கள் செழிக்கின்றன. மகத்தான சூரியன் இருப்பிடத்திலே — வானிலே — பிறப்பிக்கப்பட்ட விருஷபன் — பர்ஜன்யன் — இருக்கும் இடத்தில் வானிலே கர்ச்சிக்கிறான்.

4. சூரனே! இந்திரனே! எவன் துதியால் உன்னுடைய தேருக்கு உன்னுடைய பிரியமானவையும், அழகுள்ளவையும், வலியவையுமான குதிரைகளை இணைத்திருக்கிறானோ அவனுடைய யக்ஞத்துக்கு வா. நான் இங்கு துன்புறுத்துபவனுடைய கோபத்தை நீக்குபவனும், நல்ல செயல்களை நடத்துபவனுமான அரியமானை வருவிக்கலாமோ?

5. போற்றுபவர்கள் தங்களுடைய சொந்தமான யக்ஞஸ்தானத்திலே நீண்ட ஆயுளுக்கும், அவனுடைய நட்பைப் பெறவும் போற்றுகிறார்கள். யக்ஞத் தலைவர்களால் அவன்—உருத்திரன் - போற்றப்பட்டவுடன் அவன் அவர்களுக்கு உணவை அளிக்கிறான். இந்த மிக்க விரும்பத் தகுந்த வணக்கம் உருத்திரனுக்குச் செலுத்தப்படுகிறது. 5484

6. ஏழாவதாயிருப்பவளும் ஸிந்துவின் தாயுமான ஸரஸ்வதியும் வளப்படுத்தி மிக்கப் பெருகிப் பாய்பவையும் தங்கள் சலங்களால் சனங்களைப் புட்டிப்படுத்துபவையுமான நதிகளும் ஒருமித்து உடனே பெருகி வருவார்களாக.

7. மகிழ்பவர்களும், துரிதமாய்ச் செல்பவர்களுமான மருத்துக்கள் எங்கள் யக்ஞத்தையும், சந்தானத்தையும் பாலிப்பார்களாக. துரித சலனமுள்ள அக்ஷரை—அக்ஷரம், தேயாதவள், எழுத்து வாக்கு—எங்களைப் புறக்கணிக்காமலிருப்பார்களாக. அவனும் மருத்துக்களும் சேர்ந்து எங்கள் செல்வங்களைச் செழிப்பிப்பார்களாக.

8. மகத்தான அரமதியையும்—பாலிக்கும் தேவதை—துதியாருகனும், சூரனுமான பூஷாவையும் அழையுங்கள். எங்களுடைய இந்த யக்ஞத்தைப் பாலிப்பவனான பகனையும், பழையவற்றை ஏந்துபவனும், தானத்தன்மையுள்ளவனுமான வாஜனையும் அழையுங்கள்.

9. மருத்துக்களே! இந்த சுலோகம் உங்களிடம் செல்க. கருவைப் பாலிப்பவனும், பாலனங்களோடிருப்பவனுமான விஷ்ணுவிடமும் இச்சுலோகம் செல்க. அவ்விருவர்களும் வழிபடுபவனான எனக்கு உணவையும், பிரஜையையும் தருவார்களாக. நீங்கள் எப்பொழுதும் எங்களைச் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5488

## 37. விசுவேதேவர்கள்

### 553. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வாஜர்களே! நிபுக்ஷணர்களே! உங்களுடைய மிக்க ஏந்தும் சக்தியுள்ளதும், போற்றத் தகுந்ததும், தடைபடாததுமான தேர் உங்களை இங்கு வகித்து வருக. அழகிய மோவாயுள்ளவர்களே! எங்களுடைய யக்ஞங்களிலே உங்களை மதப்படுத்த அளிக்கப்படும் முப்பொருள்களோடு சேர்க்கப்பட்ட மகத்தான ஸோமத்தால் நீங்கள் திருப்தி செய்து கொள்ளுங்கள்.

2. ரிபுக்களே! சோதியைப் பார்ப்பவர்களே! நீங்கள் அவிச்செல்வர்களான எங்களுடைய பொருள்களை அபகரிக்கப்படாமல் பாலியுங்கள். வலியர்களான நீங்கள் எங்கள் யக்ஞங்களிலே நன்ருய் ஸோமத்தைப் பருகுங்கள். அனுகூலமனங்களோடு எங்களுக்குச் செல்வங்களை அளியுங்கள்.



3. மகவானே! நீ அற்பமாகவோ, அதிகமாகவோ செல்வத்தைப் பகிர்ந்தளிக்க நிச்சயித்துவிட்டாய், உன் கைகளிலே செல்வம் நிறைந்திருக்கிறது. உன் வாக்குறுதி செல்வத்தை அளிக்கத் தடைபடுத்தாது.

4 இந்திரனே! ரிபுக்ஷினை நீ, தனிப்புகழுள்ளவனை நீ, பசியைத் தணிக்கும் உணவைப் போலுள்ள நீ, வழிபடுபவனுடைய மனைக்கு வா. குதிரைகளுள்ளவனே! வசிட்டர்களான நாங்கள் இன்று உனக்கு அவி அளிப்பவர்களாயும், துதி கூறுபவர்களாயுமிருப்போமாக.

5. குதிரைகள் உள்ளவனே! என் துதிகளால் போற்றப்படும் நீ, அவியளிப்பவனான எனக்கு இறங்கும். உரிய செல்வத்தை அளிப்பவனே! எங்களுக்குச் செல்வங்களை எப்பொழுது அளிப்பாய்? உன்னுடைய தகுந்த பாலனங்களை எப்பொழுது அடைவோம்.

6. இந்திரனே! எப்பொழுது எங்களுடைய துதியை மதிப்பாய்? வழிபடுபவர்களான எங்களை, நீ எங்கள் மனையிலே இப்பொழுது ஸ்தாபிக்கிருய். உன்னுடைய வலிய குதிரை எங்களுடைய இடையருத துதியால் பிரேரிதமாகி எங்களுடைய மனைக்குச் செல்வத்தையும், புதல்வனையும், உணவையும் ஏந்தி வருக.

7. மூவ்வுலகங்களைத் தாங்குபவனும், தேவியான நிர்ருதியால் தலைவன் எனக் கருதப்படுபவனும், நல்ல உணவுள்ளவனும், வருடங்களால் வியாபிக்கப்படுபவனும், மனிதர்களால் அவனுடைய சொந்த இடத்தில் நிறுத்தப்படுபவனுமான இந்திரன் தன் தேயும் பலத்தை மீண்டும் செய்துகொள்ள வருகிருன்.

8. ஸவிதாவே! போற்றத் தகுந்த செல்வங்கள் எங்களுக்குத் தோன்றுக. பர்வதனுடைய தானச் செல்வங்களும் தோன்றுக. பாலிப்பவனும், சோதியிலிருந்து தோன்றுபவனுமான இந்திரன் எங்களை எப்பொழுதும் பாலிப்பானுக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5496

## 38. ஸவிதா

### 554. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்தத் தேவனான ஸவிதா உச்சத்திலே தன் பொன் ஒளியைப் பரத்தினான்—தன்னைச் சுற்றிலும் அதைப் பரத்துகிறான். செல்வங்களைத் தருபவனும், மிகுந்த செல்வமுள்ளவனுமான பகன், மானிடர்களால் நிச்சயமாகப் போற்றத்தகுந்தவன்.

2. ஸவிதாவே! மேலே உயரவும். பொன் கையுள்ளவனே! பரந்த புவியின் மீது ஒளியைப் பரத்துபவனும், சனங்களுக்கு மானிட போகங்களைத் தருபவனுமான நீ, நாங்கள் நடத்தும் இந்த யக்ஞத்திலே எங்கள் துதிகளைக் கேட்கவும்.

3. எல்லாத் தேவர்களாலும் ஏத்தப்படும் தேவனான ஸவிதா போற்றப்படுவானாக. துதியாருகனான ஸவிதா எங்கள் தோத்திரங்களுக்கு உணவை அளிப்பானாக. அவன் வழிபடுபவர்களான எங்களை எப்பொழுதும் எல்லாப் பாலனங்களோடும் பாலிப்பானாக.

4. தேவஸவிதாவின் சனனத்திலே இன்பமாகும் அதிதி தேவியால் போற்றப்படுபவனும், இசைந்துள்ளவர்களும், சக்கரவர்த்திகளுமான வருணனாலும், மித்திரனாலும், அரிமானாலும், மற்ற தேவர்களாலும் போற்றப்படுபவனுமான ஸவிதா, எங்கள் தோத்திரங்களுக்கு உணவை அளிப்பானாக.

5. சோதிபுவிக்கு நலஞ்செய்யும் அவனை, செல்வத்தை விரும்புபவர்களும், செல்வத்தை அனுபவிப்பவர்களும் பரஸ்பரம் சேர்ந்து போற்றுகிறார்கள். அவன் எங்கள் தோத்திரங்களுக்கு உணவை அளிப்பானாக. அஹிர்ப்புத்னியன், எங்களைச் செவியுறுவானாக. பாலமளிப்பவன், ஸவிதாவோடு சேர்ந்திருக்கும் வாக்குதேவி—எங்களை உத்தமப் பசுக்களோடு எப்பொழுதும் பாலிப்பாளாக.

6. பிரஜாபாலகன்—ஸவிதா—எங்களால் விரும்பப்படும் போது தேவஸவிதாவின் உத்தமச் செல்வத்தை எங்களுக்களிக்கச் சம்மதிப்பானாக. உக்கிரன்—துதிப்பவன்—பகனை—ஸவிதாவை—பாலனத்துக்காக மிக்க அழைக்கிறான். மெலிந்தவன் – சாதாரணமாகத் துதிப்பவன், செல்வத்துக்காகப் பகனைப் போற்றுகிறான்.



7. தேவர்களுடைய யஜனத்திலே நாங்கள் அழைக்குங்கால் உத்தம உணவை ஏந்தி வருபவர்களும், மந்தகதியுள்ளவர்களுமான வாஜினர்கள் எங்களுடைய இன்பத்துக்கு அனுகூலமாயிருப்பார்களாக. அவர்கள் காதகனையும், கள்ளனையும், அரக்கர்களையுமழித்து, பழைய நோய்களை எங்களிடமிருந்து விலக்கி, எங்களை இன்புறுத்துவார்களாக.

8. வாஜினர்களே! விப்பிரர்களும், அமிருதர்களும், சத்தியத்தையளிப்பவர்களுமான நீங்கள், எங்களை ஒவ்வொரு போரிலும் பாலியுங்கள்; செல்வத்துக்காகவும் பாலியுங்கள். இனிய ஸோமத்தைப் பருகுங்கள்; இன்புறுங்கள்; திருப்தியுங்கள்; தேவர்கள் செல்லும் வழிகளிலே செல்லுங்கள். 5504

## 39. விசுவேதேவர்கள்

### 555. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அக்கினி மேலெழுந்து வழிபடுபவனுடைய தோத்திரத்தை விரும்புவானாக. எல்லாப் பிராணிகளை மூப்புக்குச் செலுத்தும் அவள் — உஷை — மேற்திசையைப் பார்ப்பவளாய் யக்ஞத்துக்கு வருகிறாள். தம்பதிகள் தேரில் செல்லும் இருவர்களைப்போல் ருதத்தின் வழியை அனுசரிக்கிறார்கள்.

2. இந்த வழிபடுபவர்களுடைய உணவையளிக்கும் தருப்பை, சனங்களின் இரு தலைவர்களான நியுத குதிரைகளோடுள்ள வாயுவும், பூஷாவும் இரவுக்கப்பால், உஷைக்கு முன்னே அழைக்கப்பட்டு, சலங்களின் நலத்துக்காக இப்பொழுது வானிலே தோன்றுகிறார்கள்.

3. தேவர்களான வசுக்கள் இந்த யக்ஞத்திலே புவியின்மீது ரமிப்பார்களாக. பிரகாசமாயுள்ள மருத்துக்கள் பரந்த வானிலே போற்றப்படுகிறார்கள். துரிதமாய்ச் செல்

லும் தேவர்களே உங்களுடைய வழிகளை எங்களிடம் செலுத்துங்கள். உங்களை அனுகும் எங்களுடைய தூதனான அக்கினியின் சொற்களைக் கேளுங்கள்.

4. இந்த யக்ஞாருகர்களும், பாலகர்களுமான விசுவே-தேவர்கள் யக்ஞங்களிலே பொது இடத்திலே அமர்கிறார்கள். அக்கினியே! யக்ஞத்திலே அவிகளை விரும்பும் தேவர்களையும், துரிதனான பகனையும், நாஸத்தியர்களையும், புரந்தியையும் போற்றவும்.

5. அக்கினியே! சோதியிலிருந்தோ, புவியிலிருந்தோ, துதியாருகத்தேவர்களான மித்திரனையும், வருணனையும், அக்கினியையும், அரியமணனையும், அதிதியையும், விஷ்ணுவையும் இந்த வழிபடுபவர்களின் நலத்துக்காக ஏந்தி வரவும். ஸரஸ்வதியையும் மருத்துக்களும் இன்பப்படுவார்களாக.

6. அவிதுதிகளுடன் யக்ஞாருகத்தேவர்களுக்கு அளிக்கப்படுகிறது. மானிடர்களுடைய விருப்பத்துக்கு விரோதமில்லாமலிருக்கும் அக்கினி யக்ஞத்தில் இருப்பானாக. தேவர்களே! நீங்கள் தேயாமலிருப்பவையும் நலங்களையெல்லாம் அளிப்பவையுமான செல்வங்களை எங்களுக்கு அளியுங்கள். சேர்ந்திருக்கும் தேவர்களோடு நாங்களும் சேர்ந்திருப்போமாக. எப்பொழுதும் தேயாதவையும், சதா ஜயிப்பவையுமான செல்வங்களை எங்களுக்கு அளியுங்கள். தேவர்களை நண்பர்களாக அடைந்து நாங்கள் ஜயிப்பவர்களாயிருப்போமாக.

7. வசிஷ்டர்களான எங்களால் சோதியும் புவியும் போற்றப்படுகிறார்கள். ருதத்தோடுள்ள வருணனும், மித்திரனும், அக்கினியும் போற்றப்படுகிறார்கள். இன்பத்தைத் தரும் அவர்கள் எங்களுக்கு உத்தம உணவைத் தருவார்களாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாவியுங்கள். 5511



# 40. வசிஷ்டர்கள்

## 556. மைத்திராவருணி வசிஷ்டன்

1. துரிதர்களான தேவர்களின் ஸ்தோமத்தை நாங்கள் தியானிக்குங்கால் யக்ஞங்களிலிருந்து தோன்றும் திருப்தியானது எங்களிடம் வருக. இன்று தேவஸவிதா செல்வங்களைப் பகிர்ந்து அளிக்கிறான். அச்செல்வமளிக்கும் ஸவிதாவின் பகிர்தலிலே நாங்கள் எங்கள் பங்குகளைப் பெறுவோமாக.

2. மித்திரனும், வருணனும், விண்ணும், வானும், இந்திரனும், அரியமானும் பிரகாசமாயுள்ள பாக்களுக்குப் பொருத்தமான செல்வத்தை எங்களுக்களிப்பார்களாக. வாயுவும், பகனும் அவற்றை எப்பொழுதும் எங்களிடமிருக்க பாலிப்பார்களாக.

3. மருத்துக்களே! புள்ளிமான்களைக் குதிரைகளாகப் பயன்படுத்தும் உங்களால் பாலிக்கப்படுபவன் உக்கிரனாயிருப்பானாக; வலியனாயிருப்பானாக. அவனை அக்கினியும், ஸரஸ்வதியும் பாலிக்கிறார்கள். அவனுடைய செல்வத்தை அழிப்பவன் எவனுமில்லை.

4. ருதத்தலைவனான இந்த வருணனும், அரசர்களான மித்திரனும், வருணனும் என்னுடைய செயல்களைத் தாங்குகிறார்கள். தடைபடாத தேவியான அதிதி ஊக்கமாய் அழைக்கப்படுகிறாள். அவர்கள் எங்களைத் துன்பத்துக்கப்பால் பத்திரமாய்க் கடத்துவார்களாக.

5. நான் அவிகளால் பொழிபவனும், தேவனும், அடையக்கூடியவனுமான அந்த விஷ்ணுவின் கிளைகளைப் போற்றுகிறேன். ருத்திரன் தன் ருத்திரியத்வத்தையும், மகத்வத்தையும் எங்களிடம் செலுத்துகிறான். அசுவினிகளே! எங்களுடைய உணவு மிகுந்துள்ள மனைக்கு வாருங்கள்.

6. பிரகாசமுள்ள பூஷாவே! இப்பொழுது தானத்தைத் தடுக்காதே. பாலிப்பவளான ஸரஸ்வதியையும், தானசீலர்களான தேவபத்தினிகளும் எங்களுக்குச் செல்வத்தை

அளிப்பார்களாக. சுகத்தைத் தருபவர்களான தேவர்கள் எங்களைப் பாலிப்பார்களாக. எங்கும் செல்லும் வாதன் எங்களிடம் மழையைச் செலுத்துவானாக.

7. வசிஷ்டர்களான எங்களால் சோதியும், புவியும் போற்றப்படுகிறார்கள். குதத்தோடு உள்ள வருணனும், மித்திரனும், அக்கினியும் போற்றப்படுகிறார்கள். இன்பத்தைத் தரும் அவர்கள் எங்களுக்கு உத்தம உணவைத் தருவார்களாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5518

## 41. பகன்

### 557. மைத்திராவருணி வசிஷ்டன்

#### பலதேவர்கள்

1. நாங்கள் காலையிலே அக்கினியையும் இந்திரனையும் அழைக்கிறோம். நாங்கள் காலையிலே மித்திரனையும், வருணனையும், அசுவினிகளையும், பகனையும், பூஷாவையும், பிரம்மணஸ்பதியையும், ஸோமனையும், உருத்திரனையும் அழைக்கிறோம்.

#### பகன்

2. நாங்கள் வைகறையிலே, தரித்திரனால் துதிக்கப்பட்டு எனக்குச் செல்வத்தை அளிக்கவும் என வேண்டப்படுபவனும், செல்வபதியால் ஏத்தப்பட்டு எனக்குச் செல்வத்தை நல்கவும் என நாடப்படுபவனும், உலகத்தைத் தாங்குபவனும், அதிதியின் மகனும், ஜயமுள்ளவனும் உக்கிரனுமான பகனை அழைக்கிறோம்.

3. பகனே! நீ வழிகாட்டுபவன். பகனே! உன்னுடைய செல்வந்தான் ஸத்தியமாயிருக்கிறது. இப்பாட்டை ஆதரிக்கவும். எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். பகனே! எங்கள் பசுக்களையும் குதிரைகளையும் செழிப்பிக்கவும். பகனே! வீரர்களிலும் ஆட்களிலும் செல்வர்களாயிருப்போமாக.

4. நாங்கள் இப்பொழுதோ, காலையிலோ, பகலிலோ தலைவனான பகனோடிருப்போமாக. முக்காலங்களிலும் செல்வமுள்ளவர்களாயிருப்போமாக. மகவானே! நாங்கள் தேவர்களுடைய அனுகூல மனத்திலிருப்போமாக.



5. தேவர்களே! பகன் செல்வமளிப்பவனாய் இருப்பானாக. நாங்கள் அவனால் செல்வர்களாவோமாக. அனைவரும் உன்னை அடிக்கடி அழைக்கிறார்கள்.

6. எங்களுடைய யக்ஞத்துக்கு உஷைகள் சுத்தமான இடத்துக்கு ததிகிராவைக் குதிரையைப் போல் வருவார்களாக. அவர்கள் தேரை இழுக்கும் வலிய குதிரைகளைப்போல் செல்வத்தை அளிக்கும் பகனை இங்கு ஏந்தி வருவார்களாக.

#### உஷைகள்

7. மங்களச் செல்விகளான உஷைகள், பசுக்களுடைய, வீரர்களுடைய, குதிரைகளுடைய செல்வங்களோடு எங்களுக்கு எப்பொழுதும் உதிப்பார்களாக. நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5525

## 42. விசுவேதேவர்கள்

### 558. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பிராமணர்களும் அங்கிரஸர்களும் எங்கும் வியாபிப்பார்களாக. கிரந்தநு எங்கள் ஸ்தோத்திரத்தை அறிந்து கொள்வானாக. சலத்தை வழங்கிக் கொண்டு நதிகள் நகர்ந்து செல்க. தலைவனும் தலைவியும் சேர்ந்து யக்ஞத்தின் அழகைப் போற்றுவார்களாக.

2. அக்கினியே! உன்னுடைய நீண்ட சகஜ வழி இனிமையாகுக. உன்னுடைய பழுப்பாயும் சிகப்பாயுமுள்ள குதிரைகளை இரதத்துக்காக இணைக்கவும். வீரனை ஏந்தும் செந்நிறக் குதிரைகளை யக்ஞ ஸதனத்துக்குச் செல்ல இணைக்கவும். யக்ஞத்திலே அமர்ந்திருக்கும் நான் தேவர்களின் சங்கங்களை அழைக்கிறேன்.

3. வழிபடுபவர்கள் தேவர்களான உங்களுக்கு வணக்கங்களோடு இந்த யக்ஞத்தையளிக்கிறார்கள். துதி கூறுப

பவனும், எங்களருகிலிருப்பவனுமான ஹோதா அனேவரை யும் முந்துகிறன். தலைவனே! நீ தேவர்களை நன்கு போற்றவும். யக்ஞாருகமான அரமதியை இங்கு திருப்பு.

4. தானசீலனை வழிபடுபவனுடைய மனையிலே சுகமாய் சயனித்திருக்கும் அக்கினி அதிதியாகப் போற்றப் படுங்கால் யக்ஞ ஸதனத்திலே நன்கு ஸ்தாபிக்கப்படுகிறன், நல்ல அன்புள்ளவனுகிறன். அணுகும் சனங்களுக்கு விரும்பத்தகுந்த செல்வங்களைத் தருகிறன்.

5. அக்கினியே! எங்களுடைய இந்த யக்ஞத்தை ஏற்றுக்கொள்ளவும், இதை இந்திரனுக்கும் மருத்துக்களுக் கும் நடுவே சிறப்பிக்கவும். தருப்பையின் மீது இரவும் பகலும் அமர்த்தப்படுவார்களாக. அக்கினியே! இந்த யக்ஞத்திலே அவியை விரும்பும் மித்திராவருணர்களை யஜிக்கவும்.

6. இங்ஙனம் வசிட்டன் செல்வங்களை விரும்பி பலவித செல்வத்துக்காக வலியனான அக்கினியைப் போற்றினன். அவன்—அக்கினி—எங்களுக்கு உணவையும், செல்வங்களை யும், ஆற்றலையுமளிப்பானுக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5531

## 43. விசுவேதேவர்கள்

### 559. மைத்திராவருணி வசிஷ்டன்

1. தேவர்களை விரும்பும் அறிஞர்கள் தேவர்களான உங்களிடம் வர யக்ஞங்களிலே உங்களைப் போற்றுகிறர்கள். அவர்கள் சோதியையும் புவியையும் போற்றுகிறர்கள். அந்த அறிஞர்களுடைய தோத்திரங்கள் மரங்களின் கிளை களைப் போல் எங்கும் பரவுகின்றன.

2. யக்ஞம் தேவர்களிடம் துரித குதிரையைப் போல் செல்க. அறிஞர்களே! நீங்கள் ஒருமனமுடன் நெய் நிறைந்த சிருவங்களை உயர்த்துங்கள். யக்ஞத்துக்குத் தருப்பையைப் பரத்துங்கள். சுவாலைகள் உச்சத்திலே தேவர்களுக்கு ஏறுக.



3. தேவர்கள் தர்ப்பையின் உன்னத ஸ்தானத்திலே தன் அங்கத்தில் குழந்தைகளை ஊட்டும் தாய்மார்களைப் போல் அமர்வார்களாக. அக்கினியே! நெய் நிறைந்த சிருவை — துடுப்பு — யக்ஞச் சுவாலையிலே ஆஹுதியைப் பொழிக. போரிலே எங்களைப் பகைவர்களிடம் செலுத் தாதே.

4. சலங்களையளிப்பவர்களும் தாரைகளைப் பொழி பவர்களுமான யக்ஞாருகத்தேவர்கள் எங்கள் துதிகளால் நன்கு போற்றப்படுவார்களாக. உங்களுடைய மிக்க உயர்ந்த துதியாருகச்செல்வங்கள் இன்று எங்களுக்குத் தோன்றுக. தேவர்களான நீங்கள், எங்களை எப்பொழு தும் சுவஸ்திகளோடு பாலியுங்கள்.

5. அக்கினியே! நீ போற்றப்படவும். சனங்களின் நடுவே எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். ஆற்ற லுள்ள அக்கினியே! நாங்கள் தடைபடாமலும், செல்வத் தோடும், இன்பத்தோடும், உன்னல் கைவிடப்படாமலும் இருப்போமாக. தேவர்களான நீங்கள் எங்களை எப்பொழு தும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5536

## 44. நதிக்கிரான்

### 560. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நான் உங்களுடைய பாலனத்துக்காக முதலில் நதிக்கிரானையும், பிறகு அசுவினிகளையும், உஷையையும், சொலிப்பிக்கப்பட்ட அக்கினியையும், பகனையும், இந்திரனை யும், விஷ்ணுவையும், பூஷாவையும், பிரம்மணஸ்பதியை யும், ஆதித்தியர்களையும், சோதியையும், புவியையும், சலங்களையும், சூரியனையும் அழைக்கிறேன்.

2. நதிக்கிரானைத் துதியால் எழுப்பி ஊக்கப்படுத்தி நாங்கள் யக்ஞத்தோடு இசைந்து தேவியான இளையைத் தருப்பையிலே அமர்த்தி, அறிஞர்களும் அழைப்பதற்குகர் களுமான அசுவினிகளை அழைப்போமாக.

3. நான் இங்ஙனம் நதிக்கிரானை எழுப்புங்கால் நான் அக்கினியிடமும், உஷையினிடமும், சூரியனிடமும், புவியி

னிடமும், துதிப்பவர்களிடமும், கவனமாயிருக்கும் வருணனுடைய மகத்தான சிகப்புக் குதிரையினிடமும் பேசுகிறேன். அவர்களைப் போற்றுகிறேன். எங்களிடமிருந்து எல்லாத் துன்பங்களையும் அவர்கள் நீக்குவார்களாக.

3. உஷையோடும், சூரியனோடும், ஆதித்தியர்களோடும், வசுக்களோடும் சேர்ந்து, இசைந்திருப்பவனும், தனதுரிமையை அறிபவனும், குதிரைகளிலே முதல்வனும், துரித அசுவமுமான ததிக்கிரான் தேர்களின் முன்னணியிலே துலங்குகிறான்.

5. நாங்கள் ருதத்தின் – சத்தியத்தின் – யக்ஞத்தின் வழியை அனுசரிக்க எங்கள் வழியை ததிக்கிரான் சலத்தால் தெளிப்பானாக. தேவர்களின் ஆற்றலாயிருக்கும் அக்கினி எங்களுடைய அழைப்பைக் கேட்பானாக. தேவர்களான நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5541

## 45. ஸவிதா

### 561. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மனிதர்களுக்கு நன்மைகளைச் செய்யப் பல செல்வங்களைக் கைகளில் ஏந்துபவனும், பிராணிகளைச் சயனப்படுத்துபவனும், எழுப்புபவனும், வானை ஒளியால் நிரப்புபவனும், அரிய செல்வங்கள் உள்ளவனும், குதிரைகளால் ஏந்தப்படுபவனும், தேவனுமான ஸவிதா இங்கு வருவானாக.

2. ஸவிதாவினுடைய நீட்டியுள்ள பரந்த பொற்கைகள் சோதியின் எல்லைகளுக்குச் செல்லுகின்றன. அவனுடைய மகிமை எங்களால் போற்றப்படுகிறது. சூரியன் அவனுக்குத் தன் ஊக்கத்தை அளிக்கிறான்.

3. மகத்தானவனும், ஆற்றலுள்ளவனும், அரிய செல்வத்தின் தலைவனும், தேவனுமான ஸவிதா எங்களுக்குச் செல்வங்களை அளிப்பானாக. மிக்கப் பரவும் ஒளியோடு முன்னேறும் அவன் மானிடர்கள் அனுபவிப்பதற்குரிய செல்வத்தை அளிப்பானாக.



4. இந்தத் தோத்திரங்கள் இனிய நாவுள்ளவனும், நிறக்கைகளிருப்பவனும், செல்வம் நிறைந்த அந்தங்கள் உள்ளவனுமான ஸவிதாவைப் போற்றுகின்றன. அவன் விரும்பத் தகுந்த மகத்தான உணவை. ஆற்றலை எங்களுக்கு அளிப்பானாக. தேவர்களான நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5545

## 46. உருத்திரன்

### 562. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வலிய வில்லையும், விரைந்து பறக்கும் அம்புகளை ஏந்துபவனும், உணவை அளிப்பவனும், ஜயிப்பவனும், ஜயிக்கப்படாதவனும், படைப்பவனும், கூரிய படையை இயற்றுபவனும், தேவனுமான உருத்திரனை இத்துதிகளால் போற்றுங்கள். அவன் எங்கள் துதிகளைக் கேட்பானாக.

2. அவன் புவியில் தோன்றுபவர்களுக்குத்தன் செல்வத்தாலும், சோதியில் தோன்றுபவர்களுக்குத் தன் இராஜதவத்தாலும் புலனாகிறான். உருத்திரனே! உன்னைத் தோத்திரத்தால் இன்புறுத்தும் எங்களைப்பாலித்து, எங்கள் மனைகளுக்கு வா. நோய்களை நீக்கும் பாலகனாயிருக்கவும்.

3. உன்னுடைய, விண்ணிலிருந்து செலுத்தப்பட்டு புவியிலே இயங்கும் சுடர்ப்படை எங்களை நீங்கிச்செல்க. சிவனை ஜயித்த உன்னிடம் ஆயிரம் மருந்துகள் இருக்கின்றன. எங்கள் புதல்வர்களையும், பேரர்களையும் துன்புறுத்தாதே.

4 உருத்திரனே! எங்களைக்கொல்லாதே. எங்களைக் கைவிடாதே நீ கோபமாகுங்கால் உன்னுடைய பாசம் எங்களைப்பற்றுமலிருக்க. சீவர்களால் போற்றத்தகுந்த யக்ஞத்திலே எங்களைப் பங்குள்ளனவர்களாகச் செய்யவும். 5549

## 47. சலங்கள்

### 563. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சலங்களே! தேவபக்தர்களால் முதலில் இந்திரபானமாகச்செய்யப்பட்டதும், சுத்தமாயிருப்பதும், பாபமற்றதும்,

நெய் சொட்டுசொட்டுவதும், இனிமையுள்ளதும், புவியி லிருந்து தோன்றியதுமான ரஸத்தை உங்களிடமிருந்து விரும்புகிறோம்.

2. இந்திரனும் பசுக்களும் இன்பப்பட, சலங்களே! உங்களுடைய மிகுந்த இனியரஸத்தை சலங்களின் துரித மாய்ச் செல்லும் பேரனுன அக்கினி பாலிப்பானுக. தேவர் களை விரும்பும் நாங்கள் அதைப்பற்றுவோமாக.

3. பலரைச் சுத்தப்படுத்துபவர்களும், மனிதர்களை உணவால் திருப்தி செய்பவர்களும், தேவிகளுமான சலங் கள் தேவர்களின் வழிகளிலே செல்லுகிறார்கள். அவர்கள் இந்திரனுடைய விரதங்களைத் தடைபடுத்தார்கள். அறி ஞர்களே! நெய்கலந்துள்ள அவியை நதிகளிக்கு அளி யுங்கள்.

4. சூரியனுடைய கிரணம் ஆவியாக எழுப்பப்பட்டு பரப்பப்பட்டவர்களும், நீக்கள் வெளியிலே வர இந்திரனுல் வழிசெய்யப்பட்டவர்களுமான சலங்களே! எங்களுக்குச் செல்வத்தையளியுங்கள், தேவர்களே! நீங்கள் எப்பொழு தும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5553

## 48. ரிபுக்கள்

### 564. மைத்திராவருணி வசிஷ்டன்.

1. ரிபுக்ஷணர்களும் வாஜர்களும், செல்வமுள்ளவர் களுமான நீங்கள், நாங்கள் பொழிந்துள்ள ஸோமத்தால் மதப்படுங்கள். உங்களுடைய ஊக்கமுள்ளவையும், ஆற்ற லுள்ளவையுமான குதிரைகள் உங்களுடைய தேரை எங் கள் முன்னே மானிடர்களின் நலத்துக்காக இழுத்து வருக.

2. நாங்கள் ரிபுக்களோடு ஆற்றலுள்ளவர்களாகி, விபுக்களோடு பெருஞ்செல்வர்களாகி எங்கள் சத்துருக் களின் ஆற்றலை எங்கள் ஆற்றலால் ஜயிப்போமாக. வாஜன் எங்களைப் போரிலே பாலிப்பானுக. நாங்கள் எங்கள் நண்பனுன இந்திரனோடு பிறகவலை அழிப்போமாக.

3. இந்திரனும் ரிபுக்களும் தங்கள் படையால் பல பகைப்படைகளை ஜயிக்கிறார்கள். நெருங்கிய போரிலே அவர்கள் எல்லாப்பகைவர்களையும் புடைக்கிறார்கள். பகை



வர்களைத்தாழ்த்தும் இந்திரனும், விபவனும், ரிபுக்ஷிணர் களும், வாஜர்களும் பகைவனின் பலத்தைத் தங்கள் உக்கிர கோபத்தால் துடைப்பார்களாக.

### விசுவேதேவர்கள்

4. தேவர்களே! இன்று எங்களுக்குச் செல்வத்தை அளியுங்கள். நீங்கள் அனைவரும் பரஸ்பரம் இன்பமாகி எங்களுடைய பாலனத்துக்கு வாருங்கள். போற்றப்படும் ரிபுக்கள் எங்களுக்கு உணவை அளிப்பார்களாக. தேவர் களான நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5557

## 49. சலங்கள்

### 565. மைத்திராவருணி வசிஷ்டன்

1. கடலைத் தலைவனுக உள்ள சலங்கள் வானின் நடுவி லிருந்து வருகின்றன. எல்லாப் பொருள்களையும் சுத்தப் படுத்துகின்றன. இடைவிடாமல் பாய்கின்றன.

2. விண்ணிலிருப்பவையும், புவியின் மீது பாய்பவை யும், வெட்டப்பட்ட வாய்க்கால்களில் ஓடுபவையும், தாமா கவே தோன்றுபவையும், கடலை நாடுபவையும், சுத்தமான வையும், சுத்தப்படுத்துபவையும், தேவிகளுமான அந்த எல்லா சலங்களும் இங்கு புவியிலே என்னைப் பாலிக்க.

3. சலங்களுடைய அரசன் வருணன் நடு உலகில் இயங்கி, மானிடர்களின் சத்தியத்தையும், அசத்தியத்தை யும் ஆய்ந்து அறிகிறான். அந்த சலங்கள் இனிய தாரைகளைப் பொழிகின்றன. அவை சுத்தமானவை. சுத்தப்படுத்துபவை. தேவிகளான அந்த சலங்கள் என்னை இங்கு பாலிப்பார் களாக.

4. தேவிகளான சலங்களின் நடுவே அரசனுன வருண னும், ஸோமனும் இருக்கிறார்கள். அங்கு தேவர்கள் அவி களை ஏற்றுக்கொள்ள இன்பமாகிறார்கள். அங்கு வைசுவா- நர அக்கினி நுழைந்திருக்கிறான். தேவிகளான அந்த சலங் கள் எல்லாம் என்னை இங்கு பாலிப்பார்களாக. 5561

## 50. பலதேவர்கள்

### 566. மைத்திராவருணி வசிஷ்டன்

#### மித்திராவருணர்கள்

1. மித்திராவருணர்களே! என்னை இங்கு பாலியுங்கள். என்னுள் பதுங்கி வீங்கும் விஷம் என்னிடம் வராமலாகுக. நான் காண வெறுக்கும் விருச்சிகத்தைத் தூரத்திலே விலக்குகிறேன். நெளியும் புழு என்னைப் பரிகசித்து, என் காலைப் புண்படுத்தாமலாகுக.

#### அக்கினி

2. இருவித முட்டுக்களில் தோன்றும் வெடிப்பையும், கணுக்கால்களிலும், முழங்கால்களிலும் தோன்றும் சொறியையும், பிரகாசிக்கும் அக்கினி தூரத்திலே விலக்குவானாக. நெளியும் புழு என் காலைப் புண்படுத்தாமலாகுக.

#### விசுவேதேவர்கள்

3. சல்மலி மரத்தில் தோன்றும் நஞ்சையும், நதிகளில் தோன்றும் நஞ்சையும், ஓஷதிகள் தோற்றுவிக்கும் நஞ்சையும், விசுவேதேவர்கள் இங்கிருந்து நீக்குவார்களாக. குடில கதியுள்ள பாம்பு என் காலடிகளின் சத்தத்தால் என்னை அறிந்துகொள்ளாமலிருக்கட்டும். நெளியும் புழு என்னைப் பரிகசித்து என் காலைப் புண்படுத்தாமலாகுக.

#### நதிகள்

4. இறக்கங்களிலே வீழ்பவையும், பள்ளங்களிலே சேர்பவையும், மேலே ஏறுபவையும், நீருள்ளவையும், வறண்டவையும், சலத்தால் அனைத்தையும் புட்டிப்படுத்துபவையும், தேவிகளுமான நதிகள், எங்களைத் துன்பப்படுத்தாமல் மங்களமளிப்பவர்களாயிருப்பார்களாக. 5565

## 51. ஆதித்தியர்கள்

### 567. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நாங்கள் ஆதித்தியர்களின் மிக்க மங்களகரமான ஆதரவால் – மனையால் – அவர்களுடைய மிக்க நூதனமான



பாலனத்தால் ஜயிப்போமாக. துரிதர்களான ஆதித்தியர்கள் எங்கள் துதிகளுக்குச் செவிசாய்த்துப் போற்றும் இவனை, பாபமின்மையிலும் சுதந்திரத்திலும் ஸ்தாபிப்பார்களாக.

2. ஆதித்தியர்களும், அதிதியும், நெறியுள்ள மித்திரனும், அரியமானும், வருணனும், ஸோமத்தால் மதப்படுவார்களாக. புவனத்தின் பாலகர்கள் எங்களைப் பாலிப்பவர்களாயிருப்பார்களாக. எங்களை ஆதரிக்க அவர்கள் இன்று, ஸோமத்தைப் பருகுவார்களாக.

3. எல்லா ஆதித்தியர்களும், எல்லா மருத்துக்களும் எல்லாத் தேவர்களும், எல்லா ரிபுக்களும், இந்திரனும் அசுவினிகளும், அக்கினியும் எங்களால் போற்றப்படுகிறார்கள். தேவர்களான நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5568

## 52. ஆதித்தியர்கள்

### 568. மைத்திராவருணி வசிஷ்டன்

1. ஆதித்தியர்களே! நாங்கள் சுதந்திரமாயிருப்போமாக. தேவர்களின் நடுவே வசிக்கும் வசுக்களே! உங்களுடைய பாலனம் மானிடர்களுக்குத் தோன்றுக. மித்திராவருணர்களே! உங்களுக்கு அவியை அளித்து உங்கள் தானத்தைப் பெற்றுக்கொள்வோமாக சோதிபுவிகளே! உங்கள் ஆதரவால் நாங்கள் ஜீவிப்போமாக.

2. மித்திராவருணர்கள் எங்களுக்குச் சுகத்தைத் தருவார்களாக. எல்லா சனங்களுக்கும் பாலகர்களான அவர்கள் எங்கள் புதல்வர்களுக்கும் பேரர்களுக்கும் சுகத்தைத் தருவார்களாக. அந்நியனால் செய்யப்பட்ட பாவங்களுக்கு நாங்கள் துன்பப்படாமலாவோமாக. உங்களுக்குப் பிரியமில்லாத செயலையும் நாங்கள் செய்யாமலிருப்போமாக.

3. ஊக்கமாயிருக்கும் அங்கிரஸர்கள் விரும்பி ஸவிதாவினிடமிருந்து அரிய செல்வத்தைப் பெறுகிறார்கள். போற்றத் தகுந்தவனும், மகானுமான தந்தையும், விசுவேதேவர்களும் ஒருமனமுடன் எங்களுக்கு இந்தச் செல்வத்தைத் தருவார்களாக. 5571

## 53. சோதியும் புவியும்

### 569. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அறிஞர்களோடு சேர்ந்துள்ள நான், யக்ஞங்களாலும், தோத்திரங்களாலும், தேவர்களைப் புதல்வர்களாக அடைந்துள்ள மகான்களும், பழைய கவிகளால் போற்றப்பட்டு, பூர்வத்திலே ஸ்தாபிக்கப்பட்டவர்களும், பெரியவர்களும் போற்றத் தகுந்தவர்களுமான சோதியையும் புவியையும் போற்றுகிறேன்.

2. நீங்கள் ருதத்தின் ஸதனத்திலே, பழைய பெற்ரோர்களைப் புதிய பாக்களால், எங்கள் முன்னே ஸ்தாபியுங்கள். சோதிபுவிகளே! தேவத்தன்மையுள்ள சனங்களோடு எங்களிடம் வாருங்கள். ஏனெனில் உங்களுடைய பாலனம் மகத்தானதாயிருக்கிறது.

3. சோதிபுவிகளே! உங்களிடம் அவியளிப்பவனுக்கு அளிக்கத் தகுந்த பல செல்வங்கள் இருக்கின்றன. எல்லையற்ற செல்வத்தை எங்களுக்கு அளியுங்கள். தேவர்களான நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5574

## 54. வாஸ்தோஷ்பதி

### 570. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வாஸ்தோஷ்பதியே! மனையைப் பாலிப்பவனே! எங்களை அறிந்துகொள்ளவும். எங்களுக்கு நோயையளிக்காதே. மனைக்கு உத்தம நுழைவாயிலை அளிக்கவும். எங்கள் ஆட்களுக்கும், கால்நடைகளுக்கும் சுகத்தையளிப்பவனுயிருக்கவும். நாங்கள் விரும்பும் எந்த செல்வத்தையும் அளிப்பவனுயிருக்கவும்.

2. வாஸ்தோஷ்பதியே! எங்களைப் பாலிப்பவனுகவும். எங்கள் செல்வத்தைச் செழிப்பவனுகவும் இருக்கவும் இந்துவே! பசுக்களும், புரவிகளுமுள்ள நாங்கள், உன் நட்பால் மூப்பற்று இருப்போமாக. புதல்வர்களைப் போற்றும் தந்தையைப்போல் நீ எங்களைப் போற்றவும்!



3. வாஸ்தோஷ்பதியே! உன்னுல் அளிக்கப்பட்ட சுகமுள்ள, இன்பமுள்ள, செல்வமுள்ள மனையோடு, நாங்கள் இருப்போமாக. க்ஷேமத்திலும், சாந்தத்திலும், யோகத்திலும், உழைப்பிலும் எங்கள் சுகத்தைப் பாலிக்கவும், அடைந்திருக்கும் செல்வத்தையும், வரும் செல்வத்தையும் பாலிக்கவும். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5577

## 55. இந்திரன்

### 571. மைத்திராவருணி வசிஷ்டன்

#### வாஸ்தோஷ்பதி

1. மனையின் பாலகனே! நோயை நீக்கும் நீ, எல்லா வடிவங்களையும் எடுத்து, எங்களுக்கு நண்பனுகவும்; சுகத்தைத் தருபவனுகவும்.

#### இந்திரன்

2. சரமையின் வெண்ணிறச் சந்ததியே! பொன்னிற உறுப்புகளுள்ள நீ, என்னைப் பார்த்துக் குரைத்தாலும், உன் பற்களைப் புலப்படுத்துகிருய். உன் வாயினுள் அவை ஈட்டிகளைப்போல் மின்னுகின்றன. ஆயினும், நீ சயனிக்கச் செல்லவும்.

3. சரமையின் மகனே! நீ திரும்பிச் செல்லவும். கள்ளனையோ, திருடனையோ பார்த்துக் குரைக்கவும். இந்திரனை வழிபடும் எங்களைப் பார்த்து ஏன் குரைக்கிருய்? நீ ஏன் எங்களைப் பயமுறுத்த நாடுகிருய்? நீ தூங்கப் போகவும்.

4. நீ காட்டுப் பன்றியைக் கிழிக்கவும். பன்றி உன்னைக் கிழிக்கட்டும். நீ ஏன் இந்திரனை வழிபடும் எங்களை எதிர்க்கிருய்? நீ ஏன் எங்களைப் பயமுறுத்துகிருய்? நீ தூங்கப் போகவும்.

5. தாய் தூங்குவாளாக. தந்தை தூங்குவானுக. நாய் தூங்குக. மனையின் தலைவன் தூங்குவானுக. எல்லா பந்துக்களும் தூங்குவார்களாக. சுற்றிலுமுள்ள எல்லா சனங்களும் தூங்குவார்களாக.

6. நாங்கள், உட்காரும் மனிதனுடைய, நடக்கும் மனிதனுடைய, எங்களைப் பார்க்கும் மனிதனுடைய கண்களை இந்த மனையை அடைப்பது போல மூடுகிறோம்.

7. நாங்கள் ஆயிரங் கொம்புகளோடு சமுத்திரத்திலிருந்து எழும் விருஷபவனுடைய வலிமையால் மனிதர்களைச் சயனப்படுத்துகிறோம்.

8. நாங்கள் தளத்திலோ, மஞ்சத்திலோ, படுக்கையிலோ, படுத்திருக்கும் எல்லாப் பெண்களையும் புண்ணிய மணங்களுள்ள எல்லாக் காந்தைகளையும் உறங்கச் செய்கிறோம். 5585

## 56. மருத்துக்கள்

### 572. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பிரகாசிப்பவர்களும், தலைவர்களும், ஒரே இடத்தில் வசிப்பவர்களும், ருத்திரனுடைய புதல்வர்களும், குதிரைகளிலே நன்கு ஏறியுள்ளவர்களுமான இவர்கள் யார்?

2. அவர்களுடைய பிறப்பை யாரும் அறியார்கள். அவர்களே ஒவ்வொருவருடைய பிறப்பையும் பரஸ்பரம் அறிந்துகொள்கிறார்கள்.

3. அவர்கள் தங்கள் சொந்தமான, சுத்தமான வழிகளிலே சேர்ந்து செல்லுகிறார்கள். காற்றைப் போல் கர்ஜிப்பவர்களும், பருந்துகளைப் போல் பறப்பவர்களுமான அவர்கள் ஒருவரை ஒருவர் முந்துகிறார்கள்.

4. மகத்தான பிருசினியால் தன் ஆபீனத்தில் ஏந்தப்பட்ட இவர்கள் வெண்ணிறமுள்ளவர்கள். இம் மருத்துக்களை அறிஞன் அறியலாம்.

5. சனங்கள் மருத்துக்களின் ஆதரவால் எப்பொழுதும் ஜயம் பெறுவார்களாக. வீரப் புதல்வர்களை அடைந்து செல்வத்தை அனுபவிப்பார்களாக. 5590

6. ஆபரணங்களால் அலங்காரமாகி அலங்குபவர்களும், எழிலுள்ளவர்களும், பலத்தால் உக்கிரமாயிருப்பவர்களுமான மருத்துக்கள் தாங்கள் போகும் இடத்துக்குத் துரிதமாகிறார்கள்.



7. உங்கள் ஊக்கம் உக்கிரமாகுக. திட்பங்கள் திரமாகுக. மருத்துக்களின் கணம் செழிக்க.

8. உங்கள் பலம் புகழுள்ளது. உங்கள் மனங்கள் போரிலே தணியாத கோபமுள்ளவை. உங்களுடைய வீரக் குழுவின் முழக்கம் முனியின் குரலைப்போலிருக்கிறது.

9. உங்களுடைய பழைய சுடர்ப் படையை எங்களிடமிருந்து விலக்குங்கள். உங்களுடைய துன்மதி இங்கு எங்களிடம் தோன்றுமலாகுக.

10. அளிக்க விரும்புபவர்கள் திருப்தியாக, மருத்துக்களே! நான் பகைவர்களை அழிப்பவர்களான உங்களுடைய பிரிய நாமங்களைக் கூறி உங்களை அழைக்கிறேன். 5595

11. மருத்துக்கள் பிரகாசிக்கும் ஆயுதங்களை ஏந்துபவர்கள். சலனத்தலே துரிதர்கள். அழகிய ஆபரணங்கள் அணிந்தவர்கள். தாமாகவே துலங்கும் தேகமுள்ளவர்கள்.

12. மருத்துக்களே! சுத்தர்களான உங்களுக்கு சுத்தமான அவிகள் அளிக்கப்படுக. நான் சுத்தர்களான உங்களுக்கு சுத்தமான யாகத்தைச் செலுத்துகிறேன். சுத்த ஜன்மமுள்ளவர்களும், சுத்தர்களும், சுத்தப்படுத்துபவர்களும், ருதத்தைப்பற்றுபவர்களுமான மருத்துக்கள். சத்தியத்தால் சத்தியத்துக்குச் செல்லுகிறார்கள்.

13. மருத்துக்களே! உங்கள் தோள்களில் ஆபரணங்கள் இருக்கின்றன. உங்கள் மார்புகளில் பிரகாசிக்கும் சரடுகள் ஆடுகின்றன. மழையோடு மின்னும் நீங்கள் மின்னல்களைப்போல் உங்கள் படைகளால் சலங்களைத் தருகிறீர்கள்.

14. மருத்துக்களே! உங்களுடைய திவ்வியதேஜசுகள் எங்கும் பரவுகின்றன. யக்ஞாருகர்களான நீங்கள் புழுதிகளைத் தாழ்த்தும் சலங்களைச் செலுத்துகிறீர்கள். மருத்துக்களே! மனைக்குரிய யக்ஞத்தின் செல்வத்தின் இந்த ஆயிரக் கணக்கான பாகத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

15. மருத்துக்களே! இந்த மகத்தான விப்பிரனுடைய அழைப்பிலே இங்கு கூறப்படும் துதியை நீங்கள் மதித்தால், எந்தப் பகைவனுல் தடைபடாததும், வீரப்புதல்வர்களோடிருப்பதுமான செல்வத்தை எங்களுக்குத் துரிதமாயளியுங்கள். 5600

16. துரிதமாய்ச் செல்லும் மருத்துக்கள், வேகமான குதிரைகளைப்போலும், யட்சனுடைய உற்சவத்தை நோக்கும் மனிதர்களைப்போலும் துலங்குகிருர்கள். அவர்கள் தந்தையின் மனையில் வசிக்கும் அச்சமற்ற குழந்தைகளைப் போலும், கன்றுகளைப்போலும் விளையாடுபவர்கள். அவர்கள் சலங்களைத் தருபவர்கள்.

17. செல்வமளிக்கும் மருத்துக்கள், அழகிய சோதியையும், புவியையும் தங்கள் புகழால் நிரப்பி, எங்களைச் சுகப்படுத்துவார்களாக. உங்களுடைய மேகங்களையும், பகைவர்களையும் கொல்லும் பயங்கராயுதம் எங்களிடமிருந்து தூரமாகுக. வசுக்களே! எங்களிடம் வாழ்த்துக்களோடு தாழ்ந்து வாருங்கள்.

18. மருத்துக்களே! அமர்ந்துள்ள ஹோதா உங்களுடைய ஸர்வவியாபகமான தானத்தைச் சாற்றுகிருன். உங்களை அடிக்கடி போற்றுகிருன். வர்ஷிப்பவர்களே! ஊக்கப்பாலகனும் மாயாரகிதனுமான அவன், உன்னைத் துதிகளால் உயர்த்துகிருன்.

19. இந்த மருத்துக்கள், ஊக்கமுள்ளவனை உற்சாகப்படுத்துகிருர்கள். பலத்தால் பலமுள்ள சனங்களைத் தாழ்த்துகிருர்கள். இவர்கள் வழிபடுபவர்களைத் துஷ்டனிடமிருந்து பாலிக்கிருர்கள். துன்புறுத்துபவனிடமிடம் மனக்குறையுடருக்கிருர்கள்.

20. இந்த மருத்துக்கள் செழித்திருப்பவனை ஊக்கப்படுத்துகிருர்கள். திரியும் தரித்திரனை ஊக்கப்படுத்துகிருர்கள். வசுக்களான அவர்கள், உங்களிடம் பிரியமாயிருக்கிருர்கள். வர்ஷிப்பவர்களே!, நீங்கள் இருளை நீக்குங்கள்; எங்களுக்குப் புதல்வர்களையும்பேரர்களையுமளியுங்கள். 5605



21. மருத்துக்களே! நாங்கள் உங்களுடைய தானத்திலிருந்து விலக்கப்படாமலிருப்போமாக. தேர்த்தலைவர்களே! உங்களுடைய தானவிபாகத்தில் நாங்கள் கடைபடாமலாவோமாக. வர்ஷிப்பவர்களே! உங்களிடத்திலிருந்து தோன்றிய விரும்பத்தகுந்த செல்வத்துக்கு எங்களைப் பங்காளர்களாகச் செய்யுங்கள்.

22. வீரமக்கள் கோபாவேசமாகி, பல ஓஷதிகளையும், சனங்களையும் ஜயிக்க ஒன்று சேருங்கால் ருத்திரப் புதல்வர்களான மருத்துக்களே! நீங்கள் போர்களிலே பகைவர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பவர்களாயிருங்கள்.

23. மருத்துக்களே! நீங்கள் எங்கள் பூர்வ பிதாக்களுக்குப் பல நலங்களைச் செய்தீர்கள். பூர்வ காலங்களில் போற்றத்தகுந்த அச்செயல்கள் புகழப்பட்டன. மருத்துக்களின் ஆதரவால் உக்கிரன் போர்களில் ஜெயமுள்ளவனுகிருன். மருத்துக்களின் ஆதரவால் வழிபடுபவன் எப்பொழுதும் உணவைப் பெறுகிருன்.

24. மருத்துக்களே! எங்களுடைய அறிவுள்ளவனும், பகைவர்களை நீக்குபவனும், பாலன மணக்குப் பகையின் சலத்திலிருந்து நடத்திச் செல்பவனுமான வீரப் புதல்வன் ஆற்றலுள்ளவனுவாஞக. உங்களுடைய ஆட்களான நாங்கள், எங்களுடைய சொந்த மனையில் வசிப்போமாக.

25. இந்திரனும், வருணனும், மித்திரனும், அக்கினியும், சலங்களும், ஓஷதிகளும், மரங்களும், எங்கள் தோத்திரத்தை ஏற்றுக்கொள்வார்களாக. நாங்கள் மருத்துக்களின் அங்கத்திலே மனையைக் காண்போமாக. தேவர்களான நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5610

## 57. மருத்துக்கள்

### 573. மைத்திராவருணி வசிஷ்டன்

1. யக்ஞாருகர்களான மருத்துக்களே! பரந்த சோதியையும் புவியையும் நடுங்கச் செய்பவர்களும், மேகங்களைப் பெய்விப்பவர்களும், உக்கிரமாய்ச் செல்பவர்களுமான

மருத்துக்களின் படையின் நாமத்தை வழிபடுபவர்களான நாங்கள் யக்ஞங்களிலே ஊக்கத்தோடு போற்றுகிறோம்.

2. மருத்துக்கள் வழிபடுபவனைக் கவனித்துக் கொள்கிறார்கள். செய்வோனின் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறார்கள். தங்கள் அன்பர்களாகி எங்கள் சபையிலே அருந்த இன்று தருப்பையின் மீது அமருங்கள்.

3. மருத்துக்களைப்போல் வேறு எந்தத் தேவர்களும் அத்தனை செல்வங்களை வழங்கார்கள். அவர்கள் பிரகாசிக்கும் ஆபரணங்களோடும், படைகளோடும், தங்கள் அங்கங்களோடும் துலங்குகிறார்கள். சோதியையும் புவியையும் ஒளிப்படுத்தி பரந்து பிரகாசிக்கும் அவர்கள் நம்முடைய நன்மைக்காகத் தங்களுடைய ஸமமாயுள்ள ஆபரணத்தை விளக்குகிறார்கள்.

4. மருத்துக்களே! மானிடர்க்குரிய துர்ப்பலத்தால் நாங்கள் உங்களுக்குக் குற்றஞ் செய்திருந்தால் உங்களுடைய சுடர்ப்படை எங்களிடமிருந்து தூரமாகுக. யக்ஞாருகர்களான 'மருத்துக்களே! நாங்கள் உங்களாயுதத்துக்கு இரையாகாமலிருப்போமாக. உங்களுடைய உணவளிக்கும் ஸுமதி எங்களுக்குத் தோன்றுக.

5. நிந்தையற்றவர்களும், சுத்தர்களும், சுத்தப்படுத்துபவர்களுமான மருத்துக்கள், எங்களுடைய இந்த யக்ஞத்திலே இன்புறுவார்களாக. துதியாருகர்களான மருத்துக்களே! எங்களை ஸுமதிகளோடு பாலியுங்கள். எங்களை எப்பொழுதும் உணவால் புஷ்டிப்படுத்த செழிப்பியுங்கள்.

6. எல்லா நாமங்களோடு போற்றப்படுபவர்களும், தலைவர்களுமான மருத்துக்கள் எங்கள் அவிகளைப் புசிப்பார்களாக. மருத்துக்களே! எங்கள் சந்தானத்துக்கு அமுதத்தை அளியுங்கள். எங்களுக்குத் தங்க செல்வத்தைப் பதிலுக்களியுங்கள்.

7, மருத்துக்களே! எங்களை நீங்களாகவே நூற்றுக்கணக்காய் வளர்ப்பவர்களும், துதிக்கப்படுபவர்களும், மருத்துக்களுமான நீங்கள், எல்லாம் உங்களுடைய பாலனங்களோடு யக்ஞத்திலே வழிபடுபவர்களின் முன்னே



வாருங்கள். எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5617

# 58. மருத்துக்கள்

## 574. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சேர்ந்து மழையைப் பொழிவதும் திவ்யத் தன்மைக்கு அதிகமாக ஆற்றலுள்ளதுமான மருத்துக்களின் படைக்குத் தோத்திரத்தைக் கூறுங்கள். மருத்துக்கள் தங்கள் மகிமையால் சோதியையும் புவியையும் வருத்தப்படுத்துகிறார்கள். அவர்கள் புவியிலிருந்து, வானிலிருந்து சோதிக்குப் பரவுகிறார்கள்.

2. துரிதர்களும், மிக்கக் கோபமுள்ளவர்களும், பயங்கரமாயிருப்பவர்களுமான மருத்துக்களே! பிரகாசமாயுள்ள உருத்திரனிடமிருந்து பிறந்தார்கள். பலத்திலும் ஒளியிலும் மேன்மையாயிருக்கும் உங்கள் கடினத்தைச் சூரியனைக் காணும் ஒவ்வொருவனும் கண்டு கலங்குகிறான்.

3. மருத்துக்களே! அவியளிக்கும் செல்வர்களான எங்களுக்கு மிகுந்த உணவையளியுங்கள். எங்களுடைய உத்தமத் துதியை விரும்புங்கள். நீங்கள் செல்லும் வழி சீவர்களைத் துன்புறுத்தாது; அது எங்களுடைய செல்வத்தை உங்களுடைய விரும்பத் தகுந்த பாலனங்களால் செழிப்பிக்க.

4. மருத்துக்களே! உங்களால் பாலிக்கப்படும் விப்பிரன் நூற்றுக்கணக்கான செல்வங்களுடனாகிறான். எதிர்ப்பவனும், பகைவர்களை ஜயிப்பவனும், உங்களால் பாலிக்கப்பட்டு ஆயிரஞ் செல்வங்களுள்ளவனாகிறான். உங்களால் பாலிக்கப்பட்ட சக்கரவர்த்தி தன் பகைவர்களைக் கொல்லுகிறான். ஆட்டுபவர்களான உங்களால் அளிக்கப்படும் செல்வம் மிக்கச் செழித்திருக்க.

5. நான் வர்ஷிக்கும் ருத்திரனுடைய புதல்வர்களைப் போற்றுகிறேன். மருத்துக்கள் அடிக்கடி அழைக்கப்பட்டு மீண்டும் எங்களிடம் வருவார்களாக. துரிதர்களான மருத்துக்களுக்கு நாங்கள் மறைமுகமாகவோ, எதிர்முகமாகவோ

குற்றஞ் செய்து அதனுல் அவர்கள் கோபமடைந்திருந்தால், நாங்கள் துதியால் அதை நீக்குவோமாக.

6. செல்வர்களான மருத்துக்களுக்கு நல்ல துதி கூறப்படுகிறது. மருத்துக்கள் இந்தத் துதியை விரும்புவார்களாக. வர்ஷிப்பவர்களே ! துவேஷிகளை எங்களிடமிருந்து தூரத்திலே விலக்குங்கள். தேவர்கள் என நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5623

## 59 மருத்துக்கள்

### 575. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அக்கினியே ! வருணனே ! மித்திரனே ! மருத்துக்களே ! தேவர்களே ! இந்த உலகின் விபத்துக்களிலிருந்து உங்களால் பாலிக்கப்பட்டு இங்கு நல்ல வழிகளுக்கு உங்களால் செலுத்தப்படுபவனைச் சுகப்படுத்துங்கள்.

2. தேவர்களே ! உங்களால் பாலிக்கப்பட்டு பிரியமான தினத்திலே உங்களைப் போற்றுபவன் தன் பகைவர்களை ஜயிக்கிருன். உங்களுக்கு மிகுந்த அவிகளை அளித்து, தன் யக்ஞத்தில் நிறுத்திக்கொள்பவன் தன் வசதியைப் பரத்திக்கொள்கிருன்.

3. வசிஷ்டன் உங்களில் தாழ்ந்தவன் என எவனையும் புறக்கணியான். ஸோமத்தை விரும்பும் மருத்துக்களே ! எங்களால் பிழியப்பட்ட ஸோமத்தை நீங்கள் இன்று அனைவரும் சேர்ந்து பருகுங்கள்.

4. தலைவர்களே ! போர்களில் உங்களால் பாலிக்கப்படுபவனுக்கு உங்கள் பாலனம் துன்பத்தை விலக்கும் உங்களுடைய புதிய ஸுமதி மீண்டும் எங்களுக்குத் தோன்றுக. ஸோமத்தைப் பருக விரும்பும் நீங்கள், துரிதமாய் இங்கு வாருங்கள். 5628

5. திரண்ட செல்வங்களுள்ள நீங்கள் யக்ஞ அவிகளை அருந்த வாருங்கள். மருத்துக்களே ! நான் உங்களுக்கு இந்த அவிகளையளிக்கிறேன். ஆதலால் நீங்கள் வேறு எந்த யக்ஞத்துக்கும் செல்லாதீர்கள்.



6. எங்கள் தருப்பையின் மீது அமருங்கள். விரும்பத் தகுந்த செல்வங்களை அளிக்க வாருங்கள். மருத்துக்களே! துன்பப்படுத்தாத நீங்கள் இந்த யக்ஞத்திலே அளிக்கப்படும் சுவாஹாவுடனுள்ள இனிய ஸோமத்திலே இன்புறுங்கள்.

7. தங்களைப் புலன் செய்து கொள்ளாமலிருக்கும் மருத்துக்கள் தங்கள் அங்கங்களை எழில் செய்து கொண்டு கருப்பு முதுகுள்ள அன்னங்களைப்போல் இறங்குவார்களாக. மருத்துக்களின் படையெல்லாம் என்னைச் சுற்றிலும் யக்ஞத்திலே இன்புறும் இன்ப மக்கட்களைப் போல் சேர்க.

8. வசுக்களே! மருத்துக்களே! எங்கள் சித்தங்களைக் கலக்குபவனும், அனைவராலும் விலக்கப்பட்டு எங்களைக் கொல்ல விரும்புபவனும், பாபத்துக்காகத் தண்டிக்கும் வருணனுடைய பாசங்களில் கட்டப்பட விரும்புபவனுமான மனிதனை உங்களுடைய சுடர்ப் படையால் அழியுங்கள்.

9. பகைவர்களை அழிக்கும் மருத்துக்களே! உங்களுக்கு இந்த அவி கற்கப்படுகிறது. பகைவர்களைப் புசிக்கும் நீங்கள் உங்கள் பாலனங்களோடு வந்து இதை ஏற்றுக் கொள்ளுங்கள்.

10. மனையின் யக்ஞத்துக்குரியவர்களே! தானசீலர்களான மருத்துக்களே! உங்கள் பாலனங்களோடு வாருங்கள். சென்று விடாதீர்கள்.

11. சுயபலமுள்ள மருத்துக்களே! கவிகளே! சூரியனுடைய புகழுள்ளவர்களே! இங்கு வாருங்கள். இங்கு வாருங்கள். இங்கு வாருங்கள். நான் உங்களை யக்ஞத்துக்கு அழைக்கிறேன்.

#### ருத்திரன்

12. நாங்கள் புஷ்டியைப் புஷ்டிப் படுத்துபவனும், சுகந்தனுமான திரயம்பகனைப் போற்றுகிறோம். நான் மிருத்யுவிலிருந்து, வெள்ளரியிலிருந்து பழத்தைப்போல் மீட்கப்படுவேனாக. நான் அமுதத்திலிருந்து விலக்கப்படாமலிருப்பேனாக. 5635

# 60. மித்திராவருணர்கள்

## 576. மைத்திராவருணி வசிஷ்டன்

### சூரியன்

1. சூரியனே! நீ இன்று உதயமாகுங்கால் நாங்கள் பாபமற்றவர்கள் என்னும் உண்மையை நீ மித்திரனிடமும், வருணனிடமும் கூறவும். அதிதியே! நாங்கள் தேவர்களின் நடுவிலிருப்போமாக. அர்யமானே! நாங்கள் உன்னைத் துதித்து உனக்குப் பிரியமுள்ளவர்களாவோமாக.

### மித்திராவருணர்கள்

2. மித்திராவருணர்களே! மனிதர்களைக் காண்பவனும், எல்லாத் தாவர ஜங்கமப் பொருள்களைத் தாங்குபவனும், மானிடர்களின் நற்செயல்களையும், தீமைகளையும் நோக்குபவனுமான இந்தச் சூரியன், வானிலே சலனமாகி சோதி புவிகளின் மீது எழுகிறான்.

3. மித்திராவருணர்களே! சூரியன் உங்களுடைய பொதுவான இடத்திலிருந்து—வானிலிருந்து—வர தன் ஏழு பொன் நிறக் குதிரைகளை இணைத்திருக்கிறான். அக்குதிரைகள் நெய்யளிக்கும்.

4. உங்களை விரும்புபவனும், உலகங்களை நோக்குபவனும், எல்லா சீவப் பிராணிகளையும், மந்தையைப் பாலிக்கும் கோபனைப்போல் கவனிப்பவனுமான அந்தச் சூரியனை ஏந்தி வருகின்றன. தேன் நிறைந்த உணவுகளுள்ள குதிரைகள் எழுகின்றன. சூரியன் விளங்கும் வானிலே ஏறுகிறான். அவனுக்கு ஆதித்தியர்களும் இணைந்திருக்கும் மித்திரனும், வருணனும், அர்யமானும் வழிகளைச் செய்கிறார்கள்.

5. இந்த மித்திரனும், வருணனும் மிகுதியாயுள்ள அசத்தியத்தை அழிக்கிறார்கள். சுகத்தைத் தருபவர்களும், அதிதியின் ஜயிக்கப்படாதவர்களுமான புதல்வர்கள் ருதத்தின் ஸ்தானத்திலே வளர்கிறார்கள்—போற்றப்படுகிறார்கள்.
5640

6. ஜயிக்கப்படாமலுள்ள இந்த மித்திரனும், வருணனும், அர்யமானும், சைதன்னியமற்று, உறங்குபவர்களைத் தங்கள் சக்தியால் சேதனைப்படுத்துகிறார்கள். அவர்கள்



பேரறிவுள்ள கருத்தாவினிடஞ் சென்று அவனை எல்லாத் தீமையிலிருந்தும் நீக்கி நன்னெறியால் சோதிக்கச் செலுத்துகிறார்கள்.

7. இமை கொட்டாத கண்களோடு பார்ப்பவர்களும் சோதியிலும் புவியிலுமுள்ள எல்லாப் பொருள்களையும் அறிபவர்களுமான அவர்கள், அறிவிலியைக் கடமைக்குச் செலுத்துகிறார்கள். நதியின் அகாத ஆழத்தில் அவர்களால் அடிநிலை தோன்றுகிறது. அவர்கள் எங்களைப் பரப்பின் அக்கரைக்குச் செலுத்துவார்களாக.

8. அதிதியும், வருணனும். மித்திரனும் பாலகர்களைப் போல் எங்களுக்குப் புதல்வர்களையும். பேரர்களையுமளித்து செல்வமான மனையை ஸுதாஸனுக்கு அளிக்குங்கால், நாங்கள், தீரர்களே! தேவர்களைக் கோபப்படுத்தாமல் இருப்போமாக.

9. என்னுடைய பகைவன் வேதியைத் தீய துதிகளால் பங்கப்படுத்தாமலிருப்பானாக. வருணனால் தடுக்கப்பட்டு அவன் பல துன்பங்களை அனுபவிப்பானாக. அரியமான் எங்களை வெறுப்பவரிடமிருந்து பாலிப்பானாக. வர்ஷிப்பவர்களே! பரந்த இடத்தை ஸுதாஸனுக்கு அளியுங்கள்.

10. இந்த மூன்று தேவர்களின் சங்கமானது மர்மமான சோதியாயிருக்கிறது. மர்மமான ஊக்கத்தால் அவர்கள் எல்லா சத்துருக்களையும் ஜயிக்கிறார்கள். வர்ஷிப்பவர்களே! பகைவர்கள் உங்களுக்குப் பயந்து நடுங்குகிறார்கள். உங்கள் பலத்தின் மேன்மையால் எங்களைச் சுகப்படுத்துங்கள்.

11. பலத்தையும், உத்தமப் பொருள்களையும், பற்ற தன் புலனைச் செலுத்திப் போற்றும் புலவனுடைய தோத்திரத்தை இந்தத் தானசீலர்களான தேவர்கள் ஏற்றுக்கொண்டு அவனுக்குப் பரந்த மனையை வசிப்பதற்குத் தருகிறார்கள்.

12. உத்தமர்களான மித்திராவருணர்களே! யக்ஞங்களிலே உங்களுக்கு இந்தத் துதி கூறப்படுகிறது. எல்லாக் கஷ்டங்களையும் எங்களிடமிருந்து நீக்குங்கள், தேவர்களே! எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள்.
5647

## 61. மித்திராவருணர்கள்

### 577. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மித்திராவருணர்களே! சூரியன், தேவர்களான உங்கள் இருவர்களுடைய அழகிய ஒளியைப் பரத்திக் கொண்டு எழுகிறான். எல்லா புவனங்களையும் பார்க்கும் அவன் மானிடர்களின் செயல்களையெல்லாம் அறிகிறான்.

2. மித்திராவருணர்களே! நல்ல செயல்களை நடத்துபவர்களே! உங்களால் பாலிக்கப்படும் துதிகளைக் கூறுபவனும், உங்கள் ஆற்றலால் பல வருடங்கள் நிரப்பப்படுபவனும், யக்ஞத்தைச் செய்பவனும், நீண்ட கேள்வியுள்ளவனுமான விப்பிரன்–வசிஷ்டன் உங்களுக்குத் தோத்திரத்தைக் கூறுகிறான்.

3. மித்திராவருணர்களே! நீங்கள் பரந்த புவியைக் காட்டிலும் பரந்தவர்கள். தாராளமாயளிப்பவர்களே! நீங்கள் புகழுள்ளதும், மகத்தானதுமான சோதியைக் காட்டிலும் மகத்தாயிருப்பவர்கள். நீங்கள் சத்தியத்தில் செல்லும் மனிதர்களை சதாபாலனஞ் செய்து கொண்டு ஓஷதிகளிலும், பிரஜைகளிலும் எழிலை ஏந்துகிறீர்கள். நீங்கள், உங்கள் ஒற்றர்களை ஓஷதிகளிலும், பிரஜைகளிலும் ஸ்தாபித்து, சத்தியத்தில் செல்வர்களை சதா கவனித்து வருகிறீர்கள்.

4. நான் மித்திராவருணர்களுடைய பலத்தைப் போற்றுகிறேன். அப்பலம் அதன் மகித்வத்தால் சோதியையும் புவியையும் தனித்தனியாய் நிலைப்படுத்துகிறது. யஜிக்காதவருடைய மாதங்கள் வீர சூன்யமாகின்றன. யக்ஞத்தில் இன்புறுபவன் செல்வத்தில் செழிப்பானாக.

5. அமூடர்களே! எங்கும் இருப்பவர்களே! வர்ஷிப்பவர்களே! இந்தத் தோத்திரங்கள் உங்களுக்குத் தோன்றுகின்றன அவற்றில் ஆச்சரியம் எதுவும் இல்லை. தகுந்தது எனவும் தென்படவில்லை. மனிதர்களின் கபட ஸ்தோத்திரங்களை வஞ்சகர்கள் போற்றுகிறார்கள். உங்களுக்குக் கூறப்படும் தோத்திரங்கள் இரகசியமாய்த் தோன்றினாலும் அவை அறியாதவனுக்குக் கூறப்படவில்லை.



6. நான் துதிகளோடு உங்கள் இருவர்களுக்கும் யக்ஞத்தையளிக்கிறேன். மித்திராவருணர்களே! நான் துன்பத்திலாகுங்கால் உங்களை அழைக்கிறேன். உங்களைப் போற்ற புதிய பாக்கள் தோன்றுகின்றன. என்னால் கற்பிக்கப்பட்ட இந்தத் துதிகள் உங்களை இன்புறுத்துக.

7. உத்தமர்களான மித்திராவருணர்களே! யக்ஞங்களிலே உங்களுக்கு இந்தத் துதி கூறப்படுகிறது. எல்லாக் கஷ்டங்களையும் எங்களிடமிருந்து நீக்குங்கள். தேவர்களே! எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள்.
5654

## 62. மித்திராவருணர்கள்

### 578. மைத்திராவருணி வசிஷ்டன்

#### சூரியன்

1. சூரியன் தன் மகத்தான பற்பல கிரணங்களை எல்லா மானிடப்பிரஜைகளின்மீது பரத்துகிறான். பகலில் பிரகாசிக்கும் அவன் ஏகனாகவே அனைவர்க்கும் தோன்றுகிறான். அவன் செய்பவன். செய்யப்பட்டவன். வழிபடுபவர்களால் போற்றப்படுகிறான்.

2. சூரியனே! நீ ஸ்தோமங்களோடும் வெள்ளைக் குதிரைகளோடும் எங்கள் முன்னே உச்சத்தில் ஏறவும். நாங்கள் பாபமற்றவர்கள் என நீ மித்திரனிடமும், வருணனிடமும், அர்யமானிடமும், அக்கினியினிடமும் கூறவும்.

3. சத்தியத்தைப் பாலிப்பவர்களும், துன்பத்தை விலக்குபவர்களுமான வருணனும், மித்திரனும், அக்கினியும் எங்களுக்கு ஆயிரக்கணக்கான செல்வங்களைத் தருவார்களாக. எங்களால் போற்றப்பட்டு, அவர்கள் எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்வார்களாக.

#### மித்திராவருணர்கள்

4. சோதியே! புவியே! அதிதியே! மகான்களே! உங்களை அறியும் நல்ல சன்மங்களுள்ள எங்களைப் பாலியுங்கள். நாங்கள் வருணனுடைய, வாயுவினுடைய கோபத்துக்குட்படாமலாவோமாக. மானிடர்களின் பிரிய நண்ப

ஞன மித்திரனுடைய கோபத்துக்குட்படாமலாவோமாக.

5. நாங்கள் நீடூழி வாழ உங்கள் கைகளை நீட்டுங்கள். பசுக்கள் மேயும் நிலங்களை ஜலத்தைத் தெளித்து ஈரப்படுத்துங்கள். தருணர்களே! மித்திராவருணர்களே! என்னுடைய இந்த சொற்களைக் கேளுங்கள்.

6. மித்திரனும், வருணனும், அர்யமானும் எங்களுக்கும், எங்கள் சந்தானத்துக்கும் செல்வத்தை அளிப்பார்களாக. எங்களுக்கு எல்லாவழிகளும் செல்வதற்கு சுகமாகத் தோன்றுக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5560

## 63. மித்திராவருணர்கள்

### 579. மைத்திராவருணி வசிஷ்டன்

#### சூரியன்

1. விசுவத்தின் கண்ணும், மானிடர்களுக்குப் பொதுவாயிருப்பவனும், மித்திராவருணர்களின் கண்ணும், இருளைச் சருமத்தின் துண்டைப்போல் சுருட்டுபவனும், தேவனும், நல்ல செல்வனுமான சூரியன் எழுகிறான்.

2. ஜனங்களை ஊக்கப்படுத்துபவனும், மகானும், துவஜனும், சலத்தையளிப்பவனுமான சூரியன், தேரிலே சேர்க்கப்பட்டதும், வெண்குதிரைகளால் இழுக்கப்படுவதும், ஏகமாயிருப்பதுமான சக்கரத்தைச் சுழற்ற விரும்பி எழுகிறான்.

3. வழிபடுபவர்களின் துதிகளால் இன்பமாகி உஷைகளின் அங்கத்திலிருந்து பிரகாசமுள்ள சூரியன் உதிக்கிறான். அனைவருக்கும் சமமாயுள்ள ஒளியை எல்லைப்படுத்தாமலிருக்கும் தேவனான சூரியன், என்னுடைய விருப்பங்களைப் பூர்த்திசெய்கிறான்.

4. நீண்டதூரஞ் செல்லுபவனும், தாரகனும், ஒளியைப் பரத்துபவனும், மிக்கப் பிரகாசிப்பவனுமான சூரியன் வானிலிருந்து எழுகிறான். எல்லாப் பிராணிகளும் சூரியனால் ஊக்கமடைந்து தங்களுக்குரிய செயல்களை நடத்துகின்றன.



#### சூரியனும் மித்திராவருணர்களும்

5. அவன் செல்வதற்கு அமிருதர்களால் செய்யப்பட்ட வழியிலே பருந்தைப் போல் பாய்ந்து செல்லுகிறான். மித்திராவருணர்களே! சூரியன் உதயமாகுங்கால் நாங்கள் துதிகளோடும், அவிகளோடும் உங்களைப் போற்றுகிறோம்

#### கூறப்படும் தேவர்கள்

6. மித்திரனும், வருணனும், அரியமானும் எங்களுக்கும் எங்கள் சந்தானத்துக்கும் செல்வத்தையளிப்பார்களாக எங்களுக்கு எல்லா வழிகளும் செல்வதற்குச் சுகமாகத் தோன்றுக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5666

## 64. மித்திராவருணர்கள்

### 580. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியிலும் புவியிலுமுள்ள சலங்களை அதீனப்படுத்தும் உங்களால் பிரேரிதமாகி மேகங்கள் மழையின் வடிவத்தை எடுக்கின்றன. ஸுஜாதனான மித்திரனும் அரசனான அர்யமானும் நல்ல க்ஷத்தரமுள்ள வருணனும் எங்கள் அவியை ஏற்றுக்கொள்வார்களாக.

2. இராஜர்களும், ருதத்தை மகத்தாய்ப் பாலிப்பவர்களும், க்ஷத்திரியர்களும், நதிகளின் தலைவர்களுமான நீங்கள் எங்கள் முன்னே வாருங்கள். துரிதமாய்த் தானமளிக்கும் மித்திராவருணர்களான நீங்கள் வானிலிருந்து எங்களுக்கு மழையையும் உணவையும் செலுத்துங்கள்.

3. மித்திரனும், வருணனும் தேவனான அர்யமானும் எங்களை மிக்கச் சாத்தியமான வழிகளால் நடத்திச் செல்வார்களாக. அர்யமான் நன்களிப்பவனுக்குச் சொல்வதைப்போல் அளிப்பான். நாங்களும் தேவபாலனத்திலாகி உணவில் இன்புறுவோமாக.

4. மித்திராவருணர்களே! உங்களுக்கு உத்தமத் துதியைச் செய்து அதை ஏந்தி, தன் மனத்திலே தேரைக்

கற்பிப்பவனை சலத்தால் தெளித்து ஈரப்படுத்துங்கள். அவனுக்கு இனிய மனைகளை இன்பப்படுத்துங்கள்.

5. வருணனே! மித்திரனே! இந்த ஸ்தோமம் உங்களுக்குச் சுத்தமான ஸோமத்தைப் போல் அளிக்கப்படுகிறது. அர்யமானே! உனக்கும் அளிக்கப்படுகிறது. எங்களுடைய யக்ஞங்களைப் பாலியுங்கள். புரந்திகளே! மனத்தையும் எண்ணத்தையும் எழுப்புங்கள். தேவர்களே! எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5671

## 65. மித்திராவருணர்கள்

### 581. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மித்திராவருணர்களே! உங்களுடைய வலிமை தேயாதது. சிறந்தது. அசுரர்கள் சேர்ந்துள்ள போரிலே எல்லா சத்துருக்களையும் ஜயித்து, சூரியன் உதயமாகுங்கால் நான் மித்திரனையும் சுத்த பலமுள்ள வருணனையும் துதிகளோடு அழைக்கிறேன்.

2. தேவர்களின் நடுவே அவர்கள் மிக்க ஆற்றலுள்ளவர்கள்; அவர்கள் தலைவர்கள். அவர்கள் எங்களுக்குப் பல புதல்வர்களையளிக்கிறார்கள். மித்திராவருணர்களே! சோதியும், புவியும், தினங்களும் எங்களைப் பாலிக்கும் இடங்களில் எல்லாம் நாங்கள் உங்களைப் பற்றுவோமாக.

3. மித்திராவருணர்களே! பாபிகளைக் கட்ட உங்களிடம் பல பாசங்களுண்டு. நீங்கள் அசத்தியனைத் தடுப்பவர்கள். தீய மனிதர்களால் அணுகப்படார்கள். நாங்கள் ருதத்தின் வழியால் எல்லாத் துக்கங்களையும் சலங்களைத் தோணியால் கடப்பது போல் கடப்போமாக.

4. மித்திராவருணர்களே! எங்களால் அளிக்கப்படும் அவிக்கு வாருங்கள். ருதத்தின் ஸ்தானத்தை நெய்யாலும், உணவாலும் தெளியுங்கள். நீங்கள் மானிடர்களைத் திவ்யமான, அழகான சலத்தால் திருப்தி செய்ய இவ்வுலகத்திலே எவன் உங்களுக்கு உத்தம அவியைத் தருகிறான்?



5. வருணனே! மித்திரனே! இந்த ஸ்தோமம் உங்களுக்கு சுத்தமான ஸோமத்தைப் போல் அளிக்கப்படுகிறது. எங்களுடைய யக்ஞங்களைப் பாலியுங்கள். எங்கள் புலன்களை—ஸ்தோமங்களை—எழுப்புங்கள். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5676

## 66. மித்திராவருணர்கள்

### 582. மைத்திராவருணி வசிஷ்டன்

1. மீண்டும் மீண்டும் தோன்றும் மித்திராவருணர்களே! எங்களுடைய உங்களைச் சுத்தப்படுத்தும் ஸ்துதி அவிகளோடு உங்களிடம் வருக.

2. தேவர்கள் உத்தம பலமுள்ளவர்களும், பலத்தைப் பாலிப்பவர்களும், மிக்க ஒளியுள்ளவர்களுமான உங்களை, பலத்தை அடைய ஏந்துகிறார்கள்.

3. எங்களுடைய மனைகளைப் பாலிப்பவர்களும், எங்களுடைய தேகங்களைக் காப்பவர்களுமான மித்திராவருணர்களே! எங்களுடைய யக்ஞங்களைப் பூர்த்தி செய்யுங்கள்

### ஆதித்தியர்கள்

4. பாபத்தையழிக்கும் மித்திரனும், அரியமானும், ஸவிதாவும், பகனும் இன்று நாங்கள் விரும்பும் செல்வத்தை எங்களுக்குச் சூரியோதயத்திலளிப்பார்களாக.

5. பாபத்திலிருந்து எங்களைச் சுத்தப்படுத்தும். நீங்கள் எங்கள் மனையிலிருந்து நீங்குங்கால் எங்களுடைய இந்த வீடு நன்கு பாலிக்கப்படுக.

6. நீங்கள் அனைவருக்கும் அரசர்கள். நீங்கள் அதிதியோடு சேர்ந்து இந்த மகத்தான தடைபடாத விரதத்தை நடத்துகிறீர்கள்.

7. நான் சூரியன் உதித்தவுடன், மித்திரனையும், வருணனையும், பகைவர்களைக் கொல்லும் அரியமானையும் போற்றுகிறேன்.

8. பொன் நிதியோடு குறைவற்ற பலத்துக்காக இந்த தோத்திரம் தோன்றுக. அது யக்ஞத்தின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யத் தோன்றுக.

9. தேவனான வருணனே! நாங்கள் உன்னை வழிபடுபவர்களாயிருப்போமாக. மித்திரனே! நான் அறிஞர்களோடு செழிப்பாயிருப்போமாக. நாங்கள் உணவையும், சலத்தையும் பெறுவோமாக.

10. நீங்கள் மகான்கள். சூரியனைப் போல் சோதிமான்கள். அக்கினி நாக்குள்ள நீங்கள் யக்ஞத்தைச் செழிப்பிக்கிறீர்கள். நீங்கள் விரிவான செயல்களோடு மூன்று வியாபகமான யக்ஞங்களை அதீனப்படுத்துகிறீர்கள்.

11. வருஷத்தையும், பிறகு மாதத்தையும், தினத்தையும், யக்ஞத்தையும், இரவையும், இருக்கையும் கற்பித்த அரசர்களான வருணனும், மித்திரனும், அரியமானும் ஒப்பில்லாது க்ஷத்திரத்தை ஜயித்தார்கள்.

12. ஆதலால், இன்று சூரியோதயத்திலே நாங்கள் ருதத் தலைவர்களும், செல்வத்தை ஏந்துபவர்களுமான வருணனையும், மித்திரனையும், அரியமானையும், சூக்தங்களால் செல்வத்துக்காக வேண்டுகிறோம்.

13. ருதஞ்சேர்ந்தவர்களும், ருதத்திலிருந்து தோன்றியவர்களும், ருதத்தை வளர்ப்பவர்களும், உக்கிரர்களும், பொய்யர்களின் பகைவர்களுமான உங்களுடைய உத்தமக் காப்பளிக்கும் ஸுமதியிலே நாங்களும், உங்களை வழிபடும் வேறு மனிதர்களும் நிலைப்போமாக.

சூரியன்

14. எல்லா மனிதர்களும் நன்கு காணத்துரிதனும், தேவனுமான வெண்ணிறக் குதிரையால் ஏந்திச் செல்லப்படும் சூரியனின் அந்த அழகிய மண்டலம் வானின் விளிம்பினருகே எழுகிறது.

15. தாவர ஜங்கமப் பொருள்களுக்குத் தலைவனும், அனைவரின் நன்மைக்காகத் தன் தேரிலே உலகமெல்லாம் சுற்றுபவனுமான சூரியனை, தாமாகவே செல்லும் ஏழு குதிரைகள் ஏந்துகின்றன.



16. தேவர்களுக்கு அனுகூலமாயிருக்கும் அந்த சுத்தமான உலகத்தின் கண் எழுகிறது. நாங்கள் அதை நூறு வருடங்கள் காண்போமாக. நாங்கள் நூறு வருடங்கள் ஜீவிப்போமாக.

மித்திராவருணர்கள்

17. மித்திராவருணர்களே! வெல்லப்படாதவர்களும், பிரகாசிப்பவர்களுமான நீங்கள், எங்கள் துதிகளால் உற்சாகமாகி ஸோமத்தைப் பருக வாருங்கள்.

18. மித்திராவருணர்களே! துரோகமற்றவர்களும் பகைவர்களை அழிப்பவர்களுமான நீங்கள், உங்கள் பெருமைகளோடு சோதியிலிருந்து வாருங்கள். ஸோமத்தைப் பருகுங்கள்.

10. மித்திராவருணர்களே! தலைவர்களே! ஆஹுதியைப் பெற்றுக் கொள்ளுங்கள். ருதத்தை வளர்க்கும் நீங்கள் ஸோமத்தைப் பருகுங்கள். 5695

## 67. அசுவினிகள்

### 583. மைத்திராவருணி வசிஷ்டன்.

1. மனிதர்களின் தலைவர்களே! நான் உங்களுடைய தேரை யக்ஞாருக மனத்தோடும், அவியோடும் போற்ற வருகிறேன். போற்றத் தகுந்த தேவர்களே! நான் அதை உங்களை எழுப்பும் தூதனைப்போலும், பெற்றோர்களிடம் புதல்வனைப் போலும் அதனிடம் பேசுகிறேன். இங்கு வர அழைக்கிறேன்.

2. எங்களால் சொலிப்பிக்கப்பட்டு அக்கினி பிரகாசிக்கிறான். இருளின் எல்லைகள் தெரிகின்றன. சோதியின் மகளான உஷையின் பூர்வத்திலே புகழோடு ஏறும் சூரியனுடைய கொடி காண்கிறது.

3. நாசத்தியர்களே! அசுவினிகளே! உங்களுடைய துதிகளைக் கூறும் நல்ல ஹோதாவான நான் ஸ்தோமங்களோடு உங்களைப் போற்றுகிறேன். உங்களுடைய சோதியையறிவதும், செல்வம் நிறைந்ததுமான தேரிலே பூர்வத்தில் சென்ற வழிகளால் எங்கள் முன்னே வாருங்கள்.

4. இனிப்பை விரும்புபவர்களே! உங்கள் பாலனத்தை நாடுங்கால் நான் செல்வத்தை விரும்பி எங்கள் ஸோமத்துக்கு உங்களை அழைக்கிறேன். உங்களுடைய வலிய குதிரைகள் உங்களை இங்கு ஏந்தி வருக. எங்களால் நன்கு பிழியப்பட்ட இனிய ஸோம ரஸத்தைப் பருகுங்கள்.

5. அசுவினி தேவர்களே! செல்வங்களுக்காக என்னால் கூறப்படும் தடையற்றதும், நேர்மையுள்ளதுமான ஸ்தோத்திரத்தை சாத்தியப்படுத்துங்கள். போரிலே என், புலன்களைப் பாலியுங்கள். செயல்களைப் பாலிக்கும் நீங்கள் எங்கள் செயல்களால் ஊக்கமாகி எங்களுக்குச் செல்வத்தையளியுங்கள்.

6. அசுவினிகளே! எங்களை இந்தச் 'செயல்களிலே பாலியுங்கள். மக்கட்களையளிக்கும் ரேதஸு தேயாமலாகுக. நாங்கள் உங்கள் ஆதரவால், புதல்வர்களையும், பேரர்களையுமடைந்து, விரும்பப்படும் செல்வங்களை அளித்து மீகுந்த செல்வத்தை அனுபவித்து, தேவர்களின் யக்ஞத்தை நிறைவேற்றுவோமாக.

7. தேனை விரும்பும் அசுவினிகளே! எங்களால் அளிக்கப்பட்ட இந்த செல்வமானது நட்பைச் சம்பாதிக்க அரசனின் முன்னிலையில் வந்திருக்கும் தூதனைப்போல் உங்கள் முன்னே வைக்கப்பட்டிருக்கிறது. கோபமற்ற மனத்தோடு எங்களிடம் வாருங்கள்; மனிதர்களின் நடுவே அளிக்கப்படும் அவிகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

8. அனைவரையும் பாலிப்பவர்களே! ஒரே நோக்கத்துக்குச் சேர்ந்துள்ள உங்கள் இருவர்களுடைய தேர் ஏழு நதிகளைக் கடந்து செல்கிறது. தேரைத் துரிதமாகச் செலுத்துபவையும், உங்களை ஏந்துபவையும், தேவர்களால் இணைக்கப்பட்டவையுமான குதிரைகள் களைப்பாகாமல் செல்லுகின்றன.

9. அவிச்செல்வர்களையும், செல்வங்களுக்காக அளிப்பதற்குரிய செல்வத்தை அளிப்பவர்களையும் ஊக்கப்படுத்துங்கள். பசுக்களின், புரவிகளின் செல்வத்தையளித்து, பிரிய மொழிகளால் பந்துவை ஊக்கப்படுத்துபவர்களையும் உற்சாகப்படுத்துங்கள்.



10. நித்தியத்தருணர்களே! அசுவினிகளே! இன்று என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள். அசுவினிகளே! அவி பக்குவமாகும் மனைக்கு வாருங்கள். அளிப்பவனுக்குச் செல்வத்தையளியுங்கள். வழிபடுபவனை உயர்த்துங்கள். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5705

## 68. அசுவினிகள்

### 584. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பிரகாசிக்கும் அசுவினிகளே! அழகிய குதிரைகளுள்ளவர்களே! பகையழிப்பவர்களே! உங்களை விரும்பிப்போற்றுபவனுடைய துதிகளால் போற்றப்பட்டு இங்கு வாருங்கள். அளிக்கப்படும் அவிகளை அருந்துங்கள்.

2. மதப்படுத்தும் உணவுகள் உங்களுக்குப் பக்குவப்பட்டிருக்கின்றன. என் அவியை அருந்த சீக்கிரம் வாருங்கள். பகைவனுடைய அழைப்புக்களைக் கவனியாமல் எங்களைக் கேளுங்கள்.

3. அசுவினிகளே! மனோவேகத்தோடு உலகங்களைச் சுற்றிக்கொண்டு நூறு பாலனங்களோடு செல்வதும், சூரியையுடன் நீங்கள் உட்கார்ந்திருப்பதுமான உங்களுடைய தேர் விரும்பப்பட்டு எங்களை நோக்கி வருகிறது.

4. தேவர்களான உங்கள் இருவரையும் போற்ற விரும்பும் இந்தக்கல், உயர்த்தப்பட்டு, உங்களுக்கு ஸோமத்தைப்பிழிய கர்ச்சிக்குங்கால், விப்பிரன் அவிகளால், அழகர்களான உங்களை வருவிப்பானாக.

5. உங்களுடைய செல்வம் விரும்பத்தகுந்தது. நீங்கள் குகையிலிருந்து உங்களிடம் பிரியமாயிருப்பவனும், உங்கள் பாலனத்தை அனுபவிப்பவனுமான அத்திரியை விடுவித்தீர்கள்.

6. அசுவினிகளே! உங்களைத் துதித்து அவிகளை அளித்த சியாவனனுக்கு நீங்கள் கைம்மாறாக அவனுடைய தேகத்தை மிருத்தியுவிலிருந்து மீட்டீர்கள். உங்களுடைய சேவை சிறப்பாயிருந்தது.

7. அசுவினிகளே! துஷ்ட நண்பர்கள் புஜ்யுவைக் கடலின் நடுவே கைவிட்டுச் சென்றவுடன் நீங்கள் உங்களை நம்பி நாடிய அவனைக்கரையில் சேர்ப்பித்தீர்கள்.

8. நீங்கள் சேவைகளால் களைப்படைந்த விருகனுக்கு அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்தீர்கள். நீங்கள் அழைக்கப்பட்டவுடன் சயுவுக்குச் செவிசாய்த்தீர்கள். நீங்கள் மலட்டுப்பசுவைப் பாலால், நதியை சலத்தால் நிரப்பியதுபோல் நிறைத்தீர்கள். அசுவினிகளே! நீங்கள் அப்பசுவை உங்கள் செயல்களால் - ஆற்றலால் - இளமைப் படுத்தினீர்கள்.

9. உங்களை வழிபடும் இந்த வசிஷ்டன் உஷைக்கு முன்னால் எழுந்து உத்தமத்துதிகளால் உங்களைப் போற்றுகிறான். உணவால் அவனைப் புஷ்டிப்படுத்துங்கள். பசு அவனைப் பாலால் புஷ்டிப்படுத்துக. தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள் 5714

## 69. அசுவினிகள்

### 585. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அசுவினிகளே! உங்களுடைய வலிய குதிரைகளால் இழுக்கப்படுவதும், சோதியையும் புவியையும் தடுப்பதும், வருத்தப்படுத்துவதும், சலங்களின் வழியைப் பற்றுவதும், சக்கரங்களால் பிரகாசமாயுள்ளதும், உணவுகளோடு நிறைந்ததும், மானிடர்களைப் பாலிப்பதும், செல்வமுள்ளதும், பொன்மயமாயுள்ளதுமான தேர் எங்களிடம் வருக.

2. அசுவினிகளே! பஞ்சப் பிராணிகளின் நடுவே புகழுள்ளதும், மூன்று பீடங்கள் இருப்பதும், மனத்தால் இணைவதும், எவ்வழியிலும் செல்வதற்குரியதும், தேவ



விருப்பமுள்ள மானிடர்களிடம் உங்களால் ஏறி செல்லப்படுவதுமான தேர் எங்களிடம் வருக.

3. அசுவினிகளே! கீர்த்தியோடும், நல்ல குதிரைகளோடும் எங்கள் முன்னே வாருங்கள். தஸ்ரர்களே! இனிய ஸோமத்தைப் பருகுங்கள். சூரியையோடு உங்களை ஏந்தி வரும் தேர் வானின் வரம்புகளை வருத்துகிறது.

4. சூரியனுடைய புதல்வி, இரவு வருங்கால் உங்களுடைய தேரை நாடினாள். ஒளியுள்ள அவி நான் பாலனத்தைப்பெற உங்களிடம் செல்லுங்கால் நீங்கள் உங்களுடைய செயல்களால் தேவபக்தனைப் பாலிக்கிறீர்கள்.

5. அசுவினிகளே! தேரில் செல்பவர்களே! நீங்கள் உஷையின் உதயத்திலே எங்களைச் சுத்தப்படுத்தவும், எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு ஒளியையணிந்துள்ளதும், இணைக்கப்பட்டவுடன் குறிப்பிட்ட இடத்துக்குச் செல்வதுமான தேரிலே வாருங்கள்.

6. யக்ஞத்தலைவர்களே! நீங்கள் தாகமாயிருக்கும் பசுக்களைப்போல் ஒளியான ஸோமத்துக்குத் தாகமாகி இன்று எங்களுடைய யக்ஞத்துக்கு வாருங்கள். வழிபடுபவர்கள் பல யக்ஞங்களிலே உங்களைப் போற்றுகிறார்கள், விரும்பும் வேறு சனங்கள் உங்களைத் தாமதப்படுத்தாமலிருப்பார்களாக.

7. அசுவினிகளே! நண்பர்களால் கடலில் தள்ளப்பட்ட புஜ்யுவை, உங்களுடைய தேயாத, தளராத, துன்புறாத குதிரைகளோடு உங்களுடைய சேவைகளால் மூழ்கிய அவனை, மேலெழுப்பி கரையிலே சேர்த்தீர்கள்.

10. நித்திய தருணர்களே! அசுவினிகளே! இன்று என்னுடைய அழைப்புக்குச் செவிகொடுங்கள். அசுவினிகளே! அவிபக்குவமாகும் மனைக்கு வாருங்கள். அளிப்பவனுக்குச் செல்வத்தையளியுங்கள். வழிபடுபவனை உயர்த்துங்கள். தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5722

## 70. அசுவினிகள்

### 586. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அனைவராலும் போற்றப்படும் அசுவினிகளே! புவியிலே உங்களுக்குச் சொந்தமானது எனக்கூறப்படும் இந்த இடத்துக்கு வாருங்கள். அது துரிதமாயுள்ளதும், பரந்த முதுகுள்ளதுமான குதிரையைப்போல் காத்திருக்கிறது. நீங்கள் அதன்மீது மனையில் அமர்வதுபோல் திரமாய் அமர்கிறீர்கள்.

2. அவியோடிருக்கும் இந்த உத்தமத்துதி உங்களைத் துதிக்கிறது. வழிபடுபவனுடைய மனையிலே இந்தக்கலசம் தாபஞ்செய்யப்படுகிறது. அது யக்ஞத்திலே உங்களைத் தேரிலே நன்கு சேரும் குதிரைகளைப்போல் இணைக்கிறது. அதனுல் தோன்றும் மழையால் அது கடலையும் நதியையும் நிரப்புகிறது.

3. அசுவினிகளே! நீங்கள் சோதியிலிருந்து வந்து பரவும் ஓஷதிகளின் நடுவிலோ அல்லது மனிதர்களின் நடுவிலோ எங்கு தங்கினுலும் அல்லது மேகங்களின் உச்சியிலே அமர்ந்தாலும், அவியளிக்கும் மனிதனுக்கு உணவைச் செலுத்துபவர்களாயிருங்கள்.

4 தேவர்களான அசுவினிகளே! ரிஷிகள் — அவிகளை — அளிக்குங்கால் சலங்களிலும், ஓஷதிகளிலும், உங்களுக்குத் தகுதியாயிருப்பவையிலும் இன்புறுங்கள். எங்களுக்கு மிகுந்த செல்வங்களை அளித்து, பூர்வத்திலிருந்து தம்பதிகளை ஆதரித்ததுபோல் எங்களை ஆதரியுங்கள்.

5. அசுவினிகளே! ரிஷிகளின் பல தோத்திரங்களைச் செவியுற்று நீங்கள் எங்களைக் கவனித்துக்கொள்கிறீர்கள். இந்த மனிதனுடைய யக்ஞத்துக்கு வாருங்கள். உங்களுடைய உயர்ந்த ஸுமதி எங்களிடம் தோன்றுக.

6. நாஸத்தியர்களே! ஆட்களோடும், அவிகளோடும், கூறப்படும் துதியோடுமுள்ள யக்ஞத்துக்கு வாருங்கள்



உத்தமனுன வசிஷ்டனிடம் வாருங்கள். உங்களை இங்கு வருவிக்க இத்தோத்திரங்கள் கூறப்படுகின்றன.

7. அசுவினிகளே! இந்தத் துதியும் தோத்திரமும் உங்களுக்குத் தோன்றுகின்றன. வர்ஷிப்பவர்களே! இந்தத் துதியால் திருப்தியாகுங்கள் இசைக்கப்படும் இந்தப் பாக்கள் உங்களிடம் சேர்க. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5729

## 71. அசுவினிகள்

### 587. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அசுவினிகளின் சகோதரியான உஷை வருங்கால் இரவு சென்றுவிடுகிருள். கறுத்தவள் சிகப்பனுக்கு வழியை விடுகிருள். நாங்கள் பசுச்செல்வமும் குதிரைச் செல்வமுமுள்ள உங்களை இரவிலும் பகலிலும் அழைக்கிறேம். துன்புறுத்துபவனை எங்களிடமிருந்து விலக்குங்கள்.

2. அசுவினிகளே! அவிகளை அளிக்கும் மனிதனுக்கு விரும்பப்பட்ட செல்வத்தை ஏந்திக்கொண்டு வாருங்கள். எங்களிடமிருந்து நோயையும் வறுமையையும் நீக்குங்கள். மாத்வீக்களே! எங்களை இரவும் பகலும் பாலியுங்கள்,

3. உங்களுடைய பணிவுள்ளதும், வலிமையுள்ளதுமான குதிரைகள் உஷையின் உதயத்திலே உங்கள் தேரை இங்கு இழுத்து வருக. அசுவினிகளே! உங்களுடைய மழை தரும் குதிரைகளால் காந்தியுள்ளதும் செல்வம் நிறைந்திருப்பதுமான தேரை, இங்கு செலுத்துங்கள்.

4. சனங்களின் தலைவர்களே! நாஸத்தியர்களே! உங்களுடைய மூன்று பீடங்களுள்ளதும், வியாபக வடிவத்தோடு வானெங்கும் பரவுவதும், செல்வங்கள் நிறைந்திருப்பதும், தினத்தை நோக்கிச் செல்வதும், உங்களை ஏந்துவதுமான தேரிலே எங்களிடம் வாருங்கள்.

5. நீங்கள் சியாவனனை மூப்பிலிருந்து நீக்கினீர்கள் நீங்கள் பேதுவைத் துரித குதிரையின் மீது ஏற்றினீர்கள்

நீங்கள் அத்திரியைத் துன்பத்திலிருந்தும், நமத்திலிருந்தும் விடுவித்தீர்கள். நீங்கள் குழப்பமிருந்த அரசிலே மீண்டும் ஜாஹுஷனைத் திரப்படுத்தினீர்கள்.

6. அசுவினிகளே! இந்தத் துதியும், தோத்திரமும் உங்களுக்குத் தோன்றுகின்றன. வர்ஷிப்பவர்களே! இந்தத் துதியால் திருப்தியாகுங்கள். இசைக்கப்படும் இந்தப் பாக்கள் உங்களிடம் சேர்க. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5735

## 72. அசுவினிகள்

### 588. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நாஸத்தியர்களே! உங்களுடைய, பசுக்களைத் தருவதும், குதிரைகளைத் தருவதுமான செல்வத்தைத் தருவதுமான தேரிலே வாருங்கள். விரும்பத் தகுந்த வண்ணமுள்ள தேகத்தோடு துலங்குபவர்களான உங்களைச் சுற்றிலும் துதிகள் குவிகின்றன.

2. நாஸத்தியர்களே! சேர்ந்துள்ள தேவர்களோடு வாருங்கள். தேரோடு இசைந்து இங்கு எங்களிடம் வாருங்கள். உங்களுக்கும் எங்களுக்கும் பழைய வம்ச நட்பிருக்கிறது. ஒரே இனம்—பந்துத்தன்மையை அறிந்து கொள்ளுங்கள்.

3. ஸ்தோமங்கள் அசுவினிகளை எழுப்புகின்றன. பந்துக்களான தோத்திரங்கள் எழுப்புகின்றன. தேவிகளான உஷைகளும் எழுப்புகிறார்கள். விப்பிரன் துதியாருகர்களான சோதிக்கும் புவிக்கும் இந்தத் தோத்திரங்களைக் கூறிக்கொண்டு அவர்களின் முன்னே நாஸத்தியர்களைப் போற்றுகிறான்.

4. அசுவினிகளே! உஷைகள் உதயமாகும் போது வழிபடுபவர்கள் உங்களுக்குத் தோத்திரங்களைக் கூறுகிறார்கள். தேவனான ஸவிதா உச்சத்திலே தன் ஒளியைச் செலுத்துகிறான். ஸமிதைகளோடு அனல்கள் உங்களை மிக்கப் போற்றுகின்றன.



5. நாஸத்தியர்களே! மேற்கிலிருந்து வாருங்கள். கிழக்கிலிருந்து வாருங்கள் அசுவினிகளே! தெற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும் வாருங்கள். பஞ்ச சனங்களுக்கு அனுகூலமாயிருக்கும் செல்வங்களோடும் ஒவ்வொரு திசைகளிலிருந்தும் வாருங்கள். தேவர்களே நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5740

## 73. அசுவினிகள்

### 589. மைத்திராவருணி வசிஷ்டன்

1. தேவர்களை விரும்பும் நாங்கள் அசுவினிகளைத் துதியால் துதித்துக் கொண்டு தமத்துக்கப்பாலுள்ள எதிர்க் கரைக்கு நாங்கள் சென்றோம். வழிபடுபவன்—வசிஷ்டன்—பல செயல்களை நடத்துபவர்களும், பூர்வத்தில் தோன்றியவர்களும், அமுதர்களுமான அசுவினிகளைப் போற்றுகிறான்.

2. நாஸத்தியர்களே! யஜிப்பவனும், வந்திப்பவனும், தேவர்களின் ஹோதாவும், உங்களுக்குப் பிரியமாயுள்ளவனுமான இந்த மனிதன், தன் இடத்திலே அமருகிறான். அசுவினிகளே! அருகிலிருங்கள். ஸோமத்தைப் பருகுங்கள். உணவோடுள்ள நான் யக்ஞங்களிலே உங்களை அழைக்கிறேன்.

3. தேவர்களைப் போற்றும் நாங்கள், வரும் தேவர்களுக்கு அவியை வளர்க்கிறோம். வர்ஷிப்பவர்களே! இந்தத் துதியை விரும்புங்கள். துரித தூதனைப்போல் பிரேரிதமான வசிஷ்டன் ஸ்தோமங்களால் உங்களைப் போற்றுகிறான்; உங்களை எழுப்புகிறான்.

4. அரக்கர்களை அழிப்பவர்களும், புஷ்டாங்கமுள்ளவர்களும், வலிய கைகளிருப்பவர்களும், அவிகளை ஏந்துபவர்களுமான அந்த இருவர்கள், எங்கள் சனங்களிடம் வருவார்களாக. மதப்படுத்தும் உணவுகளை ஏற்றுக் கொள்ளுங்கள்; எங்களைத் துன்புறுத்தாதீர்கள்; மங்கல செல்வத்தோடு வாருங்கள்.

6. நாஸத்தியர்களே ! மேற்கிலிருந்து வாருங்கள் கிழக்கிலிருந்து வாருங்கள். அசுவினிகளே ! தெற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும் வாருங்கள். பஞ்ச சனங்களுக்கு அனுகூலமாயிருக்கும் செல்வங்களோடு ஒவ்வொரு திசையிலிருந்தும் வாருங்கள். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5745

## 74. அசுவினிகள்

### 590. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியை விரும்பும் இந்த அறிஞர்கள் பிரகாசமான அவிகளைப் போற்றுகிறார்கள். நான் செயல் செல்வர்களான உங்களைப் பாலனத்துக்காக அழைக்கிறேன். ஏனெனில் நீங்கள் ஒவ்வொருவனிடமும் செல்லுகிறீர்கள்.

2. தலைவர்களே ! நீங்கள் விரும்பத்தகுந்த செல்வத்தை ஏந்துகிறீர்கள். சத்தியங்களைக் கூறுபவனுக்கு அதை அளியுங்கள். நல்ல மனமுள்ள நீங்கள் உங்கள் தேரை எங்கள் முன்னே செலுத்துங்கள். இனிய ஸோமரஸத்தைப் பருகுங்கள்.

3. அசுவினிகளே ! வாருங்கள். அருகிலிருங்கள். இனிய ஸோமத்தைப் பருகுங்கள். வர்ஷிப்பவர்களே ! செல்வங்களை ஜயிக்கும் நீங்கள் வானிலிருந்து மழையைப் பெய்யுங்கள். எங்களைத் துன்புறுத்தாதீர்கள். இங்கு வாருங்கள்.

4. உங்களுடைய குதிரைகள் உங்களை அளிப்பவனுடைய மனைக்கு ஏந்தி வருகின்றன. தேவர்களே! தலைவர்களே! எங்களிடம் அனுகூல மனமுள்ளவர்களாகி துரித குதிரைகளிலே வாருங்கள்.

5. வழிபடுபவர்கள் இப்பொழுது உங்களிடம் அணுகி உங்களுக்கு அவியையளிக்க இணைகிறார்கள். நாஸத்தியர்களே ! அவிச்செல்வர்களான எங்களுக்கு நிலையான புகழையும் மனையையும் அளியுங்கள்.

6. துன்புறுத்தாமல் தேர்களைப்போல் முன்னே செல்பவர்களும், மனிதர்களைப் பாலிப்பவர்களுமான தலைவர்கள் தங்கள் சொந்த பலத்தால் செழிக்கிறார்கள். தங்கள் உத்தம மனையிலே வசிக்கிறார்கள். 5751



## 75. உஷை

### 591. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியின் புதல்வியான உஷை எழுந்திருக்கிறாள். ருதத்தால் தன் மகிமையைப் புலன் செய்து கொள்ளும் அவள் வருகிறாள். அவள் நம்முடைய சத்துருக்களையும், பிரியமில்லாத இருளையும் நீக்குகிறாள். அவள் செல்வதற்குரிய வழிகளைப் புலப்படுத்துகிறாள்.

2. மகத்தான செல்வத்துக்கு எங்களை எழுப்பவும் உஷையே ! சௌபாக்கியத்துக்கு எங்களைச் செழிப்பிக்கவும் அற்புதச் செல்வங்களையும், புகழையும் எங்களுக்களிக்கவும். மானிடர்களுக்கு நலஞ்செய்யும் தேவியே ! மானிடர்களான எங்களுக்குச் செழிக்கும் புதல்வனையுமளிக்கவும்.

3. அழகிய உஷையின் இந்த அற்புதமான அமுதமான ரசிமிகள் தோன்றுகின்றன. திவ்ய விரதங்களைத் தோற்றுவிக்கின்றன. வானை நிரப்புகின்றன. எங்கும் பரவுகின்றன.

4. சோதியின் புதல்வியும், புவனத்தின் பத்தினியுமான அவள், ஊக்கமாகி சனங்களின் புலன்களை—பிரக்ஞானங்களை—பார்த்துக் கொண்டு பஞ்ச சனங்களுக்கு ஒளியைத் தர தூரத்திலிருந்தே துரிதமாகிறாள்.

5. உணவைத் தருபவளும், அற்புத செல்வத்தை அடைந்திருப்பவளும், சூரியனுடைய மனைவியுமான அவள் எல்லாச் செல்வங்களையும், நிதிகளையும் அரசு புரிகிறாள். ரிஷிகளால் துதிக்கப்படுபவளும், ஆயுசைத் தேய்ப்பவளும், செல்வியுமான உஷை அளிப்பவர்களால் போற்றப்பட்டு எழுகிறாள்.

6. பிரகாசமாயுள்ள உஷையை ஏந்தி வரும் காந்தியுள்ள அற்புதமான குதிரைகள் தெரிகின்றன. அழகுள்ள அவள் பல வடிவங்களிலுள்ள தேரிலே எங்கும் செல்லுகிறாள். வழிபடும் சனத்துக்குச் செல்வத்தையளிக்கிறாள்.

7. சத்தியமான அவள் சத்தியங்களோடும், சத்தியக் கிரணங்களோடும், மகத்தான அவள், மகத்தானவை

யோடும், தேவியான அவள், தேவர்களோடும், போற்றத் தகுந்தவள், போற்றத் தகுந்தவையோடும், அவள் கனத்த இருட்களை நீக்குகிறாள். பசுக்களின் மேய் தரைகளைப் புலப் படுத்துகிறாள். எல்லாப் பிராணிகளும், முதன்மையாகப் பசுக்களும் உஷையை விரும்புகின்றன.

8. உஷையே! எங்களுக்குப் பசுக்களும், குதிரை களும், வீரப் புதல்வர்களுமுள்ள செல்வத்தையளிக்கவும். மனிதர்களின் நடுவே எங்கள் யக்ஞத்தை நிந்தைக்குட் படுத்தாதே. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5759

## 76. உஷை

### 592. மைத்திராவருணி வசிஷ்டன்

1. விசுவத்தின் தலைவனும், தேவனுமான ஸவிதா, அமுதமும் அனைவர்க்கும் நன்மை செய்வதுமான சோதியை மேலே செலுத்துகிறான். தேவர்களுடைய கண்-உஷை-செயல்களை நாம் நடத்தத் தோன்றுகிறது. உஷை எல்லாப் பொருள்களையும் புலப்படுத்துகிறாள்.

2. நான் இம்சையற்றவையும், ஒளியோடு சிறப்புற்ற வையும், தேவர்களிடம் செலுத்துபவையுமான வழிகளைக் காண்கிறேன். உஷையின் கொடி பூர்வத்தில் தோன்று கிறது. அவள் இங்கு மனைகளின் உச்சிகளின் மேலே வந் திருக்கிறாள்.

3. உஷையே! சூரியனுடைய உதயத்துக்கு முன்பே நீ உதயமான பல நாட்களிலே சலனமுள்ள கணவனிடம் செல்லும் மனைவியைப்போல் காணப்பட்டாய். அவனைக் கை விடுபவளைப்போல் தோன்றவில்லை.

4. பூர்வ பிதாக்களும், ஸத்தியத்தைப் பாலித்தவர் களும், தேவர்களோடு சேர்ந்து இன்புற்றவர்களுமான அறிஞர்கள் மறைந்திருந்து சோதியைக் கண்டார்கள். சத்திய மந்திரங்கள் உள்ள அவர்கள் உஷையைப் பிறப்பித் தார்கள்.



5. ஒரே அடைப்பில் சேர்ந்திருக்கும் பசுக்கள் பரஸ் பரம் போராடாமல் ஐக்கியமாயிருக்கின்றன. அங்கிரஸர்கள் தேவர்களுடைய விரதங்களைப் பங்கப்படுத்தார்கள். அவர் கள் இம்சிக்காமல்—மீட்கப்பட்ட பசுக்களுடன்—வசுக் களோடு முந்தினார்கள்.

6. சௌபாக்கியவதியான உஷையே! வசிஷ்டர்கள் காலையில் எழுந்து, உன்னைத் துதித்து, ஸ்தோமங்களோடு போற்றுகிறார்கள். உணவைப் பாலிப்பவளும், பசுக்களை மேய்தரைக்குச் செலுத்துபவளுமான உஷையே! நீ எங் களுக்கு உதயமாகவும். நன்கு பிறந்த உஷையே! முதல்வி யான நீ பிரகாசிக்கவும்.

7. இந்த உஷை செல்வத்தையும், சத்திய மொழிகளை யும் ஏந்தி வருகிறாள். உதயமாகுங்கால் வசிஷ்டர்களால் போற்றப்படுகிறாள். எங்கும் பிரசித்தமாயுள்ள செல்வத்தை எங்களுக்கு அளிக்கிறாள். தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5766

## 77. உஷை

### 593. மைத்திராவருணி வசிஷ்டன்

1. எல்லா சீவன்களையும் சலனமாக ஊக்கப்படுத்தும் உஷை, கணவனின் அருகே யுவதியைப்போல் சூரியனின் அருகே பிரகாசிக்கிறாள். மனிதர்களின் நலத்துக்காக அக்கினி சொலிப்பிக்கப்படுகிறான். சோதி தடைபடுத்தும் தமத்தை நீக்குகிறது.

2. விசுவத்தை நோக்குபவளும், எங்கும் பரவுபவளு மான உஷை, எழுந்திருக்கிறாள். சுத்தமாயும், பிரகாசமாயு முள்ள ஆடையையணிந்து அவள் பரவுகிறாள். பொன் நிறமும், சுந்தர ரூபமுமுள்ள அவள், மொழிகளின் தாயும் தினங்களின் தலைவியுமான அவள் துலங்குகிறாள்.

3. தேவர்களுடைய கண்ணை ஏந்துபவளும், தன் அழகிய வெண்மையான குதிரையை—சூரியனை—செலுத்து பவளும், செல்வியுமான உஷை தென்படுகிறாள். தன் ரசிமி

களால் துலங்குபவளும், அற்புத செல்வத்தைத் தருபவளும் விசுவத்திலே முதன்மையாயுமிருக்கும் அவள் தென்படுகிருள்.

4. உஷையே! விரும்பத்தகுந்த செல்வத்தை ஏந்துபவளும், எங்கள் பகைவனைத் தூரத்தில் நீக்குபவளுமான நீ உதயமாகவும். பரந்த புவியை எங்களுக்கு அபயப்படுத்தவும். துவேஷிகளைத் துரத்தவும். எங்களிடம் செல்வங்களைச் செலுத்தவும். செல்வியே! உன்னைப் போற்றும் எனக்குச் செல்வத்தை அளிக்கவும்.

5. தேவியான உஷையே! உன்னுடைய உத்தம ரசிமிகளால் எங்களை ஒளிப்படுத்தவும். எங்கள் ஆயுளை நீட்டவும். எங்களுக்கு உணவையளிக்கவும். அனைவராலும் போற்றப்படும் நீ. பசுக்களும், குதிரைகளும், தேர்களுமுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

6. சோதியின் மகளும், துதிகளோடு வசிஷ்டர்களால் போற்றப்படுபவளும், நன்கு பிறந்தவளுமான உஷையே! எங்களுக்குப் பிரகாசிப்பதும், பெருமிதமாயுமுள்ள செல்வத்தை அளிக்கவும். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5772

## 78 உஷை

### 594. மைத்திராவருணி வசிஷ்டன்

1. உஷையின் முதற்கொடிகள் தெரிகின்றன. அவளுடைய கிரணங்கள் மேலே பரவுகின்றன. உஷையே! எங்களை நோக்கி வருவதும், மகத்தான சோதியுள்ளதுமான உன்னுடைய தேரிலே, நீ எங்களுக்கு விரும்பத்தகுந்த செல்வத்தை ஏந்தி வருகிருய்.

2. அக்கினி சொலிப்பிக்கப்பட்டு எங்கும் வளர்கிருன். அறிஞர்கள் தோத்திரங்களால் உஷையைப் போற்றுகிருர்கள். அவள் எல்லாத் தீத்தமங்களைத் தனிப்படுத்தி வருகிருள்.



3. கீழ்த் திசையிலே ஒளியைப் பரத்தும் உஷையின் பிரகாசமுள்ள இந்த ரசிமிகள் தோன்றுகின்றன. உஷை சூரியனையும், யக்ஞத்தையும், அக்கினியையும் பிறப்பிக்கிருள். அருவருப்பான அந்தகாரம் இறங்கி மறைகிறது.

4. சோதியின் திருமகள் தோன்றுகிருள். பிரகாசமுள்ள உஷையை அனைவரும் காண்கிருர்கள். அவள் சுலபமாய் இணைக்கப்படும் குதிரைகளால் இழுக்கப்படுவதும், உணவை ஏந்துவதுமான தேரிலே ஏறுகிருள்.

5. அவிச்செல்வர்களான நாங்களும், எங்கள் நண்பர்களும், நல்ல நினைவுகளுடன் இன்று உஷையான உன்னை எழுப்புகிரேம். நீ நெய்ப்புள்ள பனித்துளிகளால் நிலத்தை நயப்படுத்தவும். தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5777

## 79. உஷை

### 595. மைத்திராவருணி வசிஷ்டன்

1. உஷை மானிடர்களின் ஐந்து இனங்களை எழுப்பிக்கொண்டு சனங்களுக்கு வழிகளைப் புலப்படுத்துகிருள். அவள் சோபையுள்ள பசுக்களோடு ஒளியைத் தருகிருள். சூரியன் காந்தியால் சோதியையும், புவியையும் புலப்படுத்துகிருன்.

2. உஷைகள் வானின் எல்லைகளுக்குத் தங்கள் ரசிமிகளைச் செலுத்துகிருர்கள். அவர்கள் அணிவகுத்து, படை—சனங்களை—போல் முன்னேறுகிருர்கள். உஷையே! உன்னுடைய கிரணங்கள் இருளை அழிக்கின்றன. அவர்கள் கைகளைப் பரத்தும் ஸவிதாவைப் போல் ஒளியைப் பரத்துகிருர்கள்.

3. செல்வியும் இந்திரனைப்போல் இருப்பவளுமான உஷை உதயமானுள். நம்முடைய நன்மைக்காக உணவைத் தோற்றுவித்தாள். தேவியும், சோதியின் புதல்வியும், அங்கிரஸர்களின் முதல்வியுமான அவள், நலஞ்செய்பவனுக்குச் செல்வங்களை அளிக்கிருள்.

4. உஷையே! பூர்வத்திலே உன்னைத் துதித்துப் போற்றியவர்களுக்கு நீ அளித்த செல்வத்தைப்போல் எங்களுக்களிக்கவும். வழிபடுபவர்கள் உன்னைக் காலையின் முழக்கங்களோடு ஞாபகப்படுத்தினர்கள். நீ திருடப்பட்ட பசுக்கள் அடைத்து வைக்கப்பட்டிருந்த மலைகளின் கதவுகளைத் திறந்தாய்.

5. ஒவ்வொரு தேவனையும் செல்வத்துக்காகப் பிரேரித்து, எங்களிடம் சத்திய மொழிகளைக் கூறி காலையின் ஒளியைப் பரத்தி, செல்வங்களைச் சம்பாதிக்கத் தகுந்த சிந்தனைகளை எங்களுக்களிக்கவும். தேவர்களே! எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5782

## 80. உஷை

### 596. மைத்திராவருணி வசிஷ்டன்

1. முதல்வர்களும், விப்பிரர்களுமான வசிஷ்டர்கள், துதிகளாலும், தோத்திரங்களாலும், சம எல்லைகளுள்ள சோதி புவிகளின் மேலே பரபுவளும் சூழ்ந்திருக்கும் சோதி புவிகளைத் தனிப்ப்டுத்துபவளும், எல்லாப் புவனங்களைப் புலப்படுத்துபவளுமான உஷையை எழுப்புகிறார்கள்.

2. புதிய ஆயுளை அளிப்பவளும், தன் காந்தியால் கனத்த இருளை நீக்குபவளுமான உஷை எழுகிறாள். நாணமற்ற பெண்ணைப்போல் சூரியனின் முன்னே வருகிறாள். அவள் சூரியனையும், யக்ஞத்தையும், அக்கினியையும் புலப்படுத்துகிறாள்.

3. செல்விகளான உஷைகள் எங்கள் மீது எப்பொழுதும் குதிரைகளோடும், பசுக்களோடும், வீரப் புதல்வர்களோடும் பிரகாசிப்பார்களாக. எங்களுக்கு நெய்யைப் பொழிந்து எங்கும் செழுமையைத் தருவார்களாக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5785



## 81. உஷை

### 597. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியின் புதல்வி ஒளியைத் தருபவளாயும் முன்னேறுபவளாயும் எங்கும் தென்படுகிறாள். நாம் பொருளைக் கண்ணால் காண அவள் கனத்த இருளை நீக்குகிறாள். சனங்களின் தலைவியான அவள் ஒளியைப் பரத்துகிறாள்.

2. சூரியன் உஷையோடு சேர்ந்து உடனே தன் கிரணங்களைச் செலுத்துகிறான். சூரியன் எழுந்து நம் சந்திர மண்டலங்களை ஒளிப்படுத்துகிறான். உஷையே! நீயும் சூரியனும் தோன்றுங்கால் நாங்கள் உணவுள்ளவர்களாவோமாக.

3. உஷையே! சோதியின் புதல்வியே! தானமுள்ளவளே! ஊக்கமாயுள்ள நாங்கள் எங்களுக்கு விரும்புவதையெல்லாம் ஏந்தி வருபவளும், அளிப்பவனுக்கு சுகத்தையும், செல்வத்தைத் தருபவளுமான உன்னை எழுப்புவோமாக.

4. மகத்தான தேவியே! இருளை நீக்கும் உன்னிடம் உலகத்தை எழுப்பி அதைப் புலப்படுத்தும் ஆற்றல் இருக்கிறது. நாங்கள் செல்வத்தை வழங்குபவளான உன்னை, நீ புதல்வர்களிடம் தாயைப்போல் எங்களிடம் பிரியமாய் இருக்கப் போற்றுகிறோம்.

5. உஷையே! நீ நீண்ட காலம் புகழோடிருக்கும் அற்புத செல்வத்தை எங்களுக்கு ஏந்தி வரவும். சோதியின் மகளே! மானிடர்களுக்குத் தகுந்ததாயிருப்பதும், எங்கள் அனுபவத்துக்குரியதுமான உணவை அளிக்கவும்.

6. உஷையே! செல்வத்தோடு சேர்ந்துள்ள நித்திய புகழை வழிபடுபவர்களுக்களிக்கவும். எங்களுக்கு உணவையும் பசுக்களையுமளிக்கவும். அவிச்செல்வனை ஊக்கப்படுத்துபவளும், உண்மையை பேசுபவளுமான உஷை எங்களுடைய பகைவர்களை விலக்குவாளாக. 5791

# 82. இந்திராவருணர்கள்

## 598. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திராவருணர்களே! உங்கள் மகத்தான பாலனத்தை எங்கள் சனங்களுக்கும் எங்கள் குடும்பத்திற்கும் யக்ஞத்தை நடத்த அளியுங்கள். நீண்ட காலமாக உங்களை நிலை தவருமல் போற்றுபவனே, துன்புறுத்த விரும்பும், துஷ்ட சித்தர்களை நாங்கள் போரில் ஜயிப்போமாக.

2. இந்திராவருணர்களே! உங்களில் ஒருவன் ஸம்ராடன் என அழைக்கப்படுகிருன். மற்றவன் சுவராஜன் என அழைக்கப்படுகிருன். விருஷபர்களே! எல்லாத் தேவர்களும் பரம நிலயத்திலே உங்களில் ஐக்கியத் திறத்தையும், ஐக்கியத் தீரத்தையும் ஐக்கியப்படுத்தினுர்கள்.

3. இந்திராவருணர்களே! உங்களுடைய பலத்தால் சலங்களின் தடைகளை விலக்கினீர்கள். சோதியிலே சூரியனைத் தலைவனுக ஸ்தாபித்தீர்கள். ஊக்கப்படுத்தும் ஸோமத்தின் மதத்திலே வறண்ட நதிகளை சலத்தால் பெருக்குனீர்கள். எங்கள் செயல்களின் நோக்கங்களைப் பூர்த்தி செய்யுங்கள்.

4. இந்திராவருணர்களே! அவி ஏந்துபவர்கள் உங்களைப் போர்களிலும், சமர்களிலும் உங்களை அழைக்கிருர்கள். அங்கிரஸர்கள் செல்வத்தைச் செழிப்பிக்க உங்களை வணங்கிய முழந்தாள்களோடு அழைக்கிருர்கள். வழிபடுபவர்களான நாங்கள் போற்றத்தகுந்தவர்களும், இரு உலகங்களிலுமுள்ள செல்வங்களுக்குத் தலைவர்களுமான உங்களை அழைக்கிருேம்.

5. இந்திராவருணர்களே! உங்களுடைய வலிமையால் உலகின் இப்பிராணிகளையெல்லாம் பிறப்பித்தீர்கள். ஆதலால் மித்திரன் செல்வத்துக்காக வருணனைப் போற்றுகிருன். மற்றவனுன உக்கிரமாயுள்ள இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து புகழைப்பற்றுகிருன்.



6. வருணனுடைய வலிமையை மகத்தான செல்வத்துக்காகப் புலப்படுத்த இந்திராவருணர்கள் அவரவர்களுடைய நித்தியமான, சொந்தமான ஆற்றலை அறிந்து அளந்து கொண்டார்கள். ஒருவன் அழிக்கும் பகைவனைத் தாழ்த்துகிருன். மற்றவன்—இந்திரன்—சில ஆட்களோடு பல சத்துருக்களை அழிக்கிருன்.

7. தேவர்களே! இந்திராவருணர்களே! நீங்கள் எந்த மனிதனுடைய யக்ஞங்களுக்குச் செல்லுகிறீர்களோ அவனிடம் துன்பமணுகாது. தீமையும் பற்ருது. அவனைக் கஷ்டம் எப்பக்கத்திலிருந்தும் எதிர்க்காது. உங்களால் விரும்பப்படும் அவனை, கேடு ஒருபொழுதும் அழிக்காது.

8. வீரர்களே! உங்களுடைய தேவபாலனத்தோடு எங்களைப் பாலியுங்கள். என்னை நீங்கள் விரும்பினுல் என் தோத்திரத்தைக் கேளுங்கள். இந்திராவருணர்களே! சுகத்தின் சுனையான உங்கள் நட்பையும், பந்துத்வத்தையும் அளியுங்கள்.

9. இந்திராவருணர்களே! எதிர்த்து நிற்கும் இரு படைகள் உங்களை அழைக்குங்காலும், மானிடர்கள் புதல்வர்களையும், சந்ததியையும் பெற உங்களை அழைக்குங்காலும், ஒவ்வொரு போரிலும் சனங்களின் படையாயிருக்கும் நீங்கள் எங்களுடைய முன்னணி வீரர்களாயிருங்கள்.

10. இந்திரனும், வருணனும், மித்திரனும், அரியமானும் எங்களுக்குச் செல்வத்தையும், பெரிய பரந்த மனையையும் அளிப்பார்களாக. நாங்கள் ருதத்தை வளர்க்கும் அதிதியின் சுகப்படுத்தும் சோதியையும், தேவ ஸவிதாவின் சுலோகத்தையும் சிந்திக்கிருேம். 5801

# 83. இந்திராவருணர்கள்

## 599. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திராவருணர்களே! தலைவர்களே! உங்கள் பந்துத்வத்தைத் தியானஞ் செய்பவர்களும், பசுக்களை விரும்புபவர்களுமான — வழிபடுபவர்கள் — பரந்த பரசுக்

களோடு கீழ்த் திசைக்குச் சென்றார்கள். இந்திராவருணர்களே! நீங்கள் ஸுதாஸனுடைய பகைவர்களான தாஸர்களையும், ஆரியர்களையும் அழித்தீர்கள். அவனை உங்கள் பாலனத்தால் பாலித்தீர்கள்.

2. இந்திராவருணர்களே! உயர்த்திய கொடிகளுடன் வீரர்கள் ஒன்றுசேரும் இடத்திலும், அநுகூலமான எதுவும் தோன்றாத போரிலும், ஒளியைக் காணும் பிராணிகள் எல்லாம் பயமடையும் இடத்திலும், நீங்கள் எங்களை மொழிகளால் ஊக்கப்படுத்தினீர்கள்.

3. புவியின் அழிக்கப்பட்ட எல்லைகள் புலனாகின்றன. இந்திராவருணர்களே! கோஷம் சோதிக்கு எழுந்தது. என்னுடைய சனங்களின் சத்துருக்கள் என்னை அணுகுகிறார்கள். என் அழைப்பைக் கேட்டு என்னைப் பாலிக்க வாருங்கள்.

4. இந்திராவருணர்களே! நீங்கள் உங்களுடைய பயங்கராயுதங்களால் இதுவரை எதிர்ப்பற்றிருந்த பேதனை ஜயித்து ஸுதாஸனைப் பாலித்தீர்கள். போர் முழக்கங்களின் நடுவே நீங்கள் திருத்ஸுக்களின் தோத்திரங்களைக் கேட்டீர்கள். அவர்களுடைய—புரோகிதனுடைய—சேவை பயனையளித்தது.

5. இந்திராவருணர்களே! பகைவனின் கொல்லும் படைகள் என்னை வருத்துகின்றன. துன்புறுத்துபவர்களின் நடுவே எதிர்ப்பவர்கள் என்னைத் தாக்குகிறார்கள். வையத்திலும், விண்ணிலுமுள்ள செல்வங்களுக்கு நீங்கள் அரசர்கள். ஆதலால் நீங்கள் எங்களைப் போர்த் தினத்திலே பாலியுங்கள்.

6. இந்திராவருணர்களே! பத்து அரசர்களால் எதிர்க்கப்படுங்கால் திருத்ஸுக்களோடிருக்கும் ஸுதாஸனை நீங்கள் பாலித்தபோது செல்வத்தைச் சம்பாதிக்க நடத்தப்படும் போர்களிலே இந்திராவருணர்களான உங்கள் இருவர்களையும் ஸுதாஸனுடைய, திருத்ஸினுடைய சனங்கள் அழைத்தார்கள்.



7. இந்திராவருணர்களே! யஜிக்காதவர்களும், இணைந்திருப்பவர்களுமான பத்து அரசர்கள் ஸுதாஸனை வெல்ல இயலவில்லை. அவியளிக்கும் தலைவர்களின் தோத்திரம் பயனைத் தந்தது. அவர்களுடைய யக்ஞங்களிலே தேவர்கள் விளங்கினார்கள்.

8. இந்திராவருணர்களே! எந்த தேசத்திலே வெண்மையான ஆடையை அணிந்தவர்களும், சடை தரித்தவர்களும் யக்ஞங்களோடு, செயல்களோடு இருப்பவர்களுமான திருத்ஸுக்கள்—வசிஷ்டரின் சீடர்கள்—அவியோடும், துதியோடும் உங்களைப் போற்றுகிறார்களோ அங்கு ஸுதாஸன் பத்து அரசர்களால் எல்லாப் பக்கங்களிலும் சூழப்பட்டபோது நீங்கள் அவனுக்கு ஆற்றலைத் தந்தீர்கள்.

9. உங்களில் ஒருவன்—இந்திரன்—போரிலே சத்துருக்களைக் கொல்லுகிறான். மற்றொருவன்—வருணன்—விரதங்களைப் பாலிக்கிறான். நாங்கள் வர்ஷிப்பவர்களான உங்களைத் துதிகளோடு அழைக்கிறோம். இந்திராவருணர்களே! எங்களுக்குச் சுகத்தையளியுங்கள்.

10. இந்திரனும், வருணனும், மித்திரனும், அரியமானும் எங்களுக்குச் செல்வத்தையும், பரந்த மனையையும் அளிப்பார்களாக. நாங்கள் ருதத்தை வளர்க்கும் அதிதியின் சுகப்படுத்தும் சோதியையும், தேவ ஸவிதாவின் சுலோகத்தையும் சித்திக்கிறோம். 5811

# 84. இந்திராவருணர்கள்

## 600. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அரசர்களான இந்திராவருணர்களே! நான் உங்களைத் துதிகளோடும், அவிகளோடும் யக்ஞத்துக்கு அழைக்கிறேன். எங்கள் கைகளில் ஏந்தப்படும் நெய் சொரியும் துடுப்பு தானாகவே பல ரூபங்களுள்ள உங்களுக்குச் செல்லுகிறது.

2. கயிற்றால் செய்யப்படாத பாசங்களால் பாவிகளைக் கட்டுப்படுத்தும் உங்களுடைய சோதியின் மகத்தான

இராஜ்யம் உலகத்தை மழையால் திருப்தி செய்கிறது. வருணனுடைய கோபம் எங்களிடமிருந்து விலகுக. இந்திரன் எங்களுக்குப் பரந்த இடத்தைச் செய்வானாக.

3. சபைகளின் நடுவே செய்யப்படும் யக்ஞத்தை வண்ணப்படுத்துங்கள். அறிஞர்களின் நடுவே கூறப்படும் தோத்திரங்களைப் போற்றுங்கள். தேவர்களால் பிரேரிக்கப்படும் செல்வங்கள் எங்களிடம் வருக. உங்களுடைய விரும்பத்தகுந்த பாலனங்களால் எங்களைச் செழிப்பியுங்கள்.

4. இந்திராவருணர்களே! அனைவராலும் விரும்பப்படும் செல்வங்களை மனையோடும், மிகுந்த உணவோடும் எங்களுக்கு அளியுங்கள். ஏனெனில் சூரனான ஆதித்தியன்—வருணன்—அசத்திய சனங்களைத் தண்டிக்கிறான். அபரிமிதச் செல்வங்களைச் சத்தியம் பேசுபவர்களுக்குத் தருகிறான்.

5. என்னுடைய இந்தத் தோத்திரம் இந்திராவருணர்களிடம் செல்க. என்னால் ஆர்வத்தோடு கூறப்படும் இது புதல்வர்களையும், பேரர்களையும் பாலிக்க; உத்தமச் செல்வங்களுள்ள நாங்கள் தேவர்களுடைய விருந்துக்குச் செல்வோமாக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5816

## 85. இந்திராவருணர்கள்

### 601. மைத்திராவருணி வசிஷ்டன்

1. நான் இந்திரனும், வருணனுமான உங்களுக்கு ஸோமத்தையளித்து, அரக்கர்களால் தடைபடாததும், தேவியான உஷையைப்போல் ஒளியங்களுள்ளதுமான தோத்திரத்தைக் கூறுகிறேன். போருக்குச் செல்லுங்கால் அவர்கள் எங்களைப் பாலிப்பார்களாக.

2. கொடிகளின் நடுவே சரங்கள் பெய்யும் இங்கு இரு படைகளும் ஒன்றையொன்று முந்திக்கொண்டு தேவர்களை அழைக்கின்றன. இந்திராவருணர்களே! சத்துருக்களைக் கொல்லுங்கள். அவர்களை உங்களாயுதத்தால் ஒவ்வொரு திசைக்கும் செலுத்திக்கொல்லுங்கள்.



3. சலத்தைப் போல் பெருகுபவர்களும், சொந்தப் புகழுள்ளவர்களும், யக்ஞஸதனங்களிலே அளிக்கப்பட்டவர்களும், தேவிகளுமான ஸோமர்கள் இந்திரனையும், வருணனையும் ஏந்துகிறார்கள். அவர்களிலே ஒருவன்—வருணன்—நன்மையையும், புன்மையையும் தனிப்டுபத்தி மானிடர்களைக் கிரமப்படுத்துகிறான். வேறொருவன்—இந்திரன்—தடையற்றிருந்த பகைவர்களை அழிக்கிறான்.

4. ஆற்றலோடுள்ள ஆதித்தியர்களான உங்களுக்கு நல்ல செயல்களுள்ள ஹோதா வணக்கத்தை அளிக்குங்கால் யக்ஞத்திலிருந்து இலாபத்தைப் பெறுவானாக. உங்களைத் திருப்திசெய்ய உங்களை அழைக்கும் அவிச்செல்வன் செழுமையாகி க்ஷேமத்திலிருப்பானாக.

5. என்னுடைய இந்தத் தோத்திரம் இந்திரா வருணர்களிடம் செல்க. என்னால் ஊக்கத்தோடு கூறப்படும் இது புதல்வர்களையும், பேரர்களையும் பாலிக்க. உத்தமச் செல்வங்களுள்ள நாங்கள், தேவர்களுடைய விருந்துக்குச் செல்வோமாக. நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5821

## 86. வருணன்

### 602. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பரந்த சோதியையும் புவியையும் நிறுத்தியவனும், மகத்தான சூரியனையும் அழகிய நட்சத்திரங்களைப் பகலிலும் இரவிலும் பிரேரித்தவனும், நிலத்தைப் பரத்தியவனுமான வருணனுடைய மகிமையால் பிராணிகள் அறிவுள்ளவையாயிருக்கின்றன.

2. நான் என் தேகத்தோடு கமனத்தால் அவனிடம் எப்பொழுது பேசுவேன்? வருணனுடைய சித்தத்தில் நான் எப்பொழுது சேர்க்கப்படுவேன்? அவன் எந்த வழியால் என்னுடைய ஆவியைக் கோபப்படாமல் பெற்றுக்கொள்வான்? நான் எப்பொழுது நல்ல மனமுள்ளவனாகி சுகப்படுத்தும் அவனைக் காண்பேன்?

3. வருணனே! உன்னைக் காண விரும்பும் நான், உன்னிடம் நான் செய்த பாபம் என்ன எனக் கேட்கிறேன்? நான் இதை அறிய அறிஞர்களிடம் சென்றிருந்தேன். அவர்கள் என்னிடம் ஒரேவிதமாய்ப் பதிலளித்தார்கள். இந்த வருணன் உன்னோடு கோபமாயிருக்கிறான்.

4. வருணனே! நான் அப்படி என்ன குற்றத்தைச் செய்தேன்? நண்பனும் வழிபடுபவனுமான என்னை, நீ ஏன் கொல்ல விரும்புகிறாய்? வெல்லப்படாதவனும், ஒளியுள்ளவனுமான நீ, அக்குற்றத்தை என்னிடம் அறிவிக்கவும். அதனால் நான் பாவத்திலிருந்து பிரிந்து வணக்கத்தோடு உன்னிடம் துரிதமாவேன்.

5. நீ எங்களை, எங்கள் பிதாக்கள் செய்யப்பட்ட பாபங்களிலிருந்தும், நாங்களாகவே செய்த பாபங்களிலிருந்தும் விடுவிக்கவும். அரசனான வருணனே! தாம்பிலிருந்து கன்றைப்போலும், திருடப்பட்டு பசுவுக்குத் தீனியைத்தர அதைக் கட்டிலிருந்து தளர்த்தும் திருடனைப் போலும் வசிஷ்டனைப் பாபத்திலிருந்து விடுவிக்கவும்.

6. வருணனே! நாங்கள் எங்களுடைய சொந்த பலத்தால், மனத்தால், விருப்பத்தால் பாவங்களைச் செய்யவில்லை. எங்கள் தன்மையால், விதியால், தேவகதியால், பாவங்களைச் செய்தோம். பாவத்தின் காரணங்கள்: மது, சூது, சினம், அறியாமை. தவறும் இளைஞனைத் திருத்திச் செலுத்த அருகிலே பெரியவன் இருக்கிறான். கனவும் பாபத்தைத் தூண்டுகிறது.

7. விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், உலகத்தை ஏந்துபவனுமான தேவனை நான் பாபத்திலிருந்து நீக்கி தாஸனைப் போல் நன்கு போற்றுவேனாக. தேவத் தலைவனான அவன் அறிவற்ற எங்களுக்கு அறிவைத் தருவானாக. மிக்க அறிஞனான அவன் வழிபடுபவனைச் செல்வத்துக்குச் செலுத்துவானாக.

8. உணவைத்தரும் வருணனே! இந்த ஸ்தோமம் உன்னருகில் வந்து உன் இருதயத்தில் நிலைக்க செல்வத்



தைச் சம்பாதிப்பதிலும், சம்பாதித்த பொருளைக் காப்பதிலும் எங்களுக்கு வெற்றி தோன்றுக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5829

## 87. வருணன்

### 603. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வருணன், சூரியனுக்கு வழியைச் செய்தான். அவன் வானிலே பிறப்பிக்கப்பட்ட நதிகளின் சலங்களை விடுவித்தான். பெட்டைக் குதிரைகளின் மந்தைக்குப் பாயும் அவிழ்த்துவிடப்பட்ட குதிரையைப் போல் அவன் துரிதமாகி, தினங்களிலிருந்து மகத்தான இரவுகளைப் பிரித்தான்.

2. உன்னால் பிரேரிக்கப்படும் காற்று, ஆத்மாவாகிறது. அவன் சலங்களை எங்கும் பிரேரிக்கிறான். சலத்தைப் போஷிக்கும் அவன் யக்ஞத்தின் அவியை, புல்லைத்தின்னும் பசுவைப் போல் புசிக்கிறான். வருணனே! பரந்த, விரிந்த சோதிக்கும் புவிக்கும் நடுவிலுள்ள மகிமைகள் எல்லாம் அனைவரையும் இன்புறுத்துகின்றன.

3. வருணனுடைய உத்தம தூதர்கள் அழகான சோதியையும், புவியையும் பார்க்கிறார்கள். யக்ஞஞ் செய்பவர்களையும், யக்ஞத் தீரர்களையும், பேரறிஞர்களையும், கவிகளையும் அவனுக்குத் துதி கூறுபவர்களையும் பார்க்கிறார்கள்.

4. பசுவுக்கு-சொல்லுக்கு-மூவேறு நாமங்கள் உண்டு என, அறிவுள்ள என்னிடம் வருணன் சொன்னான். விப்பிரனும் வித்துவானுமான அவன், தகுந்த சீடனான எனக்கு அறிவித்து, பிரம்மபதத்தின் மர்மங்களைக் கூறினான்.

5. அவனில் மூன்று சோதி உலகங்கள் நிற்கின்றன. அவனில் மூன்று பூமிகள் ஆறு பருவங்களுடன் நிலைக்கின்றன. போற்றத் தகுந்த அரசனான வருணன் சோதியிலே பொன் ஊஞ்சலான சூரியனை ஒளிபரத்த கற்பித்தான்.

6. சலபிந்துவைப்போல் வெண்மையாயிருப்பவனும், மிருகத்தைப்போல் வலியனும், மகத்தான ஸ்தோத்திரத்

தைப் பெறுபவனும், சலத்தைக் கற்பிப்பவனும், பாபத்துக் கப்பால் நன்கு செலுத்துபவனும், இவ்வுலகத்தை ஆட்சி செய்பவனும், சூரியனைப்போல் இருப்பவனுமான வருணன் கடலை நிலைப்படுத்தினன்.

7. அதிதி மகனின் விரதங்களை அனுசரித்து, பாலித்து வரும் நாங்கள் பாவஞ்செய்பவனுக்குக் கருணை காட்டும் வருணனின் முன்னே, பாபமற்றோரோவோமாக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5836

## 88. வருணன்

### 604. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வசிஷ்டனே! போற்றத் தகுந்தவனும், ஆயிரம் செல்வங்களைத் தருபவனும், வர்ஷிப்பவனும், மகானுமான சூரியனை எங்கள் முன்னே புலப்படுத்துபவனும், பொழிபவனுமான வருணனுக்குச் சுத்தமாயிருப்பதும், விரும்பத் தகுந்ததுமான தோத்திரத்தைக் கூறவும்.

2. கற்களால் பிழியப்பட்ட மதப்படுத்தும் ஸோமத்தை அவன்—வருணன்—பருகும்போது அவனுடைய முகப்பிலே நான் துரிதமாகி, வருணனுடைய சுவாலைச் சங்கத்தைப் போற்றுவேனாக. அவன் என் தேகத்தைப் பார்க்க வண்ணப்படுத்துவானாக

3. நானும், வசிஷ்டனும், வருணனும் சேர்ந்து கப்பலில் ஏறி எங்கள் கப்பலைக் கடலின் நடுவே செலுத்தும்போதும் துரிதமாயோடும் மரக்கலங்களோடு சலங்களின் மீது பயணமாகும் போதும், நாங்கள் ஊஞ்சலிலே சந்தோஷமாயாடுவோமாக.

4. வருணன் வசிஷ்டனைக் கப்பலிலே ஏற்றினன். அவன் தன் மகத்தான பாலனங்களால் ரிஷியை நல்ல செயல்களை நடத்துபவனாகச் செய்தான். அறிஞனான வருணன் வழிபடுபவனைத் தினங்களின் சுதினத்திலே ஸ்தாபித்தான். செல்லும் நாட்களையும், செல்லும் இரவுகளையும் விசாலப்படுத்தினன்.



5. நம்முடைய பழைய நட்புக்கள் எங்கு சென்றன? பூர்வத்தைப்போல் அவற்றைப் பங்கப்படுத்தாமல் நாம் பாலிப்போமாக. உணவையளிக்கும் வருணனே! நான் உன்னுடைய மகத்தான, அனைத்துமுள்ள ஆயிரங் கதவுகளுள்ள மனைக்கு வருவேனாக.

6. உன்னுடைய பிரியமான நித்திய பந்து, பாபங்களைச் செய்தாலும் உன்னுடைய நண்பனாயிருப்பானாக. போற்றத் தகுந்த வருணனே! பாபங்களைச் செய்தால் நாங்கள் இன்பத்தை அனுபவிக்காமலிருப்போமாக. அறிஞனான நீ, வழிபடுபவனுக்கு நிலையான மனையையளிக்கவும்.

7. இந்த நித்தியமான உலகங்களில் வசிக்குங்கால் வருணன் எங்கள் பாபங்களை விலக்குவானாக. அதிதியின் அங்கத்திலிருந்து, அவனால் அளிக்கப்பட்ட பாலனத்தை நாங்கள் அனுபவிப்போமாக. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5843

## 89. வருணன்

### 605. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அரசனான வருணனே! நான் மண்ணால் கட்டப்பட்ட மனைக்குச் செல்லாமலிருப்பேனாக. நல்ல க்ஷத்திரமிருப்பவனே! என்னைச் சுகப்படுத்தவும்; சுகப்படுத்தவும்.

2. ஆயுதமேந்துபவனே! ஊதப்பட்ட சருமத்தைப் போல் நான் பயத்தால் நிறைந்தவன் போல் பதறுகிறேன். நல்ல க்ஷத்திரமிருப்பவனே! சுகப்படுத்தவும், என்னைச் சுகப்படுத்தவும்.

3. சுத்தனே! செல்வனே! நான் துர்ப்பலத்தால் தருமத்துக்கு மாறாக எதைச் செய்திருந்தாலும் எனக்குச் சுகத்தையளிக்கவும். நல்ல செல்வமுள்ளவனே! எனக்குச் சுகத்தையளிக்கவும்.

4. சலங்களின் நடுவிலிருக்கும் வழிபடுபவனான என்னைத் தாகம் வருத்துகிறது. எனக்குச் சுகத்தையளிக்கவும். செல்வமுள்ளவனே! எனக்குச் சுகத்தையளிக்கவும்

5. சோதிப்படைக்கு மானிடர்களான நாங்கள் எந்தக் குற்றஞ் செய்திருந்தாலும், அறியாமையால் நாங்கள் உன்னுடைய எந்தத் தருமத்தைப் பங்கஞ் செய்திருந்தாலும். தேவனுன வருணனே ! அந்தப் பாபத்துக்காக எங்களைத் தண்டிக்காதே. 5848

## 90. வாயு

### 606. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சுத்தமாயும், இனிப்பாயுமுள்ள ஸோமரஸங்கள் அத்வர்யுக்களால் சூரனுன வாயுவாம் உனக்களிக்கப்படுகின்றன. ஆதலால் உன்னுடைய நியுத் குதிரைகளை இணைக்கவும். இங்கு வா. பிறியப்பட்டிருக்கும் ஸோமத்தை மதத்துக்காகப் பருகவும்.

2. சுத்த ஸோமரஸத்தைப் பருகுபவனே ! வாயுவே! மானிடர்களின் நடுவே தலைவனுன உனக்கு உத்தம அவியையும், சுத்த ரஸத்தையும் அளிப்பவனுக்கு நீ உயர்ந்த பதவியைத் தருகிருய். அவன் எங்கும் முதல்வனுகி செல்வத்தைப் பற்றி விளங்குகிருன்.

3. செல்வத்துக்காக சோதி புவிகளால் பிறப்பிக்கப்பட்டவனும், செல்வத்துக்காகத் தேவியான திஷணையால்—துதியால்—ஏந்தப்படுபவனும், வெண்ணிறத் தேவனும், செல்வத்தையளிப்பவனுமான வாயுவை அவனுடைய நியுத் குதிரைகள் வறிஞனுடைய இடத்துக்கு ஏந்தி வருகின்றன

4. பிரகாசிக்கும் தினங்களைத் தோற்றுவிக்கும் மாசற்ற உஷைகள் உதயமானுர்கள். அவர்கள் பிரகாசிக்குங்கால் பரந்த சோதியைக் கண்டார்கள். !அவர்கள் ஆர்வத்தோடு பசுக்களின் பட்டியைப் புலப்படுத்தினுர்கள். பூர்வத்தில் போல அவர்களுக்கு சலங்கள் பாய்ந்தன. அங்கிரஸர்கள் வாயுவைத் துதித்தார்கள். உஷைகள் தோன்றினுர்கள் திருடப்பட்ட பசுக்கள் மீட்கப்பட்டன. தடைபட்ட மழை விடுவிக்கப்பட்டது—ஸாயணர்.

#### இந்திரனும் வாயுவும்

5. இந்திரனே ! வாயுவே ! ஸத்தியமனத்தோடு துலங்குபவர்களும், சொந்தக் கடமைகளை நிறைவேற்றுவதில்



ஊக்கமாயிருப்பவர்களுமான கர்த்தாக்கள் உங்களுக்கு வீரர்களை ஏந்திவரும் தேரை அளித்து, தலைவர்களான உங்களுக்கு அவியைத் தருகிருர்கள்.

6. இந்திரவாயுக்களே ! எங்களைப் பசுக்களாலும், குதிரைகளாலும், நிதியாலும், பொன்னுலும், செல்வப்படுத்தும் தானசீலர்களான உத்தமச் செல்வர்கள், குதிரைகளோடும், வீரர்களோடும் நடத்தப்படும் போர்களிலே பகைவர்களின் எல்லாப் பொருள்களையும் ஜயிப்பார்களாக.

7. வசிஷ்டர்களான நாங்கள், சுமைகளை ஏந்தும் குதிரைகளைப்போல் அவிகளை ஏந்தி, உணவை நாடி, ஆற்றலை விரும்பி, நாங்கள் நன்கு பாலிக்கப்பட இந்திரவாயுக்களைத் துதிகளோடு அழைக்கிருேம். 5855

## 91. வாயு

### 607. மைத்திராவருணி வசிஷ்டன்

1. போற்றத் தகுந்த தேவர்கள் ஊக்கமாயும் அடிக்கடியும் வணக்கத்தோடு வாயுவைத் துதித்து, பூர்வத்தில் குற்றமற்றவர்களானுர்கள். அவர்கள் இப்போது வாயுவுக்கு அவியையளிக்கவும், வருந்தும் மானிடர்கள் பாலனமாகவும், உஷையையும் சூரியனையும் ஒளிப்படுத்துகிருர்கள்.

2. துதியை விரும்புபவர்களும், வானிலே செல்பவர்களும், மானிடர்களைப் பாலிப்பவர்களுமான நீங்கள், எங்களைத் துன்புறுத்தாதீர்கள். நாங்கள் பல மாதங்களையும், பல வருடங்களையும் காண எங்களைப் பாலியுங்கள். உங்களுக்குக் கூறப்படும் எங்களுடைய நல்ல துதி சுகத்தையும், உத்தமச் செல்வத்தையும் விரும்புகிறது.

3. பேரறிஞனும், நியுத் குதிரைகளோடு சிறப்புற்றவனும், வெண்ணிறமுள்ளவனுமான வாயு, செல்வம் செழித்து, மிகுந்த உணவுள்ளவர்களை விரும்புகிருன். ஏனெனில் அவர்கள் வாயுவைப் போற்ற ஒருமனத்துடன் எங்கும் நிற்கிருர்கள். அவர்கள் எல்லா உத்தமச் செயல்களையும் நடத்துகிருர்கள்.

4. இந்திரனே! வாயுவே! சுத்த ஸோமத்தை நீங்கள், உங்களுடைய தேகத்தின் வேகம் எத்தனை உண்டோ, எத்தனை ஆற்றல் உங்களுக்குண்டோ, அறிவால் யக்ஞத் தலைவர்கள் எத்தனை அறிவைப் பெறுகிறார்களோ, அத்தனை அளவுக்கு இந்த ஸோமத்தைப் பருகுங்கள். இந்தத் தருப்பையின் மீது அமருங்கள்.

5. இந்திரவாயுக்களே! நீங்கள் வழிபடுபவர்களால் விரும்பப்படும் நியுத் குதிரைகளைத் தேரிலே இணைத்து இங்கு வாருங்கள். இனிய ரஸத்தின் இந்த முதற் பானம் உங்களுக்குச் சித்தமாகிறது. பிறகு இப்பானத்தால் இன்பமாகி எங்களைப் பாபத்திலிருந்து விடுவியுங்கள்.

6. இந்திரவாயுக்களே! அனைவராலும் விரும்பப்படுபவையும், நூறு படைகளோடும், ஆயிரம் படைகளோடும் உங்களுக்குச் சேவை செய்பவையுமான உத்தம தானமுள்ள நியுத் குதிரைகளோடு எங்கள் முன்னே வாருங்கள். தலைவர்களே! உத்தர வேதியினருகில் செலுத்தப்பட்ட இனிய பானத்தைப் பருகுங்கள்.

7. வசிஷ்டர்களான நாங்கள், சுமைகளை ஏந்தும் குதிரைகளைப் போல் அவிகளை ஏந்தி, உணவை நாடி, ஆற்றலை விரும்பி, நாங்கள் நன்கு பாலிக்கப்பட இந்திர வாயுக்களைத் துதிகளோடு அழைக்கிறோம். 5862

## 92. வாயு

### 608. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சுத்த ஸோமத்தைப் பருகுபவனே! வாயுவே! எங்களிடம் வா. உன்னிடம் ஆயிரக்கணக்கான பிணைகள் இருக்கின்றன. நான் அனைவராலும் விரும்பப்படும் உனக்கு, தேவனே! முதலில் பருகுவதற்கான உனக்கு மதப்படுத்தும் ஸோமான்னத்தை அளிக்கிறேன்.

**இந்திரவாயுக்கள்**

2. தேவர்களை விரும்பும் அத்வர்யுக்கள் எந்த யக்ஞங்களிலே உங்களுக்கு ஸோமத்தின் முதற் பாகத்தைத் தங்கள் ஆற்றல்களால் ஏந்தி வருகிறார்களோ அந்த யக்ஞங்களிலே



இந்திரனும், வாயுவும் ஸோமத்தைப் பருக, ஸோமத்தை ஞக்கமாய்ப் பிழிபவன் அளிக்கிறான்.

**வாயு**

3. வாயுவே! நீ எந்தக் குதிரைகளோடு யக்ஞத்தைச் செய்ய யாகஸதனத்திலே காத்திருக்கும் அவியளிப்பவனிடம் செல்லுகிறாயோ, அந்தக் குதிரைகளோடு எங்களிடம் வா. எங்களுக்குப் போகத்துக்குரிய செல்வங்களையும், ஆண் சந்ததியையும், பசுக்களும் குதிரைகளுமுள்ள நிதியையும் அளிக்கவும்.

**இந்திரவாயுக்கள்**

4. போரிலே வீரர்களோடு பகைவர்களை ஜயித்துக் கொண்டு, இந்திரனையும் வாயுவையும் இன்புறுத்துபவர்களும், தேவ துதிகளைக் கூறுபவர்களும், பகைவனை அழிப்பவர்களுமான வழிபடுபவர்களோடு சத்துருக்களை அழிப்பவர்களாயிருப்போமாக.

**வாயு**

5. வாயுவே! எங்களுடைய இம்சையற்ற யக்ஞத்துக்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான குதிரைகளோடு வா. இந்த யக்ஞத்திலே இன்பமாகவும். தேவர்களே! நீங்கள் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5867

## 93. இந்திராக்கினிகள்

### 609. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திராக்கினிகளே! பகைவர்களை அழிப்பவர்களே! சுத்தமாயிருப்பதும், புதியதாய்க் கற்பிக்கப்பட்டதுமான இந்தத் தோத்திரத்தால் இன்று இன்புறுங்கள். நாங்கள் அழைப்பதர்க்கருகர்களான உங்களை அடிக்கடி அழைக்கிறோம். விரும்புபவனுக்கு உணவைத் துரிதமாயளிக்கும் உத்தம ஈகையர்களாகயிருக்கிறீர்கள்.

2. நீங்கள் அனைவராலும் விரும்பப்படுபவர்கள். நீங்கள் பகைவர்களின் படையைச் சேர்ந்து, சக்தியுள்ளவர்களாகி, வலிமையிலே வலியர்களாகி உடைப்பவர்கள், நிலையாயும், நிச்சயமாயுமுள்ள ஆற்றலை எங்களுக்கு அளியுங்கள்.

3. உங்களுடைய பிரமதியை விரும்பி தூயச் செயல்களோடு யக்ஞத்தை நடத்துபவர்களும், ஆவிகளை அளிப்பவர்களுமான இந்த விப்பிரர்கள், மீண்டும் மீண்டும் இந்திராக்கினிகளை அழைத்துக்கொண்டு உங்களைப்போற்ற போருக்குப்பாயும் குதிரைகளைப்போல் துரிதமாகிருர்கள்.

4. உங்களுடைய பிரமதியை—அனுகூலமனத்தை—விரும்பி, விப்பிரன் புகழுள்ளதும், பூர்வத்தில் அனுபவிக்கப்பட்டதுமான செல்வத்துக்கு உங்களைப் போற்றுகிருன். விருத்திரர்களைக் கொல்பவர்களே ? கூரிய வச்சிராயுதம் ஏந்துபவர்களே ! இந்திராக்கினிகளே ! நீங்கள் எங்களைப் போற்றத்தகுந்த செல்வங்களால் மேம்படுத்துங்கள்.

5. தேக பலத்திலே பரஸ்பரம் முந்திக்கொள்பவையும், எதிர்த்து முட்டிக்கொள்பவையுமான இரு மகத்தான படைகள் போரிலே போராடுங்கால், களத்திலே தேவ பக்தர்களால் தேவப் பற்றற்றவர்களை அழியுங்கள். ஸோமத்தை அளிக்கும் மனிதனேடு ஸோமமளிக்காதவனை அழியுங்கள்.

6. இந்திராக்கினிகளே ! நீங்கள் நல்ல மனங்களோடு எங்களுடைய இந்த ஸோமத்துக்கு வாருங்கள். நான் எங்களை எப்பொழுதும் மதிக்கும் உங்களை நித்திய அவிகளோடு போற்றுகிறேன்.

7. அக்கினியே ! இந்த வணக்கத்தோடு சோவிப்பிக்கப்படும் நீ, மித்திரனுக்கும், வருணனுக்கும், இந்திரனுக்கும் நாங்கள் பாவிக்கத் தகுந்தவர்கள் எனக் கூறவும். நாங்கள் எந்த பாபத்தைச் செய்திருந்தாலும், அந்தப் பாபத்திலிருந்து எங்களை நீக்கவும். எங்களைச் சுகப்படுத்தவும். அரியமானும், அதிதியும், மித்திரனும், மற்றவர்களும் அதை நீக்குவார்களாக.

8. அக்கினியே ! இந்திரனே ! இந்த யக்ஞங்களை ஊக்கமாய் நடத்தும் நாங்கள், உங்களிடமிருந்து ஆற்றலைப் பற்றுவோமாக. இந்திரனும், விஷ்ணுவும், மருத்துக்களும், எங்களைக் கைவிடாமலிருப்பார்களாக. தேவர்களே ! நீங்கள் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5875



## 94. இந்திராக்கினிகள்

### 610. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திராக்கினிகளே ! உங்களை வழிபடும் என்னிடமிருந்து இந்த முதன்மையான தோத்திரம் மேகத்திலிருந்து மழையைப்போல் உங்களுக்குப் பெய்கிறது.

2. இந்திராக்கினிகளே ! வழிபடுபவனின் அழைப்பைக் கேளுங்கள். அவனுடைய மொழியை விரும்புங்கள். தலைவர்களான நீங்கள், அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்யுங்கள்.

3. இந்திராக்கினிகளே ! தலைவர்களே ! எங்களைத் தீமைக்கும் பழிச்சொல்லுக்கும் நிந்தகனுக்கும் வசப்படுத்தாதீர்கள்.

4. பாலனத்தை விரும்பி நாங்கள் இந்திராக்கினிகளுக்கு மிகுந்த அவிகளையும், யக்ஞச் செயல்களோடு துதிகளையும் அளிக்கிறோம்.

5. பாலனத்துக்காகப் பல அறிஞர்கள் இங்ஙனம் இந்திராக்கினிகளைப் போற்றுகிருர்கள். உணவுக்காகப் பரஸ்பரம் முந்துபவர்கள் அவர்களைப் போற்றுகிருர்கள்.

6. நாங்கள் துதியை யளிக்க ஆர்வமாகி, அவியை ஏந்திக்கொண்டு செல்வத்தை விரும்பி யக்ஞங்களை நடத்துங்கால் இந்திராக்கினிகளான உங்களைத் துதிகளோடு அழைக்கிறோம்.

7. பகைவர்களை ஜயிப்பவர்களே! இந்திராக்கினிகளே! எங்களுக்களிக்கும் உணவோடு வாருங்கள். துஷ்டன் எங்களை அதீனப்படுத்தாமலிருப்பானாக.

8. எந்தப் பகைக்கும் மனிதனின் கொடுமையும், எங்களிடம் சேராமலிருக்க. இந்திராக்கினிகளே ! எங்களுக்குச் சுகத்தை யளியுங்கள்.

9. நாங்கள் பொன்னும், புரவிகளும், குதிரைகளுமுள்ள செல்வத்தை உங்களிடம் வேண்டுகிறோம்.

இந்திராக்கினிகளே! நாங்கள் அதை உங்களிடமிருந்து பெறுவோமாக.

10. போற்றும் மனிதர்கள் ஸோமன் அளிக்கப் படுங்கால் குதிரைகளுள்ள உங்களை அழைத்தவுடன் இங்கு வாருங்கள்.

11. விருத்திரர்களை அழிப்பவர்களும், துதிகளாலும், தோத்திரங்களாலும், பாக்களாலும் போற்றப்படுபவர்களு மான நீங்கள் ஸோமத்தால் மதப்பட்டு நீங்கள் இங்கு வாருங்கள்.

12. துஷ்டர்களால் போற்றப்படுபவனும், துஷ்டப் புலவனும், கொடியனும் அபகரித்து இன்புறுத்துபவனுமான மனிதனை உங்கள் ஆயுதங்களால் அழியுங்கள். உங்கள் ஆயுதங்களால் மண்மயப்பாண்டத்தைப் போல் அழி யுங்கள். 5897

## 95. ஸரஸ்வதி

### 611. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இரும்புக்கோட்டையைப் போல் நிலையாயிருக்கும் இந்த ஸரஸ்வதி அனைத்தையும் தாங்கும் சலத்தோடு துரித மாய்ப் பெருகுகிருள். இவள் வழியைப் பெருக்கிச் செல்லும் தேரோட்டியைப் போல் வேறு சலங்களை யெல்லாம் தன் மகிமையால் பெருக்கிச் செல்லுகிருள்.

2. நதிகளிலே சுத்தமாயிருப்பவளும், தலைவியும், மலையிலிருந்து கடலுக்குப் பாய்பவளுமான ஸரஸ்வதி நாஹுஷனுடைய விருப்பத்தை அறிந்தாள். பல சீவன் களுக்குச் செல்வங்களை வழங்கும் அவள், அவனுக்கு நெய்யையும் பாலையுமளித்தாள்.

ஸரஸ்வான்

3. மானிடர்களுக்கு நண்பனுயிருக்கும் ஸரஸ்வான்- வாயுபெண்களின் நடுவே வளர்ந்தான். வலியனும், இளைஞனுமான விருஷபன், யக்ஞாருகர்களான பெண் களின் நடுவே வளர்ந்தான். அவன் அவிச்செல்வர்களுக்கு வலிய குதிரையை, வலிய புதல்வனைத் தருகிருன். அவள்



அவர்களுடைய தேகங்களைப் போரிலே ஜயத்துக்காக அலங்கரிக்கிருன்.

ஸரஸ்வதி

4. வணங்கிய முழந்தாள்களோடும், வணக்கத் தோடும் அணுகப்படுபவளும் அவளிடம் இருக்கும் செல்வங் களோடு தன் நண்பர்களிடம் மிக்கத் தாராளமாயிருப்ப வளும், செல்வியும், அன்புள்ளவளுமான ஸரஸ்வதி இந்த யக்ஞத்திலே எங்கள் துதிகளைக் கேட்பாளாக.

5. ஸரஸ்வதியே! வணக்கத்தோடு உனக்கு இந்த அவிகளை அளித்து, நாங்கள் உன்னிடமிருந்து செல்வத் தைப் பெறுவோமாக. எங்களுடைய தோத்திரத்தை ஏற்றுக்கொள்ளவும். உங்களுடைய பிரியமான பாலனத் திலே எங்களை ஸ்தாபித்துக்கொண்டு நாங்கள் உன்னிடம் நிழலுக்கு மரத்தினிடம் வருவது போல் வருகிருேம்.

6. திருச்செல்வியான ஸரஸ்வதியே! உனக்கு இந்த வசிஷ்டன் ருதத்தின்-யக்ஞத்தின் இரு கதவுகளை-கிழக்கை யும், மேற்கையும்-திறந்தான். வெண்மையான தேவியே! நீ வளரவும். உன்னைப் போற்றும் வசிஷ்டனுக்குச் செல்வங் களை அளிக்கவும். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5893

## 96. ஸரஸ்வதி

### 612. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வசிஷ்டனே! நீ மகத்தான ஸ்தோத்திரத்தை நதிகளின் நடுவே மிக்க ஆற்றலுள்ளவளாயிருக்கும் ஸரஸ்வதிக்குப் பாடுகிருய். வசிஷ்டனே! நீ சோதியிலும் புவியிலுமுள்ள ஸரஸ்வதியையே குற்றம் நன்கு நீக்கப் பட்டுள்ள ஸ்தோமங்களோடு போற்றவும்.

2. அழகிய ஸரஸ்வதியே! உன்னுடைய மஹிமை யால் மனிதர்கள் இருவித [உணவுகளை, புவியிலும் சோதி யிலுமுள்ள அக்கினிகளைப் பாலிக்கும் நீ, எங்களைக் கவனித் துக்கொள்ளவும். மருத்துக்களின் சிநேகிதியான நீ, அவிச் செல்வர்களுக்குச் செல்வத்தை யளிக்கவும்.

3. மங்களமான ஸரஸ்வதி எங்களுக்கு மங்களத்தை அளிப்பாளாக. குற்றமற்றுச் செல்பவளும், உணவைத் தருபவளுமான தேவி, எங்களை அறிந்து கொள்வாளாக. நீ ஜமதக்கினியால் போற்றப்பட்டதுபோல் இப்பொழுது வசிஷ்டனால் போற்றப்படவும்.

**ஸரஸ்வான்**

4. மனைவிகளை விரும்புபவர்களும், புதல்வர்களை விரும்புபவர்களும், உத்தம தானமளிப்பவர்களுமான நாங்கள், அவனை அணுகி, இப்பொழுது ஸரஸ்வானை அழைக்கிறோம்.

5. ஸரஸ்வானே ! உன்னுடைய இனிய சுவையுள்ளவையும், சலத்தை வழங்குபவையுமான அலைகளோடு எங்களுடைய பாலகனுயிருக்கவும்.

6. நாங்கள் உணவையும், பிரஜையையும் பெற ஸரஸ்வானின் சலங்களால் பருத்திருப்பதும், அனைவருக்கும் புலனாவதுமான ஸதனத்தை, மேகத்தைப் போற்றுவோமாக. 5899

## 97. பிரகஸ்பதி

### 613. மைத்திராவருணி வசிஷ்டன்

**இந்திரன்**

1. தேவர்களை விரும்பும் யக்ஞத் தலைவர்கள் இன்புறுவதும், இந்திரனுக்காக ஸோமங்கள் பொழியப்படுவதும், புவியின்மீது மனிதர்களின் மனையில் நடைபெறுவதுமான யக்ஞத்திலே மற்ற தேவர்களுக்கு முன்னே சோதியிலிருந்து மதத்துக்காக இந்திரன் வருவானாக. அவனுடைய துரித குதிரைகளும் வருக.

**பிரகஸ்பதி**

2. நண்பர்களே ! நாம் தேவத் தன்மையுள்ள பாலனங்களைக் கேட்போமாக. ஏனெனில் பிரகஸ்பதி எங்களுடைய அவிகளை ஏற்றுக்கொள்கிறான். தூரத்திலிருந்தே புதல்வர்களுக்குத் தந்தையைப்போல் எங்களுக்கு அளிப்ப



வனுக்கு அளிப்பவனும், வர்ஷிப்பவனுமான அவனிடம், நாங்கள் குற்றமற்றவர்களாயிருப்போமாக.

**இந்திரனும் பிரம்மணஸ்பதியும்**

3. நான் மிக்கப் புகழுள்ளவனும், உத்தம சுகத்தைத் தருபவனுமான பிரம்மணஸ்பதியை வணக்கத்தோடும் அவிகளோடும் போற்றுகிறேன். என்னுடைய தேவாருகமான சுலோகம், தேவர்களால் கூறப்படும் தோத்திரங்களுக்குத் தலைவனும், மகானுமான இந்திரனிடம் செல்க.

**பிரகஸ்பதி**

4. அனைவராலும் விரும்பப்படுபவனும், மிக்க அன்புள்ளவனுமான பிரகஸ்பதி எங்களுடைய யக்ஞத்திலே அமருவானாக. செல்வங்களையும், வீர மக்களையும் நாடும் எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்வானாக. துன்பத்திலிருக்கும் எங்களைப் பகைவர்களிடமிருந்து இன்னலாகாமல் கடத்துவானாக.

5. முதற் தோன்றிய அமுதர்கள், அவனுடைய ஆக்ஞையால் அமுத வாழ்க்கைக்குத் தகுந்த உணவை எங்களுக்களிப்பார்களாக. கிரகஸ்தர்களால் போற்றப்படுபவனும், சுத்தத் துதிகள் கூறப்படுபவனும், தடைபடாதவனுமான பிரகஸ்பதியை நாங்கள் அழைப்போமாக.

6. சூரியனைப் போல் ஒளி வடிவம் தரிப்பவையும், வலியவையும், விளங்குபவையுமான குதிரைகள் இணைந்து நிலையான மனையைப் போல் ஆற்றல் நிலைக்கும் பிரகஸ்பதியை இங்கு ஏந்தி வருக.

7. அவன் சுத்தன்; பலவித வாகனங்களிருப்பவன் பொன் ஆயுதங்கள் ஏந்துபவன்; விரும்பப்படுபவன்; ஒளியைப் பற்றுபவன்; நல்ல வாசமுள்ளவன்; வனப்புள்ளவன்; தன் நண்பர்களுக்கு உணவைத் தாராளமாயளிப்பவன்.

8. தேவனைத் தோற்றுவித்தவர்களும், தேவிகளுமான விண்ணும் வையமும், தங்கள் மகிமையால் பிரகஸ்பதியை வளர்த்தார்கள். நண்பர்களே ! போற்றுவதற்குரியவனைப்

போற்றுங்கள், அவன் நாங்கள் உணவை அடைய சலங்களை சுலபமாய்க் கடப்பதற்கும், செல்வதற்கும் இணக்கமாய்ச் செய்வானாக.

### இந்திரனும் பிரம்மணஸ்பதியும்

9. பிரம்மணஸ்பதியான உனக்கும், வச்சிராயுதம் ஏந்தும் இந்திரனான உனக்கும் மந்திரவடிவமான இந்தத் தோத்திரம் கூறப்படுகிறது. எங்களுடைய செயல்களைப் பாலியுங்கள். எங்களுடைய பல துதிகளைக் கேளுங்கள். வழிபடுபவர்களை எதிர்க்கும் பகைவர்களை அழியுங்கள்.

### இந்திரனும் பிரகஸ்பதியும்

10. பிரகஸ்பதியே! நீயும், இந்திரனும் சோதியிலும் புவியிலுமுள்ள செல்வங்களுக்குத் தலைவர்கள். உங்களைத் துதித்து வழிபடுபவனுக்குச் செல்வங்களை அளியுங்கள். தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5909

## 98. இந்திரன்

### 614. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அத்வாயுக்களே! மனிதர்களின் நடுவே உத்தமனாயிருப்பவனுக்குப் பிரியப்பட்டு, பிரகாசிக்கும் ஸோமத்தை அளியுங்கள். தூரத்திலே இருக்கும் பருகுவதற்குரிய இடத்தை அறியும் கௌர மிருகத்தைப்போல் அறியும் இந்திரன், ஸோமமளிப்பவனை நாடி, தினந்தோறும் வருகிறான்.

2. இந்திரனே! நீ பூர்வத்திலே பருகிய இனிய ஸோமத்தை இன்னும் தினந்தோறும் பருக விரும்புகிறாய். நீ மனத்திலும், இருதயத்திலும் திருப்தியாகி, எங்களுடைய நலத்தை விரும்பி உன் முன் வைக்கப்பட்டுள்ள ஸோமத்தைப் பருகவும்.

3. இந்திரனே! நீ பிறந்தவுடன் ஸோமத்தைப் பலத்துக்காகப் பருகினாய். உன்னுடைய தாய்—அதிதி—உன்னிடம் உன் மகிமையைக் கூறினாள். நீ பரந்த வானை உன்



மகிமையால் நிரப்பினாய். நீ போரிலே செல்வத்தைத் தேவர்களுக்காக ஜயித்தாய்.

4. வலியர்களும், இறுமாப்புள்ளவர்களுமான பகைவர்களை எதிர்க்க நீ எங்களை இயக்குங்கால் நாங்கள் துன்புறுத்தும் அவர்களை ஆயுதங்கள் ஏந்தாத கைகளாலேயே ஜயிக்கும் சக்தியுள்ளவர்களாகிறோம். இந்திரனே! மருத்துக்களோடு சூழப்பட்டுள்ள நீ, அவர்களோடு சண்டை செய்யுங்கால், நாங்கள் உன்னுதவியால் புகழுக்குரிய போரிலே ஜயிப்போமாக.

5. நான் இந்திரனுடைய பழைய வீரச் செயல்களையும், மகவானுடைய புதிய தீரச் செயல்களையும் கூறுகிறேன் அவன் தேவத் தன்மையற்ற மாயைகளை ஜயித்தவுடன் ஸோமம் அவனுடைய தனிச் செல்வமாயிற்று.

6. சூரியனுடைய ஒளியால் ஒளிப்படுத்தப்படுவதும், உன்னைச் சூழ்ந்திருப்பதும்—பசுக்களும் மனிதர்களும் நிறைந்திருப்பதுமான இந்த உலகமெல்லாம் உன்னுடையது. இந்திரனே! நீயே பசுக்களுக்கு ஒரே தலைவனாயிருக்கிறாய். உன்னால் அளிக்கப்படும் செல்வத்தை நாங்கள் அனுபவிப்போமாக.

7. பிரகஸ்பதியே! நீயும் இந்திரனும், சோதியிலும் புவியிலுமுள்ள செல்வங்களுக்குத் தலைவர்கள். உங்களைத் துதி வழிபடுபவனுக்குச் செல்வங்களை அளியுங்கள். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5916

## 99. விஷ்ணு

### 615. மைத்திராவருணி வசிஷ்டன்

1. அளவுக்கப்பாலுள்ள தேகத்தால் வளரும் விஷ்ணுவே! உன்னுடைய மகத்வத்தை மானிடர்கள் அறியார்கள். நாங்கள் புவியிலிருந்து துவக்கமாகும் இரு உலகங்களான பூமியையும், வானையுமே அறிகிறோம். தேவனான விஷ்ணுவே! நீயே பரமபதத்தை அறிகிறாய்.

2. தேவனான விஷ்ணுவே! உன்னுடைய மகத்வத்தின் பரம எல்லையை, பிறந்த எவனும் அடையவில்லை.

பிறக்கப்போகும் எவனும் அடையான். நீ அந்த மகத்துவத்தால் அழகாயிருப்பதும், உயர்ந்திருப்பதுமான சோதியைத் தாங்குகிருய். புவியின் கீழ்த் திசையையும் ஏந்துகிருய்.

3. சோதி புவிகளே! மானிடர்களுக்கு சேவை செய்ய விரும்பும் உங்களிடம் உணவுச் செல்வமுண்டு. பசுச் செல்வமுண்டு. பசுக்களுக்கு நல்ல தீனிகளுண்டு. விஷ்ணுவே! நீ இந்த இரு உலகங்களான சோதியையும் புவியையும் ஏந்துகிருய். புவியை, எங்கும் இருக்கும் மலைகளால் திரப்படுத்துகிருய்.

### இந்திரா விஷ்ணுக்கள்

4. இந்திரா விஷ்ணுக்களே! நீங்கள் யக்ஞத்துக்காக, மானிடனுக்காகச் சூரியனையும், உஷையையும், அக்கினியையும் பிறப்பித்து, பரந்த உலகத்தைச் செய்தீர்கள். மனிதர்களே! நீங்கள் தாஸனான விருஷசிப்பிரனுடைய மாயைகளைப் போர்களிலே அழித்தீர்கள்.

5. இந்திரா விஷ்ணுக்களே! நீங்கள் சம்பரனுடைய திடமான 99 கோட்டைகளை இடித்தீர்கள். நீங்கள் உடனே அசுரனான வர்ச்சினனுடைய நூறு ஆயிரம் வீரர்களைத் தடைபடாமல் கொன்றீர்கள்.

6. இந்த மகத்தான தோத்திரம் பெரியவர்களும், பரந்த அடிவைப்பவர்களும், மிக்கப் பலமுள்ளவர்களுமான உங்களைப் போற்றுகிறது. விஷ்ணுவே! இந்திரனே! நான் உங்கள் இருவர்களுக்கும் யக்ஞங்களிலே ஸ்தோமத்தைக் கூறுகிறேன். போர்களிலே ஜயித்த உணவை எங்களுக்களியுங்கள்.

7. விஷ்ணுவே! உனக்கு என் உதடுகள் வஷட்டைக் கூறுகின்றன. சிபிவிஷ்டனே! இந்த அவி உன்னை இன்புறுத்துக. என்னுடைய நன்கு போற்றும் பாக்கள் உன்னைப் போற்றுக. தேவர்களே! நீங்கள் எங்களை எப்பொழுதும் சுவஸ்திகளோடு பாலியுங்கள். 5923



# 100. விஷ்ணு

## 616. மைத்திராவருணி வசிஷ்டன்

1. பரந்த புகழுள்ள விஷ்ணுவுக்கு அவிகளை அளிப்பவனும், முற்றும் நிலையான மனத்தோடு அவனைப் போற்றுபவனும், மானிடர்களுக்கு நலத்தைச் செய்து இங்ஙனம் பெரியவனுயிருப்பவனை உயர்த்துபவனுமான மனிதன் செல்வத்தை விரும்பினுல் அதை உடனே அடைகிருன்.

2. விஷ்ணுவே! விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனே! நாங்கள் மிகுந்தவையும், புரவிகளுள்ளவையும், அனைவரையும் இன்புறுத்துபவையுமான செல்வங்களைச் சுலபமாய்ப் பெறும் வெற்றியை அடைய நீ, உன்னுடைய மாசற்றதும், அனைவர்க்கும் நலத்தையளிப்பதுமான ஸுமதியைப் புலப்படுத்தவும்.

3. இந்தத் தேவன் தன் மகத்வத்தால் நூறு காந்திகளுள்ள இந்தப் பூமியைத் தன் மூன்று அடிகளால் அளந்தான்-ஆக்கிரமித்தான். வலியர்களில் மிக்க வலியனுயுள்ள விஷ்ணு எங்கள் தலைவனுயிருப்பானுக. நிலைத்திருக்கும் விஷ்ணுவின் பெயரானது புகழுள்ளது.

4. இந்த விஷ்ணு மானிடனுக்கு வாசத்தை யளிக்க விரும்பி, புவியை—மூவ்வுலகங்களை அளந்தான், — ஆக்கிரமித்தான். அவனைத் துதிக்கும் சனங்கள் நிலைத்திருக்கிருர்கள். நலத்தைத் தோற்றுவிக்கும் அவன், துதிப்பவர்களுக்குப் பரந்தமனையைச் செய்தான்.

5. சிபிவிஷ்டனே!-ரசிமிகளால் போர்த்தப்பட்டவனே! ஆரியனுன, அவிகளின் தலைவனுன நான், அறிவதற்குரிய பொருள்களை அறிந்து, இன்று உன்னுடைய நாமத்தைப் போற்றுகிறேன். இந்த உலகத்துக்கப்பாலுள்ள இடத்திலே வசிக்கும் வலியனுன உன்னை, மெலிந்தவனுன நான் பாடுகிறேன்.

6. விஷ்ணுவே! நீ, நான் சிபிவிஷ்டன் எனக் கூறுங்கால் உன்னைப் புலப்படுத்த வேறு எது வேண்டும்? உன்னைக் குற்றஞ்சாட்ட எதுவும் தேவையில்லை. நீ சண்டை

யிலே வேறு பெயரோடு போர் செய்தாய். ஆனால் எங்களிட மிருந்து உன்னுடைய உண்மையான வடிவத்தை மறைக் காதே.

7. விஷ்ணுவே! நான் வஷட் முழக்கத்தோடு உன் முன் வைக்கப்பட்டுள்ள அவியையளிக்கிறேன். சிபிவிஷ்டனே! என் அவியால் இன்பமாகவும், என்னு டைய உத்தமத் துதிமொழிகள் உன்னை மேம்படுத்துக. தேவர்களான நீங்கள், எப்பொழுதும் எங்களை சுவஸ்திக ளோடு பாலியுங்கள். 5930

## 101. பர்ஜன்யன்

### 617. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியால் முந்தப்படுபவையும், சலந்தரும் ஆபி னத்தைக் கறப்பவையுமான மூன்றுவித மொழிகளைக் கூற வும். அவன்-பர்ஜன்யன் - கன்றை-மின்னலைப் பிறப்பித்து, ஓஷதிகளைச் சினைப்படுத்தி, துரிதமாய்த் தோன்றி, விருஷ பனுகி முழங்குகிறான்.

2. ஔடதங்களை வளர்ப்பவனும், சலங்களைச் செழிப் பிப்பவனும், உலகத்தையெல்லாம் அரசுபுரியும் தேவனு மான பர்ஜன்யன், எங்களுக்கு முத்தாதுக்களுள்ள மனையை யும், சுகத்தையும் அளிப்பானாக. அவன் மூன்று பருவங் களிலே எங்களுக்குச் சூரியனுடைய விரும்பத் தகுந்த சோதியையளிப்பானாக.

3. பர்ஜன்யனின் ஒரு வடிவம் மலட்டுப் பசுவைப் போல் இருக்கிறது. வேறு வடிவம் கன்றை ஈனுகிறது. அவன் விரும்பும் வடிவத்தை எடுக்கிறான். தந்தையினிட மிருந்து, சோதியிலிருந்து, தாய்—புவி, பாலை—மழையை ஏற்றுக்கொள்ளுகிறாள். அதனால் தந்தை வளர்கிறான். அதனால் புதல்வன் வளர்கிறான்.

4. அவனில் எல்லா சீவர்களும் நிலைக்கின்றனர். மூவ் வுலகங்களும் நிற்கின்றன. அவனிடமிருந்து சலங்கள் மூன்று திசைகளுக்கும் பாய்கின்றன. சலம் சொரியும் மூன்று மேககோசங்கள் மகானை—பர்ஜன்யனைச் சூழ்ந்து கொண்டு சலங்களைப் பொழிகின்றன.



5. சுயமாய்ப் பிரகாசிக்கும் பர்ஜன்யனுக்கு இம்மொழி கூறப்படுகிறது. அது அவனுடைய இருதயத்தில் நிலைக் கப்படுக. அதை அவன் ஏற்றுக்கொள்க. சுகப்படுத்தும் மழைகள் எங்களுக்குத் தோன்றுக. தேவனால் பாலிக்கப் பட்டு ஓஷதிகள் எங்களுக்குப் பயனுள்ளவையாகுக.

6. பர்ஜன்யன் பல செடி, கொடி, மரங்களைக் காளை யைப் போல் சினைப்பிப்பவனாயிருக்கிறான். அவனிடம் தாவர, சங்கம உலகத்தின் ஆத்மா இருக்கிறது. அவனால் அளிக்கப்படும் மழை எங்களை நூறு வருடங்கள் பாலிக்க. தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்தி களோடு பாலியுங்கள். 5936

## 102. பர்ஜன்யன்

### 618. மைத்திராவருணி வசிஷ்டன்

1. சோதியின் மகனும், மழையைத் தேடுபவனுமான பர்ஜன்யனைப் பாடுங்கள். அவன் எங்களுக்கு உணவை யளிக்க விரும்புவானாக.

2. ஓஷதிகளையும், பசுக்களையும், குதிரைகளையும், பெண்களையும் சினைப்பிக்கும் பர்ஜன்யனைப் பாடுங்கள்.

3. நமக்குத் தவறாமல் அவன் உணவையளிக்க மிக்க இனிய அவியைப் பர்ஜன்யனுக்கு அக்கினியின் வாயால் அளியுங்கள். 5939

## 103. தவளைகள்

### 619. மைத்திராவருணி வசிஷ்டன்

1. வருடமெல்லாம் தவம் பயின்ற தவளைகள் விரதங் களைப் பூர்த்தி செய்யும் பிராமணர்களைப் போல் பர்ஜன்ய னுக்குப் பிரியமான குரலை எழுப்புகின்றன.

2. காய்ந்த சலசருமத்தைப் போல் வறண்ட ஏரியிலே சயனித்திருந்த தவளைப் படையின் மீது சோதியின் சலங்

கள் பெய்தவுடன் தவளைகளின் துவனி, கன்றுகளோடுள்ள பசுக்களின் ஆருவத்தைப் போல் சுருதியுடன் எழுகிறது.

3. மாரிக்காலம் தோன்றியதும் தாகமுள்ளவையும், நீரை நாடுபவையுமான தவளைகளின் மீது பர்ஜன்யன் மழையைப் பொழிகிறான். ஆரவாரத்தோடுள்ள ஒரு தவளை சந்திக்கும் வேறு தவளையைத் தந்தையை நாடும் குழந்தை போல் நாடுகிறது.

4. மழை பொழிந்தவுடன் மகிழும் இரு தவளைகளிலே ஒன்றையொன்று வாழ்த்துகிறது. மழையால் நனைந்த ஒரு தவளை முன்னே பாயுங்கால் விசித்திரத் தவளையும், பச்சைத் தவளையும் தங்கள் பாக்களைச் சேர்க்கின்றன.

5. உங்களில் ஒருவன் வேறொருவனுடைய குரலைக் குருவினிடம் பாடத்தைக் கற்கும் மாணவனைப் பின்பற்றுகிறான். நீங்கள் சலத்தின் மீது பாய்ந்து, பரஸ்பரம் சாதுர்யமாய்ப் பேசிக்கொள்ளுங்கால் உங்களுடைய ஒவ்வொருவனின் ஒவ்வொரு அங்கமும் பருமனுவது போல் தோன்றுகிறது.

6. பசுவைப் போல் குமுறும் தவளை ஒன்று; ஆடு போல் கத்தும் தவளையொன்று; புள்ளியுள்ளது ஒன்று; பச்சை நிறம் ஒன்று. ஒரே பெயரால் அழைக்கப்படும் அவை பல ரூபங்களுள்ளவை. பேசிக்கொள்ளும் அவை பலவிதமாய்த் துவனியை மாற்றிக்கொள்ளுகின்றன.

7. அதிராத்திர ஸோம யாகத்திலே நிறைந்த பண்டத்தைச் சூழ்ந்து அமர்ந்திருக்கும் பிராமணர்களைப் போல் தவளைகளான நீங்கள் வருடத்திலே மழை தோன்றிய முதல் தினத்தை நிறைந்திருக்கும் ஏரியைச் சூழ்ந்துகொண்டு இரவெல்லாம் பாடுகிறீர்கள்.

8. இந்த பிராமணர்கள் ஸோமரஸத்தோடு வருடயக்ஞத்தைப் பூர்த்தி செய்து தங்களின் கரங்களை எழுப்பினார்கள். இந்த அத்வர்யுக்கள் கொப்பரிகளோடு வியர்த்து மறைக்கப்பட்டிருந்தவர்களைப் போல் வெளியே வருகிறார்கள்.



9. யக்ஞத்தின் தலைவர்களான இந்த மண்டுகங்கள் தேவர்களால் விதிக்கத் தருமங்களைப் பாலிக்கிறார்கள் அவர்கள் வருஷத்தின் உரிய பருவத்தை அவமதியார்கள். வருடம் சுற்றுகிறது. மழை திரும்புகிறது. சூடாகி சுடப்பட்ட அவர்கள், மறைந்த இடங்களிலிருந்து வெளியாகி விடுதலையைப் பெறுகிறார்கள்.

10. பசுவைப் போல் குமுறுபவனும், ஆடுபோல் கத்துபவனும், புள்ளியுள்ளவனும், பச்சை நிறமுள்ளவனும் எங்களுக்குச் செல்வங்களை அளிப்பார்களாக. நூற்றுக் கணக்கான பசுக்களை அளிக்கும் தவளைகள், இந்த மிக்க வளப்படுத்தலிலே எங்கள் ஆயுட்களை நீட்டுவார்களாக.
5949

## 104. இந்திரனும் ஸோமனும்

### 620. மைத்திராவருணி வசிஷ்டன்

1. இந்திராஸோமர்களே! அரக்கர்களைத் தாபப்படுத்துங்கள்; அறியுங்கள். வர்ஷிப்பவர்களே! தமத்தில் இன்புறுபவர்களைக் கீழே வீழ்த்துங்கள். புலனற்ற புல்லர்களைப் புறப்படுத்துங்கள்; பற்பப்படுத்துங்கள்; கொல்லுங்கள்; துரத்துங்கள்; நரமாமிசம் புசிப்பவர்களை நாசப்படுத்துங்கள்.

2. இந்திராஸோமர்களே! துடைப்பவனையும், தீமையைத் துதிப்பவனையும் ஒழியுங்கள். உங்கள் கோபத்தால பகைவன் எரிக்கப்பட்டு அனலில் அளிக்கப்படும் அவியைப் போல் அழிவானாக. பிரமத்துவேஷியினிடமும், நரமாமிசம் புசிப்பவனிடமும், குரூரக் கண்ணிருப்பவனிடமும், அற்பனிடமும், எப்பொழுதும் துவேஷத்தைச் செலுத்துங்கள்.

3. இந்திராஸோமர்களே! படர்ந்துள்ளதும், மீட்பதற்றதுமான தமத்திலே துட்டர்களைச் செலுத்தி, அவர்கள் எப்பொழுதும் தப்பிப் பிழையாமலிருக்கத் தண்டியுங்கள். உங்களுடைய கோபத்தோடுள்ள ஆற்றல் அரக்கர்களை ஜயிக்க.

4. இந்திராஸோமர்களே! உங்களுடைய புவியி லிருந்து துஷ்டர்களை நீக்கும் ஆயுதத்தை, சோதியிலிருந்து புலப்படுத்துங்கள். வளரும் அரக்கர்களை, நீங்கள் அழிக்க எரிக்கும் எரிப்படையை மேகங்களிலிருந்து செலுத்துங்கள்.

5. இந்திராஸோமர்களே! உங்களுடைய ஆயுதங்களை சோதியிலிருந்து எங்கும் செலுத்துங்கள். அவர்கள் சத்தத்தை எழுப்பாமல் சாக எரிபவையும், எரிப்பவையும், வைரமுள்ளவையுமான ஆயுதங்களால் அவர்களுடைய பக்கங்களிலே செலுத்திக் கொல்லுங்கள். 5954

6. வலியர்களான இந்திராஸோமர்களே! இந்தத் துதியானது இரு குதிரைகளை இணைக்கும் கட்சையைப் போல் உங்களை இணைக்க. நான் உங்களுக்கு அறிவோடு தோத்திரத்தைச் செலுத்துகிறேன். இரு அரசர்களைப்போல் நீங்கள் இந்த வணக்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.

7. இந்திராஸோமர்களே! உங்களுடைய துரித குதிரைகளிலே வாருங்கள். துன்புறுத்தும் துரோகிகளான அரக்கர்களைக் கொல்லுங்கள். கொடுமையால் எங்களைத் துன்பப்படுத்தும் துஷ்டனுக்கு சுகம் தோன்றுமலிருக்க.

**இந்திரன்**

8. சுத்த மனமுள்ள என்னைப் பழிச்சொற்களால் அலதூறு செய்யும் பொய் மொழியுள்ளவன், இந்திரனே! கையில் ஏந்தப்பட்ட சலத்தைப்போல் மறைவானாக.

**ஸோமன்**

9. சத்தியத்தைப் பேசும் என்னை, பழிச் சொற்களால் துன்புறுத்த விரும்புபவர்களையும், என்னிலுள்ள நன்மையை யெல்லாம் தூஷிக்கும் துஷ்டத்தன்மையுள்ளவர்களையும், ஸோமன் ஸர்ப்பத்தினிடம் செலுத்துவானாக. நிர்ருதியின் அங்கத்திலே உந்துவானாக.

**அக்கினி**

10. அக்கினியே! எங்களுடைய உணவின், குதிரைகளின் ஸாரத்தை அழிக்க இயங்குபவனும், பகைவனும், திருடனும், கள்ளனும் அழிவுக்குச் செல்வார்களாக. அவர்கள் தேகத்தையும், சந்ததியையும் இழப்பார்களாக. 5959



**தேவர்கள்**

11. அவனும், அவனுடைய சந்ததிகளும் அழிக்கப்படுவார்களாக. மூவ்வுலகங்களிளெல்லாம் அவனை அவர்களின் கீழே செலுத்துக. தேவர்களே! இரவிலும், பகலிலும் எங்கள் நாசத்தை நாடும் அவனுடைய புகழ் அழிக்கப்படுக.

**ஸோமன்**

12. மாறுபடும் சத்தியத்தையும், அசத்தியத்தையும், சுலபமாய்ப் பகுத்தறிந்து கொள்ளும் ஆற்றல் அறிவுள்ள மனிதனிடமுண்டு. அவற்றுள் சத்தியமாயும், நீதியுமாயிருப்பதை ஸோமன் பாலிக்கிறான். அவன் அசத்தியத்தை அழிக்கிறான்

13. ஸோமன் பாபஞ் செய்பவனை ஊக்கப்படுத்தான். பொய் கூறும் க்ஷத்திரியனையும் ஊக்கப்படுத்தான். அவன் அரக்கனை அழிக்கிறான். பொய் பேசுபவனை அழிக்கிறான். இருவரும் இந்திரனுடைய பந்தத்திலே நிலைத்திருக்கிறார்கள்.

**அக்கினி**

14. அக்கினியே! நான் அசத்திய தேவர்களைப் பின் பற்றினாலும், தேவர்களை வீணுக்கு அணுகினாலும், நீ என்னைத் தண்டிக்கவும். ஜாதவேதஸனே! நீ ஏன் எங்களிடம் கோபமுடனாகிறாய்? பொய் கூறுபவர்களுக்கு உன்னுடைய தண்டனை தோன்றுக.

**இந்திரன்**

15. நான் அரக்கனாயிருந்தால் இன்று மரிப்பேனாக. எந்த மனிதனுடைய சீவனையாவது துன்புறுத்தியிருந்தால் நான் மரிப்பேனாக. எனக்குப் பொய்ப் பெயரையளித்து என்னை அரக்கன் என அழைப்பவன் தன் பத்து புதல்வர்களையும் இழப்பானாக. 5964

16. நான் சுத்தன் எனக் கூறிக்கொள்பவனும், யாதுதானயில்லாத என்னை, யாதுதானன் என அழைப்பவனுமான அரக்கனை, இந்திரன் தன் பயங்கராயுதத்தால் அழிப்பானாக. அவன் எல்லாப் பிராணிகளுக்கும் நீசனாகி அழிவானாக.

**கிராவாணங்கள்**

17. தன் சொந்த வடிவத்தைப் புலப்படுத்தி, இரவிலே ஆந்தையைப் போல் திரியும் வஞ்சக அரக்கி, எல்லையற்ற குகைகளினுள் தலைகீழாய் வீழ்வாளாக. ஸோமத்தைப் பிழியுங்கற்கள், பிழியும் சப்தங்களால் அரக்கர்களை அழிக்க.

**மருத்துக்கள்**

18. மருத்துக்களே! பிரஜைகளின் நடுவே பரவுங்கள். தேடுங்கள். அவர்களைப் பிடியுங்கள். அவர்களை அரைத்துச் சூரணப்படுத்துங்கள். ஏனெனில் அவர்கள் வஞ்சகஞ் செய்ய இரவிலே பறவைகளைப் போல் பறந்து செல்கிறார்கள். எங்கள் தேவ யக்ஞத்தைத் தடைபடுத்துகிறார்கள்.

**இந்திரன்**

19. இந்திரனே! உன்னுடைய வச்சிராயுதத்தை சோதியிலிருந்து கீழே செலுத்தவும். மகவானே! ஸோமத்தால் உற்சாகமடைந்த தலைவனை ஊக்கப்படுத்தவும். நீ உன்னுடைய வச்சிராயுதத்தால் கிழக்கிலே, மேற்கிலே, வடக்கிலே, தெற்கிலே உள்ள அரக்கர்களை அழிக்கவும்.

20. அவர்கள் நாய்களோடு வருகிறார்கள். அவர்கள் கொல்ல விரும்பி, தடைபடாத இந்திரனை எதிர்க்கிறார்கள். சக்கரன் கபடர்களைக் கொல்ல தன் வச்சிராயுதத்தைத் தீட்டுகிறான். அவன் அவர்கள் மீது துரிதமாய் ஆயுதத்தைச் செலுத்துவானாக. 5969

21. இந்திரன், அவியளிப்பவர்களுடைய யக்ஞங்களை எப்பொழுதும் தடைபடுத்த வரும் அரக்கர்களை அழிக்கிறான். சக்கரன் வனத்திலே மரங்களை வெட்டும் கோடரியைப் போல் அரக்கர்களை வெட்டி அவர்களை மண்பாண்டங்களைப் போல் உடைக்கிறான்.

22. ஆந்தையைப்போலும், ஆந்தைக் குஞ்சுவைப் போலுமுள்ள அரக்கனை அழிக்கவும். நாயைப் போலும் சக்கரவாகத்தைப் போலுமுள்ள அரக்கனை அழிக்கவும்.



பருந்தைப்போலும், கழுகைப்போலுமுள்ள அரக்கனை அழிக்கவும். கல்லைப்போல் அரக்கனை நசுக்கவும்.

**விருப்பங்கள்**

23. அரக்கர்கள் எங்களைத் துன்பப்படுத்தாமலிருப்பார்களாக. உஷை திமிரின தம்பதிகளை விலக்குவாளாக. புவி எங்களைப் புவிக்குரிய துன்பத்திலிருந்தும், வானம் எங்களை சோதிக்குரிய துன்பத்திலிருந்தும் பாலிப்பார்களாக.

**இந்திரன்**

24. இந்திரனே! ஆண்வடிவமெடுக்கும் யாதுதானனைக் கொல்லவும். மாயையில் — வஞ்சகத்தில் – மகிழும் அரக்கியைக் கொல்லவும்; கபடத்தால் துன்புறுத்துபவனை அழிக்கவும். கொலையில் நீடிப்பவர்கள் தலைகள் வெட்டப்பட்டு அழிவார்களாக. அவர்கள் சூரியோதயத்தைப் பார்க்காமலிருப்பார்களாக.

**இந்திராஸோமர்கள்**

25. நீங்கள் இங்கு உற்று நோக்குங்கள். சுற்றிலும் பாருங்கள். ஸோமனே! இந்திரனே! நீங்கள் விழித்திருங்கள். அரக்கர்கள் மீது உங்களாயுதத்தைச் செலுத்துங்கள். இம்சை செய்யும் அவர்கள் மீது ஆயுதத்தைச் செலுத்துங்கள். 5974

ஏழாவது மண்டலம் : சூக்தங்கள் 104

இருக்குக்கள் 841

## ஏழாவது மண்டலம் முற்றிற்று

# எட்டாவது மண்டலம்

## இந்திரன்

### 621. பல ரிஷிகள்

#### பிரகாதகௌர காண்வன்

1. நண்பர்களே! இந்திரனையன்றி வேறு எவனையும் துதிக்காதீர்கள். உங்களுக்குத் துன்பத்தைச் செய்து கொள்ளாதீர்கள். ஸோமம் பொழியப்படுங்கால் வர்ஷிக்கும் இந்திரனையே நீங்கள் ஒருமையுடன் போற்றுங்கள். அவனுக்கே அடிக்கடிப் பாடுங்கள்.

2. பகைவர்களின் மீது பாயும் காளையும், தேயாதவனும், சத்துருக்களை ஜயிக்கும் விருடபத்தைப் போலிருப்பவனும், எதிரிகளை வெறுப்பவனும், நன்கு போற்றத் தகுந்தவனும், நட்பையும் பகைமையையும் புலப்படுத்துபவனும், ஈகையனும் இருவித செல்வங்களை அளிப்பவனுமான இந்திரனையே போற்றுங்கள்.

#### மேதாதிதி—மேத்யாதிதி காண்வன்

3. இந்திரனே! உன் பாலனத்தைப் பெற இந்த சனங்கள் உன்னைப் பலவிதமாய்ப் போற்றினாலும் எங்களுடைய இந்தத் தோத்திரம் உன்னை மேம்படுத்தக் கூறப்படுக.

4. மகவானே! சத்துருக்களை ஜயிப்பவர்களை ஜயிப்பவர்களும், பகைவர்களைப் பயமுறுத்துபவர்களுமான அறிஞர்கள் உன்னுடைய பாலனத்தால் பலவிதத் துன்பங்களைக் கடக்கிறார்கள். எங்களுடைய பாலனத்துக்குப் பலவித உணவுகளை ஏந்திக் கொண்டு என்னிடம் வா.

5. வச்சிராயுதனே! நான் உன்னைப் பெரிய விலைக்கோ, ஆயிரத்துக்கோ அல்லது பதினாயிரத்துக்கோ விற்கப்போவதில்லை. வச்சிரமேந்துபவனே! மிக்கச் செல்வமுள்ளவனே! நான் நூறுக்கும் உன்னை விற்கப் போவதில்லை. 5979



6. இந்திரனே! நீ என் தந்தையை விட, அன்பில்லாத சகோதரனை விட மிக்கப் பெரியவன். மனைகளை அளிப்பவனே! நீ என்னுடைய அன்னைக்குச் சமமாயிருக்கிறாய். ஏனெனில் நீயும் என்னுடைய தாயும் என்னைச் செல்வத்துக்கும் சிறப்புக்கும் சிறப்பிக்கிறீர்கள்.

7. நீ எங்கு சென்றாய்? இப்பொழுது எங்கு இருக்கிறாய்? வழிபடும் பல சனங்களின் நடுவே உன் மனம் இயங்குகிறது. போரை விரும்புபவனும், போரை செய்பவனுமான புரந்தரனே! இங்கு வா. நாயகர்கள் உன்னைப் பாடுகிறார்கள்.

8. வழிபடுபவனுடைய பகைவர்களின் புரங்களை உடைக்கும் இந்திரனுக்குக் காயத்ரஸாமனைப் பாருங்கள். அதனால் வச்சிராயுதன் ஊக்கமடைந்து, கண்வப் புதல்வர்களுடைய யக்ஞத்திலே வந்து அமர்ந்து சத்துருக்களின் புரங்களை அழிப்பானாக.

9. உன்னுடைய வலியவையும், வேகமுள்ளவையும், பத்து யோசனைகளும், நூறு யோசனைகளும், ஆறு யோசனைகளும் செல்பவையுமான குதிரைகளிலே சீக்கிரம் வா.

10. நான் இன்று பாலையளிப்பதும், புகழுக்குரிய வேகத்தோடு சுகமாய்ப் பாலையளிப்பதுமான பசுவைப் போலுள்ள இந்திரனை அல்லது வேறு வடிவத்துடன் பரந்து பெய்வதும், விரும்பத் தகுந்ததுமான மழையைப் போலுள்ள இந்திரனை அழைக்கிறேன். 5984

11. சூரியன் ஏதசனைத் துன்புறுத்தியபோது சதக்கிரது, அவனைப் பாலிக்க அர்ஜுனியின் புதல்வனான குத்ஸனோடு காற்றைப் போல் வேகமாயுள்ள பறக்கும் குதிரைகளிலே சென்றான். பிறகு அவன் இந்திரனால் வெல்லப்படாத கந்தர்வனிடம்—சூரியனிடம்—கூட்டமாய்ச் சென்றான்—சூரியனோடு போர் புரியச் சென்றான்.

12. எவன் குணப்படுத்தும் மருந்துகள் இல்லாமல் கழுத்துக்களிலிருந்து இரத்தம் வருவதற்குள் துணிக்கப்பட்ட

அங்கங்களை மீண்டும் சேர்க்கிறானோ அந்தப் புருவசுவும், மகவானுமான இந்திரன், தனிப்பட்டிருந்த அங்கங்களை மீண்டும் சேர்க்கிறான்.

13. நாங்கள் உன்னால் நீசர்களைப்போல் ஆகாமலிருப்போமாக; துன்பமணுகாமலிருப்போமாக. நாங்கள் கிளைகளில்லாத மரங்களைப் போல் விளங்காமலிருப்போமாக. வச்சிர மேந்துபவனே ! பற்பப்படர்ந்தவர்களாயுள்ள நாங்கள் உன்னைப் போற்றுகிறோம்.

14. விருத்திரனைக் கொல்பவனே ! ஆத்திரமும், ஆயத்தமுமில்லாத நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். சூரனே ! நாங்கள் மகத்தான அவிச் செல்வத்தோடு எங்கள் துதியால் உன்னை ஒரு முறையாவது போற்றுவோமாக.

15. அவன் எங்கள் துதியைச் செவியுற்றவுடன், பவித்திரத்தின் வழியாய்ப் பாய்பவையும், துரிதமாய்ச் சொட்டுபவையும், தூய்மைப்பட்ட சலங்களோடு சேர்ந்தவையுமான ஸோமங்கள் இந்திரனை மதப்படுத்துக. 5989

16. உன்னைச் சேவிக்கும் நண்பனுடைய சங்கத் துதிக்கு இன்று துரிதமாய் வா. அவிச்செல்வர்களின் உபஸ்துதி உன்னிடம் சேர்க. நான் இப்பொழுது உத்தமத் துதியைக் கூற விரும்புகிறேன்.

17. கற்களால் ஸோமரஸத்தைப் பிழியுங்கள். அதை சலத்தால் சுத்தப்படுத்துங்கள். அப்படிச் செய்வதால் மழையின் தலைவர்களான மருத்துக்கள், வானை, மேகங்களைப் பசுவின் சர்மத்தினுடையால்போல் உடுத்தி நதிகளுக்காக சலத்தைக் கறக்கிறார்கள்.

18. நீ புவியிலிருந்தோ, மகத்தான ஒளி உலகிலிருந்தோ என்னுடைய இந்தப் பரவலான துதியால் போற்றப்படவும். சதக்கிரதுவே! என்னுடைய சனங்களைத் திருப்தி செய்யவும்.

19. மிக்க மதமளிப்பதும், மிக்க மேன்மையாக இருப்பதுமான ஸோமத்தை இந்திரனுக்காகப் பொழியுங்கள்.



ஏனெனில் உணவை விரும்புபவனைப் பாலித்து, ஒவ்வொரு செயலாலும் அவனைப் போற்றுகிறான்.

20. நான் யக்ஞங்களிலே ஸோம தாரையோடு உன்னை வேண்டுங்கால் பயங்கர சிங்கத்தைப் போலுள்ள உன்னைக் கோபமூட்டாமலிருப்பேனாக. இந்த உலகத்திலே தலைவனிடம் யாசிக்காதவன் எவன் இருக்கிறான் ? 5994

21. இந்திரன் உக்கிர பலத்தோடு ஊக்கப்படுத்தும் துதியோடு அளிக்கப்பட்ட மதமளிப்பதும், உக்கிரமாயிருப்பதுமான இரஸத்தைப் பருகுவானாக. அவன் தன்னுடைய மதத்திலே பகைவர்களின் கர்வத்தை அடக்குபவனும், எல்லாச் சத்துருக்களையுமழிப்பவனுமான ஆண் மகனை அளிக்கிறான்.

22. நோக்கங்களை எல்லாம் நிறைவேற்றுபவனும், பகைவர்களால் போற்றப்படுபவனும், தேவனுமான இந்திரன், பொழிபவனுக்கும், போற்றுபவனுக்கும், அவியளிக்கும் மனிதனுக்கும் பரந்த செல்வங்களை அளிக்கிறான்.

23. இந்திரனே ! இங்கு வா. அற்புத செல்வமான ஸோமத்தால் இன்புறவும். உன்னோடு சேர்ந்து பானஞ் செய்யும் மருத்துக்களோடு உன்னுடைய பரந்துள்ள ஏரியைப்போல் விசாலமாயுள்ள உதரத்தை ஸோமங்களால் நிரப்பிக் கொள்ளவும்.

24. இந்திரனே ! உன்னுடைய தங்கத் தேரிலே இணைக்கப்பட்டவையும், தோத்திரத்தால் பிணைக்கப்பட்டவையும், பிடரிகேசங்களுள்ளவையுமான நூறும் ஆயிரங்களுமான குதிரைகள் உன்னை இங்கு ஸோமத்தைப் பருக ஏந்தி வருக.

25. உன்னுடைய தங்கத் தேரிலே இணைக்கப்பட்டுள்ள மயில்வால்களுள்ளவையும், வெண்முதுகுள்ளவையுமான இரு குதிரைகள், துதியாருகமான இனிய ஸோமத்தைப் பருக உன்னை இங்கே ஏந்தி வருக. 5999

26. போற்றுதற்கருகனான நீ, பொழியப்பட்டதும்,

தூய்மை செய்யப்பட்டதுமான இந்த இரஸத்தை முதற் பருகுபவனுன வாயுவைப்போல் பருகவும். இவ்வுத்தம பானம் உன்னை மதப்படுத்தப் பாய்கிறது.

27. செயல்களால் மகானும், உக்கிரனும் தோன்று பவனும், அழகிய மோவாயுள்ளவனும், ஒருவனுகவே தன் விரதங்களால் பகைவர்களை அழிப்பவனுமான இந்திரன் வருவானுக. அவன் விலகாமலிருப்பானுக. அவன் எங்கள் அழைப்புக்கு வருவானுக. அவன் எங்களைக் கைவிடா மலிருப்பானுக.

28. நீ உன்னுடைய ஆயுதங்களால் சுஷ்ணனுடைய சலய புரத்தைப் பொடிப்படுத்தினுய். சோதியான நீ சுஷ்ணனைப் பின்பற்றினுய். ஆதலால் இந்திரனே! நீ இருவழிகளால் போற்றத்தகுந்தவன்.

29. சூரியோதயத்திலும், பகலிலும், மாலையிலும், என்னுடைய தோத்திரங்கள், என்னுடைய யக்ஞத்துக்குச் செல்வங்களை அளிக்கும் உன்னை எங்கள் முன்னே செலுத்துக.

**பிளாயோகிராஸங்கள் — பிளயோகனுடைய புதல்வனுன ஆஸங்கன்**

30. மேத்யாதியே! என்னைப் போற்றவும். என்னைப் போற்றவும். ஏனெனில் செல்வர்களின் நடுவே நாங்கள் உனக்கு மிக்கத் தாராளமாயளிக்கிரேும். என்னை நீ, வேகத்திலே குதிரையை முந்துபவனுகவும், சன்மார்க்கத் தில் செல்பவனுகவும், கூரிய உத்தம ஆயுதங்களை ஏந்து பவனுகவும் போற்றவும். 6004

31. நான் தேரிலே பழக்கப்பட்ட குதிரைகளைச் சிரத்தையுடன் இணைக்கும்போது என்னைப் போற்றவும். ஏனெனில், யதுவமிசத்தில் வந்தவனும், பசுக்களுள்ளவனு மான நான் விரும்பத்தகுந்த செல்வங்களை அளிப்பதர்க் கருகிறேன்.

32. அவன் எனக்குத் தங்கப் பையோடு செல்வங் களைத் தந்தான் எனக்கூறி என்னைப் போற்றவும். ஆஸங்க னுடைய சப்தித்துச்செல்லும் இத்தேர், பகைவர்களுடைய எல்லாச் செல்வங்களையும் ஜயிக்க.

33. (என்னை இங்ஙனம் கூறி துதிக்கவும்) பிளயோக னுடைய புதல்வனுன ஆஸங்கன் எனக்கு, அக்கினியே! மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாய் பதினுயிரக் கணக்கில் அளித்தான். அவனுல் அளிக்கப்பட்ட வலிய ஒளியுள்ள காளைகள் பத்து மடங்காக அதிகரித்து ஏரியின் நாணல் களைப் போல் வருகின்றன.

**ஆஸங்கனுடைய மனைவி சசுவதி**

34. சசுவதி தன் கணவனுக்கு மீண்டும் ஆண்மைத் தனம் வந்ததைக் கண்டு களிப்போடு கூறினுள். இப் பொழுது நீ பலமுடனிருக்கிருய்; நீ இன்பமாவாய். 6008



## 2. இந்திரன்

### 622. மேத்யாதிதி காண்வன்—ஆங்கிரஸ பிரியமேதன்

1. மனைகளை அளிப்பவனே! உன் வயிறு நிரம்பும் வரை பொழியப்பட்டுள்ள இந்த ஸோமத்தைப் பருகவும். பயமற்ற வனே! நாங்கள் உனக்கு இதை அளிக்கிரேும்.

2. இந்த ஸோமம்—நரர்களால் சுத்தப்பட்டும், கற் களால் பிழியப்பட்டும், கம்பளப் பத்திரத்தால் வடிகட்டப் பட்டும், நதிகளால் நிர்மலமான குதிரையைப்போலும் இருக் கிறது.

3. நாங்கள் இதைப் பாலுடன் கலந்து யவத்தால் கலந்த உணவைப்போல் சுவைப்படுத்திேைம். ஆதலால் இந்திரனே! நான் உன்னை இந்தக் கூட்டு விருந்துக்கு அழைக்கிறேன்.

4 இந்திரன் ஒருவனே தேவர்களின், மனிதர்களின் நடுவே ஸோமத்தைப் பருகும் தனியன். பிழிந்த ரஸத்தைப் பருகும் இவன், எல்லா அவிகளையும் ஏற்றுக் கொள்கிறுன்.

5. நாங்கள் சுத்த ஸோமத்தாலும், கட்டத்தோடு செய்யப்படும் அதன் கலவையாலும், திருப்தி செய்யும் வேறு

அவிகளாலும், திருப்தியாகாதவனும், வியாபகமான நல்ல இருதயமுள்ளவனுமான இந்திரனைப் போற்றுகிறோம். 6013

6. நாங்கள், பாலோடும், தயிரோடும் மற்றவர்களால் வலைகளோடு மானைத் துரத்திச் செல்லும் வேடர்களைப் போல் பின்பற்றப்படுபவனும், தகுதியற்ற துதிகளால் துன் புறுத்தப்படுபவனுமான இந்திரனைப் போற்றுகிறோம்.

7. தேவனான இந்திரனுக்கு அவனுடைய சொந்த இடத்திலே முப்பொழிவுகள் பொழியப்படுக. ஏனெனில் அவன் பொழியப்பட்டுள்ள ஸோமத்தைப் பருகுபவன்.

8. சுத்தப்படுத்தும் மூன்று கலசங்கள் ஸோமரஸத் தைச் சொட்டுகின்றன. மூன்று சருவங்கள் நிரப்பப்பட்டிருக் கின்றன. ஒரே யக்ஞத்துக்கு அனைத்தும் செய்யப்படுகிறது.

9. ஸோமமே! நீ சுத்தமாயிருக்கிறாய். நீ பல பாண்டங் களிலே வைக்கப்பட்டிருக்கிறாய். பகல் யக்ஞத்திலே பாலோ டும், மாலை யக்ஞத்திலே தயிரோடும் கலக்கப்படுகிறாய். நீ தீரனுக்கு மிக்க மதமளிக்கும் பானமாயிருக்கிறாய்.

10. இந்திரனே! இந்தத் தீவிரமாயும், தூய்மையாயு முள்ள ஸோமங்கள் பாலோடு சேர்க்கப்பட உன்னிடம் வேண்டுகின்றன. 6018

11. இந்திரனே! பாலையும் ஸோமத்தையும் சேர்க் கவும். இரசத்தோடு புரோடாசங்களையும் கூட்டவும், உன் னிடம் செல்வமுண்டு என நான் செவியுறுகிறேன்.

12. குடிக்கப்பட்ட ஸோமங்கள் உன் இருதயத்திலே உன்னை மதப்படுத்த சுராபானத்தால் தோன்றும் கெட்ட மதத்தைப்போல் போராடுகின்றன. வழிபடுபவர்கள் பாலால் பசுவின் ஆபீனத்தைப்போல் ஸோமத்தால் நிறைந்துள்ள உன்னைப் போற்றுகிறார்கள்.

13. செல்வமுள்ள உன்னைப் போற்றுபவன் செல்வனா வானாக. குதிரைகளுள்ளவனே! அவன் உன்னைப்போல் செல்வமும், சிறப்புமுள்ளவனை முந்துவானாக.



14. போற்றுபவனின் பகைவனான இந்திரன் கூறப் படும் ஒவ்வொரு துதியையும் பாடப்படும் ஒவ்வொரு பாட் டையும் அறிகிறான்.

15. இந்திரனே! நீ எங்களைத் தாழ்த்தும் சத்துருவுக் கும், அழிப்பவனுக்கும் அதீனப்படுத்தாதே. பெரிய செயல் களை நடத்துபவனான நீ உன்னுடைய செயல்களால் என்னை ஜயிக்கச் சொல்லவும். 6023

16. இந்திரனே! கண்வ வம்சத்தில் வந்தவர்களும் உன்னை விரும்பும் நண்பர்களும், உன்னைத் துதிப்பதே நோக்கமாயுள்ளவர்களுமான நாங்கள், துதிகளோடு உன் னைப் போற்றுகிறோம்.

17. வச்சிரமேந்துபவனே! உனக்கு மிக்கப் புதிய வணக்கத்தையளிக்கும் நான், உன்னைத் தவிர வேறு எவனை யும் துதிக்கவில்லை. செயல்களை நடத்தும் உன்னையே நான் எப்பொழுதும் போற்றுகிறேன்.

18. தேவர்கள் ஸோமம் பொழியும் மனிதனை விரும்பு கிறார்கள். அவர்கள் அவன் தூங்க விருப்பமில்லாமலிருக் கிறார்கள். அதனால், சோம்பலற்ற தேவர்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பெறுகிறார்கள்.

19. உணவுகளோடு எங்களிடம் சீக்கிரம் வா. யுவதி யான மனைவியோடு செல்லும் வயது சென்ற கணவனைப் போல் என்னிடம் கோபமாகாமலிருக்கவும்.

20. இன்று எங்களிடம் வரப்போகும் தடைபடாத இந்திரன் மாலை வரையில் பண்பற்ற மருமகனைப் போல் வர தாமதிக்காமலிருப்பானாக. 6028

21. நாங்கள் தீரனின் மிக்கத் தானமளிக்கும் ஸுமதியையறிகிறோம். இவ்வுலகங்களில் புலனாகும் அவனு டைய இருதயங்களையும் அறிகிறோம்.

22. கண்வ வம்சத்தோடு சேர்ந்துள்ள இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழியுங்கள். சதபாலனங்களை அளிப்பதில் மிக்க வல்லவனான இந்திரனையன்றி போற்றப்பட்ட வேறு எவனையும் நாங்கள் அறியோம்.

23. வழிபடுபவனே! மனிதர்களுக்கு நலஞ் செய்பவனும், மிக்க வலியனும், சூரனுமான இந்திரனுக்கு முதலில் ஸோமத்தையளிக்கவும். அவன் அதைப் பருகுவானாக.

24. வருத்தப்படுத்தாதவர்களுடைய மேன்மைகளை மிக்க நன்கறியும் அவன், துதிப்பவர்களுக்கும், ஏந்துபவர்களுக்கும், பசுக்களோடும் குதிரைகளோடுமுள்ள உணவைத் தருகிறான்.

25. பொழிபவர்களே! மிக்கப் போற்றப்படும் ஸோமத்தை வீரனும், தீரனுமான இந்திரனுக்கு அவன் மதப்பட அளிக்கத் துரிதமாகுங்கள். 6033

26. விருத்திரனைக் கொல்பவனும், ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரன் எங்களிடம் வருவானாக. அவன் எங்களிடமிருந்து தூரத்திலில்லாமலிருப்பானாக. பல பாலனங்களை அளிப்பவனான அவன் எங்கள் சத்துருக்களை விலக்குவானாக.

27. தோத்திரத்தால் இணைக்கப்படுபவையும், இன்புறுத்துபவையுமான குதிரைகள் துதியாருகனும், மொழியால் போற்றப்படுபவனும், நண்பனுமான இந்திரனை இங்கு ஏந்தி வருக.

28. அழகிய மோவாயுள்ள நீ, ரிஷிகளால் போற்றப்படுபவன். மிக்க ஆற்றலுள்ளவன். ஸோமரஸங்கள் மிக்க இனிமையாயிருக்கின்றன. நீ வா. இச் ஸோமரஸங்கள் மிக்க கலக்கப்பட்டிருக்கின்றன. நீ வா. இப்பொழுது வழிபடுபவன், உன்னைச் சங்க விருந்தில் கலந்துகொள்ள அழைக்கிறான்.

29. இந்திரனே! கர்த்தாவான உன்னைப் போற்றி வழிபடுபவர்களும், உன்னை ஏந்தும் மந்திரங்களும், மகத்தான செல்வங்களையும், ஆற்றலையும் நாடுகிறார்கள்—நாடுகின்றன.

30. துதிகளால் உயர்த்தப்படுபவனே! உனக்குக் கூறப்படும் துதிகளும், தோத்திரங்களும் ஒருமிக்கச் சேர்ந்து உன்னுடைய ஆற்றல்களை ஏந்துகின்றன. 6038



31. தலைவனும், வச்சிரமேந்துபவனும், பல செயல்களை நிறைவேற்றுபவனுமான இந்த இந்திரன் எப்பொழுதும் ஜயிக்கப்படாதவன். அவன் துதிப்பவர்களுக்கு உணவை அளிக்கிறான்.

32. தனது வலது கையால் விருத்திரனைக் கொல்பவனும், பல இடங்களில் பலரால் அழைக்கப்படுபவனும், மகத்தான செயல்களால் மகானாயிருக்கும் அவன் எங்களைப் பாலிப்பானாக.

33. எவன் அதீனத்திலே எல்லா சனங்களும் இருக்கிறார்களோ, சத்துருக்களை ஜயிக்கும் ஆற்றல்கள் எவனிடம் இருக்கின்றனவோ அவனே செல்வனான வழிபடுபவனை இன்புறுத்துகிறான்.

34. இந்த இந்திரன் இந்த வீரச் செயல்களையெல்லாம் நடத்தினான். இதனால் மிக்கப் புகழுள்ளவனானான். அவன் வழிபடும் செல்வர்களுக்கு உணவை அளிக்கிறான்.

35. பசுக்களை விரும்பும் எந்த வழிபடுபவன் பாலகனான இந்திரனால் அறிவிலியான பகைவனிடமிருந்து பாலிக்கப்படுகிறானோ, அவன் அரசனாகி செல்வமுள்ளவனாகிறான். 6043

36. ஈகையனும், அறிஞனும், குதிரைகளில் ஏந்தப்படுபவனும், சூரனும், விருத்திரனைக் கொல்பவனும், மருத்துக்களால் தரிக்கப்படுபவனும், சத்தியனுமான இந்திரன் யக்ஞம் நடத்துபவனைப் பாலிப்பவனாயிருக்கிறான்.

37. பிரியமேதர்களே! ஸோமபான மதத்தால் சத்தியமாய் விளங்குபவனான அந்த இந்திரனை அவனிடம் நாட்டமுள்ள மனத்தோடு போற்றுங்கள்.

38. கண்வப் புதல்வர்களே! பாட்டுக்குரிய புகழுள்ளவனும், நலத்தைப் பாலிப்பவனும், அவியை விரும்புபவனும், பல இடங்களில் இருப்பவனுமான இந்திரனைப் பாடுங்கள்.

39. வழிபடுபவர்களின் நண்பனும், செயல்களை நடத்துபவனும், தெரிந்துகொள்ள வேறு வழியில்லாமலிருந்தால் கால்சுவடுகளால் பசுக்களைத் தேடிக் கண்டுபிடித்து,

அவற்றை அவனையே விரும்பி சேவை செய்த தேவர்களுக்கு மீட்டியவனுமான இந்திரனைப் போற்றுங்கள்.

40. வச்சிராயுதமேந்துபவனே! இங்ஙனம் உன்னைப் போற்றிய கண்வ மேதாதியிடம் நீ ஆட்டு வடிவத்துடன் அணுகிவந்தாய்.

**விபிந்து**

**மேத்யாதிதி காண்வன்**

41. ஈகை மனமுள்ள விபிந்துவே! நீ எனக்கு நாற்பதாயிரங்களை, பிறகு எண்ணுயிரங்களைத் தந்தாய்.

42. நான், சலத்தைச் செழிப்பிப்பவையும், பிராணிகளைப் பிறப்பிப்பவையும், வழிபடுபவனை நலப்படுத்துபவையும், எனக்களிக்கப்பட்ட செல்வத்தைப் பிறப்பித்தவையுமான சோதி புவிகளைப் போற்றுகிறேன். 6050

## 3. இந்திரன்

### 623. மேத்யாதிதி காண்வன்

1. இந்திரனே! பாலுடன் சேர்க்கப்பட்டுள்ள எங்களுடைய இனிய ஸோமரஸத்தைப் பருகவும். திருப்தியாகவும். உன்னை எங்களுடைய பந்துவாக எண்ணிக்கொள்ளவும். உன்னுடைய அனுகூல மனங்கள் எங்களைப் பாலிக்க.

2. நாங்கள் உன்னுடைய ஸுமதியைப் பெற நாங்கள் அவிகளை அளிப்பவர்களாவோமாக. பகைவனுடைய எதிர்ப்புக்கு எங்களைப் புலப்படுத்தாதே. விரும்பப்படும் அற்புத பாலனங்களோடு எங்களைப் பாலிக்கவும். எங்களை எப்பொழுதும் சுகப்படுத்தவும்.

3. புருவசுவே! என்னுடைய இந்தத் துதிகள் உன்னைப் போற்றுக. அக்கினியைப் போல் பிரகாசிப்பவர்களும், சுத்தர்களுமான அறிஞர்கள் உன்னை ஸ்தோமங்களோடு போற்றுகிருர்கள்.

4. ஆயிரம் ரிஷிகளின் துதிகளால் வலிமையடைந்த இந்திரன் கடலைப்போல் பரந்தவனுயிருக்கிருன். அவனுடைய சத்தியமான மகிமையும், ஆற்றலும், யக்ஞங்களிலும், விப்பிர ராஜ்யத்திலும் போற்றப்படுகின்றன.



5. நாங்கள் தேவர்களை யஜிக்கவும், யக்ஞம் நடைபெறுங்காலும் இந்திரனை அழைக்கிறோம். அவனைத் துதித்து, யக்ஞம் முடியுங்கால் நாங்கள் இந்திரனை அழைக்கிறோம். நாங்கள் செல்வத்தைச் சம்பாதிக்கவும் அவனை அழைக்கிறோம். 6055

6. இந்திரன் தன் பலத்தின் மகத்வத்தால் சோதியையும் புவியையும் பரத்தினன். இந்திரன் சூரியனை ஒளிப்படுத்தினன். இந்திரனிலே எல்லாப் புவனங்களும் பற்றப்பட்டிருக்கின்றன. வடிகட்டப்படும் ஸோம பிந்துக்கள் இந்திரனுக்குப் பாய்கின்றன.

7. இந்திரனே! நீயே முதன்மையாக ஸோமத்தைப் பருக மனிதர்கள் பாக்களோடு உன்னைப் போற்றுகிருர்கள் இணைந்துள்ள ரிபுக்களும் உன்னைத் துதிப்பதில் சேர்கிருர்கள். உருத்திரர்கள் பழையவனைப் போற்றுகிருர்கள்.

8. இந்திரனுடைய தேகத்திலே ஸோமரஸத்தின் மதம் பரவுங்கால் அவன் வழிபடுபவனுடைய வீரியத்தையும், வலிமையையும் விருத்தி செய்கிருன். மனிதர்கள் பூர்வத்தில் செய்தது போல் இன்றும் அவனுடைய மகிமையைக் கிரமமாய்ப் போற்றுகிருர்கள்.

9. நீ எந்த சுவீரியத்தால் யக்ஞம் செய்யாதவர்களிடமிருந்து எடுத்த செல்வத்தைப் பிருகுவுக்களித்தாயோ, எந்த உணவால் பிரஸ்கண்வனைப் பாலித்தாயோ அந்த சுவீரியத்தையும், உணவையும் இந்திரனே! உன்னிடம் நான் மற்றவர்களுக்கு முன்னல் பெற வேண்டுகிறேன்.

10. எந்த ஆற்றலால் நீ மகத்தான சலங்களைக் கடலுக்குச் செலுத்தினையோ அத்தகைய உன்னுடைய ஆற்றல் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதாயிருக்கிறது. உன்னுடைய அந்த மகிமையை எவனும் தடுக்க இயலாது. அந்த மகிமையை மேதினி பின்பற்றுகிருள். 6060

11. இந்திரனே! நான் உன்னிடத்தில் நாடும் ஆற்றலோடான செல்வத்தை எங்களுக்களிக்கவும். நீ செல்வத்தை உனக்கு அவியை யளித்து உன்னைத் திருப்தி

செய்ய விரும்புபவனுக்கு முதலில் அளிக்கவும். பழையவனு யுள்ள உன்னைப் போற்றுபவனுக்குச் செல்வத்தை அளிக் கவும்.

12. இந்திரனே! நீ புரூரவனுடைய மகனை எந்த செல்வத்தால் பாலித்தாயோ அந்த செல்வத்தை உனக்கு யக்ஞங்களை நடத்தும் எங்களுடைய இந்தக் கர்த்தாவுக்கு அளிக்கவும். இந்திரனே! நீ எந்த செல்வத்தால் உருச்மனையும், சியாவகனையும், கிருபனையும் பாலித்தாயோ அந்த செல்வத்தை சுவர்க்கத்துக்குச் செல்லவிரும்பும் மனிதனுக்கு அளிக்கவும்.

13. சதா எழும் துதிகளைப் பிரேரிக்கும் எந்த சீவ னுள்ள மனிதன் இப்பொழுது இந்திரனைப் போற்றுவான்? பூர்வத்திலே இந்திரனைப் போற்றியவர்களிலே எவர்களும் அவனுடைய மகிமையை அறிய எட்டவில்லை.

14. உன்னைத் தேவதையாகப் போற்றும் எவர் உனக்கு யக்ஞத்தைச் செய்ய விரும்பினார்கள்? மகவானான இந்திரனே! எந்த ரிஷி, எந்த விப்பிரன, அவனுடைய துதிகளை உன்னிடம் சேர்ப்பிக்கிறான்? நீ எப்பொழுது உன்னைத் துதிப்பவனுடைய, பொழிபவனுடைய அழைப் புக்கு வந்தாய்?

15. இந்த மிக்க இனிய பாக்கள் இந்த மொழிகளான ஸ்தோமங்கள், உணவை ஈட்டுபவையும், அழியாத பாலனங்கள் இருப்பவையும், செல்வம் ஏந்துபவையும், ஜயிப்பவையுமான தேர்களைப்போல் உனக்கு எழு கின்றன. 6065

16. பிருகுக்கள் கண்வர்களைப் போலும், சூரியனைப் போலும், தியானஞ் செய்த அனைத்தையும் அடைந் தார்கள். பிரியமேத வம்சத்தில் வந்த மக்கட்கள் துதி களால் இந்திரனைத் துதித்து அவனைப் போற்றுகிறார்கள்.

17. விருத்திரர்களை அடியோடழிப்பவனே! உன்னு டைய குதிரைகளை இணைக்கவும். உக்கிரனான மகவானே!



உன்னுடைய ஆட்களான மருத்துக்களோடு தூரத்தி லிருந்து ஸோமத்தைப் பருக வரவும்.

18. இந்த யக்ஞங்களை நடத்தும் அறிஞர்கள் நீ யாகத்தை ஏற்றுக்கொள்ள உன்னைத் துதியோடு மீண்டும் மீண்டும் போற்றுகிறார்கள். மகவானான இந்திரனே! துதியாருகனான நீ, நான் விரும்புவதைச் செவியுற விரும்பு பவனைப் போல் எங்களுடைய அழைப்புக்குச் செவி கொடுக்கவும்.

19. நீ உன்னுடைய கொடிய படைகளால் விருத் திரனை அழித்தாய். நீ மாயாவிகளான அற்புதனையும், மிருகயனையும் கொன்றாய். மலையிலிருந்து பசுக்களை மீட்டாய்.

20. இந்திரனே! நீ மகத்தான அஹியை வானிலி ருந்து விலக்கியபோது அனல்கள் எழுந்தன. சூரியன் பிரகாசித்தான். இந்திரனால் பற்றப்படும் ஸோமரஸம் பாய்ந்தது. நீயும் உன்னுடைய ஆண்மையைப் புலப் படுத்தினாய். 6070

**கௌரயாண பாகஸ்தாமன்**

21. இந்திரனும் மருத்துக்களும் எனக்களித்த செல்வத் தைப் போல் குராயணனுடைய புதல்வனான பாகஸ்தாமன் எனக்குச் செல்வத்தைத் தந்தான். அது வானிலே துரித சலனமுள்ள சூரியனைப் போல் சுயமாகவே அனைத்திலும் சிரேஷ்டமாயிருந்தது.

22. பாகஸ்தாமன் எனக்குச் சுமை தாங்கும் சிகப்புக் காளையை—குதிரையை—செல்வங்களைச் சம்பாதிக்கத் தந்தான்.

23. அவன் எனக்குத் தந்த பிராணி புஞ்யுவை மனைக்கு ஏந்திச் சென்ற குதிரைகளைப் போல் ஆற்றலுள்ளதாயிருந் தது. அது பத்து பிராணிகளின் சுமைகளைச் சுமக்கும் சக் தியையடைந்திருந்தது.

24. பாகஸ்தாமன்—தந்தையைப் போல் தானமளிப்ப தால் அவனுடைய சொந்த மகனாயிருக்கிறான். மனைகளை

அளிக்கிறான். அஞ்சனங்களைப் போல் ஆற்றலை ஏந்து கிறாள். நான் பகைவர்களையழிப்பவனும், சத்துருக்களைச் சிதைப்பவனும், சிகப்புக் குதிரையைத் தந்தவனுமான அந்த பாகஸ்தாமனைப் போற்றுகிறேன். 6074

## 4. இந்திரன்

### 624. தேவாதிதி கண்வன்

1. இந்திரனே! கிழக்கிலே, மேற்கிலே, வடக்கிலே, தெற்கிலே சனங்களால் அழைக்கப்படுபவனும், உயர்ந்தவனுமான அநுவின் மகனுக்காகப் பிரேரிக்கப்படுகிறாய். பகைவர்களை அழிப்பவனான நீ, துர்வசனாலும் அழைக்கப்படுகிறாய்.

2. இந்திரனே! நீ உருமனுடைய, உருஷ்மனுடைய, சியாவகனுடைய, கிருபனுடைய சங்கத்தில் மதப்படுத்தப்படுகிறாய். அவிகளை ஏந்தும் கண்வர்களும், தங்கள் துதிகளால் உன்னைக் கவர்கிறார்கள். ஆதலால் நீ இங்கு வா.

3. பாலைவனத்திலே சலம் நிறைந்த தடாகத்துக்குத் துரிதமாகும் தாகமெடுத்த கௌரத்தைப்போல் இந்திரனே! நம்முடைய பந்துத்தன்மையாயிருப்பதால் நீ சீக்கிரம் வா. கண்வர்களோடு சேர்ந்து நீ நன்கு பருகவும்.

4. மகவானான இந்திரனே! பொழிபவனுக்கு நீ செல்வத்தையளிக்க ஸோமத்துளிகள் உன்னை இன்புறுத்துக. உனக்கு ஸோமம் அளிக்கப்படாமலிருந்ததால் சிருவத்தில் ஊற்றப்பட்டிருந்த அதை, அந்தரங்கமாய், பலவந்தமாய்ப் பறித்துப் பருகினாய். அதனால் நீ மிக்க மேன்மையான பலத்தை ஏந்தினாய்.

5. அவன் தன் பலத்தால் பகைவர்களின் பலத்தை ஜயித்தான். அவன் தன் ஆற்றலால் பகைவர்களின் கோபத்தை அழித்தான். மகானான இந்திரனே! உன்னால் எதிர்ப் படைகள் எல்லாம் மரங்களைப் போல் நிறுத்தப்பட்டன. 6079



6. உனக்குத் துதியைச் செய்து உன்னை அடைபவன் ஆயிரம் போர் வீரர்களோடு சேர்கிறான். உனக்கு வணக்கத்தோடு அவிகளை அளிப்பவன் பகைவர்களை விலக்கும் வீரப் புதல்வனை அடைகிறான்.

7. உக்கிரனான உன்னுடைய நட்பிலிருக்கும் நாங்கள் அச்சமின்றியிருப்போமாக. துன்புறுத்தப்படாமலிருப்போமாக. பொழிபவனான உன்னுடைய செயல்கள் மகத்தாயும், போற்றத் தகுந்தவையாயுமிருக்கின்றன. நாங்கள் துர்வசனையும், யதுவையும் காண்போமாக.

8. பொழிபவன் தன் இடது இடுப்பால் உலகத்தைப் போர்த்துகிறான். தானம் அவனைக் கோபப்படுத்தாது. எந்தக் கண்டனமும் அவனைப் பங்கப்படுத்தாது. இன்புறுத்தும் ஸோமரஸங்கள் தேனீயின் இனிய தேனோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இங்கு சீக்கிரம் வா. துரிதமாகவும்; பருகவும்.

9. இந்திரனே! உன்னுடைய நண்பன் குதிரைகளும், தேர்களும், பசுக்களுமுள்ளவனாயிருக்கிறான். நல்ல அழகுள்ளவனாய் விளங்குகிறான். அவன் உணவோடுள்ள செல்வங்களை அடைகிறான். அவன் அனைவரையும் இன்புறுத்தி சபைக்குச் செல்லுகிறான்.

10. நீ தாகமடைந்த மானைப் போல் ஸோமமிருக்கும் இடத்துக்கு வரவும். விருப்பம் போல் இரஸத்தைப் பருகவும். மகவானே! அதனால் நீ தினந்தோறும் மேகங்களைக் கீழே செலுத்தி மிக்க உக்கிரமான பலத்தை ஏந்துகிறாய். 6084

11. அத்வர்யுவே! நீ இந்திரனுக்கு ஸோமத்தைத் துரிதமாய் ஊற்றவும். ஏனெனில் அவன் தாகத்தோடிருக்கிறான். அவன் தன் வலிய குதிரைகளை இணைத்தான். விருத்திரனைக் கொல்பவன் வந்திருக்கிறான்.

12. எந்த மனிதன் உனக்கு அவியையளிக்கிறானோ எவனுடைய ஸோமத்தால் நீ திருப்தியாகிறாயோ அவன்

தானாகவே அனைத்தையுமளிக்கிறான். உனக்குத் தகுதியான உணவு தயாராயிருக்கிறது. அதைப் பருக துரிதமாக வா.

13. அத்வர்யுக்களே! தேரிலே இருக்கும் இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழியுங்கள். பீடங்களிலே வைக்கப்பட்டிருக்கும் கற்கள் அளிப்பவனுடைய யக்ஞத்துக்கு ஸோமத்தைப் பொழிபவையாய்ப் புலனாகின்றன.

14. அவனுடைய வானிலே அடிக்கடி செல்லும் வலிய குதிரைகள் எங்கள் யக்ஞங்களுக்கு இந்திரனை ஏற்றி வருக. யக்ஞத்தால் புகழ்பெற்ற குதிரைகள் உன்னை எங்களுடைய நித்திய யக்ஞங்களுக்கு எங்கள் முன்னே ஏந்தி வருக.

### பூஷா

15. நாங்கள் புருவசுவான பூஷாவை—இந்திரனை—நட்புக்காக நாடுகிறோம். சக்கரனே! புருஹூதனே! விடுவிப்பவனே! எங்கள் அறிவால் ஜயத்தையும் செல்வத்தையுமடைய எங்களைத் திறப்படுத்தவும். 6089

16. நாவிதனுடைய கைகளிலிருக்கும் க்ஷவரக் கத்தியைப் போல் எங்களைக் கூர்மைப்படுத்தவும். விடுவிப்பவனே! எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும். உன்னால் மானிடனுக்கு அளிக்கப்படும் பசுக்களின் செல்வம் உன்னிடமிருந்து சுலபமாய் எங்களால் பெறப்படுகிறது.

17. பூஷாவே! நான் உன்னைப் போற்ற விரும்புகிறேன். பிரகாசிப்பவனே! நான் உன்னைப் புகழ விரும்புகிறேன். வேறு எவனுக்கும் நான் சுகப்படுத்தாத துதியைக் கூற விரும்பவில்லை. செல்வமளிப்பவனே! உன்னைத் துதிப்பவனுக்கும், போற்றுபவனுக்கும், பாடுபவனுக்கும் செல்வங்களை அளிக்கவும்.

18. பிரகாசமுள்ள பூஷாவே! சில சமயங்களிலே என்னுடைய பசுக்கள் மேயச் செல்லுகின்றன. அமுதனே! அப்பசுச் செல்வம் எங்களுக்கு நிலையாயிருக்கவும். பூஷாவே! நீ என்னுடைய பாலகனாயிருப்பதால் எங்களுக்குச் சுகத்தை அளிக்கவும். உணவை யளிப்பதில் தாராளமாயிருக்கவும்.



### குருங்களின் தானமகிமை

19. நாங்கள் புகழுள்ளவனும், செல்வனும், அரசனுமான குருங்களின் யக்ஞங்களிலே மனிதர்களின் நடுவே எங்களுக்கு அளிக்கப்பட்ட தானமான நூறு குதிரைகளின் நிலையான செல்வத்தை அனைவருக்கும் புலப்படுத்துகிறோம்.

20. வலியரான கண்வப்புதல்வனுடைய புதல்வனாலும், புகழுள்ள பிரியமேதர்களுடைய தோத்திரங்களாலும், உரியவையான அறுபதினாயிரம் சுத்த பசுக்களை, பிறகு ரிஷி தேவாதிதியான நான், அவ்வனைத்தையும் பெற்றேன்.

21. நான் இந்தத் தானத்தைப் பெற்றவுடன் மரங்கள் கூறின: உத்தம குதிரைகளையும், உத்தம பசுக்களையும் பெற்ற இந்த ரிஷிகளைப் பாருங்கள். 6095

## 5. அசுவினிகள்

### 625. பிரம்மாதிதி—கண்வ வம்சம்

1. பிரகாசிக்கும் உஷை தூரத்திலிருந்தே இங்கு முன்னேறி எல்லாப் பொருள்களையும் வெண்மையாகச் செய்யுங்கால் அவள் ஒளியைப் பலவிதமாய்ப் பரத்துகிறாள்.

2. அசுவினிகளே! அழகுள்ளவர்களான நீங்கள் மனத்தால் இணையும் உங்களுடைய மகத்தான தேரோடு தலைவர்களைப்போல் உஷையைப் பின்பற்றுங்கள்.

3. மிகுந்த செல்வமுள்ளவர்களே! உங்களால் எங்கள் தோத்திரங்கள் கேட்கப்பட்டன. நான் தூதனைப்போல் வழிபடுபவனுடைய மொழிகளை உங்களுக்கு ஏந்தி வருகிறேன்.

4. கண்வர்களான நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காகப் பலருக்கு அன்பர்களும், பலரை இன்புறுத்துபவர்களும், மிகுந்த செல்வமுள்ளவர்களுமான அசுவினிகளைப் போற்றுகிறோம்.

5. நாங்கள் மிக்கத் துதியாருகர்களும், ஆற்றலைத் தருபவர்களும், உணவை நல்குபவர்களும், செல்வங்களின்

தலைவர்களும், அவியளிப்பவனுடைய மனைக்குச் செல்பவர்களுமான அசுவினிகளைப் போற்றுகிறோம். 6100

6. அவியை அளிக்கும் உத்தம தேவனுக்கு அவனுடைய தவருத மேய்த்தரையை நெய்யால், சலத்தால் தெளியுங்கள். யக்ஞத்துக்கு அதைச் செல்வப்படுத்துங்கள்.

7. அசுவினிகளே! நீங்கள் எங்களுடைய ஸ்தோமத்துக்கு உங்களுடைய பருந்துகளைப்போலுள்ள குதிரைகளிலே வாருங்கள்.

8. நீங்கள் எந்தக் குதிரைகளால் மூன்று பகல்களிலும், மூன்று இரவுகளிலும் தூரத்திலிருந்தே ஒளிமண்டலங்களையெல்லாம் கடந்து செல்லுகிறீர்களோ அந்தக் குதிரைகளிலே வாருங்கள்.

9. தினங்களைப் புலப்படுத்துபவர்களே! எங்களுக்குப் பசுக்களோடு உணவையும், செல்வதானங்களையுமளியுங்கள். எங்கள் பசுக்கள் திருடப்படாமலிருக்க வழிகளை அடைத்து விடுங்கள்.

10. அசுவினிகளே! எங்களுக்குப் பசுக்களும், வீரப் புதல்வர்களும், தேர்களும், குதிரைகளும், உணவும், நிறைந்த செல்வங்களும் ஏந்தி வாருங்கள். 6105

11. சுபபதிகளே! அழகுள்ளவர்களே! அசுவினிகளே! செழிப்பவர்களே! பொன் தேரிலே ஏறிவந்து இனிய ஸோமத்தைப் பருகுங்கள்.

12. யக்ஞச்செல்வர்களான நீங்கள், அவிச்செல்வர்களான எங்களுக்கு, பரந்திருப்பதும், தாக்கப்படுவதற்குள்ளதுமான மனையையளியுங்கள்.

13. சனங்களின் நடுவே அறிஞர்களைப் பாலிப்பவர்களான நீங்கள் துரிதமாய் வாருங்கள். வழிபடும் மற்றவர்களிடம் தங்கி தாமதம் செய்யாதீர்கள்.

14. அசுவினிகளே! துதியாருகர்களான நீங்கள், எங்களால் அளிக்கப்பட்ட மதப்படுத்தும், இன்பமாயிருக்கும், இனிமையாயுள்ள இந்த ஸோமரஸத்தைப் பருகுங்கள்.



15. நீங்கள் எங்களுக்கு, பலரால் விரும்பப்படுபவையும், அனைவரையும் தாங்குபவையுமான செல்வங்களை நூற்றுக்கணக்கிலும், ஆயிரக்கணக்கிலும் ஏந்தி வாருங்கள். 6110

16. தலைவர்களே! அறிஞர்கள் பல இடங்களிலே உங்களைப் போற்றுகிறார்கள். உங்களுடைய குதிரைகளிலே எங்களிடம் வாருங்கள்.

17. அசுவினிகளே! நறுக்கிய தருப்பையுள்ளவர்களும், அவிகளை ஏந்துபவர்களும், கடமைகளைப் பூர்த்தி செய்பவர்களுமான மனிதர்கள் உங்களைப்போற்றுகிறார்கள்.

18. அசுவினிகளே! எங்களுடைய இந்தத் தோத்திரம் இன்று உங்களிடம் செலுத்தப்படுக. அது உங்களருகில் மிக்க நெருங்கி இருக்க.

19. அசுவினிகளே! தேரின் அருகே, உங்களுக்குத் தெரியும் வண்ணம் தொங்குவதும், இனிய ஸோமம் நிறைந்திருப்பதுமான சருமத்திலிருந்து ரஸத்தைப் பருகுங்கள்.

20. செல்வபதிகளே! நாங்கள் குதிரைகளிலும், சந்ததிகளிலும், பசுக்களிலும் செழித்தோங்க எங்களுக்கு மிகுந்த உணவைத் தேரிலே ஏந்தி வாருங்கள். 6115

21. தினத்தைப் புலப்படுத்துபவர்களே! நீங்கள் சோதியிலிருந்து வரும் சலங்களை மேகங்களின் கதவால் பொழியுங்கள். அவற்றால் நதிகளை நிரப்புங்கள்.

22. தலைவர்களே! கடலிலே எறியப்பட்ட துக்கிரமகன் உங்களை எப்பொழுது போற்றினான். பிறகு எப்பொழுது உங்களுடைய தேரும், குதிரைகளும் இறங்கின?

23. நாஸத்தியர்களே! நீங்கள் அசுரர்களால் துன்பப்பட்டு, கண்களை இழந்த கண்வனுக்கு அவனுடைய மனையிலே அடிக்கடி உதவி செய்து கண்களைத் தந்தீர்கள்.

24. பொழியும் செல்வர்களே! நான் உங்களை அழைக்கும்போது நீங்கள் உங்களுடைய புதிய மிக்க உத்தம பாலனங்களோடு எங்களிடம் வாருங்கள்.

25. அசுவினிகளே! நீங்கள் கண்வனையும், பிரிய மேதனையும், உபஸ்துதனையும், துதிக்கும் அத்திரியையும் பாலித்ததுபோல் எங்களைப் பாலியுங்கள். 6120

26. நீங்கள் செல்வமளிப்பதற்குரிய அம்சுவையும், பசுக்கள் மீட்பதற்குரிய அகஸ்தியனையும், உணவு தருவதற்குரிய லோபரியையும் பாலித்ததுபோல் எங்களைப் பாலியுங்கள்.

27. வர்ஷிக்கும் செல்வர்களான அசுவினிகளே! உங்களைத் துதிக்கும் நாங்கள், கண்வர்களும் இன்னும் மற்றவர்களும் பெற்ற சுகத்துக்குச் சமமாயும், அல்லது அவர்கள் அடைந்ததற்கு அதிகமாயும் உங்களிடம் வேண்டுகிறோம்.

28. அசுவினிகளே! உங்களுடைய பொன்பீடமுள்ளதும், பொன்கடிவாளங்களோடுள்ளதும், சோதிபற்றுவதுமான தேரிலே ஏறுங்கள்.

29. உங்களுடைய தேரைத் தாங்கும் அடித்தண்டு பொன்மயமானது; அச்சும் பொன்மயமானது; சக்கரங்களும் பொன்மயமானவை.

30. செல்வபதிகளே! எங்களிடம் வாருங்கள். தூரத்திலிருந்து என்னுடைய இந்தத் துதிக்கு வாருங்கள். 6125

31 அமுதர்களான அசுவினிகளே! தாஸர்களின் புரங்களை அழிக்கும் நீங்கள், தூரத்திலிருந்து உணவை எங்களுக்கு ஏந்தி வாருங்கள்.

32. அசுவினிகளே! சத்தியத்தன்மையுள்ளவர்களும், பலரை இன்புறுத்துபவர்களுமான நீங்கள் உணவோடும், புகழோடும் செல்வங்களோடும் எங்களிடம் வாருங்கள்.

33. உங்களுடைய பறவைகளைப்போல் பறப்பவையும், துரிதமுள்ளவையும், அழகுள்ளவையுமான குதிரைகள் யக்ஞத்தைச் செய்பவனுடைய முகப்பிலே ஏந்தி வருக.

34. உங்களுடைய உணவு ஏந்தப்பட்டதும், போற்றப்படுவதுமான தேரை எந்தப் பகைவனும் தடுக்க இயலாது.



35. சத்தியத்தின் தலைவர்களே! மனோவேகமுள்ள நீங்கள் துரித கால்களுள்ள குதிரைகளால் இழுக்கப்படும் பொன் தேரிலே வாருங்கள். 6130

36. வர்ஷிக்கும் செல்வர்களே! விழித்திருப்பதும், விரும்பத் தகுந்ததுமான ஸோமத்தை உருசியுங்கள். எங்களுக்கு உணவோடு செல்வங்களைச் சேருங்கள்.

கசு

37. அசுவினிகளே! சேதியின் புதல்வனான கசு எனக்கு எங்ஙனம் நூறு ஒட்டகங்களையும், பதினாயிரம் பசுக்களையும் அடைந்துள்ள புதிய தானங்களை அளித்தான் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

38. சேதியின் புதல்வன் தங்கம்போல் துலங்கும் பத்து அரசர்களை எனக்குப் பணி செய்யத்தந்தான். ஏனெனில் எல்லா சனங்களும் அவனுடைய கால்களின் கீழே அதீனத்திலே இருந்தார்கள். அவனைச் சூழ்ந்திருந்தவர்கள் சருமக் கவசங்களை அணிந்திருந்தார்கள்.

39. சேதிகள் செல்லும் வழியிலே செல்லும் ஆற்றல் வேறு எவனுக்கும் இல்லை. அவனைவிட மிக்கத் தாராளமாயளிக்கும் அறிஞனான மனிதனும் வேறு இல்லை. 6134

## 6. இந்திரன்

### 626. வத்ஸ காண்வன்

1. மழை தரும் பர்ஜன்யனைப்போல் மகானாயிருக்கும் இந்திரன், வத்ஸனுடைய தோத்திரங்களால் செழிக்கிறான்.

2. வானை நிரப்பும் குதிரைகள் ருதத்தின் புதல்வனான இந்திரனை ஏந்திச் செல்லுங்கால் விப்பிரர்கள் ருதத்தின் தோத்திரங்களால் அவனைப் போற்றுகிறார்கள்.

3. கண்வர்கள் இந்திரனை யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவனாகச் செய்தபோது அவர்கள் இனி ஆயுதங்களுக்கு அவசியமில்லை எனக் கூறினார்கள்.

4. எல்லா மனிதர்களும் இந்திரனுடைய கோபத்துக்கு, கடலுக்கு இறங்கும் நதிகளைப்போல் தாழ்ந்து வணங்குகிறார்கள்.

5. இந்திரன் சோதியையும், புவியையும் சருமத்தைச் சுருட்டி விரிப்பவனைப்போல் சுருட்டிப் பரத்துகிறான். அப்பொழுது அவனுடைய ஆற்றல் புலனாகிறது. 6139

6. அவன் தன் வலிய நூறு கூர்களுள்ள வச்சிராயுதத்தால் கலக்கமளித்த விருத்திரனுடைய தலையைக்கொய்தான்.

7. நாங்கள் வழிபடுபவர்களின் முகப்பிலே, எங்களுடைய அக்கினியின் சுவாலைகளைப்போல் துலங்கும் துதிகளை அடிக்கடி கூறுகிறோம்.

8. அந்தரங்கமாய்க் கூறப்படும் தோத்திரங்கள் தாமாகவே இந்திரனை அணுகியவுடன் துலங்குகின்றன. கண்வர்கள் அவற்றை ஸோமதாரையோடு சேர்க்கிறார்கள்.

9. இந்திரனே! பசுக்களும், புரவிகளும், உணவுகளுமுள்ள செல்வத்தை மற்றவர்கள் அறிவதற்கு முன்னே நாங்கள் அடைவோமாக.

10. நான் ருதபாலகனான இந்திரனுடைய அறிவைக் கிரகித்திருக்கிறேன். நான் சூரியனைப்போல் பிறந்திருக்கிறேன். 6144

11. நான் என்னுடைய மொழிகளை, கண்வனைப்போல் பழைய சுருதியோடு சுழிப்படுத்துகிறேன். இந்திரன் அத்துதியால் சத்துருக்களைக் கொல்லும் ஆற்றல் ஏந்துகிறான்.

12. இந்திரனே! உன்னைத் துதிக்காதவர்களின் நடுவிலும், உன்னைப் போற்றும் ரிஷிகளின் நடுவிலும், என்னுடைய துதியால் நன்குபோற்றப்பட்டு நீ மேம்படவும்.

13. அவனுடைய கோபம் விருத்திரனைத் துண்டம் துண்டமாகத் துணித்து இடித்தபோது அவன் சலங்களைக் கடலுக்குச் செலுத்தினான்.

14. நீ ஏந்துவதற்குரிய வச்சிராயுதத்தைக் கொடிய சுஷ்ணன் மீது செலுத்தினாய். உக்கிரனான இந்திரனே! வர்ஷிப்பவன் என உனக்குப் புகழுண்டு.



15. பலத்திலே ஒளி உலகங்களும், வானுலகங்களும், புவியின் உலகங்களும், வச்சிராயுதனான இந்திரனுக்கு நிகரில்லை. 6149

16. இந்திரனே! நீ உன்னுடைய மகத்தான சலதாரைகளைச் சயனித்துத் தடை செய்திருந்த விருத்திரனைப் பாயும் நதிகளின் நடுவே எறிந்தாய்.

17. இந்திரனே! நீ சோதிபுவிகளின் பரந்த, திரண்ட இடங்களைப் பிடித்திருந்த விருத்திரனை இருட்டால் போர்த்தினாய்.

18. உக்கிரனான இந்திரனே! உன்னைப் போற்றும் அங்கிரஸர்களின் நடுவே, பிருகுக்களின் நடுவே என்னுடைய அழைப்புக்கும் செவி கொடுக்கவும்.

19. இந்திரனே! யக்ஞத்தைப் புட்டி செய்பவையும், அழகாயுமுள்ள இந்தப் பசுக்கள் தங்கள் நெய்யையும், இந்தக் கலவையையும் தருகின்றன.

20. இந்திரனே! மிக்க ஈனும் இப்பசுக்கள் உன்னுடைய ஆற்றலின் பொருள்களான புற்களை, தங்கள் வாய்களால் புசித்து, அனைத்தையும் சூரியனைப்போல் கருவைத் தரித்தன. 6154

21. ஆற்றலின் தலைவனே! கண்வர்கள் தோத்திரத்தால் உன்னைப் பலப்படுத்தினார்கள். பொழிந்துள்ள ஸோமரஸங்களும் உன்னை ஊக்கப்படுத்துகின்றன.

22. இந்திரனே! வச்சிராயுதனே! நீ நன்னெறியைப் புலப்படுத்துவதால் உனக்கு உத்தம துதி, மிக்கப் பரந்த யக்ஞத்தைப்போல் அளிக்கப்படுகிறது.

23. நீ பசுக்களோடு மிகுந்த உணவையும், பாலனத்தையும், பிரஜையையும், சுவீரியத்தையும் அளிக்க விரும்பவும்.

24. இந்திரனே! பூர்வத்தில் நாஹுஷப் பிரஜைகளின் நடுவே பிரகாசித்த அந்தத் துரித குதிரைகளின் மந்தை எங்களுக்கு அளிக்கப்படுக.

25 இந்திரனே! அறிஞனே! நீ எங்களைச் சுகப்படுத்த விரும்புங்கால் அருகிலுள்ள மேய்தரைகளிலே பசுக்களைப் பரத்துகிறாய். 6159

26. நீ உன்னுடைய பலத்தைப் புலப்படுத்துங்கால் மானிடர்களை அரசுபுரிபவனாயிருக்கிறாய். நீ பலத்திலே மகானாயிருக்கிறாய், நீ அனைவரையும் முந்துகிறாய்.

27. அவிகளை ஏந்தும் சனங்கள் பரந்து வியாபகமாகும் உன்னைப் பாலனத்துக்காக ஸோமங்களோடு அழைக்கிறார்கள்.

28. விப்பிரன் செயலால் நதிகளின் ஸங்கமத்திலே மலைகளின் இறக்கங்களிலே பிறப்பிக்கப்படுகிறான்.

29. அறிஞனான இந்திரன் வியாபகமாகி இயங்கும் ஒளி உலகத்திலிருந்து அதோ முகமாய் சமுத்திரத்தைப் பார்க்கிறான்.

30. அவன் ஒளி மண்டலத்தின் மீது பிரகாசித்த பிறகு சனங்கள் ரேதஸைப் பொழியும் பழையவனுடைய தினத்தில் தோன்றும் எல்லா சோதியையும் மனிதர்கள் பார்க்கிறார்கள். 6164

31. இந்திரனே! கண்வர்கள் எல்லாம் உன்னுடைய அறிவையும், ஆண்மையையும் மேம்படுத்துகிறார்கள். ஆற்றலுள்ளவனே! அவர்கள் உன்னுடைய வீரியத்தையும் மேம்படுத்துகிறார்கள்.

32. இந்திரனே! என்னுடைய இந்த நல்ல துதியை விரும்பவும். என்னை நன்கு பாலிக்கவும். என் அறிவை ஊக்கப்படுத்தவும்

33. வச்சிரமேந்துபவனே! எங்கள் துதிகளால் மேம்பட்ட உனக்கு அறிஞர்களான நாங்கள் வாழ இந்தத் துதிகளை அளித்தோம்.

34. கண்வர்கள் இந்திரனைப் போற்றுகிறார்கள். தோத்திரம் தானாகவே இந்திரனை இறக்கத்தில் பாயும் சலங்களைப் போல் நாடுகிறது.



35. தோத்திரங்கள் அழியாதவனும், வெல்லப்படாத கோபமுள்ளவனுமான இந்திரனை, கடலை நிரப்பும் நதிகளைப் போல் மேம்படுத்துகின்றன. 6169

36. உன்னுடைய அன்பு மிகுந்த குதிரைகளோடு தூரத்திலிருந்து எங்களிடம் வா. இந்திரனே! இந்த ஸோமத்தைப் பருகவும்.

37. விருத்திரர்களைக் கொல்பவனே! கிள்ளிய தருப்பையைப் பரத்தும் சனங்கள் உணவைப் பெற உன்னை அழைக்கிறார்கள்.

38. சோதியும் புவியும் குதிரையைப் பின்பற்றும் தேரின் சக்கரங்களைப் போல் உன்னைப் பின்பற்றுகின்றன. அறிஞர்களால் பொழியப்படும் ஸோமதாரைகள் உன்னைப் பற்றுகின்றன.

39. இந்திரனே! சர்யணாவதியிலே நடைபெறும் சோதியைப் புலப்படுத்தும் யக்ஞத்திலே நீ இன்பமாகவும். வழிபடுபவனுடைய துதியால் நீ மதப்படவும்.

40. வலிய வச்சிராயுதத்தை ஏந்துபவனும், விருத்திரனைக் கொல்பவனும், ஸோமத்தை மிக்கப் பருகுபவனும் வர்ஷிப்பவனுமான இந்திரன்—வானிலே, இங்கு அருகிலே கர்ச்சிக்கிறான். 6174

41. இந்திரனே! நீ பூர்வத்திலே பிறந்தவன்; நீ ரிஷி; நீ ஏகன்; நீ உன் பலத்தால் அனைவரையும் அரசு புரிகிறாய்; நீ அடிக்கடி செல்வத்தைத் தருகிறாய்.

42. உன்னுடைய நூறு அழகிய அங்கங்களுள்ள குதிரைகள் உன்னை எங்கள் அவிக்கும் ஸோமங்களுக்கும் ஏந்தி வருக.

43. கண்வர்கள் தோத்திரத்தால் நெய்யுடைய, தேனுடைய தாரைகளால் பெருகும் இந்தப் பழைய யக்ஞத்தை வளர்த்தார்கள்.

44. மனிதன் யக்ஞத்திலுள்ள மகத்தான தேவர்களின் நடுவே இந்திரனையே தெரிந்தெடுக்கிறான். செல்வத்தை விரும்புபவன் பாலனத்துக்காக இந்திரனையே போற்றுகிறான்.

45. பலரால் போற்றப்படுபவனே! உன்னுடைய, பிரியமேதர்களால் போற்றப்படும் குதிரைகள் உன்னை எங்கள் முன்னே ஸோமபானத்துக்காக ஏந்தி வருக. 6179

**பரசுவின் மகனான திரிந்திரனின் தானம்**

46. நான் பரசுவின் மகனான திரிந்திரனிடமிருந்து மானிடர்களின் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான செல்வங்களைப் பெற்றுக்கொண்டேன்.

47. இந்த அரசர்கள் ஸாமகானஞ் செய்யும் பஜ்ரனுக்கு முந்நூறு குதிரைகளையும், பதினாயிரம் பசுக்களையும் தந்தார்கள்.

48. மேன்மையான அரசன் புகழால் சோதிக்கு உயர்த்தப்பட்டான். ஏனெனில் அவன் நான்கு தங்கச் சுமைகளை ஏந்தும் ஒட்டகங்களையும், யாதவ சனங்களைத் தாஸர்களாக எனக்களித்தான். 6182

## 7. மருத்துக்கள்

### 627. புனர்வத்ஸ காண்வன்

1. மருத்துக்களே! விப்பிரன் நாள்தோறும் மூன்று யக்ஞங்களிலே உங்களுக்கு உணவையளிக்கும்போது நீங்கள் மலைகளிலே பிரகாசிக்கிறீர்கள்.

2. வலியர்களும், விளங்குபவர்களுமான நீங்கள், உங்கள் தேரை யுக்தப்படுத்துங்கால் மலைகள் தங்கள் நிலைகளிலிருந்து பெயருகின்றன.

3. பிருசினியினுடைய சப்திக்கும் புதல்வர்கள் தங்கள் காற்றுக்களால் மேகங்களைச் செலுத்துகிறார்கள். புஷ்டிப் படுத்தும் உணவைக் கறக்கிறார்கள்.

4. மருத்துக்கள் காற்றுக்களோடு தங்கள் தேரிலே ஏறும்போது மழையைச் சிதறுகிறார்கள். மலைகளை ஆட்டுகிறார்கள்.

5. நீங்கள் வருங்கால் உங்களுடைய பலத்தைத் தாங்க மலைகளும், நதிகளும் வணங்குகின்றன.



6. நாங்கள் உங்களைப் பாலனத்துக்காக இரவிலே பகலிலே அழைக்கிறோம். உங்கள் யக்ஞம் நடைபெறுங் காலும் அழைக்கிறோம். 6188

7. சிகப்பு நிறமுள்ளவர்களும், அற்புதர்களும், ஆகுலஞ் செய்பவர்களுமான மருத்துக்கள் வான்மீது உச்சியிலே தங்கள் தேர்களிலே செல்லுகிறார்கள்.

8. அவர்கள் தங்கள் ஆற்றலால் ஒளியுள்ள வழியை சூரியன் சலனமாகப் புலப்படுத்துகிறார்கள். அவர்கள் கதிர்களோடு உலகத்தில் பரவுகிறார்கள்.

9. மருத்துக்களே! மகான்களே! என்னுடைய இந்த மொழியை, இந்த ஸ்தோமத்தை, இந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளுங்கள்.

10. பசுக்கள், பிரசினிப் புதல்வர்கள் வச்சிரமேந்தும் இந்திரனுக்கு சலமேந்தும் மேகத்திலிருந்து இனிய பானங்களுள்ள மூன்று ஏரிகளிலே நிரப்பின. 6192

11. மருத்துக்களே! நாங்கள் சுகத்தை விரும்பி, உங்களை சோதியிலிருந்து அழைக்கும்போது நீங்கள் துரிதமாய் எங்களிடம் வாருங்கள்.

12. நல்ல ஈகையர்களே! ருத்திரப் புதல்வர்களே! மகான்களே! நீங்கள் யக்ஞ ஸதனத்திலே ஸோம மதத்திலும் மிக்க அறிஞர்களாயிருக்கிறீர்கள்.

13. மருத்துக்களே! நீங்கள் சோதியிலிருந்து எங்களுக்கு மதப்படுத்துவதும், பலரால் போற்றப்படுவதும், அனைவரையும் தாங்குவதுமான செல்வத்தைச் செலுத்துங்கள்.

14. பிரகாசிக்கும் மருத்துக்களே! நீங்கள் உங்கள் தேரை மலைகளின் மீது இணைக்குங்கால் பொழிந்துள்ள ஸோமங்களால் நீங்களே இன்பஞ் செய்து கொள்கிறீர்கள்.

15. மனிதன் வெல்லப்படாத இத்தகைய மருத்துகணத்தினிடம் துதிகளால் சுகத்தைக் கேட்கவேண்டும். 6197

16. அவர்கள் வற்றாத மேகத்தைக் கறந்து பெய்யும் தாரைகளைப் போல், மழையால் சோதியையும் புவியையும் நிரப்புகிறார்கள்.

17. பிருசினி மக்கட்கள் சப்தங்களோடு, தேர்களோடு, காற்றுகளோடு, துதிகளோடு எழுகிறார்கள்.

18. நாங்கள், நீங்கள் செல்வங்களை அளிக்க எந்த ஈகையால் துர்வசனையும், யதுவையும், செல்வத்தை விரும்பும் கண்வனையும் பாலித்தீர்களோ, அந்த ஈகையைத் தியானிக்கிறோம்.

19. ஈகைமனமுள்ள மருத்துக்களே! நெய்யைப்போல் புட்டிப்படுத்தும் இவ்வுணவுகள் கண்வ வம்சத்தில் வந்த என்னுடைய தோத்திரங்களோடு சேர்ந்து உங்களைச் செழுமைப்படுத்துக.

20. உத்தம தானமளிப்பவர்களே! உங்களுக்குத் தருப்பை சீர் செய்யப்படுத்தப்பட்டிருக்கிறது. இப்பொழுது எங்கே நீங்கள் மதப்படுகிறீர்கள்! எந்த அறிஞன் உங்களைப் போற்றி தாமதப்படுத்துகிறான்? 6202

21. மருத்துக்களே! உங்களுக்குத் தருப்பைகிள்ளப் பட்டு பரத்தப்படுகிறது. நீங்கள் தாமதப்படச் சம்மதியீர்கள். ஏனெனில் பூர்வத்தில் நாங்கள் துதிகளோடு செய்யப் பட்ட யக்ஞத்திலிருந்து ஆற்றலைப் பெற்றீர்கள்.

22. மருத்துக்கள் மகத்தான சலங்களை உயரத்தில் ஏந்துகிறார்கள். அவர்கள் சோதியையும் புவியையும் தாங்குகிறார்கள். அவர்கள் சூரியனைப் பேணுகிறார்கள். அவர்கள் தங்கள் வச்சிராயுதத்தால் விருத்திரனைத் துண்டம்துண்டமாகத் துணிக்கிறார்கள்.

23. அரசனில்லாமல் சுதந்திரமாயிருக்கும் அவர்கள் விருத்திரனைத் துண்டம்துண்டமாய் துணித்தார்கள். அவர்கள் தங்கள் ஆண்மையைப் புலப்படுத்தி மலைகளை உடைத்தார்கள்.

24. அவர்கள் போராடும் திருதனுக்கு உதவி செய்ய வந்தார்கள். அவனுடைய ஆற்றலையும், செயல்களையும் ஊக்கப்படுத்தினார்கள். விருத்திரனைக் கொல்ல இந்திரனுக்கு உதவி செய்ய அவர்கள் வந்தார்கள்.



25. பிரகாசிக்கும் மருத்துக்கள் கைகளிலே மின்னலை ஏந்துகிறார்கள். மிக்க ஒளியுள்ள அவர்கள் தங்கள் தலைகளிலிருக்கும் தங்கக்கிரீடக் கவசங்களைப் பாங்காய்ப் புலப் படுத்துகிறார்கள். 6207

26. உசநசனால் போற்றப்பட்ட நீங்கள், தூரத்திலிருந்து மழைவானைப் புலப்படுத்த வருங்கால் புவியிலுள்ளவர்களும், சோதியிலுள்ளவர்களைப்போல் பயத்தால் பதறுகிறார்கள்.

27. தேவர்களே! நீங்கள் உங்கள் தானத்தன்மையைப் புலப்படுத்த உங்கள் தங்கக்கால் குதிரைகளோடு எங்கள் யக்ஞத்துக்கு வாருங்கள்.

28. புள்ளியுள்ள மானோ, துரிதமான சிகப்பு மிருகமோ அவர்களைத் தேரிலே ஏந்திச்சென்ற பிறகு பிரகாசிக்கும் மருத்துக்கள் நீங்குகிறார்கள். மழைகளும் நிற்கின்றன.

29. ரிஜீக தேசத்தில் பல மனைகளுள்ள சர்யாணவத்து இருக்கிறது அங்கு யக்ஞத்தலைவர்களான மருத்துக்கள் இறங்கிவரும் சக்கரங்களுள்ள தேர்களிலே செல்லுகிறார்கள்.

30. மருத்துக்களே! இங்ஙனம் யாசித்து உங்களைத் துதிக்கும் அறிஞனிடம் சுகப்படுத்தும் செல்வங்களோடு எப்பொழுது வருவீர்கள்? 6212

31. மருத்துக்களே! துதியால் திருப்தியாகும் நீங்கள் இந்திரனிடமிருந்து எப்பொழுது பிரிந்தீர்கள்? இப்பொழுது உங்கள் நட்பை அனுபவிப்பவன் எவன்?

32. கண்வ வம்சத்தில் வந்த நீங்கள், அக்கினியைக் கைகளிலே வச்சிரமேந்துபவர்களும், தங்க ஈட்டிகளைத் தாங்குபவர்களுமான மருத்துக்களோடு போற்றுங்கள்.

33. நான் மிக்க மேன்மையான செல்வத்துக்காக, பொழிபவர்களும், துதியாருகர்களும், அற்புத ஆற்றலுள்ளவர்களுமான மருத்துக்களை என்முன்னே வருவிக்கிறேன்.

34. அவர்களால் மலைகள் பீடிக்கப்பட்டு, கலக்கமடைந்து நிலைபெயருகின்றன. பர்வதங்கள் வசப்படுகின்றன.

35. குதிரைகள் துரிதமாய் வெளியைக்கடந்து வானின் வழியே சென்று வழிபடுபவனுக்கு உணவையளித்து மருத்துக்களை ஏந்திச் செலிலுகின்றன.

36. அக்கினி அனைவருக்கும் முதல்வனாக ஒளியோடு அழகாயிருக்கும் சூரியனைப்போல் பிறந்தான். பிறகு மருத்துக்கள் தங்கள் ஒளியோடு அவனைச் சூழ்ந்து நின்றார்கள். 6218

## 8. அசுவினிகள்

### 628. ஸத்வம்ஸ காண்வன்

1. அசுவினிகளே! நீங்கள் உங்களுடைய எல்லாப் பாலனங்களோடும் எங்களிடம் வாருங்கள். நஸ்ரர்களே! பொன் தேரிலே வரும் நீங்கள் ஸோமமதுவைப் பருகுங்கள்.

2. அசுவினிகளே! பாலகர்களே! பொன்னங்கமுள்ளவர்களே! கவிகளே! கம்பீர அறிவுள்ள நீங்கள் சூரிய ஒளியுள்ள தேரிலே நிச்சயமாய் வாருங்கள்.

3. மானிட உலகத்திலிருந்து வாருங்கள். உத்தம துதிகளால் கவரப்பட்டு வானிலிருந்து வாருங்கள். அசுவினிகளே! கண்வர்களுடைய யக்ஞத்திலே அளிக்கப்படும் இனிய ஸோமத்தைப் பருகுங்கள்.

4 நீங்கள் சோதியிலிருந்து வாருங்கள். கீழே இருக்கும் உலகத்தை விரும்பும் நீங்கள், வானிலிருந்து வாருங்கள். கண்வனுடைய புதல்வன் உங்களுக்கு இங்கே இனிய ஸோமத்தைப் பொழிந்திருக்கிறான்.

5. அசுவினிகளே! துதிப்பவனால் போற்றப்படுபவர்களும், சுவாஹாவோடு உயர்த்தப்படுபவர்களும், வழிபடுபவனுக்கு நலத்தைச் செய்பவர்களும், அறிஞர்களும், யக்ஞத்தலைவர்களுமான நீங்கள், எங்கள் யக்ஞத்திலே ஸோமத்தைப் பருக வாருங்கள். 6223



6. தலைவர்களே! பூர்வத்திலே ரிஷிகள் உங்களைப் பாலனத்துக்காக அழைத்தபோது நீங்கள் வந்தீர்கள். அசுவினிகளே! இப்பொழுது என்னுடைய நல்ல துதிக்கு வாருங்கள்.

7. சோதியை அறியும் நீங்கள் ஒளி உலகிலிருந்து பிரகாசமாயுள்ள வானின் மேலிருந்து வாருங்கள். அழைப்பைக் கேட்டு நீங்கள் ஸ்தோமங்களோடு வாருங்கள்.

8. அசுவினிகளே! எங்களைத் தவிர வேறு எவர்கள் உங்களை ஏத்துவார்கள்? கண்வனின் புதல்வனான வத்ஸ ரிஷி உங்களைத் துதிகளால் மேம்படுத்தினான்.

9. அசுவினிகளே! இங்கு அறிஞன் பாலனத்துக்காக உங்களை அழைக்கிறான். பாபமற்றவர்களும், விருத்திரர்களைக் கொல்பவர்களுமான நீங்கள், எங்களுக்குச் சுகத்தைத் தருபவர்களாயிருங்கள்.

10. செல்வபதிகளே! அசுவினிகளே! யுவதி-சூரியை -உங்களுடைய தேரிலே ஏறியவுடன் நீங்கள் எல்லா விருப்பங்களையுமடைந்தீர்கள். 6228

11. அசுவினிகளே! உங்களுடைய பல ரூபமுள்ள தேரிலே நீங்கள் எங்கிருந்து வந்தாலும், கவியின் புதல்வனும், அறிஞனுமான வத்ஸன் உங்களுக்கு மதுமய மொழிகளைக் கூறுகிறான்.

12. பலருக்கு இன்பமளிப்பவர்களும், செல்வம் மிகுந்தவர்களும், செல்வங்களை அளிப்பவர்களும், அனைவரையும் தாங்குபவர்களுமான அசுவினிகள் என்னுடைய இந்த ஸ்தோமத்தைப் போற்றுகிறார்கள்.

13. அசுவினிகளே! எங்களுக்கு வெட்கத்தையளிக்காத செல்வங்களையெல்லாம் அளியுங்கள். பிறப்பிக்கும் சக்தியை உரியகாலத்தில் நல்குங்கள். எங்களை நிந்தைக்குட்படுத்தாதீர்கள்.

14. நாஸதியர்களே! அசுவினிகளே! நீங்கள் தூரத்திலிருந்தாலும், அருகிலிருந்தாலும், அங்கிருந்து உங்களுடைய பலவித ரூபமுள்ள தேரோடு வாருங்கள்.

15. அசத்தியமற்றவர்களே! வத்ஸரிஷி உங்கள் இருவர்களேயும் மேம்படுத்துகிறுன். அவனுக்கு நெய் சொட்டும் பலவித உணவை அளியுங்கள். 6238

16. அசுவினிகளே! தானச்செல்வர்களே! உங்களைத் துதித்து சுகத்தையும், செல்வத்தையும் விரும்புபவனுக்கு நெய் சிந்துவதும், பலத்தை அளிப்பதுமான உணவை அளியுங்கள்.

17. பகைவர்களை விலக்குபவர்களும், பல அவிகளை அருந்துபவர்களுமான நீங்கள், எங்கள் ஸ்தோமத்துக்கு வாருங்கள். தலைவர்களே! எங்களை நன்கு சிறப்பியுங்கள். நாங்கள் விரும்பும் புவியின் இந்தச் செல்வங்களை அளியுங்கள்.

18. அசுவினிகளே! பிரியமேதர்கள் தேவர்களுக்கு நடத்தப்படும் யக்ஞங்களிலே, யக்ஞங்களின் தலைவர்களும் பாலனங்களோடுமுள்ள உங்களை அழைக்கிறுர்கள்.

19. அசுவினிகளே! சுகப்படுத்துபவர்களும், இன்புறுத்துபவர்களுமான நீங்கள், எங்களிடம் வாருங்கள். துதியாருகர்களான அசுவினிகளே! உங்களை யக்ஞங்களாலும், தோத்திரங்களாலும் உங்களைப் போற்றும் வத்ஸனிடம் வாருங்கள்.

20. தலைவர்களே! நீங்கள் எந்தப் பாலனங்களால் கண்வனையும், மேதாதியையும், வசனேயும், தசவிரஜனையும் பாலித்தீர்களோ, எந்தப் பாலனங்களால் கோசரியனைப் பாலித்தீர்களோ அவற்ருல் எங்களைப் பாலியுங்கள். 6238

21. நீங்கள் செல்வம் நாடிய திரஸதஸ்யுவை தலைவர்களே! எந்தப் பாலனங்களால் பாலித்தீர்களோ, அசுவினிகளே! அந்தப் பாலனங்களால் உணவை நாடும் எங்களைப் பாலியுங்கள்.

22. அசுவினிகளே! ஸ்தோமங்களும், தூய மொழிகளும் உங்களை மேம்படுத்துக. பலரைப் பாலிப்பவர்களும், பகைவர்களை அழிப்பவர்களுமான நீங்கள், எங்களால் மிக்க விரும்பப்படுகிறீர்கள்.



23. அசுவினிகளே! உங்களுடைய தேரின் மூன்று சக்கரங்கள் தெரியாமலிருந்தன. அவை இப்பொழுது புலனுகின்றன. சென்றவற்றை அளிப்பவர்களான நீங்கள், சத்தியத்தின் வழிகளால் சீவித்திருக்கும் எங்கள் முன்னே வாருங்கள். 6241

## 9. அசுவினிகள்

### 629. சசகர்ண காண்வன்

1. அசுவினிகளே! நீங்கள் வத்ஸனைப்பாலிக்கத் தவருமல் வாருங்கள் அவனுக்குப் பரந்திருப்பதும், துன்பமற்றதுமான மனையை அளியுங்கள். நீங்கள் அளிக்காதவர்களை விலக்குங்கள்.

2. அசுவினிகளே! வானிலே, சோதியிலே பஞ்சசனங்களிலிருக்கும் எல்லாச்' செல்வங்களையும் எங்களுக்களியுங்கள்.

3. பூர்வத்திலே அறிஞர்கள் உங்களுக்கு அடிக்கடி நடத்திய யக்ஞச்செயல்களை நீங்கள் அறிந்தீர்கள். அசுவினிகளே! அப்படியே கண்வமகனுடைய யக்ஞச் செயல்களையும் அறிந்து கொள்ளுங்கள்.

4. அசுவினிகளே! உங்களுக்கு ஸ்தோமத்தோடு இந்த அவி அளிக்கப்படுகிறது. உணவுச்செல்வர்களான உங்களுக்கு இந்த இனிய ஸோமம் பொழியப்படுகிறது. அதனுல் நீங்கள் விருத்திரனைக் கொல்ல அறிகிறீர்கள்.

5. அசுவினிகளே! பலசெயல்களை நடத்துபவர்களே! சலங்களிலும், மரங்களிலும், ஓஷதிகளிலும் உங்களால் வைக்கப்பட்டிருக்கும் மருந்தால் என்னைப்பாலியுங்கள் 6246

6. நாஸத்தியர்களே! தேவர்களே! நீங்கள் எல்லாப் பிராணிகளையும் பாலிக்கிறீர்கள். எல்லா நோய்களையும் நீக்குகிறீர்கள். ஆனுல் இந்த வழிபடுபவன் துதிகளாலேயே உங்களிடம் பெற இயலாது. நீங்கள் அவிகளை அளிப்பவனிடமே செல்லுகிறீர்கள்.

7. அசுவினிகளே! நீங்கள் வருங்கால் ரிஷி கூறுவதற்குரிய ஸ்தோமத்தை உத்தம அறிவால் அறிந்து

கொள்கிறன். அவன் அதர்வ அனலிலே மிக்க இனிய ஸோமத்தையும், கர்மத்தையும், அவியையும் தெளிப்பானாக.

8. அசுவினிகளே! உடனே நீங்கள் உங்களுடைய சுலபமாய்ச் செல்லும் தேரிலே ஏறுங்கள். என்னுடைய இந்த ஸ்தோமங்கள் சூரியனைப்போல் பிரகாசமாயுள்ள உங்களைக் கீழே ஏந்தி வருக.

9. நாஸத்தியர்களே! கண்வப்புதல்வனுடைய துதிகளாலும், தோத்திரங்களாலும் உங்களை இன்று வருவிப்போம் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

10. யக்ஞ சதனங்களில் பூர்வத்தில் கட்சீவானும், ரிஷி வியசுவனும், தீர்க்க தமஸனும், வேனனின் மகனுன பிருதீனனும், உங்களை அழைத்துப் போற்றியதுபோல் நாங்களும் போற்றுகிறோம் என்பதை அறிந்து கொள்ளுங்கள். 6251

11. எங்கள் மனையைப் பாலிப்பவர்களாக எங்களிடம் வாருங்கள். எங்களைப் பாலிப்பவர்களாயிருங்கள். எங்கள் ஆட்களையும் காப்பவர்களாயிருங்கள். எங்கள் தேகங்களைப் பேணுபவர்களாயிருங்கள். எங்கள் புதல்வர்களுடைய பேரர்களுடைய நன்மைக்காக எங்கள் மனைக்கு வாருங்கள்.

12. அசுவினிகளே! நீங்கள் இந்திரனோடு ஒரே தேரில் சென்றாலும், நீங்கள் வாயுவோடு ஒரு நிலயத்தில் வசித்தாலும், நீங்கள் ஆதித்தியர்களோடும், ரிபுக்களோடும் இணங்கி மகிழ்ந்திருந்தாலும், விஷ்ணுவின் கம்பீர நடைகளோடு சென்றாலும், அங்கிருந்து இங்கு வாருங்கள்.

13. அசுவினிகளே! நான் இன்று உங்களைப் போரிலே ஜயத்தை அடைய அழைக்கிறேன் வெற்றியை அளியுங்கள். அசுவினிகளின் ஜயந்தரும் பாலனம் போரில் பகைவர்களைக் கொல்ல மிக்க மேன்மையாயிருக்கிறது.

14. அசுவினிகளே! வாருங்கள். அவிகள் உங்களுக்குத் தயாராகின்றன. பூர்வத்தில் துர்வசனாலும், யது



வாலும் அளிக்கப்பட்ட இந்த ஸோமங்கள் இப்பொழுது கண்வர்களால் உங்களுக்களிக்கப்படுகின்றன.

15. அசுவினிகளே! நாஸத்தியர்களே! தூரத்திலோ, அருகிலோ உள்ள மருந்தோடு நீங்கள் விமதனுக்களிக்க அவனுடைய மனைக்குச் சென்றீர்கள். அம்மருந்தைப் பேரறிஞர்களான நீங்கள், இப்பொழுது வத்ஸனுக்கு அளியுங்கள். 6256

16. நான் அசுவினிகளின் திவ்யமொழியோடு விழித்திருக்கிறேன். தேவியே! உஷையே! என் துதியால் தமத்தை விலக்கவும், மானிடர்களான எங்களுக்குச் செல்வத்தை அளிக்கவும்.

17. உஷையே! உண்மையைப் பேசும் மகத்தான தேவியே! அசுவினிகளை எழுப்பவும். துதியாருகத் தேவர்களை எழுப்புபவளே! அவர்களைக் கிரமமாய் எழுப்பவும். அவர்களுடைய மதத்துக்காக மகத்தான அவி கற்பிக்கப்படுகிறது.

18. உஷையே! நீ உன்னுடைய ஒளியோடு சலனமாகுங்கால் சூரியனுக்குச் சமமாய்ப் பிரகாசிக்கிறாய். அசுவினிகளின் இந்தத் தேர் மனிதர்களால் பாலிப்பதற்குரிய யக்ஞதனத்துக்குச் செல்லுகிறது.

19. மஞ்சள் நிறமுள்ள ஸோம ஓஷதிகள் ரஸத்தை ஆபீனங்களிலிருந்து பாலைச் சொரியும் பசுக்களைப் போல் கறக்குங்கால் தேவ மனமுள்ளவர்கள் துதிமொழிகளைக் கூறியவுடன் அசுவினிகளே எங்களைப் பாலியுங்கள்.

20 பேரறிஞர்களான நீங்கள் புகழுக்காகவும், பலத்துக்காகவும், ஜயத்துக்காகவும், சந்தோஷத்துக்காகவும், செல்வத்துக்காகவும் எங்களைப் பாலியுங்கள்.

21. அசுவினிகளே! துதியாருகர்களான நீங்கள் தந்தையின் நிலயத்தில் அமர்ந்திருந்தாலும் துதிகளோடும் சுகங்களோடும் இயங்கும் நீங்கள் அங்கிருந்து இங்கு வாருங்கள். 6262

## 10. அசுவினிகள்

### 630. பிரகாத கண்வன்

1. அசுவினிகளே! நீங்கள் யக்ஞம் நடைபெறும் பரந்த ஸதனங்களிலிருந்தாலும் அல்லது அப்பாலுள்ள சோதியின் பிரகாசமான இடத்திலிருந்தாலும் அல்லது வானுக்கு மேலே கற்பிக்கப்பட்ட நிலயத்திலிருந்தாலும் அங்கிருந்து இங்கு வாருங்கள்.

2. அசுவினிகளே! நீங்கள் மநுவுக்காக யக்ஞத்தைச் சித்தப்படுத்தினீர்கள். அப்படியே கண்வனுடைய புதல்வனின் யக்ஞத்தைச் சித்தப்படுத்த வாருங்கள். நான் பிரகஸ்பதியையும், விசுவேதேவர்களையும், இந்திரனையும், விஷ்ணுவையும், துரித குதிரைகளோடு அசுவினிகளையும் அழைக்கிறேன்.

3. நான் உத்தம செயல்களுள்ளவர்களும், எங்களுக்குச் செல்வங்களையளிக்க வருவிக்கப்படுபவர்களும், தேவர்களின் நடுவே நட்பைப் பெறுவதற்குரியவர்களுமான அந்த அசுவினிகளை அழைக்கிறேன்.

4. நான் எல்லா யக்ஞங்களும், விளங்குபவர்களும், துதிக்கப்படாத இடத்திலும் துதிப்பவர்களை அடைந்திருப்பவர்களும், இம்சையற்ற யக்ஞங்களை அறிபவர்களுமான அசுவினிகளைத் தோத்திரங்களோடு அவர்களை இனிய ஸோமத்தைப் பருக அழைக்கிறேன்.

5. அசுவினிகளே! நீங்கள் இன்று மேற்கிலிருந்தாலும், உணவுச் செல்வர்களான நீங்கள் கிழக்கிலிருந்தாலும் அல்லது நீங்கள் துருஹ்யுவோடு, அநுவோடு, துர்வசனோடு அல்லது யதுவோடிருந்தாலும், உங்களை நான் அழைக்கிறேன். ஆதலால் நீங்கள் என்னிடம் வாருங்கள்.

6. பலரைப் பாலிக்கும் நீங்கள் வானிலே சென்றுகொண்டிருந்தாலும், அல்லது சோதி புவிகளை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாலும், உங்கள் சுவதாக்களோடு தேரிலே ஏறிக்கொண்டிருந்தாலும், அங்கிருந்து அசுவினிகளே! இங்கு வாருங்கள். 6268



## 11. அக்கினி

### 631. வத்ஸ காண்வன்

1. அக்கினியே! மனிதர்களின் அல்லது தேவர்களின் நடுவே தேவனாயிருக்கும் நீ, விரதங்களைப் பாலிப்பவனாயிருக்கிறாய். நீ யக்ஞங்களின் நடுவே துதிக்கத் தகுந்தவனாயிருக்கிறாய்.

2. பகைவர்களை ஜயிப்பவனான நீ, யக்ஞங்களிலே போற்றத் தகுந்தவனாயிருக்கிறாய். அக்கினியே! நீ யக்ஞங்களை நடத்துகிறாய்.

3. ஜாதவேதஸனே! துவேஷிப்பவர்களை நீ எங்களிடமிருந்து விலக்கவும். அக்கினியே! பகைப் படைகளை நீக்கவும்.

4. ஜாதவேதஸனே! எங்கள் பகைவனுடைய யக்ஞம் உன் அருகில் மிக்க நெருங்கியிருந்தால் அதை நீ விரும்பாமலிருக்கிறாய்.

5. அறியும் மானிடர்களான நாங்கள் எல்லாம் அறிபவனும், அமுதனுமான உனக்கு மிக்க வணக்கத்தை அளிக்கிறோம். 6273

6. அறிஞர்களான நாங்கள் விப்பிரனும், தேவனுமான அக்கினியை எங்களுடைய பாலனத்துக்காகப் பாக்களால் போற்ற அழைக்கிறோம்.

7. அக்கினியே! வத்ஸன் உன்னைப் போற்ற விரும்பும் துதியால் உன் மனத்தைத் தேவர்களின் உத்தம சபையிலிருந்து கவருகிறான்.

8. அக்கினியே! நீ பல இடங்களில் சமமாய்த் தோன்றுகிறாய். நீ எல்லா சனங்களுக்கும் தலைவனாயிருக்கிறாய். நாங்கள் போர்களிலே உன்னை அழைக்கிறோம்.

9. ஆற்றலை விரும்பும் நாங்கள், போர்களிலே விரும்பத் தகுந்த செல்வத்தை அளிப்பவனான அக்கினியைப் போர்களிலே பாலனத்துக்காக அழைக்கிறோம்.

10. யக்ஞங்களிலே துதிக்கத் தகுந்த நீ, பூர்வத்திலிருந்தே விளங்குகிறாய். நீ ஆதியிலிருந்தே ஹோதாவாயிருக்கிறாய். யாகத்திலே அமரும் நீ, துதியால் போற்றத் தகுந்தவன். அக்கினியே! நீ உன் தேகத்தைப் புட்டி செய்து கொள்ளவும். எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். 6278

# 12. இந்திரன்

## 632. பர்வத காண்வன்

1. இந்திரனே! நாங்கள் வீரச் செயல்களை எண்ணும் மதத்தைத் தரும் ஸோமத்தை மிக்கப் பருகி, பட்சகர்களை அழிப்பவனும், மிக்க வலியனுமான உன்னைப் போற்றுகிறோம்.

2. நாங்கள், நீ எந்த மதத்தால் பத்து மாத யக்ஞத்தை நிறைவேற்றியோ அதிருவையும், இருளை விலக்கும் சூரியனையும், கடலையும் பாலித்தாயோ, அந்த மதத்தை உன்னிடம் வேண்டுகிறோம்.

3. நாங்கள் நீ எந்த மதத்தால் மகத்தான சலங்களைக் கடலுக்கு, நோக்கத்துக்கு, தங்கள் தேர்களை இயக்கும் சாரதிகளைப் போல் செலுத்துகிறாயோ, எந்த மதத்தால் யக்ஞத்தின் வழியில் செல்லுகிறாயோ அந்த மதத்தை உன்னிடம் வேண்டுகிறோம்.

4. வச்சிராயுதனே! எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்திசெய்து கொள்ள எங்களாலளிக்கப்படும் இந்தத் துதியைச் சுத்தம் செய்யப்பட்ட நெய்யைப் போல் ஏற்றுக் கொள்ளவும். இதனால் ஊக்கமாகி நீ எங்களை எங்கள் நோக்கங்களுக்கு உன்னாற்றலால் வகித்துச் செல்லுகிறாய்.

5. இந்திரனே! துதியால் திருப்தியாகும் நீ, கடலைப் போல் பொங்கும் இந்த ஸ்தோமத்தால் இன்பமாகவும். இதனால் ஊக்கமாகி நீ எங்களை எங்கள் நோக்கங்களுக்கு உன் ஆற்றலால் வகித்துச் செலுத்துகிறாய். 6283

6. நான் தூரத்திலிருந்து வந்து எங்களுக்குச் செல்வங்களைத் தந்த தேவனான இந்திரனைப் போற்றுகிறேன்.



இந்திரனே! சோதியிலிருந்து வரும் மழையைப் போல் எங்களுக்குச் செல்வத்தைப் பொழிந்து, எங்களுடைய நோக்கங்களுக்கு உன்னுடைய எல்லாப் பாலனங்களோடும் எங்களை வகித்துச் செல்லுகிறாய்.

7. இந்திரன் சூரியனைப் போல் சோதி புவிகளைச் செழிப்பித்தபோது அவனுடைய கொடிகளும், அவன் தன் கைகளில் ஏந்தும் வச்சிராயுதமும், எங்களுக்குச் செல்வங்களைச் செலுத்திற்று.

8. மகானும், செல்வத்தின் தலைவனுமான நீ, ஆயிரக் கணக்கான வலிய பகைவர்களைக் கொன்றபோது உன்னுடைய மகத்தான இந்திரியம் வலிமையடைந்தது.

9. இந்திரன் சூரியனுடைய கிரணங்களால் தன் பகைவனைப் பற்பப்படுத்துகிறான். ஜயமுள்ள அவன் வனங்களை எரிக்கும் அக்கினியைப்போல் ஆற்றலுள்ளவனாகிறான்.

10. பருவத்துக்குரிய இந்தப் புதிய பனுவல் உன்னிடம் சேர்கிறது. அது உன்னைப்பாடி மிக்க இன்புறுத்தி உன் மேன்மைகளின் பரிமாணத்தைப் புலப்படுத்துகிறது. 6288

11. துதியாருகனான இந்திரனைத் துதிக்கும் பக்தன் கிரமமாய் மனத்திட்பத்தைச் சுத்தஞ்செய்து கொள்கிறான். அவன் ஸ்தோமங்களால் இந்திரனைச் செழிப்பிக்கிறான். அவன் இந்திரனுடைய மேன்மைகளின் பரிமாணத்தைப் புலப்படுத்துகிறான்.

12. நண்பனுக்குச் செல்வத்தைத் தரும் இந்திரன் ஸோமத்தைப்பருக பொழிபவனுடைய பரந்த துதியைப் போல் பருமனடைந்தான். அது இந்திரனுடைய மேன்மைகளின் பரிமாணத்தைப் புலப்படுத்துகிறது.

13. நான் விப்பிரர்களான மனிதர்களால் பாடப்பட்டு இன்புறுத்தப்படும். இந்திரனின் வாயினுள் யக்ஞத்தின் அவியை நெய்யைப்போல் அளிக்கிறேன்.

14. நம்முடைய பாலனத்துக்குத் தாருககவே துலங்கும் இந்திரனுக்கு அதிதியால் கூறப்பட்ட உத்தமத் துதியானது ருதத்திலிருந்து தோன்றியதாகும்.

15. அவிகளை ஏந்துபவர்கள் உத்தம பாலனத்துக்காக இந்திரனைப் போற்றுகிறார்கள். தேவனே! உன்னுடைய பலவித செயல்களுள்ள குதிரைகள் ருதத்துக்கு உன்னை ஏந்தி வருக. 6293

16. நீ விஷ்ணுவோடு சேர்ந்து ஸோமத்தை அல்லது சலமகனான திரிதனால் அளிக்கப்பட்ட ரஸத்தை மருத்துக்களோடு சேர்ந்து பானத்தைப் பருகி இன்பமானாய். ஆதலால் இப்பொழுது எங்களால் அளிக்கப்படும் பானங்களால் இன்பமாகவும்.

17. சக்கரனே! நீ மிக்கத் தூரமாயிருக்கும் கடல் மீதுள்ள ஸோமத்தால் நீ மதமானாய். இப்பொழுது எங்களால் பொழியப்படும் ஸோமங்களால் இன்பமாகவும்.

18. நல்லவர்களைப் பாலிக்கும் நீ, ஸோமங்களைப் பொழிந்து வழிபடுபவனையும், ஏற்றுக்கொள்ளப்படும் துதிகளைக் கூறுபவனையும் நீ செழிப்பிக்கிறாய். இப்பொழுது எங்கள் ஸோமங்களால் இன்பமாகவும்.

19. நான் உங்கள் பாலனத்துக்காக எங்கும் போற்றப்படும் தேவனான இந்திரனைப் போற்றுகிறேன். யக்ஞம் துரிதமாய்ப் பூர்த்தியாக என் துதிகள் அவனிடம் சேர்ந்தன.

20. வழிபடுபவர்கள் யக்ஞத்தால் பற்றப்படுபவனை யக்ஞங்களாலும், ஸோமத்தை ஆர்வத்தோடு பருகுபவனை ஸோமங்களோடும் மேம்படுத்தினார்கள். அவனைத் தோத்திரங்களால் போற்றினார்கள். அவை அவனிடம் சேர்ந்தன. 6298

21. அவனுடைய அளிக்கும் தன்மைகள் அனந்தம். அவனுடைய சிறப்புக்கள் அநேகம். அவி அளிப்பவனுக்குச் செல்வங்கள் மிக்கச் சென்றன.



22. தேவர்கள் விருத்திரனைக் கொல்ல இந்திரனை முற்படுத்தினார்கள். அவனைத் திறப்படுத்த அவர்களுடைய தோத்திரம் அவனுக்குக் கூறப்படுகிறது.

23. நாங்கள் மகிமையில் மகானும், எங்கள் அழைப்புக்களைச் செவியுறுபவனுமான இந்திரனை, துதிகளாலும், தோத்திரங்களாலும் அவனுடைய ஆற்றலை அதிகப்படுத்த அடிக்கடி போற்றுகிறோம்.

24. வச்சிராயுதனிடமிருந்து சோதியும், புவியும், வானும் தனிப்படாமலிருக்கின்றன. அவனுடைய ஆற்றலால் எல்லாம் துலங்குகிறது.

25. இந்திரனே! தேவர்கள் உன்னைப் போரிலே முற்படுத்திய பிறகு உன்னுடைய அன்புள்ள குதிரைகள் உன்னை ஏந்திச் சென்றன. 6303

26. வச்சிராயுதனே! சலத்தைத் தடுத்த விருத்திரனை நீ உன் ஆற்றலால் கொல்லப் புறப்பட்ட பிறகு உன்னுடைய அன்புமிகுந்த குதிரைகள் உன்னை ஏந்திச் சென்றன.

27. உன்னுடைய இளைய சகோதரனான விஷ்ணு தன் பராக்கிரமத்தால் மூன்று அடிகளை வைக்கப் புறப்பட்ட பிறகு உன்னுடைய அன்பு மிகுந்த குதிரைகள் உன்னை ஏந்திச் சென்றன.

28. உன்னுடைய அன்பு மிகுந்த குதிரைகள் தினந்தோறும் உன்னைச் செழிப்பிக்க இயங்கிய பிறகு எல்லாப் புவனங்களும் உன் வசமாயின

29 இந்திரனே! நீ உன்னுடைய சனங்களான மருத்துக்களை கிரமப்படுத்த இயங்கிய பிறகு எல்லாப் புவனங்களும் உன் வசமாயின.

30. நீ அங்குள்ள சோதியான சூரியனை ஒளி உலகில் ஸ்தாபித்த பிறகு எல்லாப் புவனங்களும் உன் வசமாயின. 6308

31. இந்திரனே! வழிபடும் அறிஞன் உன்னை இன்புறுத்தும் இந்தத் துதியை யக்ஞத்திலே வணக்கச் செயல்

களோடு மேன்மையான ஸ்தானத்திலே பந்துவை ஸ்தாபிக்கும் மனிதனைப் போல உனக்கு ஸ்தாபித்து அளிக்கிறான்.

32. யக்ஞத்திலே சோமம் பொழியப்படுவதும், புவியின் நடுவிலிருப்பதும், அவனை இன்புறுத்துவதுமான இடத்திலேயே வழிபடுபவர்கள் சேர்ந்து உன்னைப் பாடுங்கால்

33. இந்திரனே! நீ எங்களுக்கு உத்தமப் புதல்வர்களும், உத்தம குதிரைகளும், உத்தமப் பசுக்களுமுள்ள செல்வத்தை அளிக்கவும். நான் யக்ஞத்திலே முதலில் எங்களை நினைத்துக்கொள்ளும் உன்னை ஹோதாவைப் போல் போற்றுகிறேன். 6311

## 13. இந்திரன்

### 633. நாரத காண்வன்

1. சோமம் பொழியப்படுங்கால் இந்திரன், துதிப்பவனும், அளிப்பவனும், வலிமைப்படுத்தும் வலிமையை அடைய அவனைச் சுத்தப்படுத்துகிறான். ஏனெனில் இந்திரன் மகானாயிருக்கிறான்.

2. இந்திரன் தேவர்களின் ஸதனமான உத்தம நிலயத்தில் இருப்பவனாகிப் போற்றுபவர்களைச் செழிப்பிக்கிறான். துன்பத்திலிருந்து கடத்தும் உத்தமனாயிருக்கிறான். உத்தமப் புகழுள்ள அவன் மழை தடுப்பவனை ஜயிப்பவனாயிருக்கிறான்.

3. நான் உணவளிக்கும் போரிலே பாலனமாக ஆற்றலுள்ள இந்திரனை அழைக்கிறேன். நீ எங்களுடைய இன்பத்துக்காக எங்கள் அருகில் இருக்கவும். நாங்கள் செழிக்க நீ எங்கள் நண்பனாயிருக்கவும்.

4. இந்திரனே! துதியாருகனுன உனக்கு, பொழிபவனுடைய செல்வமான சோமம் பாய்கிறது. அதனால் நீ மதமாகி யக்ஞத்தை நடத்துகிறாய்.

5. இந்திரனே! நாங்கள் சோமத்தைப் பொழியுங்கால் எங்களால் விரும்பப்படும் செல்வத்தையளிக்கவும். அனைத்தையுமடைய சாதகமாயிருக்கும் விரும்பத் தகுந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். 6316



6. வழிபடும் பேரறிஞன் பகையழிக்கும் துதிகளை உனக்குக் கூறுங்கால் நீ அவற்றை ஏற்றால் அவை மரத்தின் கிளைகளைப்போல் எழுகின்றன.

7. நீ பூர்வத்தில்போல் தோத்திரங்களைத் தோற்றுவிக்கவும். வழிபடுபவனுடைய அழைப்பைக்கேட்கவும். நீ உன்னுடைய ஒவ்வொரு மதத்திலும் உத்தம செயலை நடத்துபவனுக்கு விரும்பிய செல்வத்தை ஏந்தி வருகிறாய்.

8 ஒளிஉலகின் தலைவன் எனக்கூறப்படும் இந்தத் துதியிலே இந்திரனுடைய பிரியமான சத்தியமொழிகள் இறக்கத்திலே பாயும் சலங்களைப்போல் கிரீடிக்கின்றன.

9. செழிப்பிக்கும் பாக்களோடு இந்திரனுடைய பாலனத்தை விரும்பி, மனிதர்களை வசப்படுத்தும் ஒரே தலைவனான இந்திரனைப் போற்றவும்.

10. அவியளித்து வழிபடுபவனுடைய மனைக்கு வெற்றியுள்ள குதிரைகளிலே வரும் புகழுள்ளவனும் பேரறிஞனுமான இந்திரனைப் போற்றவும். 6321

11. மகத்தான மனமுள்ளவனும் துரிதனுமான நீ, உன்னுடைய அழகிய வேகமான குதிரைகளிலே எங்கள் யக்ஞத்துக்கு வா. நீ இங்கு வருவதால் உனக்கு இன்பம் தோன்றும்.

12. ஆற்றல் வாய்ந்தவனே! இந்திரனே! நல்லவர்களைப் பாலிக்கும் நீ, போற்றும் எங்களைச் செல்வங்களில் ஸ்தாபிக்கவும். வழிபடுபவர்களுக்கு அழியாப்புகழையளிக்கவும்.

13. சூரியன் உதித்தவுடன் நான் உன்னை அழைக்கிறேன். நான் உன்னை நடுப்பகலிலே அழைக்கிறேன். இந்திரனே! நீ விருப்பமாகி எங்களிடம் உன் துரித குதிரைகளிலே வா.

14. சீக்கிரம் வா. துரிதமாகவும்; பாலோடு கலந்த ஸோமத்தால் மதப்படவும். நான் பயனை அடைய பழைய யக்ஞத்தைப் பரத்தவும்.

15. சக்கரனே ! நீ தூரத்திலே இருந்தாலும், விருத்திரனைக் கொல்பவனே ! நீ அருகிலிருந்தாலும் அல்லது வானிலிருந்தாலும், யக்ஞ உணவின் பாலகனாயிருக்கிறாய். 6326

16. எங்களுடைய மொழிகள் இந்திரனை மேம்படுத்துக. ஸோமபானங்களும் இந்திரனை மேம்படுத்துக. அவி ஏந்தும் சனங்கள் இந்திரனை உற்சாகப்படுத்துவார்களாக.

17. அறிஞர்கள் பாலனத்தை விரும்பி, அவனை மிகுந்தவையும், இன்புறுத்துபவையுமான பானங்களோடு மேம்படுத்துகிறார்கள். மரத்தின் கிளைகளைப் போல் பரந்துள்ள புவியும் எல்லா உலகங்களும் இந்திரனை மேம்படுத்துகின்றன.

18. திரிகத்துருக்களிலே தேவர்கள், துதியாருகனும், சேதனப்படுத்துபவனுமான இந்திரனைப் போற்றுகிறார்கள். வழிபடுபவர்களை எப்பொழுதும் உயர்த்தும் இந்திரனை எங்களுடைய மொழிகள் உயர்த்துக.

19. உன்னை வழிபடுபவன் கடமையில் கவனமாயிருக்கிறான். ஏனெனில் உனக்குத் துதிகளை உரிய காலத்தில் கூறுகிறான். நீயே அற்புதன் எனவும், சுத்தன் எனவும், சுத்தப்படுத்துபவன் எனவும் கூறப்படுகிறாய்.

20. பழைய இடங்களிலே ருத்திரனுடைய புதல்வர்கள் அறியப்படுகிறார்கள். வழிபடும் அறிஞர்கள் அவனுக்கு வணக்கத்தை அளிக்கிறார்கள். 6331

21. இந்திரனே ! நீ என்னுடைய நட்பை விரும்பினால் இந்த யக்ஞ உணவை அருந்தவும். அதனால் நாங்கள் எல்லா எதிரிப் படைகளையும் கடந்து செல்வோமாக.

22. இந்திரனே ! துதியால் இன்புறும் உன்னை வழிபடுபவன் எப்பொழுது சுகத்தை அடைவான் ? பசுக்களின், குதிரைகளின், மனிதர்களின் செல்வத்திலே எங்களை எப்பொழுது ஸ்தாபிப்பாய் ?



23. உன்னுடைய வலியவையும், புகழுள்ளவையுமான குதிரைகள் அழியாமலிருப்பவனான உன்னுடைய தேரை நாங்கள் விரும்பும், மதப்படுத்தும் செல்வத்துடன் எப்பொழுது ஏந்தி வரும் ?

24. நாங்கள் பலரால் போற்றப்படுபவனும், மகானுமான இந்திரனை, பழைய பாலன துதிகளோடு போற்றுகிறோம். அவன் இனிய தருப்பையின் மீது அமர்வானாக. அவன் ஸோமத்தையும் புரோடாசத்தையும் ஏற்றுக்கொள்வானாக.

25. பலரால் போற்றப்படும் இந்திரன் ரிஷிகளால் ஏத்தப்படும் பாலனங்களோடு எங்களைச் செல்வப்படுத்துவானாக. எங்களுக்குச் சத்தான உணவைச் செலுத்துவானாக. 6336

26. வச்சிராயுதம் ஏந்தும் இந்திரனான நீ, இங்ஙனம் உன்னைத் துதிப்பவனுக்குப் பாலகனாயிருக்கிறாய். நான் துதியால் பெறுவதற்குரிய உன் ஆதரவை ருதத்தால் நாடுகிறேன்.

27. இந்திரனே ! நீ இந்த யக்ஞத்திலே ஸோமத்தைப் பருக உன்னுடைய செல்வம் நிறைந்தவையும், உன்னோடு உன் மதத்திலே பங்கு பெறுபவையுமான குதிரைகளை இணைத்து வரவும்.

28. உன்னை அநுசரிக்கும் ருத்திரப் புதல்வர்கள் யக்ஞத்தை அணுகிப் புகழைப் பற்றுவார்களாக. மருத்துக்களோடு சேர்ந்துள்ள வேறு தெய்வப் பிரசைகளும் யக்ஞ உணவை அடைவார்களாக

29. பகைவர்களான, ஜயிப்பவர்களான இந்திரனின் ஆட்களான மருத்துக்கள் ஒளி உலகிலிருக்கும் தங்கள் ஸ்தானத்திலே இன்புறுவார்களாக. நான் செல்வத்தைப் பெற அவர்கள் யக்ஞத்தின் நாபியிலே கூடுவார்களாக.

30. யக்ஞ ஸதனத்திலே யக்ஞம் நடைபெறுங்கால் இந்த இந்திரன் யாகத்தைக் கவனிப்பவனாகி, தூரத்தில் தோன்றும் பயனுக்காக யக்ஞத்தைப் படிப்படியாய்க் கிரமப்படுத்துகிறான். 6341

31. இந்திரனே! உன்னுடைய இந்தத் தேர் வலியது. உன்னுடைய இந்தக் குதிரைகள் வலியவை. சதக்கிரதுவே! நீ வலியன். எங்கள் அழைப்பு வலியது.

32. இந்திரனே! கல் வலியது. உன்னுடைய மதம் வலிமையுள்ளது. இந்தப் பாயும் ஸோமமும் வலிமையுள்ளது. நீ ஊக்கப்படுத்தும் யக்ஞம் வலிமையுள்ளது. எங்கள் அழைப்பு வலியது

33. வச்சிரமேந்துபவனே! வலியனான உன்னை, வலியனான நான் பலவித திருப்தி செய்யும் துதிகளோடு அழைக்கிறேன். உனக்குக் கூறப்படும் துதியை நீ ஏற்பதால் உன் அழைப்பு நலங்களை வர்ஷிக்கிறது 6344

## 14. இந்திரன்

### 634. கோஸூக்தினனும் அசுவஸூக்தினனும் கண்வவம்சம்

1. இந்திரனே! நான உன்னைப் போல் எல்லாச் செல்வங்களின் தலைவனாயிருந்தால் என்னைப் போற்றுபவன் பசுச் செல்வமுடனிருப்பான்.

2. சக்திபதியே நான் கோபதியாக இருந்தால் வழிபடும் அறிஞனுக்கு அளிக்க விரும்பும் செல்வத்தை அளிப்பேன்.

3. இந்திரனே! உனக்குக் கூறும் துதிமொழி பொழிபவனுக்குப் பால் தரும் பசுவாகிறது. அது அவனுக்குப் பசுக்களையும் குதிரைகளையும் தருகிறது.

4. இந்திரனே! நீ போற்றப்பட்டவுடன் அளிக்க விரும்பும் செல்வத்தைத் தேவனாலும், மனிதனாலும் தடுக்க இயலாது.

5. யக்ஞம் இந்திரனை மேம்படுத்தியது. அதனால் அவன் வானிலே மேகத்தைச் சலனப்படுத்தி புவியை மழையால் நிரப்பி நிலைப்படுத்தினான். 6349

6. இந்திரனே! ஸதா போற்றப்படுபவனும், பகைவனின் எல்லாச் செல்வங்களையும் ஜயிப்பவனுமான உன்னுடைய பாலனத்தை நாங்கள் விரும்புகிறோம்.



7. இந்திரன் ஸோம மதத்திலே வலனைக் கொல்ல ஒளியுள்ள வானைக் கடந்தான்.

8. அவன் வலனைத் தலைகீழாகத் தள்ளி குகையிலே மறைக்கப்பட்டிருந்த பசுக்களைப் புலப்படுத்தி அவற்றை அங்கிரஸர்களுக்காக விடுவித்தான்.

9. ஒளி மண்டலத்தின் நட்சத்திரங்கள் எவனாலும் அசைக்கப்படாமலிருக்க அவை இந்திரனால் திடமாயும், திரமாயும், திண்மையாயும் கற்பிக்கப்பட்டன.

10. இந்திரனே! உன்னுடைய ஸ்தோமமானது சலங்களின் மதமடைந்த அலைகளைப் போல் உயரத்தில் எழுகிறது. உன்னை இன்புறுத்தும் ஸோம ரசங்கள் பிரகாசிக்கின்றன. 6354

11. இந்திரனே! நீ ஸ்தோமத்தாலும், தோத்திரங்களாலும் போற்றுவதற்குரியவனாயிருக்கிறாய். வழிபடுபவர்களான எங்களை மங்களப்படுத்துபவனாயிருக்கிறாய்.

12 நீண்ட பிடரி கேசங்களுள்ள குதிரைகள் செல்வந்தரும் இந்திரனை ஸோமத்தைப் பருக யக்ஞத்துக்கு ஏந்தி வருக

13. இந்திரனே! நீ உன்னுடைய பகைவர்களை எல்லாம் ஜயித்த போது சலங்களின் நுரையால் வச்சிரத்தால் நமூசியின் தலையை வெட்டினாய்

14 இந்திரனே! தங்கள் மாயைகளால் மேலே சென்றவர்களும், சோதிக்கு ஏறியவர்களுமான தஸ்யுக்களைக் கீழே தள்ளினாய்.

15. இந்திரனே! ஸோமத்தை மேன்மையாய்ப் பருகுபவனான நீ ஸோமத்தைப் பொழியாத பகைச் சங்கத்தை அழிக்கிறாய். 6359

## 15. இந்திரன்

### 635. கோஸூக்தினனும் அசுவஸூக்தினனும்—கண்வவம்சம்

1. பலரால் அழைக்கப்படுபவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரனைப் போற்றுங்கள். பாக்களால் பலிஷ்டனை உயர்த்துங்கள்.

2. இரு உலகங்களிலும் ஊக்கமாயுள்ள இந்திரனுடைய மகத்தான ஆற்றல், சோதியையும் புவியையும் தாங்குகிறது. அவன் தீரத்தால் பாயும் சலங்களையும் துரிதமான மேகங்களையும் ஏந்துகிறன்.

3. பலரால் போற்றப்படும் நீ அரசுபுரிகிறாய். மிகுந்த உணவையும் வெற்றியின் செல்வங்களையும் பற்ற நீ ஒருவனுகவே பகைவர்களைக் கொன்முய்.

4. வச்சிரமேந்துபவனே! நாங்கள் உன்னுடைய வர்ஷிப்பதும், போர்களிலே பகைவர்களை ஜயிப்பதும், உலகத்தைச் செய்வதும், குதிரைகளோடு கீர்த்தியுள்ளதுமான மதத்தைப் போற்றுகிறோம்.

5. நீ உன்னுடைய மதத்திலே மநுவுக்கும் ஆயுவுக்கும் சோதி மண்டலங்களைப் புலப்படுத்தினய். நீ இந்த யக்ஞத்தை இன்பமாகி நடத்துகிறய். 6364

6. துதிப்பவர்கள் இப்பொழுதும் பூர்வத்தில் போல் உன்னைப் போற்றுகிறர்கள். நீ எப்பொழுதும் பர்ஜன்யனின் மனைவிகளான சலங்களைத் தினந்தோறும் உன் வசத்தில் வைத்திருக்கவும்.

7. தோத்திரமானது உன்னுடைய மகத்தான இந்திரியத்தையும், பலத்தையும், மனத்திண்மையையும் போற்றத் தகுந்த வச்சிராயுதத்தையும் கூர்ப்பிக்கிறது.

8. இந்திரனே! சோதி உன்னுடைய ஆண்மையைப் புலப்படுத்துகிறது. புவி உன்னுடைய புகழைப் பரப்புகிறது. சலங்களும், மலைகளும் உன்னை இன்புறுத்துகின்றன.

9. மனைகளைத் தரும் மகானன விஷ்ணுவும், மித்திரனும், வருணனும் உன்னைப் போற்றுகிறர்கள். மருத்துக்களின் படை மதத்துக்கு உன்னைப் பின்பற்றுகிறது.

10. இந்திரனே! வர்ஷிப்பவனுன நீ சனங்களின் நடுவே உத்தம சீலனுய்ப் பிறந்தாய். நீ எல்லா நல்ல மக்கட்களையும் ஏந்துகிறய். 6369

11. பலரால் போற்றப்படும் நீ, ஒருவனுகவே பல மகத்தான பகைவர்களை அழிக்கிறய். இந்திரனைத் தவிர வேறு எவனும் அத்தகைய மகத்தான வீரச் செயல்களைச் செய்யவில்லை.



12. இந்திரனே! போர் நடைபெறுங்கால் சனங்கள் துதியோடு பாலனத்துக்காகப் பல வழிகளால் உன்னை அழைக்குங்கால் அப்படி எங்கள் தலைவர்களால் அழைக்கப்படும் நீ, எங்களுடைய எல்லாப் பகைவர்களையும் ஜயிக்கவும்.

13. இந்திரனுடைய எல்லா வடிவங்களும் எங்களுடைய பரந்த மனையினுள் நுழைந்திருக்கின்றன. இந்திரன் உங்களுக்கு வெற்றியின் செல்வத்தை அளிக்க சசீபதியான அவனை இன்புறுத்தவும். 6372

## 16. இந்திரன்

### 636. இரிம்பிஷ்டி காண்வன்

1. மொழிகளால் துதிக்கப்படுபவனும், தலைவனும், பகைவர்களை ஜயிப்பவனும், கொடையாளனும், சனங்களின் நடுவே சக்கரவர்த்தியுமான இந்திரனைப் போற்றுங்கள்.

2. எந்த இந்திரனிலே எல்லாத் துதிகளும், கீர்த்திகளும், கடலிலே சல சமூகத்தைப் போல் ரமிக்கின்றனவோ அவனைப் போற்றுங்கள்.

3. நான் முதல்வர்களின் நடுவே மிக்கப் பிரகாசிப்பவனும், போரிலே மகத்தான வீரச் செயல்களை நடத்துபவனும், வலியனுமான இந்திரனை நல்ல துதியால் செல்வத்துக்காகப் போற்றுகிறேன்.

4. அவனுடைய மதங்கள் பூரணமானவை. கம்பீரமுள்ளவை; பரந்தவை; ஜயிப்பவை; போரிலே ஊக்கப்படுத்துபவை. அவனைப் போற்றுகிறேன்.

5. வழிபடுபவர்கள், பகைவனிடம் வைக்கப்பட்டுள்ள செல்வத்தைப் பறிக்கும் உதவிக்கு இந்திரனை அழைக்கிறர்கள். இந்திரனேடு சேர்ந்தவர்கள் ஜயிக்கிறர்கள். 6377

6. அவர்கள் அவனை ஊக்கப்படுத்தும் சொற்களால் பெருமைப்படுத்துகிறார்கள். மனிதர்கள் யக்ஞச் செயல்களால் பெருமைப்படுத்துகிறார்கள். ஏனெனில் இந்திரன் செல்வத்தைத் தருபவனாயிருக்கிறான்.

7. இந்திரன் பிரமன். இந்திரன் ரிஷி. இந்திரன் பல மனிதர்களால் மிக்க அழைக்கப்படுகிறான். அவன் மகத்தான செயல்களால் மகானாயிருக்கிறான்.

8. அவன் துதிக்கத் தகுந்தவன். அவன் அழைக்கத் தகுந்தவன். அவன் சத்தியன். சக்திமான். பல செயல்களை நடத்துபவன். அவன் ஒருவனாயிருந்தாலும் பகைவர்களை ஜயிப்பவனாயிருக்கிறான்.

9. மனமறியும் மானிடர்கள், அவனை மந்திரங்களாலும், சாமங்களாலும், சந்தங்களாலும் மேம்படுத்துகிறார்கள்.

10. அவர்கள், செல்வத்தை அருகில் செலுத்துபவனும், போர்களிலே சோதியைப் புலப்படுத்துபவனும், களத்திலே பகைவர்களை ஜயிப்பவனுமான இந்திரனை மேம்படுத்துகிறார்கள். 6382

11. புருஹூதனும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனுமான இந்திரன், எங்களைப் பகைவர்களுக்கப்பாலுள்ள சுவஸ்திக்குக் கடலைக் கடக்கும் கப்பலைப் போல் கடத்திச் செல்வானாக.

12. இந்திரனே! எங்களுக்குப் பலத்தோடு செல்வத்தையளிக்கவும். நல்ல வழியிலே செல்ல எங்களைத் திறப்படுத்தவும். எங்களைச் சுகத்திலே செலுத்தவும். 6384

## 17. இந்திரன்

### 637. இரிம்பிஷ்டி காண்வன்

1. இந்திரனே! வா. நாங்கள் உனக்கு ஸோமத்தைப் பொழிகிறோம். இந்த ரஸத்தைப் பருகவும். நீ என்னுடைய இந்தத் தருப்பையின் மீது அமரவும்.

2. இந்திரனே! நீண்ட கேசங்களுள்ளவையும், மந்திரங்களால் இணைபவையுமான குதிரைகள் உன்னை



இங்கு ஏந்தி வருக. நீ எங்களுடைய தோத்திரங்களைக் கேட்கவும்.

3. ஸோமத்தையளிப்பவர்களும், பொழிந்துள்ள ரஸத்தை ஏந்துபவர்களும், அறிஞர்களுமான நாங்கள் ஸோமத்தைப் பருகும் உன்னை யுக்தமான துதிகளோடு அழைக்கிறோம்.

4. ஸோமத்தையளிக்கும் எங்களிடம் வா. எங்களுடைய உத்தம துதிகளை ஏற்றுக்கொள்ளவும். அழகிய மோவாயுள்ளவனே! ஸோமத்தைப் பருகவும்.

5. நான் ஸோமத்தால் உன் வயிற்றை நிரப்புகிறேன். அது உன் அங்கங்களில் எல்லாம் பரவுக. உன்னுடைய நாக்கால் இனிய ஸோமத்தைச் சுவைக்கவும். 6389

6. ஈகையனான உனக்கு இனிய ஸோமம் சுவையுடனாகுக. உன் தேகத்துக்கு இதமாகுக. உன் இதயத்துக்கு மதமளிப்பதாகுக.

7. தீர்க்கதரிசியான இந்திரனே! பாலோடு பாங்கான இந்த ஸோமம் வெண்ணுடை தரித்த பெண்ணைப் போல் உன்னிடம் வருக.

8. நீண்ட கழுத்தும், பரந்த வயிறும், திறக்கைகளுமுள்ள இந்திரன் ஸோமான்ன மதத்திலே விருத்திரர்களைக் கொல்லுகிறான்.

9. இந்திரனே! நீ உன் பலத்தால் அனைவருக்கும் தலைவனாயிருக்கிறாய். எங்களிடம் வா. விருத்திரர்களைக் கொல்லும் நீ, பகைவர்களை அழிக்கவும்.

10. உன்னுடைய பொழியும் வழிபடுபவனுக்குச் செல்வத்தைச் செலுத்தும் அங்குசம் நீளமாகுக. 6394

11. இந்திரனே! தருப்பையின் மீது பவித்திரத்தால் சுத்தமாகும் இந்த ஸோமம் உனக்குப் பாய்கிறது. துரிதமாக வா. பருகவும்.

12. ஒளியில் புகழ்பெற்றவனே! துதியில் புகழ் பெற்றவனே! உன்னைத் திருப்தி செய்ய இந்த ஸோமம் பொழி

யப்பட்டிருக்கிறது. பகையழிப்பவனே! நீ மேன்மையாய் அழைக்கப்படுகிறாய்.

13. சிருங்கவிருஷனுடைய புதல்வனான, பேரனான இந்திரன் குண்டபாய்ய யக்ஞத்தால் பாலனமாயிருந்தான். ஆதலால் பூர்வத்திலே அறிஞர்கள் தங்கள் மனங்களை இந்த யக்ஞத்திலே செலுத்தினார்கள்.

14. மணியின்பதியே! மணியின் ஸ்தம்பம் நிலைத்திருக்க. ஸோமமளிப்பவர்களுடைய தேசமும் பலமுடனிருக்க. ஸோமத்தைப் பருகுபவனும், அசுரர்களின் பல புரங்களைப் புடைப்பவனுமான இந்திரன் எப்பொழுதும் முனிகளின் நண்பனாயிருப்பானாக.

15. பாம்பைப்போல் உயர்த்திய தலையுள்ளவனும், போற்றத் தகுந்தவனும், பசுக்களை மீட்பவனுமான இந்திரன் ஒருவனே பல படைகளுக்கு உயர்ந்தவனாயிருக்கிறான். வழிபடுபவன் இந்திரனை ஸோமபானத்துக்குத் துரிதமாய் இயக்கும் தோத்திரத்தால் தடைவாரால் சுமைக் குதிரையைப் போல் எங்கள் முன்னே செலுத்துகிறான். 6399

## 18. ஆதித்தியர்கள்

### 638. இரிம்பிடி காண்வன்

1. மானிடன் இப்பொழுது இந்த ஆதித்தியர்கள் யஜிக்கப்படுங்கால் அவர்களிடம் மிக்க நூதனமான செல்வங்களை வேண்டுவானாக.

2. இந்த ஆதித்தியர்களின் பாதைகள் தடையற்றவை எதிர்ப்பற்றவை. பாலிக்கும் அந்த வழிகள் எங்களைச் சுகப்படுத்திச் செழிப்பிக்க.

3. ஸவிதாவும், பகனும், வருணனும், மித்திரனும், அரியமானும் நாங்கள் நாடும் செழித்த சுகத்தைத் தருவார்களாக.

#### அதிதி

4. பலரால் விரும்பப்படுபவளும், பாலனத்தை ஏந்தி வருபவளும், தேவியுமான அதிதி சுகப்படுத்தும் தேவர்களோடு எங்களிடம் அனுகூலமாய் வருவாளாக.



#### ஆதித்தியர்கள்

5. அதிதியின் இந்தப் புதல்வர்கள் எங்ஙனம் பகைவர்களை விலக்கவேண்டுமென்பதை அறிகிறார்கள். மகத்தான செயல்களை நடத்துபவர்களும், பாலனத்தை அளிப்பவர்களுமான அவர்கள் எங்களைப் பாவத்திலிருந்து எங்ஙனம் நீக்க வேண்டுமென்பதை அறிகிறார்கள். 6404

#### அதிதி

6. அதிதி எங்கள் பசுக்களைத் தினத்தில் பாலிப்பாளாக. அதிதி அவளுடைய நித்தியமான ஆதரவால் எங்களைப் பாவத்திலிருந்து பாலிப்பாளாக.

7. போற்றத் தகுந்த அதிதி தினத்திலே பாலனத்துக்காக எங்களிடம் வருவாளாக. அவள் தண்மையளிக்கும் சுகத்தைத் தருவாளாக. அவள் எங்களுடைய பகைவர்களை விலக்குவாளாக.

#### அசுவினிகள்

8. இரு தேவத்தன்மைகளுள்ள மருத்துவர்களான அசுவினிகள் எங்களைச் சுகப்படுத்துவார்களாக. அவர்கள் எங்களிடமிருந்து பாபத்தை நீக்குவார்களாக. அவர்கள் எங்கள் பகைவர்களை விலக்குவார்களாக.

#### அக்கினி, சூரியன், வாயு

9. அக்கினி அனல்களோடு எங்களுக்குச் சுகத்தை அளிப்பானாக. சூரியன் எங்களுக்குச் சுகத்தை ஒளிப்படுத்துவானாக. குற்றமற்ற காற்று எங்களுக்கு சுகத்தை வீசுவானாக. அவர்கள் எல்லாம் எங்களுக்குப் பகைவர்களை விலக்குவார்களாக.

#### ஆதித்தியர்கள்

10. ஆதித்தியர்களே! எங்களிடமிருந்து நோயையும், பகைவனையும், துன்மதியையும் விலக்குங்கள். எங்களைத் தீமையிலிருந்து தனிப்படுத்துங்கள். 6409

11. ஆதித்தியர்களே! எங்களிடமிருந்து கொடுமையையும், மதியின்மையையும் விலக்குங்கள். அனைத்தையு

மறியும் நீங்கள், துவேஷிப்பவர்களைத் தனிமைப்படுத் துங்கள்.

12. குற்றஞ் செய்யும் ஸ்தோதாவைக் கேட்டிலிருந்து விடுவிக்கும் சுகத்தை தானசீலர்களான ஆதித்தியர்களான நீங்கள் அழியுங்கள்.

13. கொடிய தன்மையால் எங்களுக்குக் கேட்டைத் தேடும் மானிடன் தன் கேடுகளால் தன்னைத் துன்புறுத்திக் கொண்டு துக்கப்படுவானாக.

14. உள்ளத்தில் ஒன்று நினைத்துப் புறத்தில் வேறு பேசுபவனும், எங்களைத் துன்புறுத்த விரும்புபவனும், பழித்துப் பேசி பகைமையுடனுமுள்ள மானிடனிலே பாவம் பரவுக.

15. தலைவர்களே ! நீங்கள் கபடமற்றவர்களை விரும்பு கிறீர்கள். வசுக்களே ! நீங்கள் மானிடர்களின் இருதயங் களை அறிகிறீர்கள். கபடனையும் கபடமற்றவனையும் உணர் கிறீர்கள். 6414

16. நாங்கள் மலைகளின் சலங்களின் சுகத்தை வேண்டுகிறோம். சோதி புவிகளே ! எங்களிடமிருந்து பாவத்தைத் தூரத்திலே விலக்குங்கள்.

17. வசுக்களே ! நீங்கள் எங்களை எல்லாத் துன்பங் களுக்கப்பால் உங்களுடைய கப்பலிலே மங்களகரமான சுகத்தோடு ஏற்றிச் செல்லுங்கள்.

18. உத்தம ஒளியுள்ள ஆதித்தியர்களே ! எங்களு டைய புதல்வர்களும், பேரர்களும் நீடுழி காலம் அனுபவிப் பதற்கான ஆயுசை அளியுங்கள்.

19. ஆதித்தியர்களே ! எங்களால் அளிக்கப்படும் யக்ஞம் உங்கள் அருகில் வருகிறது. ஆதலால் எங்களைச் சுகப்படுத்துங்கள். நாங்கள் எப்பொழுதும் உங்கள் பந்துத் தன்மையில் இருப்போமாக.



20. நாங்கள் ஸ்வஸ்திக்காக மகத்தான மனையை மருத்துக்களைப் பாலிக்கும் இந்திரனிடமும், அசுவினிகளிட மும், மித்திரனிடமும், வருணனிடமும் கேட்கிறோம்.

21. மித்திரனே ! வருணனே ! அரியமானே ! மருத் துக்களே ! இன்னலற்றதும், மக்கள்களுள்ளதும், துதியாருக மானதும், முக்காப்புகளுள்ளதுமான மனையை எங்களுக் களியுங்கள்.

22. ஆதித்தியர்களே ! மானிடர்களான நாங்கள் மிருத்யுவின் பந்துக்களாவதால், வெகு காலம் வாழ்வதால் எங்கள் ஆயுளைச் செழிப்பியுங்கள். 6421

## 19. அக்கினி

### 639. ஸோபரி காண்வன்

1. அனைவர்க்கும் தலைவனான அக்கினியைப் போற்ற வும். அறிஞர்கள் தேவனான தலைவனை அணுகுகிறார்கள். அவனால் அவர்கள் தேவர்களிடம் அவியைச் செலுத்து கிறார்கள்.

2. விப்பிரனான ஸோபரியே ! செல்வத்தை அளிப்ப வனும், விரும்பத் தகுந்த ஒளியுள்ளவனும், ஸோமமளிக்கப் படும் இந்த யக்ஞத்தைக் கிரமப்படுத்துபவனுமான இந்தப் பழைய அக்கினியை யாகத்திலே போற்றவும்.

3. நாங்கள், தேவர்களின் நடுவே தேவனும், ஹோதா வும், அமிருதனும், இந்த யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவனும், யக்ஞாருகனுமான உன்னைப் போற்றுகிறோம்.

4. நான் பலத்தின் புதல்வனும், செல்வமுள்ளவனும், ஒளிப்படுத்துபவனும், உத்தம சோதியுள்ளவனுமான அக் கினியைத் துதிக்கிறேன். அவன் எங்களுக்காக யக்ஞத்தால் சோதியிலிருக்கும் மித்திரனுடைய, வருணனுடைய, சலங் களுடைய செல்வமான சுகத்தை அடைவானாக.

5. ஸமிதையாலும், ஆகுதியாலும், வேதத்தாலும், உத்தம யக்ஞத்தாலும், வணக்கத்தாலும் போற்றும் மனித னுடைய, 6426

6. துரித குதிரைகள் பகைவன் மீது பாய்கின்றன அவனுக்கு மிக்கப் பிரகாசிக்கும் புகழ் தோன்றுகிறது. மானிடனாலும், தேவனாலும் செய்யப்படும் எந்தத் தீமையும் அவனைப் பற்றாது.

7. பலத்தின் மகனே! உணவின் தலைவனே! நாங்கள் உன்னுடைய பல அனல்களோடு நல்ல அக்கினிகளுள்ளவர்களாவோமாக. உத்தம வீரத் தன்மைகளுள்ள நீ, எங்களை விரும்புபவனாகவும்.

8. அக்கினி அதிதியைப்போல் போற்றப்படாமல் வழிபடுபவர்களிடம் இனிமையுள்ளவனாகிறான். அவன் செல்வத்தை ஏந்தி வரும் தேரைப்போல் தென்படுகிறான். உன்னில் பூரண பாலனம் புலனாகிறது. நீ செல்வங்களின் அரசனாயிருக்கிறாய்.

9. யக்ஞத்தைச் செய்பவன் உரிய பயனைப் பெறுவானாக. செல்வமுள்ள அக்கினியே! அவன் போற்றுவதர்க்கருகனாகிறான். அவன் தன் தூய செயல்களால் செல்வத்தைத் தருபவனாயிருப்பானாக.

10. நீ எவனுடைய யக்ஞத்திலே தலைமை வகிக்கிறாயோ அவன் வீரப் புதல்வர்கள் நிறைந்த மனையிலே செழிக்கிறான். அவன் வீரர்களோடும் குதிரைகளோடும் தன் நோக்கங்களைச் சாதித்துக் கொள்கிறான். 6431

11. எவனுடைய மனையிலே அனைவராலும் விரும்பப்படுபவனும், சுந்தரனுமான அக்கினி, ஸ்தோமத்தையும், அன்னத்தையும் பெற்று, அவிகளை வியாபகர்களான தேவர்களிடம் செலுத்துகிறானோ, அவன் தன் நோக்கங்களைச் சாதித்துக் கொள்கிறான்.

12. வசுவே! வலிமையின் மகனே! தானத்திலே துரிதனும், விப்பிரனான ஸ்தோதாவினுடைய மொழியைத் தேவர்களுக்கடியிலும், மனிதர்களுக்கு மேலும் நிலைப்படுத்தவும்.

13. வலியனும், துரிதமாய்த் துலங்குபவனுமான அக்கினியை அவிதானங்களாலும், வணக்கங்களாலும், துதியாலும் ஏந்துபவன் செழிக்கிறான்.

14. ஸமிதையுடன் அனலின் பல வடிவங்களால் அதிதியான அக்கினியைப் போற்றும் மனிதன், தன் செயல்களால் செல்வனாகி சிறப்பிலே எல்லா சனங்களையும் பிரளய சலத்தைக் கடந்தவன்போல் முந்துவான்.

15. அக்கினியே! எங்கள் மனையிலே நுழையும் எந்த நரமாமிசம் புசிப்பவனையும், துன்புறுத்துபவனுடைய எந்த கோபத்தையும் அழிக்கும் ஆற்றலை எங்களுக்களிக்கவும். 6436

16. இந்திரனால் பாலனமாகி எந்த வழியைப் பின்பற்ற வேண்டுமென உன் அக்கினியின் ஆற்றலால் நாங்கள் நன்கறிந்து எந்த காந்தியால் வருணனும், மித்திரனும், அரியமானும், நாஸத்தியர்களும், பகனும் பிரகாசிக்கிறார்களோ அந்த காந்தியைப் போற்றுகிறோம்.

17. அறிஞனே! தேவனே! எந்த அறிஞர்கள் நரர்களைக் காண்பவனும், எல்லாச் செயல்களை நடத்துபவனுமான உன்னை ஸ்தாபிக்கிறார்களோ அவர்களே மிக்கப் போற்றுபவர்கள்.

18. மிக்கச் செல்வமுள்ள அக்கினியே! அவர்கள் வேதியைச் செய்தார்கள். அவர்கள் அவிகளை அளித்தார்கள். நல்ல தினத்திலே ஸோமத்தைப் பிழிந்தார்கள். உன்னில் அன்பை ஸ்தாபித்தவர்கள் தங்கள் ஆற்றல்களால் மகத்தான செல்வத்தை ஜயித்தார்கள்.

19. அவிகள் அளிக்கப்பட்ட அக்கினி எங்களுக்கு மங்களத்தை அளிக்க. ஸுபகனே! உன்னுடைய தானங்கள் மங்களமாகுக. நாங்கள் செய்யும் யக்ஞம் மங்களத்தைத் தருக. எங்களுடைய துதிகள் மங்களத்தை அளிக்க.

20. நீ எந்தத் தீர மனத்தால் போர்களிலே ஜயிக்கிறாயோ அந்தத் தீர மனத்தை எங்களுக்குப் போரிலே அளிக்கவும். நீ எங்கள் பகைவர்களின் பல திடமான எண்

ணங்களைப் பங்கப்படுத்தவும். நாங்கள் எங்கள் தோத்திரங்களால் உன்னைப் போற்றுவோமாக. 6441

21. நான், மநுவால் துதியோடு ஸ்தாபிக்கப்பட்டவனும், தேவர்களால் பிரேரிக்கப்பட்டவனும், போற்றத் தகுந்தவனும், அவிகளை வகிப்பவனும், தலைவனும், தூதனுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

22. எந்த அக்கினி சத்திய மொழிகளோடு துதியாகி நெய்களால் ஆஹுதமாகி, உத்தம வீரப் புதல்வனைத் தருகிறானோ அந்தக் கூரிய சுவாலையுள்ள தருணனாயிருக்கும் அரசனான அக்கினிக்கு அவியையளிக்கவும்.

23. அவிகளால் போற்றப்பட்டு அக்கினி தன் குரலை மேலும் கீழும் கிரணத்தைச் செலுத்தும் சூரியனைப் போல் பிரேரிக்குங்கால் நாங்கள் அவனைப் போற்றுகிறோம்.

24. மநுவால் நிறுவப்பட்ட தேவனும், சுகந்தமான வாயால் அவிகளைச் செலுத்துபவனும், நல்ல யக்ஞனும், ஹோதாவும், தேவனும், அமிருதனுமான அக்கினி, விரும்பத்தகுந்த செல்வங்களை வழிபடுபவர்களுக்களிக்கிறான்.

25. அக்கினியே! பலத்தின் மகனே! நெய்யால் போற்றப்படுபவனும் நட்புள்ள ஒளியோடிருப்பவனுமான உன்னைப் போல் மரணத்துக்குரிய நான் இயங்கினால் மரணமில்லாமலாவேன். 6446

26. வசுவே! போற்றத் தகுந்தவனே! உன்னை மற்றவர்கள் பழிக்கவும், பாபப்படுத்தவும் இடங்கொடேன். அக்கினியே! என் துதிகளைக் கூறுபவன் வறுமையையும், வேதனையையும் அடையாமலிருப்பானாக. அவன் பாபத்திலும் இயங்காமலிருப்பானாக.

27. தந்தையால் புதல்வனைப் போல் பாலிக்கப்படும் அக்கினி எங்களுடைய மனையிலிருந்து எங்களுடைய அவியைத் தேவர்களிடம் துரிதமாய்ச் செலுத்துவானாக.

28. மனைகளை அளிக்கும் அக்கினியே! மானிடனான நான் உன்னுடைய அருகிலுள்ள பாலனங்களால் எப்பொழுதும் இன்பத்திலிருப்பேனாக.



29. அக்கினியே! நான் உன்னுடைய அறிவாலும் தானங்களாலும், தலைமைத் தன்மையாலும் செல்வத்தைக் குவிப்பேனாக. உத்தமனான அக்கினியே! உன்னையே அறிஞர்கள் பேரறிஞன் எனக் கூறுகிறார்கள். நீ எனக்குச் செல்வத்தையளிக்க இன்பமாகவும்.

30. அக்கினியே! உன்னால் நண்பனாக ஏற்றுக்கொள்ளப்படுபவன் உன்னுடைய பாலனங்களால் உத்தம வீரர்களோடும் மகத்தான ஆற்றல்களோடும் செழிக்கிறான். 6451

31. உன்னுடைய தீப்பொறி கருப்பாயிருக்கிறது. அது சப்திக்கிறது. உரிய காலத்தில் சொலிப்பிக்கப்படுகிறது. உதாரனே! அது பற்றப்படுகிறது. நீ மகத்தான உஷைகளின் பிரிய நண்பனாயிருக்கிறாய். நீ நிசிப் பொருள்களில் பிரகாசிக்கிறாய்.

32. ஸோபரிகளான நாங்கள் ஆயிரங்கதிர்களிருப்பவனும், நன்கு ஏந்தப்படுபவனும், சக்கரவர்த்தியும், திரஸதஸ்யுவின் நண்பனுமான அக்கினியிடம் பாலனத்துக்காக வந்திருக்கிறோம்.

33. அக்கினியே! வேறு அனல்களை, கிளைகளை அடைந்துள்ள மரத்தைப் போலிருப்பவனே! மனிதர்களின் நடுவிலிருக்கும் நான் உன் ஆற்றல்களைத் துதித்து வழிபடும் வேறு சனங்களைப் போல் மிக்க உணவுள்ளவனாவேனாக.

### ஆதித்தியர்கள்

34. துரோகமற்றவர்களும், உத்தம தானமளிப்பவர்களுமான ஆதித்தியர்களே! எல்லா அவிச் செல்வர்களின் நடுவே நீ எந்த மனிதனை யக்ஞப் பூர்த்திக்குச் செலுத்துகிறாயோ அவன் அனைத்தையுமடைகிறான்.

35. அரசர்களான ஆதித்தியர்களே! பகைவர்களை வெல்லுபவர்களே! யக்ஞஞ் செய்பவர்களைத் துன்புறுத்தும் எவனையும் நீங்கள் தாழ்த்துகிறீர்கள். மித்திரனே! வருணனே! அரியமானே! நாங்கள் உங்களுடைய யக்ஞத்தின் தலைவர்களாயிருப்போமாக.

திரஸதஸ்யு பௌருகுத்ஸ்யன்

36. உத்தம தானசீலனும், நல்லவர்களைப் பாலிப்ப வனும், தலைவனும், புருகுத்ஸனின் புதல்வனுமான திரஸ தஸ்யு எனக்கு ஐம்பது பெண் குதிரைகளை அளித்தான்.

37. ஸுவாஸ்துவின் கரைகளிலே பசுக்களின் தலைவ னான சியாவன் எனக்கு எழுபத்து மூன்று பசுக்களை அளித் தான். அவன் வீரர்களின் தலைவன்; பிரியமுள்ளவன்; மிக்கத் தானசீலன். 6458

## 20. மருத்துக்கள்

### 640. ஸோபரி காண்வன்

1. தூரமாய்ச் செல்பவர்களும், ஸமமான கோபமுள்ள வர்களுமான நீங்கள் இங்கு வாருங்கள். எங்களைத் துன் புறுத்தாதீர்கள். கனத்த மலைகளை ஆட்டும் நீங்கள் எங்க ளிடமிருந்து விலகாதீர்கள்.

2. ருத்திரப் புதல்வர்களும், ரிபுக்ஷணர்களும், மருத் துக்களுமான நீங்கள், உங்களுடைய பிரகாசமான வலிய சக்கரங்களுள்ள தேர்களிலே வாருங்கள். பலரால் விரும் பப்படுபவர்களும், ஸோபரியை விரும்புபவர்களுமான நீங்கள், இன்று எங்களுடைய யக்ஞத்துக்கு உணவோடு வாருங்கள்.

3. நாங்கள், வியாபகமாகும் மழையைப் பொழிபவர் களும், ருத்திரப் புதல்வர்களும், ஊக்கமுள்ளவர்களுமான மருந்துக்களின் உக்கிர பலத்தை அறிகிறோம்.

4. அவர்கள் தீவுகளின் மீது பாய்கிறார்கள். திரமான மரங்களும் கட்டத்தோடு நின்றன. அவர்கள் சோதியை யும் புவியையும் ஆட்டுகிறார்கள். சலங்களைச் செலுத்து கிறார்கள். சுந்தரப் படைகளும், சுய சோதியுமுள்ள நீங்கள் இயங்குங்கால் ஒவ்வொரு பொருளும் கலக்கமாகிறது.

5. நீங்கள் வருங்கால் அசைவற்ற மலைகளும், மரங்க ளும் சப்திக்கின்றன. உங்கள் சலனத்திலே புவியும் அலரு கிறது. 6463



6. மருத்துக்களே! திறக்கைகளுள்ள தலைவர்களான நீங்கள், உங்கள் அங்கங்களில் அணிந்திருக்கும் ஆபரணங் களைப் புலப்படுத்துங்கால், உங்கள் வேகத்துக்குப் பயந்து சோதியும் பரந்த வானிலிருந்து நீங்கி மேலே ஏறுகிறது.

7. ஒளியுள்ள ஊக்கமுள்ள மழை வடிவமுள்ள கபட மற்ற தலைவர்கள் சுவதாவை ஏற்குங்கால் தங்களுடைய மகத்தான புகழைப் புலப்படுத்துகிறார்கள்.

8. தங்கத் தேரின் கோசத்தினுள் ஸோபரிகளின் பாக் களோடு மருத்துக்களின் நாதம் கேட்கிறது. பசுவின் மக் கட்களும், ஸுஜாதர்களும், மகான்களுமான மருத்துக்கள், எங்களுடைய உணவுக்கும், போகத்துக்கும், அன்புக்கும் துரிதமாவார்களாக.

9. ஸோமத்தைத் தெளிக்கும் நீங்கள், வர்ஷிக்கும் மருத்துக்களின் வலிய படைக்கு அவிகளை அளியுங்கள். அப்படைக்கு விருஷபன் தலைவனாயிருக்கிறான்.

10. மருத்துக்களே! தலைவர்களான நீங்கள் எங்கள் அவிகளை அருந்த, உங்களுடைய வர்ஷிக்கும் குதிரைகளுள். ளதும், வர்ஷிக்கும் வடிவமுள்ளதும், வர்ஷிக்கும் நாபிகளு முள்ளதுமான தேரிலே, துரிதமாய்ப் பறக்கும் பறவை களைப் போல் அனாயாஸமாய் எங்கள் அவிகளை அருந்த வாருங்கள். 6468

11. அவர்களுடைய ஆபரணம் ஸமமாயிருக்கிறது. தங்கச்சரடுகள் அவர்களுடைய மார்புகளிலே துலங்கு கின்றன. அவர்கள் தோள்கள் மீது ஈட்டிகள் மின்னு கின்றன.

12. உக்கிரர்களும், ஊக்கமுள்ளவர்களும், உக்கிரக் கைகளுமுள்ள அவர்கள் சிரமப்படாமல் தங்கள் அங்கங் களைப் பாலித்துக்கொள்கிறார்கள். உங்கள் தேர்களிலே சரங்களும், விற்களும் வலிமையுடனிருக்கின்றன. பகைவர் களை ஜயிக்கும் புகழ் உங்களிடமிருக்கிறது.

13. வழிபடுபவர்களின் போகத்துக்காகப் பலப்படுத் தும் பிதாக்களின் உணவைப் போல் சலத்துக்குச் சமமாய்

மிக்கப் பரவியுள்ள புகழ் பெற்ற ஒரு பெயர் அவர்களுக் கெல்லாம் அளிக்கப்பட்டிருக்கிறது.

14. அவர்களை வணங்கவும். மருத்துக்களை வந்திக் கவும். தலைவர்களிடம் சேவகனைப் போல் நாம் எல்லாப் பொருள்களையும் ஆட்டிவைக்கும் மருத்துக்களிடம் உட்பட் டிருக்கிறோம். ஆதலால் அவர்களுடைய தானங்கள் தாரா ளமாயிருக்கின்றன.

15. மருத்துக்களே! பூர்வ தினங்களிலே உங்கள் பாலனங்களிலிருந்தவன் அவற்றை இப்பொழுது அனுபவிப் பவனைப்போல் சௌபாக்கியனாயிருந்தான். 6473

16. தீரர்களே! கலக்கும் மருத்துக்களே! எவனு டைய அவிகளை அருந்த நீங்கள் செல்கிறீர்களோ அவன் நீங்கள் அளிக்கும் செல்வத்தையும் சக்தியையும் உணவை யும் அனுபவிக்கிறான்.

17. மேகத்தைத் தோற்றுவிப்பவர்களும், தருணர் களும், ருத்திரப் புதல்வர்களுமான மருத்துக்கள் சோதியிலி ருந்து வருங்கால் அவர்கள் விருப்பத்தைப் போல் இத் தோத்திரம் அமைக.

18. தருணர்களும், பொழிபவர்களுமான மருத்துக் களான நீங்கள், உத்தம இருதயங்களோடு எங்களிடம் வந்து உங்களை ஏத்தும் தானசீலர்களுக்கும், ஆர்வத்தோடு ஏத்துபவர்களுக்கும் செல்வத்தை அளியுங்கள்.

19. ஸோபரியே! தருணர்களும், வர்ஷிப்பவர்களும், சுத்தப்படுத்துபவர்களுமான மருத்துக்களை மிக்கப் புதிய பாட்டால், காளைகளைப் போற்றும் உழவனைப் போல் பாடவும்.

20. அழைப்பவர்களால் அழைக்கப்படும் மல்லனைப் போல் இருப்பவர்களும், எல்லாப் போர்களிலே சதா வெற்றி யுள்ளவர்களும், உணவைத் தாராளமாயளிப்பவர்களும், இன்புறுத்துபவர்களும், மழையைப் பொழிபவர்களுமான மருத்துக்களை மொழியால் போற்றவும். 6478



21. ஸமமான கோபமுள்ளவர்களும், பசுவின் புதல் வர்களும், சம குலத்தால் பந்துக்களாயிருப்பவர்களுமான மருத்துக்கள் எல்லாத் திசைகளிலும் சென்று பரஸ்பரம் சுவைத்துக்கொள்கிறார்கள்.

22. நடிக்கும் மருத்துக்களே! மார்புகளிலே பொன் னாபரமணிந்த உங்களைப் போற்றும் மனிதன் உங்களிடம் சகோதரத் தன்மைகளைப் பெறுகிறான். நீங்கள் எங்களிடம் அனுகூலமாய்ப் பேசுங்கள். ஏனெனில் ஏத்துவதற்குரிய யக்ஞத்திலே உங்களுடைய சகோதரத்தன்மைப் புலனா கிறது.

23. துரிதர்களாம் உத்தம தானசீல நண்பர்களான மருத்துக்களாம் நீங்கள் மாறாத மருந்தை எங்களுக்கு ஏந்தி வாருங்கள்.

24. சுகத்தைத் தருபவர்களும், பகைவர்களால் ஜயிக் கப்படாதவர்களான மருத்துக்களாம் நீங்கள், எந்தப் பால னங்களால் சமுத்திரத்தைப் பாலித்தீர்களோ, எவற்றால் பகைவர்களை ஜயித்தீர்களோ, எவற்றால் தாகமடைந்த கோதமனுக்குக் கிணற்றைக் கற்பித்தீர்களோ அந்த மங்கலப் பாலனங்களால் எங்களைச் சுகப்படுத்துங்கள்.

25. மருத்துக்களே! உத்தம யக்ஞமுள்ள நீங்கள், ஸிந்துவிலே, அஸிக்னியிலே, கடல்களிலே, அலைகளிலே, மலைகளிலே இருக்கும் மருத்துக்களையெல்லாம் நீங்கள் அறிகிறீர்கள்.

26. அம்மருந்துக்களையெல்லாம் காணும் நீங்கள் அவற்றை எங்கள் தேகங்களின் தன்மைக்காக சேகரி யுங்கள். நாங்கள் அவற்றை உபயோகிக்கும் வழிகளை அறிய எங்களுக்குக் கற்பியுங்கள். மருத்துக்களே! மருத் துக்களே! எங்கள் நோயாளியின் நோயை நிலத்திலே செலுத்துங்கள். தளர்ந்த அங்கத்தை மீண்டும் நிரப்படுத் துங்கள். 6484

# 21. இந்திரன்

## 641. ஸோப்ரி காண்வன்

1. ஒப்பற்ற இந்திரனே! நாங்கள் உன்னை அழைக்கிறோம். நாங்கள் உன்னை அவியால் புஷ்டி செய்து உன்னுடைய பாலனத்தை விரும்பிப் போரிலே பல வடிவங்களுள்ள உன்னைப் பாலனத்துக்காக அழைக்கப்படும் மனிதர்களைப் போல் அழைக்கிறோம்.

2. நாங்கள் பாலனத்துக்காக உன்னை யக்ஞங்களிலே அழைக்கிறோம். எப்பொழுதும் இளைஞனாயிருப்பவனும், உக்கிரமமாயும் தீரனாயுமுள்ளவனுமான அவன், எங்களிடம் வருவானாக. இந்திரனே! நாங்கள் உன்னையே பாலகனாகவும், போற்றத்தகுந்தவனாகவும் பற்றுகிறோம்.

3. அசுபதியே! பசுபதியே! நிலமதியே! இந்த ஸோமங்கள் உனக்குப் பாய்கின்றன. ஸோமபதியே! வா; ஸோமத்தைப் பருகவும்.

4. இந்திரனே! நாங்கள் அறிஞர்கள். ஆனால் எங்களுக்குப் பந்துக்கள் இல்லை. நாங்கள் பந்துக்கள் உள்ள உன்னோடு பந்துக்களாயிருப்போமாக. வர்ஷிப்பவனே! நீ உன்னுடைய சிறப்புக்களோடும் ஸோமத்தைப் பருக வரவும்.

5. நாங்கள், பாலும் தயிரும் கலந்ததும், மதமளிப்பதும், ஒளிப்படுத்துவதுமான ஸோமத்தினருகே பறவைகளைப்போல் விளங்கி, இந்திரனே! உன்னை மிக்கப் பரடுகிறோம். 6489

6. நாங்கள் இத்துதியோடு உன்னை வணங்குகிறோம். நீ ஏன் அடிக்கடி தியானத்திலாகிறாய். குதிரைகள் உள்ளவனே! எங்களுடைய விருப்பங்கள் பூர்த்தி செய்யப்படுக. நீ விருப்பங்களை நிறைவேற்றுபவன். நாங்கள் உன்னை நாடுபவர்கள். எங்களுடைய தோத்திரங்கள் உனக்குக் கூறப்படுகின்றன.



7. இந்திரனே! நாங்கள் உன் பாலனத்திலே மிக்கப் புதியவர்களாயிருக்கிறோம். வச்சிரமேந்துபவனே! நாங்கள் உன்னை அன்றி வேறு எவனையும் மகானாக அறியவில்லை.

8. சூரனே! நாங்கள் உன்னுடைய நட்பையும், உன்னால் அனுபவிப்பதற்குரிய செல்வத்தையும் அறிகிறோம். வச்சிரமேந்துபவனே! நாங்கள் அவற்றை உன்னிடம் வேண்டுகிறோம். இந்திரனே! அழகிய மோவாய்கள் உள்ளவனே! மனைகளை அளிப்பவனே! எங்களை எல்லாச் செழிப்பிலும், பசுச்செல்வத்திலும் சிறப்பிக்கவும்.

9. நண்பர்களே! நான் உங்களுடைய பாலனத்துக்காகப்பூர்வத்திலே எங்களுக்கு இந்த உத்தம செல்வத்தை அளித்த அந்த இந்திரனைப் போற்றுகிறேன்.

10. மகிழும் மனிதன் குதிரைகளுள்ளவனும், நல்லவர்களைப் பாலிப்பவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான இந்திரனைப் போற்றுகிறான். மகவான், வழிபடுபவர்களான எங்களுக்கு நூற்றுக்கணக்கான குதிரைகளையும், பசுக்களையும் அளிப்பானாக. 6494

11. விருஷபனே! பசுக்களுக்காக நடத்தப்படும் போராட்டத்தில் உன்னுடைய நட்பால் நாங்கள் பகைவனை எதிர்த்து நிற்கிறோம்.

12. பலரால் அழைக்கப்படுபவனே! நாங்கள் போரிலே எங்களை எதிர்த்துப் போராடுபவர்களை ஜயிப்போமாக. நாங்கள் தீயோர்களைத் தடுப்போமாக. நாங்கள் எங்கள் தலைவர்களோடு சேர்ந்து விருத்திரனைக் கொல்வோமாக. நாங்கள் செழிப்போமாக. நீ எங்கள் செயல்களைப் பாலிக்கவும்.

13. இந்திரனே! உனக்கு உடன் பிறந்த சகோதரன் இல்லை. உனக்குத் தலைவனில்லை. பூர்வத்திலிருந்தே உனக்குப் பந்துவில்லை. யுத்தத்திலே போராடுபவனுடைய பாந்தவத்தையே நீ விரும்புகிறாய்.

14. நீ செல்வமுள்ளவனுடைய நட்பை நாடாய். மதுபானமருந்துபவர்கள் உன்னை நிந்திக்கிறார்கள், நீ

யக்ஞத்தைத் தோற்றுவித்து, கருமித்தனத்தை நீக்குகிறாய். நீ பாலகனாக அழைக்கப்படுகிறாய்.

15. உன்னைப்போலிருக்கும் உன்னுடைய நட்பை நாடாமல் அறிவிலிகளைப்போல் நாங்கள் விளங்காமலிருப்போமாக. ஸோமம் பொழியப்படுங்கால் நாங்கள் ஒருமித்துச் சேர்வோமாக. 6499

16. இந்திரனே! பசுக்களைத் தருபவனே! நாங்கள் உன்னிடமிருந்து செல்வதானத்தை இழக்காமலிருப்போமாக. உன்னை அன்றி அதை வேறு எவனிடமும் ஏற்காமலிருப்போமாக. தலைவனான நீ, திரமான செல்வங்களுக்கு நிலைப்படுத்தவும். எங்களைப் பாலிக்கவும். உன்னுடைய தானங்கள் தடைபடாதவை.

**சித்திரன்**

17. பகைவனுக்கு இந்திரனா இத்தனைப் பெருஞ்செல்வத்தைத் தந்தான்? சௌபாக்கியவதியான ஸரஸ்வதியா செல்வத்தைத் தந்தாள்? அல்லது சித்திரனே! நீயா?

18. சித்திரனே அரசன். ஸரஸ்வதி நதியின் கரையில் வசிக்கும் மற்றவர்கள் எல்லாம் சிற்றரஸர்களே. அவன் அனந்தமான ஆயிரக்கணக்கான தானங்களால், மழையால் இன்புறுத்தும் பர்ஜன்யனைப்போல் புவியை இன்புறுத்தினான். 6502

## 22. அசுவினிகள்

### 642. ஸோபரி காண்வன்

1. நான் இன்று எங்களுடைய பாலனத்துக்காகப் போருக்குச் செல்லும் வழியிலே முன்னேறுவதும், சூரியையின் திருமணத்துக்குச் செல்ல உங்களால் ஏற்பட்டிருப்பதும், துதியாருகர்களான அசுவினிகளாம் உங்களுடைய பகையழிக்கும் தேரை அழைக்கிறேன்.

2. ஸோபரியே! பூர்வத்தில் துதிப்பவர்களைப் புஷ்டிப்படுத்துவதும், தக்கவாறு அழைக்கப்படுவதும், பலரால் விரும்பப்படுவதும், பாலிப்பதும், போர்களில் முந்துவதும், அனைவராலும் போற்றப்படுவதும், பகைவர்களை விலக்குவதும், தடைபடாததுமான அசுவினிகளின் தேரை நல்ல துதிகளால் போற்றவும்.



3. பகைவர்களை அழிப்பவர்களும், தேவர்களுமான அசுவினிகள் எங்களுடைய பாலனத்துக்காக இங்கு வந்து அளிப்பவனுடைய மனைக்கு வர நாங்கள் எங்களைத் துதிகளால் அவர்களை ஊக்கப்படுத்துகிறோம்.

4. உங்களுடைய தேரின் ஒரு சக்கரம் ஒவ்வொரு திசையிலும் செல்லுகிறது. செயல்களைப் பிரேரிக்கும் மற்ற சக்கரம் உங்களோடு இருக்கிறது. மழைத் தலைவர்களே! உங்களுடைய ஸுமதியானது கன்றினிடம் செல்லும் பசுவைப் போல் எங்களிடம் வருக.

5. அசுவினிகளே! உங்களுடைய மூன்று பீடங்களுள்ளதும், பொன்வாய் வடங்களால் இயங்குவதும், புகழுள்ளதுமான தேர் சோதியையும், புவியையும் எழில்படுத்துகிறது. நாஸத்தியர்களே! அந்தத் தேரிலே நீங்கள் வாருங்கள். 6507

6. நீங்கள் சோதியிலிருந்து மநுவுக்கு மழையையளித்து, அவன் நிலத்தை உழு படையால் உழவும், யவப் பயிரை அறுக்கவும் திரப்படுத்தினீர்கள். ஆதலால் அசுவினிகளே! நாங்கள் துதிகளோடு உங்களைப் போற்றுகிறோம்.

7. அசுவினிகளே! உணவுச் செல்வர்களே! வர்ஷிப்பவர்களே! நீங்கள் எந்த ருத வழிகளால் திரஸ்தஸ்யுவின் புதல்வனான திருக்ஷியை மகத்தான செல்வத்தோடு திருப்தி செய்யச் சென்றீர்களோ அந்த வழிகளால் எங்களிடம் வாருங்கள்.

8. தலைவர்களே! மழைச் செல்வர்களே! உங்களுக்காகக் கற்களால் இந்த ஸோமம் பிழியப்படுகிறது. ஸோமத்தைப் பருக வாருங்கள். அளிப்பவனுடைய மனையிலே பருகுங்கள்.

9. மழைச் செல்வங்களுள்ள அசுவினிகளே! உங்களுடைய ஆயுதங்கள் நிறைந்துள்ள பொன் தேரிலே ஏறுங்கள். புட்டிப்படுத்தும் உணவை எங்களுக்களியுங்கள்.

10. உங்களைப் போற்றுங்கால் பகத்தனையும், அத்தரிகுவையும், பிப்ருவையும் எந்தப் பாலனங்களால் பாலித்தீர்களோ அப்பாலனங்களோடு அசுவினிகளே! துரிதமாய் எங்களிடம் வாருங்கள். பிணியுள்ளவனை மருந்தால் குணப்படுத்துங்கள். 6512

11. செயல்களிலே ஊக்கமாயிருக்கும் அறிஞர்களான நாங்கள் சங்கிராமத்துக்குத் துரிதமாய்ச் செல்லும் உங்களை உதயத்திலே துதிகளோடு அழைக்கும்போது—

12. வர்ஷிப்பவர்களே! உத்தமப் பாலனமுள்ளவர்களும், பல பகைவர்களை ஜயிப்பவர்களும், தலைவர்களுமான நீங்கள் அவிகளால் திருப்தியாகி எந்தப் பாலனங்களால் பிரியப்படுத்தினீர்களோ அந்தப் பாலனங்களோடு எங்களுடைய பல வடிவங்களுள்ளதும், அனைவராலும் போற்றத் தகுந்ததுமான விருப்பத்துக்கு வாருங்கள்.

13. நான் தினத்தின் உதயத்திலே புகழ்ந்து அசுவினிகளைப் போற்றுகிறேன். நாங்கள் அவர்களிடம் அவிகளோடு வேண்டுகிறோம்.

14. நாங்கள் சலங்களின் தலைவர்களும், போரின் வழியிலிருப்பவர்களுமான அசுவினிகளை மாலையிலும், உதயத்திலும், பகலிலும் அழைக்கிறோம். ஆதலால் ருத்திரர்களே! உணவுச் செல்வமுள்ளவர்களே! நீங்கள் எங்களை இனி மானிடப் பகைவனிடம் செலுத்தாதீர்கள்.

15. துதியாருகர்களான அசுவினிகளே! நீங்கள் சுகத்தை விரும்பும் எனக்கு சுகத்தைக் காலையிலே உங்கள் தேரில் ஏந்தி வாருங்கள். ஸோபரியான நான் என் தந்தையைப்போல் உங்களை அழைக்கிறேன். 6517

16. மனத்தைப்போல் துரிதமாயிருப்பவர்களும், வர்ஷிப்பவர்களும், பகைவர்களைத் தாழ்த்துபவர்களும், பலருக்கு இன்பமளிப்பவர்களுமான நீங்கள் எங்களைப் பாலிக்க உங்களுடைய பல துரித பாலனங்களோடு எப்பொழுதும் அருகில் இருங்கள்.



17. அசுவினிகளே! அழகர்களும், தலைவர்களும், ஸோமத்தை நன்கு பருகுபவர்களுமான நீங்கள், எங்கள் மனையிலே குதிரைகளையும், பசுக்களையும், பொன்னையும் செலுத்தி எங்களிடம் வாருங்கள்.

18. நாங்கள் உங்களிடமிருந்து, பகை விலக்குவதும், அனைவராலும் விரும்பத்தகுந்ததும், உத்தம பலமுள்ளதும், வலிய பகைவனால் தடைபடாததுமான செல்வத்தைப் பெறுவோமாக. நீங்கள் இங்கு வந்த பிறகு உணவுச் செல்வமுள்ள உங்களிடமிருந்து எல்லா நல்ல பொருள்களையும் நாங்கள் அடைவோமாக. 6520

## 23. அக்கினி

### 643. விசுவமநாபன்—வியசுவனுடைய புதல்வன்

1. பகைவர்களை எதிர்ப்பவனும் புகையைப் பரத்துபவனும், தடைபடாத காந்தியுள்ளவனுமான ஜாதவேதஸனைப் போற்றவும்.

2. விசுவத்தைக் காணும் விசுவமனமுள்ளவனே! பேராசையற்றவனுக்குத் தேர்களை அளிக்கும் அந்த அக்கினியைத் துதியால் ஏத்தவும்.

3. பகைவர்களை எதிர்ப்பவனும், ருக்குக்களால் ஏத்தப்படுபவனும், அவிகளை ஏந்துபவனுமான அக்கினி எவர்களை, முன்னதாகவே யக்ஞஞ் செய்யார்கள் என அறிகிறானோ, அவர்களுடைய உணவையும், பானத்தையும் பறித்து செல்வத்தையும் எடுத்துக் கொள்கிறான்.

4. வழிபடுபவர்களின் கூட்டங்களின் நடுவே புகழுள்ளவனும், பிரகாசிப்பவனும், தாபமளிக்கும் பற்களிருப்பவனுமான அக்கினியின் தேயாத காந்தி மேலே எழுகிறது.

5. நன்கு யஜிக்கப்பட்டு, போற்றப்படுபவனும், பெரிய காந்தியோடு பிரகாசிப்பவனுமான நீ, உன்னுடைய தெய்வீக சுவாலையோடு மேலே எழவும். 6525

6. அக்கினியே! அவிகளைத் தேவர்களிடம் கிரமமாய்ச் செலுத்தி உத்தமத் துதிகளோடு நீ முன்னேறவும். ஏனெனில் நீ அவர்களுக்குத் தூதனுயிருக்கிறுய்.

7. நான் உங்களுக்கு மனிதர்களின் பழைய ஹோதாவான அக்கினியை அழைக்கிறேன். நான் அவனை இந்தத் துதியால் துதிக்கிறேன். நான் அவனை உங்களுக்காக ஏந்துகிறேன்.

8. அவிகளால் இன்பமாகி, நண்பனைப் போலிருப்பவனும், இசைந்த பலத்தோடு யக்ஞங்களால் வழிபடுபவனுக்கு இதப்படுத்தப் படுபவனும் அற்புத செயல்களுமான அக்கினியைப் போற்றுங்கள்.

9. சத்தியத்தை விரும்புபவர்களே! அவியளிக்கப்படும் யக்ஞத்திலே சத்தியத்தோடிருப்பவனும், யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவனுமான அக்கினியைத் துதி மொழியால் போற்றுங்கள்.

10. மானிடர்களின் நடுவே எவன் மிக்கப் புகழுள்ள ஹோதாவாயிருக்கிருனே அந்த அங்கிரஸர்களின் தலைவனுன அக்கினிக்கு எங்களுடைய யக்ஞங்கள் எல்லாம் செல்க. 6530

11. தேயாத அக்கினியே! உன்னுடைய, சொலிப்பிக்கப்பட்டவையும், மகத்தாயுமுள்ள சுவாலைகள்—ரசிமிகள்— மிக்க ஆற்றலுள்ளவை, குதிரைகளைப்போல் வலியவை.

12. உணவின் தலைவனுன நீ, வீரப் புதல்வனேடு செல்வங்களை அளிக்கவும். எங்களையும், எங்கள் புதல்வர்களையும், பேரர்களையும் போர்களிலே பாலிக்கவும்.

13. சனங்களின் தலைவனுன அக்கினி யக்ஞத்தால் ஊக்கமடைந்து பிரியமுள்ளவனுகி மானிடனுடைய மனையிலே விளங்குங்கால் அதை எல்லா அரக்கர்களிடமிருந்தும் பாலிக்கிருன்.



14. வீரனே! சனங்களின் தலைவனுன அக்கினியே! என்னுடைய இந்தப் புதிய ஸ்தோமத்தைச் செவியுற்று, மாயாவிகளான அரக்கர்களை உன்னுடைய சுவாலைகளால் பற்பப் படுத்தவும்.

15. எவன் அவி அளிப்பவர்களோடு அக்கினிக்கு அவிகளை அளிக்கிருனே அவனைப் பகைவனுன எந்த மனிதனும் மாயையால் வசப்படுத்த இயலாது. 6535

16. ரிஷி வியசுவன் வர்ஷிப்பவனுன உன்னைப் போற்ற விரும்பி, செல்வந்தருபவனுன உன்னை அவிகளால் திருப்தி செய்தான். ஆதலால், மகத்தான செல்வங்களுக்காக நாங்கள் உன்னைச் சொலிப்பிக்கிறேம்.

17. கவியின் புதல்வனுன உசனன் யஜிப்பவனும், ஜாதவேதஸனுமான உன்னை, ஹோதாவாக மநுவுக்கு ஸ்தாபித்தான்.

18. எல்லாத் தேவர்களும் சேர்ந்து உன்னையே தூதனுக நியமித்தார்கள். முதல்வனும் தேவனுமான நீ, துரிதமாய் யக்ஞாருகனுகவும்.

19. வீரனுன மானிடன் அமிருதனும், சுத்தப்படுத்துபவனும், கிருஷ்ண வழியுள்ளவனும், மகானுமான இந்த அக்கினியைத் தூதனுக நியமித்தார்கள்.

20. நாம் உயர்த்திய சிருவங்களோடு நன்கு பிரகாசிப்பவனும், ஒளிச் சுடருள்ளவனும், அழியாமலிருப்பவனும், பழையவனும், மானிடர்களால் போற்றத் தகுந்தவனுமான அக்கினியை அழைப்போமாக. 6540

21. எந்த மனிதன் அவியளிப்பவர்களோடு அக்கினிக்கு அவிகளை அளிக்கிருனே அவன் அக்கினியினிடமிருந்து வீரப் புதல்வர்களோடும், புகழோடுமுள்ள புட்டியான செல்வத்தை அடைகிருன்.

22. அவியை ஏந்தியுள்ள சிருவம் யக்ஞங்களிலே முதல்வனும், ஜாதவேதஸனும், பழையவனுமான அக்கினிக்குச் செல்லுகிறது.

23. நாங்கள் வியசுவனைப்போல் இந்த மேன்மையான பூஜாருகத் துதிகளால் மிக்கப் பிரகாசமாயுள்ள அக்கினியைப் போற்றுகிறோம்.

24. வியசுவனின் புதல்வனான ரிஷியே! மகானும், மனைக்குரியவனுமான அக்கினியை ஸ்தோமங்களால் ஸ்தூரயூபனைப் போல் போற்றவும்.

25. அறிஞர்கள் மனிதர்களின் அதிதியும், மரஞ்செடி கொடிகளின் மகனும், பழையவனுமான அக்கினியைப் பாலனத்துக்காகப் போற்றுகிறார்கள். 6545

26. அக்கினியே! நீ மகத்தாய்ப் போற்றும் எல்லா வழிபடுபவர்களின் முகப்பிலே அவர்களுடைய வணக்கத்தால் மனிதர்களுடைய அவிகளை ஏற்றுக்கொள்ள தருப்பையின் மீது அமரவும்.

27. அக்கினியே! விரும்பத்தகுந்த பல செல்வங்களை எங்களுக்களிக்கவும். பலரால் விரும்பப்படுபவையும், வலிமையும், சந்தானமும், சிறப்புமுள்ள பொருள்களை எங்களுக்களிக்கவும்.

28. அனைவராலும் விரும்பப்படுபவனும், பகைவர்களை விலக்குபவனும், தருணனுமான அக்கினியே! நீ சாந்தமாயும், நிலையாயுமுள்ள மனிதனுக்குச் சதா செல்வங்களைத் தருகிறாய்.

29. அக்கினியே! நீ உத்தம தானமளிப்பவனாயிருக்கிறாய். நீ எங்களுக்குப் பசுக்களோடு உணவையும், மகத்தான செல்வங்களின் தானத்தையுமளிக்கவும்.

30. அக்கினியே! நீ புகழுள்ளவனாயிருக்கிறாய். நீ இங்கு சத்தியத்தோடிருப்பவர்களும், மிக்கப் பிரகாசிப்பவர்களும், சுத்த சக்தியுள்வர்களுமான மித்திராவருணர்களை ஏந்தி வரவும். 6550



# 24. இந்திரன்

## 644. விசுவமனன் வையசுவன்

1. நண்பர்களே! நாங்கள் வச்சிராயுதத்தை ஏந்தும் இந்திரனுக்கு இந்தத் தோத்திரத்தைக் கூறுவோமாக. நான் முதற் தலைவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான இந்திரனை உங்களுக்காகப் போற்றுகிறேன்.

2. நீ பலத்தால் புகழ்பெற்றவன். நீ விருத்திரனைக் கொன்றதால் விருத்திரஹனன் எனக் கூறப்படுகிறாய். சூரனே! நீ செல்வங்களை அளிப்பதில் செல்வர்களை முந்துகிறாய்.

3. நீ எங்களால் துதிக்கப்பட்டு எங்களுக்கு அற்புதமாயும், பலவிதமாயுமுள்ள செல்வத்தை அளிக்கவும். குதிரைகளோடிருப்பவனே! நீ உன் படைகளைப் புலப்படுத்தும் உன் பகைவர்களை ஓடச் செய்கிறாய். நீ செல்வங்களை அளிப்பவனாயிருக்கிறாய்.

4. இந்திரனே! நீ வழிபடுபவர்களுக்கு மிக்கப் பிரியப்படும் செல்வத்தைப் புலப்படுத்தவும். பகைவர்களைக் கொல்லும் நீ, தீரமுள்ள நீ, எங்களால் போற்றப்பட்டு, உன் தீர மனத்தோடு எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

5. குதிரைகள் உள்ளவனே! நீ பசுக்களை மீட்குங்கால் எதிர்ப்பவர்கள் உனது வலது கையையோ, இடது கையையோ தடுக்க இயலாதவர்கள். பகைவர்கள் உன்னைத் தடைசெய்யார்கள்.

6. வச்சிரமேந்துபவனே! நான் துதிகளோடு உன்னை மேய் தரைக்குப் பசுக்களோடு செல்லும் கோபாலனைப் போல் அணுகுகிறேன்; பின்பற்றுகிறேன். வழிபடுபவனான என்னுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும். என் மனத்தைப் பூர்த்தி செய்யவும்; திருப்தி செய்யவும்.

7. உக்கிரனும், விருத்திரனைக் கொல்பவனும், முதற் தலைவனும், பகைவர்களை விலக்குபவனுமான நீ, அனு

கூல மனத்தோடு வந்து விசுவமனான என்னுடைய அனைத்தையும் அதீனஞ் செய்துகொள்ளவும்.

8. சூரனே! புருஹூதனே! விருத்திரனைக் கொல்பவனே! நாங்கள் உன்னுடைய, புதிய, விரும்பத்தகுந்த இந்த செல்வத்தை அடைவோமாக.

9. மனிதர்களை ஊக்கப்படுத்தும் இந்திரனே! உன்னுடைய ஆற்றல் தடைபடாமல் எங்கும் பரவுகிறது. புருஹூதனே! அளிப்பவனுக்கு உன்னால் ஈயப்படும் தானமும் தடைபடாமலிருக்கிறது.

10. மேன்மையாகப் போற்றத்தகுந்தவனே! மனிதர்களின் தலைத் தலைவனே! மகத்தான செல்வத்தை ஜயிக்க நீ ஸோமத்தால் பலப்படுத்திக்கொள்ளவும். மகவானே! நீ செல்வ லாபத்துக்காகப் பகைவர்களின் திடமான கோட்டைகளை நாசப்படுத்தவும்.

11. வச்சிராயுதனே! உன்னைத்தவிர வேறு எந்த தேவனுக்கும் எங்களுடைய தோத்திரங்கள் கூறப்படவில்லை. ஆதலால் மகவானே! உன்னுடைய பாலனங்களால் இப்பொழுது எங்களைப் பாலிக்கவும்.

12. கூத்தனே! துதிகளால் துதிக்கத் தகுந்தவனே! நான் உன்னையன்றி வேறு எவனையும் ஆதரவுக்கும், ஆக்கத்துக்கும், கீர்த்திக்கும், ஆற்றலுக்கும் நாடவில்லை.

13. இந்திரனுக்காக ஸோமத்தைப் பொழியுங்கள். அவன் இனிய ஸோமரஸத்தைப் பருகுவானாக. அவன் தன் ஆற்றலால் அளிப்பவனைச் செல்வத்தோடு செழிப்பிப்பானாக.

14. ஆற்றலைத் தரும் குதிரைகளின் தலைவனிடம் நான் பேசினேன். இப்பொழுது துதிக்கும் விசுவமனனுடைய துதிகளைக் கேட்கவும்.

15. இந்திரனே! உன்னையன்றி வீரத்தன்மையில் சிறந்தவன் பூர்வத்திலே தோன்றவில்லை. இப்பொழுதுமில்லை. செல்வங்களிலே சிறந்தவனில்லை. பாலனத்திலே உன்னையன்றி சிறந்தவன் எவனுமில்லை. துதிப்பதற்கு உன்னையன்றி போற்றத் தகுந்தவன் எவனுமில்லை.



16. அத்வர்யுவே! மிக்க மதமளிக்கும் இனிய ஸோமத்தை ஊற்றவும். ஏனெனில் எப்பொழுதும் வலிமையுடனிருக்கும் வீரனான அவனே போற்றப்படுகிறான்.

17. இந்திரனே! குதிரைகளை வசப்படுத்துபவனே! உன்னுடைய பழைய துதியைப் பலத்தாலும், புகழாலும் வேறு எவனும் அடையவில்லை.

18. உணவை விரும்பும் நாங்கள், கவனமுள்ள சனங்களால் அளிக்கப்படும் யக்ஞங்களால் போற்றுவதற்குரிய உணவுகளின் தலைவனை அழைக்கிறோம்.

19. நண்பர்களே! வாருங்கள்! நாம் ஒருவனாகவே எல்லாப் பகைப் படைகளையும் ஜயிப்பவனும், போற்றுவதற்குரிய தலைவனுமான இந்திரனைப் போற்றுவோமாக.

20. நீங்கள் துதியை ஏற்க மறுக்காதவனும், துதியால் இன்புறுபவனும், புகழுள்ளவனுமான இந்திரனுக்கு, நெய்யைக்காட்டிலும், ஸோமத்தைக் காட்டிலும் இனிமையாயுள்ள இதமான மொழிகளைக் கூறுங்கள்.

21. எல்லையற்ற வீரத்தன்மைகளிருப்பவனும், பறிக்கப்படாத செல்வங்களிருப்பவனும், எங்கும் பரவும் வானைப்போல் பரந்த தானமளிப்பவனுமான இந்திரனைப் பாருங்கள்.

22. தடைபடாதவனும், திட்பனும், கிரமப்படுத்துபவனுமான இந்திரனை வியசுவனைப்போல் போற்றவும். தலைவனான இந்திரன் ஈகையினுக்குப் பரந்த மனையைத் தருகிறான்.

23. வையசுவானே! மெய்யாகவே மானிடர்களின் தேகங்களிலே ஒன்பது பிராணன்களோடு பத்தாவதாக, ஆத்மாவாக இருப்பவனும், துதியாருகனும், பேரறிவுள்ளவனும் அடிக்கடி ஏத்தத் தகுந்தவனுமான இந்திரனைப் போற்றவும்.

24. வச்சிரமேந்துபவனே! நீயே தீமை செய்பவர்களின் போக்கை, எல்லாத் திசைகளிலும் பறக்கும் பறவை

களின் சலனத்தைத் தினந்தோறும் அறியும், சுத்தப்படுத்துபவனான சூரியனைப்போல் அறிகிறாய்.

25. பகைவர்களைக் கொல்லும் இந்திரனே! நீ எந்தப் பாலனத்தால் இரு விதமாய் ருத்ஸனுடைய பகைவனைக் கொன்றாயோ, அந்தப் பாலனத்தை அவியளிப்பவனுக்குப் புலப்படுத்தவும். அதே பாலனத்தை எங்களுக்களிக்கவும்.
6875

26. பகைவர்களைக் கொல்லும் இந்திரனே! நாங்கள் துன்பத்தைத் துடைப்பவனும், துதியாருகனுமான உன்னிடம் பாலனத்தை வேண்டுகிறோம். ஏனெனில் நீயே எங்களுடைய சத்துருக்களையெல்லாம் ஜயிப்பவனாயிருக்கிறாய்.

27. நீயே மனிதர்களைத் தீயோர்களின் தீமையிலிருந்து பாலிக்கிறாய். ஏழு நதிகளின் கரையில் வசிப்பவர்களைச் செல்வப்படுத்துகிறாய். செல்வத்தில் செழிக்கும் நீ தாஸன் மீது உன் ஆயுதத்தைச் செலுத்தவும்.

வருஸஂஷாம்னி

28. வருவே! ஸுஷாமனுக்காக உன்னிடம் செல்வங்களை நாடியவர்களுக்கு, நீ பூர்வத்திலே செல்வத்தை வழங்கினாய். அங்ஙனமே இப்போது வியசுவனுடைய சந்தானங்களுக் களிக்கவும், உத்தமச் செல்வியும், உணவு நிறைந்தவளுமான உஷையே, நீயும் அளிக்கவும்.

29. ஸோமமளிக்கப்படுங்கால் மனிதர்களுக்கு நலத்தைச் செய்யும் அரசனுடைய தானங்கள் வியச்வ மக்கட்களான எங்களிடம் வருக. நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான கனத்த செல்வங்கள் தோன்றுக.

30. உஷையே! நீ உன்னை எவனாவது, யக்ஞத்தைச் செய்யும் வரு எங்கு வசிக்கிறான் என வினவினால் நீ அனைவருக்கும் தஞ்சமளிப்பவனும், திறமுள்ளவனுமான அரசன் கோமதியின் கரைகளிலே வசிக்கிறான் எனக் கூறவும். 6580



# 25. மித்திராவருணர்கள்

## 645. விசுவமனா வையசுவன்

1. நீங்கள் இருவரும் விசுவத்தைப் பாலிப்பவர்கள். தேவர்கள்; தேவர்களின் நடுவே யக்ஞாருகர்கள். விசுவமனனே! நீ சத்தியவாதிகளும், தூய்மையான பலமிருப்பவர்களுமான இரட்டையர்களை யஜிக்கிறாய்.

2. நல்ல செயல்களை நடத்துபவர்களும், ஸாரதிகளும, செல்வங்களைச் செழிப்பிப்பவர்களும், பூர்வத்தில் நன்கு தோன்றியவர்களும், அதிதியின் புதல்வர்களும், விரத பாலகர்களுமான நீங்கள், என்னால் யஜிக்கப்படுகிறீர்கள்.

3. மகத்தாயிருப்பவளும், சத்தியவதியும், தேவர்களின் தாயுமான அதிதி எல்லாச் செல்வங்களை அடைந்திருப்பவர்களும், மிக்க ஒளியுள்ளவர்களுமான அந்த மித்திராவருணர்களை அசுரர்கள் அழிக்கப்பட பிறப்பித்தாள்.

4. மகான்களும், மன்னர்களும், ஆற்றலுள்ள தேவர்களும், சத்தியத்தைப் பாலிப்பவர்களுமான மித்திராவருணர்கள் எங்கள் ருதத்தை—யக்ஞத்தை—ஒளிப்படுத்துவார்களாக.

5. மகத்தான பலத்தின் பேரர்களும், வேகத்தின் புதல்வர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களும், தாராளமாய்த் தானத்தை அளிப்பவர்களுமான அவர்கள் உணவின் வசதியை வசப்படுத்துகிறார்கள். 6585

6. நீங்கள் எங்களுக்கு சோதியிலோ புவியிலோ தோன்றும் உத்தம தானங்களையும், உணவுகளையும் எங்களுக்களியுங்கள். சலம் பெய்யும் மழைகள் உங்களுக்குச் சேவை செய்க.

7. சத்தியவாதிகளும், அரசர்களும், துதியை விரும்புபவர்களுமான மித்திராவருணர்கள் மகத்தான தேவர்களை இன்புறுத்த பசு மந்தையை நோக்கும் காளையைப்போல் பார்க்கிறார்கள்.

8. சத்தியத்தைப் பாலிப்பவர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களுமான அவர்கள், அரசை இயக்க அமரு

கிறார்கள். விரத பாலகர்களும், வலிமையுள்ளவர்களுமான அவர்கள் வலிமையைப் பற்றுகிறார்கள்.

9. கண்ணால் காண்பதற்கு முன்னதாகவே வழியை நன்கறியும் அவர்கள் எல்லா சீவர்களின் கண்களையும் திறப்பிக்கிறார்கள். பூர்வத்திலிருந்தே விளங்குபவர்களும், இனிய ஒளியோடு பிரகாசிப்பவர்களுமான அவர்கள் போற்றப்பட்டார்கள்.

### விசுவேதேவர்கள்

10. தேவியான அதிதியும், நாஸத்தியர்களும் எங்களைப் பாலிப்பார்களாக. துரிதர்களான மருத்துக்களும் எங்களைப் பாலிப்பார்களாக. 6590

11. உத்தம தானமளிப்பவர்களும், தடைபடாதவர்களுமான மருத்துக்களே! உங்கள் பாலனத்தால் நாங்கள் பத்திரமாயிருக்க இரவும் பகலும் எங்கள் மனையைப் பாலியுங்கள்.

12. துன்பமாகாத நாங்கள், உத்தம தானத்தையளிக்கும் விஷ்ணுவுக்குத் துதியைக் கூறுகிறோம். போருக்கு ஒருவனாகச் செல்பவனும், வழிபடுபவனுக்குச் செல்வத்தைப் பெருக்குபவனுமான நீ, யக்ஞத்தைத் துவக்கியவனுக்காக எங்களுடைய துதியைக் கேட்கவும்.

### மித்திராவருணர்கள்

13. நாங்கள் மித்திரனாலும், வருணனாலும் அரிய மானால் பாலிக்கப்படுவதும், அனைவராலும் விரும்பப்படுவதும், அனைத்தையும் பாலிப்பதும், செழித்ததாயுமுள்ள செல்வத்தை வேண்டுகிறோம்.

14. சலத்தைப் பெருகச் செய்பவர்களான பர்ஜன்யனும், மருத்துக்களும், அசுவினிகளும், இந்திரனும் விஷ்ணுவும் நலத்தைப் பொழிபவர்களான இந்தத் தேவர்கள் எல்லாம் சேர்ந்து அந்தச் செல்வத்தை எங்களுக்குப் பாலிப்பார்களாக.



15. துரித கமனமுள்ள இந்த மானிடத்தலைவர்கள் எந்தப் பகைவனுடைய இறுமாப்பையும், எல்லாத் தடைகளையும் பெருக்கி உக்கிர வெள்ளத்தைப் போல் விலக்குகிறார்கள். 6595

16. சனங்களின் தலைவனான இந்த ஏகன் — மித்திரன்—பல பரந்த பொருள்களைப் பார்க்கிறான். நாங்கள் உங்களுக்காக அவனுடைய பல விரதங்களை அனுசரிக்கிறோம்.

17. நாங்கள் அரசனான வருணனுடைய புகழுள்ள மித்திரனுடைய மனைக்கு அனுகூலமாயிருக்கும் பழைய விரதங்களைப் பாலிக்கிறோம்.

18. எந்த மித்திரன் சோதி புவிகளின் எல்லைகளைத் தன் கிரணங்களால் அளக்கிறானோ, அவனே தன் மகத்துவத்தால் சோதியையும் புவியையும் நிரப்புகிறான்.

19. சூரியனான அவன் ஒளிமண்டலத்திலே தன் சோதியை உயர்த்தினான். சொலிப்புடன் அவிகளோடு அழைக்கப்பட்ட அக்கினியைப்போல் அவன் பிரகாசிக்கிறான்.

20. பசுக்களிலிருந்து வரும் உணவின் தலைவனும் சத்துள்ள உணவைத்தரும் சக்தனுமான வருணனுக்கு யக்ஞத்தின் பரந்த இடத்திலே உங்கள் குரலை எழுப்பவும். 6600

21. நான் இரவிலும், பகலிலும் அந்தச் சூரியனையும், மித்திரனையும், வருணனையும், சோதியையும் போற்றுகிறேன். வருணனே! எப்பொழுதும் எங்களை ஈகை மனமுள்ளவர்களிடம் செலுத்தவும்.

22. நாங்கள் பகைவர்களை அழிப்பவனும், உசைஷ வம்சத்தில் வந்தவனுமான ஸுஷுமனனுடைய புதல்வனிடமிருந்து, குதிரைகளோடு இணைக்கப்பட்டதும், நன்கு செல்வதுமான வெள்ளித்தேரைப் பெற்றோம்.

23. அக்குதிரைகளை நோக்கி ரிஷி கூறுகிறார் குதிரைகளின் நடுவே இந்த இரண்டு கபில நிறக் குதிரை

கள் மிகச் சிறந்தவை; பகையழிப்பவை; போரிலே மிக்க ஊக்கமுள்ளவை; நரர்களை நன்கு ஏந்துபவை.

24. நான் இந்தப் புதிய தோத்திரத்தால் உடனே மகத்தான அரசனிடமிருந்து வேகமாய் ஓடுபவையும், அறிவுள்ளவையுமான இரு குதிரைகளை, கசையோடும் வாய் வடங்களோடும் பெற்றுக் கொண்டேன். 6604

## 26. அசுவினிகள்

### 646. விசுவமனன் வையசுவன்

1. எதிர்ப்பற்ற பல்முள்ளவர்களும், வர்ஷிப்பவர்களும், வர்ஷிக்கும் செல்வமுள்ளவர்களுமான அசுவினிகளே! உங்களைத் துதிக்கச் சேர்ந்திருக்கும் அறிஞர்களின் நடுவே உங்களுடைய தேரை அழைக்கிறேன்.

2. வரு, இங்ஙனம் கூறுகிறான்: நாஸத்தியர்களே! வர்ஷிப்பவர்களும், செல்வத்தைச் சொரிபவர்களுமான நீங்கள் ஸுஷாமனிடம் உங்கள் பாலனங்களோடு செல்வங்களைத் தர வந்ததுபோல் என்னிடம் வாருங்கள்.

3. செல்வஞ் செழிப்பவர்களே! நாங்கள் உணவை விரும்புபவர்களான உங்களை உஷையிலே இன்று அவிகளோடு அழைக்கிறோம்.

4. தலைவர்களே! அசுவினிகளே! உங்களுடைய புகழுள்ள அனைவரையும் ஏந்துவதான தேர் எங்களிடம் வருக. ஊக்கமாய்த் துதிப்பவனைச் செழிப்பிக்க அவனுடைய ஸ்தோமங்களை அறிந்து கொள்ளுங்கள்.

5. வர்ஷிக்கும் செல்வர்களே! அசுவினிகளே! வஞ்சகர்களைத் தெரிந்து கொள்ளுங்கள். உருத்திரர்களே! துவேஷிகளை வருத்தப்படுத்துங்கள். 6609

6. பகைவர்களை யழிப்பவர்களே! ஒளியின் தலைவர்களும், தேன் நிறமுள்ளவர்களும், எங்கள் சித்தங்களை இயக்குபவர்களுமான நீங்கள், உங்களுடைய குதிரைகளிலே எங்களுடைய யக்ஞத்தை எல்லாம் முழுதும் சுற்றி வாருங்கள்.



7. அசுவினிகளே! அனைத்தும் தாங்கும் செல்வங்களோடு எங்களிடம் வாருங்கள். ஏனெனில், நீங்கள் செல்வர்கள்; உத்தம வீரர்கள். எவராலும் வெல்லப்படாதவர்கள்.

8. இந்திரனைப் போலிருக்கும் நாஸத்தியர்களே! அனைவராலும் போற்றத் தகுந்த நீங்கள், என்னுடைய இந்த யக்ஞத்துக்கு வாருங்கள். தேவர்களே! நீங்கள் இன்று வேறு தேவர்களோடும் வாருங்கள்.

9. செல்வத்தை அளிக்கும் உங்களை விரும்பும் நாங்கள், எங்கள் தந்தையைப் போல் அழைக்கிறோம். அறிஞர்களான அசுவினிகளே! நீங்கள் எங்களிடம் அனுகூல மனங்களோடு வாருங்கள்.

10. ரிஷியே! உன்னுடைய அழைப்பை அவர்கள் அடிக்கடி கேட்க, நீ அசுவினிகளை நன்கு போற்றவும். உன்னால் துதியாகி அவர்கள் அருகில் வரும் சத்ருக்களையும், பணிகளையும் அழிப்பார்களாக. 6614

11. தலைவர்களே! வியசுவனுடைய புதல்வனான என்னுடைய அழைப்புக்குச் செவிகொடுங்கள். அதன் நோக்கத்தை அறிந்து கொள்ளுங்கள். வருணனும், மித்திரனும், அரியமானும் சேர்ந்து எனக்குச் செல்வத்தை அளிப்பார்களாக.

12. வர்ஷிப்பவர்களே! போற்றத் தகுந்தவர்களே! வழிபடுபவர்களுக்கு உங்களால் ஏந்தி வரப்படுவதும், அளிக்கப்படுவதுமான அச்செல்வத்தின் பகுதியைத் தினந்தோறும் எனக்களியுங்கள்.

13. அதிக ஆடையால் உடுத்தப்பட்ட ஸ்திரியைப் போல் யக்ஞத்தால் போற்றப்படும் மனிதனுக்கு அசுவினிகள் தானத்தை அளித்து அவனைச் செல்வப்படுத்துகிறார்கள்.

14. அசுவினிகளே! உத்தமமாய்ப் பெருகிப் பாய்வதும், தலைவர்களால் பருகுவதற்குரியதுமான ஸோமத்தை

உங்களுக்களிக்க அறிபவனுன என் மனேக்கு என்னே விரும்பும் நீங்கள் வாருங்கள்.

15. செல்வத்தை வர்ஷிக்கும் நீங்கள் தலைவர்களால் பருகுவதற்குரிய ஸோமத்தைப் பருக எங்கள் மனேக்கு வாருங்கள். ஏனெனில், நீங்கள் துதியாய் யக்ஞத்தைப் பரத்தால் வேடுவனைப் போல் பூர்த்தி செய்கிறீர்கள். 6619

16. அசுவினிகளே! தலைவர்களே! என்னுடைய தோத்திரம் அழைப்புகளின் நடுவே உங்களைத் தூதனுக அழைக்கிறது. அது உங்களுக்கு ஏற்கத் தகுந்ததாயிருக்க.

17. அமிருதர்களான அரசர்களே! நீங்கள் வானின் சலத்திலோ, வழிபடுபவனுடைய மனேயிலோ மகிழ்ந்திருந்தாலும் நீங்கள் என்னுடைய இந்த அழைப்பைக் கேளுங்கள்.

18. மெய்யாகவே இந்த நதியான பொன் வழியுள்ள சுவேதயாவரி நதிகளின் நடுவே உங்களுடைய துதிகளை ஏந்துவதாயிருக்கிறது.

19. அசுவினிகளே! மிக்க ஒளியுள்ள வழிகளைப் பற்றும் நீங்கள் செல்வப்படுத்துபவனும், உங்களைப் போற்றுபவனுமான நதியால் நீங்கள் புகழையடைகிறீர்கள்.

வாயு

20. வாயுவே! நீங்கள் தேரை இழுக்கும் குதிரைகளை இணைக்கவும். வசுவே! நன்கு போஷிக்கப்பட்ட குதிரைகளை இங்கு செலுத்தவும். பிறகு எங்களுடைய ஸோமத்தைப் பருகவும். எங்களுடைய நித்திய யக்ஞங்களுக்கு வரவும். 6624

21. ருதத்தின் தலைவனே! துவஷ்டாவின் அற்புத மருமகனே! நாங்கள் உன்னுடைய பாலனத்தை நாடுகிறோம்.

22. ஸோமத்தை அளிப்பவர்களான நாங்கள், துவஷ்டாவின் மருமகனுன தலைவனிடம் செல்வங்களை விரும்புகிறோம். நாங்கள் செல்வர்களாவோமாக.



23. வாயுவே! சோதியிலே சுகத்வத ஸ்தாபிக்கவும். உத்தம குதிரைகளுள்ள தேரை எங்கும் செலுத்தவும். மகானுன நீ, பரந்தங்கங்களுள்ள குதிரைகளைத் தேரிலே இணைக்கவும்.

24. நாங்கள் மிக்க அழகுள்ளவனும், உன் மகிமையால் உன் அங்கங்களை எல்லாத் திசைகளிலும் பரவும் உன்னை ஸோமத்தைப் பிழிய கிராவாணத்தைப்போல் அழைக்கிறோம்.

25. தேவனுன வாயுவே! தேவர்களின் முதல்வனுன நீ, சுயமாகவே உன் மனத்தில் இன்பமாகி எங்கள் யக்ஞங்களை சலத்தையும் உணவையும் அளிக்கச் செய்யவும். 6629

## 27. விசுவேதேவர்கள்

### 647. மநுவைவஸ்ஸதன்

1. அக்கினி யக்ஞத்திலே புரோகிதனுயிருக்கிறன். யாகத்துக்குத் தருப்பையும், கற்களும் தயாராயிருக்கின்றன. நான் இருக்கோடு மருத்துக்களையும், பிரம்மணஸ்பதியையும், எல்லாத் தேவர்களையும் விரும்பத்தகுந்த பாலனத்துக்காக அழைக்கிறேன்.

2 அக்கினியே! நீ யக்ஞத்திலே பசுவுக்கும், மனேக்கும், வனஸ்பதிகளுக்கும், ஸோமனுக்கும் உஷையிலே இரவிலே வருகிறுய். பசுக்களும் அனைத்தையுமளிப்பவர்களும், விசுவேதேவர்களுமான நீங்கள், எங்களுடைய யக்ஞச் செயல்களைப் பாலிப்பவர்களாயிருங்கள்.

3. பழைய யக்ஞம் அக்கினியினிடம் முதலில் செல்க. பிறகு தேவர்களிடம், ஆதித்தியர்களிடம், விரதங்களைப் பாலிக்கும் வருணனிடம், விசுவப் பிரகாசமுள்ள மருத்துக்களிடம் செல்க.

4. செல்வங்களையெல்லாம் அடைந்திருப்பவர்களும், பகைவர்களையளிப்பவர்களுமான விசுவேதேவர்கள் மநுவைச் செல்வப்படுத்த அவனருகில் இருப்பார்களாக. அனைத்தையுமறியும் நீங்கள், உங்களுடைய தடைபடாத

பாலனங்களால் துன்பமணுகாத மனையை எங்களுக்களி யுங்கள்.

5. ஒரு மனமுள்ளவர்களும், ஒருமித்திருப்பவர்களு மான விசுவேதேவர்களான நீங்கள் இன்று உங்களுக்குக் கூறப்படும் இருக்கு மொழியால் கவரப்பட்டு எங்களிடம் வாருங்கள். மருத்துக்களே! தேவியே மகத்தான அதி தியே எங்களுடைய இடத்துக்கு மனைக்கு வாருங்கள். 6634

6. மருத்துக்களே! உங்களுடைய பிரியமான குதிரை களை எங்களுடைய யக்ஞத்துக்குச் செலுத்துங்கள். மித்தி- ரனே! எங்களுடைய அவிகளுக்கு வரவும். இந்திரனும், வருணனும், ஊக்கமாயிருக்கும் தலைவர்களும், ஆதித்தியர் களும் எங்களுடைய தருப்பையின் மீது அமர்வார்களாக.

7. நறுக்கிய தருப்பையுள்ளவர்களும், கிரமமாய் யக்ஞானத்தை அறிபவர்களும், பிழிந்த ஸோமத்தைத்தருப வர்களும், அனலகளை சொலிப்பவர்களுமான நாங்கள். உங்களை வருணன் முதலிய தேவர்களை மநுவைப்போல் அழைக்கிறோம்.

8. மருத்துக்களே! விஷ்ணுவே! அசுவினிகளே! பூஷாவே! என் துதியால் கவரப்பட்டு இங்கு வாருங்கள். தேவர்களில் முதல்வனும், வர்ஷிப்பவனும், விருத்திரனைக் கொல்பவன் என வழிபடுபவர்களால் போற்றப்படுபவனு மான இந்திரனும் வருவானாக.

9. வசுக்களே! துன்பப்படாத தேவர்களே! அருகி லிருந்தோ, தூரத்திலிருந்தோ எங்களுடைய காப்புக்களை எவனும் எதிர்க்காமலிருக்க, பகைவர்களை வென்றும் நீங்கள் எங்களுக்குப் பழுதற்ற மனையை யளியுங்கள்.

10. தேவர்களே! பகைவர்களையழிப்பவர்களே! உங்களிடம் பந்துத்தன்மையிருக்கிறது. என்னோடும் உங் களுக்குப் பந்துத் தன்மையுண்டு. ஆதலால் நீங்கள் உடனே எங்களைப் பழைய செல்வத்துக்கும், புதிய சுகத் துக்கும் வாழ்த்துங்கள். 6639



11. எல்லாச் செல்வங்களுமுள்ள தேவர்களே! துதிக்க விரும்பும் நான் விரும்பத்தகுந்த செல்வத்தை அடைய அபூர்வமான தோத்திரத்தை உங்களுக்குக் கூறுகிறேன்.

12. மேன்மையாய்ப் போற்றப்படும் மருத்துக்களே! துதியாருகமான ஸவிதா, உயரத்திலே எழுங்கால், மனிதர் களும், கால்நடைகளும், பறக்கும் பறவைகளும், தங்கள் நோக்கங்களை நாடி தங்கள் கடமைகளை நடத்தச் செல்லு கிறார்கள்.

13. நாங்கள் பாலனத்துக்காக உங்களின் நடுவே ஒவ்வொரு தேவனையும், எங்களுடைய விருப்பப் பூர்த்திக்கு ஒவ்வொரு தேவனையும் உணவைப் பெற ஒவ்வொரு தேவனையும் திவ்யத் துதியோடு உங்களையெல்லாம் துதித்து அழைப்போமாக.

14. ஒரு மனத்தோடு விசுவேதேவர்கள் மநுவுக்குச் சேர்ந்து செல்வங்களைத் தருபவர்களாயிருப்பார்களாக அவர்கள் இன்றும், இனி எப்போதும் எங்களுக்கும் எங்கள் சந்தானத்துக்கும் செல்வத்தைத் தருபவர்களாயிருப்பார் களாக.

15. வஞ்சகமற்றவர்களே! நான் துதிகளைக் கூறும் இடத்திலே உங்களைத் துதிக்கிறேன். மித்திராவருணர் களே! உங்கள் பெருமைகளைப் போற்றும் மனிதனுக்கு எத்துன்பமும் தோன்றுது. 6644

16. போற்றத்தகுந்த செல்வத்தைப் பெற உங்களுக்கு அவிகளை அளிப்பவன் தன் மனையைச் செழிப்பிக்கிறுன். மிகுந்த உணவைப் பெறுகிறுன். தருமமநுசரிக்கும் அவன் பிரஜைகளோடு எங்கும் பிறக்கிறுன். அனைவரும் பகைவர் களால் துன்பமாகாமல் உங்களால் செழிக்கிறார்கள்.

17. ஸம ஈகைத் தன்மையுள்ளவர்களும், இசைந்து நடப்பவர்களுமான அரியமானும், மித்திரனும், வருண னும் பாலிக்கப்படுபவன் போர் செய்யாமல் செல்வத்தை

அடைகிருன். துரித குதிரைகளிலே வழிகளைக் கடந்து பயணஞ்செய்கிருன்.

18. தடைபடாத வழியில் செல்ல நீங்கள் மநுவைத் திறப்படுத்துகிறீர்கள். போக இயலாத இடங்களுக்கு நீங்கள் வழியைப் புலப்படுத்துகிறீர்கள். பகைவனுடைய ஆயுதம் அவனிடமிருந்து விலகுக. அது அவனைத் துன்புறுத்தாமல் தொலைக.

19. பிரியமுள்ள பலத்தின் தேவர்களே! நீங்கள் சூரியனுடைய உதயத்திலே யக்ஞத்தை ஏந்துங்காலும், எல்லாச் செல்வங்களையும் அடைந்துள்ள நீங்கள், மாலையிலே யக்ஞத்தை ஏந்துங்காலும், காலையிலும், நடுப்பகலிலும் ஏந்துங்காலும், மநுவுக்குச் செல்வத்தை அளியுங்கள்.

20. மிக்க ஆற்றலுள்ளவர்களே! வசுக்களே! அனைத்தையுமளிப்பவர்களே! நீங்கள் யக்ஞத்தை ஏற்றுஊக்கத்தோடு அவியளிப்பவனுக்கு மனையைத் தருகிறீர்கள். அம்மனையின் நடுவிலே நாங்கள் உங்களைப் போற்றுவோமாக. 6649

21. எல்லாச் செல்வங்களுமுள்ள தேவர்களே! உங்களுக்குக் காலையிலே, பகலிலே, மாலையிலே அவிகளைத் தரும் பேரறிஞன மநுவுக்கு விரும்பத்தகுந்த செல்வத்தை அளியுங்கள்.

22. நாங்கள் மிக்கப் பிரகாசிக்கும் தேவர்களான உங்களிடம் பலரால் அனுபவிப்பதற்குரிய செல்வத்தைத் தந்தையினிடம் புதல்வனைப் போல் வேண்டுகிறோம். ஆதித்தியர்களே! அவிகளை அளிக்கும் நாங்கள் மிக்கச் செழிப்புடனுக அச்செல்வத்தை அடைவோமாக. 6651

## 28. விசுவேதேவர்கள்

### 648. மநுவைவஸ்வதன்

1. முப்பத்து மூன்று தேவர்கள் தருப்பையின் மீது அமர்வார்களாக. எங்கள் அவிகளை அறிந்து எங்களுக்கு இருவிதச் செல்வங்களைத் தருவார்களாக.



2. வஷட்முழக்கத்தால் அழைக்கப்படுபவர்களும், தங்கள் மனைவிகளோடுமுள்ள வருணனும், மித்திரனும், அரியமானும், அக்கினியும், அவியளிப்பவர்களைப் போற்றுவார்களாக.

3. அவர்கள் தங்கள் எல்லா ஆட்களோடும் மேற்கிலிருந்தோ, வடக்கிலிருந்தோ, தெற்கிலிருந்தோ, கிழக்கிலிருந்தோ வந்து எங்கள் பாலகர்களாயிருப்பார்களாக.

4. தேவர்களால் விரும்பப்படும் எதுவும் தோன்றுகிறது. அவர்களுடைய விருப்பத்தை எவனும் தடுக்க இயலாது. அளிக்காத மனிதனும் விரும்பும் தேவர்களுக்களிக்கிருன்.

5. எழுவர்கள் ஏழு ஈட்டிகளை ஏந்துகிருர்கள். அவர்களுக்கு ஏழு நகைகள் உண்டு. அவர்கள் ஏழு செல்வங்களை ஏந்துகிருர்கள். 6656

## 29. விசுவேதேவர்கள்

### 649. மரீசியின் புதல்வன் கசியபன் அல்லது விவஸ்வதனின் புதல்வன் மநு.

1. ஒருவன்—ஸோமன்—சந்திரன்—பழுப்பு நிறமுள்ளவன்; எங்கும் பரவுபவன்; இரவுகளின் தலைவன்; யுவன்; பொன்னுபரணங்களால் தன்னை அலங்கரித்துக் கொள்பவன்.

2. அறிஞனும், தேவர்களின் நடுவே பிரகாசிப்பவனுமான ஒருவன்—அக்கினி—தன்னுடைய இடத்திலே-வேதியிலே—அமர்ந்திருக்கிருன்.

3. தேவர்களின் நடுவே தன் இடத்தில் நிலையாயிருக்கும் ஒருவன்—துவஷ்டா—தன் கையிலே அயமயக் கோடலியை ஏந்துகிருன்.

4. ஒருவன்—இந்திரன்—தன் கையில் இயங்கும் வச்சிராயுதத்தைப் பற்றுகிருன். அதனுல் அவன் விருத்திரர்களைக் கொல்லுகிருன்.

5. காந்தனும், உக்கிரனுமான ஒருவன்—உருத்திரன்—கையில் கூரிய ஆயுதத்தை ஏந்துகிறான். அவன் குணப்படுத்தும் மருந்துகளைத் தருகிறான். 6661

6. ஒருவன் — பூஷா — கள்வனைப்போல் வழிகளைக் கவனிக்கிறான். அவன் மறைந்திருக்கும் செல்வங்களை அறிகிறான்.

7. கம்பீர நடையுள்ள ஒருவன்—விஷ்ணு—தேவர்கள் இன்புறும் மூவ்வுலகங்களையும் கடந்தான்.

8. துரித குதிரைகளிலே இருவர்கள்—அசுவினிகள் ஒரு பெண்ணோடு—சூரியையோடு—அந்நிய நாடுகளுக்குச் செல்லும் பயணிகளைப்போல் துரித குதிரைகளிலே செல்லுகிறார்கள்.

9. நன்கு பிரகாசிப்பவர்களும், சம எழிலுள்ளவர்களும், நெய்யாஹுதிகளால் ஏத்தப்படுபவர்களுமான இருவர்கள்—மித்திராவருணர்கள்—சோதியிலே தங்கள் இடத்தில் அமர்ந்தார்கள்.

10. போற்றும் அத்திரிகளில் சிலர் மகத்தான ஸாமனை நினைத்துக் கொள்கிறார்கள். 6666

## 30. விசுவேதேவர்கள்

### 650. மநுவைவஸ்வதன்

1. தேவர்களே! உங்களின் நடுவே எவனும் குழந்தையாயும் சிறுவனுயுமில்லை. நீங்கள் அனைவரும் நித்தியத் தருணர்களாயிருக்கிறீர்கள்.

2 பகைவர்களை அழிப்பவர்களும், முப்பத்து மூன்று தேவர்களும், மநுவால் ஏத்தப்படுபவர்களுமான நீங்கள் இங்ஙனம் போற்றப்படுகிறீர்கள்.

3. நீங்கள் எங்களைப் பாலியுங்கள்; நீங்கள் ஆதரியுங்கள். எங்களைச் செல்வத்துக்குச் செலுத்துங்கள். எங்களை மநுவின் தந்தை வழியிலிருந்து தூரமாய் நீக்காதீர்கள். இன்னும் தூரத்திலிருக்கும் நெறியிலிருந்து எங்களை விலக்காதீர்கள்.



4. இங்கு இருக்கும் தேவர்களும், இந்தப் பூரண யக்ஞமளிக்கப்படும் எல்லாத் தேவர்களும் எங்களுக்கும் எங்கள் பசுக்களுக்கும் குதிரைகளுக்கும் மிக்கப் புகழுள்ள சுகத்தையளிப்பார்களாக. 6670

## 31. பலதேவர்கள்

### 651. மநுவைவஸ்தன்

### யக்ஞமும் யஜமானனும்

1. தேவர்களை யஜிப்பவன் மீண்டும் தேவர்களை யஜிக்கிறான். அவன் ஸோமங்களைப் பொழிகிறான். அவன் புரோடாசத்தை அளிக்கிறான். அவன் இந்திரனுக்குத் துதிகளைக் கூற மீண்டும் மீண்டும் விரும்புகிறான்.

2. சக்கரன் பால் கலந்த ஸோமத்தையும் புரோடாசங்களையும் அளிப்பவனுக்குப் பாவத்தை நீக்கி, பாலனத்தை அளிக்கிறான்.

3. அவனிடம் தேவர்களால் பிரேரிதமான பிரகாசமான தேர் வருகிறது. அதனால் அவன் எல்லாப் பகைச் செயல்களையும் நீக்கிச் செழிக்கிறான்.

4. அவனுடைய மனையிலே சந்ததியுடன் நித்தியச் செழிப்புண்டு. அங்கு தினந்தோறும் பசுக்கள் கறக்கப்படுகின்றன.

5. தேவர்களே! உங்களுக்கு ஒரு மனமுடன் பொழிந்து சுத்தப்படுத்திய பாலோடு கலந்த ஸோமத்தையளித்துப் போற்றும் தம்பதிகள், 6675

6. மிக்க ஒற்றுமையுடனிருக்கிறார்கள். அவர்கள் தகுந்த உணவுகளைப் பெறுகிறார்கள். அவர்கள் யக்ஞத்தைச் செய்யும் ஆற்றலை அடைவார்களாக. அவர்கள் உணவைப் பெறத் தவருமலிருப்பார்களாக.

7. அவர்கள்—தம்பதிகள்—தேவர்களுக்கு அளித்த வாக்குறுதிகளிலிருந்து தவருமலிருக்கிறார்கள். அவர்கள் துதிகளை உங்களுக்குக் கூருமல் இயங்கார்கள். அவர்கள் உங்களுக்கு மிக்க அவியையளிக்கிறார்கள்.

8. தம்பதிகள் புதல்வர்களோடும் சேர்ந்து பூரணுயுசுடன் வாழ்கிருர்கள். அவர்கள் பொன்னுபரணங்களோடு விளங்குகிருர்கள்.

9. தேவர்கள் விரும்பத்தகுந்த யக்ஞங்களை அளித்து நாடும் செல்வத்தை அடைந்து, இன்புறுத்தும் அவிகளைத் தேவர்களுக்குத் தந்து, தம்பதிகள் அமுதத்துவத்துக்காகத் தேக ஐக்கியத்தை அநுபவித்து, தேவர்களைப் போற்றுகிருர்கள்.

தம்பத்தியாசிஷம்

10. நாங்கள் மலைகளிலிருந்து தோன்றும் சுகத்தை, நதிகளிலிருந்து தேவர்களோடு சேர்ந்துள்ள விஷ்ணுவினிடமிருந்து வரும் சுகத்தை நாடுகிறேம். 6680

11. செல்வங்களைத் தருபவனும், போற்றத்தகுந்தவனும், அனைவரையும் தாங்குபவனுமான பூஷா எங்களிடம் க்ஷேமத்தோடு வருவானுக எங்களுடைய செல்வத்துக்குப் பரந்த வழி தோன்றுக.

12. எல்லா மனிதர்களும் சிரத்தையுள்ள மனங்களோடு தடைபடாத தேவனுன பூஷாவையே ஓயாமல் போற்றுகிருர்கள். ஏனெனில் ஆதித்தியர்களுடைய தானம் பரந்தது.

13. மித்திரனும், அர்யமானும், வருணனும், எங்களைப் பாலிப்பவர்களாயிருக்கிருர்கள். ஆதலால் அவர்கள் யக்ஞத்துக்கு வர வழிகள் சுகமாய் விளங்குக.

14. நான் செல்வங்களுக்காகத் துதிகளோடு உங்களை —தேவர்களை— முந்துபவனும், தேவனுமான அக்கினியைத் துதிக்கிறேன். போற்றுபவர்கள் பலரை இன்புறுத்துபவனும், நண்பனைப்போல் யக்ஞ ஸாதகனுமான அக்கினியைப் போற்றுகிருர்கள்.

15. தேவர்களைப் போற்றுபவனுடைய தேரானது எந்தப் போர்களிலும் ஜயிக்கும் வீரனைப்போல் எங்கும் இயங்குகிறது. தேவர்களுடைய மனத்தை மேம்படுத்த விரும்பும் யக்ஞத் தலைவன் யக்ஞஞ் செய்யாதவர்களை ஜயிக்கிருன். 6685



16. தலைவனே! தேவர்களின் மனத்தை மேம்படுத்தும் நீ, நாசமாகாய். அவர்களுக்கு சோமத்தைப் பொழியும் நீ அழியாய். தேவர்களுடைய மனத்தை மேம்படுத்த விரும்பும் யக்ஞத்தலைவன் யக்ஞஞ் செய்யாதவர்களை ஜயிக்கிருன்.

17. எவனும் தன் செயல்களால் யக்ஞத் தலைவனைத் தடுக்காமலிருக்கிருன். அவனை, அவனுடைய நிலையிலிருந்து நீக்குபவனில்லை. அவன் குடும்பத்திலிருந்து தனிப்படாமலிருக்கிருன். தேவர்களுடைய மேம்படுத்த விரும்பும் யக்ஞத் தலைவன் யக்ஞஞ் செய்யாதவர்களை ஜயிக்கிருன்.

18. யக்ஞத் தலைவனுக்கு இங்கு வீரப்புதல்வர்களுண்டு. குதிரைகளின் துரித மந்தைகளுமுண்டு. தேவர்களின் மனத்தை மேம்படுத்த விரும்பும் யக்ஞத் தலைவன் யக்ஞஞ் செய்யாதவர்களை ஜயிக்கிருன். 6688

# 32. இந்திரன்

## 652. மேதாதிதிகாண்வன்

1. கண்வர்களே! பழைய ரஸத்தைப் பருகும் இந்திரன் ஸோமமதத்திய வீரச்செயல்களைப் பாக்களால் பாடுங்கள்.

2. உக்கிரனுன இந்திரன் அனர்சனியை, ஸிருவிருத்தனை, பிப்ருவை, தாஸனுன அஹீசுவனைக் கொன்ருன். சலங்களை விடுவித்தான்.

3. மகத்தான அற்புதனின் மழை ஏந்தும் ஸ்தானத்தைத் தகர்க்கவும். இந்திரனே! இந்த வீரச்செயலை நடத்தவும்.

4. நான் வெற்றியுள்ள இனிய மோவாயுள்ள இந்திரனை உங்களைப் பாலிக்கவும், உங்களுடைய துதிகளைக் கேட்கவும், மேகத்திலிருந்து சலத்தை அழைக்கும் பயணியைப் போல் அழைக்கிறேன்.

5. சூரனே! நீ ஸோம பானங்களால் இன்பமாகி, பசுக்களின், குதிரைகளின் கொட்டிலை, கோட்டையைப் போல் நீ திறந்து விடுகிறாய். 6693

6. என்னுடைய பானம் உன்னை இன்புறுத்தினால், என்னுடைய துதியிலே மகிழ்ந்தால், நீ தூரத்திலிருந்து உன்னுடைய ஸ்வதாவோடு என்னிடம் வா.

7. இந்திரனே! துதியால் இன்புறும் உன்னை நாங்கள் போற்றுபவர்களாயிருக்கிறோம். ஸோமத்தைப் பருகும் நீ எங்களை ஊக்கப்படுத்தவும்.

8. எங்களால் களிப்புறும் நீ, எங்களுக்குக் குறையாத உணவைக் கொடுக்கவும். மகவானே! உன் செல்வம் மகத்தானது.

9. இந்திரனே! எங்களைப் பசுக்களோடும், குதிரைகளோடும், பொன்னோடும் செல்வப்படுத்தவும். நாங்கள் உணவுகளோடு செழிப்போமாக.

10. நாங்கள் மிக்கப் போற்றுவதற்குரியனும், உலகத்தைப் பாலிக்கத் தன் கையை நீட்டியிருப்பவனும், நம்மையாதரிக்க நலஞ் செய்பவனுமான இந்திரனை அழைக்கிறோம். 6698

11. அவன் துதிப்பவர்களுக்கு மிகுந்த செல்வத்தைத் தர போரிலே சதக்கிரதுவாகிறான். பிறகு பகைவர்களைக் கொல்லுகிறான். பிறகு விருத்திரர்களைக் கொல்லுகிறான்.

12. சக்கரன் எங்களுக்குச் சக்தியைத் தருவானாக. ஈகை மனமுள்ள இந்திரன் தன் எல்லாப் பாலனங்களாலும் எங்களுடைய குறைகளை நீக்கி, எங்களைச் செல்வத்தால் பூர்த்திசெய்வானாக.

13. செல்வத்தைப் பாலிப்பவனும், மகானும், துன்பத்துக்கப்பால் கடத்துபவனும், பொழிபவனுடைய நண்பனுமான அந்த இந்திரனைப் போற்றுங்கள்.



14. அண்மையில் வருபவனும், போர்களில் நிலைத்திருப்பவனும், உத்தமனும், புகழை ஜயிப்பவனும், திண்மையால் பெருஞ்செல்வத்தின் தலைவனுமான இந்திரனைப் போற்றுங்கள்.

15. அவனுடைய புகழ்ச் செயல்களுக்கு எல்லையை வகுப்பவன் எவனுமில்லை. அவன் ஈகையன் இல்லை எனக் துணிந்து கூறுபவனுமில்லை. 6703

16. ஸோமத்தைப்பொழிந்து உத்தம வழியில் செல்லும் அறிஞர்களுக்கு—தேவர்களுக்கு—அளிப்பதற்கான கடன் எதுவுமில்லை. மிக்கச் செல்வமில்லையேல் ஸோமபானமுமில்லை.

17. போற்றத்தகுந்த இந்திரனைப் போற்றுங்கள். போற்றத்தகுந்த அவனைப் பாடுங்கள். போற்றத்தகுந்த அவனைப் பாக்களால் புகழுங்கள்.

18. நூற்றுக்கணக்கான, ஆயிக்கணக்கான பகைவர்களை வெல்லுபவனும், எதிரிகளால் தடைபடாதவனும், திறனுள்ளவனுமான இந்திரனே, போற்றத்தகுந்தவன். அவனே யஜிக்கும் தலைவனைச் செழிப்பிக்கிறான்.

19. இந்திரனே! மானிடர்களால் அழைப்பதற்குரிய நீ அவர்களால் அளிக்கப்பட்ட அவிகளுக்கு வா. அவர்களுடைய ஸோமங்களைப் பருகவும்.

20. இந்திரனே! பாற்பசுவால் வாங்கப்பட்டதும், சலத்தால் சேர்க்கப்பட்டிருப்பதும், உன்னுடைய தனிப் பானமுமான ஸோமத்தைப் பருகவும். 6708

21. இந்திரனே! கோபத்தோடு ஸோமளிப்பவனையும், விரும்பப்படாத இடத்தில் பொழிபவனையும், கடந்து செல்லவும் அளிக்கப்படும் இந்த ஸோமத்தைப் பருகவும்.

22. இந்திரனே! தூரத்திலிருந்தே எங்களுடைய துதிகளைக்கண்ட நீ, மூன்று திசைகளிலே செல்லவும். பஞ்சசனங்களைக் கடந்து போகவும்.

23. கதிர்களையளிக்கும் சூரியனைப்போல் எனக்குச் செல்வத்தை அளிக்கவும். பள்ளத்தில் பாயும் சலங்களைப் போல் என்னுடைய துதிகள் உன்னிடம் சேர்க.

24. அத்வர்யுவே! வீரனும், அழகிய மோவாயுமுள்ள இந்திரனுக்கு ஸோமத்தைத் துரிதமாய்ப் பொழியவும். அவனுடைய பானத்துக்காக ஸோமத்தை ஏந்தி வரவும்.

25. எவன் மழைக்காக மேகத்தைப் பிளந்தான்? எவன் வானிலிருந்து சலங்களைச் செலுத்தினுன்? எவன் பசுக்களிலே பாலை வைத்தான்? 6713

26. காந்தியுள்ள இந்திரன், விருத்திரனை, ஔர்ணவாபனை, அஹீசுவனைக் கொன்ருன். பனியால் அவன் அர்ப்புதனை வென்ருன்.

27. காயகர்களே! உக்கிரனும், ஜயிப்பவனும், வெல்லுபவனும், பகைவர்களைச் சாய்ப்பவனுமான இந்திரனுக்கு, தேவர்களால் தோன்றும் தோத்திரத்தைப் பாடுங்கள்.

28. பருகிய ஸோமத்தால் எல்லா விரதங்களையும், தேவர்களின் நடுவே புலப்படுத்தும் இந்திரனுக்குப் பாடுங்கள்.

29. சேர்ந்து இன்புறுபவையும், பொன் கேசமுள்ளவையுமான இரு குதிரைகள் இந்திரனை இதமான அவிக்கு இங்கே ஏந்தி வருக.

30. பலரால் போற்றப்படும் இந்திரனே! உன்னுடைய குதிரைகள் பிரியமேதனுல் போற்றப்பட்டு ஸோமத்தைப் பருக உன்னை இங்கே ஏந்தி வருக. 6718

## 33. இந்திரன்

### 653. மேதாதிதிகாண்வன்

1. நாங்கள் உனக்குச் சலத்தைப்போல் ஸோமத்தைப் பொழிகிருேம். துதிப்பவர்கள் கிள்ளப்பட்ட தருப்பையைப் பரத்தி விருத்திரர்களைக் கொல்பவனே! பவித்திரத்திலிருந்து தாரைகள் இறங்குங்கால் உன்னை ஏத்துகிருர்கள்.



2. வசுவே! ஸோமம் புலப்படுங்கால் தலைவர்கள் துதிகளை அடிக்கடி கூறி உன்னை முழங்குகிருர்கள். இந்திரனே! நீ காளையைப் போல் கர்ச்சித்து, ஸோமத்துக்குத் தாகமாகி எப்பொழுது மனைக்கு வருவாய்?

3. தீரனே! நீ கண்வர்களான எங்களுக்கு ஆயிரக்கணக்கான செல்வங்களை அளிக்கவும். அறிஞனை மகவானே! நாங்கள் உன்னிடம் பொன்னும் பசுக்களும் நிறைந்த செல்வத்தை வேண்டுகிருேம்.

4. மேத்யாதியே! ஸோமத்தைப் பருகவும். ஸோமமதத்திலே குதிரைகளை இணைத்தவனும், இரஸம் பொழியப்படுங்கால் இருப்பவனும், வச்சிராயுதம் ஏந்துபவனும், பொன்தேர் உள்ளவனுமான இந்திரனைப் பாடுங்கள்.

5. நலமான இடது கை, நலமான வலது கையுள்ளவனும், தலைவனும், நல்ல அறிஞனும், ஆயிரக்கணக்கான செயல்களை நடத்துபவனும், மிக்கச் செல்வத்தை அளிப்பவனும், கோட்டைகளை இடிப்பவனும், துதியால் இன்புறுபவனுமான இந்திரன் எங்களால் போற்றப்படுகிருன். 6723

6. பகைவர்களை ஜயிப்பவனும் எதிர்ப்பில்லாதவனும், போரில் பயின்றவனும், மிகுந்த செல்வமுள்ளவனும், ஸோமத்தைக் கேட்பவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரன் தன் தானச்செயலால் திறத்தலைவனுக்குக் கறக்கும் பசுவைப் போலாகிருன்.

7. ஸோமம் பொழியப்படுங்கால் அவன் அறிஞர்களோடு சேர்ந்து பருகுவதை எவன் அறிகிருன்? இனியமுகமுள்ளவனும், ஸோமரஸத்தால் மதமடைந்து, தன் ஆற்றலால் பகைவர்களை உடைத்தவனுமான இந்திரன் எந்த உணவை அருந்தினுன்?

8. மதத்தின் துமிகளை வெளிப்படுத்தும் வனகஜத்தைப் போல் அவன் பல இடங்களிலே தன் பூரிப்பைப் புலப்படுத்துகிருன். இந்திரனே! உன்னை எவனும் தடைசெய்யான். நீ ஸோமத்துக்கு வா. நீ மகான். நீ உன் ஆற்றலால் எங்கும் செல்லுகிருய்.

9. உக்கிரனும், பகைவர்களால் அசைக்கப்படாத வனும், திரமாயிருப்பவனும், போர்க்கோலமுள்ளவனுமான மகவான், துதிப்பவனுடைய அழைப்பைச் செவியுற்றால் அவன் வேறு எங்கும் செல்லாமல் இங்கு வருவான்.

10. உக்கிரனே! நீ மெய்யாகவே இங்ஙனம் வர்ஷிப் பவனாயிருக்கிறாய். நீ பகைவர்களால் தடைபடாமல் வலிய குதிரைகளால் ஏந்தப்பட்டு வருகிறாய். நீ தூரத்திலிருக்குங் கால் வர்ஷிப்பவன் எனப் போற்றப்படுகிறாய். நீ அருகிலிருக் குங்கால் வர்ஷிப்பவன் எனப் போற்றப்படுகிறாய். 6728

11. உன்னுடைய வாய்-வடங்கள் – வர்ஷிப்பவை. உன்னுடைய தங்கக்கசை வர்ஷிப்பது. மகவானே! உன்னு டைய தேர் வர்ஷிப்பது. உன்னுடைய குதிரைகள் வர்ஷிப் பவை. சதக்கிரதுவே! நீ வர்ஷிப்பவன்.

12. வர்ஷிப்பவனே! ஸோமத்தையளிப்பவன் வர்ஷிப்ப வனாகிப் பொழிவானாக. நேர்மையாய்ச் செல்லும் இந்திரனே! எங்களுக்குச் செல்வத்தை ஏந்தி வா. குதிரைகளை நிறுத்து பவனே! அவிகளை வர்ஷிப்பவன். உனக்காக சலங்களிலே வர்ஷிக்கும் ஸோமத்தைச் சேர்க்க விரும்புகிறான்.

13. மிக்க வலியவனான இந்திரனே! ஸோமா- முதத்தைப்பருக வா. செல்வனும், பேரறிஞனுமான இந்த இந்திரன் நம்முடைய மொழிகளையும், துதிகளையும், தோத்தி ரங்களையும் செவியுறான்.

14. சதக்கிரதுவே! விருத்திரனைக் கொல்பவனே! உன்னுடைய தேரிலே இணைக்கப்பட்ட குதிரைகள் தலை வனும், தேருவிருப்பவனுமான உன்னை, மற்றவர்களால் அளிக்கப்படும் யக்ஞங்களை விலக்கி எங்களுடைய யக்ஞங் களுக்கு ஏந்தி வருக.

15. மகான்களில் மகானாயிருப்பவனே! இன்று எங்க ளுடைய ஸ்தோமத்தைப் பற்றவும். ஒளியுள்ளவனே! ஸோமத்தைப் பருகுபவனே! எங்களுடைய யக்ஞங்கள், ஸோமபானங்கள் உன்னை இன்புறுத்த மிக்க இனிமையுள்ள வையாகுக. 6733



16. நம்மை நெறியில் செலுத்தும் சூரனான இந்திரன் உன்னையோ, என்னையோ, வேறு எவனையோ தண்டிப்பதில் இன்புறுவதில்லை.

17. ஸ்திரியினுடைய மனம் கட்டுக்கடங்காதது. அவளுடைய மனத்திட்பம் அற்பமாயிருக்கிறது என இந்திரன் சொன்னான்.

18. இந்திரனுடைய இரு குதிரைகள் ஸோம மதத் துக்குச் செல்லும் அவனுடைய தேரை இழுக்கின்றன. வர்ஷிப்பவனுடைய தேரின் தண்டம் குதிரைகளின் மீது இருக்கிறது.

19. உன்னுடைய கண்களைக் கீழே செலுத்தவும். மேலே பார்க்காதே. கால்களை இறுகச் சேர்த்துக்கொள்ள வும். மானிடர்கள் உன் ஆடை மறைத்திருப்பதைக் காணாமலிருப்பார்களாக. ஏனெனில் நீ பிராமணனாயிருந்து- ஆணாயிருந்து-ஸ்திரியானாய். 6737

# 34. இந்திரன்

## 654. கண்வ வம்சத்தில் வந்த நிபாதிதி

1. இந்திரனே! கண்வனுடைய நல்ல துதியை ஏற்றுக் கொள்ள உன்னுடைய குதிரைகளிலே வா. திவாவசுவே! சோதியை அரசு புரியும் நீ அங்கு செல்லவும். இங்கு திரும்பவும்.

2. ஸோமத்தைப் பிழியுங்கால் ரஸத்தை அளிக்குங் கால் சப்திக்கும் போது ஒலியால் உன்னை இங்கு செலுத்துக. திவாவசுவே! சோதியை யரசுபுரியும் நீ அங்கு செல்லவும். இங்கு திரும்பவும்.

3. இந்தக் கற்களின் வட்டம் இந்த யக்ஞத்திலே ஸோமத்தை ஆட்டைக் கலக்கும் ஓநாயைப் போல் ஆட்டு கிறது. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு செல்லவும். இங்கு திரும்பவும்.

4. கண்வர்கள் உன்னை இங்கு பாலனத்துக்காகவும், உணவுக்காகவும் அழைக்கிறார்கள். திவாவசுவே!

சோதியை அரசுபுரியும் நீ அங்கு செல்லவும். இங்கே திரும்பவும்.

5. நான் உனக்கு ஸோமத்தை வர்ஷிப்பவனுக்களிக்கப்படும் முதற்பானத்தைப் போல் அளிக்கிறேன். திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு செல்லவும். நீ இங்கே திரும்பவும். 6742

6. சுவர்க்கக் குடும்பத் தலைவனான நீ, எங்களிடம் வா. விசுவத்தைத் தாங்கும் நீ, எங்களுடைய பாலனத்துக்கு வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு செல்லவும். நீ இங்கே திரும்பவும்.

7. ஆயிரம் பாலனங்களை அளிப்பவனும், நூறு செல்வங்களைத் தருபவனும், பேரறிஞனுமான நீ, எங்களிடம் வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு திரும்பவும். நீ இங்கே திரும்பவும்.

8. தேவர்களின் நடுவே துதியாருகனும், மானிடர்களுக்கு நலஞ் செய்பவனும், ஹோதாவுமான அக்கினி உன்னை இங்கு ஏந்தி வருவானாக. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு திரும்பவும். நீ இங்கே திரும்பவும்.

9. பகைவர்களின் மதத்தை அடக்கும் இரு குதிரைகள் பருந்தை இயக்கும் சிறகுகளைப் போல் உன்னை இங்கு ஏந்தி வருக. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கு திரும்பவும். நீ இங்கே திரும்பவும்.

10. தலைவனே! நீ எத்திசையிலிருந்தாலும் சுவாஹாவோடு அளிக்கப்படும் ஸோமத்தைப் பருக வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பவும். நீ இங்கே திரும்பவும். 6747

11. இங்கு துதிகள் கூறப்படுங்கால் நீ அவற்றைச் செவியுற வரவும். எங்களை இன்புறுத்தவும். திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பிச் செல்லவும். நீ இங்கே திரும்பவும்.

12. புட்டியான குதிரைகள் உள்ள நீ நன்கு போஷிக்கப்பட்டவையும், சம வடிவமுமுள்ள குதிரைகளோடு வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பிச் செல்லவும். நீ இங்கே திரும்பவும்.



13. நீ மலைகளிலிருந்தும், வானின் உச்ச ஸ்தானத்திலிருந்தும் வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பிச் செல்லவும். நீ இங்கே திரும்பவும்.

14. சூரனே! நீ எங்களுக்கு ஆயிரக்கணக்கான பசுச் செல்வங்களையும், குதிரைச் செல்வங்களையுமளிக்கவும். திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பிச் செல்லவும். நீ இங்கே திரும்பவும்.

15. நீ எங்களுக்கு ஆயிரக்கணக்கான, பதினாயிரக் கணக்கான, நூற்றுக்கணக்கான நல்ல பொருள்களை ஏந்தி வா. திவாவசுவே! சோதியை அரசுபுரியும் நீ அங்கே திரும்பிச் செல்லவும். நீ இங்கே திரும்பவும். 6752

### ஆயிரம் வசுரோசிஷர்கள்

16. ஆயிரம் வசுரோசிஷர்களான நாங்களும், தலைவனுமான இந்திரனும், வலிய பசுக்களின், குதிரைகளின் மந்தைகளைப் பெற்றுக் கொண்டபோது,

17. அவை நேராகச் செல்பவையும், காற்றைப்போல் வேகமுள்ளவையாயும், பிரகாசிப்பவையாயும், விரைந்து செல்பவையாயும், சூரியனைப்போல் விளங்குபவையாயிருந்தன.

18. தூரத்திலே அளிக்கப்பட்டவையும், சுழலும் சக்கரத்தேரில் இணைக்கப்பட்டவையுமான அக் குதிரைகளை அடைந்த நாங்கள் வனத்தின் நடுவுக்குப் புறப்பட்டோம். 6755

## 35. அசுவினிகள்

### 655. சியாவாசுவன் ஆத்திரேயன்

1. அசுவினிகளே! நீங்கள் அக்கினியோடும், இந்திரனோடும், வருணனோடும், விஷ்ணுவோடும், ஆதித்தியர்களோடும், ருத்திரர்களோடும், வசுக்களோடும் சேர்ந்து, உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி ஸோமத்தைப் பருகுங்கள்.

2. ஆற்றலுள்ள அசுவினிகளே! எல்லாப் புலன்களோடும், புவனங்களோடும், சுவர்க்கத்தோடும், புவி-யோடும், மலைகளோடும் சேர்ந்து, உஷையோடும் சூரி-யனோடும் ஐக்கியமாகி ஸோமத்தைப் பருகுங்கள்.

3. அசுவினிகளே! நீங்கள் இந்த யக்ஞத்திலே எல்லா மூன்று பதினொன்று முப்பத்துமூன்று தேவர்களோடும், சலங்களோடும், மருத்துக்களோடும், பிருகுக்களோடும் சேர்ந்து, உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி ஸோமத்தைப் பருகுங்கள்.

4. நீங்கள் யக்ஞத்தைப் பற்றுங்கள். என் அழைப்பைச் செவியுறுங்கள். தேவர்களே! இந்த யக்ஞத்திலே எல்லா அவிகளையும் அறிந்துகொள்ளுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி ஸோமத்தைப் பருகுங்கள்.

5. பெண்களின் குரல்களால் இன்பமாகும் இளைஞர்களைப் போல் நீங்கள் எங்கள் ஸ்தோமத்தால் இன்பமாகுங்கள். தேவர்களே! இந்த யக்ஞத்தலே எல்லா அவிகளையும் அறிந்து கொள்ளுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி எங்களுக்கு அவியை ஏந்தி வாருங்கள். 6760

6. தேவர்களே! எங்களுடைய துதிகளை விரும்புங்கள்; எங்களுடைய யக்ஞத்தை விரும்புங்கள். தேவர்களே! இந்த யக்ஞத்திலே எல்லா அவிகளையும் அறிந்துகொள்ளுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் சேர்ந்து எங்களுக்கு உணவை ஏந்தி வாருங்கள்.

7. நீங்கள் பொழிந்துள்ள ஸோமத்தின் மீது சலத்தினுள் பாயும் ஹாரித்திரப் பறவையைப் போல் இயங்குகிறீர்கள். இரு மகிஷங்களைப்போல் ஸோமத்துக்கு விரையுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி முவ்வித வழிகளால் வாருங்கள்.

8. நீங்கள் பொழிந்துள்ள ஸோமத்துக்கு, சலத்துக்குத் துரிதமாகும் இரு அன்னங்களைப் போலும், இரு பயணி



களைப் போலும், இரு மகிஷங்களைப் போலும் விரைகிறீர்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி முவ்வித வழியால் வாருங்கள்.

9. நீங்கள் ஸோமத்தைப் பருக இரு பருந்துகளைப் போல் விரைகிறீர்கள். நீங்கள் பொழிந்திருக்கும் ஸோமத்துக்கு—சலத்துக்குச் செல்லும்—இரு மகிஷங்களைப் போல் துரிதமாகிறீர்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி முவ்வித வழியால் வாருங்கள்.

10. அசுவினிகளே! ஸோமத்தைப் பருகுங்கள். திருப்தியாகுங்கள். இங்கு வாருங்கள். எங்களுக்குப் பிரஜையை யளியுங்கள். செல்வத்தைத் தாருங்கள். நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி எங்களுக்கு வலுமையையளியுங்கள். 6765

11. உங்களுடைய பகைவர்களை வெல்லுங்கள். எங்களைப் பாலித்துப் போற்றுங்கள். பிரஜையையளியுங்கள். செல்வத்தைத் தாருங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி எங்களுக்குப் பலத்தை அளியுங்கள்.

12. எங்கள் பகைவர்களைக் கொல்லுங்கள். நண்பர்களிடம் செல்லுங்கள். பிரஜையையளியுங்கள். செல்வத்தைத் தாருங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி எங்களுக்குப் பலத்தையளியுங்கள்.

13. நீங்கள் மித்திரனோடும், வருணனோடும், தருமனோடும், மருத்துக்களோடும் சேர்ந்து துதிப்பவனுடைய அழைப்புக்குச் செல்லுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும், சூரியனோடும், ஆதித்தியர்களோடும் ஐக்கியமாகி துதிப்பவனிடம் இயங்குங்கள்.

14. நீங்கள் அங்கிரஸர்களோடும், விஷ்ணுவோடும், மருத்துக்களோடும் சேர்ந்து துதிப்பவனுடைய அழைப்புக்குச் செல்லுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும், சூரியனோடும், ஆதித்தியர்களோடும் ஐக்கியமாகி துதிப்பவனிடம் செல்லுங்கள்.

15. வர்ஷிப்பவர்களான நீங்கள், ரிபுக்களோடும், மருத்துக்களோடும், வாஜர்களோடும் சேர்ந்து, துதிப்பவனுடைய அழைப்புக்குச் செல்லுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும், சூரியனோடும் ஐக்கியமாகி துதிப்பவனிடம் செல்லுங்கள். 6770

16. பிரம்மத்தை ஊக்கப்படுத்துங்கள். செயல்களை ஊக்கப்படுத்துங்கள். அரக்கர்களைக் கொல்லுங்கள். நோய்களைக் குணப்படுத்துங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி அளிப்பவனுடைய ஸோமத்தைப் பருகுங்கள்.

17. க்ஷத்திரத்தை ஊக்கப்படுத்துங்கள். தீரர்களை ஊக்கப்படுத்துங்கள். அரக்கர்களை நீக்குங்கள். நோய்களைக் குணப்படுத்துங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி அளிப்பவனுடைய ஸோமத்தைப் பருகுங்கள்.

18. பசுக்களை ஊக்கப்படுத்துங்கள். சனங்களை ஊக்கப்படுத்துங்கள். அரக்கர்களைக் கொல்லுங்கள். நோய்களைக் குணப்படுத்துங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி அளிப்பவனுடைய ஸோமத்தைப் பருகுங்கள்.

19. பகைவர்களின் மதத்தை அடக்கும் நீங்கள், ஸோமத்தைப் பொழியும் சியாவாசுவனுடைய முதன்மையான துதியை, அத்திரியின் துதியைக் கேட்டது போல் கேளுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி முந்திய தினம் பொழிந்த ஸோமத்தைப் பருகுங்கள்.

20. பகைவர்களின் மதத்தை அடக்கும் நீங்கள், பொழியும் சியாவாசுவனுடைய துதிகளை, நகைகளைப்போல் ஏற்றுக்கொள்ளுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி, கடந்த தினத்தில் பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள். 6775



21. பகைவர்களின் மதத்தை அடக்கும் நீங்கள், ஸோமத்தை அளிக்கும் சியாவாசுவனுடைய யக்ஞங்களை குதிரையின் வாய் வடங்களைப்போல் பற்றுங்கள். அசுவினிகளே! நீங்கள் உஷையோடும் சூரியனோடும் ஐக்கியமாகி முந்திய தினத்தில் பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள்.

22. உங்களுடைய தேரை எங்களை நோக்கிச் செலுத்துங்கள். ஸோமாமிருதத்தைப் பருகுங்கள். அசுவினிகளே! இங்கு வாருங்கள். நான் பாலனத்தை விரும்பி உங்களை அழைக்கிறேன். அவிகளை அளிக்கும் எனக்கு இரத்தினங்களை அளியுங்கள்.

23. தலைவர்களே! அசுவினிகளே! உங்களுக்குத் துதி கூறப்படும் யக்ஞம் துவக்கமாகிறது. என்னால் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருக வாருங்கள். பாலனத்தை விரும்பும் நான் உங்களை அழைக்கிறேன். அவிகளை அளிக்கும் இரத்தினங்களை அளியுங்கள்.

24. தேவர்களே! அசுவினிகளே! சுவாஹா முழக்கத்தோடு அளிக்கப்படும் ஸோமத்தால் திருப்தியாகுங்கள். அசுவினிகளே! இங்கு வாருங்கள். நான் பாலனத்தை விரும்பி உங்களை அழைக்கிறேன். அவிகளை அளிக்கும் எனக்கு இரத்தினங்களை அளியுங்கள். 6779

## 36. இந்திரன்

### 656. சியாவாசுவன் — ஆத்திரேயன்

1. நீ ஸோமம் பொழிபவனையும், கிள்ளிய தருப்பையைப் பரத்துபவனையும் பாலிப்பவன். நீ மதத்துக்காக ஸோமத்தைப் பருகவும். இந்திரனே! நல்லவர்களின் தலைவனே! எல்லாப் பகைப் படைகளில் வெற்றியுள்ளவனும், பலரை வெல்லுபவனும், சலங்களை ஜயிப்பவனும், மருத்துக்களின் தலைவனுமான நீ, பருக எந்த ஸோம பாகத்தைத் தேவர்கள் கற்பித்தார்களோ அதைப் பருகவும்.

2. மகவானே! நீ தொழுபவனைப் பாலிக்கவும். நீ உன்னைப் பாலித்துக்கொள்ளவும். சதக்கிரதுவே! நீ

உன்னுடைய மதத்துக்காக ஸோமத்தைப் பருகவும். இந்திரனே! நல்லவர்களின் தலைவனே! எல்லாப் பகைப் படைகளில் வெற்றியுள்ளவனும், பலரை வெல்லுபவனும், சலங்களை ஜயிப்பவனும், மருத்துக்களின் தலைவனுமான நீ பருக, எந்த ஸோம பாகத்தைத் தேவர்கள் கற்பித்தார்களோ, அந்த பாகத்தைப் பருகவும்.

3. இந்திரனே! சதக்கிரதுவே! நல்லவர்களின் தலைவனே! நீ தேவர்களால் உணவைப் பாலிக்கிறாய். நீ உன்னை உன் பலத்தால் பாலித்துக்கொள்கிறாய். எல்லாப் பகைப் படைகளை ஜயிப்பவனும், பலரை வெல்லுபவனும், சலங்களை அடக்குபவனும், மருத்துக்களின் தலைவனுமான உனக்குத் தேவர்களால் கற்பிக்கப்பட்ட ஸோமபாகத்தை உன்னை மதஞ் செய்துகொள்ள பருகவும்.

4. நீ சுவர்க்கத்தைத் தோற்றுவிப்பவன். நீ புவியை தோற்றுவிப்பவன். சதக்கிரதுவே! இந்திரனே! நல்லவர்களின் தலைவனே! எல்லாப் படைகளையும் ஜயிப்பவனும், பலரை வெல்லுபவனும், சலங்களை அடக்குபவனும், மருத்துக்களின் தலைவனுமான நீ, உன் மதத்துக்காக உனக்குத் தேவர்களால் கற்பிக்கப்பட்ட ஸோம பாகத்தை நீ பருகவும்.

5. நீ குதிரைகளைத் தோற்றுவிப்பவன். நீ பசுக்களைத் தோற்றுவிப்பவன். சதக்கிரதுவே! நீ மதத்துக்காக ஸோமத்தைப் பருகவும். இந்திரனே! நல்லவர்களின் தலைவர்களின் தலைவனே! எல்லாப் பகைப் படைகளில் வெற்றியுள்ளவனும், பலரை வெல்பவனும், சலங்களை ஜயிப்பவனும், மருத்துக்களின் தலைவனுமான நீ பருக, எந்த ஸோம பாகத்தைத் தேவர்கள் கற்பித்தார்களோ அதைப் பருகவும். 6784

6. வச்சிராயுதம் ஏந்துபவனே! அத்திரியின் ஸ்தோமத்தை மேம்படுத்தவும். சதக்கிரதுவே! உன்னுடைய மதத்துக்காக ஸோமத்தைப் பருகவும். இந்திரனே! நல்லவர்களின் தலைவனே! எல்லாப் பகைப்படைகளில் வெற்றியுள்ளவனும், பலரை வெல்லுபவனும், மருத்துக்களின்



தலைவனுமான நீ பருக, எந்த ஸோமத்தைத் தேவர்கள் கற்பித்தார்களோ அதைப் பருகவும்.

7. யக்ஞச் செயல்களை நடத்திய அத்திரியின் துதிகளைக் கேட்டதுபோல் ஸோமத்தையளிக்கும் சியாவாசுவனான என்னுடைய துதிகளைக் கேட்கவும். இந்திரனே! நீ ஒருவனாகவே திரஸதஸ்யுவின் தோத்திரங்களை ஊக்கப் படுத்தி, போரிலே அவனைப் பாலித்தாய் 6786

# 37. இந்திரன்

## 657. சியாவாசுவ ஆத்திரேயன்

1. இந்திரனே! சசிபதியே! நீ போர்களிலே இந்த அறிஞர்களை எல்லாப் பாலனங்களாலும் பாலிக்கிறாய், பொழிபவர்களைப் பாலிக்கிறாய். நிந்தையற்றவனும், வச்சிராயுதம் ஏந்துபவனும், விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரனே! நீ நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

2. உக்கிரனான இந்திரனே! பகைப்படைகளை ஜயிப்பவனும், யக்ஞங்களின் தலைவனுமான நீ, உன்னுடைய எல்லாப் பாலனங்களாலும் பாலிக்கிறாய். நிந்தையற்றவனும் வச்சிரத்தை ஏந்துபவனும், விருத்திரனைக் கொல்பவனுமான நீ, நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

3. இந்திரனே! செயல்களின் தலைவனே! நீ உன்னுடைய எல்லாப் பாலனங்களாலும், இவ்வுலகத்தின் ஒரே அரசனாய் விளங்குகிறாய். நிந்தையற்றவனும், வச்சிராயுதத்தை ஏந்துபவனும், விருத்திரனைக் கொல்பவனுமான நீ, நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

4. இந்திரனே! செயல்களின் தலைவனே! நீ ஸமமாயிருக்கும் இவ்விரு உலகங்களையும், உன்னுடைய எல்லாப் பாலனங்களாலும் தனிப்படுத்துகிறாய். நிந்தையற்றவனும், வச்சிராயுதத்தை ஏந்துபவனும், விருத்திரனைக் கொல்பவனுமான நீ, நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

5. இந்திரனே! செயல்களின் தலைவனே! நீ உன்னுடைய எல்லாப் பாலனங்களாலும் சாந்திக்கும், சமருக்கும் தலைவனாயிருக்கிறாய். நிந்தையற்றவனும், விருத்திரனைக் கொல்பவனுமான நீ, நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

6. நீ உலகத்தின் பலத்துக்காக இருக்கிறாய். நீ எல்லாப் பாலனங்களாலும் பாலிக்கிறாய். இந்திரனே! செயல்களின் தலைவனே! நீ எவனாலும் பாலனமாகவில்லை. நிந்தையற்றவனும், வச்சிரத்தை ஏந்தபவனும், விருத்திரனைக் கொல்பவனுமான நீ, நண்பகல் யக்ஞத்தின் ஸோமத்தைப் பருகவும்.

7. பொழியும் சியாவாசுவனுடைய துதிகளை யக்ஞச் செயல்களை நடத்திய அத்திரியின் துதிகளைப்போல் கேட்கவும். இந்திரனே! நீ திரஸதஸ்யுவைப் போரிலே பலப்படுத்தி ஒருவனாகவே பாலித்தாய். 6793

## 38. இந்திராக்கினிகள்

### 658. சியாவாசுவன் ஆத்திரேயன்

1. இந்திராக்கினிகளே! நீங்கள் இருவர்களும் யக்ஞத்தின் ரித்விஜர்களாயிருக்கிறீர்கள். நீங்கள் போர்களிலும் யாக செயல்களிலும் ஜயிப்பவர்கள். வழிபடுபவனான என்னுடைய இந்தத் துதியைக் கேளுங்கள்.

2. பகைவர்களை அழிக்கும் நீங்கள் ஒரே தேரில் செல்லுகிறீர்கள். விருத்திரனைக் கொல்லும் நீங்கள், வெல்லப்படாதவர்கள். இந்திராக்கினிகளே! வழிபடுவனான என்னுடைய இந்தத் துதியைக் கேளுங்கள்.

3. தலைவர்கள் உங்களுக்குக் கர்களால் இனிய மதகரமான ஸோமத்தைப் பிழிந்திருக்கிறார்கள். இந்திராக்கினிகளே! வழிபடுபவனான என்னுடைய துதியைக் கேளுங்கள்.

4. துதிகளோடு சேரும் நீங்கள் யக்ஞத்தைப் பற்றுங்கள். தலைவர்களே! இந்திராக்கினிகளே! யக்ஞத்துக்காகப் பொழியப்படும் இந்த ஸோமத்துக்கு இங்கு வாருங்கள்.



5. எந்த யக்ஞங்களால் நீங்கள் அவிகளை ஏந்திச் செல்லுகிறீர்களோ அந்த யக்ஞங்களைப் பற்றுங்கள். தலைவர்களே! இந்திராக்கினிகளே! இங்கு வாருங்கள். 6798

6. காயத்திரியின் வழியைப் பற்றும் இந்த உத்தமத் துதியைப் பற்றுங்கள். தலைவர்களே! இந்திராக்கினிகளே! இங்கு வாருங்கள்.

7. இந்திராக்கினிகளே! வெற்றியால் தோன்றிய செல்வங்களுள்ள நீங்கள் காலையிலே எழும் தேவர்களோடு ஸோமத்தைப் பருக வாருங்கள்.

8. இந்திராக்கினிகளே! பொழிபவனான சியாவாசுவனுடையவும், அத்திரியினுடையவும் அழைப்பை ஸோமபானத்தைப் பருகச் செவியுறுங்கள்.

9. இந்திராக்கினிகளே! நான் உங்கள் இருவர்களையும் பூர்வத்தில் அழைத்த அறிஞர்களைப்போல் பாலனத்துக்காக அழைக்கிறேன்.

10. அவர்களுக்குக் காயத்திரி ஸாமன் பாடப்படுகிறது. நான் ஸரஸ்வதியோடு சேர்ந்துள்ள இந்திராக்கினிகளின் பாலனத்தை விரும்புகிறேன். 6803

## 39. அக்கினி

### 659. நாபாக காண்வன்

1. நான் துதியாருகனான அக்கினியைத் துதிக்கிறேன். நான் அக்கினியை யக்ஞத்துக்குத் தோத்திரத்தோடு அழைக்கிறேன். அக்கினி எங்களுடைய யக்ஞத்திலே தேவர்களை அவிகளால் ஒளிப்படுத்துவானாக. அறிஞனான அக்கினி இரு உலகங்களின் நடுவே தேவர்களின் தூதக் கடமைகளைச் செய்பவனாய்ச் செல்லுகிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

2. அக்கினியே! எங்கள் புதிய துதியால் போற்றப்பட்டு எங்கள் அங்கங்களை எதிர்க்கும் இப்பகைவர்களின் எதிர்ப்புகளை எதிர்க்கவும். அவி அளிப்பவர்களின் சத்ருக்களைப் பஸ்பப் படுத்தவும். எதிர்க்கும் எல்லா அறிவிலி

களும் இங்கிருந்து நீங்குவார்களாக. எல்லாப் பகைவர் களும் அழிவார்களாக.

3. அக்கினியே! உன் வாயினுள் நெய்யைப் பொழிவதுபோல் உனக்கு நான் துதிகளைக் கூறுகிறேன். நீ தேவர்களின் நடுவே அவற்றை ஒத்துக்கொளளவும். ஏனெனில், நீ பழையவன்; சுகத்தைத் தருபவன். விஸ்வஸ்வதனுடைய தூதன். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

4. அக்கினி விரும்பப்படும் எந்த உணவையும் தருகிறான். அவிகளால் அழைக்கப்படும் அவன், வழிபடுபவர்களுக்குப் புலன்களால் வரும் இன்பத்தையும், அமைதியிலிருந்து வரும் ஆனந்தத்தையும் அளிக்கிறான். எல்லா தேவர்களையும் அழைக்க அவன் அவசியமாகிறான். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

5. அக்கினி தன்னுடைய பலவிதத் திறச்செயல்களால் புலனுகிறான். அவன் தேவர்களின் ஹோதாவாயிருக்கிறான். அவன் தியாகிகளால் சூழப்பட்டு, பகைவனை எதிர்த்துச் செல்கிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக. 6808

6. அக்கினி, தேவர்களின் பிறப்புக்களை அறிகிறான். மானிடர்களின் இரகசியங்களை உணர்கிறான். அக்கினி செல்வங்களைத் தருபவனும் இருக்கிறான். புதிய அவியால் நன்கு போற்றப்படும் அக்கினி செல்வக் கதவுகளைத் திறந்து விடுகிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

7. அக்கினி, தேவர்களின் நடுவே வசிக்கிறான். அவன் யக்ஞாருக சனங்களின் நடுவே தங்குகிறான். அவன் பல செயல்களை, இன்பத்தோடு பல பொருள்களைப் புவியைப்போல் புட்டிப்படுத்துகிறான். அவன் தேவர்களின் நடுவே யக்ஞாருகத் தேவனுயிருக்கிறான். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.



8. நாங்கள் ஏழு மானிடர்களால் போற்றப்படுபவனும், எல்லா நதிகளில் வசிப்பவனும், மூன்று இடங்கள் இருப்பவனும், மந்தாதுவுக்குத் தஸ்யுவைக் கொல்பவனும், யக்ஞங்களிலே முதல்வனுமான அக்கினியிடம் செல்வோமாக. எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

9. அறிஞுன அக்கினி, மூன்று மூலஸ்தானங்களிலே வசிக்கிறான். தூதனும், விப்பிரனுமான அக்கினி இங்கு அலங்காரமாகி, முப்பத்துமூன்று தேவர்களை யஜிப்பாளுக. அவன் எங்களுடைய விருப்பங்களையெல்லாம் பூர்த்தி செய்வாளுக. எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

10. பழைய அக்கினியே! நீ ஒருவனே தேவர்களின் நடுவே, மனிதர்களின் நடுவே, எங்களுக்குச் செல்வத்தை தரும் தலைவனுயிருக்கிறுய். கரைகளுக்குட்பட்டுப் பாய்ந்தோடும் சலங்கள் உன்னைச் சூழ்ந்து பெருகுகின்றன. எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக. 6813

## 40. இந்திராக்கினிகள்

### 660. நாபாக காண்வன்

1. வெற்றியுள்ள இந்திராக்கினிகளே! நாங்கள் போர்களிலே வலிய பகைவர்களை அழிக்க, காடுகளை எரிக்கும் காற்றுல் வீசப்பட்ட அக்கினியைப்போல் செல்வங்களை எங்களுக்கு அளியுங்கள். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

2. நாங்கள் உங்கள் இருவரையும் அழைக்கவில்லையா? நாங்கள் மிக்க வலியவனும், மனிதர்களின் தலைவனுமான இந்திரனையே போற்றுகிறோம். அவன் எங்களுக்கு உணவையளிக்க சில சமயங்களில் குதிரைகளோடு வருகிறான். அவன் யக்ஞத்திலே கலந்துகொள்ள அணுகுகிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

3. புகழுள்ள இந்திராக்கினிகள் போர்களின் நடுவே வசிக்கிறார்கள். தலைவர்களும், கவித்தன்மையால் கவிகளாயுமுள்ள நீங்கள், அறிஞர்களால் விரும்பப்படுங்கால் நட்பை நாடுபவனிடமிருந்து அவியை ஏற்றுக்கொள்கிறீர்கள். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

4. எந்த இந்திராக்கினிகள் இந்த உலகத்தையெல்லாம் அடைந்திருக்கிறார்களோ, எவர்களுடைய அங்கத்திலே இந்த சோதியும் பரந்த புவியும் செல்வத்தை ஒப்படைக்கின்றனவோ, அந்த இந்திராக்கினிகளுக்கு யாகத்தையும் துதியையும் நாபாகனைப்போல் அளிக்கவும். எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

5. ஏழு லோகங்களுள்ளதும், மறைந்திருக்கும் கதவு உள்ளதும், தன் பலத்தால் தலைவனாயிருக்கும் இந்திரனை அடைந்திருப்பதுமான கடலை, தங்கள் ஒளியால் போர்த்திருக்கும் இந்திராக்கினிகளை நாபாகனைப்போல் போற்றவும். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக. 6818

6. இந்திரனே! மீறி முளைக்கும் கொடியின் கிளையைச் செதுக்கும் மனிதனைப்போல் பகைவனை வெட்டவும். நீரஸனுடைய பலத்தை அழிக்கவும். இந்திரனால் பற்றப்பட்டு, குவிக்கப்பட்ட செல்வத்தை நாம் பகிர்ந்துகொள்வோமாக. எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

7. இந்த சனங்கள் இந்திராக்கினிகளைச் செல்வங்களாலும், துதிகளாலும் போற்றுகிறார்கள். நாங்கள் பகைப் படைகளை எதிர்த்து, எங்கள் வீரர்களோடு சத்துருக்களை ஜயிப்போமாக. எங்களோடு போராடுபவர்களை வெல்லுவோமாக. எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

8. அவி ஏந்தும் தலைவர்கள் வெள்ளை நிறமுள்ளவர்களும், கீழிருந்து ஒளிக்கதிர்களோடு சோதிக்கு ஏறுபவர்களுமான இந்திராக்கினி துதிக்க இயங்குகிறார்கள். இந்திராக்கினிகள் ஸிந்துக்களைப் பந்தத்திலிருந்து விடுவித்தார்கள். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.



9. இந்திரனே! நீ வச்சிரத்தை ஏந்துபவன். செல்வங்களை ஊக்கப்படுத்துபவன். செல்வத்தை, வீரப்புதல்வனைத் தருபவனுமான உன்னுடைய பல பண்புகளும், பல பெருமைகளும் எங்கள் அறிவைப் பூர்த்திசெய்க. எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

10. தன்னுடைய பலத்தால் அண்டங்களை உடைப்பவனும், செல்வங்களைத் தருபவனும், ஒளியுள்ளவனும், துதியாருகனுமான இந்திரனைத் துதிகளால் ஊக்கப்படுத்துங்கள். அவன் திவ்ய சலங்களை ஜயிப்பானாக. எங்களுடைய பகைவர்களெல்லாமழிவார்களாக.

11. சுஷ்ணனின் அண்டங்களை உடைப்பவனும், யக்ஞத்துக்கு வருபவனும், துதியாருகனும், ஈகை மனமுள்ளவனும், சத்தியனும், யக்ஞத்துக்குத் தகுந்தவனுமான இந்திரனை ஊக்கப்படுத்துங்கள். இந்திரனே! நீ திவ்ய சலங்களை ஜயித்தாய். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

12. இங்ஙனம் இப்புதிய தோத்திரம் இந்திராக்கினிகளுக்கு, என் தந்தையால், மந்தாதாவால் அங்கிரஸனால் கூறப்பட்டதுபோல் துதிக்கப்படுகிறது. நீங்கள் முக்காப்புள்ள மனையால் எங்களைப் பாலியுங்கள். நாங்கள் செல்வபதிகளாவோமாக. 6825

## 41. வருணன்

### 661. நாபாக காண்வன்

1. மனிதர்களைத் தன் செயலால் பசுக்களைக் காக்கும் கோபனைப் போல் பாலிப்பவனும், செல்வனுமான வருணனையும், மிக்க அறிஞர்களான மருத்துக்களையும் போற்றவும். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

2. நான் நதிகளின் அருகே எழுபவனும், அவற்றின் நடுவே ஏழு சகோதரிகள் உள்ளவனுமான வருணனை,

ஸம துதியால் பிதாக்களின் ஸ்தோமங்களால் நாபாகனுடைய தோத்திரங்களால் போற்றுகிறேன்.

3. அவன் இரவுகளைத் தழுவினான். காலைகளை மாயையால் ஸ்தாபித்தான். அனைவருக்கும் புலனாகிறான். அவனுடைய விரதத்தை விரும்புபவர்கள் தினத்தின் மூன்று யக்ஞங்களிலே அவனைப் போற்றுகிறார்கள். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

4. புவியின் மீது புலனாகும் அவன் திசைகளைத் தாங்குகிறான். அவன் உலகத்தை அளக்கிறான். நாம் பிரவேசிக்கத் தகுந்த அந்தப் பழைய இடம் வருணனுடையதாகும். பசுக்களைப் பாலிக்கும் கோபாலனைப் போல் அவன் எங்களுடைய தலைவனாயிருக்கிறான். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

5. உலகங்களை ஏந்துபவனும், சூரிய ரசிமிகளில் மறைந்திருப்பவையும், மர்மமாயுமுள்ள நாமங்களை அறிபவனுமான அவன், பல வடிவங்களைப் புட்டிப் படுத்தும் சுவர்க்கத்தைப் போல் கவித்தன்மைகளைப் பாலிக்கும் கவியைப்போல் இருக்கிறான். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக. 6830

6. அவனில் எல்லாக் கவிச்செயல்களும், சக்கரத்தின் நடுவிலே வைக்கப்பட்ட நாபியைப் போல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. முவ்வுலகங்களிலிருக்கும் அவனைத் துரிதமாய்ப் போற்றுங்கள். மேய் தரையிலே பசுக்களைத் திரட்டும் மனிதர்களைப்போல் எங்களை எதிர்க்கப் பகைவர்கள் குதிரைகளைச் சேர்க்கிறார்கள். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

7. வருணன் இந்தத் திசைகளையெல்லாம் ஆடையாக அணிந்து கொள்கிறான். அவன் எல்லாப் பிராணிகளின் செயல்களை நன்கறிகிறான். வருணனுடைய மனையின் முன்னே எல்லாத்தேவர்களும் அவனுடைய விரதத்தை அனுசரிக்கிறார்கள். எங்கள் பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.



8. அவன் மறைந்திருக்கும் கடலாயிருக்கிறான். துரிதனான அவன் வானிலே ஏறும் சூரியனைப்போல் சோதிக்கு ஏறுகிறான். வருணன் திசைகளிலே யக்ஞத்தை ஸ்தாபித்தபோது அவன் தன் பிரகாசமாயுள்ள காந்தியால் அசுரர்களின் மாயைகளை நீக்குகிறான். அவன் சுவர்க்கத்துக்கு ஏறுகிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

9. பிரகாசமாய் மிக்கக் காணும் இரசிமிகளால் மூன்று புவிகளிலும் பரவும் அரசன், அப்பாலுள்ள மூன்று இடங்களிலும் வியாபகமாகிறான். வருணனுடைய ஸ்தானம் நிலைத்திருக்கிறது. அவன் ஏழு நதிகளின் தலைவனாயிருக்கிறான். எங்களுடைய எல்லாப் பகைவர்களும் அழிவார்களாக.

10. எவன் தன் விரதங்களைப் பின்பற்றி, தன் வெண்மையான கதிர்களால் தன் வெண் கதிர்களைப் புலப்படுத்துகிறானோ, அல்லது இரவிலே அவற்றைக் கருமைப் படுத்துகிறானோ அவன் வானிலே தன் ஸ்தானத்தை முதன்மையாய்ச் செய்து கொள்கிறான். அவன் சோதியைத் தாங்கும் அஜனான சூரியனைப்போல் வானான ஸ்தம்பத்தால் சுவர்க்கத்தையும் புவியையும் தாங்குகிறான். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக. 6835

## 42. வருணன்

### 662. நாபாகா காண்வன் அர்ச்சனானு ஆத்திரேயன்

1. எல்லாச் செல்வங்கள் உள்ளவனும், வலியவனுமான வருணன் சோதியை நிறுத்தினான். அவன் புவியின் பரிமாணத்தை அளந்தான். சக்கரவர்த்தியான அவன் எல்லா உலகங்களையும் அரசுபுரிகிறான். இவை அனைத்தும் வருணனுடைய விரதங்களாயிருக்கின்றன.

2. மகத்தான வருணனைப் போற்றவும்; அமுதத்தை பாலிக்கும் அறிஞனை வணங்கவும். அவன் எங்களுக்கு முக்காப்புள்ள மனையை அளிப்பானாக; சுவர்க்கமும் பூமி

யும் அவர்கள் அருகில் வசிக்கும் எங்களைப் பாலிப்பார்களாக.

3. தேவனே! வருணனே! உன்னைப்போற்றும் இச் செயலில் ஈடுபட்டுள்ள என்னுடைய ஆற்றலையும் அறிவையும் ஊக்கப்படுத்தவும். நாங்கள் தீச்செயல்களை எல்லாம் கடந்து செல்ல நன்கு நடத்தும் படகில் ஏறுவோமாக.

**அசுவினிகள்**

4. அசுவினிகளே ! நாஸத்தியர்களே ! நீங்கள் ஸோமத்தைப் பருகக் கற்றவர்களும் கற்களும் தங்களுக்குரிய செயல்களை நடத்துகிறார்கள். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

5. அசுவினிகளே! நாஸத்தியர்களே! நான் உங்களைத் துதிகளால் அழைத்த அத்திரியைப்போல் ஸோமபானத்துக்கு அழைக்கிறேன். எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக.

6. நாஸத்தியர்களே! அறிஞர்கள் பாலனத்துக்காக உங்களை அழைப்பதுபோல் நான் உங்களை ஸோமபானத்துக்காக அழைக்கிறேன்; எங்களுடைய பகைவர்கள் எல்லாம் அழிவார்களாக. 6841

## 43. அக்கினி

### 663. விரூப ஆங்கிரஸன்

1. துதிகளைக்கூறும் இவர்கள், விப்பிரனும், படைப்பவனும், இன்னலற்ற தலைவனுடையவனுமான அக்கினிக்குத் துதிகளைக் கூறுகிறார்கள்.

2. ஜாதவேதஸனே! தீர்க்கதரிசியே! அக்கினியே! விருப்பமுடன் பெற்றுக்கொள்ளும் உனக்கு நான் நல்ல துதியைக் கூறுகிறேன்.

3. அக்கினியே! உன்னுடைய உக்கிரச் சுவாலைகள் வனத்தை, தங்கள் பற்களால் செடி, கொடிகளை அழிக்கும் வனமிருகங்களைப்போல் புசிக்கின்றன.



4. புகைக் கொடிகள் உள்ளவையும், பஸ்பப்படுத்துபவையுமான அனல்கள் காற்றால் பிரேரிதமாகி வானிலே பல விதமாய்ப் பரவுகின்றன.

5. தனித்தனியாய் ஒளி படுத்தப்படும் இந்த அனல்கள் உஷையின் துவஜனங்களைப்போல் தோன்றுகின்றன 6846

6. அக்கினி, புவியின்மீது பரவுங்கால் ஜாதவேதஸனாக சலனமாகிறான். அப்பொழுது அவனுடைய கால்களின் கீழே புழுதி கருப்பாயிருக்கிறது.

7. அக்கினி ஓஷதிகளை உணவாக்கி அவற்றைப் புசிக்கிறான். அவன் திருப்தி அடையாமல் மீண்டும் தளிர்களைத் தின்னச் சொல்கிறான்.

8. அக்கினி, மரங்களை சுவாலைகளால் வணக்கப் படுத்தி காந்தியோடு சொலித்து, காடுகளிலே பிரகாசிக்கிறான்.

9. அக்கினியே! சலங்களிலே உன் மனையிருக்கிறது. நீ ஓஷதிகளினுள்ளே பிரவேசிக்கிறாய். நீ அவற்றின் குழந்தையாக மீண்டும் பிறக்கிறாய்.

10. அக்கினியே! நெய்யிலிருந்து உனக்கு ஆஹுதி அளிக்கப்படுங்கால் சிருவத்தின் வாயிலே சொலிக்கும் ஒளி விளங்குகிறது. 6851

11. நம் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், காளையைப் புசிப்பவனும், மச்சியைப் புசிப்பவனும், ஸோமத்தைத் தன் முதுகிலே ஏந்துபவனுமான அக்கினியைப் பாக்களால் போற்றுகிறோம்.

12. அக்கினியே! நாங்கள் போற்றத்தகுந்தவனும், புலவனும், ஹோதாவுமான உன்னை அவியோடும் ஸமிதைகளோடும் நாடுகிறோம்.

13. நாங்கள் சுத்தனும், அவியளிக்கப்படுபவனுமான அக்கினியை, மநுவைப் போலும், பிருகுவைப்போலும், அங்கிரஸனைப் போலும் ஏத்துகிறோம்.

14. அக்கினியே! நீ அக்கினியாலும், அறிஞனான நீ அறிஞனாலும், நண்பனான நீ நண்பனாலும் சொலிப்பிக்கப்படுகிறாய்.

15. அக்கினியே! நீ அபரிமித செல்வத்தையும் வீரப்புதல்வர்களோடுள்ள உணவையும், அறிஞனும், அவிகளையளிப்பவனுமான தலைவனுக்கு அளிக்கவும். 6856

16. அக்கினியே! பலத்தால் புலப்படுத்தப்படுபவனும், சிகப்புக் குதிரைகளுள்ளவனும், சுத்த செயல்களுள்ளவனும், சகோதரனுமான நீ, என்னுடைய இந்தத் துதியைப் பற்றவும்.

17. அக்கினியே! என்னுடைய துதிகள் உனக்குத் தாகமடைந்த கன்றுகளுக்குப் பாலை அளிக்க, கோசாலைகளுக்குத் துரிதமாகும் பசுக்களைப் போல் விரைகின்றன.

18. அங்கிரஸர்களின் தலைவனான அக்கினியே! எல்லா சனங்களும் தங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ள தனித்தனியாய் உன்னையே அழைக்கிறார்கள்.

19. மனதை வசப்படுத்தியவர்களும், மேதாவிகளும், அறிஞர்களுமான தலைவர்கள், உணவைப் பெற யக்ஞங்களால் அக்கினியைப் போற்றுகிறார்கள்.

20. அக்கினியே! வலியவனும் அவிகளை ஏந்துபவனும், ஹோதாவுமான உன்னை மனைகளிலே யக்ஞத்தை இயக்கும் தலைவர்கள் போற்றுகிறார்கள். 6861

21. நீ பல இடங்களிலே ஸமமாகவே தோன்றுகிறாய். நீ எல்லா சனங்களுக்கும் தலைவனாயிருக்கிறாய். ஆதலால் நாங்கள் உன்னைப் போர்களிலே அழைக்கிறோம்.

22. நெய்யால் ஆஹுதமானவுடன் பிரகாசிப்பவனும், எங்களுடைய இந்த அழைப்பைக் கேட்பவனுமான அக்கினியைப் போற்றவும்.



23. நாங்கள் பகைவர்களை அழிப்பவனும், துதிகளைச் செவியுறுபவனும், ஜாதவேதஸனுமான உன்னை அழைக்கிறோம்.

24. நான் சனங்களின் அரசனும், அற்புதனும், தருமங்களின் தலைவனுமான இந்த அக்கினியைப் போற்றுகிறேன். அவன் எனக்குச் செவி சாய்ப்பானாக.

25. நாங்கள், எங்கும் பரவும் பலமுள்ளவனும், செல்வனும், வலியனும், இதனுமான அக்கினியை அசுவத்தைப் போல் பலப்படுத்துகிறோம். 6866

26. அக்கினியே! நீ துன்புறுத்துபவர்களைத் துளைத்து, பகைவர்களைக் கலைத்து, எங்கும் அரக்கர்களைப் பஸ்மப் படுத்தி, கூரிய சுவாலையோடு சொலிக்கவும்.

27. அங்கிரஸர்களின் தலைவனே! சனங்கள் உன்னை மனுவைப்போல் சொலிப்பிக்கிறார்கள். அக்கினியே! நீ என் மொழிகளைக் கேட்கவும்.

28. அக்கினியே! நாங்கள், சோதியிலோ, சலங்களிலோ தோன்றுபவனும், திறத்தால் புலப்படுபவனுமான உன்னை, துதிகளோடு அழைக்கிறோம்.

29. புவியில் வசிக்கும் இந்த சனங்கள் எல்லாம் நீ புசித்து இன்புற, உனக்கு உணவைத் தனித்தனியாயளிக்கிறார்கள்.

30. அக்கினியே! யக்ஞங்களை நன்கறிந்தவர்களும், எல்லாத் தினங்களிலும் சனங்களைப் பார்ப்பவர்களுமான நாங்கள், உன்னால் எல்லாக் கஷ்டங்களையும் கடந்து செல்வோமாக. 6871

31. நாங்கள் இன்பமாயும், இன்புறுத்துபவையுமான மந்திரங்களோடு பலரிடம் பிரியமாயிருப்பவனும், சுத்தப் படுத்தும் ஒளியோடு யக்ஞத்திலிருப்பவனும், இன்புறுத்துபவனுமான அக்கினியைப் போற்றுகிறோம்.

32. அக்கினியே! ஒளிச்செல்வமுள்ள நீ. எழும் சூரியனைப்போல் உன் கதிர்களால் உன் பலத்தைப் பலப் படுத்தி இருளை விலக்குகிறாய்.

33. ஆற்றலுள்ள அக்கினியே! நாங்கள் உன்னிடம் தவறுமலிருக்கும் உன்னுடைய தானமாயிருப்பதும் விரும்பத் தகுந்ததுமான செல்வத்தைக் கேட்கிறோம். 6874

## 44. அக்கினி

### 664. விருப ஆங்கிரஸன்

1. ஸமிதையால் அக்கினியைச் சாற்றுங்கள். நெய்யால் விருந்தினனை எழுப்புங்கள். அவனுக்கு அவிகளை அளியுங்கள்.

2. அக்கினியே! என் ஸ்தோமத்தை ஏற்றுக் கொள்ளவும். இந்தத் துதியால் திறப்படவும். எங்க ளுடைய சூக்தங்களை விரும்பவும்.

3. நான் அக்கினியைத் தூதனுக முற்படுத்துகிறேன். நான் அவனை அவி ஏந்துபவனுகப் போற்றுகிறேன். அவன் தேவர்களை இங்கு அமரச் செய்வானுக.

4. காந்தியுள்ள அக்கினியே! நீ சொலிப்பிக்கப் படுங்கால் உன் மகத்தான சுவாலைகள் ஒளியோடு மேலேறுகின்றன.

5. அன்பு மிகுந்த அக்கினியே! என்னுடைய நெய் நிறைந்த சிருவங்கள் உன்னருகில் வருக. எங்களுடைய அவிகளை ஏற்றுக்கொள்ளவும். 6879

6. நான் இன்புறுத்துபவனும், ஹோதாவும், யக்ஞத் திலே யஜிக்கத் தகுந்தவனும், அற்புத ஒளியுள்ளவனும், நகைச் செல்வனுமான அக்கினியைப் போற்றுகிறேன். அவன் செவிசாய்ப்பானுக.

7. நான் அன்பனும், பழைய ஹோதாவும், துதியாருக னும், கவிசெயலுள்ளவனும், யக்ஞங்களை ஆதரிப்பவனு மான அக்கினியைப் போற்றுகிறேன்.



8. அக்கினியே! அங்கிரஸர்களின் முதல்வனுன நீ இந்த அவிகளை இடைவிடாமல் ஏற்றுக்கொண்டு உரிய காலங்களிலே யக்ஞத்தைச் செலுத்தவும்.

9. போற்றத் தகுந்தவனும், சொலிக்கும் சுவாலை யுள்ளவனும், அறிஞனுமான நீ, எழுப்பப்பட்டவுடன் இங்கு தெய்வப் படையை ஏந்தி வா.

10. நாங்கள், விப்பிரனும், ஹோதாவும், துரோக மற்றவனும், தூமகேதுவும், யக்ஞத்துவனுமான அக்கினியை நாடுகிறோம். 6884

11. திறத்தால் தோன்றும் தேவனுன அக்கினியே! துன்புறுத்துபவர்களிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். சத் ருக்களைச் சின்னுபின்னப் படுத்தவும்.

12. கவியான அக்கினி பழைய காதையால் தன் அங்கத்தை எழில் செய்து கொள்கிருன். விப்பிரனுல் வளர் கிருன்.

13. நான் இந்த இன்னலற்ற யக்ஞத்திலே வலிமை யின் மகனும், சுத்தஞ் செய்யும் சோதியுமுள்ள அக்கினியை அழைக்கிறேன்.

14. நண்பர்களால் போற்றத் தகுந்த அக்கினியே! நீ உன்னுடைய சொலிக்கும் சோதியோடு தேவர்களோடு தருப்பையின் மீது அமரவும்.

15. எந்த மனிதன் செல்வத்துக்காகத் தன் மனையிலே தேவனுன அக்கினியைப் போற்றுகிருனே அவனுக்கு அக்கினி செல்வத்தைத் தருகிருன். 6889

16. தேவர்களின் தலைவனும், சோதியின் சிகரனும், புவியின் பாலகனுமான அக்கினி, சலங்களின் ரேதஸை ஊக்கப்படுத்துகிருன்.

17. அக்கினியே! உன்னுடைய தூய்மையான வெண் ணிறமான, துலக்கமான சுவாலைகள், உன்னுடைய காந்தி களைப் பிரேரிக்கின்றன.

18. அக்கினியே! நீ சோதியின் தலைவன். விரும்பத் தகுந்ததும், அளிக்கத் தகுந்ததுமான செல்வம் உன் அதீனத்தில் இருக்கிறது. நான் சுகத்துக்காகத் துதிப்பவனு வேனாக.

19. அக்கினியே! உன்னை அறிஞர்கள் போற்றுகிறார்கள். உன்னையே செயல்களால் இன்புறுத்துகிறார்கள். எங்களுடைய மொழிகள் உன்னைப் பலப்படுத்துக.

20. நாங்கள் தடைபடாதவனும், திறமுள்ளவனும், தூதனும், தேவர்களைத் துதிப்பவனுமான அக்கினியின் நட்பை நாடுகிறோம். 6894

21. உத்தம சுத்த செயலுள்ளவனும், சுத்தமாயுள்ள அறிஞனும், சுத்தமான கவியுமான, சுத்தமாயுள்ள அக்கினி போற்றப்படுங்கால் பிரகாசிக்கிறான்.

22. என்னுடைய சொற்களும், என்னுடைய செயல்களும், உன்னை எப்பொழுதும் பலப்படுத்துக. அக்கினியே! நம்முடைய நட்பை ஞாபகஞ் செய்து கொள்ளவும்.

23. அக்கினியே! நான் நீயாகவோ அல்லது நீ நானாகவோயிருந்தால் உன்னுடைய விருப்பங்கள் நிறைவேறும்.

24. அக்கினியே! நீ ஒளிச்செல்வன். நீ செல்வபதி. நீ மனைகளை அளிப்பவன். நாங்கள் உன்னுடைய சுமதியிலிருப்போமாக.

25. அக்கினியே! விரதங்களைப் பாலிப்பவனான உனக்கு என்னுடைய துதி முழக்கங்கள் கடலுக்கு நதிகளைப் போல் செல்லுகின்றன. 6899

26. நான் தருணனும், மனிதர்களின் தலைவனும், அனைத்தையும் புசிப்பவனும், பல செயல்களை நடத்துபவனுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

27. நாம் யக்ஞங்களின் தலைவனும், வலியவனும், கூரிய சுவாலையுள்ளவனுமான அக்கினியை ஸ்தோமங்களால் துதிக்க விரும்புவோமாக.



28. போற்றத் தகுந்த அக்கினியே! சுத்தப்படுத்துபவனே! இந்த என்னுடைய சனங்கள் உன்னைப் போற்றுபவர்களாயிருப்பார்களாக. நீ அவர்களைச் சுகப்படுத்தவும்.

29. அக்கினியே! நீ தீரனாயிருக்கிறாய்! அவிக்கு அமர்ந்திருக்கிறாய்! நீ அறிஞனைப்போல் விழித்திருக்கிறாய்! சதா வானிலே பிரகாசிக்கிறாய்!

30. அறிஞனான அக்கினியே! நீ மனைகளை அளிப்பவன். பாபங்களும் பகைவர்களும் எங்களை அழிப்பதற்கு முன்னே எங்களாயுட்களை நீட்டவும். 6904

## 45. இந்திரன்

### 665. திரிசோகக்காண்வன்

1. அக்கினியை ஒளிப்படுத்துபவர்களும், நித்திய தருணனான இந்திரனை நண்பனாக அடைந்திருப்பவர்களும் இடைவிடாமல் தருப்பையைப் பரத்துகிறார்கள்.

2. நித்திய தருணனான இந்திரனை நண்பனாக அடைந்திருப்பவர்களுடைய ஸமிதை மகத்தானது. அவர்களுடைய தோத்திரம் மகத்தானது. சீவல்கள் பரந்தவை.

3. சூரன் போர் துவங்குவதற்கு முன் ஆற்றலற்றிருந்தாலும், நித்தியத்தருணனான இந்திரனை அடைந்தவர்களுடைய உதவியைப் பெற்று வீரர்களோடு சேர்ந்துள்ள பகைவனைத் தன் படைகளால் ஜயிக்கிறான்.

4. விருத்திரனை யழிப்பவன் அம்பை எடுத்தான். தாயைக் கேட்டான். எவர் உக்கிரர்கள்? எவர் புகழுள்ளவர்கள்?

5. உன்னுடைய ஆற்றலுள்ள தாய் உனக்குப் பதில் அளித்தாள். உன்னுடைய பகைமையை விரும்புபவன் மலையிலிருக்கும் அழகிய யானையைப் போல் போர் புரிகின்றான். 6909

6. பகவானே! எங்களுடைய துதியைக் கேட்கவும்

நாடுபவனுக்கு விரும்புவதையெல்லாமளிக்கிறாய். உன்னால் நிலைக்கப்படுவது நிலையாயிருக்கிறது.

7. உத்தம குதிரைகளால் ஏந்தப்பட்டு, தீரனான இந்திரன் போருக்குச் செல்லுங்கால் அவன் எல்லா சாரதிகளிலும் உத்தமனாயிருக்கிறான்.

8. வச்சிராயுதனே! எங்களை எதிர்ப்பவர்களெல்லாம் எல்லாத் திசைகளிலும் விலக்கவும். எங்களுக்கு மிக்க நலமளிக்கும் உத்தமனாயிருக்கவும்.

9. பகைவர்களால் துன்பமாகாத இந்திரன் நாங்கள் எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ள எங்கள் முன்னே அழகிய தேரைப் பிரேரிப்பானாக.

10. சக்தியுள்ள இந்திரனே! உன் பகைமையிலிருந்து நாங்கள் விலகுவோமாக. உன்னுடைய பசுச் செல்வங்களுள்ள தானத்துக்கு நாங்கள் உன்னருகில் வருவோமாக 6914

11. வச்சிராயுதனே! நாங்கள் படிப்படியாய் உன்னை அணுகி உன்னிடம் வருவோமாக. நாங்கள் விபத்தால் துன்பமாகாமல், அவிகளை ஏந்தி மிக்கப் பொருள்களை அடைந்து குதிரைச் செல்வங்களுடன் இருப்போமாக.

12. யக்ஞத் தலைவன் உன்னைத் துதிப்பவர்களுக்குத் தினந்தோறும் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான மேன்மையாயும் மங்களமாயுமுள்ள தான்யங்களைத் தருகிறான்.

13. இந்திரனே! நாங்கள் உன்னைத் திடமான கோட்டைகளை இடிப்பவனாயும், செல்வத்தைப் பறிப்பவனாயும், எங்களுக்குப் பொருள்களை ஜயிப்பவனாயுமறிகிறோம்.

14. அறிஞனே! பகைவர்களை ஜயிப்பவனே! நாங்கள் வர்த்தகனாயுள்ள உன்னை வேண்டுங்கால் உத்தமனாயுள்ள உன்னை ஸோம பிந்துக்கள் மதப்படுத்துக.



15. உன்னுடைய செல்வ தானத்தை நிந்திக்கும் கருமித்தனமுள்ள செல்வனுடைய செல்வங்களை எங்களுக்களிக்கவும். 6919

16. ஸோமத்தைப் பொழியும் உன்னுடைய இந்த நண்பர்கள் தீனியோடு பசுக்களை நோக்கும் மனிதர்களைப் போல் உன்னை நோக்குகிறார்கள்.

17. நாங்கள் தூரத்திலிருந்து எங்களுடைய பாலனத்துக்காகச் செவிட்டுத் தன்மையற்றவனும், செவிச்செல்வனுமான உன்னை அழைக்கிறோம்.

18. எங்களுடைய இந்தத் துதியைச் செவியுற்றவுடன் உன் தடைபடாத ஆற்றலைப் புலப்படுத்தவும். எங்களுடைய நெருங்கிய பந்துக்களாயிருக்கவும்.

19. வறுமையில் உன்னை அணுகி எங்கள் துதிகளைக் கூறும் பொழுதெல்லாம் இந்திரனே! நீ எங்களுக்குப் பசுக்களை யளிப்பவனாயிருக்கவும்.

20. பலத்தின் தலைவனே! நாங்கள் உன்னில் கம்பத்தில் ஆதரவாகும் முதியவனைப்போல் சாய்ந்திருக்கிறோம். நாங்கள் யக்ஞத்திலே உன்னை விரும்புகிறோம். 6924

21. தானசீலனும், மிக்கச் செல்வமுள்ளவனும், போரில் தடைபடாதவனுமான இந்திரனுக்குத் தோத்திரத்தைக் கூறுங்கள்.

22. விருஷபனே! ஸோமம் பிழியப்பட்டவுடன் நான் நீ பருக ரஸத்தை ஊற்றுகிறேன். திருப்தியாகவும் மதத்தை அனுபவிக்கவும்.

23. பேதைகளும், பரிகசிப்பவர்களும், உன் பாலனத்தை நாடுங்கால் உன்னை வஞ்சிக்காமலிருப்பார்களாக. பிரம்மத் துவேஷிகளை விரும்பாதே.

24. துதிப்பவர்கள் மகத்தான செல்வத்தை அடைய பாலோடு கலந்த ஸோமத்தால் உன்னை இன்புறுத்துவார்களாக. ஏரியைப் பருகும் மிருகத்தைப்போல் நீ பருகவும்.

25. தூரத்திலிருந்து விருத்திரனைக் கொல்பவனால் செலுத்தப்படும் பழைய புதிய செல்வங்களை நம்முடைய சபைகளிலே அறிவியுங்கள். 6929

26. இந்திரன் சத்ருவால் அளிக்கப்பட்ட ஸோமத்தைப் பருகினான். ஆயிரங் கைகளுள்ள சத்துருக்களைக் கொன்றான். தன் ஆண்மையைப் புலப்படுத்தினான்.

27. இந்திரன் துர்வசனுடைய யதுவினுடைய யக்ஞச் செயல்களை நன்கறிந்து களத்திலே அஹ்னவாய்யனைக் கொன்றான்.

28. நான் சனங்களை மீட்பவனும், பகைவர்களை அழிப்பவனும், பசுச்செல்வங்களைத் தருபவனும், ஸாமான்யனுமான இந்திரனைப் போற்றுகிறேன்.

29. பாட்டோடு ஸோமம் பிழியப்படுங்கால், நான் செல்வத்தை அடைய சலத்தைச் செழிப்பிக்கும் மகத்தான இந்திரனைப் போற்றுகிறேன்.

30. அவன் திரிசோகனுக்காகப் பரந்த தருவைப் போலுள்ள பேதத்தைப் பிளந்தான். பசுக்கள் புலப்பட வழியைச் செய்தான். 6934

31. உன் மதத்திலே நடத்தப்போகும் எந்தச் செயலையும், நீ கருதும் எந்நோக்கத்தையும் நீ அளிக்க நினைக்கும் எதையும் இந்திரனே! நீ செய்யாதே. ஆனால் எங்களைச் சுகப்படுத்தவும்.

32. இந்திரனே! உன்னைப்போலுள்ளவனின் அற்பச் செயல்களும், புவியிலே பிரகாசிக்கின்றன. உன் மனம் என்னிடம் இயங்குக.

33. இந்திரனே! நீ எந்தச் செயல்களால் எங்களைச் சுகப்படுத்துகிறாயோ, அவை மிக்கப் புகழுள்ளவை. அத் தோத்திரங்களும் உன்னுடையவை.

34. சூரனே! நீ எங்களை ஒரு குற்றத்துக்காக இரு குற்றங்களுக்காக, மூன்று குற்றங்களுக்காகக் கொல்லாதே. பல குற்றங்களுக்காகக் கொல்லாதே.



35. நான் எதிர்ப்பை எதிர்க்கும் வல்லவனும், அழிப்பவனும், பகைவர்களைப் புடைப்பவனும், உக்கிரனுமான உன்னைப்போலிருக்கும் உனக்கே நான் அஞ்சுகிறேன். 6939

36. செல்வப் பிரபுவே! என்னுடைய நண்பனுடையவோ, புதல்வனுடையவோ வறுமையை உன்னிடம் கூறும் நிலைமை எனக்குத் தோன்றாமலிருக்க, உன் மனம் என்னிடம் அனுகூலமாகுக.

37. இந்திரன் சொன்னான்: கோபத்திடமில்லாமல் எந்த நண்பன், நண்பனைக் கொன்றான்? என்னிடமிருந்து எவன் ஓடுகிறான்?

38. வர்ஷிப்பவனே! உன்னருகில் மிக்க நெருங்கியிருக்கும் இந்த ஸோமத்தில் பாயும் வேடுவனைப்போல் விரைந்து அதைப் பருகவும்.

39. நீ அறிஞர்களுக்குச் செல்வத்தையளிப்பதால் மந்திரங்களால் இணைக்கப்பட்டவையும், அழகிய தேரில் சேர்க்கப்பட்டவையுமான உன்னுடைய இரு குதிரைகளை நான் இங்கு இயக்குகிறேன்.

40. பகைப் படைகளையெல்லாம் உடைக்கவும். அழிக்கும் எதிர்ப்புக்களைப் புடைக்கவும். அவர்களுடைய விரும்பத் தகுந்த செல்வங்களை எங்களுக்களிக்கவும்.

41. இந்திரனே! திறத்திலே, திரத்திலே எதிர்ப்பைத் தாங்கும் இடத்திலே வைக்கப்பட்டிருக்கும் விரும்பத்தகுந்த செல்வங்களை எக்களுக்களிக்கவும்.

42. இந்திரனே! உன்னால் தாராளமாய் அளிக்கப்பட்டவை என எல்லா சனங்களால் அறியப்படுபவையும், விரும்பத்தகுந்தவையுமான அச்செல்வங்களை எங்களுக்களிக்கவும். 6946

# 46. இந்திரன்

## 666. அசுவனுடைய புதல்வன் வசன்

1. இந்திரனே! புருவசுவே! தலைவனே! நாங்கள் குதிரைகளை வசப்படுத்தும் உன்னைப்போலுள்ள உன்னையே பற்றுகிறோம்.

2. வச்சிரனே! நாங்கள் மெய்யாக உன்னையே உணவை அளிப்பவனாகவும், செல்வங்களை அளிப்பவனாகவு மறிகிறோம்.

3. சதக்கிரதுவே! போற்றுபவர்கள் நூறு பாலனங்களை ஏந்தும் உன்னுடைய மகிமையைப் போற்றுகிறார்கள்.

4. துரோகத் தன்மையற்ற மருத்துக்களாலும், மித்திரனாலும், அர்யமானாலும் பாலிக்கப்படுபவன் நன்னெறியிலாகிறான்.

5. ஆதித்தியனால் செலுத்தப்படும் மனிதன், மிகுந்த பசுக்களையும், குதிரைகளையும், வீரப்புதல்வர்களையுமடைந்து சதா செழிக்கிறான். பலரால் விரும்பப்படும் பொருளிலே
பெருகுகிறான். 6951

6. நாங்கள் பயமற்றவனும், பலனத்தைப் புலப்படுத்துபவனுமான இந்திரனிடம் தானத்தை வேண்டுகிறோம். தலைவனிடமிருந்து செல்வத்தை வேண்டுகிறோம்.

7. அவனிலே பயமற்ற எல்லாப் பாலனங்களும் ஐக்கியமாகி நிலைக்கின்றன. இயங்கும் குதிரைகள், மிகுந்த செல்வமுள்ள அவனை மதத்துக்குப் பிழிந்திருக்கும் ஸோமத்துக்கு ஏந்தி வருக.

8. இந்திரனே! உன் மதம் போற்றத் தகுந்தது. உன் பகைவர்களை அடியோடழிக்கிறது. பகைவர்களிடமிருந்து செல்வத்தை ஜயிக்கிறது. போர்களிலே தடைபடாமலிருக்கிறது.

9. பலரால் விரும்பப் படுபவனே! அது போர்களில் எதிர்ப்பற்றிருக்கிறது. துதியாருகமான அது பகைவர்களிடமிருந்து மீட்பதாயிருக்கிறது. வலிமையுள்ளவனே! மனைகளை அளிப்பவனே! எங்களுடைய அவிகளுக்கு வா. நாங்கள் பசுக்கள் நிறைந்த கொட்டத்தை அடைவோமாக.



10. செல்வத் தலைவனே! எங்களுக்குப் பூர்வத்தில் போல், பசுக்களையும், தேர்களையும் அளிக்க எங்களிடம்
வரவும். 6956

11. சூரனே! நான் மெய்யாகவே உன் செல்வத்தின் எல்லையைக் காணவில்லை. மகவானே! வச்சிரமேந்துபவனே! உன் தானங்களை எங்களுக்குத் துரிதமாயளிக்கவும். உணவால் எங்கள் செயல்களைப் பாலிக்கவும்.

12. நண்பர்களால் ஏத்தப்படுபவனும், பலரால் போற்றப்படுபவனும், பொலிவுள்ளவனுமான இந்திரன் எல்லாச் சீவர்களையுங் காண்கிறான். எல்லா மனிதர்களும் அவனுக்கு அவிகளையளிக்க சிருவங்களை ஏந்திக்கொண்டு அவனை எப்பொழுதும் அழைக்கிறார்கள்.

13. விருத்திரனை அழிப்பவனும், புருவசுவுமான மகவான் போர்களிலே எங்களைப் பாலிக்க முன்னணியில் நிற்பானாக.

14. நீங்கள் ஸோமமதத்திலே, வீரனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், பேரறிஞனும், வலியனும், போற்றத் தகுந்தவனுமான இந்திரனை மகத்தான துதியோடு சுதீத மொழியோடு பாடுங்கள்.

15. பலரால் போற்றப்படும் நீ, எனக்குத் துரிதமாய்ச் செல்வத்தை அளிக்கவும். மக்கட் செல்வத்தை அளிக்கவும்.
போர்களிலே உணவுச் செல்வத்தை அளிக்கவும். 6961

16. தடைபடுத்தி எதிர்க்கும் இந்தச் சத்ருவைச் சாய்ப்பவனும், எல்லாச் செல்வங்களின் தலைவனுமான உன்னைப் போற்றுகிறோம். எங்களுக்குத் துரிதமாய்ச் செல்வத்தையளிக்கவும்.

17. நான் மகானான உன்னுடைய வரவை விரும்புகிறேன். நாங்கள் யக்ஞத்துக்கு உடனே வரும்

பொழிபவனை அவிகளாலும், துதிகளாலும், போற்று கிறோம். மருத்துக்களோடு சேர்ந்துள்ள உன்னை எல்லா மனிதர்களும் பாடுகிறார்கள். நான் உன்னை வரக்கோரும் வணக்கத்தோடும் ஏத்துகிறேன்.

18. நாங்கள் மேகங்களின் தாரைப்பந்திகளோடு பாய்ந்து செல்பவர்களும், உச்சகோஷஞ் செய்பவர்களுமான மருத்துக்களுக்கு யக்ஞத்தைச் செய்கிறோம். மிக்க முழங்கும் அவர்கள் அளிக்கும் சுகத்தை யக்ஞத்தில் அடைவோமாக.

19. நாங்கள் துட்டசித்தர்களை உடைக்கும் உன்னைப் போற்றுகிறோம். மிக்க வலியனான இந்திரனே! எங்களுக்குத் தகுந்த செல்வத்தையளிக்கவும். இயக்கும் மனம் உள்ளவனே! மிக்க உத்தம செல்வத்தையளிக்கவும்.

20. வள்ளலே! மேலான வள்ளலே! உக்கிரனே! அற்புதனே! அறிவை அளிக்கும் உத்தமனே! மிக்க உயர்ந்த சத்தியனே! உன்னுடைய ஆற்றலால் அனைவரின் தலைவனான நீ எதிர்ப்பவர்களை ஜயிப்பதும், இன்பத்தைத் தருவதுமான நிறைந்த செல்வத்தைப் போர்களிலே எங்களுக்களிக்கவும். 6966

காநீதபிருதுசிரவன்

21. வசன் அதேவனாயிருந்த போதிலும், இந்தப் பூரணமான தானத்தைப் பெற்றுக்கொள்ள அருகில் வருவானாக. அசுவனுடைய புதல்வனான வசன், கனிதையின்—கன்னிகையின் புத்திரனான பிருதுகிரவஸன் கைகளிலிருந்து இந்த உஷையிலே தானத்தைப் பெற்றுக்கொள்கிறான்.

22. நான் அறுபதினாயிரம் குதிரைகளையும், பதினாயிரம் பசுக்களையும், இரண்டாயிரம் ஒட்டகங்களையும், பழுப்பு நிறமுள்ள ஆயிரம் பெட்டைக் குதிரைகளையும்' மூன்று சிகப்புப் புள்ளிகளோடுள்ள பத்துப் பத்தாயிரம் பசுக்களையும் பெற்றுக்கொண்டேன்.



23. வசன் சொன்னான்: மிக்க வேகமுள்ளவையும், மிக்க வலியவையும், தடைகளை மிதிப்பவையுமான பத்துப் பழுப்புக் குதிரைகள் சக்கரத்தைச் சுழற்றி என் தேரை இயக்குகின்றன.

24. கநீதையின் புதல்வனான செல்வனும், பிருதுகிரவஸின் தானங்களே இவை. அவன் தங்கத்தேரையளித்து, உயர்ந்த வள்ளலும் வித்தகனுமாகிறான். மிக்க உயர்ந்த புகழையும் பெறுகிறான்.

வாயு

25. வாயுவே! மகத்தான செல்வத்தையும், மேலான ஆற்றலையுமளிக்க எங்களிடம் வா மிக்கச்செல்வத்தை அளிப்பவனான உனக்கு நாங்கள் அவிகளை அளித்தோம். மகத்தான தானங்களை அளிப்பவனான உனக்கு நாங்கள் உடனே அவிகளை அளித்தோம். 6971

26. மூவேழு எழுபது பசுக்களால் சூழப்பட்டு குதிரைகளிலே ஏறியுள்ளவனான பிருதுகிரவஸன் ஸோமத்தைப் பருகுபவனும், பிரகாசிக்கும் சுத்த ஸோமத்தைக் குடிப்பவனுமான உனக்களிக்க ஸோமத்தைப் பொழிபவர்களோடும், இந்த ஸோமபானங்களோடும் உன்னிடம் வருகிறான்.

27. தானாகவே இந்த மேன்மையான தானத்தை எனக்களிக்க மகிழ்ந்தவனும், நல்ல செயல்களை நடத்துபவனுமான அவன், அரட்வனின், அட்சனின், நஹுஷனின், சுகிருத்வனின் நடுவே மிக்க உயர்ந்த நல்ல செயலை நடத்த எண்ணினான்.

28. வாயுவே! தன் சிறப்பான தேகத்திலே தானாகவே துலங்குபவனும், நெய்யைப் போல் பிரகாசிப்பவனுமான அவன், குதிரைகளாலும், ஒட்டகங்களாலும், நாய்களாலும் ஏந்தப்பட்டு வந்த இந்த உணவை அளித்தான்.

இந்திரன்

29. தானமளிக்கும் அரசனுக்குப் பிரியமான குதிரைகளைப்போல் வலியவையாயுள்ள அறுபதினாயிரம் காளைகளை இப்பொழுது நான் பெற்றுக்கொண்டேன்.

30. மந்தைக்குச் செல்லும் பசுக்களைப்போல் காளைகள் வருகின்றன. அங்ஙனம் காளைகள் என்னிடம் வருகின்றன 6976

31. மந்தையிலுள்ள ஒட்டகங்கள் வனத்திலே திரியுங்கால் எனக்களிக்க அவன் நூறு ஒட்டகங்களை வருவித்தான். பசுக்களின் வெண்மந்தைகளிலிருந்து எனக்கு இரண்டாயிரம் பசுக்களை அளித்தான்.

வாயு

32. அறிஞனான நான், கோபாலனும், தாஸனுமான பல்பூதனிடமிருந்து நூறு பசுக்களைப் பெற்றுக்கொள்கிறேன். வாயுவே! இங்கு நாங்கள் உனக்கு உரியவர்கள். இந்திரனையும், தேவர்களையும் பாலகர்களாக அடைந்திருப்பவர்கள். உன்னுதரவால் இன்புறுகிறார்கள்.

இந்திரன்

33. அசுவனுடைய புதல்வனான, வசனான என்னிடம் போற்றத் தகுந்தவளும், பொன்னாபரணமணிந்தவளுமான இந்த யுவதி அழைத்து வரப்படுகிறாள். 6979

## 47. ஆதித்தியர்கள்

### 667. திரித ஆப்த்யன்

1. வருணனே! மித்திரனே! மகான்களான நீங்கள் துதிப்பவனுக்கு அளிக்கும் பாலனம் மகத்தானது. ஆதித்தியர்களே! துன்புறுத்துபவனிடமிருந்து உங்களால் பாலிக்கப்படுபவனை எத்தீமையுமணுகாது; உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை; உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்களாயிருக்கின்றன.

2. தேவர்களான ஆதித்தியர்களே! நீங்கள் தீமைகளைத் தடுக்கும் வழிகளை அறிகிறீர்கள். தங்கள் குஞ்சுகளின் மீது சிறகுகளைப் பரத்தி சுகத்தையளிக்கும் பறவைகளைப் போல் எங்களுக்குச் சுகத்தை அளியுங்கள். உங்களுடைய பாலனங்கள் பாவமற்றவை; உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.



3. உங்களுடைய சுகத்தைச் சிறகுகளை விரித்து சுகப் படுத்தும் பறவைகளைப்போல் எங்களை சுகப்படுத்துங்கள். செல்வங்கள் எல்லாம் அடைந்திருப்பவனே! நாங்கள் எங்கள் மனைக்குத் தகுந்த செல்வங்களை உங்களிடம் வேண்டுகிறோம். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

4. எவனுக்கு இந்தப் பேரறிஞர்களான ஆதித்தியர்கள் மனையும் சீவிக்க உணவையும் தருகிறார்களோ அவனுக்காக அவர்கள் ஒவ்வொரு மனிதனுடைய செல்வத்தையும் வசஞ்செய்து கொள்கிறார்கள். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்,

5. கஷ்டமளிக்கும் வழிகளை விலக்கிச்செல்லும் தேரோட்டிகளைப்போல் பாபங்கள் எங்களை நீங்கிச்செல்க, நாங்கள் இந்திரனுடைய சுகத்திலும், ஆதித்தியர்களுடைய பாலனத்திலுமிருப்போமாக. உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை, உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள். 6984

6. சீவிக்கும் மனிதன் நீங்கள் அளிக்கும் செல்வத்தை உழைப்பு என்னும் வருத்தத்தையளிக்கும் வழியினாலேயே அடைகிறான். தேவர்களான ஆதித்தியர்களே! துரிதர்களான உங்களால் அனுகப்படுபவன் குறைவற்ற செல்வத்தைப் பெறுகிறான். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

7. ஆதித்தியர்களே! நீங்கள் எவனுக்கு மகத்தான சுகத்தைத் தருகிறீர்களோ, அவனைக் கடுங்கோபமணுகாது கனத்த துக்கமும் அணுகாது. உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

8. தேவர்களே! நாங்கள் உங்கள் பாலனங்களில் கவசங்களிலிருக்கும் வீரர்களைப்போல் இருப்போமாக.

எங்களைக் கடுந்தீமையிலிருந்து பாலியுங்கள். எங்களை அற்பத்தீமையிலிருந்தும் பாலியுங்கள். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

9. அதிதி எங்களைப் பாலிப்பாளாக, செல்வனான அர்யமானுடைய, வருணனுடைய, மித்திரனுடைய தாயான அதிதி எங்களைச் சுகப்படுத்துவாளாக. உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை; உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

10. தேவர்களே! உங்களுடைய தஞ்சமளிப்பதும், போற்றத்தகுந்ததும், நோயற்றதும், முக்காப்புக்களுள்ளதும், மனைக்குரியதுமான சுகத்தை எங்களுக்களியுங்கள். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள். 6989

11. ஆதித்தியர்களே! கீழே இருக்கும் எங்களைக் கரையிலிருந்து காண்பவர்களைப்போல் காணுங்கள். பத்திரமான படித்துறைக்குக் குதிரைகளை நடத்திச் செல்லும் மனிதர்களைப்போல் எங்களுடைய நல்லவழியிலே நடத்திச் செல்லுங்கள். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை, உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

12. இங்கு எங்களுடைய வலிய பகைவனுக்கும், எங்களை எதிர்க்க விரும்புபவனுக்கும் செல்வமின்மையாகுக, எங்களுடைய கால்நடைகளுக்கும், பசுக்களுக்கும், உணவை விரும்பும் வீரப்புதல்வனுக்கும் செல்வம் தோன்றுக, உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை, உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

13. தேவர்களே! தெரியும் எப்பாபமும், தெரியாமலுள்ள எத்தீமையும் திரித ஆப்தியனை என்னிலே தோன்றுமலாகுக. அவற்றை எங்களிடமிருந்து தூரத்திலே விலக்குங்கள். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.



### ஆதித்தியர்களும் உஷையும்

14. சோதியின் மகளே! உஷையே! எங்களுடைய பசுக்களையும் எங்களையும் கலக்கும் எந்தக் கனவையும், மிக்கப் பிரகாசிப்பவளே! திரித ஆப்தியனிடமிருந்து விலக்கவும், உங்கள் பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

15. சோதியின் மகளே! நாங்கள் திரித ஆப்தியனில் தோன்றும், எந்தத் தீக்கனவையும், பொன்னாபரணங்களைச் செய்பவனிடமும், மாலைகளைத் தொடுப்பவனிடமும் மாற்றுகிறோம். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள். 6994

16. உஷையே! திரிதனுக்கும் த்விதனுக்கும் கனவுகளில் புசித்து, செய்பவையாலும், விழித்திருக்குங்கால் தவறுதலாய்ப் புசிப்பதாலும், நலமற்ற பாகத்தை அடைவதாலும், தோன்றும் தீக்கனவுகளையும் அவர்களிடமிருந்து நீக்கவும். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

17. காலத்தைக் கணம் கணமாய்க் கழிப்பது போலும், காலால் நடந்து, தூரத்தைக்கடப்பது போலும், கடனைத் தீர்ப்பது போலும் நாங்கள் ஆப்தியனிடமிருந்து எல்லாத் தீக்கனவையும் நீக்குகிறோம். உங்களுடைய பாலனங்கள் பாபமற்றவை. உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள்.

18. நாங்கள் இன்று வெற்றியுள்ளவர்களாகி சுகத்தைப் பெறுவோமாக. நாங்கள் பாவமற்றவர்களாவோமாக. உஷையே! நாங்கள் அஞ்சும் அத்தீக்கனவு நீங்குக. உங்கள் பாலனங்கள் பாபமற்றவை; உங்களுடைய பாலனங்கள் சத்தியமான பாலனங்கள். 6997

# 48. ஸோமன்

## 668. கண்வனுடைய புதல்வன் பிரகாதன்

1. நல்லறிவும், நற்செயலுமுள்ள நான், தேவர்களாலும் மனிதர்களாலும் இனிமை எனக் கூறப்பட்டு, தேடப்படுவதும், போற்றப்படுவதுமான இனிய ஸோமான்னத்தைப் புசிப்பேனாக.

2. ஸோமனே! நீ உள்ளத்துள் நுழைகிறாய். நீ அதிதியாகி தேவர்களின் கோபத்தை நீக்குகிறாய். ஸோமனே! இந்திரனுடைய நட்பை இன்புறும் நீ, எங்களுக்குச் செல்வத்தை, சுமையை ஏந்தி வரும் துரித குதிரையைப்போல் ஏந்தி வரவும்.

3. நாங்கள் ஸோமத்தைப் பருகுகிறோம். நாங்கள் அமிருதர்களாவோமாக. நாங்கள் சுவர்க்கத்தின் சோதியை அடைந்தோம். நாங்கள் தேவர்களை அறிந்தோம். இப்போது பகைவன் எங்களை என்ன செய்வான்? அமிருதனே! துன்புறுத்துபவன் மானிடனான என்னை என்ன செய்வான்?

4. ஸோமனே! எங்களால் பருகப்பட்ட நீ, எங்களுடைய இருதயங்களுக்குத் தந்தையைப்போலும், நண்பனுக்கு நண்பனைப்போலும் சுகப்படுத்துவனாகவும். ஸோமனே! மிக்கப் போற்றுவதற்கருகனான நீ, அறிஞனான நீ, நாங்கள் சீவிக்க எங்களாயுசை நீடிக்கவும்.

5. புகழளிப்பவையும், பாலிப்பவையுமான இந்த ஸோமதாரைகள் என்னுடைய கணுக்களை, தேரின் உறுப்புக்களைச் சேர்க்கும் சருமங்களைப்போல் சேர்த்துக் கெட்டிப்படுத்துக. நெறியிலிருந்து தவறாமலிருக்க அவை எங்களைப் பாலிக்க. அவை எங்களை நோயிலிருந்து விலக்குக. 7002

6. ஸோமனே! மந்தனத்தால் எழுப்பப்படும் அக்கினியைப்போல் என்னை சொலிப்பிக்கவும். எங்கள் கண்களை ஒளிப்படுத்தவும். எங்களைச் செல்வப்படுத்தவும். நான் இப்பொழுது உன்னை மதத்துக்காகப் போற்றுகிறேன். செல்வனைப்போல் செழிப்பிக்க நீ எங்களிடம் வா.



7. நாங்கள் பொழியப்பட்டுள்ள உன்னை, தந்தையின் செல்வத்தை அனுபவிக்கும் மனிதர்களைப்போல் விரும்பும் மனத்தோடு பருக விரும்புவோமாக. அரசனான ஸோமனே! பிரகாசிக்கும் தினங்களை நீடிக்கும் சூரியனைப்போல் எங்கள் வாழ்நாட்களை நீடிக்கவும்.

8. அரசனான ஸோமனே! ஸ்வஸ்திக்காக எங்களைச் சுகப்படுத்தவும். போற்றுபவர்களான நாங்கள் உன்னுடையவர்கள். நீ அதை அறிந்து கொள்ளவும். ஸோமனே! பகைவன் வலியனாகிறான். உக்கிரமாகிறான். அவன் விரும்புவதுபோல் நீ என்னை அவனிடம் செலுத்தாதே.

9. ஸோமனே! நீ எங்களுடைய தேகங்களின் பாலகனாயிருக்கிறாய். நீ மனிதர்களைக் காண்பவனாய் ஒவ்வொரு அங்கத்தில் வசிக்கிறாய். தேவனே! நாங்கள் உன்னுடைய விரதங்களைப் பங்கஞ் செய்தாலும், நல்ல நண்பர்களையும், உத்தம உணவையுமடைந்துள்ள நீ, எங்களைச் சுகப்படுத்தவும்.

10. குதிரைகளுள்ளவனே! பருகப்பட்டால் என்னை துன்புறுத்தாதவனும், இனிய இதயமுள்ளவனுமான நண்பனோடு இருப்பேனாக. எங்கள் உள்ளே வைக்கப் பட்டுள்ள இந்த ஸோமம் நீடித்திருக்க நான் இந்திரனைப் வேண்டுகிறேன். 7007

11. நீக்கமுடியாத இந்நோய்கள் நீங்குக. எங்களை நடுங்கச் செய்த கொடிய வேதனைகள் கலங்கி நீங்குக. மகத்தான ஸோமன் எங்கள் உள்ளே ஏறி இருக்கிறான். நாங்கள் ஆயுளை நீடிக்கும் ஸோமத்தை அடைந்திருக்கிறோம்.

12. பிதாக்களே! எங்கள் இருதயங்களிலே பருகப்பட்ட அந்த ஸோமன் மரிப்பதற்குரிய எங்களுடைய உள்ளங்களிலே அமுதனாக நுழைந்தான். நாங்கள் அவனை

அவிகளோடு போற்றுவோமாக. நாங்கள் அவனுடைய சுகத்திலும் சுமதியிலிருப்போமாக.

13. ஸோமனே! நீ பிதாக்களோடு சேர்ந்து சோதியையும் புவியையும் கிரமமாய்ப் பரத்துகிறாய். நாங்கள் உன்னை அவிகளோடு போற்றுவோமாக. நாங்கள் செல்வ பதிகளாவோமாக.

14. பாலகர்களான தேவர்களே! எங்களிடம் அனுகூலமாய்ப் பேசுங்கள். கனவுகளும், நிந்தையும் எங்களை அதீனப்படுத்தாமலிருக்க. வீரப்புதல்வர்களுள்ள நாங்கள் தோத்திரத்தைக் கூறுவோமாக.

15. ஸோமனே! நீ எங்களுக்கு உணவை எல்லாத் திசைகளிலிருந்துமளிக்கிறாய், நீ சுவர்க்கத்தையளிக்கிறாய். மனிதர்களைக் காண்பவனே! நீ எங்கள் உள்ளே வரவும். இந்துவே! உன் பாலனங்களோடு சேர்ந்திருக்கும் நீ, எங்களை முன்னும் பின்னும் பாலிக்கவும், 7012

## வாலகில்யம்

# 49. (1) இந்திரன்

### 669. பிரஸ்கண்வ காண்வன்

1. நான் உத்தமச் செல்வனும், புருவசுவும், மகவானும், தன்னைத் துதிப்பவர்களுக்கு ஆயிரக்கணக்கான செல்வங்களை அளிப்பவனுமான இந்திரனும் உனக்குத் தக்க செல்வத்தை அடைய போற்றுவேன்.

2. அவன் நூறு கூர்களுள்ள ஆயுதத்தைப் போல் விரமாய்ப் பாய்கிறான். துதிப்பவனின் பகைவர்களைக் கொல்லுகிறான். பலரைப் பாலிக்கும் அவனுடைய தானங்கள் மலையின் தாரைகளைப் போல் பெருகுகின்றன.

3. இந்திரனே! துதிகளை விரும்புபவனே! சூரனே! வச்சிராயுதனே! பொழியப்பட்டுள்ள மதகரமான ஸோமரஸங்கள் செல்வ தானத்துக்காகப் பழக்கப்பட்ட ஏரிக்குச் செல்லும் சலங்களைப்போல் உன்னிடம் பாய்கின்றன. உன்னை நிரப்புகின்றன.



4. நீ உன்னுடைய மதத்திலே எங்களுக்குச் செல்வத்தை ஸோமத்தை—ஸோமான்னத்தை—பிழியும் கல்லைப் போல் பொழிய, ஒப்பற்றதும் பாலிப்பதும் ஊக்கப்படுத்துவதுமான இனிய ஸோமத்தாரையைப் பருகவும்.

5. செலுத்தப்படும் குதிரையைப்போல் ஸோமத்தைப் பிழிபவர்களால் பிரேரிக்கப்படும் எங்களுடைய ஸ்தோமத்துக்குத் துரிதமாகவும். சுவதாவுள்ள இந்திரனே! பசுக்கள் அதை உனக்கு இனிமைப்படுத்துகின்றன. கண்வர்களான எங்களின் நடுவே உனக்குத் தானங்கள் இருக்கின்றன. 7017

6. நாங்கள் தேயாத செல்வமுள்ளவனும், பலவித நிதிகளுள்ளவனுமான உன்னை, சூரனை நாடும் மெலிந்தவர்களைப்போல் வணக்கத்தோடு அண்டுகிறோம். இந்திரனே! வச்சிராயுதனே! எங்களுடைய துதிகள் தாரைகளைப் பெருக்கும் சுனையைப்போல் பாய்கின்றன.

7. நீ வேறு ஏதாவது ஒருவனுடைய யக்ஞத்திலிருந்தாலும், புவியின்மீது எங்கிருந்தாலும், அங்கிருந்து நீ உன்னுடைய துரித குதிரைகளிலே எங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாய் வரவும். மகாமதியே! உக்கிரனே! உன்னுடைய உக்கிரக் குதிரைகளோடு வரவும்.

8. இந்திரனே! நீ எந்தக் குதிரைகளால் மனுவின் சந்ததியைச் சூழ்கிறாயோ, எவற்றால் சோதி புலனாகிறதோ, எவை காற்றைப்போல் ஜயிப்பவையாயிருக்கின்றனவோ, அவை உன்னுடைய குதிரைகள். அவை வேகமானவை. ஊக்கமுள்ளவை.

9. இந்திரனே! மகவானே! நீ செல்வத்தால் மேத்யாதியைப் பாலித்தது போலும், நிபாதிதிக்கு உதவியது போலும், எங்களுக்கு உதவவும். பசுச்செல்வமுள்ள அவர்களுக்கு அளித்தது போலுள்ள அந்தானத்தை நாங்கள் நாடுகிறோம்.

10. மகவானே! இந்திரனே! நீ மிகுந்த பசுக்களையும், பொன்னையும் கண்வனுக்கும், திரஸதஸ்யுவனுக்கும், பக்தனுக்கும், தசவிரஜனுக்கும், கோசரியனுக்கும், ரிஜிஸ்வனிக்கும் அளித்ததுபோல் எங்களுக்குமளிக்க நாங்கள் உன்னை நாடுகிறோம். 7022

## 50. (2) இந்திரன்

### 670. புஷ்டிகு காண்வன்

1. நான், பிழிபவனுக்கும் போற்றுபவனுக்கும் விரும்பத்தகுந்த செல்வத்தை ஆயிரக்கணக்காயளிப்பவனும், மிக்கப் புகழுள்ளவனும், தானமளிப்பவனுமான சக்கரனைப் போற்றுவேன்.

2. இந்திரனுடைய மகத்தான அம்புகள் நூறுமுகங்களுள்ள ஆயுதங்கள். அவை தடைபடாதவை. ஸோமம் அவனை மதப்படுத்துங்கால் அவிச்செல்வர்களுக்கு அவன் செல்வங்களை சுனைச்செல்வமுள்ள மேகத்தைப்போல் பொழிகிறான்.

3. வசுவே! பொழியப்பட்ட ஸோமரஸங்கள் பிரியனான இந்திரனை இன்புறுத்தும் போது என்னுடைய அவிசலங்களைப்போல் மிக்க அளிக்கப்படுகிறது. அது துதிப்பவனுக்குப் பசுக்களைப் போலாகிறது.

4. உங்களுக்குப் பாலனத்தை அளிக்க அழைக்கும் ஒப்பற்றவனுக்கு இனிய ஸோமரஸங்கள் பாய்கின்றன. வசுவே! உன்னை அழைக்கும் ஸோமபிந்துக்கள் உன்னை எங்களுடைய ஸ்தோத்திரங்களின் நடுவே ஸ்தாபிக்கின்றன.

5. அவன் எங்கள் யக்ஞத்தை எழில்படுத்தும் ஸோமத்துக்கு அவசரமாய்க் குதிரையைப்போல் பாய்கிறான். இனிய உணவை விரும்புபவனே! துதிகள் உனக்கு ஸோமத்தை இனிமைப்படுத்துகின்றன. நீ புரஜன் சமூகத்தின் துதியை விரும்புகிறாய். 7027



6. நாங்கள் உக்கிரனும், பகுத்தறிபவனும், செல்வத்தைத் தருபவனும், பலவித செல்வங்கள் உள்ளவனும், மகத்தான செல்வத்தை அதீனப்படுத்துபவனுமான இந்திரனைப் போற்றுகிறேன். வச்சிராயுதனே! நீ துதிப்பவனுக்கு நீர்ச்சுனையைப் போல் செல்வத்தைப் பொழிகிறாய்.

7. மகாமதியே! இந்திரனே! நீ தூரத்திலிருந்தாலும், சோதியிலோ புவியிலோ இருந்தாலும், உன்னுடைய குதிரைகளை இணைக்கவும். மகானான நீ, மகான்களோடு இங்கு வா.

8. உன்னுடைய, காற்றின் வேகத்தை முந்துபவையும், உன்தேரை இழுப்பவையுமான உன்னுடைய குதிரைகள் துன்பஞ்செய்யாதவை. நீ அவற்றால் மனிதனின் சத்துருவை மௌனப்படுத்துகிறாய். நீ அவற்றால் வானெங்கும் சுற்றுகிறாய். அக்குதிரைகளை இணைக்கவும்.

9. வசுவே! சூரனே! நீ போரிலே ஏதசனைப் பாலித்தாய். தசவிரஜனால் எதிர்க்கப்பட்ட வசனைப் பாலித்தாய். நீ அங்ஙனம் செய்தாய் என நாங்கள் மீண்டும் அறிவோமாக.

10. மகவானே! நீ இம்ஸையற்ற யாகத்திலே கண்வனுக்கு உன்னுடைய மனையின் நண்பனான தீர்க்கநீதனுக்கு வச்சிராயுதனே! கோசர்யனுக்குச் செல்வத்தையளித்தாய். அங்ஙனமே எனக்குப் பொன்னைப்போல் பிரகாசிக்கும் பசுக்களின் மந்தையான செல்வத்தையளிக்கவும். 7082

## 51. (3) இந்திரன்

### 671. சிருஷ்டிகு காண்வன்

1. இந்திரனே! மகவானே! நீ பொழிந்திருந்த ஸோமத்தை ஸாம வருண மனுவோடு பருகியதுபோல் நிபாதிதியாலும், மேத்யாதியாலும், புஷ்டிகுவாலும், சுருஷ்டிகுவாலும் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகவும்,

2. பருஷத்வாணன் உறவினர்களால் விலக்கப்பட்டு, சயனித்திருந்து, முதியவனான பிரஸ்கண்வனைப் பாலித்தான். உன்னால் தாங்கப்பட்ட தஸ்யவேவிருகன் ஆயிரக் கணக்கான பசுக்களை அடைய விரும்பினான்.

3. புலவனும், ரிஷிகளை ஊக்கப்படுத்துபவனும், இன்புற ஆர்வமுள்ளவனும், துதிகளில் குறைவற்றவனுமான இந்திரனைப் புதிய பாட்டால் பாடவும்.

4. உத்தம இடத்தில் இருக்கும் எவனுக்கு மூன்று மூலப்பொருள்களும், ஏழுதலைகளுமுள்ள தோத்திரத்தை அவர்கள் கூறினார்களோ, அவன் இந்தப் புவனங்களை இடியால் இயக்கி நடுங்கச் செய்கிறான். அவன் தன் ஆண்மையைப் புலப்படுத்துகிறான்.

5. நாங்கள் எங்களுக்குச் செல்வத்தைத் தரும் அந்த இந்திரனை அழைக்கிறோம். ஏனெனில் அவனுடைய புதிய ஸுமதியை நாங்கள் அறிகிறோம். நாங்கள் பசுக்கள் நிறைந்த கோசாலையை அடைவோமாக. 7087

6. வசுவே! தானமளிக்க உன்னால் ஆதரிக்கப்படுபவன் செல்வச் செழிப்பைப்பற்றுகிறான். இந்திரனே! துதியாருகனே! நாங்கள் பொழிந்துள்ள ஸோமத்தோடு உன்னை அழைக்கிறோம்.

7. இந்திரனே! நீ எப்பொழுதும் வீணாகவே விளங்காய்; துதிப்பவனைக் கைவிடாய். மகவானே! உன்னுடைய தேவதானங்கள் மேலும் மேலும் பொழியப்படுகின்றன.

8. எவன் தன் திறத்தால் கிருவியைக் கொன்றானோ, எவன் ஆயுதங்களால் சுஷ்ணனை நிசப்தப்படுத்தினானோ, அவன் அங்குள்ள சோதியைப் பரத்தி அதை ஸ்தம்பத்தால் நிறுத்திய பிறகு புவியின் புதல்வன் பிறந்தான்.

9. ஒவ்வொரு ஆரியனும் விரும்பப்படுவதும், கருமியுமான ஒவ்வொரு தாஸனும், நாடுவதுமான அச்செல்வம் துதிப்பவனான ருசுமபவிருவுக்கு அளிக்கப்படுகிறது.



10. ஆர்வமுள்ள அறிஞர்கள் இனிமையுள்ள ஸோமமுள்ளதும், நெய் சொட்டுவதுமான பாட்டைப்பாடினார்கள். எங்களுக்கு ஆக்கமும், ஆண்மையும், ஆற்றலும் தோன்றுக. பொழிந்துள்ள ஸோமங்களும் தோன்றுக. 7042

## 52. (4) இந்திரன்

### 672. ஆயுகாண்வன்

1. *சக்கரனே!* மனுவை வஸ்வதனிடமிருந்து ஸோமத்தைப் பருகினாய். திரிதனிடமிருந்து தோத்திரத்தை ஏற்றுக்கொண்டாய். இந்திரனே! அங்ஙனம் நீ இப்பொழுது ஆயுவோடு சேர்ந்து இன்பமாகவும்.

2. இந்திரனே! நீ பிருஷத்திரனோடும், மேதயனோடும், மாதரிதவனோடும் பொழிந்திருந்த ஸோமத்தைப் பருகினாய்; நீ இன்பமுற்றாய்; நிதசசிப்ரனோடும், தசோண்யனோடும், சியுமரசிமியோடும், ரிஜூநஸோடும் சேர்ந்து ஸோமத்தைப் பருகினாய். அங்ஙனம் ஆயுவோடு சேர்ந்து பருகி இன்பமாகவும்.

3. மித்திரனுடைய தர்மங்களை அநுசரித்து விஷ்ணு எவனுக்காக மூன்று அடிகளை வைத்தானோ, எவன் வீரமாய் ஸோமத்தைப் பருகினானோ அவன் இந்திரன். அவன் தனக்கே தோத்திரங்களை உரிமை செய்து கொண்டான்.

4. *சதக்கிரதுவே!* எவனுடைய துதிகளிலும், அவிகளிலும் நீ இன்புறுகிறாயோ அவனுக்கு ஈகை மனமுள்ளவனாயிருக்கும் உன்னை நாங்கள் செல்வத்தை விரும்பி மிகுந்த பாலை ஏந்தும் பசுவை அழைக்கும் இடையர்களைப் போல் அழைக்கிறோம்.

5. மகானும், உக்கிரனும், தலைவனாய் இயங்குபவனும், எங்களுக்குச் செல்வத்தைத் தருபவனுமான அவன், எங்களுடைய தந்தையாயிருக்கிறான். புருவசுவும், வலிய

னும், மகவானுமான அவன், நாங்கள் கேட்காமலேயே எங்களுக்குப் பசுக்களையும் குதிரைகளையும் தருவானாக. 7047

6. வசுவே! உன்னால் தானமளிக்கப்படும் ஈகையன், செழுமையையும், செல்வத்தையும் பற்றுகிறான். நாங்கள் செல்வத்தை விரும்பி, செல்வபதியும், சதக்கிரதுவுமான இந்திரனை அழைக்கிறோம்.

7. நீ கவனமில்லாமல் ஒருபோதும் இருந்ததில்லை நீ தேவர்களையும் மனிதர்களையும் பாலிக்கிறாய். துரீய ஆதித்தியனே! உனக்கு இந்திர அழைப்பு உரிமையுடன் விளங்குகிறது. அமிருதம் சோதிக்கு எழுந்தது.

8. இந்திரனே! மகவானே! துதியாருகனே! வசுவே! அளிப்பவனே! நீ துதிப்பவனை ஆதரிக்கச் செவியுற்றாய். எங்கள் துதிகளையும், அழைப்பையும், கண்வனை ஆதரிக்க செவியுற்றதுபோல் செவியுறவும்.

9. பழைய பாடல் பாடப்பட்டது. நீங்கள் இந்திரனுக்குத் தோத்திரத்தைக் கூறினீர்கள். அவர்கள் பல பிருஹதீப்பாக்களை முழங்கினார்கள். எங்களுடைய துதிகளையும், அழைப்பையும், கண்வனுடைய துதிகளையும் அழைப்பையும்போல் செவியுறவும்.

10. இந்திரன் மகத்தான செல்வங்களையும், சோதியையும், புவியையும், சூரியனையும் நன்றாய்க் கற்பித்தான். சுத்தமாயும், பிரகாசமாயுமுள்ளதும், பாலோடு சேர்க்கப் பட்டதுமான ஸோமபானம் இந்திரனை மதப்படுத்தியது. 7052

## 53. (5) இந்திரன்

### 673. மேத்ய காண்வன்

1. மகவானே! இந்திரனே! நாங்கள் செல்வர்களின் நடுவே சிறந்தவனாயிருப்பவனும், விருஷபர்களின் நடுவே தலைவனாயிருப்பவனும், கோட்டைகளை மிக்கப் புடைப்பவனும், பசுக்களைத் தருபவனும், செல்வபதியுமான உன்னிடம் வருகிறோம்.



2. தினந்தோறும் பலத்தால் வளரும் நீ, ஆயுவையும், ருத்ஸனையும், அதிதிக்வனையும், செல்வத்தால் வருத்தப் படுத்தி நன்னெறிக்குச் செலுத்தினாய். நாங்கள் குதிரைகளோடுள்ள சதக்கிரதுவான உன்னை, செல்வத்தை விரும்பும் நாங்கள் அழைக்கிறோம்.

3. எங்கள் அனைவர்க்கும் இனிய ரஸத்தை கற்கள் பொழிக. அருகிலோ, தூரத்திலோ பிழியப்பட்ட ஸோம பிந்துக்கள் எங்களுக்குப் பாய்க.

4. எங்களுடைய எல்லாப் பகைவர்களையும் அழிக்கவும். அவர்களைத் தூரத்திலே விலக்கவும். நாங்கள் எல்லாம் அவர்களுடைய செல்வத்தை அடைவோமாக. சான்றோர்களிடத்திலும் உன்னை இன்புறுத்தும் ஸோம ரஸங்கள் இருக்கின்றன. அங்கு ஸோம ரஸத்தால் நிரப்பிக்கொள்கிறாய்.

5. இந்திரனே! நீ திறமதி பாலனங்களோடு களிடம் நெருங்கி வா. மேலான மங்கள மயனே! உன்னுடைய மிக்க மங்கலமயப் பாலனங்களோடு வா. நல்ல பந்துவே! உன்னுடைய நல்ல பந்துக்களோடு வரவும். 7057.

6. போரிலே வெற்றியுள்ளவனும் ஆற்றலுள்ள பாலகனுமான மனிதர்களின் தலைவனை, மக்கட்களிலே செல்வப் படுத்தவும். எப்பொழுதும் தங்கள் மனங்களைச் சுத்தஞ் செய்து கொள்ளும் துதிப்பவர்களைச் செல்வப் படுத்தவும்

7. நாங்கள் போரிலே உன்னுடைய பாலனத்தை நிச்சயமாய்ப் பெறுவேன் என்பவனைப்போல் இருப்போமாக. நாங்கள் எங்கள் விருப்பத்தை அடையுங்கால் உன்னைத் துதிகளோடும் அழைப்புக்களோடும் போற்றுகிறோம்.

8. குதிரைகள் உள்ளவனே! நான் உன் பாலனத்-தோடு செல்வத்தை விரும்பி பிரம்மத்துக்கும் போருக்கும் செல்லுகிறேன். பசுக்களையும் குதிரைகளையும் விரும்பி

போராடுபவர்களின் தலைவனாக நான் செல்லுங்கால் உன்னையே என்னிடமிருக்க வேண்டுமென வற்புறுத்துகிறேன். 7060

## 54. (6) இந்திரன்

### 674 மாதரிசுவான் காண்வன்

1. இந்திரனே! பாடுபவர்கள் பாட்டுக்களால் உன்னுடைய இந்த வீரியத்தைப் பாடுகிறார்கள். அவர்கள் பாடி உனக்கு நெய்சொட்டும் அவிகளைச் செலுத்தினார்கள். பாக்களோடு பௌரர்கள் உன்னருகில் வந்தார்கள்.

2. நீ எவர்களுடைய ஸோமங்களிலே இன்புறுகிறாயோ அவர்கள் உன்னுடைய பாலனத்துக்கு யக்ஞங்களோடு உன்னருகில் வந்தார்கள். நீ ஸம்வர்த்தனிடமும் கிருசனிடமும் மகிழ்ந்தது போல் இப்பொழுது எங்களிடம் இன்புறவும்.

விசுவே தேவர்கள்

3. எல்லாத் தேவர்களும் சேர்ந்து எங்களிடம் வருவார்களாக. வசுக்களும் ருத்திரர்களும் எங்களுடைய பாலனத்துக்கு வருவார்களாக. மருத்துக்கள் எங்கள் அழைப்பைக் கேட்பார்களாக.

4. பூஷாவும், விஷ்ணுவும், ஸரஸ்வதியும், ஏழு நதிகளும் என் அழைப்பைக் கேட்பார்களாக. சலங்களும், காற்றும், மலைகளும், வனஸ்பதியும், பூமியும் என் தோத்திரத்தைக் கேட்பார்களாக.

5. இந்திரனே! மகவான்களில் உத்தமனாயிருப்பவனே! விருத்திரனை அழிப்பவனே! போற்றத் தகுந்தவனும், சேர்ந்து உண்பதற்குந் தகுந்தவனுமான நீ, உன்னுடைய சொந்த தனத்தைத் தானமளிக்கவும், எங்களைச் செழிப்பிக்கவும், அறிந்து கொள்ளவும். 7065

6. போர்த் தலைவனே! படைத் தலைவனே! வினைத் திட்பனே! போருக்கு எங்களை நடத்தவும். யக்ஞ விருந்துகளாலும், அழைப்புக்களாலும், தேவர்களை உபசரிப்பதற்-



லும், தங்கள் விருப்பங்களை அடைபவர்கள் மிக்கப் புகழுடனிருக்கிறார்கள்.

7. எங்களுடைய தோத்திரங்கள் தலைவனான உன்னில் நிலைக்கின்றன. இந்திரனிலே மனிதர்களுடைய ஆயுசு நிற்கிறது. மகவானே! எங்களுடைய பாலனத்துக்காக எங்களருகிலாகவும். பொங்கும் உணவைப் பொழியவும்.

8. இந்திரனே! நாங்கள் உன்னை ஸ்தோமங்களால் போற்றுவோம். சதக்கிரதுவே! நீ எங்களுடையவன். பிரஸ்கண்வனுக்குப் பெரிய, கனத்த, தேயாத, திரண்ட செல்வத்தைப் பொழியவும். 7068

## 55. (7) இந்திரன்

### 675. கிருச காண்வன்

1. இந்திரனுடைய ஆற்றலானது மிக்கப் பெரியது. நான் அதைக் கண்டேன். தஸ்யவே விருகனே! உன்னுடைய செல்வம் வருகிறது.

2. நூறு வெள்ளைக்காளைகள் சோதி மண்டலத்திலே நட்சத்திரங்களைப்போல் பிரகாசிக்கின்றன. அவை உயரத்திலே சோதி மண்டலத்தை ஏந்துபவைபோல் தோன்றுகின்றன.

3. அவன் நூறு கழைகளை, நூறு நாய்களை, நூறு பக்குவப்படுத்திய சருமங்களை, நூறு பல பஜ குசக கொத்துக்களை நானூறு சிகப்பாயுள்ள பசுக்களைத் தந்தான்.

4. கண்வ கோத்திரத்தில் வந்தவர்களே! இளமையிலிருந்து இளமைக்குச் செல்லும் நீங்கள், தேவர்களால் வாழ்த்தப்படுபவர்களாயிருங்கள். குதிரைகளைப்போல் ஊக்கமாய் இயங்குங்கள்.

5. அவர்கள் ஏழு இணைந்த பிணையலைப் போற்றுவார்களாக. இன்னும் பூரணமாய் வளராத அதன் புகழ் பெரிது. கருங் குதிரைகள் வழிகளிலே சென்றன. அவற்றை எந்தக் கண்ணும் தொடர இயலவில்லை. 7073

## 56. (8) இந்திரன்

### 676. பிருஷத்திர காண்வன்

1. தஸ்யவே விருகனே உன்னுடைய வற்ருத தானம் தோன்றிற்று. அதன் பரிமாணம் சோதியைப்போல் பரந்திருக்கிறது.

2. புதக்கிரதனுடைய புதல்வனுன தஸ்யவே விருகன் தன்னுடைய செல்வத்திலிருந்து எனக்குப் பதினுயிரத்தை அளித்தான்.

3. அவன் எனக்கு நூறு கர்தபங்களையும், அடர்ந்த ரோமமுள்ள நூறு ஆடுகளையும், நூறு ஆட்களையும், மாலைகளையும் அளித்தான்.

4. பூதக்கிரதனுக்கு நன்கலங்கரிக்கப்பட்ட குதிரையொன்று செலுத்தப்பட்டது. ஆனுல் மந்தையிலிருந்து பொறுக்கப்பட்ட குதிரையில்லை.

### அக்கினி சூரியர்கள்

5. அவி ஏந்துபவனும் அறிஞனுமான அக்கினி தன் தேரோடு தோன்றினுன். மகானுன அக்கினி தன் ஒளிச் சுவாலையோடு சூரியனைப் போல் பிரகாசிக்கிருன். சோதியிலுள்ள சூரியனைப்போல் பிரகாசிக்கிருன். 7078

## 57. (9) அசுவினிகள்

### 677. மேத்ய காண்வன்

1. தேவர்களே! போற்றத்தகுந்தவர்களே! நாஸத்தியர்களே! அசுவினிகளே! பழைய பலத்தோடுள்ள நீங்கள் உங்களுடைய தேரிலே துரிதமாய் வாருங்கள். உங்கள் ஆற்றல்களோடு மூன்ருவது யக்ஞத்தின் பானத்தைப் பருகுங்கள்.

2. முப்பத்துமூன்று சத்தியமான தேவர்கள் உங்களை சத்தியத்தின் முன்னே கண்டார்கள். அனலோடு பிரகாசிக்கும் நீங்கள் யாகத்தையும், யக்ஞத்தையும் அங்கீகரித்து ஸோமத்தைப் பருகுங்கள்.



3. அசுவினிகளே! உங்களுடைய இந்தச் செயல்கள் போற்றத்தகுந்தவை. சோதி மண்டலத்திலுள்ள விருஷபன், வானமும், புவியும், போரிலே, உங்களுடைய ஆயிரம் வாழ்த்துக்கள். இவற்றுக்காக நீங்கள் இங்கு ஸோமத்தைப் பருக வாருங்கள்.

4. போற்றத் தகுந்தவர்களே! உங்களுடைய இந்தப் பாகம் உங்களுக்காக வைக்கப்பட்டிருக்கிறது. நாஸத்தியர்களே! எங்களுடைய இந்தத் துதிகளுக்கு வாருங்கள். எங்களின் நடுவே இனிய ஸோமத்தைப் பருகுங்கள். உங்கள் ஆற்றல்களால் யாஜிப்பவனைப் பாலியுங்கள். 7082

## 58. (10) விசுவே தேவர்கள்

### 678. மேத்ய காண்வன்
### ரித்விஜர்கள்

1. அறிஞர்களான ரித்விஜர்கள் பலவிதமாய்த் தேவர்களுக்கு யக்ஞத்தைச் செலுத்துங்கால் எவன் தெரிந்த பிராமணனுக நியமிக்கப்பட்டான்? அவனைப்பற்றித் தலைவன் அறிவதென்ன?

2. அக்கினி ஒருவன். பல இடங்களிலே சொலிப்பிக்கப்படுகிருன். அனைத்துக்கும் மேலே பிரகாசிக்கிருன். ஒரு உஷை அனைத்தையும் ஒளிப்படுத்துகிருள். இருப்பது ஒன்று. அது இந்த அனைத்துமாகிறது.

3. நான் உங்களுடைய சோதியைப் பரத்துவதும், மூன்று சக்கரங்களிலே சுலபமாய்ச் செல்வதும், சுகமான பீடத்தை இயக்குவதும், பல செல்வங்கள் நிறைந்ததும், இணைக்கப்படுங்கால் அற்புத செல்வம் செழிக்கும் உஷையைப் பிறப்பித்ததும், பிரகாசிப்பதுமான தேரை அழைக்கிறேன். அசுவினிகளே! இங்கு ஸோமத்தைப் பருக வாருங்கள். 7085

## 59. (11) இந்திரா வருணர்கள்

### 679. ஸுபர்ண காண்வன்

1. இந்திரா வருணர்களே! அவிகளிலே உங்களை மேம்படுத்த அளிக்கப்பட்ட இப்பாகங்கள் வருகின்றன. நீங்கள் ஸோமத்தைப் பிழியும் தலைவனுக்கு உதவிசெய்யுங்கால் ஒவ்வொரு யக்ஞத்திலும் அவிகளுக்கு நீங்கள் துரிதமாகிறீர்கள்.

2. இந்திரா வருணர்களே! ஔஷதிகளும் சலங்களும் குணப்படுத்துபவை. அவை ஆற்றலை அடைந்திருக்கின்றன. வானத்துக்கப்பால் சென்றுள்ள உங்களுக்கு எந்த அதேவனும் பகைவன் எனச் சொல்லத் தகுந்தவனில்லை.

3. இந்திரா வருணர்களே! கிருசனுடைய இந்த மொழிகள் உண்மையே. ஏழு குரல்கள் இனிய ரஸத்தைக் கறக்கின்றன. சலத்தைப் பாலிக்கும் நீங்கள், உங்களைச் சிந்தனைகளோடு போற்றும் துதிப்பவனைப் பாலியுங்கள்.

4. ருதத்தின் ஸதனத்திலே ஸோமத்தின் சகோதரிகளான ஏழு தாரைகள் நெய்யையும், மிக்க ரஸங்களையும் பொழிகின்றன. இந்திரா வருணர்களே! இந்தத் தாரைகளாலும் செல்வப்படுத்தி துதிப்பவனைப் பாலியுங்கள்.

5. இந்திரா வருணர்களே! நாங்கள் எங்களுடைய மகத்தான சுகத்துக்காக மிக்கப் பிரகாசிக்கும் உங்கள் இருவரிடம் இந்திரனுடைய சத்தியமான ஆற்றலைக் கூறினோம். ஒளித் தலைவர்களே! நெய்யளிக்கும் எங்களை முவ்வேறு படையால் பாலியுங்கள். 7090

6. இந்திரா வருணர்களே! நான், நீங்கள் பூர்வத்திலே ரிஷிகளுக்களித்த மனன சக்தியையும், மொழியையும், மதியையும், சுருதியையும், தவத்தால் யக்ஞத்தைப் பரத்துங்கால் அறிஞர்கள் தங்களுக்குச் செய்து கொண்ட இடங்களையும் கண்டேன்.

7. இந்திரா வருணர்களே! அளிப்பவர்களுக்கு மமதையில்லாத மகிழும் மனத்தையும், மிக்கச் செல்வத்தையும் நல்குங்கள். எங்களுக்குப் பிரஜையையும், புஷ்டியையும், செல்வத்தையுமளியுங்கள். நாங்கள் நீடூழி வாழ எங்களாயுளை நீட்டுங்கள். 7092



வால்கிஸ்யம் முற்றிற்று.

## 60. அக்கினி

### 680. பர்கபிராகாதன்

1. அக்கினியே! நீ அனல்களோடு இங்கு வா நாங்கள் உன்னை ஹோதாவாகத் தெரிந்தெடுக்கிறோம். அளிக்கப்படும் நெய் யக்ஞருகனுன உன்னைத் தருப்பை மீது அமர்த்த உன்னை ஒளிப்படுத்துக.

2. ஆற்றலின் மகனுன அங்கிரஸனே! சிருவங்கள் உன்னைக்காண யக்ஞத்திலே இயங்குகின்றன. நாங்கள் யக்ஞங்களிலே, உணவைப் பாலிப்பவனும், நெய் கேசமுள்ளவனும், பழையவனுமான அக்கினியைப் போற்றுகிறோம்.

3. அக்கினியே! நீ கவி. நீ சுத்தப்படுத்துபவன். நீ யஜிப்பதற்கருகன்! நீ ஹோதா. நீ இன்புறுத்துபவன். நீ மிக்க அளிப்பவன். நீ பிரகாசிப்பவன். நீ யக்ஞங்களிலே மந்திரங்களாலும், விப்பிரர்களாலும் போற்றத் தகுந்தவன்.

4. மிக்க இளைஞனும், நித்தியனுமான நீ, வஞ்சகமற்ற என்னிடம் விருப்பமுள்ள தேவர்களை அவி புசிக்க ஏந்தி வா. மனைகளை அளிப்பவனே! நன்கு கற்பிக்கப்பட்ட விருந்துக்கு வா. உன்னுடைய ஸ்தானத்தில் அமர்த்தப்பட்ட நீ, பாக்களால் இன்பமாகவும்.

5. அக்கினியே! நீ பாலகன். நீ ருதன். நீ எங்கும் பரவியிருக்கிறாய், சொலிப்பிக்கப்பட்டு பிரகாசிப்பவனே! புலவர்களும், பாடுபவர்களும் உன்னைப் போற்றுகிறார்கள்.

6. மிக்கப் பிரகாசிப்பவனே! நீ பிரகாசிக்கவும், எங்களை ஒளிப்படுத்தவும், பிரசைக்கும் போற்றுபவனுக்கும் சுகத்தை அளிக்கவும். ஏனெனில் நீ மகான். என்னுடைய அறிஞர்கள் தேவர்களுடைய இன்பத்திலே இருப்பார்

களாக. நல்ல அனலகளோடும் பகைவர்களை ஜயிப்பவர் களாயுமிருப்பார்களாக.

7. அக்கினியே! நீ காய்ந்த மரத்தை எங்ஙனம் பஸ்மப்படுத்துகிறாயோ, அங்ஙனம், நண்பர்களை மேம் படுத்துபவனே! எங்களுக்குத் தீமையை விரும்புவனும். தீய மனத்தோடு எங்களைத் துன்புறுத்தும் எவனையும் பஸ் மப்படுத்தவும்.

8. வலிய மானிடப் பகைவனுக்கு எங்களை இரையாக் காதே. எங்களைத் துன்புறுத்துபவனுக்கு அதீனப்படுத் தாதே. மிக்க இளைஞனே! நீ இன்னலற்ற ஆதரவுகளோடு மங்களப் பாலனங்களோடு எங்களைப் பாலிக்கவும்.

9. அக்கினியே! எங்களை ஒரு ரிக்கால் பாலிக்கவும். இரண்டாவது ரிக்கால் பாலிக்கவும். மூன்று பாக்களால் எங்களைப் பாலிக்கவும். ஆற்றலின் தலைவனே! விசுவே! எங்களை நான்கால் பாலிக்கவும்.

10. ஒவ்வொரு துட்டப் பகைவனிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். போர்களிலே எங்களைப் பாலிக்கவும். நாங்கள் மிக்க நெருங்கிய பந்துவான உன்னிடம் யக்ஞத்துக் காகவும் செழுமைக்காகவும் வருகிறோம். 7102

11. சுத்தப்படுத்தும் அக்கினியே! உணவைச் செழிப் பிக்கும் உத்தம செல்வத்தை எங்களுக்களிக்கவும். நலத்தை அளிப்பவனே! மங்கள வழியால் எங்களுக்குப் பலரால் விரும்பப்படுவதும், சுயமாகவே புகழுள்ளதுமான செல் வத்தை அளிக்கவும்.

12. நாங்கள் அச்செல்வத்தால் படைசெலுத்தும் உக்கிரப் பகைவர்களைப் போரில் அழித்து ஜயிப்போமாக. பலத்தின் தலைவனே! எங்களை உணவால் செழிப்பிக்கவும். எங்களுடைய செல்வந்தரும் செயல்களைச் செழிப்பிக்கவும்.

13. அக்கினி தன் கொம்புகளைக் காளையைப்போல் கூர்மை செய்து ஆட்டுகிறான். அவனுடைய கூரிய மோவாய் கள் எதிர்ப்பற்றவை. இந்தப் பலத்தின் மகனுக்கு வலிய பற்களுண்டு.



14. அக்கினியே! காளையே! நீ எங்கும் பரவுகிறாய். உன் சுவாலைகள் தடுக்கப்படாதவை. ஹோதாவே! நன் களிக்கப்படச் செய்யவும். போற்றத் தகுந்த பல செல் வங்களை எங்களுக்களிக்கவும்.

15. நீ தாய்மார்களான மரங்களினுள்ளே தூங்கு கிறாய். மனிதர்கள் உன்னைச் சொலிப்பிக்கிறார்கள். நீ தலைவனுடைய அவியை சலிக்காமல் ஏந்திச் செல்கிறாய். பிறகு நீ தேவர்களின் நடுவே பிரகாசிக்கிறாய். 7107

16. அக்கினியே! நல்ல பொருள்களை அளிப்பவனும். நித்தியனுமான உன்னை ஏழு ஹோதாக்கள் போற்றுகிறார் கள். நீ மேகத்தை உன்னுடைய சூடான சுவாலையால் கிழிக்கிறாய். நீ எங்களுடைய பகைவர்களை ஜயித்த பிறகு செல்லவும்.

17. நாங்கள் தருப்பையைச் சீர்படுத்தினோம். நாங் கள் உங்களுக்காகத் தடைபடாத அக்கினியை அழைப் போமாக. அவிகளை ஏந்தும் நாங்கள் மானிடர்களின் ஹோதாவும், பல இடங்களில் இருப்பவனுமான அக் கினியை அழைப்போமாக.

18. அக்கினியே! தலைவன் அறிஞர்களோடு இனிய ஸாமங்களால் நடத்தப்படும் யக்ஞத்திலே உன்னைத் துதி களோடு போற்றுகிறான். நீ சுயமாகவே எங்களுடைய பாலனத்துக்காகப் பலவித உணவை எப்பொழுதும் எங்கள் அதீனத்திலிருக்க எங்களுக்கு ஏந்தி வரவும்.

19. தேவஞன அக்கினியே! நீ துதியாருகன். நீ சனங்களைப் பாலிப்பவன். அரக்கர்களைத் தகிப்பவன். வழி படுபவனுடைய மனையிலே எப்பொழுதுமிருந்து பாலிப் பவன். சுவர்க்கத்தைத் தாங்குபவன். சதா வீட்டிலிருப் பவன். நீ மகான்.

20. ஒளிச்செல்வனே! அரக்கன் எங்களிடம் வராம லிருப்பானாக. யாதுதானர்களின் யாதுத்தன்மையையும் தோன்றுமலிருக்க. அக்கினியே! எங்களிடமிருந்து இரு

கோசங்களுக்கப்பால் வறுமையையும் பசியையும் விலக்கவும். 7112

# 61. இந்திரன்

## 681. பர்கபிராகாதன்

1. இந்திரன் எங்களுடைய இந்த இருதோத்திரங்களையும் கேட்பானாக. மிக்க வலியனான மகவான் அனுகூல மனத்தோடு ஸோமத்தைப் பருக எங்களிடம் வருவானாக.

2. தானாகவே துலங்கும் அவனை சோதியும் புவியும் விருஷபனாகக் கற்பித்தன. அவனைப் பலத்துக்காகப் புலப்படுத்தின. ஆதலால் நீ ஒப்பாயிருப்பவர்களின் நடுவே முதல்வனாயிருக்கிறாய். உன்னுடைய மனம் ஸோமத்தை விரும்புகிறது.

3. இந்திரனே! புருவசுவே! பொழிந்திருக்கும் ஸோமத்தை உன்னுள் ஊற்றிக்கொள்ளவும். குதிரைகள் உள்ளவனே! நாங்கள் போர்களிலே ஜயிப்பவனும், வெல்லுபவனும், வெல்லப்படாதவனுமான உன்னை அறிகிறோம்.

4. இந்திரனே! மகவானே! விப்பிரனே! இன்னலற்ற சத்தியமுள்ளவனே! வச்சிராயுதனே! உன் அறிவால் விரும்பப்படுவது நடைபெறுகிறது. அழகிய மோவாயுள்ளவனே! வச்சிராயுதனே! நாங்கள் எங்கள் பகைவர்களை ஜயித்து, உன் பாலனத்தால் உணவை அடைவோமாக.

5. இந்திரனே! பலத்தின் தலைவனே! உன்னுடைய எல்லாப் பாலனங்களோடும் எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும். சூரனே! நாங்கள் புகழுள்ளவனும், செல்வத்தைச் செலுத்துபவனுமான உன்னை, பகனைப்போல் போற்றுகிறோம். 7117

6. நீ குதிரைகளை அதிகப்படுத்துகிறாய். பசுக்களைச் செழிப்பிக்கிறாய். தேவனே! நீ உன் பொன் மேனியால் சுனையைப்போல் இருக்கிறாய். எனக்காக நீ வைத்திருக்கும் தானத்தை எவனும் தடை செய்யான். நான் விரும்பும் எதையும் எனக்கு ஏந்தி வா.



7. வள்ளலான நீ வா. துதிப்பவனுக்கு அளிக்க நீ செல்வத்தைப் பற்றவும். மகவானே! பசுக்களை விரும்பும் எனக்கு அவற்றை வர்ஷிக்கவும். குதிரைகளை விரும்பும் எனக்கு இந்திரனே! குதிரைகளை வர்ஷிக்கவும்.

8. பல நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பசுமந்தைகளை வழிபடுபவனுக்குத் தானமாகத் தருகிறாய். நாங்கள் பலவிதப் பிரவசனங்களைக் கூறிக்கொண்டு, புரந்தரனான இந்திரனைத் துதித்து, பாலனத்துக்காக அவனை முற்படுத்துகிறோம்.

9. இந்திரனே! உன்னைத் துதிப்பவன் விப்பிரனாயினும் அல்லது அவிப்பிரனாயினும் அவன் உன்னை விரும்புவதால் இன்பமாகிறான். சதக்கிரதுவே! உன்னுடைய கோபம் எப்பொழுதும் முன்னேறுகிறது. நான் எனப் புலப்படுத்திக் கொண்டு, நான் என நீ பகைவனை எதிர்க்கிறாய்

10. பகைவர்களைக் கொல்லும் உக்கிரக் கைகளுள்ள புரந்தரன், என்னுடைய அழைப்பைச் செவியுறுவானானால் நாங்கள் செல்வத்தை விரும்பி, செல்வபதியான இந்திர சதக்கிரதுவை எங்கள் ஸோமங்களோடு அழைப்போம். 7122

11. ஸோமத்தைப் பொழிந்து நாங்கள் ஒருமித்து, வர்ஷிப்பவனான இந்திரனை நண்பனாகச் செய்துகொள்ளுங்கால், எங்களிடம் பாபமும், தான சூன்யமும், அனலின்மையுமில்லை என எங்களை நாங்கள் எண்ணிக் கொள்கிறோம்.

12. நாங்கள் போர்களிலே பகைவனை ஜயிப்பவனும், தடைபடாதவனும், திருப்பியளிக்கப்படும் கடனைப்போல் துதியைக் கூறத் தகுந்தவனும், உக்கிரனுமான இந்திரனை யக்ஞத்திலே இணைகிறோம். உத்தம சாரதியான அவன் குதிரைகளிலேயே வேகமான குதிரையை அறிகிறான்.

ஈகையான அவன், எந்த அளிப்பவனிடம் செல்லவேண்டுமென்பதை அறிகிறான்.

13. இந்திரனே! எவனைக்கண்டு நாங்கள் பயப்படுகிறோமோ, அவனை எதிர்க்க எங்களுக்குப் பயமின்மையை அளிக்கவும். மகவானே! நீ உன்னுடைய பாலனங்களோடு எங்களுக்குப் பலமாயிருக்கவும். எங்கள் பகைவர்களை அழிக்கவும். துன்புறுத்துபவர்களை அழிக்கவும்.

14. செல்வபதியே! நீ வழிபடுபவனுக்கு மகத்தான செல்வத்தைத் தருகிறாய். மணியைத் தருகிறாய். மகவானே! இந்திரனே! ஸோமமேந்தும் நாங்கள் துதிகளால் துதிக்கத் தகுந்த உன்னை அழைக்கிறோம்.

15. அனைத்தையும் அறிபவனும், விருத்திரனைக் கொல்பவனும், பாலகனுமான இந்திரன், எங்களால் போற்றத் தகுந்தவன். அவன் எங்கள் புதல்வனை, எங்கள் கடைப் புதல்வனை, எங்கள் நடுப்புதல்வனைப் பாலிப்பானாக அவன் முன்புறத்திலும் பின்புறத்திலும் பாலிப்பானாக. 7127.

16. இந்திரனே! எங்களை மேற்கிலிருந்தும், தெற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும், கிழக்கிலிருந்தும், ஒவ்வொரு திசையிலிருந்தும் பாலிக்கவும். எங்களிடமிருந்து தெய்வ பலத்தை விலக்கவும். எங்களிடமிருந்து அதேவிகளின் ஆயுதங்களை விலக்கவும்.

17. இந்திரனே! ஒவ்வொரு தினத்திலும், அப்பால் தோன்றும் ஒவ்வொரு நாளிலும், எங்களைப் பாலிக்கவும். உன்னைப் போற்றும் எங்களை, நல்லவர்களின் தலைவனே! இரவும் பகலும் எல்லாத் திசைகளிலும் பாலிக்கவும்.

18. மகவான் பகைவர்களைப் புடைப்பவன். சூரன், செல்வம் மிகுந்தவன். ஜயத்துக்குச் செலுத்துபவன். சதக்கிரதுவே! உன்னுடைய வச்சிராயுதத்தை ஏந்தும் கைகள் மிக்க வலிமையுடனிருக்கின்றன. 7130



## 62. இந்திரன்

### 682. பிரகாத கௌர காண்வன்

1. இந்திரனுக்கு விருப்பமாயிருக்கும் துதியைக் கூறுங்கள். அதில் அவன் இன்புறுகிறான். ரித்விஜர்கள் துதிகளால் இரஸத்தை விரும்பும் இந்திரனுடைய மகத்தான ஸோமான்னத்தைச் செழிப்பிக்கிறார்கள். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

2. அவன் துணையற்றவன். ஒப்பற்றவன். தலைவர்களிலே முதல்வன். வெல்லப்படாதவன். பூர்வ ஜனங்களை முந்துபவன். பலத்திலே எல்லா மானிடர்களையும் கடப்பவன். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

3. துரிதமாயளிக்கும் அவன் பிரேரிதமாகாத குதிரையாலும் எங்களுக்கு அளிக்க விரும்புகிறான். இந்திரனே! உன்னுடைய வீரியங்களைப் புலப்படுத்துங்கால் தோன்றும் உன் மகிமை புகழத் தகுந்தது. இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

4. இந்திரனே! இங்கு வா. நாங்கள் உன் ஆற்றலை ஊக்கப்படுத்தும் யக்ஞங்களை நடத்துவோமாக. மிக்க வலியனே! நீ அவற்றால் உணவை விரும்புபவனுக்கு மங்களத்தைச் செய்ய விரும்புகிறாய். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

5. இந்திரனே! மதகர ஸோமங்களோடு உன்னைப் போற்றி, வணக்கங்களோடு உன்னை வண்ணப்படுத்துபவனுக்கு நீ அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்ய விரும்புவதால் உறுதியைக் காட்டிலும், உறுதியாயுள்ள மனத்தை நீ செய்துகொண்டாய். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை. 7135

6. போற்றுவதற்கருகனான அவன், கிணற்றை அதோமுகமாய் நோக்கும் தாகமடைந்த மனிதனைப்போல் எங்களை ஆதரவோடு கீழே நோக்குகிறான். அவன் இன்பமாகி ஊக்கமுடனிருக்கும் ஸோமமளிப்பவனைத் தன்

நண்பனாகச்செய்து கொள்கிறான். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

7. இந்திரனே! தேவர்கள் உன்னுடைய ஆண்மையையும், அறிவையும் அனுசரித்து அவற்றை அடைந்தார்கள். பலரால் போற்றப்படுபவனே! நீ விசுவத்தின் கோபாலனாயிருக்கிறாய். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

8. இந்திரனே! நான் வழிபடுபவனுக்கருகிலுள்ள உன் ஆற்றலைப் போற்றுகிறேன். திறத்தலைவனே! நீ உன் திறத்தால் விருத்திரனைக் கொன்றாய் என நான் ஏத்துகிறேன். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

9. இந்திரன் மானிடர்களுக்குக் காலத்தின் பரிமாணங்களை விரும்புபவர்களுக்கு. தன்னை அளிக்கும் இசைந்த மனமுள்ளவனைப்போல் தருகிறான். சேதனத்தை யளிக்கும் அந்தச் செயலை நடத்துகிறான். ஆதலால் அவன் புகழுள்ளவனாகிறான். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை

10. மகவானே! பசுச்செல்வமுள்ளவனே! உன்னுடைய செல்வத்தில் இயங்குபவர்கள் உன் ஆற்றல் தோன்றியவுடன் அதை ஊக்கப்படுத்தினார்கள். உன்னை ஊக்கப் படுத்தினார்கள். உன் அறிவை ஊக்கப்படுத்தினார்கள் இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

11. விருத்திரனைக் கொல்பவனே! செல்வத்தை அடையும்வரை நானும் நீயும் ஐக்கியமாயிருப்போமாக. சூரனே! வச்சிரமேந்துபவனே! நமது ஐக்கியம் செல்வத்தைத்தரும் என்பதைக் கருமியும் ஒத்துக்கொள்கிறான். இந்திரனுடைய தானங்கள் போற்றத் தகுந்தவை.

12. நாம் அந்த இந்திரனை சத்தியத்தோடு போற்றுவோமாக. அசத்தியத்தோடு போற்றாமலிருப்போமாக. போற்றாதவன் பெரும்பாலுமழிகிறான். மிக்கப் போற்றுபவன் மகானாகிறான். 7142



# 63. இந்திரன்

## 683. பிரகாத காண்வன்

1. எவனுடைய கதவுகளான ஆதரவுகளை யக்ஞங்களை, தேவர்களின் நடுவே தந்தையான மநு அடைந்தானோ, போற்றத்தகுந்தவர்களிலே முதல்வனாயிருக்கும் அவன்—இந்திரன், எங்கள் அவிகளை விரும்பி வருகிறான்.

2. ஸோமத்தைப் பிழியும் கற்களும், கூறத்தகுந்த துதிகளும், தோத்திரங்களும், சுவர்க்கத்தைத் தோற்றுவித்த இந்திரனைத் தவிர்க்காமலிருக்க.

3. அறிஞனான இந்திரன் அங்கிரஸர்களுக்காகாகப் புலப்படுத்தினான். நான் அவனுடைய அந்த ஆண்மையைப் போற்றுகிறேன்.

4. பூர்வத்தில் போல் இப்பொழுதும் இந்திரன் கவிகளைச் செழிப்பிக்கிறான். மொழிபவனை ஏந்துகிறான். ஸோம அவி அளிக்கப்படுங்கால் அவன் எங்களைப் பாலிக்க எங்களின் நடுவே மங்களகரமாய் வருவானாக.

5. இந்திரனே! அவர்கள் உடனே சுவாஹாவின் தலைவனான அக்கினிக்கு அவியை அளிக்குங்கால் காயகர்கள் செல்வத்தை அடைய உன் செயல்களை இடைவிடாமல் போற்றுகிறார்கள். 7147

6. அறிஞர்களால் இம்ஸையற்றவன் என அறியப் படும் இந்திரனில் எல்லா வீரச் செயல்களும் பூர்வத்தில் இருந்தன. இப்பொழுதுமிருக்கின்றன. எதிர்காலத்திலும் இருக்கும்.

7. பஞ்சனங்களால் இந்திரனுக்குத் துதிகள் கூறப் படுங்கால் அவன் தன் ஆற்றலால் அவர்களுடைய பகைவர்களை அழிக்கிறான். தலைவனான அவன் வழிபடுபவனின் வந்தன நிலையமாகிறான்.

8. இந்தத் துதி உனக்கே தோன்றுகிறது. ஏனெனில் நீயே அந்த வீரச் செயல்களை நடத்தினாய். நீ எங்களுடைய தேர்ச்சக்கர வழியைப் பாலித்தாய்.

9. வர்ஷிப்பவனுன இந்திரனுல் அளிக்கப்பட்ட பல வித உணவைப் பெற்றவுடன் மனிதர்கள் சீவனத்துக்காகக் கம்பீரமாய் நடக்கிருர்கள். அவர்கள் யவத்தை அடையும் பசுக்களைப் போல் அதைப் பெறுகிருர்கள்.

10. பாலனத்தை விரும்பி துதிகளைக் கூறும் நாங்கள் அறிஞர்களான உங்களோடு சேர்ந்து மருத்துக்களோடுள்ள இந்திரனுக்கு யக்ஞத்தைச் செய்ய உணவின் தலைவர்களா யிருப்போமாக.

11. வட்சத்தியம். சூரனே! யக்ஞ சமயத்தில் தோன்றுபவனும், மங்கள ஒளியை அளித்துள்ளவனுமான உனக்கு நாங்கள் ரிக்குக்களோடு துதியைக் கூறுகிருேம். இந்திரனே! உன்னை நண்பனுக அடைந்து நாங்கள் பகைவர்களை ஜயிப்போமாக

12. ருத்திரர்களும், வர்ஷிக்கும் மேகங்களும், விருத்திரனை அழைக்கும் போரிலே எங்களோடு இன்புறுபவனும், துதிகளைப் பாடி, கூறுபவனிடம் வலிமையோடு வரும் இந்திரனும்—இந்தத் தேவர்கள் இந்திரனுடைய தலைமையிலே எங்களைப் பாலிப்பார்களாக. 7154

## 64. இந்திரன்

### 684. பிரகாத காண்வன்

1. எங்களுடைய ஸ்தோமங்கள் உன்னை இன்புறுத்துக. வச்சிராயுதனே! உன் தானத்தைப் புலப்படுத்தவும் பிரம்மத்துவேஷிகளை அழிக்கவும்.

2. அவிகளை அளிக்காத கருமிகளை உன் காலால் மிதித்து வருத்தவும். நீ மகான். உனக்கு நிகர் எவனுமில்லை.

3. இந்திரனே! நீ பிழியப்பட்ட, பிழியப்படாத எல்லா ஸோமத்துக்கும் தலைவனுயிருக்கிருய். நீ எல்லா ஜனங்களுக்கும் அரசனுயிருக்கிருய்.



4. நீ மனிதர்களுக்காகக் கோஷஞ் செய்து கொண்டு ஒளி உலகிலிருந்து எங்களுடைய மனைக்கு வா. இங்கு வா. நீ சோதியையும் புவியையும் நிரப்புகிருய்.

5. நீ நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான தாரைகளுள்ள மலையான மேகத்தை வழிபடுபவர்களுக்கு உடைக்கவும். 7159

6. நாங்கள் பகலில் ஸோமம் பிழியப்படுங்கால் உன்னை அழைக்கிருேம். நாங்கள் உன்னை இரவிலே அழைக்கிருேம். எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும்.

7. நித்தியத் தருணனும், ஒருவனுக்கும் தலைவணங்காதவனுமான விருஷபன் எங்கே? எந்த அறிஞன் உன்னை ஏத்துகிருன்?

8. அவன் மகிழ்ந்து எவனுடைய யக்ஞத்துக்குச் செல்லுகிருன்? எவன் இந்திரனை அறிகிருன்?

9. விருத்திரனை அழிப்பவனே! தோத்திரத்திலே வீரத் துதிகளும், யக்ஞ அவிகளும், உன்னுடைய எத்தன்மைகளைப் போற்றுகின்றன? போர்க்களத்திலே எவன் உன்னருகில் இருக்கிருன்?

10. புருடர்களின் நடுவே மானிட சன்மத்திலுள்ள என்னுல் உனக்கு இந்த ஸோமமளிக்கப்படுகிறது. அருகிலாகவும்; துரிதமாகவும்; அதைப் பருகவும்.

11. ஆர்ஜிகய தேசத்திலே ஸுஷோம நதியின் அருகிலிருக்கும் சர்யணுவதியிலே வளர்வதும், உனக்குப் பிரியமாயுள்ளதும், உன்னை மிக்கப் மதப்படுத்துவதுமான ஸோமமே இது.

12. இந்திரனே! இங்கு வா. துரிதமாகவும். எங்களுக்கு மகத்தான செல்வத்தையளிக்கவும். உன்னுடைய பகையழிக்கும் மதத்துக்காகவும் இந்த இதமான ஸோமத்தைப் பருகவும். 7166

## 65. இந்திரன்

### 685. பிரகாத காண்வன்

1. யக்ஞத் தலைவர்களான எங்களால் நீ கிழக்கிலிருந்தோ, மேற்கிலிருந்தோ, வடக்கிலிருந்தோ, தெற்கிலிருந்தோ அழைக்கப்பட்டாலும், நீ உன்னுடைய துரித குதிரைகளோடு வா.

2. நீ ஒளி அமுத ஊற்றிலோ அல்லது சோதிக்குச் செலுத்தும் யாகத்திலோ அல்லது சலத்தின் கசடல் மய வானிலோ நீ மகிழ்ந்திருந்தாலும் அங்கிருந்து வா.

3. இந்திரனே! நான் பெரியவனும், பரந்தவனுமான உன்னை ஸோமத்தைப் பருக தீனியைப் புசிக்க அழைக்கப்படும் காளையைப் போல் அழைக்கிறேன்.

4. இந்திரனே! குதிரைகள் தேரிலே உன்னை ஏந்தி உன்னுடைய மகிமையை இங்கு ஏந்தி வருக. தேவனே! உன்னுடைய ஒளியையும் இங்கு ஏந்தி வருக.

5. மகானும், உக்கிரனும், செல்வத்தைச் செய்பவனுமான நீ அழைக்கப்படுகிருய். இந்திரனே! நீ துதிக்கப்படுகிருய். இங்கு வா. ஸோமத்தைப் பருகவும். 7171

6. இந்திரனே! பொழிந்துள்ள ஸோமமும் அவியுமுள்ள நாங்கள் எங்கள் தருப்பையின் மீது அமர உன்னை அழைக்கிறேம்.

7. இந்திரனே! நீ பலர்க்கும் பொதுவாயிருக்கிருய். ஆதலால் நாங்கள் உன்னை அழைக்கிறேம்.

8. அறிஞர்கள் கற்களால் ஸோமத்தின் இந்த அமுதத்தைப் பிழிந்தார்கள். இந்திரனே! நீ இன்பமாகி அதைப் பருகவும்.

9. தலைவனுன நீ, வழிபடும் மற்றவர்களையெல்லாம் கடந்து எங்களிடம் துரிதமாகவும். எங்களுக்கு மிக்க உணவை அளிக்கவும்.



10. இந்திரனுன அரசன் பொன்னுல் அலங்கரிக்கப்பட்ட பசுக்களை எனக்களிப்பாகுக. தேவர்களே! மகவான் இன்னலாகமலிருக்க.

11. நான் ஆயிரம் பசுக்கள் ஏந்தப்படும் சுத்தமான பரந்துள்ள இன்பம் தரும் மிகுந்த பொன்னைப் பெறுகிறேன்

12. நான் துக்கத்திலே தோய்ந்திருக்கிறேன். ஆனுல், என் பந்துக்கள் தேவர்களுடைய ஆதரவால் ஆயிரம் பசுக்களோடு செல்வங்களையும் சிறப்பையும் அடைகிறேன். 7178

## 66. இந்திரன்

### 686. கலிப் பிரகாதன்

1. நீங்கள் துன்பத்திலே பாலனமாக வேக குதிரைகளோடுள்ளவனும் செல்வத்தைத் தருபவனுமான இந்திரனைப் போற்றுங்கள். ஸோமம் பிழியப்படும் யக்ஞத்திலே அவனுக்குப் பிரஹத ஸாமனைப் பாடுங்கள். நான் அவனைக் குடும்பத்துக்கு இதமாயுள்ள தலைவனை அழைக்கும் மனிதர்களைப் போல் அழைக்கிறேன்.

2. துதிகளைக் கூறி ஸோமத்தையளித்து வணக்கத்தோடு ஏத்துபவனுக்குத் துதியாருக செல்வத்தைத் தருபவனும், ஸோம மதத்திலிருப்பவனுமான ஸுசிப்ரன் போரிலே அசுரர்களும் தேவர்களும் மனிதர்களும் பற்ருர்கள்.

3. சுத்தப்படுத்துபவனும், குதிரைகளை நடத்துவதில் திறமுள்ளவனும், அற்புதனும், பொன்மேனியுள்ளவனும், விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரன் பல பசு மந்தைகளை மறைத்திருக்கும் இடத்தை ஆட்டுகிருன்.

4. பலரால் திரட்டப்பட்டு, புதைக்கப்பட்டிருக்கும் செல்வத்தை அவன் போற்றுபவனுக்குத் தருகிருன். வச்சிரனும், சுந்தரமுகனும், பொன் குதிரைகளிலிருப்பவனுமான இந்திரன் யக்ஞத்தால் போற்றப்பட்டவுடன் தன் விருப்பம் போல் எதையும் செய்கிருன்.

5. சூரனே! பலரால் போற்றப்படுபவனே! இந்திரனே! நீ பூர்வத்திலே வழிபடுபவர்களிடமிருந்து விரும்பிய யக்ஞத்தையும், துதிமொழியையும் உனக்களிக்க நாங்கள் துரிதமாகிறோம். 7183

6. வச்சிரமேந்துபவனும், பலரால் அழைக்கப்படுபவனும், பிரகாசிப்பவனும், ஸோமத்தைப் பருகுபவனுமான நீ, உன்னுடைய மதத்துக்காக எங்களுடைய ஸோமங்களிலே இன்பமாகவும், பொழிபவனுக்கும், பாடுபவனுக்கும் விரும்பத் தகுந்த செல்வத்தை மிக்க அளிப்பவனாயிருக்கிறாய்.

7. நாங்கள் நேற்றும், இன்றும் இங்கு வச்சிராயுதனான இந்திரனைப் பருகச் செய்தோம். போரிலே ஜயத்தை அடைய பொழியப்பட்ட ஸோமத்தை இன்று அவனுக்கு ஏந்தி வாருங்கள். எங்களுடைய துதியைச் செவியுற்று இப்பொழுது அவன் எங்களிடம் துரிதமாய் வருக.

8. ஆட்டைக் கொல்லும் மிருகமான ஓநாயும் அவனுடைய ஆக்ஞைகளின் வழியைப் பின்பற்றுகிறது. இந்திரனே! எங்களுடைய இந்தத் துதியை விரும்பி யக்ஞத்தால் கவரப்பட்டு துரிதமாகவும்.

9. இந்திரனால் நடத்தப்படாத ஆண்மைச் செயல் எது? அவனுடைய புகழுக்குரிய வீரத் தன்மையை எவன் செவியுறவில்லை? விருத்திரனைக் கொல்லும் அவன் பிறவியிலிருந்தே புகழுள்ளவன்.

10. அவனுடைய தடைபடாத ஆற்றல் எத்தனைப் பெரிது? விருத்திரனைக் கொல்பவனின் நிகரற்ற வன்மை எத்தனை எதிர்ப்பற்றது? தினங்களையே எண்ணிக்கொண்டிருக்கும் வட்டிக்களிப்பவர்களையெல்லாம் அவன் வெல்லுகிறான். தன் ஆற்றலால் பணிகளை, கருமிகளை அதிக விலைக்கு விற்பவர்களையெல்லாம் வெல்லுகிறான். 7188

11. விருத்திரனைக் கொல்பவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரனே! வச்சிராயுதனான உனக்கு நாங்கள் துதிகளை ஊதியங்களைப் போல் அளிக்கிறோம்.



12. பலவிதச் செயல்களைச் செய்யும் இந்திரனே! வேறு துதிக் கர்த்தாக்கள் உன்னிடமிருக்கும் பல ஆசைப் பொருள்களையும், ஆதரவுகளையும் விரும்புகிறார்கள். மனைகளை அளிப்பவனே! நீ பகைவனுடைய அவிகளை மறுத்துவிட்டு எங்களிடம் வா. மிக்க ஆற்றலுள்ளவனே! என் அழைப்பைக் கேட்கவும்.

13. மகவானே! நாங்கள் உனக்கு உரியவர்கள். விப்பிரர்கள் உன்னை அண்டுகிறார்கள். இந்திரனே! உன்னையன்றி எங்களை சுகப்படுத்துபவன் வேறு எவனுமில்லை.

14. எங்களை இப்பசியிலிருந்தும், வறுமையிலிருந்தும், பழிச் சொல்லிலிருந்தும் விடுதலைப்படுத்தவும். உன்னுடைய ஆதரவாலும், அற்புதச் செயலாலும் எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்யவும். ஆற்றலுள்ளவனே! நீ சரியான வழியை அறிகிறாய்.

15. உங்களுடைய பொழியப்பட்ட ஸோமம் இந்திரனுக்கே உரியதாகுக. கலிப் புதல்வர்களே! பயப்படாதீர்கள் இக்கேடு நீங்குகிறது. தானாகவே இது நீங்குகிறது. 7193

## 67. ஆதித்தியர்கள்

### 687. மத்ஸ்யன் ஸ்ம்மதனுடைய புதல்வன் அல்லது மித்திராவருணர்களுடைய புதல்வன் மான்யன் அல்லது வலையில் அகப்பட்ட சில மீன்கள்

1. நாங்கள் சுகப்படுத்தும் க்ஷத்திரியர்களான ஆதித்தியர்களிடம் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ள பாலனத்தை வேண்டுகிறோம்.

2. ஆதித்தியர்களும், மித்திரனும், வருணனும், அரியமானும் எங்களைத் துன்பத்திலிருந்து கடத்துவார்களாக. ஏனெனில் அவர்கள் அதை நன்கறிகிறார்கள்.

3. போற்றத்தகுந்த அற்புதச் செல்வம் இந்த ஆதித்தியர்களிடமிருக்கிறது. அவர்கள் அதை ஈகையனுக்கும் யக்ஞம் செய்பவனுக்கும் தருகிறார்கள்.

4. மித்திரனே! வருணனே! அர்யமானே! நீங்கள் மகான்கள். உங்கள் பாலனம் மகத்தானது. நாங்கள் உங்கள் பாலனத்தை வேண்டுகிறோம்.

5. ஆதித்தியர்களே! நாங்கள் மரிப்பதற்குள் உயிருடன் இருக்கும்போதே எங்களிடம் வாருங்கள். அழைப்பைக் கேட்பவர்களே! நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்? 7198

6. உங்களிடமிருக்கும் எந்த செல்வத்தையும், எந்த மனையையும் போற்றிக் களைத்தவனுக்களியுங்கள். இவற்றோடு எங்களிடம் பிரியமாய்ப் பேசுங்கள்.

7. தேவர்களே! பாபமனமுள்ளவனுக்கு மகத்தான தீவினையிருக்கிறது. பாபமற்றவனுக்கு சுகமிருக்கிறது. ஆதித்தியர்களே! உங்களிடம் பாபமில்லை.

8. வலை எங்களைப் பந்தப்படுத்தாமலிருக்க. இந்திரன் எங்களை மகத்தான செயலுக்கு அவ்வலையிலிருந்து நீக்குவானாக. ஏனெனில் அவன் வலியன். புகழுள்ளவன்.

9. தேவர்களே! பாலிக்க இயங்கும் நீங்கள் தீயப் பகைவர்களின் அழிக்கும் வலையால் எங்களைத் துன்புறுத்தாதீர்கள்.

10. நான் என்னுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள மிக்க சுகத்தைத் தருபவளும், மகத்தான தேவியுமான அதிதியைப் போற்றுகிறேன். 7203

11. நீ எங்கும் பாலிக்கிறாய். இந்த ஆழமில்லாத சலத்திலிருக்கும் எங்கள் மகத்தான சந்ததிகள் அழிப்பவனுடைய வலையானது துன்புறுத்தாமலிருக்க.

12. பரந்து செல்பவளும், தூரத்தில் சலிப்பவளுமான தேவியாம் நீ, எங்கள் மக்கட்கள் சீவனுடனிருக்கப் பாபமற்ற எங்களிடம் வர உன் ஆற்றலைப் புலப்படுத்தவும்.



13. சனங்களின் தலைவர்களும், துன்புறுத்தாதவர்களும், துரோகமற்றவர்களும் சுயமாகவே ஏந்தப்படும் புகழுள்ளவர்களுமான நீங்கள், எங்கள் விரதங்களைப் பாலியுங்கள்.

14. ஆதித்தியர்களே! அழிப்பவர்களுடைய வாய்களிலிருந்து கட்டப்பட்ட திருடனைப் போல் அகப்பட்டிருக்கும் எங்களை விடுவியுங்கள்.

15. ஆதித்தியர்களே! இந்த வலையும் துட்ட மனமும் துன்புறுத்தாமல் எங்களிடமிருந்து செல்க. 7208

16. உத்தம தானமளிக்கும் ஆதித்தியர்களே! நாங்கள் உங்களுடைய பாலனங்களால் பூர்வத்தில்போல் இப்பொழுதும் சோகங்களை அனுபவிப்பவர்களாயிருப்பவர்களாயிருக்கிறோம்.

17. பேரறிஞர்களான தேவர்களே! நாங்கள் வாழ எங்களை எதிர்க்கும் பல பாவச் செயலாளர்களை எங்களிடமிருந்து நீக்குங்கள்.

18. அதிதியே! ஆதித்தியர்களே! பந்தத்திலிருந்து கைதியை விடுவிப்பது போல் எங்களைத் துன்பத்திலிருந்து விடுவிப்பவர்களான நீங்கள், துதிகளுக்கும், தோத்திரங்களுக்கும் அருகர்களாயிருப்பீர்களாக.

19. ஆதித்தியர்களே! இப்பாசத்தை அறுத்தெறியும் ஆற்றல் எங்களிடம் இல்லை. நீங்கள் எங்களை சுகப்படுத்துங்கள்.

20. ஆதித்தியர்களே! கைகளால் நெய்யப்பட்ட இந்த வலை விவஸ்வதனுடைய இந்த ஆயுதம் மூப்புக்கு முன்னால் எங்களை அழிக்காமலிருக்க.

21. ஆதித்தியர்களே! பகைவர்களை அடியோடொழியுங்கள். தீமையை ஒழியுங்கள். நெருங்கி பந்தப்படுத்தும் வலையையழியுங்கள். பாபத்தை எங்கும் அழியுங்கள். 7214

# 68. இந்திரன்

## 688. பிரியமேத ஆங்கிரஸன்

1. நாங்கள் பல செயல்கள் உள்ளவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான உன்னை இந்திரனே! ஸத்பதியே! மிக்க வலிமையுள்ளவனே! சுகத்துக்கும் பாலனத்துக்கும் இங்கு தேரைப்போல் முற்படுத்துகிறோம்.

2. வலிமையில் பெரியவனே! செயல் செல்வனே! மிக்க ஆற்றலுள்ளவனே! போற்றத்தகுந்தவனே! உன்னுடைய சர்வ வியாபகமான மகிமையால் எல்லாப் பொருள்களையும் நிரப்பினாய்.

3. மகானான நீ உன்னுடைய மகத்தான கைகளிலே எங்கும் வியாபகமாகும் வச்சிரத்தைப் பிடித்திருக்கிறாய்.

4. நான், எல்லாப் பகைவர்களையும் தாழ்த்தும் பலத்தின் தலைவனும், ஒருவனுக்கும் வணக்கமளிக்காதவனுமான இந்திரனை அழைக்கிறேன். நான் மருத்துக்களான வீரர்களோடு பின்பற்றப்பட்டவனும், அவர்களுடைய தேர்களால் பாலிக்கப்பட்டவனுமான இந்திரனை அழைக்கிறேன்.

5. போர்களிலே மனிதர்களால் பலவிதமாயழைக்கப்படுபவனும், ஸதா செழிப்பவனுமான இந்திரனை எங்களுடைய பாலனத்துக்காக நான் அழைக்கிறேன். 7219

6. நான் எல்லையற்றவனும், துதியாருகனும், உக்கிரனும், உத்தமப் பொருள் உள்ளவனும், செல்வத் தலைவனுமான இந்திரனை அழைக்கிறேன்.

7. யக்ஞத்தின் துவக்கத்திலே அவி அளிப்பவர்களின் துதிகளை நடத்துபவனும், வெற்றியைத் தருபவனுமான இந்திரனுக்கு என்னுடைய மகத்தான செல்வ லாபத்துக்கு அவன் ஸோமத்தைப் பருக நான் துதியைச் செலுத்துகிறேன்.



8. மிக்க வலியனே! மனிதர்களிலே எவனும் உன் நட்பை அடையவில்லை. உன்னுடைய ஆற்றலை எவனும் அடையான்.

9. வச்சிராயுதனே! உன்னால் பாலிக்கப்பட்டு நாங்கள் சலத்தில் ஸ்னானஞ் செய்யவும், சூரியனைக் காணவும், உன் நட்பால் நாங்கள் போரிலே மகத்தான செல்வத்தை ஜயிப்போமாக.

10. இந்திரனே! மிக்கப் போற்றுவதர்க்கருகனே! போர்களிலே பல துதிகளைக் கூறிய என்னை நீ பாலித்தாய். ஆதலால் நாங்கள் யக்ஞங்களோடு உன்னைப் போற்றுகிறோம். நாங்கள் பாக்களோடு உன்னைப் போற்றுகிறோம். 7224

11. வச்சிராயுதனே! உன்னுடைய நட்பு இனிது. தானம் இனிது. உனக்கு யக்ஞம் மிக்க மேன்மையாகச் செய்யத்தகுந்தது.

12. எங்களுக்குப் பரந்த செல்வத்தை அளிக்கவும். எங்கள் குழந்தைகளுக்குப் பரந்த செல்வத்தை அளிக்கவும். பரந்த செல்வத்தை எங்கள் மனைக்கு அளிக்கவும். நாங்கள் வாழ எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும்.

13. நாங்கள் எங்கள் ஆட்களுக்குப் பரந்த வழியையும், எங்கள் பசுக்களுக்குப் பரந்த வழியையும், எங்கள் தேருக்குப் பரந்த வழியையும், யக்ஞத்தையும் உன்னிடம் வேண்டுகிறோம்.

### ரிக்ஷாசுவமேதர்கள்

14. ஸோம மதத்திலே இனிய தானங்களோடு ஆறு அரசர்கள் இருவர் இருவராக என்னிடம் வருகிறார்கள்.

15. நான் நேராகச் செல்லும் இரு குதிரைகளை இந்திரோதனிடமிருந்தும், இரு பொன்னிறக் குதிரைகளை ரிட்சமகனிடமிருந்தும், இரு சிவப்புக் குதிரைகளை அசுவமேதமகனிடமிருந்தும் பெற்றுக் கொள்கிறேன். 7229

16. நான் அதிதிக்வனுடைய புதல்வனிடமிருந்து, உத்தமத் தேர்களோடு இரு குதிரைகளையும், ரிட்சனுடைய மகனிடமிருந்து உத்தமத் தடைவார்களோடு, இரு குதிரைகளையும், அசுவமேதனுடைய புதல்வனிடமிருந்து உத்தம ஆபரணங்களோடு இரு குதிரைகளையும் பெற்றுக்கொள்கிறேன்.

17. நான் அதிதிக்கவனுடைய மகனான சுத்த செயலுள்ள இந்திரோதனிடமிருந்து, வேறு செல்வங்களுடன் பெட்டைக் குதிரைகளோடு ஆறு குதிரைகளையும் பெற்றுக்கொண்டேன்.

18. நேராகச் செல்லும் இரு குதிரைகளின் நடுவே உத்தம வாய் வடங்களோடும், கசையோடும், வளர்ந்திருப்பதும், அழகுடனிருப்பதுமான பெட்டைக் குதிரையொன்று புலனாகிறது.

19. உணவைத் தருபவர்களே! அரசர்களே! நிந்திக்க விரும்புபவன் உங்களில் எந்த திறத்தையுங் காணவில்லை
7233

## 69. இந்திரன்

### 689. பிரியமேத ஆங்கிரஸன்

1. நீங்கள் வீரர்களை இன்புறுத்தும் இந்திரனுக்கு மும்மடங்கு ஸ்தோமத்தோடு யக்ஞ அவியை அளியுங்கள். அவன் நீங்கள் யக்ஞத்தைப் பூர்த்தி செய்ய மிக்க அறிவாலும், செயலாலும் உங்களை அழைக்கிறான்.

2. நீங்கள் உஷைகளைப் பிறப்பிப்பவனை அழையுங்கள். நான் உங்களுக்காக நதிகளை முழக்கப்படுத்துபவனை அழைக்கிறேன். நான் உங்களுக்காகக் கொல்லத்தகாத பசுக்களின் தலைவனை அழைக்கிறேன். தலைவனே! நீ பசுக்களை விரும்புகிறாய்.

3. தேவர்களின் சன்ம ஸ்தானத்திலிருக்கும் பிராணிகளும், சோதியின் மூன்று ஒளி உலகங்களில் இருப்பவையுமான இந்த வெண்மையான பசுக்கள் கிணறுகளைப் போல் பாலைக் கறப்பவையான இவை மூன்று யக்ஞங்களிலே அவனுக்கு ஸோமத்தைப் பாலோடு சேர்க்கின்றன.



4. தானாகவே தெரிந்துகொள்பவனும், பசுக்களின் தலைவனும், சத்தியத்தின் மகனும், நல்லவர்களைப் பாலிப்பவனுமான இந்திரனை உன் துதியால் போற்றவும்.

5. துலங்கும் தங்க நிறக் குதிரைகள் அவனைத் தருப்பை மீது இறக்குக. அங்கு அவனுக்கு நாங்கள் துதியைக் கூறுவோம்.
7238

6. வச்சிராயுதனான இந்திரன் தன்னருகில் ஸோமத்தைக் காணுங்கால் அவனுக்கு மதந்தரும் பானத்தை பசுக்கள் கறந்தன.

7. எங்களுடைய மனையான சூரியனுடைய இடத்துக்கு நானும் இந்திரனும் சென்று இனிய ஸோமத்தைப் பருகிய பிறகு நாங்கள் நண்பனுடைய இருபத்தொன்றாவது உலகத்திலே சேர்வோமாக.

8. பிரியமேத மக்கட்களே! இந்திரனைப் போற்றுங்கள். அவனை மிக்க மேன்மையாப் போற்றுங்கள். உங்களுடைய புதல்வர்களும் அவனைப் போற்றுவார்களாக. திரமான கோட்டை என அவனைப் போற்றுங்கள்.

9. முரசு முழங்குகிறது. புஜ கவசம் கிண்ணிடுகிறது. சிவந்த வின்னாண் பாடுகிறது. இந்திரனுக்குத் தோத்திரம் எழுப்பப்படுகிறது.

10. வளப்படுத்தும் பிரகாசமான நதிகள் தணிந்த சலங்களோடு ஓடுங்கால் பாயும் ஸோமத்தை இந்திரனுடைய பானத்துக்காகப் பற்றுங்கள்.
7243

### இந்திரனும், விசுவேதேவர்களும், வருணனும்.

11. இந்திரன் ஸோமத்தைப் பருகினான். அக்கினி பருகினான். விசுவேதேவர்கள் மகிழ்ந்தார்கள். வருணன் இங்கு தன் இருப்பிடத்தைச் செய்துகொள்வானாக. சலங்கள் கன்றுகளைக் காண அரவமிடும் பசுக்களைப் போல் அவனைப் பாடின.

### வருணன்

12. வருணனே! நீ நல்ல தேவனாயிருக்கிறாய். உன் அண்ணத்தினுள் ஏழு நதிகள் பள்ளத்தினுள் பாயும் சுந்தர தாரைகளைப் போல் பொழிந்தவண்ணமாயிருக்கின்றன.

### இந்திரன்

13. நன்கு இணைக்கப்பட்டு குதித்தோடும் குதிரைகளை வழிபடுபவனுக்குச் செலுத்தும் இந்திரன் நலத்தை ஏந்தித் துரிதமாய் வருகிறான். தலைவனான அவன் மழையைத் தோற்றுவிக்கிறான். தனக்குத்தானே நிகராயுள்ள அவன் முக்தனாகிறான்.

14. சக்கரன் மெய்யாகவே ஜயிக்கிறான். இந்திரன் தன் சத்துருக்களையெல்லாம் ஜயிக்கிறான். அப்பாலிருக்கும் அன்பாருகனான அவன், தன் இடிமொழியால் அடித்த மேகத்தை உடைக்கிறான்.

15. இந்திரன் இளங்குமாரனைப்போல் தன் அழகிய தேரிலே ஏறினான். அவன் தன்னுடைய தாய்க்கும், தந்தைக்கும் பெரிய மிருகத்தைப் போல் பல செயல்களுள்ள மேகத்தைப் படுத்துகிறான். 7248

16. ஸுசிப்ரனே! கிரகபதியே! நீ உன்னுடைய பொன் தேரிலே ஏறவும். பிறகு நாம் இருவரும் உன்னுடைய ஒளியுள்ளதும், ஆயிரங் கால்கள் இருப்பதும், பிரகாசிப்பதும், புன்மையற்றதும், மங்களத்தைத் தருவதுமான தேரிலே சேர்ந்திருப்போமாக.

17. அறிஞர்கள் துதியையளித்து, தானே துலங்கும் இந்திரனை இங்ஙனம் போற்றுகிறார்கள். அவியைப் பெற்றுக்கொள்ள அவனைக் குதிரைகள் ஏந்தி வரும் வழியிலே அவர்கள் அவனுடைய நன்கு திரட்டப்பட்ட செல்வத்தை அடைகிறார்கள்.

18. பிரியமேவர்கள் பழைய மேலான அவியை அனுசரித்து, தருப்பைகளைப் பரப்பி அவிகளை அளித்த பிறகு



இந்தத் தேவர்களின் பழைய இடத்துக்குச் சென்றார்கள். 7251

## 70. இந்திரன்

### 690. புருஹன்மா ஆங்கிரஸன்

1. நான் மனிதர்களின் தலைவனும், தேர்களில் தடைபடாமல் செல்பவனும், எல்லா எதிர்ப்படைகளை உடைப்பவனும், சிறந்தவனும், விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரனைப் போற்றுகிறேன்.

2. புருஹன்மனனே! நீ உன்னுடைய பாலனத்துக்தாக இந்திரனைப் போற்றவும். ஏனெனில் உன்னைத் தாங்குபவனிடம் இருவித ஆற்றல்கள் இருக்கின்றன. அவன் தன் கையிலே சோதியிலே சூரியனைப் போல் மகத்தாயிருக்கும் அழகிய வச்சிரத்தை ஏந்துகிறான்.

3. ஸதா வளர்பவனும், அனைவராலும் துதிக்கப்படுபவனும், மகானும், ஜயிக்கப்படாதவனும், மிக்க வீரத் திறமுள்ளவனுமான இந்திரனை, யக்ஞங்களால் நட்பு செய்து கொள்பவனிடம் எவனும் தன் வீரச் செயல்களால் அணுக இயலாது.

4. எவன் பிறந்தவுடன் வேகமுள்ள பசுக்களால் போற்றப்பட்டானோ, எவன் சோதியாலும், புவியாலும் துதிக்கப்பட்டானோ, எவன் எதிரிப் படைகளை ஜயிப்பானோ, எவனை எதிர்க்க இயலாதோ அவனை நான் போற்றுகிறேன்.

5. இந்திரனே! உனக்கு நிகராக நூறு சோதிகளுமில்லை. நூறு புவிகளுமில்லை. வச்சிராயுதனே! ஆயிரம் சூரியன்களும் உன்னைப் புலப்படுத்த ஆற்றலற்றவை. படைக்கப்பட்ட எப்பொருளும், சோதியும் புவியும் உன்னை நிரப்ப ஆற்றலற்றவை. 7256

6. சூரனே! உன்னுடைய பலத்தால் வீரச் செயல்களை நடத்தினாய். வலியனே! அனைத்தையும் உன் ஆற்றலால் செய்தாய். மகவானே! வச்சிராயுதனே! உன்னு

டைய அற்புத பாலனங்களால் பசுக்கள் நிறைந்த கொட்டத்தை நாங்கள் அடைவோமாக.

7. தீர்க்காயுசுள்ள இந்திரனே! உன்னைத் தேவனுகக் கருதாத மனிதன் உணவைப் பெறுன். தன் தேருக்கு இரு பலவித நிறமுள்ள குதிரைகளை இணைப்பவனும், இரு தங்க நிறப் புரவிகளைச் சேர்ப்பவனும், குதிரையில் ஏந்தப்பட்டிருப்பவனுமான இந்திரனைப் போற்றுதவன் உணவைப் பெறுன்.

8. மகான்களான நீங்கள் பூஜ்யனும், தானத்துக்காகப் போற்றப்படுபவனும், ஆழ்ந்த ஆழமற்ற சலங்களிலும் போர்களிலும் போற்றத் தகுந்தவனுமான இந்திரனைப் போற்றுங்கள்.

9. மனைகளை அளிப்பவனே! சூரனே! மகத்தான உணவை அனுபவிக்க எங்களை எழுப்பவும். மகவானே! மகத்தான செல்வத்துக்காக எழுப்பவும். இந்திரனே! மகத்தான புகழுக்காக எங்களை எழுப்பவும்.

10. இந்திரனே! யக்ஞத்தை விரும்பும் நீ, உன்னை நிந்திப்பவனுடைய செல்வங்களால் என்னை நன்முய்த் திருப்தி செய்கிருய். பரந்த செல்வமுள்ளவனே! உன் வாமங்களின் நடுவே எனக்குத் தஞ்சமளிக்கவும். நீ உன் படைகளால் தாஸனைச் சாய்க்கிருய். 7261

11. உன்னுடைய நண்பனுன பர்வதன் வேறு விரதமுள்ளவனையும், மனிதர்களின் பகைவனையும், யஜிக்காதவனையும், போற்றுதவனையும் சுவர்க்கத்திலிருந்து கீழே தள்ளுவானுக. பர்வதன் நன்முய்க் கொல்லும் மிருத்யுவினிடம் தாஸனைச் செலுத்துவானுக.

12. மிக்க வலியனுன இந்திரனே! எங்களை விரும்பும் நீ, எங்களுக்கு உன்னுடைய கைகளால் இந்தப் பசுக்களை அளிக்க தானியப் பொரியைப் போல் பற்றவும். எங்களை விரும்பும் நீ, மீண்டும் அவற்றை அளிக்கக் கையால் பற்றவும்.



13. நண்பர்களே! நீங்கள் யக்ஞத்தை விரும்புங்கள். இல்லையேல் நசம் எங்ஙனம் அழிப்பவனும், பகைவர்களை ஒழிப்பவனும், செல்வத்தைத் தருபவனும், வெல்லப்படாதவனுமான இந்திரனைப் போற்றுவோம்!

14. இந்திரனே! அனைவராலும் போற்றப்படுபவனுன நீ, யக்ஞத்தைச் செய்யும் பல ரிஷிகளால் போற்றப்படுகிருய். பகைவர்களை அழிக்கும் நீ வழிபடுபவர்களுக்குக் கன்றுகளை ஒவ்வொன்முயளிக்கிருய்.

15. மகவான் எங்களுடைய மூன்று பகைவர்களிடமிருந்து பசுக்களை மீட்டி, கன்றுகளோடுள்ள அவற்றின் செவிகளைப் பிடித்து, பருகுவதற்கு ஆட்டை நடத்திச் செல்லும் இடையனைப்போல் எங்களிடம் நடத்தி வருவானுக. 7266

## 71. அக்கினி

### 691. ஸுதிதியும் புருமீளனும் அல்லது இருவரில் ஒருவர்

1. அக்கினியே! ஒவ்வொரு கருமியினிடமிருந்தும் மானிட சத்துருவினிடமிருந்தும் பற்றப்படும் மகத்தான செல்வத்தால் எங்களைப் பாலிக்கவும்,

2. பிரியஜாதனே! எந்த மானிட கோபமும் உன்னைத் துன்புறுத்தாது. நீயே இரவின் தலைவனுயிருக்கிருய்.

3. ஆற்றல் மகனும் மங்கள சோதியுமான நீ எல்லாத் தேவர்களோடும் சேர்ந்து எல்லா விரும்பத்தகுந்த செல்வத்தையுமளிக்கவும்.

4. அக்கினியே! உன்னுல் ஆதரிக்கப்படும் ஈகையனை எந்தக் கருமியும், செல்வத்திலிருந்து தனிப்படுத்தான்.

5. அறிஞனே! அக்கினியே! போரிலே உன்னுல் செல்வத்துக்கு இயக்கப்படுபவன் உன் பாலனத்தால் பசுமந்தைகளின் நடுவே தலைவனுய் இயங்குகிருன்.
7271

6. அக்கினியே! நீ அவி அளிப்பவனுக்குப் பல வீரப்புதல்வர்களுள்ள செல்வத்தைத் தருகிறாய். எங்களைச் செழுமைக்குச் செலுத்தவும்.

7. ஜாதவேதஸனே! எங்களைப் பாலிக்கவும். துன்புறுத்துபவனிடமும் துட்ட மனங்களுள்ளவனிடமும் எங்களைச் செலுத்தாதே.

8. அக்கினியே! தேவனான உன்னால் அளிக்கப்பட்ட செல்வத்தை எந்த அதேவனும் எடுத்துச் செல்லாமலிருப்பானாக. நீ செல்வங்களின் தலைவனாயிருக்கிறாய்.

9. வசுவே! நண்பனே! பலத்தின் மகனே! உன்னைப் போற்றுபவர்களான எங்களுக்கு நீ மிக்கச் செல்வத்தைத் தருகிறாய்.

10. எங்கள் சொற்கள் புசிக்கும் சுவாலைகளை ஏந்தும் அழகிய அக்கினியினிடம் செல்க. மிக்கச் செல்வமும் மிக்கச் சிறப்புமுள்ள அவனிடம் எங்களுடைய அவிகளும் யக்ஞங்களும் எங்களுடைய பாலனத்துக்குச் செல்க.
7276

11. இரு விதமாய்த் தேவர்களிலும், மனிதர்களிலும் அமிருதனாயிருப்பவனும், வழிபடுபவர்களின் நடுவே ஹோதாவாகவும், இன்புறுத்துபவனாயிருப்பவனும், பலத்தின் மகனுமான அக்கினி, ஜாதவேதஸனிடம், அவன் விரும்பத்தகுந்த எல்லாச் செல்வங்களையுமளிக்க எங்கள் சொற்கள் செல்க.

12. யக்ஞத் தலைவர்களே! நான் உங்களுடைய தேவயக்ஞத்தைத் தோற்றுவிக்க அக்கினியைப் போற்றுகிறேன். யக்ஞம் நடைபெறுங்கால் நான் அவனைப் போற்றுகிறேன். பகைவன் வருங்கால் நான் அக்கினியைப் போற்றுகிறேன். நிலத்தை அடைய நான் அக்கினியைப் போற்றுகிறேன்.

13. அக்கினி தன் நட்பிலே எங்களுக்கு உணவை அளிப்பானாக. ஏனெனில் அவன் விரும்பத்தகுந்த எல்லாப்



பொருள்களுக்கும் தலைவனாயிருக்கிறான். நாங்கள் எங்கள் புதல்வர்களுக்காகவும், போர்களுக்காகவும், மனைகளை அளிப்பவனும், எங்கள் அங்கங்களைப் பாலிப்பவனுமான அக்கினியிடம் மிக்கச் செல்வத்தை வேண்டுகிறோம்.

14. புருமீளனே! பரந்த சோதியுள்ள அக்கினியை நம்முடைய பாலனத்துக்காக உன்னுடைய பாக்களால் போற்றவும். செல்வத்துக்காக அக்கினியைப் போற்றவும் மிக்கப் புகழுள்ள அவனை தங்களுக்காக வேறு யக்ஞத் தலைவர்கள் போற்றுகிறார்கள். ஸ்துதியான எனக்கு அக்கினியிடம் மனையை நாடவும்.

15. நாங்கள் அக்கினியை, அவன் எங்களுடைய பகைவர்களைத் தூரப்படுத்தப் போற்றுகிறோம். நாங்கள் அக்கினியை அவன் எங்களுக்கு சுகத்தையும் பாலனத்தையுமளிக்கப் போற்றுகிறோம். எல்லா ஜனங்களைப் பாலிப்பவனாகப் பிரகாசிக்கும் அவன் ரிஷிகளான எங்களுக்கு மனைகளை அளிப்பவனாகப் போற்றப்படுவானாக.
7281

## 72. அக்கினி அல்லது அவி

### 692. ஹர்யதப் பிராகாதன்

1. அறிஞர்களே! அவியை அளியுங்கள். ஏனெனில் அக்கினி வந்திருக்கிறான். அவியளிப்பதை அறியும் அத்வர்யு மீண்டும் யக்ஞத்தை நடத்துகிறான்.

2. அக்கினியின் நட்பிலே அளிக்கும் தலைவனிடம் இன்பமாகும் ஹோதா அக்கினியின் சுவாலையினருகே அமருகிறான்.

3. அவர்கள் மனிதனுக்காகத் தங்கள் அறிவால் ருத்திரனைப் பூர்வத்திலே ஸ்தாபிக்க விரும்புகிறார்கள். அவர்கள் அவன் தூங்குங்கால் அவனைத் தங்கள் நாக்கால் பற்றுகிறார்கள்.

4. உணவைத்தரும் அக்கினி பரந்த வானைத் தாபப்

படுத்துகிருன். சலத்திலே ஏறுகிருன். அவன் தன் நாக்கால் மேகத்தை வெட்டுகிருன்.

5. அவன் கன்றைப்போல் வெண்மையுடனுகிருன். அவன் இங்கு தன்னைத் தடைபடுத்தும் எவனையும் காணவில்லை. அவன் துதிக்கப்பட துதிப்பவனை நாடுகிருன். 7286

6. குதிரைகளின் பெரிய பருத்த கலணைகள் வானிலே புனுகின்றன. தேரின் வார்களும் தோன்றுகின்றன.

7. முழங்கும் ஸிந்துவின் கரையிலே ஏழு ரித்விஜர்கள் ஒரு பசுவைக் கறக்கிருர்கள். இருவர், ஐவரைச் செலுத்துகிருர்கள்.

8. வழிபடுபவனுடைய பத்து விரல்களால் ஊக்கப்பட்டு இந்திரன் தன் மூவ்வித ரசியியால் வானிலிருந்து மேகத்தை விழச்செய்தான்.

9. முந்நிறமுள்ள புதிய வேகமாயுள்ள சுவாலை யக்ஞத்தைச் சுற்றிச் செல்லுகிறது. ஹோதாக்கள் நெய்யால் அவனை ஒளிப்படுத்துகிருர்கள்.

10. அவர்கள் அதோ முகமுள்ளதும், மேலே சக்கரமிருப்பதும், சுற்றிச்செல்வதுமான ஊற்றை வணக்கத்தோடு பொழிகிருர்கள். 7291

11. அத்வர்யுக்கள் மகா வீரத்தைக் கீழே வைக்குங்கால் அருகிலாகி அதிகமாயுள்ள நெய்யைப் பெரிய சிருவத்தினுள் ஊற்றுகிருர்கள்.

12. பசுக்களே! மகாவீரத்தினருகில் வாருங்கள். யக்ஞத்திலே இருவிதப் பால்கள் நிறைந்திருக்கின்றன. பயனைத் தருகின்றன. பாத்திரத்தின் இரு செவிகள் தங்கத்தாலானவை.

13 சோதி புவிகளில் சேரும் செல்வத்தை இரஸத்திலே ஊற்றுங்கள். விருஷபத்துக்கு இரஸத்தை அளியுங்கள்.

14. இந்தப் பசுக்கள் தங்கள் சொந்த இடத்தை



அறிகின்றன. தாய்ப்பசுக்களோடு கன்றுகளைப்போல் அவை தங்கள் பந்துக்களோடு இணைந்து சேர்கின்றன.

15. தன் வாயால் புசிக்கும் அக்கினிக்கு ஆதரவான பாலை வானிலே அறிஞர்கள் அளிக்கிருர்கள். அவர்கள் இந்திரனுக்கும் அக்கினிக்கும் எல்லா அவியையும் அளிக்கிருர்கள். 7296

16. காற்று சூரியனுடைய ஏழு ரசமிகளால் புட்டித்தரும் உணவையும், ரஸத்தையும் ஏழு அடிகள் உள்ளவனிடமிருந்து கறக்கிறது.

17. மித்திரா வருணர்களே! நான் சூரியன் உதயமாகுங்கால் ஸோமத்தைக் கிரகிக்கிறேன். அது நோயுள்ளவனுக்கு மருந்தாயிருக்கிறது.

18. ஆர்வமுள்ள நான் அவிகளை அளிக்க விரும்பும் இடத்திலே அக்கினி எழுந்து தன் சுவாலையால் வானிலே எங்கும் நிரப்புகிருன். 7299

## 73. அசுவினிகள்

### 693. அத்திரி அல்லது ஸப்தவத்திரி வம்சத்தைச் சேர்ந்த கோபவனன்

1. அசுவினிகளே! ருதத்தை விரும்பும் எனக்காக எழுந்திருங்கள். உங்கள் குதிரைகளைத் தேரிலே இணையுங்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

2. அசுவினிகளே! கண் இமைப்பைக்காட்டிலும் மிக்கத் துரிதமாயுள்ள தேரிலே வாருங்கள். நீங்கள் என்னருகில் நிலைக்க.

3. அசுவினிகளே! நீங்கள் அத்திரிக்காகச் சூடான நெருப்பை சீதமான சலத்தால் போர்த்தினீர்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

4. நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்? நீங்கள் எங்கு சென்றீர்கள்? எங்கு நீங்கள் பருந்துகளைப் போல் பறந்தீர்கள்? உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

5. இன்று நீங்கள் எங்கிருந்தாலும், எப்பொழுதாயிருந்தாலும் என்னுடைய இந்த அழைப்பைச் செவியுற்றவுடன் வாருங்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க. 7304

6. அசுவினிகள் அவசியத்திலே மிக்க அழைக்கத் தகுந்தவர்கள். நான் நெருங்கிய பந்துத்தன்மைக்கு அவர்களை அணுகுகிறேன். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

7. அசுவினிகளே! நீங்கள் அத்திரிக்கு ஆதரவளிக்கும் மனையைக் கற்பித்தீர்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

8. அத்திரி உங்களை மனோகரமாய்ப் போற்றியவுடன் நீங்கள் உக்கிரமான சூட்டை நீக்கினீர்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

9. ஸப்தவத்திரி உங்களைத் துதித்து அக்கினியின் கருஞ்சுவாலை, தன் பாலனத்துக்கு அடைந்தான். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

10. செல்வபதிகளே! இங்கு வாருங்கள். என்னுடைய இந்த அழைப்பைச் செவியுறுங்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க. 7309

11. உங்களுக்கு அடிக்கடி கூறப்படும் இந்தத் தோத்திரமானது தேய்ந்த முதியவர்களுக்குப் போல் ஏன் எழுகிறது? உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

12. அசுவினிகளே! உங்களுடைய சகோதரத்வம் ஸமமாயிருக்கிறது. பந்துத்வமும் ஸமமாயிருக்கிறது. உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

13. அசுவினிகளே! உங்களுடைய தேர் சோதியிலும், புவியிலும், உலகங்களிலும் துரிதமாய்ச் செல்லுகிறது. உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

14. நீங்கள் ஆயிரக்கணக்கான பசுக்களின் மந்தைகளோடும், குதிரைகளின் மந்தைகளோடும், எங்களிடம் வாருங்கள். உங்களுடைய பாலனம் என்னருகில் நிலைக்க



15. ஆயிரக்கணக்கான பசுக்களின் மந்தைகளோடும் குதிரைகளின் மந்தைகளோடும், எங்களைக் கடந்து செல்லாதீர்கள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க. 7314

16. சிகப்பு நிறமுள்ள உஷை தோன்றுகிறாள். ஸத்தியவதியான அவள் தன் சோதியைப் பரத்துகிறாள். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

17. அசுவினிகளே! மிக்கப் பிரகாசமாயுள்ள சூரியன் இருளை மரத்தைக் கோடாரியால் வெட்டுபவனைப்போல் வெட்டுகிறான். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க.

18. தீரனே! ஸப்தவத்திரியே! சிக்கவைத்துத் தடைபடுத்தும் கூடையால் வருத்தப்படுபவனே! கோட்டையை இடித்து வெளிப்படுபவனைப்போல் கூடையைப் பிளந்து வெளியில் வரவும். உங்கள் பாலனம் என்னருகில் நிலைக்க. 7317

## 74. அக்கினி

### 694. கோபவன ஆத்ரேயன்

1. ஆற்றலை விரும்பும் நீங்கள் பலகால் விரும்பப்படுபவனும், எல்லா மனிதர்களுடைய அதிதியுமான அக்கினியைப் போற்றுங்கள். நான் உங்களுக்காக மனைக்குரிய வணக்கத்தைப் பாக்களோடு அவனை சுகத்துக்காகப் பாடுகிறேன்.

2. நான் நெய்யளிக்கப்படுபவனும், அவிகளை ஏந்தும் மனிதர்களால் துதிகளோடு நண்பனுகப் போற்றப்படுபவனுமான அக்கினியைப் பாடுகிறேன்.

3. நான் யக்ஞத்தில் அளிக்கப்படும் அவிகளை சோதிக்குச் செலுத்துபவனும், வழிபடுபவனைப் போற்றுபவனுமான ஜாதவேதஸை உயர்த்துகிறேன்.

4. எவ்வக்கினியின் சுடர்ப்படையிலே மகானும், ருக்ஷப் புதல்வனுமான சுருதர்வான் செழிக்கிருனே, எவன் விருத்திரனை அழிப்பவனும், மனிதர்களுக்கு நலத்தைச் செய்பவனும், முதல்வனுயுமிருக்கிருனே அந்த அக்கினியினிடம் நாங்கள் வந்திருக்கிரோம்.

5. நாங்கள் இருளைக் கடத்துபவனும், நெய்யாஹுதி பெறுபவனும், போற்றத்தகுந்தவனுமான ஜாதவேதஸனிடம் வந்திருக்கிரோம்.

6. நாங்கள், யாகஞ் செய்பவர்களும், உயர்த்திய சிருவங்களுள்ளவர்களும், சிரமப்படுபவர்களுமான சனங்களால் அவிகளோடு போற்றப்படும் அக்கினியினிடம் வந்திருக்கிரோம்.

7. இன்புறுத்துபவனே! ஸுஜாதனே! சுபச்செயலுள்ளவனே! அமூடனே! அழகனே! அதிதியே! அக்கினியே! உனக்கு இப்புதிய தோத்திரம் கற்பிக்கப்படுகிறது.

8. அக்கினியே! இந்த சுகமளிப்பதும், உணவைப் போல் இதமாயிருப்பதுமான இத்தோத்திரம் உனக்குப் பிரியமுள்ளதாகுக. அதனுல் ஏத்தப்பட்டு நீ உயர்வாயாக.

9. சோதிகளோடு சோதியாயுள்ள இந்தத் தோத்திரம் விருத்திரப் போரிலே உன் புகழுக்கு இன்னும் மகத்தான புகழை ஏந்துக.

10. மானிடர்களே! குதிரையைப் போல் பாய்ந்து செல்வத்தால் நம்முடைய தேர்களை நிரப்புபவனும், இந்திரனைப்போல் நல்லவர்களைப் பாலிப்பவனுமான பிரகாசமாயுள்ள அக்கினியைப் போற்றுங்கள். எவனுடைய ஆற்றலால் நீங்கள் பகைவர்களின் நிதிகளையும், அவர்களுடைய அற்புத செல்வத்தையும் பறிக்கிறீர்களோ அவனைப் போற்றுங்கள். 7327

11. அக்கினியே! அங்கரஸனே! கோபவனன் துதியால் உணவை அளிக்கச் செய்தான். சுத்தப்படுத்துபவனே! இந்தக் கோபவனனுடைய துதியைக் கேட்கவும்



12. உணவைப் பெற சனங்களால் போற்றப்படும் நீ பகைவர்களைக் கொல்ல அவர்களுடனிருக்கவும்.

ஆர்க்ஷ சுருதர்வான்

13. பகைவர்களின் மதத்தை அடக்கும் ரிக்ஷனின் புதல்வனுன சுருதர்வானுல் அழைக்கப்பட்டு அவனுல் எனக்களிக்கப்பட்ட நான்கு குதிரைகளின் தலைகளைச் செம்மறி ஆட்டின் அடர்ந்த ரோமத்தைத் தட்டி, தடவிப் பார்க்கும் மனிதர்களைப்போல் நான் என் கையால் தட்டித் தடவினேன்.

14. மிக்க வலிய அரசனுடைய நான்கு துரித குதிரைகள் அழகான தேரிலே இணைக்கப்பட்டு என் எதிரிகளின் உணவை, துக்கிரனுடைய புதல்வனை மனைக்கு ஏந்திச் சென்ற கலங்களைப்போல் பறிக்க ஏந்திச் செல்லுகின்றன.

15. மகாநதியான பருஷ்ணியே! நான் உன்னிடம் உண்மையையே கூறுகிறேன். சலங்களே! மிக்க வலியனுன சுருதர்வனனுக்கு அதிகமாகக் குதிரைகளை மிக்கத் தாராளமாக அளிப்பவன் வேறு எம்மனிதனுமில்லை. 7332

## 75. அக்கினி

### 695. விரூப ஆங்கிரஸன்

1. அக்கினியே! நீ தேர்ப்பாகனைப்போல் தேவர்களை அழைக்கும் குதிரைகளை இணைக்கவும். ஹோதாவான நீ பூர்வத்தில் அமரவும்.

2. தேவனுன அக்கினியே! நாங்கள் மிக்க அறிந்தவர்கள் எனத் தேவர்களிடங் கூறவும். விரும்பத் தகுந்த பொருள்களை யெல்லாம் எங்களுக்குச் செலுத்தவும்.

3. ஏனெனில் மிக்க இளைஞனும், பலத்தின் மகனும், எங்கும் அவிகளால் போற்றப்படுபவனுமான நீ ஸத்தியவானும் யக்ஞாருகனுமாயிருக்கிருய்.

4. இந்த அச்சினி நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான உணவின் தலைவனாயிருக்கின்றான். அவன் முதல்வன். அறிஞன். செல்வங்களின் தலைவன்.

5. சக்கரத்தின் வட்டத்தைச் செம்மைப்படுத்தும் சிற்பிகளைப்போல் எங்கள் அழைப்பை இணக்கப்படுத்தவும். அங்கிரஸனே! யக்ஞத்துக்கு வரவும். 7337

6. விபேனே! வர்ஷிப்பவனும் பிரகாசிப்பவனுமான இவ்வக்கினிக்கு நித்திய மொழியோடு துதியைக் கூறவும்.

7. மிக்கத் தூரங்காணும் இந்த அக்கினியின் ஆயுதத்தால் பசுக்களுக்காகப் போராடும் களத்திலே நாங்கள் திருடனை வெல்லுவோம்.

8. அவன் தேவப்பிரஜைகளான எங்களை, கைவிடாமலிருக்கும் பால் பொழியும் பசுக்களைப்போல் கைவிடாமலிருப்பானாக. பசுக்கள் அற்பக் கன்றை நீக்காமலிருக்கின்றன.

9. எந்தத் தீய மனமுள்ள பகைவனுடைய எதிர்ப்பும் கலத்தைக் கவிழ்க்கும் அலையைப்போல் எங்களைச் சாய்க்காமலிருக்க.

10. தேவனான அக்கினியே! மனிதர்கள் ஆற்றலுக்காக உனக்குத் துதிகளைக் கூறுகிறார்கள். நீ பலத்தால் பகைவனை அழிக்கவும். 7342

11. அக்கினியே! எங்கள் விருப்பங்களைத் திருப்தி செய்துகொள்ள எங்களிடம் செழித்த செல்வத்தைச் செலுத்தவும். பரந்த இடத்தை அளிக்கும் நீ எங்களுக்குப் பரந்த இடத்தையளிக்கவும்.

12. எங்களை இந்தப் போரிலே தன் சுமையை நீக்கும் மனிதனைப்போல் விட்டுவிடாதே. செல்வத்தைப் பறிக்கவும். அனைத்தையும் ஜயிக்கவும்.

13. அக்கினியே! உன்னால் தோன்றும் வருத்தங்கள் வேறொருவனிடம் அவனைப் பயமுறுத்தச் செல்க. போரிலே எங்கள் உக்கிரப் பலத்தைப் பலப்படுத்தவும்.



14. எந்த வணக்கமுள்ள களைப்படையாத மனிதனுடைய யக்ஞச் செயலை அக்கினி விரும்புகிறானோ அவனுக்கு அக்கினி போரிலே ஜயத்தையளிக்கிறான்.

15. பகைப் படையிலிருந்து எங்களை முற்றும் விடுவிக்கவும். என் தலைமையிலுள்ள சனங்களையும் பாலிக்கவும்.

16. அக்கினியே! நாங்கள் பூர்வத்திலே தந்தையைப் போலுள்ள உன்னுடைய பாலனத்தை அளிக்கிறோம். ஆதலால் மீண்டும் நாங்கள் அந்த சுகத்தை உன்னிடம் விரும்புகிறோம். 7348

## 76. இந்திரன்

### 696. குருஸுதி காண்வன்

1. நான் என்னுடைய பகைவர்களை அழிக்கத் தீரத்தால் அனைவரையும் நடத்துபவனும், மருத்துக்களோடிருப்பவனும், அறிஞனுமான இந்திரனை அழைக்கிறேன்.

2. நண்பர்களான மருத்துக்களோடுள்ள இந்திரன் நூறு சக்திகளுள்ள வச்சிரத்தால் விருத்திரனுடைய தலையைத் துணித்தான்.

3. நண்பர்களான மருத்துக்களோடு சேர்ந்திருந்த இந்திரன் வலிமையில் உயர்ந்து விருத்திரனைக் கிழித்தான். வானின் சலங்களை விடுவித்தான்.

4. ஸோமபானத்துக்காக இவ்வனைத்தையும் ஜயித்தவன் மருத்துக்களோடுள்ள இந்த இந்திரனே அவன்.

5. நாங்கள் துதிகளால் ஸோமசேஷத்தைப் பற்றுபவனும், வலியனும், மகானுமான மருத்துக்களோடுள்ள இந்திரனை அழைக்கிறோம். 7353

6. நாங்கள் மருத்துக்களோடுள்ள இந்திரனைப் பழைய தோத்திரத்தோடு இந்த ஸோமத்தைப் பருக அழைக்கிறோம்.

7. இந்திரனே! வர்ஷிப்பவனே! சதக்கிரதுவே! பலரால் போற்றப்படுபவனே! மருத்துக்களோடுள்ள நீ இந்த யக்ஞத்திலே ஸோமத்தைப் பருகவும்.

8. இந்திரனே! வச்சிராயுதனே! மருத்துக்களோடு உள்ள உனக்கு இந்த ஸோமரஸங்கள் பொழியப்பட்டிருக்கின்றன. அவை உனக்கு இருதயத்தோடு அளிக்கப்படுகின்றன.

9. இந்திரனே! நீ உன்னுடைய நண்பர்களான மருத்துக்களோடு சேர்ந்து காலை யக்ஞங்களிலே பிழியப்பட்ட ஸோமரஸத்தைப் பருகவும். உன்னுற்றலால் வச்சிராயுதத்தைக் கூர்மை செய்து கொள்ளவும்.

10. இந்திரனே! இரு பலகைகளால் பிழியப்பட்ட ஸோமத்தைப் பருகியவுடன் நீ ஊக்கத்தோடு எழுந்து உன் தாடைகளை அசைத்தாய்.

11 நீ தஸ்யுவை அடித்து அவனைக் கொல்லுங்கால் இந்திரனே! சோதியும் புவியும் உன்னையே பின்பற்றுகின்றன

12. நான் எட்டுத் திசைகளில் செல்வதும் உச்சியிலுள்ள ஒன்பதாவதான சூரியனுக்கு எழுவதும், இந்திரனை அளப்பதற்குக் குறைந்ததும், ருதத்தைப் பற்றுவதுமான இந்த மொழியைக் கற்பிக்கிறேன். 7360

## 77. இந்திரன்

### 697. குருஸுதி காண்வன்

1. சதக்கிரது பிறந்தவுடன் தன் தாயைக் கேட்டான்: உக்கிரர்கள் யார்? புகழுள்ளவர்கள் யார்?

2. அவனுடைய ஆற்றலுள்ள தாய் பதிலளித்தாள்: ஔர்ணவாபனும், அஹீசுவனும் இருக்கிருர்கள். புதல்வனே! இந்தப் பகைவர்களைக் கொல்ல வேண்டும்.



3. விருத்திரரைக் கொல்பவன் அவர்களையெல்லாம் சக்கரத்தின் நாபியிலே அடிக்கப்படும் பற்களைப் போல் அடித்தான். தஸ்யுவைக் கொல்பவன் பலத்தில் உயர்ந்தான்.

4. இந்திரன் ஒரே மூச்சில் ஸோமம் நிறைந்த முப்பது ஏரிகளை உடனே குடித்தான்.

5. அடிவைக்க நிலைகளில்லாத வானுலங்களிலே அறிஞர்களைச் செழிப்பிக்க மேகத்தைப் பிளந்தான். 7365

6. இந்திரன் தன்னுடைய பரந்த சரத்தால் மேகங்களிலிருந்து மழையைச் செலுத்தினான். மானிடர்களுக்குப் பக்குவ ஓதனத்தைத் தந்தான்.

7. இந்திரனே! உன்னுடைய அம்பு நூறு கூறுகளும், ஆயிரம் சிறகுகளுமுள்ளது. அந்த ஒன்றான சரத்தையே நீ நண்பனுகச் செய்து கொள்கிருய்.

8. மகத்தாயும் திறமாயுமுள்ள நீ எங்கள் அவிகளால் செழித்து உன்னுடைய ஆயுதத்தால் உன்னைத் துதிப்பவர்களுக்கும், எங்கள் குழந்தைகளுக்கும், எங்கள் மனைவிகளுக்கும் உணவை அளிக்கச் செல்வத்தை ஏந்தி வரவும்.

9. இந்த மகத்தான மிக்கப் பரவலான வீரச் செயல் உன்னுல் நடத்தப்பட்டன. நீ அவற்றை உன் இருதயத்திலே திரமாய் நிலைப்படுத்தினாய்.

10. நீ தோற்றுவிக்கும் இந்த சலங்களையெல்லாம் உலகத்துக்கு உன்னுல் பிரேரிதமான கம்பீர அடிகளுள்ள விஷ்ணுவான சூரியன் அளிக்கிருன். அவன் நூற்றுக்கணக்கான பசுக்களையும் பாலிலே பக்குவமான ஓதனத்தையுமளிக்கிருன்.

11. உன்னுடைய வில் மிக்கப் பயங்கரமாயிருக்கிறது. வெற்றியுள்ளது. நன்கு செய்யப்பட்டது. பொன்னுல் அலங்கரிக்கப்பட்ட உன்னுடைய அம்பு குறி தவருமலிருப்பது உன்னுடைய போர்க்கோலமுள்ள புஜங்கள் படைக்கலம்

உள்ளவை. அடியோடு தாழ்த்துபவை. அடியோடு துளைப்பவை. 7371

## 78. இந்திரன்

### 698. குருஸுதிகாண்வன்

1. இந்திரனே! எங்களுடைய புரோடாசத்தையும் உணவையுங் கிரகித்து எங்களுக்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பசுக்களை அளிக்கவும்.

2. எங்களுக்குச் சுவைபொருள்களையும், பசுக்களையும், குதிரைகளையும், தைலத்தையும் ஏந்தி வா. அவற்ளுேடு உயர்ந்த பொன்னுபரணங்களையுமளிக்கவும்.

3. மேலும் கர்ணுபரணங்களை ஏந்தி வா. தீரனே மணிகளையளிப்பவனே! நீ புகழுள்ளவன்.

4. உன்னை அன்றி செழிப்பிப்பவன் வேறு எவனுமில்லை. செல்வத்தைப் பகிர்ந்து அளிப்பவனும், நன்கு தருபவனும் இல்லை! சூரனே! உன்னையன்றி வேறு ரீத்விஜனும் இல்லை.

5. இந்திரன் தாழ்த்தப்பட்டான். சக்தன் ஜயிக்கப் பட்டான். அவன் கேட்கிருன். அவன் அனைத்தையும் காண்கிருன். 7376

6. இன்னலாகாமல் அவன் மானிடர்களின் கோபத்தை நீக்குகிருன். அவன் நிந்திக்கப்படுவதற்கு முன்னே, நிந்திப்பவனை நீக்குகிருன்.

7. விருத்திரனைக் கொல்பவனுடைய ஸோமபானம் பருகுபவனுடைய வயிறு யக்ஞத்தலைவன் அளிக்கும் ரஸத்தால் நிரப்பப்படுகிறது.

8. ஸோமத்தைப் பருகுபவனே! உன்னிடம் எல்லாச் செல்வங்களும், சௌபாக்கியங்களும் சேர்ந்திருக்கின்றன.

9. என் விருப்பம் யவத்தையும், பசுக்களையும், பொன்னையும் நாடி உன்னிடம் துரிதமாகிறது. குதிரைகளையும் நாடி அது உன்னிடம் விரைகிறது.



10. இந்திரனே! நான் உன்னைத் துதித்து, கையிலே அரிவாளை ஏந்துகிறேன். மகவானே! அறுத்த அல்லது சேர்ந்த யவத்தை என் முட்டியில் அடங்கும்வரை கைகளை நிரப்பவும். 7381

## 79. ஸோமன்

### 699. கிருத்து பார்கவன்

1. கற்பிப்பவனும், விசுவத்தை ஜயிப்பவனும், பழத்தை விளைவிப்பவனும், ரிஷியும், விப்பிரனும், தடைபடாதவனுமான இந்த ஸோமன் துதியால் போற்றந் தகுந்தவன்.

2. அவன் நக்னமாயிருப்பதைப் போர்த்துகிருன். நோயுள்ள அனைத்தையுங் குணப்படுத்துகிருன். அவனுல் குருடன் காண்கிருன். முடவன் நடக்கிருன்.

3. ஸோமனே! பகைவர்களால் செய்யப்படும் தாழ்மைப்படுத்தும் பகைமையிலிருந்து எங்களை நீக்கி எங்களுக்குப் பரந்த பாலனத்தையளிக்கிருய்.

4. ரிஜிஷினனே! உன் அறிவாலும், ஆற்றலாலும் பகைவனின் வெறுப்பை சோதியிலிருந்தும், புவியிலிருந்தும் விலக்கவும்.

5. விருப்பமுள்ளவர்கள் செல்வத்தை நாடுகிருர்கள். ஈகையினிடம் தானத்துக்குச் செல்கிருர்கள். உன்னுல் மனிதர்கள் தாகித்தவனைத் திருப்தி செய்கிருர்கள். 7386

6. ஸோமன் யக்ஞம் செய்பவனை ஊக்கப்படுத்துகிருன். அதனுல் அவன் பூர்வத்தில் நஷ்டமடைந்த செல்வத்தை அடைகிருன். எஞ்சியுள்ள ஆயுளை நீடித்துக்கொள்கிருன்.

7. ஸோமனே! நீ உத்தம சுகத்தைத் தருபவன். நீ அன்புள்ளவன். உன் செயல்களில் கர்வமில்லாதவன். தவருமலிருப்பவன். எங்கள் இருதயங்களில் இனிமையுடனிருக்கவும்.

8. ஸோமனே! எங்களை நடுக்கப்படுத்தாதே. அரசனே! எங்களை அச்சப்படுத்தாதே. உன் காந்தியால் எங்கள் இருதயங்களைத் தாபப்படுத்தாதே.

9. நான் என் மனையிலே தேவர்களின் துட்டப் பகைவர்களைக் காணுங்கால் எங்களை வெறுக்கும் அவர்களை அரசனே! நீ விலக்குவாயாக. பொழிபவனே! எங்களைத் துன்புறுத்துபவர்களை விலக்கவும். 7390

## 80. இந்திரன்

### 700. ஸோதனுடைய புதல்வன் ஏகத்யூ

1. சதக்கிரதுவே! நான் உன்னை அன்றி வேறு எவனையும் சுகமளிப்பவன் எனக்கருதவில்லை. இது உண்மை. இந்திரனே! நீ எங்களை சுகப்படுத்தவும்,

2. எதிர்ப்பதர்க்காக நீ பூர்வத்திலே எங்களை வெற்றி பெறப் பாலித்தாய். இந்திரனே! நீ எங்களை சுகப்படுத்தவும்.

3 இப்பொழுது என்ன!- ஏழையை ஊக்கப்படுத்தும் நீ, பொழிபவனைப் பாலிக்கிறாய். இந்திரனே! நீ எங்களைப் பலப்படுத்தாயோ ?

4. இந்திரனே! எங்கள் தேரைப் பாலிக்கவும். வச்சிராயுதனே! இப்பொழுது பின்னாலிருக்கும் தேரை முற்படுத்தவும்.

5. எழுந்திருக்கவும்! ஏன் அமைதியாய் அமர்ந்திருக்கிறாய். எங்கள் தேரை முற்படுத்தவும். ஜயச் சிறப்பை அருகில் செலுத்தவும். 7395

6. ஜயத்தை நாடும் எங்கள் தேரைப் பாலிக்கவும். உனக்கு எதைச் செய்யவும் சுலபமாயிருக்கிறது. எங்களை நன்கு ஜயிப்பவர்களாகச் செய்யவும்.

7. இந்திரனே! நீ போரிலே திரமாயிருக்கவும். நீ கோட்டையாயிருக்கிறாய். பகைவர்களை நீக்கும் உன்னிடம் உரிய சமயத்திலளிக்கப்படும் இந்த யக்ஞம் வருகிறது.



8. எங்களுக்கு நிந்தை தோன்றாமலிருக்க. நோக்கம் தூரமாயிருக்கிறது. அங்கு செல்வம் குவிந்திருக்கிறது. பகைவர்கள் விலக்கப்படுவார்களாக.

9. நீ யக்ஞாருகமான நான்காவது துரீய நாமத்தை ஏந்துங்கால் அதை நாங்கள் விரும்புகிறோம். பிறகு நீ எங்களைப் பாலகனாக ஏந்திச் செல்லுகிறாய்.

10. ஏகத்யு, அமிருதர்களான உங்களைப் போற்றினான். அவன் தேவர்களையும் தேவிகளையும் இன்புறுத்தினான். போற்றுவதற்குரிய தானத்தை அவனுக்கு அளிக்கவும். துதியால் செல்வனான அவன் காலையில் சீக்கிரம் வருவானாக. 7400

## 81. இந்திரன்

### 701. குருஸுதி காண்வன்

1. இந்திரனே! மகத்தான கையுள்ள நீ எங்களுக்காக உனது வலது கையால் போற்றத்தகுந்ததும், விரும்பத் தகுந்ததுமான செல்வத்தைச் சேகரிக்கவும்.

2. நாங்கள் உன்னைப் பல செயல்களை நடத்துபவனும், பல தானங்களை அளிப்பவனும், பல செயல்களின் தலைவனும், பரந்த பரிமாணமுள்ளவனும், பாலனங்கள் இருப்பவனுமாக அறிகிறோம்.

3. சூரனே! அளிக்க விரும்பும் உன்னைத் தடுக்கும் தேவர்களோ மனிதர்களோ இல்லை. பயங்கர விருஷபத்தை யார் தடுப்பார்கள்?

4. இங்கு விரைந்து வாருங்கள். நாம் செல்வத்தின் தலைவனும், தானே துலங்குபவனுமான இந்திரனைப் போற்றுவோமாக. எவனும் செல்வத்தால் எங்களைத் துன்புறுத்தாமலிருப்பானாக.

5. இந்திரன் துவக்க கானத்தைப் பாடுவானாக. உபகானத்தை இசைப்பானாக. எழும் ஸாமத்தைக் கேட்பானாக. செல்வமுள்ள அவன் எங்களை ஏற்பானாக. 7405

6. உன்னுடைய வலது கையாலும் இடது கையாலும், செல்வங்களை அளிக்கவும். இந்திரனே! எங்களைச் செல்வத்திலிருந்து விலக்காதே.

7. இங்கு வா! தீரனே! சனங்களின் நடுவே மிக்கக் கருமியாயிருப்பவனுடைய செல்வத்தை உன்னுடைய தீர மனத்தால் எங்களிடம் ஏந்தி வரவும்.

8. இந்திரனே! அறிஞர்களால் பெருகுவதற்குரிய செல்வத்தை எங்களுக்குத் தாராளமாயளிக்கவும்.

9. உன்னுடைய இன்புறுத்தும் செல்வங்கள் எல்லாம் எங்களிடம் துரிதமாய்த் தோன்றுக. மனிதர்கள் பல விருப்பங்களோடு உன்னை உடனே போற்றுகிறார்கள் 7409

## 82. இந்திரன்

### 702. குஸீதீ காண்வன்

1. விருத்திரனைக் கொல்பவனே! யக்ஞத்திலே மதமளிக்கும் ஸோமரஸங்களுக்கு நீ தூரத்திலிருந்தோ அருகிலிருந்தோ துரிதமாகவும்.

2. இங்கு வா. மதப்படுத்தும் தீவிர ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. நீ பருகவும். நீ வழக்கமாய்ப் பருகுவது போல் தீரமாய்ப் பருகவும்.

3. இந்த உணவால் நீ இன்புறவும். அது உன் விருப்பத்தைத் திருப்தி செய்க. அது உன் இருதயத்தை இன்புறுத்துக.

4. பகைவரில்லாத நீ இங்கு வா. இந்த உலகில் இங்கு அருகிலே சோபிப்பிக்கப்படும் இந்த யக்ஞத்திலே துதிகளுக்கு நீ ஒளியுள்ள சுவர்க்கத்திலிருந்து அழைக்கப் படுகிறாய்.

5. இந்திரனே! உனக்கு இந்த ஸோமம் கற்களால் பிழியப்படுகிறது பாலோடு சேர்க்கப்படுகிறது. உன்னுடைய மதத்துக்காக இது மங்களகரமாயளிக்கப்படுகிறது. 7414



6. இந்திரனே! என்னுடைய அழைப்பை ஆதரவோடு கேட்கவும். பாலோடு கலக்கி இப்பானத்தைப் பருக வரவும். திருப்தியாகவும்.

7. இந்திரனே! கிண்ணங்களிலும், கலசங்களிலும் ஊற்றப்பட்டுள்ள எல்லா ஸோமத்தையும் பருகவும். நீ தலைவனாயிருக்கிறாய்.

8. சலங்களிலே சந்திரனைப்போல் பாத்திரங்களிலே புலனாகும் எந்த ஸோமத்தையும் பருகவும். நீ தலைவனா-யிருக்கிறாய்.

9. தடைபடாமலிருந்ததும், வானிலிருந்த கந்தர்வர்-களிடமிருந்து பருந்தால் தன் கால்களால் ஏந்தப்பட்டு வந்ததுமான ஸோமத்தை யெல்லாம் நீ பருகவும். நீ தலைவனாயிருக்கிறாய். 7418

## 83. விசுவே தேவர்கள்

### 703. குஸீதீ காண்வன்

1. நாங்கள் எங்களுக்காகவும், எங்கள் பாலனத்துக் காகவும் விருப்பங்களை வர்ஷிக்கும் தேவர்களின் மகத்தான பாலனத்தை அவர்களிடம் வேண்டுகிறோம்.

2. வருணனும், மித்திரனும், அரியமானும் எப்பொழுதும் எங்களுடைய நண்பர்களாயிருப்பார்களாக. அறிஞர்களான அவர்கள் எங்களைச் செழிப்பிப்பவர்களா-யிருப்பார்களாக.

3. ருதத்தின் ஸாரதிகளே! மிக்கப் பரந்திருக்கும் பல பகைப் படைகளிடமிருந்து சலங்களைக் கடந்து செல்லும் கப்பல்களைப் போல் எங்களைக் கடத்திச் செல்வீர்களாக.

4. அர்யமானே! எங்களுக்குச் செல்வம் தோன்றுக. வருணனே! போற்றத்தகுந்த செல்வம் தோன்றுக. நாங்கள் செல்வத்தையே வேண்டுகிறோம்.

5. பேரறிஞர்களும் பகைவர்களை நீக்குபவர்களுமான நீங்கள், செல்வத்தின் தலைவர்களாயிருக்கிறீர்கள்.

ஆதித்தியர்களே! எங்களுக்குத் தீமையால் வரும் செல்வம் தோன்ருமலிருக்க. 7423

6. தேவர்களே! உத்தம தானமுள்ளவர்களே! நாங்கள் மனையில் வசித்தாலும், அல்லது எங்கேயாவது செல்ல வழியில் சென்ருலும் நாங்கள் உங்களை அவிகளால் செழிப்பிக்கப்பட அழைக்கிருேம்.

7. இந்திரனே! விஷ்ணுவே! அசுவினிகளே! மருத்துக்களே! உங்களுடைய பந்துக்களான எங்களைப் போற்றுங்கள்.

8. உத்தம தானமுள்ளவர்களே! பூர்வத்திலிருந்து எங்களுடைய சகோதரத் தன்மைகளையும், தாயின் கருப்பாசயத்திலே எங்களுடைய பாந்தவத்தையும் நாங்கள் புலப்படுத்துகிருேம்.

9. உத்தம தானமளிப்பவர்களே! நீங்கள் இந்திரனைத் தலைவனுக அடைந்து அதிகாலையிலே வாருங்கள். நான் மீண்டும் மீண்டும் உன்னைப் போற்றுகிறேன். 7427

## 84. அக்கினி

### 704. உசனுகாவ்யன்

1. நான் உங்களுடைய மிக்க அன்பு மிகுந்த அதிதியும், நண்பனைப் போல் பிரியமுள்ளவனும், தேரைப்போல் செல்வத்தை ஏந்தி வருபவனுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

2. நான் மானிடர்களிடையே இருவித செயல்களுக்கு, தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட அக்கினியை ஏத்துகிறேன்.

3. மிக்க இளைஞுன அக்கினியே! அவியளிக்கும் மனிதர்களைப் பாலிக்கவும். எங்கள் துதிகளைக் கேட்கவும். நீயாகவே எங்கள் புதல்வனைப் பாலிக்கவும்.

4. தேவனே! அக்கினியே! அங்கிரஸனே! ஆற்றலின் மகனே! பகைவர்களிடம் உத்தமனுய் கோடிக்கும் உனக்கு எம்மொழியால் நான் துதியைக் கூறுவேன்?



5. ஆற்றலின் மகனே! நாங்கள் எந்த யக்ஞுஞ் செய்பவனுடைய அவிகளால் இசைந்த மனத்தோடு உன்னைப் போற்றுவோம். நான் எப்பொழுது உனக்கு இந்தத் துதியைக் கூறுவேன்? 7432

6. எங்கள் துதிகளையெல்லாம் எங்களுக்கு உத்தம மனைகளையும் உணவுள்ள செல்வச் செழிப்பையுமளிக்கச் செய்யவும்.

7. அக்கினியே! மனையின் பதியும், பசுச் செல்வத்தையளிக்கும் துதியுள்ளவனுமான நீ, எவனுடைய பல செயல்களை இன்புறுத்துகிருய்.

8. யக்ஞத் தலைவர்கள் தங்கள் மனைகளிலே வினைத்திட்பனும், போர்களிலே முற்படுபவனுமான அக்கினியை ஒளிப்படுத்தி போற்றுகிருர்கள்.

9. அக்கினியே! மனையிலே எல்லாத் திறப்பாலனங்களோடிருப்பவனும், எவனுலும் துன்பப்படாமலிருப்பவனும், பகைவர்களைத் துன்புறுத்துபவனுயிருப்பவனும் உன்னைத் துதிப்பவனுயிருக்கிருன். அவன் வீரப் புதல்வர்களோடு செழிக்கிறன். 7436

## 85. அசுவினிகள்

### 705. கிருஷ்ண ஆங்கிரஸன்

1. அசுவினிகளே! நாஸத்தியர்களே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக என்னுடைய அழைப்புக்கு வாருங்கள்.

2. அசுவினிகளே! நீங்கள் மதமளிக்கும் இந்த ஸோமத்தைப் பருக என்னுடைய இந்த ஸ்தோமத்தை, என்னுடைய இந்த அழைப்பைச் செவியுறுங்கள்.

3. யக்ஞச் செல்வர்களான அசுவினிகளே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக கிருஷ்ணன் உங்களை அழைக்கிருன்.

4. தலைவர்களே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக உங்களைத் துதிக்கும் துதிப்பவனுன கிருஷ்ணனுடைய அழைப்பைச் செவியுறுங்கள்.

5. நீங்கள் மதப்படுத்தும் ஸோமத்தைப் பருக தலைவர்களான நீங்கள் உங்களைத் துதிக்கும் அறிஞனுக்கு எதிர்ப்பற்ற மனையை அளியுங்கள். 7441

6. அசுவினிகளே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக இங்ஙனம் உங்களைத் துதிக்கும் அளிப்பவனுடைய மனைக்கு வாருங்கள்.

7. வர்ஷிக்கும் செல்வமுள்ளவர்களே! நீங்கள் மதப்படுத்தும் ஸோமத்தைப் பருக உங்களுடைய திடமாய்க் கட்டப்பட்டுள்ள தேரிலே கர்தபத்தை இணையுங்கள்.

8. அசுவினிகளே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக உங்களுடைய முக்கவசங்களுள்ள, முப்பீடங்களுள்ள தேரிலே இங்கு வாருங்கள்.

9. நாஸத்தியர்களே! அசுவினிகளே! நீங்கள் மதமளிக்கும் ஸோமத்தைப் பருக என்னுடைய துதிகளுக்குச் சீக்கிரம் வாருங்கள். 7445

## 86. அசுவினிகள்

### 706. கிருஷ்ணனுடைய புதல்வன் விசுவகன் அல்லது கிருஷ்ணன்

1. நீங்கள் பகையழிப்பவர்கள்; மருத்துவர்கள்; சுகத்தைத் தருபவர்கள்; தட்சனுடைய துதியையடைந்தீர்கள். விசுவகன் தன் உயிரைப் பாலித்துக்கொள்ள உங்களை அழைக்கிருன். நம்முடைய நட்புக்களை நீக்காதீர்கள். வாருங்கள். என்னை விடுவியுங்கள்.

2. பூர்வத்திலே ஒருமுறை விமனன் உங்களை எப்படிப் போற்றினுன்? அவன் உத்தம செல்வத்தை அடைய அவனுக்கு நீங்கள் அறிவைத் தந்தீர்கள். விசுவகன் தன் உயிரைப் பாலித்துக்கொள்ள உங்களை அழைக்கிருன். நம்முடைய நட்புக்களை நீக்காதீர்கள். வாருங்கள்; என்னை விடுவியுங்கள்.



3. பலரை இன்புறுத்துபவர்களே! நீங்கள் விஷ்ணுபுவுக்கு இந்த ஐசுவரியத்தை, உத்தம செல்வத்தை அடையத் தந்தீர்கள். நம்முடைய நட்புக்களை நீக்காதீர்கள். என்னை விடுவியுங்கள்.

4. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காகச் செல்வத்தை அனுபவிப்பவனும், ஸோமமுள்ளவனும், இப்பொழுது தூரத்திலிருப்பவனுமான அந்த சூரனை அழைக்கிறோம். அவனுடைய ஸுமதியானது தந்தையான விசுவகனுடைய துதியைப்போல் மிக்க இனிப்பாயிருக்கிறது. நம்முடைய நட்புக்களை நீக்காதீர்கள். வாருங்கள். என்னை விடுவியுங்கள்.

5. தேவனுன ஸவிதா மாலையிலே தன் கதிர்களுக்கு சத்தியத்தால் சாந்தமளிக்கிருன். அவன் சத்தியத்தின் கொம்பை-ரசிமிகளை-காலையிலே விரித்துப் பரத்துகிருன். போரை நாடும் பகைவர்களின் மகத்தான படையை சத்தியம் ஜயிக்கிறது. ஆதலால் நம்முடைய நட்புக்களை நீக்காதீர்கள். வாருங்கள். என்னை விடுவியுங்கள். 7450

## 87. அசுவினிகள்

### 707. வசிஷ்டனுடைய புதல்வனுன த்யும்நீகன், ஆங்கிரஸப் பிரியமேதன் அல்லது கிருஷ்ண ஆங்கிரஸன்

1. அசுவினிகளே! த்யும்நீகன் ஸ்தோத்திரத்தைக் கூறுகிருன். அது மழைகாலத்தில் நிறைந்த கிணற்றைப் போல் நிறைந்து செழிப்பிக்கிறது. இங்கு வாருங்கள். சிறப்பான யக்ஞத்திலே ஸோமம் பிழியப்படுங்கால் தோத்திரம் இரஸத்தினிடம் பிரியமுடனுகிறது. தலைவர்களே! குளத்திலே பருகும் இரு கௌர மிருகங்களைப்போல் ஸோமத்தைப் பருகுங்கள்.

2. அசுவினிகளே! இரஸம் பாத்திரங்களில் பாயுங் கால் மதப்படுத்தும் ஸோமத்தைப் பருகுங்கள். தலைவர் களே! நீங்களே தருப்பையின் மீது அமருங்கள். வழிபடு பவனுடைய மனையிலே இன்பமாகி அவியோடு ஸோமான் னத்தை அருந்துங்கள்.

3. வழிபடுபவர்கள் உங்களை உங்களுடைய எல்லாப் பாலனங்களோடுமழைக்கிறார்கள். சீர்படுத்திய தருப்பை யுள்ளவனுடைய மனையிலே தேவர்களால் பிரியப்படும் அயக்ஞத்துக்குக் காலையில் வாருங்கள்.

4. அசுவினிகளே! மதப்படுத்தும் ஸோமத்தைப் பருகுங்கள். மகிழ்ச்சியோடு தருப்பையின்மீது அமருங்கள். ஸோமத்தால் செழித்து நீங்கள் சோதியிலிருந்து எங்களு டைய துதிகளுக்கு ஏரிக்குச் செல்லும் இரு கௌர மிருகங்களைப் போல் வாருங்கள்.

5. அசுவினிகளே! உங்களுடைய வண்ணக் குதிரை களோடு வாருங்கள். தஸ்ரர்களே! பொன்தேரில் வளர் பவர்களும், சௌபாக்கியத் தலைவர்களும், சத்தியத்தைப் பாலிப்பவர்களுமான நீங்கள் ஸோமத்தைப் பருகுங்கள்.

6. உங்களைத் துதிக்கும் அறிஞர்களான நாங்கள் பல முடனுக உங்களை அழைக்கிறோம். அசுவினிகளே! அழகிய சலனமுள்ளவர்களும், பகைவர்களை அழிப்பவர் களும், பல உத்தம செயல்களுமுள்ள நீங்கள் எங்கள் துதி களைக் கேட்டவுடன் சீக்கிரம் வாருங்கள். 7456

## 88. இந்திரன்

### 708. நோதா கோதமன்

1. நாங்கள் பகைவர்களை ஜயிப்பவனும், துக்கத்தை நீக்குபவனும், ஸோமத்திலே இன்புறுபவனும், அழகனுயு முள்ள இந்திரனுக்குத் துதிகளோடு தோத்திரத்தைக் கொட்டில்களிலுள்ள கன்றுகளுக்கு அரவமிடும் பசுக்களைப் போல் கூறுகிறோம்.



2. நாங்கள் மேகங்களால் சூழப்பட்ட மலையைப்போல் ஆற்றல்களால் சூழப்பட்டவனும், பலரைத் தாங்குபவனு மான ஒளியுள்ளவனும், ஈகையனுமான இந்திரனை வேண்டு கிறோம். நாங்கள் அவனிடம் நூற்றுக்கணக்கான ஆயிரக் கணக்கான செல்வங்களும் பசுக்களுமுள்ள உணவை விரும்புகிறோம்.

3. இந்திரனே! எந்தப் பெரிய திடமான மலையும் உன்னைத் தடுக்காது. என்னைப்போல் வழிபடுபவனுக்குச் செல்வமளிக்கும். உன்னை எவனும் தடைபடுத்த இயலாது.

4. நீ உன் வீரச்செயல்களாலும் சக்தியாலும் போர் வீரனாயிருக்கிறாய். நீ உன் செயலாலும், ஆற்றலாலும் எல்லா சீவர்களையும் ஜயிக்கிறாய். கோதமர்களால் கற்பிக் கப்பட்ட இந்தத் தோத்திரம் பாலனத்துக்காக உன்னை இங்கு நிகழ்த்துகிறது.

5. நீ உன்னுடைய ஆற்றல்களால் சோதியின் எல்லை களைக் கடக்கிறாய். புவியின் இடம் உன்னை அடக்காது. இந்திரனே! எனக்கு சுவதாவை அளிக்க விரும்பு.

6. மகவானே! நீ வழிபடுபவனுக்குச் செல்வத்தை அளிக்குங்கால் உன் தானத்தை எவனும் தடுக்க இயலாது. எங்களுக்குத் தாராளமாய்ச் செல்வத்தைச் செலுத்தும் நீ, தாங்கள் உணவைப்பெற எங்கள் துதியை அறிந்து கொள் ளவும். 7462

## 89. இந்திரன்

### 709. நிருமேதனும், புருமேதனும் - அங்கிரஸ வம்சம்.

1. துதிப்பவர்களே! விருத்திரர்களை அழிக்கும் எந்த பிருஹத்ஸாமனால் சத்தியத்தைப் பாலிப்பவர்கள் தேவ னுக்காக ஸதா விழித்திருக்கும் தேவ சோதியைத் தோற்று வித்தார்களோ அந்த ஸாமனை இந்திரனுக்குப் பாடுங்கள்.

2. பழிச்சொல்லை நீக்கும் இந்திரன் பழிச்சொற்களை நீக்குகிறான். பிறகு புகழோடு எங்களிடம் வந்தான். மிக்க

ஒளியுள்ள இந்திரனே! தேவர்கள் மருத்துக்களின் தலைவனான உன் நட்பைப்பெற இயங்கினார்கள்.

3. மருத்துக்களே! துதிப்பவர்களே! மகானான இந்திரனுக்கு ஸாமத்தைப் பாடுங்கள். விருத்திரனைக் கொல்லும் சதக்கிரது தன்னுடைய நூறு கூர்களுள்ள வச்சிரத்தால் விருத்திரனை அழிப்பானாக.

4. தீர மனமுள்ள உன்னிடம் மிக்க உணவுண்டு. அதைத் தீரமாய் எங்களிடம் செலுத்து. எங்கள் தாய்மார்களான சலங்கள் புவியின்மீது உக்கிரமாய்ப் பரவுக. விருத்திரனை அழிக்கவும். அனைத்தையும் ஜயிக்கவும்.

5. மகவானே! முந்துபவன் இல்லாத நீ, விருத்திரனைக் கொல்லப் பிறந்தபோது புவியைப் பரத்தி, திடப் படுத்தினாய். சோதி உலகைத் தாங்கினாய். 7467

6. பிறகு உனக்காக யக்ஞம் தோன்றிற்று. பிறகு இன்புறுத்தும் தோத்திரமும் கற்பிக்கப்பட்டது. நீ பிறந்த எவனையும், பிறக்கப்போகும் எவனையும், அனைவரையும் முந்துகிறாய்.

7. நீ அப்பக்குவப் பசுக்களிலே பக்குவப்பாலைத் தோற்றுவித்தாய். நீ சூரியனை சோதிக்கு ஏறச்செய்தாய். தாபப்படுத்தப்படும் பாலைப்போல் சுத்த ஸாமகானங்களால் அவனைத் தாபப்படுத்துங்கள். பாட்டால் போற்றத்தகுந்த அவனை விரும்பத்தகுந்த பிருஹத் ஸாமனால் பாடுங்கள். 7469

## 90. இந்திரன்

### 710. நிருமேதன், புருமேதன் - ஆங்கிரஸர்கள்

1. விருத்திரர்களைக் கொல்பவனும், வலிய சத்துருக்களை அழிப்பவனும், துதியாருகனும், எல்லாப்போர்களிலும் அழைக்கத் தகுந்தவனுமான இந்திரன், எங்களுடைய துதிகளையும் யக்ஞங்களையும் போற்றுவானாக.

2. நீ செல்வங்களைத்தரும் முதல்வன், நீ ஸத்தியன், நீ வழிபடுபவர்களைத் தலைவர்களாகச் செய்கிறாய். மகத்தான செல்வங்களின் தலைவனும், ஆற்றலின் மகத்தான புதல்வனுமான உன்னிடம், தகுந்த செல்வங்களை நாங்கள் வேண்டுகிறோம்.



3. இந்திரனே! துதிகளின் இலக்கான உனக்கு அதிக்கிரமிக்காத துதிகள் கூறப்படுகின்றன, பொன் குதிரைகள் உள்ளவனே! உனக்காக எங்களால் தியானிக்கப் பட்ட இந்தத் தகுதியான துதிகளை நீ விரும்பவும்,

4. மகவானே! நீ ஸத்தியன், தாழ்த்தப்படாமலுள்ள நீ பல சத்துருக்களைத் தாழ்த்துகிறாய், மிக்க வலியனே! வச்சிரமேந்துபவனே! ஈகையனிடம் செல்வத்தைச் செலுத்தவும்.

5. சக்தியின் தலைவனே! இந்திரனே! அளிக்கப் பட்ட ஸோமமுள்ள நீ, புகழுள்ளவன். நீ ஒருவனாகவே உன்னுடை மனிதர்களைப் பாலிக்க வச்சிராயுதத்தால் எவருடைய எதிர்ப்பும் இல்லாமலிருந்த பகைவர்களை அழிக்கிறாய்.

6. ஆற்றலுள்ளவனே! பேரறிஞனே! நாங்கள் உன்னிடம் செல்வத்தைப் பாகத்துக்குரியரைப் போல் வேண்டுகிறோம். இந்திரனே! சோதியிலே உன் இடம் உன் புகழைப் போல் பரந்திருக்கிறது. உன்னுடைய வாழ்த்துக்கள் எங்களை நிரப்புக. 7475

## 91. இந்திரன்

### 711. ஆத்திரேயி—அபாலை

1. சலத்துக்குச் சென்ற ஒரு யுவதி வழியிலே ஸோமத்தைப் பார்த்தாள். அவள் அதை எடுத்து மனைக்குச் செல்லுங்கால் சொன்னாள் : நான் இந்திரனுக்காக உன்னைப் பிழிவேன்; நான் சக்கரனுக்காக உன்னைப் பிழிவேன்.

2. வீரனும், மிக்க ஒளி விளங்குபவனும், வீடு வீடாகச் செல்பவனுமான நீ, என் பற்களால் கடித்து அரைக்கப் பட்ட இந்த ஸோமரஸத்தை யவப்பொறிகளோடும், கரம்

பைகளோடும், புரோடாசங்களோடும் துதிகளோடும் பருகவும்.

3. நாங்கள் உன்னை அறிய விரும்புகிறோம். ஆனால் இங்கு நீ எங்கள் மனைக்கு வந்திருக்கிறாய் என்பதை அறியவில்லை. ஸோமமே! நீ இந்திரனுக்கு முதலில் மெது வாய், பிறகு வேகமாய்ப் பாயவும்

4. இந்திரன் எங்களை அடிக்கடி பலப்படுத்துவானாக. அவன் எங்களுக்கு அதிகமாகச் செய்வானாக. அவன் அடிக்கடி எங்களைச் செல்வப்படுத்துவானாக. எங்கள் கணவர்களால் அடிக்கடி வெறுக்கப்பட்டவர்களும் அவர்களிடமிருந்து நீங்கள் வற்புறுத்தப்பட்டவர்களுமான நாங்கள் இந்திரனோடு சேர்வோமாக.

5. இந்த மூன்று இடங்களையும் செழிப்பிக்கவும். என் தந்தை பின் வழுக்கைத் தலையையும், பாழான நிலத்தையும், என் அங்கத்தையும் செழிப்பிக்கவும். 7480

6. எங்களுடைய தந்தையின் இந்த நிலத்தையும், என்னுடைய இத்தேகத்தின் அதோ பாகத்தையும், என் தந்தையின் தலையையும் செழிப்பித்து வளரச் செய்யவும்.

7. சதக்கிரதுவே! நீ அபாலையைத் தேரின் துளையிலே, சகடத்தின் துளையிலே மும்முறை சுத்தப்படுத்தினாய். அவனுக்குச் சூரியனைப்போல் பிரகாசிக்கும் சருமத்தைத் தந்தாய். 7482

## 92. இந்திரன்

712. சுருதகக்ஷன் அல்லது சுகக்ஷன் அங்கிரஸ வம்சம்

1. அறிஞர்களே! பகைவனை ஜயிக்கும் சதக்கிரதுவும் மானிடர்களுக்குச் செல்வத்தையளிப்பவனும், நீங்கள் தரும் ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரனைப் பாடுங்கள்.

2. பலரால் அழைக்கப்படுபவனும், பலரால் போற்றப் படுபவனும், பாடுவதற்கருகனும், நித்தியன் எனப் புகழப் படுபவனுமான தேவனையே இந்திரன் எனப் பாடுங்கள்.



3. கூத்தனான இந்திரன் எங்களுக்கு மிக்க பலத்தைத் தருபவனாயிருப்பானாக. மகானான அவன் அதை எங்கள் அருகில் தருவானாக.

4. யக்ஞத்திலே ஊக்கமாயுள்ள ஸுதக்ஷனால் அளிக்கப்பட்டதும், யவத்தோடு பக்குவப்பட்டதுமான ஸோமரஸத்தை இந்திரன் பருகினான்.

5. இந்திரன் ஸோமத்தைப் பருக அவனைப் போற்றுங்கள். இதுதான் அவனைப் பலப்படுத்துகிறது. 7487

6. தேவன் மதமளிக்கும் இரஸங்களைப் பருகி ஸோம பலத்தால் எல்லா உலகங்களையும் ஜயித்தான்.

7. பலரை ஜயிப்பவனும், உங்கள் துதிகளிலே பரவு பவனுமான இந்திரனை நம்முடைய பாலனத்துக்காக இங்கு இயக்கவும்.

8. எதிர்ப்பற்றவனும், துன்பப்படாதவனும், தீரனும், ஸோமத்தைப் பருகுபவனும், தடைபடாத செயல்களுள்ள வனுமான தலைவனை இங்கு இயக்கவும்.

9. துதியாருகனே! அனைத்தையும் அறியும் நீ, அடிக்கடி எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும், பகைவர் களின் செல்வத்தால் எங்களைப் பாலிக்கவும்.

10. இந்திரனே! நீ அங்கிருந்து நூறு ஆற்றல்களை யும், ஆயிரம் ஆற்றல்களையும் தரும் உணவோடு எங்களிடம் வரவும். 7492

11. சக்கரனே! செயலாளர்களான நாங்கள் செயல் களில் இயங்குவோமாக. வச்சிராயுதனே! மலைகளைப் பிளப்பவனே! நாங்கள் உன்னுடைய குதிரைகளால் போரில் ஜயிப்போமாக.

12. சதக்கிரதுவே! நாங்கள் எங்கள் துதிகளால் உன்னைப் புற்களால் பசுக்களைத் திருப்தி செய்யும் இடையனைப்போல் இன்புறுத்துகிறோம்.

13. சதக்கிரதுவே! எல்லா மானிடத் தன்மைகளும்

விருப்பத்தால் இயங்குகின்றன. வச்சிராயுதனே! நாங்களும் விருப்பங்களைப் பற்றுகிறோம்.

14. ஆற்றலின்மைகளை மானிடர்கள் தங்கள் விருப்பங்களைக் கூறிக்கொண்டு உன்னில் இன்பமாய் நிலைக்கிறார்கள். இந்திரனே! உன்னை முந்துபவன் எவனுமில்லை.

15. வர்ஷிப்பவனே! உன்னுடைய உதாரத்தன்மையுள்ளதும், ஆனால் பகைவர்களைப் பயமுறுத்துவதும், பலரைப் பாலிப்பதுமான செயல்களால் எங்களைப் பாலிக்கவும். 7497

16. இந்திரனே! சதக்கிரதுவே! ஸோமத்தின் மிக்கச் சிறப்புள்ள மதத்திலே நீ இன்புறுவதுபோல் எங்களை இன்புறுத்தவும்.

17. இந்திரனே! மிக்கப் பரந்த புகழுள்ளதும், உன் பகைவர்களை மிக்க அழிப்பதும், உன் திறத்தை மிக்க அதிகப்படுத்துவதுமான அந்த ஸோமத்திலே நீ இன்புறுவதுபோல் எங்களை இன்புறுத்தவும்.

18. வச்சிராயுதனே! பகைவர்களை அழிப்பவனே! சத்தியனும், ஸோமத்தைப் பருகுபவனுமான உன்னால் வழிபடுபவர்களுக்கெல்லாம் அளிக்கப்படும் செல்வத்தை நாங்கள் அறிகிறோம்.

19. மதமுள்ள இந்திரனுக்குப் பொழியப்பட்ட ஸோமத்தை எங்கும் எங்களுடைய மொழிகள் போற்றுக. வழிபடுபவர்களும் அனைவராலும் போற்றப்படும் ஸோமத்தைப் போற்றுவார்களாக.

20. எவனில் எல்லாச் சிறப்புகளும் இருக்கின்றனவோ, எவனில் இணைந்திருக்கும் ஏழு அறிஞர்கள் இன்புறுகிறார்களோ, அவனை - இந்திரனை - நாங்கள் ஸோமபானத்துக்கு அழைக்கிறோம். 7502

21. தேவர்கள் திரிகத்ருக தினங்களிலே சோதியைப் புலப்படுத்தும் யக்ஞத்தைப் புலப்படுத்தினார்கள். எங்களுடைய துதிகள் அதைச் செழிப்பிக்க.



22. ஸோமங்கள் உன்னிடம் கடலுக்குச் செல்லும் நதிகளைப்போல் பாய்க. இந்திரனே! உன்னை முந்துபவன் எவனுமில்லை.

23. இந்திரனே! வர்ஷிப்பவனே! நீ உன்னுடைய மகிமையால் ஸோமரஸத்தைப் பருகினாய். அது உன் உதிரத்தினுள் பரவுகிறது.

24. விருத்திரனைக் கொல்பவனே! இந்திரனே! ஸோமம் உன் உதிரத்துக்குப் போதுமானதாகுக. ஸோமத் திவலைகள் உன் பல அங்கங்களுக்குப் போதுமானதாகுக. ஸோமத் திவலைகள் உன் பல அங்கங்களுக்குப் போதுமானவையாகுக.

25. சுருதகக்ஷன் குதிரைக்காகவும், பசுவிற்காகவும் இந்திரனுடைய மனைக்காகவும், பாடுகிறான். 7507

26. எங்களுடைய ஸோமரசங்கள் பொழியப்பட்டவுடன் நீ அவற்றைப் பருகுவதற்கு வல்லவனாயிருக்கிறாய். ஈகையான உனக்கு அவை போதுமானவையாயிருக்க.

27. வச்சிராயுதனே! தூரத்திலிருந்தால் எங்களுடைய தோத்திரங்கள் உன்னிடம் சேர்க. நாங்கள் உன்னிடம் மிகுந்த செல்வத்தை அடைவோமாக.

28. நீ வீரப்பகைவர்களையே அழிக்க விரும்புகிறாய் நீ சூரன். நீ போரிலே தீரனாயிருக்கிறாய். உன்னுடைய மனம் போற்றத் தகுந்தது.

29. மிக்கச் செல்வமுள்ளவனே! உன்னை வழிபடும் அனைவராலும் உன் தானம் பற்றப்படுகின்றன. ஆதலால் இந்திரனே! நீ என்னுடைய நண்பனாயிருக்கவும்.

30. செல்வபதியே! நீ சோம்பலாயுள்ள அறிஞனைப் போலிருக்காதே. பொழியப்பட்டு பாலோடு கலக்கப்பட்ட ஸோமத்தைப் பருகி நீயாகவே இன்பமாகவும். 7512

31. இந்திரனே! பதுங்கி பயமுறுத்துபவர்கள் எங்களை இரவில் தடைபடுத்தாமலிருப்பார்களாக. நாங்கள் உன்னைப் பாலகனாக அடைந்து அவர்களை அழிப்போமாக.

32. இந்திரனே! நாங்கள் எங்கள் பாலகனாக உன்னை அடைந்து எங்கள் பகைவர்களுக்குப் பதிலளிப்போமாக. நீ எங்களுக்கும் நாங்கள் உனக்குமாகிறோம்.

33. இந்திரனே! உன்னுடைய நண்பர்களும், காயகர்களும் உன்னையே விரும்பி அடிக்கடி உன் துதியையே கூறி உன்னையே போற்றுகிறார்கள். 7515

## 93. இந்திரன்

### 713. ஸுகக்ஷன் ஆங்கிரஸன்

1. சூரியனே! விருஷபனும், மிக்க அளிப்பவனும், செல்வத்தால் சிறப்புள்ளவனும், மனிதர்களுக்கு நலத்தைச் செய்பவனுமான நீ இந்திரனுடைய யக்ஞத்திலே எழுகிறாய்.

2. எவன் தன்னுடைய புஜபலத்தால் 99 புரங்களை இடித்தான்? விருத்திரனைக் கொன்றான்? அஹியை அடித்தான்?

3. எங்களுடைய மங்கள நண்பனான இந்திரன் எங்களுக்குக் குதிரைகளின், பசுக்களின், யவத்தின் செல்வத்தைப் பால் பெருகும் பசுவைப்போல் பொழிவானாக.

4. சூரியனே! விருத்திரனைக் கொல்பவனே! நீ இன்று எந்தப் பொருளையெல்லாம் பார்த்து எழுகிறாயோ, இந்திரனே அப்பொருள் எல்லாம் உன் வசத்தில் இருக்கிறது.

5. நல்லவர்களின் தலைவனே! பலத்திலே நீ பொங்கி நான் சாகேன் என நினைக்குங்கால் அந்த சிந்தனை சத்தியமாயிருக்கிறது. 7520

6. இந்திரனே! நீ தூரத்திலும் அருகிலும் பொழியப்படும் ஸோமங்களுக்கெல்லாம் உடனே செல்லுகிறாய்.

7. நாங்கள் வலியனான விருத்திரன் கொல்லப்பட



மகத்தான இந்திரனைப் பலப்படுத்துகிறோம். வர்ஷிக்கும் அவன் எங்களுக்குச் செல்வத்தை வர்ஷிப்பவனாவானாக.

8. இந்திரன் தானத்துக்காகத் தோற்றுவிக்கப்பட்டான். மிக்க வலியனான அவன் மதகர ஸோமத்துக்காக ஸ்தாபிக்கப்பட்டான். புகழும் துதியுமுள்ள அவன் ஸோமத்துக்கு அருகனாயிருக்கிறான்.

9. வச்சிராயுதத்தைப்போல் துதிகளால் கூர்ப்பிக்கப்பட்டவனும், வலிமை நிறைந்தவனும், வெல்லப்படாதவனும், பகைவர்களால் எதிர்ப்பற்றவனும், மகானுமான இந்திரன் செல்வத்தையளிக்க விரும்புகிறான்.

10. துதியாருகனான இந்திரனே! நீ எங்களால் போற்றப்பட்டு எங்களுக்குக் கஷ்டங்களிலே கனிந்த வழியைப் புலப்படுத்தவும். மகவானே! நீ எங்களை விரும்பினால் எங்களைச் செவியுறவும். 7525

11. உன்னுடைய அதிகாரத்தையும், சுயராஜ்யத்தையும், எந்தத் தேவனும் தடைபடுத்தான். தடையற்ற எந்தத்தீரனும் தீமைப்படுத்தான்.

12. ஸுசிப்ரனே! தேவிகளான சோதியும் புவியும் உன்னுடைய எதிர்ப்பற்ற பலத்தைப் போற்றுகிறார்கள்.

13. நீயே இந்த வெண்மையான பாலை, கருப்பான, சிகப்பான புள்ளிகள் நிறைந்த பசுக்களிலே ஏந்துகிறாய்.

14. அஹியின் காந்தியைக்கண்டு தேவர்கள் ஓடினார்கள். அவர்களை மிருகத்தின் பயத்தின் பயம் பற்றிக் கொண்டது.

15. அப்பொழுது என்னுடைய எதிர்க்கும் இந்திரன் தோன்றினான். பிறகு துன்பமாகாதவனும், அஜாதசத்ருவுமான விருத்திரத்துவம்ஸன் தன் ஆண்மையைப் புலப்படுத்தினான். 7530

16. அறிஞர்களே! நான் விருத்திரனை அடியோடொழிப்பவனும், மானிடர்களின் சிறந்த பாலகனுமான

இந்திரனை மகத்தான தானத்துக்காக ஊக்கப்படுத்துகிறேன்.

17. பல பெயர்கள் உள்ளவனும், பலரால் போற்றப்படுபவனுமான நீ, எங்களுடைய ஸோம பானங்களுக்கு வருங்கால் நாங்கள் பசுக்களை விரும்பும் மனத்தோடிருப்போமாக.

18. பல ஸோமங்களளிக்கப்படும் விருத்திர ஸமஹாரன் எங்கள் விருப்பங்களை அறிவானாக. சக்கரன் எங்கள் துதியைக் கேட்பானாக.

19. வர்ஷிப்பவனே! நீ எந்தப் பாலனத்தால் எங்களை இன்புறுத்துவாய்? துதிப்பவர்களுக்கு எப்பாலனத்தால் செல்வத்தைத் தருவாய்?

20. ரிக்கோடுள்ள எந்த யக்ஞத்திலே மருத்துக்களின் தலைவனும், விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரன் இன்புறுகிறான்? 7535

21. நீ எங்கள் யக்ஞத்தில் மகிழ்ந்து எங்களுக்கு ஆயிரக்கணக்கான செல்வங்களை அளிக்கவும். நீ வழிபடுபவனுக்கு அளிப்பவன் என்பதை அறிந்து கொள்ளவும்.

22. இந்த ஸோமங்கள் தங்கள் மனைவிகளோடு சலங்களோடு பருக விரும்பும் இந்திரனிடம் செல்லுகின்றன.

23. யக்ஞத்தை நடத்தும் ஹோதாக்கள் யக்ஞத்திலே அவனைப் பலப்படுத்தி, தங்கள் திறத்தால் அவனை அவபிருதத்துக்கு நீக்குகிறார்கள்.

24. இணைந்து மகிழ்பவையும், பொன்கேசமுள்ளவையுமான இரு குதிரைகள் எங்களுடைய இதமான யக்ஞ அவிக்கு அவனை ஏந்தி வருக.

25. விபாவசுவே! அக்கினியே! உனக்கு இந்த ஸோமங்கள் பொழியப்படுகின்றன. தருப்பைப் பரத்தப்பட்டிருக்கிறது. துதிப்பவர்களுக்காக இந்திரனை இங்கே செலுத்தவும். 7540



26. துதிப்பவனான உனக்கு இந்திரன் சோதியையும், சக்தியையும், அரிய செல்வத்தையும் தருவானாக. போற்றும் அறிஞர்களுக்கும் தருவானாக. இந்திரனைப் போற்றுங்கள்.

27. சதக்கிரதுவே! நான் உனக்கு அற்புதமான பலத்தையும், எல்லாத் துதிகளையும் செலுத்துகிறேன். இந்திரனே! துதிப்பவர்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

28. சதக்கிரதுவே! நீ எங்களை சுகப்படுத்த விரும்பினால் எங்களுக்கு மிக்க மங்களமாயுள்ளதை யளிக்கவும். பலத்தையும் உணவையுமளிக்கவும்.

29. இந்திரனே! சதக்கிரதுவே! நீ எங்களை சுகப்படுத்த விரும்பினால் எல்லா வாழ்த்துக்களையும் எங்களுக் களிக்கவும்.

30. இந்திரனே! நீ எங்களை சுகப்படுத்தவிரும்பினால் பொழியப்பட்ட ஸோமத்தை ஏந்திய நாங்கள் விருத்திரனை அடியோடொழிக்கும் உன்னை அழைக்கிறோம். 7545

31. ஸோமபதியான நீ, பொழியப்பட்டுள்ள ஸோமத்துக்குக் குதிரைகளோடு வா. உன் குதிரைகளோடு எங்கள் ஸோமத்துக்கு வா.

32. இந்திரனே! சதக்கிரதுவே! விருத்திரனை மிக்க கொல்லும் உன்னுடைய ஆற்றல் இருவிதமாய் - உக்கிரமாயும் சாந்தமாயும் புலனாகிறது. எங்கள் ஸோமத்துக்கு உன் குதிரைகளிலே வா.

33. விருத்திரனைக் கொல்பவனே! இந்த ஸோமங்களை நீ பருகுபவனாயிருக்கிறாய். உன் குதிரைகளோடு எங்கள் ஸோமங்களுக்கு வா.

34. இந்திரன் ரிபுக்ஷணனையும், தானமளிப்பவனான புரிவையும், அவியை அருந்த எங்களிடம் செலுத்துவானாக. வலியன் எங்களுக்கு வலிமையைத் தருவானாக. 7549

# 94. மருத்துக்கள்

## 714. பிந்துஅல்லது பூத தட்சன் அங்கிரஸ வம்சம்

1. செல்வர்களான மருத்துக்களின் தாயான பசு உணவை விரும்பி ஸோமத்தைப் பருகுகிறாள். அவர்களுடைய தேர்களுக்குக் குதிரைகளை இணைக்கும் அவள் போற்றத் தகுந்தவள்.

2. அவள் அங்கத்திலிருக்கும் எல்லாத் தேவர்களும் விரதங்களை ஏந்துகிறார்கள். சூரியனும் சந்திரனும் உலகத்தை ஒளிப்படுத்த சாந்தமாய் சலனமாகிறார்கள்.

3. ஆதலால் எங்களுடைய எல்லா அறிஞர்களும் அவர்களைத் துதிக்குங்கால் அவர்கள் ஸோமத்தைப் பருக மருத்துக்களைப் பாடுகிறார்கள்.

4. இந்த ஸோமம் எங்களால் பொழியப்பட்டிருக்கிறது. தாமே துலங்கும் மருத்துக்களும், அசுவினிகளும் இந்த ஸோமத்தைப் பருகுகிறார்கள்.

5. மித்திரனும், வருணனும், அர்யமானும் மூன்று இடங்களில் இருப்பதும், சந்தானத்தைத் தருவதும், தசாப்பவித்திரத்தால் சுத்தப்பட்டதுமான ஸோமத்தைப் பருகுகிறார்கள். 7554

6. இந்திரனும் காலையிலே பாலோடு கலந்துள்ள ஸோமத்தைப் பருக தேவர்களைத் துதிக்க விரும்பும் ஹோதாவைப் போல் ஆவலுடனுகிறான்.

7. அறிஞர்கள் எப்பொழுது வானுக்கப்பாலுள்ள சலங்களைப் போல் பிரகாசிக்கிறார்கள்! சுத்த பலமுள்ளவர்களும், பகைவர்களைக் கொல்பவர்களுமான மருத்துக்கள் எப்பொழுது எங்கள் யக்ஞத்துக்கு வருகிறார்கள் ?

8. மகத்தான தேவர்களும், சுயமாகவே ஒளியுள்ளவர்களுமான உங்களுடைய பாலனத்தை நான் இன்று அடைவேனாக.

9. நாங்கள் புவியின் எல்லாப் பொருள்களையும், சோதியின் எல்லா ஒளி மண்டலங்களையும், பரத்திய மருத்துக்களை எங்கள் ஸோமத்தைப் பருக அழைக்கிறோம்.



10. மருத்துக்களே ! நான் சுத்த பலமுள்ளவர்களும், சோதியிலிருப்பவர்களுமான உங்களை, இந்த ஸோமத்தைப் பருக அழைக்கிறேன்.

11. நான் சுவர்க்கத்தையும் புவியையும் ஸ்தாபித்த அந்த மருத்துக்களை, ஸோமத்தைப் பருக அழைக்கிறேன்.

12. நான் வர்ஷிப்பவர்களும் மேகங்களில் வசிப்பவர்களுமான அந்த மருத்துக்களை ஸோமத்தைப் பருக அழைக்கிறேன். 7561

# 95. திரஸ்சீ ஆங்கிரஸன்

1. துதியாருகனுன இந்திரனே ! ஸோமம் பொழியப் படுங்கால் எங்களுடைய பாக்கள் உனக்குத் தேரோட்டியைப் போல் துரிதமாகின்றன. அவை கன்றுகளுக்குப் பசுக்களைப் போல் உனக்கு முழங்குகின்றன.

2. துதியாருகனுன இந்திரனே ! பிரகாசமாயுள்ள ஸோமபானங்கள் உன்னிடம் வருக. உன்னுடைய ஸோமபானத்தைப் பருகவும். இந்திரனே ! அது உனக்கு எல்லா இடங்களிலும் ஏற்கத் தகுந்தது.

3. பருந்தால் ஏந்தப்பட்டு வந்த ஸோமத்தை மதத்துக்காகப் பருகவும். நீ எல்லா தேவப் படைகளுக்கும் தலைவனாயிருக்கிறாய். தானாகவே துலங்குகிறாய்.

4. இந்திரனே! உன்னைப் போற்றும் திரஸ்சீயின் அழைப்பைக் கேட்கவும். அவனைப் பசுக்களும் வீரப் புதல்வர்களுமுள்ள செல்வத்தால் திருப்தி செய்யவும். இந்திரனே! நீ மகானாயிருக்கிறாய்.

5. உனக்கு இந்த இன்பமளிக்கும் துதியைக் கூறுபவனுக்கு இந்திரனே ! எல்லா இருதயங்களாலும் அறியப்படும் பழையதும், சத்தியம் நிறைந்ததுமான பாலனத்தை யளிக்கவும். 7566

6. நம்முடைய துதிகளாலும் தோத்திரங்களாலும் உயர்த்தப்பட்ட இந்திரனை நாம் போற்றுவோமாக. நாம் அவனுடைய பல வீரச் செயல்களை மேம்படுத்த விரும்பி அவனைப் பாடுகிறோம்.

7. வாரீர். நாம் சுத்த ஸாமத்தால் சுத்த தோத்திரங்களால் சுத்தமான இந்திரனைச் சாற்றுவோமாக. பாலோடு கலக்கப்பட்டுள்ள சுத்த ஸோமம் செழிக்கும் இந்திரனை மேம்படுத்துக.

8. இந்திரனே! சுத்தனான நீ, எங்களிடம் வா. சுத்தனான நீ, சுத்த பாலகர்களான மருத்துக்களோடு வா. சுத்தனான நீ, எங்களால் செல்வத்தை ஸ்தாபிக்கவும். சுத்தனான நீ, ஸோமாருகனாகி ஸோமத்தால் இன்புறவும்.

9. இந்திரனே! சுத்தமான நீ, எங்களுக்காக செல்வத்தையளிக்கவும். சுத்தமான நீ, ஈகையனுக்கு இரத்தினங்களை அளிக்கவும். சுத்தனான நீ, சத்துருக்களையழிக்கிறாய். சுத்தனான நீ, எங்களுக்குச் செல்வத்தையளிக்க விரும்புகிறாய். 7570

## 96. இந்திரன்

### 716. மருத்துக்களின் புதல்வனான த்யுதானன் திரஸ்சீ ஆங்கிரஸன்

1. உஷைகள் அவனுக்குத் தங்கள் உதயத்தை நீட்டுகின்றன. இரவுகள் இந்திரனுக்கு மங்களக் குரல்களை நிசியிலே எழுப்புகின்றன. சலங்களும் தாய்மார்களும், ஏழு நதிகளும் அவனுக்கு மனிதர்கள் கடந்து செல்ல வழிகளைப் புலப்படுத்துகிறார்கள்.

2. எறிபவனும் துணையற்றவனுமான அவனால் சேர்ந்துள்ள மலைகளின் இருபத்தொன்று பீடபூமிகள் அடிக்கப்பட்டன. வலிமையில் வளர்ந்த விருஷபனால் நடத்தப்படும் செயல்களை எந்தத் தேவனும் செய்ய இயலாது; எந்த மனிதனும் செய்ய இயலாது.



3. இந்திரனுடைய அயோமய வச்சிராயுதம் கையிலே இறுகப்பற்றப்பட்டிருக்கிறது. அவனுடைய புஜங்களிலே மிக்கப் பலமிருக்கிறது. அவன் போருக்குச் செல்லுங்கால் அவனுடைய தலையிலும் வாயிலும் மிக்கச் செயல்கள் இருக்கின்றன. வீரர்கள் கட்டளைகளைச் செவியுற அவனருகில் செல்லுகிறார்கள்.

4. நான் யக்ஞாருகர்களின் நடுவே உன்னையே யக்ஞாருகனாக நினைக்கிறேன். இந்திரனே! நான் உன்னை வீரர்களின் துவஜனாக நினைக்கிறேன். நீ மனிதர்களுக்கு வர்ஷிப்பவன் என உன்னை நான் நினைக்கிறேன்.

5. இந்திரனே! நீ அஹியைக் கொல்ல உன்னுடைய கைகளில் பகைவனின் வெறியை அடக்கும் வச்சிராயுதத்தைப் பற்றுங்கால் மலைமேகங்கள் கர்ஜிக்கின்றன. பசுக்கள் கதறுகின்றன. புலவர்கள் இந்திரனைப் போற்றுகிறார்கள். 7575

6. நாம் இப்பொருள்களை யெல்லாம் தோற்றுவித்தவனும், இனி தோன்றுபவையையும் தோற்றுவிப்பவனுமான இந்திரனைப் போற்றுவோமாக. நாம் நம்முடைய துதிகளால் இந்திரனோடு நட்பைப் பாலிப்போமாக. நாம் நம்முடைய வணக்கங்களால் விருஷபனை நம்மிடம் வருவிப்போமாக.

7. உன்னுடைய நண்பர்களாயிருந்த தேவர்கள் எல்லாம் விருத்திரனுடைய சீற்றலுக்கஞ்சி உன்னைக்கைவிட்டு பயந்தோடினார்கள். இந்திரனே! நீ மருத்துக்களோடு நட்புடனிருப்பாயாக. பிறகு நீ இந்தப் பகைப் படைகளை யெல்லாம் ஜயிக்கிறாய்.

8. இந்த அறுபத்துமூன்று மருத்துக்கள் யக்ஞாருகர்களாயிருந்தார்கள். சேர்ந்துள்ள பசுக்களைப்போல் அவர்கள் உன்னைப் பலப்படுத்தினார்கள். நாங்கள் உன்னிடம் வருகிறோம். நீ எங்களுக்கு எங்கள் பாகத்தையளிக்கவும். நாங்கள் இந்த அவியால் உங்களைப் பலப்படுத்துகிறோம்.

9. மருத்துக்களின் படை கூரிய ஆயுதமாயிருக்கிறது. இந்திரனே! உன் வச்சிராயுதத்தை எவன் எதிர்த்து நிற்

பான்? தேதவதன்மைகளற்ற அசுரர்களிடம் ஆயுதமில்லை. ரிஜீஷினனே ! உன் சக்கரத்தால் அவர்களை விலக்கவும்.

10. இந்திரன் என் பசுக்களைச் செழிப்பிக்க, உத்தமத் துதியை மகத்தாயும், உக்கிரனாயும், வலியனாயும், மிக்கச் செல்வனாயுமுள்ள அவனுக்குச் செலுத்தவும். துதியால் ஏந்தப்படும் அவனுக்குப் பல தோத்திரங்களைக் கூறவும். அவன் எங்களுக்குத் துரிதமாய் மிகுந்த செல்வத்தை அளிப்பானாக. 7580

11. துதிகளால் ஏந்தப்படும் மகத்தான இந்திரனுக்கு உன்னுடைய துதியை நதிகளைக் கடக்கக் கப்பலிலே பயணியைச் செலுத்தும் மாலுமியைப்போல் செலுத்தவும். புகழுள்ளவனும் பிரியனுமான இந்திரனுக்குரிய செல்வத்தை உன் யக்ஞங்களால் என்னிடம் செலுத்து. அவன் துரிதமாய் எனக்குச் செல்வத்தையளிப்பானாக.

12. இந்திரனால் விரும்பப்படும் யக்ஞங்களைச் செய்யவும். துதிக்குரியவனைத் துதிக்கவும். அறிஞனே ! நீ உன்னை எழில்செய்து கொள்ளவும். வறுமைக்காகக் கலங்காதே ! இந்திரன் உன் தோத்திரத்தைக் கேட்பானாக. அவன் எங்களுக்குத் துரிதமாய் மிகுந்த செல்வத்தை அளிப்பானாக.

13. துரிதமாய்ச் செல்லும் கிருஷ்ணன் தன் பதினாயிரம் ஆட்களோடு அம்சுமதியிலே நின்றான். இந்திரன் தன் பலத்தால் சலத்தினுள் மூச்செறியும் அவனைப் பிடித்தான். பிறகு மானிடனுக்கு நலஞ் செய்யும் இந்திரன்—அவனுடைய விஷமப் படைகளை அழித்தான்.

14. நான் அம்சுமதியின் மடுக்களிலே எட்டாத ஆழத்திலே மறைந்திருந்த கிருஷ்ணனைக் கண்டேன். நான் அங்கு மேகத்திலே சூரியனைப் போல் கிருஷ்ணன் நிற்பதைப் பார்த்தேன். வர்ஷிப்பவர்களே ! நான் உங்களை வேண்டிக் கொள்கிறேன்: போரிலே அவனை வெல்லுங்கள்.

15. பிறகு துரிதமாய்ச் செல்லும் அவன்—கிருஷ்ணன்—பிரகாசமாகி அம்சுமதியினருகே தன் சொந்த தேகத்தைத் தரித்தான். பிறகு இந்திரன் பிரகஸ்பதியை நண்பனாக அடைந்து தேவத்தன்மையற்ற படைகள் அருகில் வருங்கால் அவற்றை அழித்தான். 7585



16. இந்திரனே ! நீ பிறந்தவுடன் பகைவனில்லாத எழுவர்களுக்குப் பகைவனாயிருந்தாய். இருட்டிலே மறைக்கப்பட்டிருந்த சுவர்க்கத்தையும் புவியையும் மீட்டாய். மகத்தான உலகங்களை இன்புறுத்தினாய்.

17. வச்சிராயுதனே ! தீரனான நீ உன்னாயுதத்தால் ஒப்பற்ற எதிரியின் பலத்தை அழித்தாய். உன் படைகளால் சுஷ்ணனைக் கொன்றாய். இந்திரனே ! உன்னறிவால் பசுக்களை மீட்டாய்.

18. விருஷபனே ! நீ மானிடர்களுக்கு விருத்திரர்களை அழிக்கும் வலியனாயிருந்தாய். நீ தடைபட்ட நதிகளை விடுவித்தாய். தாஸர்கள் அதீனப்படுத்தியிருந்த சலங்களை ஜயித்தாய்.

19. உத்தம வீரச் செயல்கள் உள்ளவன் ஸோமபானத்திலே இன்புறுகிறான். தடைபடாத கோபமுள்ள அவன் தினங்களைப்போல் செல்வன். அவன் துதிப்பவனுக்குத் தனியனாகவே யக்ஞத்தை நடத்துகிறான். அவனே விருத்திரனைக் கொல்லுகிறான். எல்லாப் பகைவர்களுக்கும் அவனே நிகர் என அவனை சனங்கள் கூறுகிறார்கள்.

20. இந்திரன் விருத்திரனை அழிப்பவன். மனிதர்களைப் பாலிப்பவன். நாங்கள் அழைக்கத் தகுந்த அவனை உத்தமத் துதியோடழைப்போமாக. மகவானான அவன் எங்களைப் பாலிப்பவன். எங்களை ஊக்கப்படுத்துபவன். அவன் புகழைத் தரும் உணவைத் தருபவன்.

21. ரிபுக்களின் முதல்வனும் விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரன் பிறந்தவுடன் அழைப்பதற்கருகனாயிருந்தான். நண்பர்களுக்காக பல நல்ல செயல்களை நடத்திய அவன் பருகிய ஸோமத்தைப் போல் போற்றத்தகுந்தவன். 7591

## 97. இந்திரன்

### 717. ரேபகாசியபன்

1. இந்திரனே! மகவானே! சுவர்க்கத்தின் தலைவனான நீ, அசுரர்களிடமிருந்து எடுத்து வந்த போகத்துக்குரிய பொருள்களையெல்லாம் உன்னைத் துதிப்பவனுக்கும், சீரானத் தருப்பையைப் பரத்துபவனுக்குமளிக்கவும்.

2. நீ உன்னுடைய பகைவர்களிடமிருந்து பறித்து வந்த அந்த குதிரைகளையும், அந்த பசுக்களையும், அந்த அழியாத செல்வத்தையும், ஈகையனும், பொழிபவனுமான யக்ஞத் தலைவனுக்கு அளிக்கவும். கருமிக்களிக்காதே.

3. இந்திரனே! தேவர்களைப் போற்றுமலும் யக்ஞங்களைச் செய்யாமலும் உறங்குபவன், தன் தீயச் செயல்களால் தன் காக்கத் தகுந்த செல்வத்தை இழப்பானாக. அவனைத் தெரியாமலுள்ள இடத்துக்குச் செலுத்தவும்.

4. சக்கரனே! நீ மிக்கத் தூரமான இடத்திலிருந்தாலும் விருத்திரனைக் கொல்பவனான நீ அருகில் இருந்தாலும் இந்திரனே! உன்னைப் பொழியும் தலைவன் அங்கிருந்து தன் துதிகளால் சுவர்க்கத்துக்குச் செல்லும் குதிரைகளால் உன்னை வருவிக்க விரும்புகிறான்.

5. நீ சுவர்க்கத்தின் ஒளியிலிருந்தாலும், கடலின் நடுவே எந்த இடத்தில் இருந்தாலும், விருத்திரனைக் கொல்லும் வல்லவனான நீ, புவியில் எந்த இடத்திலிருந்தாலும் அங்கிருந்து எங்களிடம் வரவும். 7596

6. இந்திரனே! ஸோமத்தைப் பருகுபவனும், சக்தியின் பதியுமான உனக்கு எங்களுடைய ஸோமங்கள் பொழியப்படுகின்றன. சுகமான உணவோடும், மிகுந்த செல்வத்தோடும் எங்களை இன்புறுத்தவும்.

7. இந்திரனே! எங்களிடமிருந்து நீங்காதே. எங்கள் இன்பத்தைப் பகிர்ந்து கொள்ளவும். நீ எங்கள் பாலனம் நீ எங்கள் பந்து. இந்திரனே! நீ எங்களிடமிருந்து நீங்காதே



8. இந்திரனே! யக்ஞத்திலே ஸோமத்தைப் பருக நீ எங்களோடு உட்காரவும். மகவானே! யக்ஞத்திலே எங்களோடு உட்கார்ந்திருக்கும் துதிப்பவனுக்கு மகத்தான பாலனத்தை அளிக்கவும்.

9. வச்சிராயுதனே! தேவர்களும் மனிதர்களும் செயல்களிலே உனக்குச் சமமாகார்கள். நீ உன் பலத்தால் எல்லா சீவர்களையும் முந்துகிறாய். தேவர்களும் உனக்கு ஒப்பாகார்கள்.

10. குழுமியுள்ள அறிஞர்கள் தலைவனும், போர்களில் ஜயிப்பவனுமான இந்திரனை ஊக்கப்படுத்தினார்கள். அவர்கள் தங்கள் தோத்திரங்களால் செயல்களில் மிக்கச் சிறந்தவனும், செல்வத்துக்காகப் பகைவர்களைக் கொல்பவனும் உக்கிரனும், மிக்கத் தீரனும், விரைபவனுமான இந்திரனை அவன் பிரகாசிக்கப் பிறப்பித்தார்கள். 7601

11. ரேபர்கள் ஒருமையுடன், இந்திரனை அவன் ஸோமபானத்தைப் பருகப் பாடினார்கள். அவர்கள் அவிகளால் சுவர்க்கத்தின் தலைவனைப் பலப்படுத்தப் போற்றுங்கால் விரதங்களைப் பாலிக்கும் அவன்—இந்திரன்—தன் திறத்தோடும், பாலனங்களோடும், மருத்துக்களோடும் சேர்கிறான்.

12. ரேபர்கள் சக்கரத்தின் வட்டமான அவனைப் பார்த்தவுடன் வணங்குகிறார்கள். அறிஞர்கள் துதியால் மேஷத்தைப் போற்றுகிறார்கள். துலங்குபவர்களும், துன்புறுத்தாதவர்களும், ஊக்கமுள்ளவர்களுமான நீங்கள், ரிக்குக்களோடு அவனுடைய செவியிலே பாடுங்கள்.

13. நான் தடைபடாதவனும், உண்மையாய்ப் பலத்தையடைந்திருக்கும் தனியனுமான மகவானும், வலியனும் இந்திரனை அடிக்கடி அழைக்கிறேன். யக்ஞார்கனும், போற்றத்தகுந்தவனுமான அவன் எங்கள் பாக்களால் அருகில் வருவானாக. வச்சிராயுதனான அவன் எங்களுடைய செல்வத்துக்கு எல்லாப் பொருள்களையும் செழிப்பிப்பானாக.

14. இந்திரனே! சக்தியுள்ள சக்கரனே! உன்னுடைய சக்தியால் நீ சம்பரனுடைய புரங்களை எங்ஙனம் இடிப்பது என்பதை அறிகிறாய். வச்சிராயுதத்தால் உன்னிடம் எல்லா உலகங்களும் நடுங்குகின்றன.

15. இந்திரனே! சூரனே! பலவித ரூபங்களுள்ளவனே! உன்னுடைய சத்தியம் என்னைப் பாலிக்க. வச்சிராயுதனே! சலங்களில் கடத்திச் செல்லும் கலவனைப் போல் எங்களைப் பல தீமைகளிலிருந்து கடத்திச் செல்லவும். இந்திரனே! அரசனே! நீ எங்களுக்குப் பலவிதமாயுள்ளதும், அனைவராலும் விரும்பப்படுவதுமான செல்வத்தை எப்பொழுது அளிப்பாய்? 7606

## 98. இந்திரன்

### 718. நிருமேத ஆங்கிரஸன்

1. மகானான விப்பிரனும், தருமத்தைச் செய்பவனும், வித்துவானும், துதியை விரும்புபவனுமான இந்திரனுக்கு பிருஹத்ஸாமனைப் பாடுங்கள்.

2. இந்திரனே! நீ ஜயிப்பவன். நீ சூரியனை ஒளிப்படுத்தியவன். நீ விசுவகருமன். நீ விசுவே தேவன். நீ மகான்.

3. நீ உன் சோதியால் சுவர்க்கத்தை ஒளிப்படுத்தி வானின் ஒளிக்குச் சென்றாய். இந்திரனே! தேவர்கள் தாழ்மையோடு உன் நட்பை நாடுகிறார்கள்.

4. இந்திரனே! அன்பனும், மகத்தாய் ஜயிப்பவனும், எவனாலும் மறைக்கமுடியாதபடி மலையைப் போல் எங்கும் பரந்தவனும், சுவர்க்கத்தின் தலைவனுமான நீ, எங்களிடம் வா.

5. ஸோமத்தைப் பருகும் ஸத்தியனே! நீ சோதியையும் புவியையும் ஜயிக்கிறாய். இந்திரனே! நீ பொழிபவனைப் பலப்படுத்துகிறாய். நீ சுவர்க்கத்தின் தலைவனாயிருக்கிறாய். 7611



6. இந்திரனே! நீ பகைவர்களின் பல கோட்டைகளை இடிப்பவன். தஸ்யுக்களைக் கொல்பவன். மானிடர்களை செழிப்பிப்பவன். நீ சுவர்க்கத்தின் தலைவன்.

7. துதியாருகனான இந்திரனே! நாங்கள் எங்கள் ஸ்தோமங்களை உன்னிடம் சலம் நிறைந்த கைகளால் நண்பர்கள் மீது சலங்களை அடிக்கடி செலுத்தும் மனிதர்களைப் போல் செலுத்துகிறோம்.

8. சூரனே! வச்சிராயுதனே! நதிகளால் நிரப்பப்படும் ஏரியைப் போல் எங்கள் ஸ்தோமங்கள் தினந்தோறும் வளரும் உன்னைப் பலப்படுத்துகின்றன.

9. வழிபடுபவர்கள் தங்கள் காதையால் துரிதமான தேவனுடைய மகத்தான பரந்த நுகமுள்ள தேரிலே மொழியால் சேரும் இந்திரனைத் தாங்கும் இரு குதிரைகளை இணைக்கிறார்கள்.

10. இந்திரனே! சதக்கிரதுவே! அனைத்தையுங் காணும் நீ, எங்களுக்கு சக்தியையும் செல்வத்தையுமளிக்கவும். நாங்கள் உன்னிடம் பகைப் படை ஜயிக்கும் வீரனை நாடுகிறோம்.

11. சதக்கிரதுவே! மனைகளை அழிப்பவனே! நீ எங்கள் தந்தையாயிருந்தாய். தாயாய் இருந்தாய். நாங்கள் உன்னை சுகத்துக்காகப் போற்றுகிறோம்.

12. சக்தியுள்ள சதக்கிரதுவே! புருஹூதனே! நான் அவிகளை விரும்பும் உன்னைப் போற்றுகிறேன். நீ எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். 7618

## 99. இந்திரன்

### 719. நிருமேத ஆங்கிரஸன்

1. இந்திரனே! வச்சிராயுதனே! ஆவலுள்ள மனிதர்கள் உன்னை நேற்றும், இன்றும் ஸோமத்தைப் பருகச் செய்தார்கள். உனக்கு ஸ்தோமத்தைக் கூறும் எங்களைக் கேட்கவும். நீ எங்களுடைய மனைக்கு வரவும்.

2. நல்ல மோவாயுள்ளவனே! குதிரைகள் உள்ளவனே! நீ இன்பமாகவும். நாங்கள் உன்னிடம் வேண்டுகிறோம். தொண்டர்கள் உன்னிடம் வருகிறார்கள். துதியாருகனே! இந்திரனே! உன்னுடைய புகழ் உவமைக்குரியதாயும், உத்தமமாயும் தோன்றுக.

3. மருத்துக்கள் இந்திரனிடம், சூரியனிடம் கிரணங்களைப்போல் செல்லுகிறார்கள். மருத்துக்கள் தங்கள் ஆற்றலால் அவனுடைய செல்வங்களையெல்லாம் பிறந்தவர்களுக்கும் பிறப்பவர்களுக்கும் பங்கிடுகிறார்கள். நாங்கள் எங்கள் பாகத்தைத் தியானிப்போமாக.

4. இந்திரன் தீமையற்ற தானங்களை அளிப்பவன். செல்வங்களைத் தருபவன். அவனைப் போற்றவும். இந்திரனுடைய தானங்கள் மங்களமானவை. அவன் தானத்தை அளிக்கத் தன் மனத்தை ஊக்கஞ் செய்து கொள்கிறான். அவன் அடியாரின் விருப்பத்தைப் பங்கஞ் செய்யான்.

5. இந்திரனே! எதிர்க்கும் படைகளையெல்லாம் நீ போர்களிலே ஜெயிக்கிறாய். தந்தையான நீ அனைவரையும் ஜயிக்கிறாய். பழிச்சொல்லை நீக்குகிறாய். பகைவரை ஜயிக்கிறாய். 7623

6. உன்னுடைய அழிபலத்தை சுவர்க்கமும், புவியும் குழந்தையைத் தாய்போல பற்றுகின்றன. இந்திரனே! நீ விருத்திரனை எதிர்க்குங்கால் உன் கோபத்தால் பகைப் படைகள் எல்லாம் சோர்கின்றன.

7. நீங்கள் மூப்பற்றவனும், பகைவர்களைத் தடுப்பவனும், தடுக்கப்படாதவனும், துரிதமாய் ஜயிப்பவனும், செலுத்துபவனும், உத்தம சாரதியும், எவனாலும் துன்பப் படாதவனும், சலத்தைச் சிறப்பிப்பவனுமான இந்திரனை இங்கு பாலனத்துக்காக அழையுங்கள்.

8. நாங்கள் எங்கள் பாலனத்துக்காக கிரமப்படுத்துபவனும், கிரமப்படுத்தப்படாதவனும், திறத்தால் தோன்றுபவனும், நூறு பாலனங்களிலும், நூறு புலனங்களிலும் இருப்பவனும், ஸோமமாய் விளங்குபவனும், செல்வங்களை மறைத்திருப்பவனும், பொருள்களைத் தருபவனுமான இந்திரனை அழைக்கிறோம். 7626



## 100. இந்திரன்

### 720. நேமன் பிருகுவம்சம்

1. நான் உன் முன்னே என் புதல்வனோடு சலனமாகிறேன். விசுவேதேவர்கள் என்னைப் பின்பற்றுகிறார்கள். இந்திரனே! நீ எனக்காகப் பகைவனின் செல்வத்தை ஏந்தினால், எனக்காக உன் வீரச் செயல்களை நடத்தவும்.

2. நான் உனக்கு மதமளிக்கும் ஸோமான்னத்தை முதன்மையாக அளிக்கிறேன். பிழியப்பட்டதும், போற்றத் தகுந்ததுமான இரஸம் உன் இருதயத்தில் ஸ்தாபிக்கப்படுக. நீ உன்னுடைய வலது பக்கத்தில் நண்பனாயிருக்கவும். பிறகு நாம் இருவரும் பல பகைவர்களை அழிப்போமாக.

3. போரை விரும்பும் நீங்கள் இந்திரன் ஸத்தியமாக இருந்தால் அவனுக்கு சத்தியமான ஸ்தோத்திரத்தைக் கூறுங்கள். நேமன் சொல்லுகிறான். இந்திரன் என ஒருவனும் இல்லை. அவனை எவன் கண்டான்? நாம் யாரைப் போற்றுவோம்?

இந்திரன் பேசுகிறான்

4. துதிப்பவனே! இதோ நான் இருக்கிறேன். இங்கு என்னைப்பார்க்கவும். நான் என் ஆற்றலால் எல்லாப் புவனங்களையும் ஜயிக்கிறேன். ஸத்தியத்தின் ஆக்ஞைகள் என்னைப் பலப்படுத்துகின்றன. உடைக்கும் நான் புவனங்களை உடைக்கிறேன்.

5. நான் பிரியமான வானின் உச்சியிலே தனியாய் அமர்ந்திருக்குங்கால் ஸத்தியத்தை விரும்புபவர்கள் ஏறி என்னை அணுகும்போது என் மனம் இருதயத்தினிடம்

மொழிந்தது. என் நண்பர்கள் குழந்தைகளோடு என்னிடம் கதறுகிருர்கள். 7631

இந்திரன்

6. மகவானே! யக்ஞங்களிலே பொழிபவனுக்காக நீ நடத்திய வீரச்செயல்கள் எல்லாம் அறிவிக்கத் தகுந்தவை. பலரால் திரட்டப்பட்ட பராவதனுடைய செல்வத்தை ரிஷியின் பந்துவான சரபனுக்கு நீ புலப்படுத்திஞய்.

7. நீங்கள் இப்பொழுது உங்கள் பல வழிகளிலே பாய்ந்தோடுங்கள். உங்கள் வழியைத் தடுத்தவன் இப்பொழுது இங்கில்லை. அந்தப் பகைவனின் மர்மஸ்தானங்களிலே இந்திரன் தன் வச்சிராயுதத்தைச் செலுத்தவில்லையா?

ஸுபர்ணன்

8. ஸுபர்ணன் மனத்தைப்போல் வேகமாய்ப் பாய்ந்து இரும்பாலான நகரத்தைக் கடந்து சென்ருன். அவன் சுவர்க்கத்துக்குச் சென்று வச்சிராயுதனுக்கு ஸோமத்தை ஏந்தி வந்தான்.

வச்சிரம்

9. வச்சிராயுதம் கடலின் நடுவே சலங்களால் மூடப்பட்டு மறைந்திருக்கிறது. போரின் முன்னே செல்லும் சத்துருக்கள் அதற்குக் காணிக்கையைச் செலுத்துகிருர்கள்.

வாக்கு

10. தேவர்களை இன்புறுத்துபவனும், அரசியுமான வாக்கு யக்ஞத்திலே அமர்ந்து அறிவதற்கியலாத சொற்களைக்கூறுங்கால் அவள் நான்கு திசைகளுக்கும் சலத்தையும் உணவையுங் கறக்கிருள். அவ்வாக்கில் மேன்மையாயிருந்த பாகம் எங்கு சென்றது? 7636

11. தேவர்கள் தேவியான வாக்கைப் பிறப்பித்தார்கள். விசுவருபங்களுள்ள பசுக்கள் அவளையே உச்சரிக்கின்றன. அனைவரையும் இன்புறுத்தும் பசுவாம் வாக்கு எங்களுக்கு உணவையும் ரஸத்தையும் தருபவளாகி நன்கு போற்றப்பட்டு எங்களிடம் வருவாளாக.



இந்திரன்

12. விஷ்ணுவே! என் நண்பனே! நீ பரந்த நடையோடு அடியை வைக்கவும். சோதியே! நீ மின்னல் தோன்ற இடத்தை அளிக்கவும். விருத்திரனை வீழ்த்துவோமாக. நாம் நதிகளை விடுவிப்போமாக. இந்திரனுடைய ஆக்ஞையால் அவை விடுவிக்கப்பட்டு பாய்க. 7638

## 101. பலதேவர்கள்

### 721. ஜமதக்கினி பார்கவன்

மித்திராவருணர்கள்

1. எவன் அவியளிக்கும் தலைவனுக்கு அவன் தன் விருப்பங்களைப் பூர்த்திசெய்து கொள்ள மித்திரா வருணர்களை முற்படுத்துகிருனே அவன் யக்ஞத்துக்காக அவியைத் தூய்மைப் படுத்துகிருன்.

2. வர்ஷிக்கும் க்ஷத்திரியர்களும், பரந்து காண்பவர்களும், தலைவர்களும், துலங்குபவர்களும், தீர்க்க செவியுள்ளவர்களுமான மித்திராவருணர்கள் சூரிய ரசிமிகளின் உதவியால் தங்கள் செயல்களை இயங்கும் இருகைகளால் நடத்துகிருர்கள்.

3. மித்திராவருணர்களே! உங்களிடம் வரத் துரிதப்படுபவன் தேவர்களின் தூதனுகிருன். அவன் தலையிலே இரும்பு கவசத்தை அணிந்திருக்கிருன். அவன் தன் செல்வத்திலே இன்புறுகிருன்.

4. வினவுவதற்கும், அடிக்கடி அழைப்பதற்கும், பேசிக்கொள்வதற்கும் விருப்பமில்லாத பகைவனிடமிருந்து எங்களை இன்று பாலியுங்கள். அவனுடைய சண்டையிலிருந்தும், கைகளிலிருந்தும் எங்களைப் பாலியுங்கள்.

மித்திராவருணுதித்தியர்கள்

5. ருதச்செல்வனே! யக்ஞ ஸதனத்திலே பிறப்பிக்

கப்பட்ட போற்றத்தகுந்த தோத்திரத்தை மித்திரனுக்கும் அர்யமனுக்கும் பாடவும். பாலிக்கும் இனிய துதியை வருண னுக்குப் பாடவும். துதியை அரசர்களுக்குப் பாடவும். 7643

ஆதித்தியர்கள்

6. மித்திராவருணர்கள் மூவ்வுலகங்களின் ஏகப் புதல் வனும், சிகப்பனும், ஜயத்தைத்தருபவனுமான வசுவைப் பிரேரித்தார்கள். தடைபடாத அமிருதர்கள் மானிடர்களின் இடங்களை நோக்குகிறுர்கள்

அசுவினிகள்

7. இணைத்திருக்கும் நாஸத்தியர்களே! நீங்கள் இரு வரும் என்னுடைய உயர்த்தப்பட்டுள்ள புகழுள்ள பாக் களுக்கும் யக்ஞங்களுக்கும் வாருங்கள். என்னுடைய அவி களை அருந்த வாருங்கள்.

8. உத்தம செல்வத்தின் தலைவர்களே! உங்களுடைய எந்த அரக்கனுலும், தடைபடாத தானத்தை நாங்கள் விரும்புங்கால் நீங்கள் இருவரும் எங்களுடைய கீழ்த்திசை யிலளிக்கப்படும் துதிகளைச் செழிப்பித்து ஜமதக்கினியால் போற்றப்படும் தலைவர்களான நீங்கள் வாருங்கள்.

வாயு

9. வாயுவே! எங்களுடைய அழகிய துதிகளோடுள்ள சோதி, பற்றும் யக்ஞத்துக்கு வா. இந்த சுக்கர ஸோமம் உனக்காக வைக்கப்பட்டிருக்கிறது. பவித்திரத்தின் நடுவே ஊற்றப்படுகிறது.

10. அத்வாயு நேரான வழிகளிலே வருகிறுன். அவன் அவிகளை நீ அருந்த ஏந்தி வருகிறுன். நியுத்குதிரைகளின் தலைவனே! நீ இருவிதங்களாயுள்ள சுத்தமாயுள்ள ஸோமத் தையும், பாலோடு கலக்கப்பட்டுள்ள ரஸத்தையும் பருகவும். 7648



சூரியன்

11. சூரியனே! நீ மகானுயிருக்கிறுய். சத்தியம். ஆதித்தியனே! நீ மகானுயிருக்கிறுய். சத்தியம். நீ மகானு யிருப்பதால் உன்னுடைய மகிமை போற்றப்படுகிறது. தேவனே! மெய்யாகவே நீ மகானுயிருக்கிறுய்.

12. சூரியனே! நீ புகழில் மகானுயிருக்கிறுய். சத்தி யம். நீ தேவர்களின் நடுவே மகத்வத்தில் மகானுயிருக்கிறுய். சத்தியமே. நீ அசுரர்களைக் கொல்பவன். தேவர்களின் புரோகிதன். உன் சோதி மகத்தானது. தடைபடாதது.

உஷையோ? சூரியனே?

13. அழகாயும் பிரகாசமாயும் செய்யப்பட்டுள்ள அவள், அதோமுகத்தோடும், எல்லாத் துதிகளையும் ஏற்றுக்கொள்பவளாய், புஜங்களைப்போல் படர்ந்துள்ள பத்து திசைகளுக்கு முன்னேறுபவளாய் உலகத்தின் நடுவே பலவித நிறமுள்ள பசுவைப்போல் புலனுகிறுள்.

பவமானன்

14. மூன்று பிரஜைகள் சென்றுவிட்டன. நான்காவது சூரியனிலே நுழைந்தது. மகத்தான அவன் — சூரியன் புவனங்களின் நடுவே நின்றுன். சுத்தப்படுத்துபவன் — வாயு — திசைகளில் நுழைந்தான்.

பசு

15. பசு ருத்திரர்களின் அன்னையாயும், வசுக்களின் புதல்வியாயும், ஆதித்தியர்களின் சகோதரியாயும், அமிரு தத்தின் நாபியாயுமிருக்கிறுள். அறிவுள்ள சனங்களுக்கு நான் கூறுவேன்: பாபமற்றவளும், அதிதியுமான பசுவைத் துன்புறுத்தாதீர்கள்.

16. தானே மொழியை உச்சரிப்பவளும், மற்றவர் களுக்குப் பேச்சைத் தருபவளும், ஒவ்வொருவிதமான சொல்லோடு சேர்ந்து வருபவளும், தேவர்களைப் போற்ற எனக்கு உதவி செய்பவளும், தேவியுமான பசுவை அற்ப அறிவுள்ளவனே கைவிடுகிறுன். 7654

## 102. அக்கினி

**722.** பிரயோகன், அக்கினி பார்ஹஸ்பத்தியன்–அக்கினி கிருஹபதி, யவிஷ்டன்.

1. அக்கினியே! தேவனே! அறிஞனும், கிரகபதியும் யுவனுமான நீ, அவியளிக்கும் மகத்தான உணவைத் தருகிறாய்.

2. மிக்கத் துலங்கும் அக்கினியே! அறிஞனான நீ, எங்களுடைய இந்த வணக்கத் துதியோடு தேவர்களை இங்கு ஏந்தி வா.

3. இளைஞனே! செல்வத்தைப் பிரேரிக்கும் உன்னை நண்பனாக அடைந்து, நாங்கள் உணவைப்பெற எங்கள் பகைவர்களை ஜயிக்கிறோம்.

4, நான் ஔர்வப்பிருகுவைப் போலும், அப்நுவான-னைப்போல் கடலின் நடுவே வசிக்கும் சுத்தமான அக்கினியை அழைக்கிறேன்.

5. நான் கடலின் நடுவே வசிப்பவனும், அறிஞனும், காற்றைப்போல் சப்திப்பவனும், பர்ஜன்யனைப்போல் குரல் இருப்பவனும், வலியனுமான அக்கினியை அழைக்கிறேன். 7659

6. நான் கடலில் வசிப்பவனும், ஸவிதாவின் சக்தியைப்போல் இருப்பவனும், பகனால் அளிக்கப்படும் போகங்களைப்போல் இருப்பவனுமான அக்கினியை அழைக்கிறேன்.

7. வலியனும், மிக்கப் பலமுள்ளவனும், சுவாலைகளால் பரவுபவனும், யக்ஞங்களின் பேரனுமான அக்கினியினிடம் செல்லுங்கள்.

8. உருவப்படுத்தும் துவஷ்டாவைப்போல் அவன் நம்மை உருவப்படுத்த அக்கினியினிடம் செல்லுங்கள். அவனுடைய வினைத்திட்பத்தால் நாம் புகழுள்ளவர்களாவோமாக.



9. தேவர்களின் நடுவே இவ்வக்கினி மானிடர்களின் எல்லாச் செல்வங்களுக்கும் தலைவனாயிருக்கிறான். அவன் செல்வங்களோடு எங்களிடம் வருவானாக.

10. எல்லா ஹோதாக்களின் நடுவே மிக்கப் புகழுள்ளவனும், யக்ஞங்களிலே முதல்வனுமான அக்கினியைப் போற்றவும். 7664

11. முதல்வனும், நீண்ட கேள்வியுள்ளவனும், மனைகளில் துலங்குபவனும், ஸர்வ வியாபகனும், சுத்தப்படுத்தும் காந்தியுள்ளவனுமான அக்கினியைப் போற்றவும்.

12. அறிஞனே! குதிரையைப்போல் வலியவனும், போற்றத் தகுந்தவனும், நண்பனைப்போல் எங்கள் பகைவர்களையெல்லாம் ஜயிப்பவனுமான அக்கினியைப் போற்றவும்.

13. வழிபடுபவனுடைய சகோதரிகளைப் போலுள்ள தோத்திரங்கள் உன்னுடைய சிறப்புகளைக் கூறிக்கொண்டு உனக்கு எழுகின்றன. அவை வாயுவின் முன்னே உன்னைச் சொலிப்பித்து நிற்கின்றன.

14. அவனுக்கு முவ்விதம் சேர்ந்துள்ள தருப்பை பந்தமாகாமலும், எல்லையற்றும் பரத்தப்பட்டிருக்கிறது. சலங்கள் அவனிடம் இடத்தைக் காண்கின்றன.

15. தடைபடாத பாலனங்களோடு எல்லா விருப்பங்களையும் பொழியும் தேவனுடைய இடம் மங்களமளிப்பது. அவனுடைய தோற்றமும் சூரியனைப் போல் மங்களமளிப்பது 7669

16. தேவனான அக்கினியே! எங்களுடைய நெய் யாஹுதிகளால் நீ காந்தியோடு சொலித்து எங்களுடைய யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தி அவர்களுக்கு அளிக்கவும்.

17. அங்கிரஸனே! தேவர்கள் கவியும், அமுதனும், அவியை ஏந்துபவனுமான உன்னை, தாய்மார்களைப்போல் பிறப்பித்தார்கள்.

18. அக்கினியே! கவியே! தேவர்கள், பேரறிஞனும், தூதனும், போற்றத் தகுந்தவனுமான உன்னை அமர்த்துகிறார்கள்.

19. என்னிடம் பசு இல்லை. மரத்தை வெட்ட கோடாரியும் என்னிடமில்லை. ஆனால் இங்கு இருப்பதை உன்னிடம் ஏந்தி வருகிறேன்.

20. மிக்க இளைஞனே! நாங்கள் எந்த விதமான கஷ்டங்களையளித்தாலும், நீ அவற்றையெல்லாம் பெற்றுக் கொள்ளவும்.

21. எறும்பு கடித்த எந்தக் காட்டமும், சிதல் அரித்த எந்தக் காட்டமும் நெய்யைப் போல் பிரியமுள்ளதாகுக.

22. மானிடம் அக்கினியைச் சொலிப்பிக்குங்கால் சிரத்தையுள்ள மனத்தோடு யக்ஞத்தைச் செய்வானாக. அவன் அறிஞர்களோடு அக்கினியை ஒளிப்படுத்துகிறான் 7676

## 103 அக்கினி

### 723. ஸோபரிகாண்வன்

1. யக்ஞங்கள் அளிக்கப்படுபவனும் எல்லா வழிகளையும் அறிபவனுமான அக்கினி தோன்றினான். நன்கு பிறந்தவனும், ஆரியரைச் செழிப்பிப்பவனுமான அக்கினிக்கு எங்களுடைய துதிகள் எழுகின்றன.

2. திவோதாஸனால் அழைக்கப்பட்ட அக்கினி ஆற்றலோடு தேவர்களை நோக்கினான். அவன் தாயான புவியின்மீது விரைந்து சென்றான். அவன் சோதியின் உச்சியிலே அமர்ந்தான்.

3. கடமைகளைச் செய்யும் மனிதர்களைக் கண்டு சனங்கள் அஞ்சுகிறார்கள். ஆதலால் நீங்களும் ஆயிரம் செல்வங்களை அளிக்கும் அக்கினியை யக்ஞத்திலே அவனையே கடமைச் செயல்களாலும் பாக்களாலும் போற்றுங்கள்.



4. மனைகளை அளிக்கும் அக்கினியே! நீ எந்த மனிதனைச் செல்வத்துக்கு விரும்புகிறாயோ, எவன் உனக்கு அவிகளை அளிக்கிறானோ, அவன் தானாகவே மகத்தான செல்வத்தின் தலைவனும், துதிகளைக் கூறுபவனுமான வீரப் புதல்வனைப் பெறுகிறான்.

5. புருவசுவே! அவன் தன் குதிரையால், பகைவனின் கெட்டியான கோட்டைகளிலிருந்து உணவை எடுத்துக் கொள்கிறான். அவன் அழியாத செல்வத்தை ஏந்துகிறான். நாங்களும் தேவனான உன்னிலிருக்கும் விரும்பப்படும் செல்வங்களையெல்லாம் ஏந்துகிறோம். 7681

6. ஹோதாவும், இன்பமுடனிருப்பவனும், மனிதர்களுக்கு எல்லாச் செல்வங்களை அளிப்பவனுமான அக்கினிக்கு ஸ்தோமங்கள் மதமளிக்கும் ஸோமபாண்டங்களைப் போல் இயங்குகின்றன.

7. அழகனே! சனங்களின் தலைவனே! தேவர்களை விரும்புபவர்களும் உத்தம தானமுள்ளவர்களுமான தலைவர்கள் தேரிலே இணைக்கப்பட்ட குதிரையைப்போல் சொற்களால் போற்றுகிறார்கள். எங்களுக்குப் புதல்வர்களும் பேரர்களும் நிறைந்த செல்வ நிதியை அளிக்கவும்.

8. பாக்களைப் பாடுபவர்களே! உத்தம தானமுள்ளவனும், ஒளியோடு பிரகாசிப்பவனுமான அக்கினியைப் பாடுங்கள்.

9. செல்வனும் சிறப்புள்ளவனுமான அக்கினி அழைக்கப்பட்டு சொலிப்பிக்கப்படுங்கால் வழிபடுபவர்களுக்குக் குழந்தைகளோடு மிக்க உணவைத் தருகிறான். அவனுடைய சதா புதியதாயிருக்கும் ஸுமதி எப்பொழுதும் எல்லாவித உணவோடு எங்களுக்குத் தோன்றுக.

10. போற்றுபவனே! அதிதியும் அன்பர்களில் அன்பனும் தேர்களைச் செலுத்துபவனுமான அக்கினியைப் போற்றவும். 7686

11. அறிபவனும், யக்ஞாருகனும், எழும் செல்வங்களைத் தருபவனும், மிக்கப் புகழுள்ளவனும், எங்கள் யக்ஞத்தால் போரை நடத்தத் துரிதமாகுங்கால், இறக்கத்திலே விழும் நீர் அலைகளைப்போல் தடுப்பதற்கற்ற சுவாலைகளுள்ளவனுமான அக்கினியைப் போற்றவும்.

12. நம்முடைய அதிதியும், மணிகளை அளிப்பவனும், பலரால் போற்றப்படுபவனும், தேவர்களின் உத்தம ஹோதாவும், உத்தம யக்ஞத்தைச் செய்பவனுமான அக்கினி எங்களிடம் வருவதை எவனும் தடுக்காமலிருப்பானாக.

13. மணிகளை அளிப்பவனே! அக்கினியே! துதிப்பவர்கள் எத்தன்மையோடு உன்னை அணுகினாலும் அவர்கள் துன்பமாகாமலிருப்பார்களாக. அவியை அளித்து யக்ஞத்தை நடத்துபவன் நீ. யாகத்தை வகிக்க உன்னைத் துதிக்கிறான்.

14. அக்கினியே! மருத்துக்களின் நண்பனான நீ ஸோமத்தைப்பருக ருத்திரர்களோடு வா. ஸோபரியின் நல்ல துதிக்கு வா. எங்களுடைய யக்ஞத்திலே நீயே இன்பமாகவும். 7690

மண்டலம் எட்டு

ஸூக்தங்கள் 123: இருக்குக்கள் 1716

✶

எட்டாவது மண்டலம் முற்றிற்று

# ஒன்பதாவது மண்டலம்

## 1. பவமான ஸோமன்

### 724. மதுச்சந்தஸன் விசுவாமித்திரன்

1. ஸோமனே! இந்திரனுடைய பானத்துக்காகப் பொழியப்பட்ட நீ, இன்புறுத்தும் இனிய தாரையோடு பெருகவும்.

2. அரக்கரழிப்பவனும், விசுவங் காண்பவனுமான அவன் பொன்னால் அதப்பட்டதும், மரப்பாண்டத்தோடு சேர்ந்திருப்பதுமான தன் இடத்திலே இறங்குகிறான்.

3. நீ செல்வங்களைத் தாராளமாயளிப்பவனாயிருக்கவும். பகைவர்களை அழிப்பவனாயிருக்கவும். செல்வர்களின் செல்வங்களை எங்களுக்களிக்கவும்.

4. நீ மகத்தான தேவர்களின் யக்ஞத்துக்கு உணவோடு வா. எங்களுக்குப் புகழையும், பலத்தையும் செலுத்தவும்.

5. சொட்டும் ஸோமனே! நாங்கள் உன்னிடம் வருகிறோம். உனக்கே எங்களுடைய இந்த வந்தனம் தினந்தோறும் தோன்றுகிறது. எங்களுடைய தோத்திரங்கள் எல்லாம் உன்னையே நாடுகின்றன. வேறு எவனிடமும் செல்லவில்லை. 7695

6. சூரியனுடைய புதல்வி தன்னுடைய நித்தியமாயும் பரந்திருப்பதுமான குழலால் உன்னுடைய பாயும் தாரைகளை சுத்தப்படுத்துகிறாள்.

7. பத்து சகோதரிகளான விரல்கள் யக்ஞத்திலே அவியின் கடைத்தினத்திலே உன்னைப் பற்றுகின்றன.

8. விரல்கள் அதை எடுக்கின்றன. சலசருமத்தைப் பிரகாசிக்கும் ஸோமத்தை விரல்கள் பிழிகின்றன. இரஸம் மூவ்விதமாகிறது. பகைவரையழிக்கிறது.

9. கொல்லத்தகாத பசுக்கள் இந்த ஸோமத்தைப் பாலோடு இந்திரனுடையப் பானத்துக்குச் சேர்கின்றன.

10. இந்த ஸோமத்திலே இந்திரன் எல்லாப் பகைவர்களேயும் அழிக்கிருன். செல்வங்களைத் தருகிருன். 7700

## 2. பவமான ஸோமன்

### 725. மேதாதி காண்வன்

1. ஸோமனே! தேவர்களை விரும்பும் நீ, பவித்திரத்தின் வழியாய்ப் பாயவும். இந்துவே! வர்ஷிப்பவனான நீ, இந்திரனில் நுழையவும்.

2. இந்துவே! மகானும், வர்ஷிப்பவனும், புகழுள்ளவனும், ஏந்துபவனுமான நீ, எங்களிடம் உணவைச் செலுத்தவும். உன்னுடைய இடத்திலே உட்காரவும்.

3. பிழியப்பட்டவனும், படைப்பவனுமான ஸோமனின் தாரைகள் மதமளிக்கும் அமுதத்தைக் கறக்கின்றன. உத்தமச் செயல்களுள்ள அவன் சலங்களிலே தன்னை மறைத்துக் கொள்கிருன்.

4. பால்களில் நீ மறைந்து கொள்ளுங்கால், மிக்கப் பெரியவனான உன்னிடம் பெருகும் மகத்தான சலங்கள் பாய்கின்றன.

5. தாங்குபவனும், சுவர்க்கத்தை ஏந்துபவனும், எங்களை விரும்புபவனும், சமுத்திரமுமான ஸோமன் சலத்திலே சுத்தமாகிருன். அவன் பவித்திரத்தினுள் ஊற்றப் படுகிருன். 7705

6. வர்ஷிப்பவனும், ஹரியும், மகானும், தண்பனைப் போல் அழகாயிருப்பவனுமான ஸோமன், சப்திக்கிருன். அவன் சூரியனோடு சேர்ந்து பிரகாசிக்கிருன்.

7. இந்துவே! எங்கள் மதத்துக்காக நீ சொட்டுங்கால் உன்னை எழில்படுத்தும் தீவிர மொழிகள், உன் திறத்தால் தூய்மையாகின்றன.



8. பகையழிக்கும் வழிபடுபவனுக்கு மகத்தான உலகத்தை யளிக்கும் உன்னிடம் நாங்கள் மதத்துக்காக வேண்டுகிருேம். உன்னுடைய துதிகள் மகத்தானவை.

9. இந்துவே! இந்திரனை விரும்பும் நீ, பெய்யும் மேகத்தைப் போல் அமிருதத் தாரையோடு எங்களுக்குப் பொழியவும்.

10. இந்துவே! யக்ஞத்தின் பழைய ஆத்மாவான நீ, எங்களுக்குப் பசுக்களையும், குதிரைகளையும், குழந்தைகளையுமளிப்பவனாயிருக்கிருேய். 7710

## 3. பவமான ஸோமன்

### 726. ஆஜீகர்தி சுனச்சேபன்

1. இந்தத் தேவனும் அமுதனுமான ஸோமன் யக்ஞ கலசங்களின் மீது அமர பறவையைப் போல் பறந்து வருகிருன்.

2. விரல்களால் பிழியப்பட்ட இந்தத் தேவனான ஸோமன் தடைபடாமல் பெருகிப் பகைவர்களை எதிர்த்துப் பாய்கிருன்.

3. பாயும் இந்தத் தேவனான ஸோமன், யக்ஞத்தை விரும்பும் அறிஞர்களால் போருக்குக் குதிரையைப் போல் துதிகளோடு அலங்கரிக்கப்படுகிருன்.

4. இந்த சூரன் பெருகுங்கால் விரும்பத்தகுந்த எல்லாப் பொருள்களையும் தன் ஆற்றலால் பற்றுபவன் போல் இருக்கிருன். அவற்றை எங்களுக்கு அளிக்க விரும்புகிருன்.

5. இந்தத் தேவனான ஸோமன் பெருகுங்கால் தேரைப் போல் துரிதமாகிருன். தன் தானங்களை அளிக்கிருன். அனைவரும் செவியுற தன் குரலை எழுப்புகிருன். 7715

6. இந்தத் தேவனான ஸோமன் அறிஞர்களால் போற்றப்பட்டு அளிக்கும் தலைவனுக்குச் செல்லும் சலங்களினுள் பாய்கிருன்.

7. தாரையோடு பெருகுங்கால் ஸோமன் சப்தத்தைச் செய்பவனும் உலகங்களைக் கடந்து சுவர்க்கத்துக்குச் செல்லுகிறான்.

8. ஸோமன் பெருகுங்கால் யக்ஞத்தைப் பூர்த்தி செய்து இம்ஸையற்றவனாகி உலகங்களைக் கடந்து சுவர்க்கத்துக்குச் செல்லுகிறான்.

9. பொன் நிறமுள்ள தேவனான இந்த ஸோமன் பழைய பிறவியால் தேவர்களுக்காகப் பிழியப்பட்டு பவித்திரத்தினுள் செல்லுகிறான்.

10. பல செயல்களுள்ள இந்த ஸோமன் தோன்றியவுடன், உணவைத் தோற்றுவித்து, பொழியப்பட்டு, தாரையோடு பெருகுகிறான். 7720

## 4. பவமான ஸோமன்

### 727. ஹிரண்ய ஸ்தூபன் ஆங்கிரஸன்

1. பவமான ஸோமனே! மகத்தான உணவே! நீ தேவர்களை யஜிக்கவும். அரக்கர்களை அழிக்கவும். எங்களைச் செல்வப்படுத்தவும்.

2. ஸோமனே! எங்களுக்கு சோதியை யளிக்கவும். எங்களுக்குச் சுவர்க்கத்தை யளிக்கவும். எல்லா சௌபாக்கியங்களையும் அளிக்கவும். எங்களைச் செல்வப்படுத்தவும்.

3. ஸோமனே! எங்களுக்கு ஆற்றலை யளிக்கவும். அறிவை அளிக்கவும். பகைவர்களை அழிக்கவும். எங்களை மேன்மைப் படுத்தவும்.

4. சுத்தப்படுத்துபவர்களே! இந்திரனுடைய பானத்துக்காக ஸோமத்தைச் சுத்தப்படுத்துங்கள். ஸோமனே! எங்களை மேன்மைப்படுத்தவும்.

5. ஸோமனே! உன் அறிவாலும் பாலனங்களாலும் எங்களைச் சூரியனுக்குச் செலுத்தவும். எங்களை மேம்படுத்தவும். 7725



6. ஸோமனே! உன் அறிவாலும் பாலனங்களாலும் நாங்கள் நீண்டகாலம் சூரியனைக் காண்போமாக. எங்களை மேம்படுத்தவும்.

7. ஒளிப்படையுள்ள ஸோமனே! இரு உலகிலுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும். எங்களை மேம்படுத்தவும்.

8. போரிலே வெல்லப்படாதவனும், பகைவர்களை வெல்லுபவனுமான நீ, எங்களிடம் செல்வத்தைச் செலுத்தவும். எங்களை மேம்படுத்தவும்.

9. பவமான ஸோமனே! அறிஞர்கள் நாங்கள் ஏந்தப்பட யக்ஞங்களால் உன்னைப் போற்றுகிறார்கள். எங்களை மேன்மைப்படுத்தவும்.

10. இந்துவே! எங்களுக்கும் பலவிதமாயிருப்பதும் குதிரைகளிருப்பதும் அனைத்தையும் பற்றுவதுமான செல்வத்தை அளிக்கவும். எங்களை மேன்மைப்படுத்தவும். 7730

## 5. ஆப்பிரீ சூக்தம்

### 728. அஸித அல்லது தேவல காசியபன்

ஸமிந்தனம்

1. மிக்கத் துலங்குபவனும், அனைத்தின் தலைவனும், வர்ஷிப்பவனும், பவமானனுமான ஸோமன் சப்திக்கிறான், இன்புறுத்துகிறான். பிரகாசிக்கிறான்.

தநூநபாதன்

2. பவமானனான தநூநபாதன் உச்சத்திலே தன் ஒளியைக் கூர்மை செய்து கொண்டு வானின் வழியால் செல்லுகிறான்,

இளை

3. செல்வத்தை யளிப்பவனும், துதியாருகனும், துலங்குபவனும், பவமானனுமான ஸோமன் சலதாரைகளோடு பெருகி பலத்தோடு பிரகாசிக்கிறான்.

தருப்பை

4. ஹரியும் தேவனுமான ஸோமன் யக்ஞத்திலே கிழக்கு முகமாய்த் தருப்பையைப் பரத்தி, தன் திறத்தால் பாய்கிறான்.

கதவுகளான தேவிகள்

5. பிரகாசமாயுள்ள பொன்மயக் கதவுகள் பவமான ஸோமனோடு போற்றப்பட்டு, பரந்த வானிலிருந்து எழு கின்றன. 7735

உஷையும் இரவும்

6. பவமான ஸோமன் அழகிய யுவதிகளைப் போல் நல்ல அங்கமுள்ளவர்களும், மகத்தாயும், பெரியவர்களாயு முள்ள உஷையையும் இரவையும் விரும்புகிறான்.

இரு ஹோதாக்கள்

7. நான் தேவ ஹோதாக்களும், மனிதர்களைக் காண் பவர்களுமான இரு தேவர்களை அழைக்கிறேன். பவமானன் பிரகாசமுள்ளவனாயிருக்கிறான். வர்ஷிப்பவனாயிருக்கிறான்.

மூன்று தேவிகள்

8. மூன்று அழகிய தேவிகளான பாரதியும், ஸரஸ்வதி யும், மகத்தான இளையும் எங்களுடைய இந்த பவமான ஸோமயக்ஞத்துக்கு வருவார்களாக.

துவஷ்டா

9. நான் முதல் பிறந்தவனும், பாலகனும், தலைவனு மான துவஷ்டாவை அழைக்கிறேன். பொன்னிறமுள்ள பவமானான இந்துவே இந்திரன். அவனே வர்ஷிக்கும் பிரஜாபதியாயுமிருக்கிறான்.

வனஸ்பதி

10. பவமானனான ஸோமனே! நீ உன்னுடைய அமிருத தாரையால் பசுமையாயும், பிரகாசமாயும், பொன் நிறமாயும், ஆயிரங்கிளைகளுமுள்ள வனஸ்பதியை வண்ணப் படுத்தவும்.



சுவாஹா

11. விசுவே தேவர்களான வாயுவே! பிரகஸ்பதியே! சூரியனே! அக்கினியே! இந்திரனே! நீங்கள் இணைந்து, ஸோமமளிக்கப்படும் யக்ஞத்துக்கு வாருங்கள். 7741

## 6. பவமான ஸோமன்

### 729. அஸிதன் அல்லது தேவலன் – காசியபன்

1. ஸோமனே! வர்ஷிப்பவனும், தேவர்களை நாடு பவனும், எங்களை விரும்புபவனுமான நீ, உன்னுடைய பதமளிக்கும் தாரையோடு கம்பளப் பவித்திரத்துனுள் பாயவும்.

2. இந்துவே! நீ இந்திரனுக மதமளிக்கும் இரஸத்தை வர்ஷிக்கவும். எங்களுக்கு வலிய குதிரைகளை அளிக்கவும்.

3. பொழியப்படும் நீ, பழைய மதமளிக்கும் ரஸத்தைப் பவித்திரத்தின் வழியாகப் பெய்யவும். எங்களுக்குப் பலத் தையும் உணவையும் பொழியவும்.

4. துரிதமாய்ச் சொட்டும் திவலைகள் சுத்தமாகுங்கால் இந்திரனைப் பின்பற்றுகின்றன. இறக்கத்திலே பாயும் சலங் களைப்போல் அவனிடம் சேர்கின்றன.

5. அவன் பவித்திரத்தைக் கடந்து வனத்திலே விளையாடுங்கால் பத்து யுவதிகள் அவனைக் குதிரையைப் போல் சுத்தப்படுத்துகிறார்கள். 7746

6. விருப்பங்களை வர்ஷிப்பவனும், தேவர்களுடைய பானத்துக்காகவும், எங்களுடைய மதத்துக்காகவும் பொழி யப்பட்டவனான ஸோமனைப் போரிலே பலத்துக்காகப் பாலோடு கலக்கவும்.

7. தேவனான ஸோமன் பொழியப்பட்டவுடன் தேவ னான இந்திரனுக்குத் தாரையோடு பெருகுகிறான். அவனு டைய பால் இந்திரனைப் புட்டிப்படுத்துகிறது.

8. யக்ஞத்தின் ஆத்மாவும், பொழியப்பட்டவனுமான ஸோமன் பாய்கிறன். வேகத்தோடு விருப்பங்களைத் தருகிறன். அவன் தன்னுடைய கவித்தன்மையைப் பாலித்துக் கொள்கிறன்.

9. மிக்க மதமளிப்பவனும், இந்திரனை விரும்புபவனுமான நீ, மதப்படுத்தும் ரஸத்தை இந்திரனுக்காகப் பெருக்குங்கால் யக்ஞ சாலையிலே சப்தங்களை எழுப்புகிறய். 7750

## 7. பவமான ஸோமன்

### 730. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. ஸோமத்தின் உத்தம தாரைகள் இந்திர ஞேடு ஐக்கியத்தை உணர்ந்து ருத வழியால் யக்ஞத்தில் பாய்கின்றன.

2. அவிகளின் நடுவே மிக்கப் போற்றத் தகுந்த ஸோமன சலங்களிலே அமிழ்கிறன். ஸோமனின் முதன்மையான தாரைகள் பெருகுகின்றன.

3. முதல்வனும், வர்ஷிப்பவனும், சத்தியனும், இம்ஸையற்றவனுமான ஸோமன் யக்ஞ தனத்தை நோக்கி முழங்குகிறன்.

4. கவியான ஸோமன் செல்வங்களை ஏந்திக்கொண்டு வழிபடுபவர்களின் துதிகளைச் சுற்றி வருங்கால் சுவர்க்கத்திலுள்ள மகத்தான இந்திரன் யக்ஞத்துக்கு வர ஆர்வமுள்ளவனுகிறன்.

5. அறிஞர்கள் பவமானனுன ஸோமனை ஊக்கப்படுத்துங்கால், அவன் எதிர்ப்பவர்களான மனிதர்களையும், அரக்கர்களையும் அழிக்கிறன்.

6. தேவர்களுக்குப் பிரியனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் பாலோடு சேர்ந்து கம்பளப் பவித்திரத்திலே அமர்ந்து சப்தத்தை எழுப்புங்கால் அவன் துதியால் போற்றப்படுகிறன்.



7. ஸோமச் செயல்களிலே ரமிப்பவன் மதத்தோடு வாயுவினிடமும், இந்திரனிடமும், அசுவினிகளிடமும் செல்லுகிறன்.

8. இனிய ஸோம தாரைகள் மித்திரனுக்கும், வருணனுக்கும், பகனுக்கும் பாய்கின்றன. வழிபடுபவர்கள் அவனுடைய மேன்மைகளை அறிந்து இன்பமுடனுகிறர்கள்.

9. சோதியே! புவியே! நாங்கள் மதமளிக்கும் இந்த ஸோமான்னத்தை அடைய எங்களுக்குச் செல்வத்தையும், உணவையும், நிதிகளையுமளியுங்கள். 7759

## 8. பவமான ஸோமன்

### 731. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. இந்த ஸோமங்கள் இந்திரனுடைய வீரியத்தைப் பலப்படுத்துகின்றன. இந்திரனுக்குப் பிரியமான விருப்பத்தை வடிக்கின்றன.

2. சுத்தமாய்ப் பாய்பவையும், சிருவங்களை நிரப்புபவையும், வாயுவுக்கும் அசுவினிகளுக்கும் செல்பவையுமான ஸோமங்கள் எங்கள் வீரியத்தை ஏந்துக.

3. ஸோமனே! சுத்தப்படுத்தப்படுபவனும், இந்திரனைத் திருப்திப்படுத்த விரும்பப்படுபவனுமான நீ, அவன் யக்ஞதானத்தில் அமர அவனை ஊக்கப்படுத்துவாயாக.

4. உன்னைப் பத்து விரல்கள் வண்ணப்படுத்துகின்றன. ஏழு ஹோதாக்கள் ஊக்கப்படுத்துகிருர்கள். துதிப்பவர்கள் உன்னை உற்சாகப்படுத்துகிருர்கள்.

5. சலத்திலும் கம்பளப் பவித்திரத்திலும் நீ பாயுங்கால் நாங்கள் உன்னைத் தேவர்களின் மதத்துக்காகப் பாலால் போர்த்துகிறேம். 7764

6. கலசங்களிலே சுத்தமாகி பிரகாசமாயும், பசுமையாயுமுள்ள ஸோமன் பசுவிலிருந்து வரும் ஆடையை அணிந்துகொள்கிறன்.

7. இந்துவே! செல்வர்களான எங்களிடம் பாயவும். எங்கள் பகைவர்களையெல்லாம் நீக்கவும். நண்பனிடம் பெருகவும்.

8. ஸோமனே! சோதியிலிருந்து மழையைப் பெய்யவும். புவியின் மீது செழிப்பைப் பொழியவும். போர்களிலே போர்களிலே எங்களுக்கு ஆற்றலை ஏந்தவும்.

9. நாங்கள் மனிதர்களைக் காண்பவனும், அனைத்தையும் அறிபவனும், இந்திரனுடைய பானமுமான உன்னைப் போற்றி, பிரஜைகளையும் உணவையும் பெருவோமாக. 7768

## 9. பவமான ஸோமன்

### 732. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. கவியும் கவிச்செயலுமுள்ள ஸோமன் இரு பலகைகளின் நடுவில் வைக்கப்பட்டு பொழியப்பட்டவுடன் சோதிக்கு மிக்கப் பிரியமாயுள்ள கற்களினிடஞ் செல்லுகிறான்.

2. உன்னைப் போற்றுபவனும், உனக்கு உரியனும், கபடமற்றவனுமான மனிதனிடம் அவனுடைய உணவுக்குத் தகுந்த செழுமையுள்ள மிக்கச் செழிப்பான தாரையோடு பெருகவும்.

3. மகானும் சுத்தனுமான அந்தப் புதல்வன் தோன்றியவுடன், பொருள்களையெல்லாம் பிறப்பிப்பவையும், யக்ஞத்தைச் செழிப்பிப்பவையும், மகத்தாயுமுள்ள பெற்றோர்களான சோதியையும், புவியையும் ஒளிப்படுத்துகிறான்.

4. விரல்களால் பிழியப்பட்ட ஸோமன் முதல்வனும் தேயாதவனுமான அவன் தன்னைச் செழிப்பித்தவையும் கபடமற்றவையுமான ஏழு நதிகளை இன்புறுத்துகிறான்.

5. இந்திரனே! உன்னுடைய விரதத்திலே விரல்கள் உனக்கு சேவை செய்ய விளங்குபவனும், அழிவற்றவனும், எப்பொழுதும் இளைஞனுயிருப்பவனுமான ஸோமனை ஏந்துகின்றன. 7773



6. ஏந்தும் அமிருதனும், அவிகளைத் தேவர்களிடம் செலுத்துபவனுமான ஸோமன் ஏழு நதிகளைக் காண்கிறன், கிணற்றைப்போல் நிறைந்துள்ள அவன் தேவிகளான நதிகளைத் திருப்தி செய்தான்.

7. ஆண்மகனே! ஸோமனே! யக்ஞதினங்களிலே எங்களைப் பாலிக்கவும். சுத்தப்படுத்துபவனே! போராடுவதற்குரிய அரக்கர்களை ஒழிக்கவும்.

8. எங்களுடைய போற்றுவதற்குரிய புதிய துதிக்கு வழியிலே துரிதமாகவும். பூர்வத்தில் போல் உன்னுடைய காந்தியைப் புலப்படுத்தவும்.

9. பவமானவனே! சுத்தப்படுத்துபவனே! நீ எங்களுக்குப் பசுக்களோடும், குதிரைகளோடும் மகத்தான உணவைத் தருகிறாய். எங்களுக்கு அறிவை அளிக்கவும். விரும்பும் அனைத்தையுமளிக்கவும். 7777

## 10. பவமான ஸோமன்

### 733. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. உணவை விரும்பும் ஸோமரஸங்கள் தேர்களைப் போலும், குதிரைகளைப்போலும் முழங்கிக்கொண்டு செல்வத்துக்காக வந்திருக்கின்றன.

2. யக்ஞத் தேர்களைப்போல் வரும் அவர்கள் அறிஞர்களின் கைகளிலே, தொழிலாளிகளின் கைகளிலே சுமைகளைப்போல் ஏந்தப்படுகிறார்கள்.

3. ஸோமர்கள் பாலால், துதிகளால் அரசர்களைப் போல் திருமஞ்சனமாகிறார்கள். ஏழு அறிஞர்களால் யக்ஞத்திலே போற்றப்படுகிறார்கள்.

4. ஸோமரஸங்கள் பிழியப்படுங்கால் மகத்தான மொழியோடு பொழியப்படுகிறார்கள். அவர்கள் மதப்படுத்தும் தாரையோடு பெருகுகிறார்கள்.

5. விஸ்வதனுடைய பானங்கள் உஷையின் செல்வத்தைப் புலப்படுத்துகின்றன. பாயும் ரஸங்கள் சப்தத்தை எழுப்புகின்றன. 7782

6. துதிகளைச் செய்யும் பழைய கர்த்தாக்களும், ஸோமத்தையளிப்பவர்களுமான மனிதர்கள் யக்ஞத்தின் கதவுகளைத் திறக்கிருர்கள்.

7. ஒருமையுடன் ஏழு ஹோதாக்கள் பந்துக்களைப் போல் ஏகனுள ஸோமனுடைய இடத்தை நிரப்புகிருர்கள். யக்ஞத்திலே அமருகிருர்கள்.

8. நான் யக்ஞத்தின் நாபியை என் நாபியினுள் செலுத்துகிறேன். என்னுடைய கண் சூரியனுேடு சேர்கிறது. நான் கவியின் புதல்வனை நிரப்புகிறேன்.

9. அறிஞர்களால் பருகப்பட்ட பிறகும் ஸோமத்தை இந்திரன் அன்போடு பார்க்கிருன். 7786

## 11. பவமான ஸோமன்

### 734. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. தலைவர்களே! தேவர்களை யஜிக்க விரும்புபவனும் பவமானனுமான இந்த ஸோமனைப் பாடுங்கள்.

2. ஸோமனே! உன்னுடைய தேவத்தன்மையுள்ளதும், தேவர்களை விரும்புவதுமான இரஸத்தை, தேவனுன இந்திரனுக்கு இனிய பாலோடு அதர்வாணர்கள் கலந்தார்கள்.

3. அரசனே! நீ எங்கள் பசுக்களுக்கும், குதிரைகளுக்கும், சனங்களுக்கும், ஓஷதிகளுக்கும் செல்வத்தைப் பொழியவும்.

4. பழுப்பு நிறமுள்ளவனும், சுயபலமுள்ளவனும், சிகப்பனும், சோதியைப் பற்றுபவனுமான ஸோமனைப் பாடுங்கள்.

5. கைகளால் இயக்கப்பட்டதும், கற்களால் பிழியப்பட்டதுமான ஸோமத்தைச் சுத்தப்படுத்துங்கள். மதம் அளிக்கும் இரஸத்தோடு இனிய பாலைச் சேருங்கள். 7791



6. வணக்கத்தோடு அவனை அனுகுங்கள். இரஸத்தைத் தயிரோடு சேருங்கள். இந்திரனுக்கு ஸோமத்தை அளியுங்கள்.

7. ஸோமனே! பகைவர்களை அழிப்பவனும், அறிஞனும், தேவர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனுமான நீ, எங்கள் பசுக்களுக்குச் செழிப்பையளிக்கவும்.

8. ஸோமனே! மனத்தை அறிபவனும், மனத்தின் தலைவனுமான நீ, இந்திரன் மதத்துக்காகப் பானஞ் செய்யப் பருகப்படுகிருய்.

9. இந்துவே! பவமான ஸோமனே! உத்தம வீரப் புதல்வனுேடு எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். அதை எங்களுக்கு இந்திர நட்போடு அளிக்கவும். 7795

## 12. பவமான ஸோமன்

### 735. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. பிழியப்பட்ட மிக்க இனிமையான ஸோமபானங்கள் யக்ஞ ஸதனத்திலே இந்திரனுக்காக ஊற்றப்படுகின்றன.

2 அறிஞர்கள் இந்திரனை ஸோமபானத்துக்காகக் கன்றுகளை அழைக்கும் தாய்ப் பசுக்களைப் போல் அழைக்கிருர்கள்.

3. மதத்தைத் தரும் அறிஞனை ஸோமன் யக்ஞ ஸதனத்திலே வசிக்கிருன். நதிகளின் அலைகளோடு கலக்கப்பட்டு பாட்டின் மத்திய சுருதியிலே விளங்குகிருன்.

4. பேரறிஞனும், கவியும், நன்கு காண்பவனுமான ஸோமன் வானின் நாபியிலே கம்பளப் பவித்திரத்திலே போற்றப்படுகிருன்.

5. இந்து பவித்திரத்தைக் கடந்ததும், கலசங்களில் சேர்ந்திருப்பதுமான ஸோமனைத் தழுவுகிருன். 7800

6. வானின் வெளியிலிருக்கும் இந்து அமுதமளிக்கும் மேகத்தை இன்புறுத்தி சத்தத்தை எழுப்புகிருன்.

7. நித்தியத் துதியுள்ளவனும், வனஸ்பதியும், அமுதத்தைப் பொழிபவனும், மானிடர்களின் சந்ததிகளை இன்புறுத்துபவனுமான ஸோமன் எங்களுடைய யக்ஞங்களின் நடுவே விளங்குகிறான்.

8. கவியான ஸோமன் சோதியிலிருந்து பிரேரிக்கப்பட்டு அறிஞனுடைய பிரியமான இடங்களுக்குத் தாரையோடு பாய்கிறான்.

9. பவமான ஸோமனே! எங்களுக்கு உத்தம இயல்புள்ளதும் ஆயிரம் காந்திகளுமுள்ள செல்வத்தை அளிக்கவும். 7804

## 13. பவமான ஸோமன்

### 736. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. சுத்தமான ஸோமன் ஆயிரந் தாரைகளோடு பெருகி கம்பளப் பவித்திரத்தைக் கடந்து வாயுக்காகவும், இந்திரனுக்காகவும் தூய பாண்டத்துக்குச் செல்லுகிறான்.

2. தேவர்களுடைய பாலனத்தை விரும்பும் நீங்கள் தேவர்களுடைய பாலனத்துக்காகப் பொழியப்பட்டதும், சுத்தப்படுத்துவதும், அறிவுள்ளதுமான ஸோமத்தைப் பாடுங்கள்.

3. ஆயிரம் ஆற்றலுள்ளவையும் போற்றப்படுபவையுமான ஸோமங்கள் உணவுக்காகவும், தேவர்களின் பானத்துக்காகவும் பெருகுகின்றன.

4. இந்துவே! நாங்கள் உணவைப் பெற மகத்தான தாரைகளையும் பிரகாசமாயுள்ள உத்தம பலத்தையும் பொழியவும்.

5. பொழியப்பட்டவுடன் அந்த திவ்ய ஸோமங்கள் ஆயிரக்கணக்கான செல்வத்தையும் உத்தம பலத்தையும் எங்களுக்குப் பொழிக. 7809

6. தேரோட்டிகளால் போருக்குப் பிரேரிக்கப்படும் குதிரைகளைப் போல் துரிதமாய்ப் பாயும் ரஸங்கள் தசாபவித்திரத்தின் வழியாய் விரைகின்றன.



7. முழங்கும் ஸோம ரஸங்கள் கன்றுகளினிடம் கதறிச் செல்லும் பசுக்களைப் போல் கலசத்துக்குப் பாய்கின்றன. அறிஞர்களின் கைகளில் அவை ஏந்தப்படுகின்றன.

8. இந்திரனால் ஏற்கப்படுபவனும், அவனை இன்புறுத்துபவனுமான நீ, முழங்குங்கால் எங்களுடைய சத்துருக்களையெல்லாம் அழிப்பாயாக.

9. சுத்தர்களே! அனைத்தையும் காண்பவர்களும், யஜிக்காதவர்களைத் தாழ்த்துபவர்களுமான நீங்கள், ருதத்தின் இடத்திலே அமருங்கள். 7813

## 14. பவமான ஸோமன்

### 737. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. கவிஞனான ஸோமன் நதிகளின் அலைகளிலே ஆசிரயமாகி எங்கும் பரவுகிறான். பலரால் விரும்பப்படும் சத்தத்தை எழுப்புகிறான்.

2. ஸமபந்துக்களான ஐந்து யக்ஞ சனத் தலைவர்கள் யாகங்களைப் பூர்த்திசெய்ய விரும்பி தங்கள் துதியால் ஏந்தும் ஸோமனைப் போற்றுகிறார்கள்.

3. இச் சக்தியுள்ள ஸோமத்தின் ரஸம் பாலாலும் தயிராலும் போற்றப்படும்போது அதில் எல்லாத் தேவர்களும் இன்புறுகிறார்கள்.

4. அது பவித்திரங்களிலிருந்து இறங்கி, பாத்திரத்தினுள் பாய்கிறது. பிறகு ஆடையின் கண்களின் வழியாய்ச் சென்று அது இந்த யக்ஞத்திலே தன் நண்பனான இந்திரனோடு சேர்கிறது.

5. அவன் அறிஞனுடைய பெண்களால், அழகிய இளைஞனைப் போல் அலங்கரிக்கப்படுகிறான்! அவன் பாலைத் தன் ஆடையைப் போல் செய்துகொள்கிறான். 7818

6. விரல்களால் பிழியப்பட்ட பசுவின் பாலோடு அவன் கலந்துகொள்ள வக்கிரமாய்ச் செல்லுகிறான்.

அவன் வழிபடுபவனால் அறியப்படும் சத்தத்தை எழுப்புகிறான்.

7. உணவின் தலைவனான ஸோமனைப் பிழிய விரல்கள் சேர்கின்றன. அவை வலிய ஸோமனின் அங்கத்தைப் பற்றுகின்றன.

8. ஸோமனே! சோதியிலும் புவியிலுமுள்ள செல்வங்களையெல்லாம் ஏந்தும் நீ, விரும்பும் மனத்தோடு எங்களிடம் வா. 7821

## 15. பவமான ஸோமன்

### 738. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. விரல்களால் பிழியப்பட்ட இந்த வீரனான ஸோமன் இந்திரனுடைய இடத்துக்குத் துரிதத் தேர்களிலே யக்ஞத்தால் விரைகிறான்.

2. இந்த ஸோமன் அமிருதர்கள் உட்காரும் மகத்தான யக்ஞத்துக்குப் பல செயல்களை நடத்துகிறான்.

3. தேவர்களுக்கு அளிக்கப்படுங்கால், அவன் சகடத்திலே அமர்த்தப்பட்டு ஒளியுற்ற வழியால் ஏந்தப்பட்டு வருகிறான்.

4. அவன் காளையைப்போல் தன் கொம்புகளை ஆட்டுகிறான். மந்தையின் தலைவன் தன் திறத்தால் செல்வம் ஏந்தும் கொம்புகளைக் கூர் செய்து கொள்கிறான்.

5. நதிகளின் தலைவனான அவன் பொன்மயமாய்ப் பிரகாசிக்கும் கிரணங்களோடு வேகமாய்ப் பாய்கிறான். 7826

6. இந்த ஸோமன் செல்வங்களை மறைத்து வைத்திருந்த அரக்கர்களைத் தக்க சமயத்தில் தாழ்த்தி அழிவுக்குரியவர்களிடம் இறங்குகிறான்.

7. மனிதர்கள் பெருமித உணவை அளிப்பதும், சுத்தப்படுத்துவதற்குரியதுமான இந்த ரஸத்தைக் கலசத்தினுள் பிழிகிறார்கள்.



8. மிக்க மதமளிப்பதும் கூரிய ஆயுதமிருப்பதுமான இந்த ரஸத்தை ஏழு ஹோதாக்களும், பத்து விரல்களும் பிழிகின்றன. 7829

## 16. பவமான ஸோமன்

### 739. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. சோதி புவிகளின் ரஸமான உன்னைப் பிழிபவர்கள் இந்திரனுக்குப் பகையழிக்கும் மதத்தை அளிக்கப் பிழிகிறார்கள். உன் ஓட்டம் துரித குதிரையைப்போல் பாய்கிறது.

2. நாங்கள் திறத்தைத் தருபவனும், பசுக்களையளிப்பவனும், சலத்தைப் போர்த்துபவனுமான ஸோமனை இந்த யக்ஞத்திலே எங்கள் விரல்களால் பாலோடு சேர்க்கிறோம்.

3. பற்றப்படாததும், எதிர்ப்பற்றதும், சலங்களில் இருப்பதுமான ஸோமத்தைப் பவித்திரத்திலே செலுத்தவும். இந்திரன் பருக அதைச் சுத்தப்படுத்தவும்.

4. துதியால் சுத்தமாகும் ஸோமம் பவித்திரத்துக்குச் செல்லுகிறது. யக்ஞத்தோடு பொது இடமான கலசத்திலே நிலைக்கிறது.

5. இந்திரனே! மகத்தான போருக்கு உன்னைப் பலப்படுத்த ஸோமரஸங்கள் உன்னிடம் பாய்கின்றன. 7834

6. ஸோமன் கம்பள ஆடையில் சுத்தமாகி, எல்லாச் சிறப்புக்களையுமடைந்து, பசுக்களின் நடுவே வீரனைப் போல் நிற்கிறான்.

7. சோதியிலிருந்து வரும் மேலான மழையைப்போல் பலப்படுத்தும் ஸோமனின் புட்டிப்படுத்தும் தாரைகள் பவித்திரத்தின் மீது பாய்கிறது.

8. ஸோமனே! மனிதர்களின் நாடுவே நீ வழிபடுபவனைப் பாலிக்கிறாய். நீ ஆடையால் சுத்தமாகி கம்பளப் பவித்திரத்தின் வழியாய் விவிதமாய் ஓடுகிறாய். 7837

## 17. பவமான ஸோமன்

### 740. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. இறக்கத்திலே பாயும் நதிகளைப்போல், பகையழிப் பவையும், பரவுபவையும், வேகமாயுமுள்ள தாரைகள் கல-சத்துக்கு ஓடுகின்றன.

2. பிழியப்படுங்கால் ஸோம பிந்துக்கள் புவியின்மீது பெய்யும் மழையைப்போல் இந்திரனுக்குப் பாய்கின்றன.

3. மதமுள்ளவனும், மதப்படுத்துபவனுமான ஸோமன் பொங்கும் அலைகளோடு அரக்கர்களை அழித்து, தேவர்களை விரும்புபவனாய்ப் பவித்திரத்துக்குப் பாய்கிறான்.

4. அது கலசங்களுக்கு ஓடுகிறது. அது பவித்திரத்தில் ஊற்றப்படுகிறது. அது யக்ஞங்களிலே துதிகளால் பெருகுகிறது.

5. ஸோமனே! நீ மூன்று உலகங்களுக்கு மேலே ஏறி சுவர்க்கத்தை ஒளிப்படுத்துகிறாய். நீ சலனமாகி சூரியனைப் பிரேரிக்கிறாய். 7842

6. யக்ஞங்களை நடத்தும் அறிஞர்கள் எல்லாங் காணும் அவனிடம் அன்புள்ளவர்களாகி, ஸோமனை யக்ஞத்தின் சிரத்திலே போற்றுகிறார்கள்.

7. யக்ஞத் தலைவர்களான அறிஞர்கள் உணவை விரும்பி உணவை அளிப்பவனான உன்னை உத்தமச் செயல்களால் யாகத்துக்குச் சுத்தப்படுத்துகிறார்கள்.

8. ஸோமனே! இனிய தாரையைப் பொழியவும். தீவிர ரஸமாகி கலசத்திலே அமரவும். சலனமுள்ளவனாகி ருதத்துக்காகவும், பானத்துக்காகவும் விளங்கவும். 7845

## 18. பவமான ஸோமன்

### 741. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. கற்களின் நடுவே அழுத்தப்பட்டு பொழியப்பட்ட ஸோமன் பவித்திரத்தின் மீது பாய்கிறான். நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.



2. நீ விப்பிரன். நீ கவிஞன். நீ ஸோமலதையிலிருந்து தோன்றிய இனிய இரஸத்தைத் தருகிறாய். நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

3. தேவர்கள் எல்லாம் சேர்ந்து இன்பமாகி உன் பானத்தை அனுபவிக்கிறார்கள். நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

4. வழிபடுபவனுடைய கைகளிலே விரும்பத்தகுந்த செல்வங்களையெல்லாமளிப்பவன் நீ. போற்றுபவர்களுக்கு நீ அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

5. இந்த மகத்தான சோதியையும் புவியையும் இரு தாய்மார்களைப்போல் கறப்பவன் நீ. போற்றுபவர்களுக்கு நீ அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

6. சோதி புவிகளைச் செல்வங்களால் உடனுக்குடன் நிரப்புபவன் நீ. போற்றுபவர்களுக்கு நீ அனைத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

7. இந்த ஆற்றலுள்ள ஸோமன் சுத்தமாகுங்கால் கலசங்களினுள் குமுறுகிறான். போற்றுபவர்களுக்கு நீ அனைத்தையுந் தருகிறாய். 7852

## 19. பவமான ஸோமன்

### 742. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் சோதியிலும் புவியிலுமுள்ள, விரும்பத்தகுந்ததும் போற்றத்தகுந்ததுமான செல்வத்தையெல்லாம் எங்களுக்களிக்கவும்.

2. ஸோமனே! நீயும் இந்திரனுமே அனைவருக்கும் தலைவர்கள். கோபதிகள். அதிகாரிகளான நீங்கள் எங்கள் செயல்களைச் செல்வப்படுத்துங்கள்.

3. வர்ஷிப்பவன் புனிதமாகுங்கால் மனிதர்களின் நடுவே முனகலுடன் தருப்பையின் மீது சாய்கிறான். பசுமை

நிறமுள்ள அவன் தன் இடத்திலே அமர்கிறன்.

4. விருஷபனுடைய ரதஸிகளின் மீது அருமைப் புதல்வனுடைய தாய்மார்களான தோத்திரங்கள் முழங்குகின்றன.

5. வெண்மையான பாலைத் தருபவையும் கருவை விரும்புபவையுமான இந்த சலங்களினுள் பல கருக்களை சுத்தஞன ஸோமன் நிலைப்படுத்துகிறன்.

6. ஸோமனே! தனிப்பட்டு நிற்பவர்களை எங்களிடம் செலுத்தவும். பகைவர்களைப் பயப்படுத்தவும். பகைவர்களின் செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

7. ஸோமனே! அருகிலோ, தூரத்திலோ இருக்கும் பகைவனுடைய தீரத்தையும் திறமையையும் விலக்கவும். 7859

## 20. பவமான ஸோமன்

### 743. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. கவி பகைவர்களையெல்லாம் ஜயித்துக்கொண்டு தேவர்களின் பானத்துக்காக ஆட்டு உரோமக் கம்பளத்தின் வழியாய்ச் செல்லுகிறன்.

2. பவமான ஸோமன் துதிப்பவர்களுக்குப் பசுக்களோடு ஆயிரக்கணக்கான செல்வங்களைத் தருகிறன்.

3. உன்னுடைய அனுகூலமனத்தால் எங்களுக்கு எல்லாவித செல்வத்தையும் தருகிறுய். எங்கள் துதியால் பெருகுகிறுய். ஸோமனே! எங்களுக்கு உணவை அளிக்கவும்.

4. எங்களுக்கு மகத்தான புகழை அளிக்கவும். அவிச் செல்வர்களான எங்களுக்கு நிலையான செல்வத்தை அளிக்கவும். வழிபடும் எங்களுக்கு உணவை அளிக்கவும்.

5. அற்புதனே! சுத்தனே! ஏந்துபவனே! ஸோமனே! நல்ல செயல்களை நடத்துபவனே! நீ அரசனைப் போல் எங்கள் துதிகளிலே நுழைகிறுய்.



6. அவிகளைச் சுமப்பவனும், சலங்களில் இருப்பவனும், கடப்பதற்குக் கடினமானவனுமான ஸோமன் எங்கள் கைகளால் சுத்தமாகி, கலசங்களிலே அமருகிறன்.

7. ஸோமனே! விளையாடுபவனும், ஈகை மனமுள்ளவனுமான நீ, போற்றுபவனுக்கு உத்தம வீரியத்தைத் தானத்தைப் போல் வழங்கி, நீ பவித்திரத்துக்குச் செல்லுகிறுய். 7866

## 21. பவமான ஸோமன்

### 744. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. பகையழிப்பவையும், மதப்படுத்துபவையும், ஒளி தருபவையும், பெருகுபவையுமான இந்த ஸோமரஸங்கள் இந்திரனுக்குத் துரிதமாகின்றன.

2. பகைவர்களை எதிர்ப்பவையும், அனுகூலஞ் செய்பவையும், பொழிபவனுக்குச் செல்வமளிப்பவையும், போற்றுபவனுக்குத் தாமாகவே உணவைத் தருபவையுமான இவை இந்திரனுக்குப் பாய்கின்றன.

3. பொழியப்பட்ட ஸோமரஸங்கள், அநாயஸமாய்க் கிரீடை செய்துகொண்டு பொதுகலசத்துக்குப் பாய்கின்றன. அவை நதியின் அலையிலே விழுகின்றன.

4. தேரில் இணைக்கப்பட்ட குதிரைகளைப்போல் இந்த சுத்த ஸோமரஸங்கள் எங்களுக்கு விரும்பத்தகுந்த செல்வங்களை யெல்லாம் ஏந்தி வருகின்றன.

5. பொழியப்பட்ட ஸோமரஸங்கள் நாங்கள் விரும்புங்கால் இதுவரை எங்களுக்கு ஒன்றுமளிக்காமலிருந்த இந்த யக்ஞத்தலைவனுக்குப் பலவித செல்வங்களைத் தருகின்றன.

6. போற்றத் தகுந்த ஸாரதியை முன்னே ஸ்தாபிக்கும் பெரிய தலைவனைப்போல் எங்கள் தலைவனுக்கு அறிவை அளிக்கவும். நீ சலத்தோடு பிரகாசித்துக்கொண்டு பெருகவும்.

7. இந்த ஸோமரஸங்கள் யக்ஞத்தை விரும்பின. ஆற்றலுள்ள அவை தங்களுக்கு இடத்தைச் செய்து கொண்டன. அவை வழிபடுபவனுடைய அறிவை ஊக்கப் படுத்தின. 7878

## 22. பவமான ஸோமன்

### 745. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. இந்த ஸோமரஸங்கள் விடப்படுங்கால், தளர்த்தப் பட்ட துரித குதிரைகளைப் போலும், தேர்களைப் போலும் வேகமாய்ப் பாயுங்கால் முழங்குகின்றன.

2. இந்த ஸோமரஸங்கள் வலிய காற்றுகளைப் போலும், பர்ஜன்யனுடைய மழைகளைப் போலும், அக்கினி யின் துரிதமாய்ச் செல்லும் சுவாலைகளைப் போலும் இயங் குங்கால் முழங்குகின்றன.

3. அறிவுள்ள இந்த ஸோமரஸங்கள் தயிரோடு சேர்க் கப்பட்டு, தங்கள் புலனோடு எங்கள் யக்ஞங்களிலே பரவு கின்றன.

4. சுத்தப்பட்டவர்களும், அமிருதர்களுமான ஸோமங் கள், கலசங்களிலிருந்து புறப்பட்டு, உரிய வழிகளையும் உலகங்களையும் கடக்க விரும்பி எப்பொழுதும் களைப்பாகா- மலிருக்கிறார்கள்.

5. விவிதமாய்ச் செல்லும் இவர்கள் சோதி புவிக ளின் எல்லைகளிலும் இந்த உயர்ந்த உலகத்திலும் வியாபக மாகிறார்கள்.

6. இறங்கும் நதிகள் யக்ஞத்தைப் பரத்தும் இந்த உத்தம ஸோமத்தைப் பின்பற்றுகின்றன. இதனால் இந்த யக்ஞம் போற்றப்படுகிறது.

7. ஸோமனே! நீ பணிகளிடமிருந்து ஜயித்த பசுச் செல்வத்தை ஏந்துகிறாய். நீ யக்ஞத்தை நோக்கி மிக்க முழங்குகிறாய். 7880



## 23. பவமான ஸோமன்

### 746. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. கவிகளின் காவ்யங்கள் எல்லாம் பாடப்படுங்கால் ஸோமரஸங்கள் மதப்படுத்தும் இனிய தாரையோடு பொழி யப்பட்டன.

2. பாயும் பழைய குதிரைகள் புதிய இடத்துக்குச் சென்றன. அவை சூரியனை ஒளியளிக்கத் தோற்றுவித்தன.

3. சுத்தப்படுத்துபவனே! யக்ஞம் செய்யாத பகை வனுடைய மனையிலுள்ள செல்வத்தை எங்களிடம் செலுத் தவும். மக்கள் நிறைந்த உணவை எங்களுக்களிக்கவும்.

4. துரிதமாய்ப் பாயும் ஸோமரஸங்கள் மதமளிக்குத் ஸாரத்தைப் பரத்துகின்றன. அவை தேன் சிந்தும் கலசத் துக்குச் செல்லுகின்றன.

5. உலகத்தைத் தாங்குபவனும், இந்திரியத்தை வளர்க்கும் ரஸத்தை ஏந்துபவனும், வீரத்தன்மையுள்ளவ னும், பழிச்சொல்லிலிருந்து காப்பவனுமான ஸோமன் பாய்கிறான்.

6. ஸோமனே! யக்ஞாருகனை நீ, இந்திரனுக்காக வும், தேவர்களுக்காகவும் பாய்கிறாய். இந்துவே! நீ எங் களுக்கு உணவையளிக்க விரும்புகிறாய்.

7. மதத்தில் மிக்க மதமளிக்கும் இந்த ஸோமத்தைப் பருகி தடைபடாத இந்திரன் விருத்திரர்களைக் கொன்றான் அவன் எப்பொழுதும் அவர்களைக் கொல்வானாக. 7887

## 24. பவமான ஸோமன்

### 747. காசியப அஸிதன் அல்லது தேவலன்

1. பொழியப்பட்ட சுத்த ஸோமங்கள் பாய்ந்தன. பாலோடும் தயிரோடும் கலக்கப்பட்ட அவை சலங்களிலே சுத்தமாகின்றன.

2. ஓடும் ரஸங்கள் பவித்திரத்துக்கு இறக்கத்திலே விழும் சலங்களைப்போல் பாய்கின்றன. அவை சுத்தமாகி இந்திரனைத் திருப்தி செய்கின்றன.

3. பவமான ஸோமனான நீ, இந்திரனிடம் அவனுடைய பானத்துக்காகச் செல்லுகிறாய். நீ அறிஞர்களால் செலுத்தப்படுகிறாய்.

4. ஸோமனே! மனிதர்களைப் மதப்படுத்தும் நீ, பகைவர்களை ஜயிக்கும் இந்திரனுக்குப் பெருகவும். சுத்தனாயுள்ள நீ, போற்றத்தகுந்தவன்.

5. இந்துவே! நீ கற்களால் பிழியப்பட்டு, பவித்திரத்துக்குப் பாய்கிறாய் நீ இந்திரனுடைய ஆக்ஞைக்கு இயங்குகிறாய்.

6. விருத்திரர்களை மிக்க அழிப்பவனே! துதிகளால் துதிக்கத் தகுந்தவனும், தூயனும், தூய்மை செய்பவனும், அற்புதனுமான நீ பெருகவும்.

7 மதத்தைத் தருபவனான ஸோமன் சுத்தன், சுத்தப்படுத்துபவன், தேவர்களைத் திருப்தி செய்பவன், அரக்கர்களை அழிப்பவன் எனவும் அழைக்கப்படுகிறான். 7894

## 25. பவமான ஸோமன்

### 748. திருளஹச்யுதன் அகஸ்தியனின் புதல்வன்

1. ஹரியே! பலத்தைத் தருபவனும், மதத்தைத் தருபவனுமான நீ, தேவர்களும், மருத்துக்களும், வாயுவும் பானஞ் செய்யப் பருகவும்.

2. பவமான ஸோமனே! யக்ஞத்தால் நன்கு ஏந்தப்பட்டு, முழங்கிக்கொண்டு உரிய இடத்துக்குப் போகவும். தருமத்தால் வாயுவினிடஞ் செல்லவும்.

3. கவியும், காளையும், பிரியனும், விருத்திரனை அழிப்பவனும், தேவர்களால் விரும்பப்படுபவனுமான ஸோமன் உரிய இடத்திலே விளங்குகிறான்.



4. சுத்தனும், விரும்பத்தகுந்தவனுமான ஸோமன், எல்லா வடிவங்களிலும் பரவி அமிருதர்கள் இருக்கும் இடத்துக்குச் செல்லுகிறான்.

5. பேரறிஞனும் பிரகாசிப்பவனுமான ஸோமன், சத்தங்களை எழுப்பிக்கொண்டு இந்திரனிடம் செல்ல ஓயாமல் ஓடுகிறான்.

6. மதமளிப்பவனும், மகாகவியுமான நீ, துதியாருகனை இந்திரனிடம் செல்ல தாரையோடு பவித்திரத்தின் வழியாய்ப் பெருகவும். 7900

## 16. பவமான ஸோமன்

### 749. இத்மவாஹன் — திருளஹச்யுதனுடைய புதல்வன்

1. அறிஞர்கள் குதிரையைப் போல் வேகமாயுள்ள அந்த ஸோமத்தை அதிதியின் அங்கத்திலே துதிகளாலும் விரல்களாலும் சுத்தப்படுத்தினார்கள்.

2. பாக்கள், ஆயிரந்தாரைகள் உள்ளவனும், அழியாதவனும், சோதியை ஏந்துபவனுமான அந்த இந்துவைப் போற்றுகின்றன.

3. அவர்கள் தங்கள் துதியால், பலவற்றைத் தோற்றுவிப்பவனும், படைப்பவனும், புனிதப்படுத்துபவனுமான ஸோமனை சோதிக்கு ஏற்றினார்கள்.

4. வழிபடுபவர்கள், தங்கள் கைகளின் விரல்களால் பாத்திரங்களில் இருந்தவனும், துதிகளின் தலைவனும், வெல்லப்படாதவனுமான ஸோமத்தைப் பிரேரித்தார்கள்.

5. சகோதரிகளான விரல்கள் உயர்ந்த இடத்திலே விரும்பத் தகுந்ததும், அனைத்தையும் காண்பதும், பசுமை நிறமுள்ளதுமான ஸோமத்தைக் கற்களால் பிழிந்தார்கள்.

6. வழிபடுபவர்கள் மதத்தையளிப்பவனும், துதியால் நிறைந்தவனும், சுத்தப்படுத்துபவனுமான ஸோமனான உன்னை இந்திரனுக்கு அளிக்கிறார்கள். 7906

## 27. பவமான ஸோமன்

### 750. நிருமேத ஆங்கிரஸன்

1. சுத்தம் செய்யும் கவியான இந்த ஸோமன் எங்களால் போற்றப்பட்டு பகைவர்களை விலக்கிப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான்.

2. சக்தியைத் தருபவனும் அனைத்தையும் ஜயிப்பவனுமான ஸோமன் இந்திரனுக்காகவும் வாயுவுக்காகவும் ஊற்றப்படுகிறான்.

3. சோதியின் தலைவனும், வர்ஷிப்பவனும், அனைத்தையுமறிபவனுமான இந்த ஸோமன் பொழியப்பட்டு அறிஞர்களால் மரப்பாண்டங்களில் செலுத்தப்படுகிறான்.

4. பகைவர்களை ஜயிப்பவனும், தடைபடாதவனும்' எங்களுக்குப் பொன்னையும், பசுக்களையும் தர விரும்புபவனுமான இந்த இந்து சொட்டுங்கால் சப்திக்கிறான்.

5. மதமளிக்கும் இந்தப் பவமான ஸோமன் பவித்திரத்திலே சொட்டுகிறான். பிறகு சூரியனோடு சோதிக்கு ஏறுகிறான்.

6. வர்ஷிப்பவனும், ஹரியும், சுத்தப்படுத்துபவனும், சக்தியுள்ளவனுமான இந்த இந்து, இந்திரனுக்கு வானின் வழியாய்ப் பெருகுகிறான். 7912

## 28. பவமான ஸோமன்

### 751. பிரியமேத ஆங்கிரஸன்

1. அனைத்தையும் அறிபவனும், மனத்தின் தலைவனும், அறிஞர்களால் பாத்திரங்களில் வைக்கப்பட்டவனும், துரிதமாய்ப் பெருகுபவனுமான ஸோமன் கம்பளப் பவித்திரத்துக்குப் பாய்கிறான்.

2. தேவர்களுக்காகப் பொழியப்பட்ட இந்த ஸோமன் எல்லா வடிவங்களிலும் நுழைந்து பவித்திரத்துக்குப் பாய்கிறான்.

3. அமிருதனும், விருத்திரனைக் கொல்பவனும், தேவர்களை மிக்க விரும்புபவனுமான இந்தத் தேவன், தன்னுடைய சொந்த இடத்திலே துலங்குகிறான்.



4. விருப்பங்களைப் பொழியும் இந்த ஸோமன் பத்து சகோதரிகளான விரல்களால் பிழியப்பட்டு முழக்கமுடன் கலசங்களுக்குச் செல்கிறான்.

5. அனைத்தையுங் காண்பவனும், அனைத்தையும் அறிபவனுமான இந்தப் பவமான ஸோமன் சூரியனுக்கும், எல்லா ஒளிமண்டலங்களுக்கும் சோதியைத் தருகிறான்.

6. தேவர்களைப் பாலிப்பவனும், துட்டர்களை அழிப்பவனும், திறமுள்ளவனும், உன் தடைபடாதவனும், தூயப்படுத்துபவனுமான இந்த ஸோமன் பாய்கிறான். 7918

## 29. பவமான ஸோமன்

### 752. நிருமேத ஆங்கிரஸன்

1. வர்ஷிப்பவனான பொழியப்பட்ட இந்த ஸோமனின் தாரைகள் திறத்திலே தேவர்களைக் கடக்க விரும்பிப் பாய்கின்றன.

2. புலவர்களும், போற்றுபவர்களுமான கர்த்தாக்கள் தங்கள் துதியால் காந்தியுள்ள குதிரையான ஸோமனை அவன் தோன்றியவுடன் போற்றத்தகுந்தவனாயுள்ள அவனை சுத்தப்படுத்துகிறார்கள்.

3. மிகுந்த செல்வத்தை அளிக்கும் ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் உன்னுடைய ஒளிக்கதிர்கள் ஜயிப்பவையாயிருக்கின்றன. ஆதலால் நீ துதியாருகமாய்க் கடல் போலுள்ள கலசத்தை நிரப்பவும்.

4. ஸோமனே! நீ பூரண தாரையோடு எங்களுக்கு எல்லாச் செல்வங்களை ஜயிப்பவனாய்ப் பெருகவும். எல்லாப் பகைவர்களையும் திரட்டி விலக்கவும்.

5. நாங்கள் விடுதலையாக நிந்திப்பவனும், யஜிக்காதவனுமான ஒவ்வொருவனின் பழிச்சொல்லிருந்தும், எங்களைப் பாலிக்கவும்.

6. இந்துவே! புவியிலுள்ள, சோதியிலுள்ள செல்வ தாரைகளைப் பொழியவும். பிரகாசிக்கும் பலத்தை அளிக்கவும். 7924

## 30. பவமான ஸோமன்

### 753. பிந்துராங்கிரஸன்

1. இந்த ஆற்றலுள்ள ஸோமனின் தாரைகள் பவித்திரத்திலே அநாயாஸமாய்ப் பாய்கின்றன. சுத்தனான அவன் துதியை ஊக்கப்படுத்துகிறான்.

2. இந்த இந்து அறிஞர்களால் பிரேரிக்கப்பட்டு, பவித்திரத்திலே சத்தத்தோடு சுத்தப்பட்டு அவியிலே நாதத்தை எழுப்புகிறான்.

3. ஸோமனே! நீ பலரால் விரும்பப்படுவதும், வீரப் புதல்வர்களோடு சேர்ந்திருப்பதும், பகையழிப்பதுமான ஆற்றலைத் தாரையோடு பொழியவும்.

4. இந்தப் பவமான ஸோமன் கலசங்களிலே நிலைக்க தாரையோடு பெருகுகிறான்.

5. இந்துவே! அவர்கள் சலங்களிலே மிக்க இனிமையுள்ளவனும், பசுமை நிறமுள்ளவனுமான உன்னை இந்திரனுடைய பானத்துக்காகக் கற்களால் பிழிகிறார்கள்.

6. மிக்க இனியனும், அழகுள்ளவனும், மதமளிப்பவனுமான ஸோமனை, வச்சிரமேந்தும் இந்திரனுக்கும், எங்களைப் பலப்படுத்தவும் பொழியுங்கள். 7930

## 31. பவமான ஸோமன்

### 754. இராஹூகண கோதமன்

1. உத்தம செயல்களுள்ள ஸோமங்கள் சுத்தமாகிப் பாய்கின்றன. அவை மானஸீகச் செல்வத்தைத் தருகின்றன.

2. இந்துவே! நீ எங்களுக்கு சோதியினுடைய, புவியினுடைய செல்வங்களைச் செழிப்பிப்பவனாயிருக்கவும். நீ உணவின் தலைவனாயிருக்கவும்.

3. ஸோமனே! உனக்கு வாயுக்கள் அனுகூலமாயிருக்கின்றன. உனக்கு நதிகள் பாய்கின்றன. அவை உன்னுடைய மகிமையை மேம்படுத்துகின்றன.



4. ஸோமனே! நீ வாயுக்களோடு செழிக்கவும். உனக்கு எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஆற்றல் தோன்றுக. போரிலே பலத்தைத் தருபவனாயிருக்கவும்.

5. பழுப்பனே! மிக்க உயர்ந்த இடத்தில் வைக்கப்பட்டுள்ள உனக்குப் பசுக்கள் வற்றாத பாலையும் நெருப்பையும் தருகின்றன.

6. இந்துவே! புவனத்தின் பதியே! நாங்கள் நல்லாயுதந்தரித்த உன்னுடைய நட்பை விரும்புகிறோம். 7936

## 32. பவமான ஸோமன்

### 755. சியாவாசுவன் ஆத்திரேயன்

1. மதத்தைப் பெருக்கும் ஸோமரஸங்கள் அவிச்செல்வர்களான எங்களுக்கு உணவையளிக்க யக்ஞத்திலே பொழியப்பட்டுப் பாய்கின்றன.

2. திருதனின் விரல்கள் பசுமையான இந்த ஸோமத்தை இந்திரனுடைய பானத்துக்காகக் கற்களால் பிழிகின்றன.

3. தன் கூட்டத்திலே சேரும் அன்னத்தைப் போல், ஸோமன் அனைவருடைய துதியையும் எழுப்புகிறான். அவன் குதிரையைப் போல் பாலால் ஸ்நானமாகிறான்.

4. ஸோமனே! நீ யக்ஞத்தின் ஸ்தானத்திலே அமர்ந்து, இரு உலகங்களையுங் காணும் நீ, மானைப்போல் துரிதமாய்ப் பாய்கிறாய்.

5. பாக்கள் ஸோமனான உன்னை அன்புள்ள காதலனைப் போற்றும் காரிகையைப் போல் போற்றுகின்றன. நீ பாத்திரத்துக்கு விரும்பப்படும் போருக்குச் செல்லும் வீரனைப் போல் பாய்கிறாய்.

6. அவிச்செல்வர்களான எங்களுக்கும், எனக்கும் பிரகாசிக்கும் புகழையும், பொருளையும், புலனையும், பெருமையையுமளிக்கவும். 7942

## 33. பவமான ஸோமன்

### 756. திருத ஆப்தியன்

1. அறிஞர்களான ஸோமர்கள் காடுகளுக்குச் செல்லும் எருமைகளைப் போலும், சலத்தின் அலைகளைப் போலும் பாய்கிறார்கள்.

2. பிரகாசிக்கும் பழுப்பு நிற ரஸங்கள் அமுத தாரையோடு கலசங்களுக்குச் செல்லுகின்றன. அவை பசுக்களோடு சேர்ந்துள்ள உணவைத் தருகின்றன.

3. பொழியப்பட்ட ரஸங்கள் இந்திரனுக்கும், வாயுவுக்கும், வருணனுக்கும், மருத்துக்களுக்கும், விஷ்ணுவுக்கும் பாய்கின்றன.

4. அறிஞர்கள் மூன்று வேதங்களையுங் கூறுகிறார்கள். பாலையளிக்கும் பசுக்கள் கதறுகின்றன. ஹரி முழங்கிக் கொண்டு செல்கிறான்.

5. பல மந்திரங்களும் ருதத்தின் தாய்மார்களும் துதியைக் கூறுகிறார்கள். அவர்கள் சோதியின் பாலனை ஸோமனைச் சுத்தப்படுத்துகிறார்கள்.

6. ஸோமனே! நீ எல்லாத் திசைகளிலிருந்தும் செல்வங்களின் நான்கு கடல்களை எங்களுக்குப் பொழியவும். எங்களுக்கு ஆயிரக்கணக்கான விருப்பங்களைப் பூர்த்தி செய்யவும். 7948

## 34. பவமான ஸோமன்

### 757. திருத ஆப்தியன்

1. அறிஞர்களால் பிழியப்பட்டு பெருகும் ஸோமன் தாரையோடு தன் திறத்தால் பகைவரின் புரங்களைத் தகர்ப்பவனாய்ப் பவித்திரத்துக்குப் பாய்கிறான்.

2. பொழியப்பட்ட ஸோமன் இந்திரனுக்கும், வாயுவுக்கும், வருணனுக்கும், மருத்துக்களுக்கும், விஷ்ணுவுக்கும் பாய்கிறான்.



3. அவர்கள் கற்களால் ஸோமத்தைப் பிழிகிறார்கள். வலியர்களால் வலியன் இயக்கப்படுகிறான். அவர்கள் ஆற்றலோடு ரஸத்தைக் கறக்கிறார்கள்.

4. மதமளிக்கும் ஸோமம் திருதனுடைய யக்ஞத்துக்காகவும், இந்திரனுடைய பானத்துக்காகவும் சுத்தமாகிறது. ஹரி வடிவங்களோடு அலங்கரிக்கப்படுகிறான்.

5. பிருசினியின் புதல்வர்கள் அழகுள்ளதும், இனிய அவியுமான இந்த ஸோமத்தை யக்ஞத்தின் ஸ்தானத்திலே கறக்கிறார்கள்.

6. எங்களுடைய குடிலமற்ற பாக்கள் அவனைப் பற்றுகின்றன. அவன் நாதத்தோடு பசுக்களை விரும்புகிறான். 7954

## 35. பவமான ஸோமன்

### 758. பிரபுவசு ஆங்கிரஸன்

1. பவமான ஸோமனே! நீ சோதியை யளிக்கும் தாரையோடு எங்களுக்குச் செல்வங்களைப் பொழியவும்.

2. இந்துவே! சலங்களைப் பிரேரிப்பவனும், பகைவர்களையெல்லாம் கலக்குபவனுமான நீ, உன்னுடைய பலத்தால் எங்களுக்குச் செல்வத்தை ஏந்துபவனாகப் பெருகவும்.

3. வீரத்தன்மையுள்ள ஸோமனே! நாங்கள் வீரனான உன்னோடு எங்கள் பகைவர்களை ஜயிப்போமாக. எங்களுக்கு விரும்பத் தகுந்த செல்வங்களைப் பொழியவும்.

4. உணவைத் தருபவனும், ரிஷியும், விரதங்களையும், ஆயுதங்களையும் அறிபவனுமான அவன், நலத்தை விரும்பி வழிபடுபவர்களுக்கு அன்னத்தை அளிக்கிறான்.

5. சுத்தனும், மனிதர்களின் கோபதியும், துதியை எழுப்புபவனுமான அந்த ஸோமனை நாங்கள் பாக்களால் உடுத்துகிறோம்.

6. எல்லா சனங்களும் தங்கள் சிந்தனைகளை, தருமத்தின் பாலகனும், சுத்தனும், மிகுந்த செல்வமுள்ள

வனுமான ஸோமனுடைய விரதத்திலே நிலைப்படுத்து கிறார்கள். 7960

## 36. பவமான ஸோமன்

### 759. பிரபூவசு ஆங்கிரஸன்

1. பலகைகளின் நடுவே அழுத்தப்படும் ஸோமன் பவித்திரத்தின்மீது தேர்க்குதிரையைப் போல் தளர்த்தப் பட்டிருக்கிறான். குதிரை போர்க்களத்தை ஆக்கிரமிக்கிறது.

2. ஸோமனே! அவிகளை ஏந்துபவனும், விழித்திருப் பவனும், தேவர்களை விரும்புபவனுமான நீ, தேன்சொட்டும் பவித்திரத்தைக் கடந்து கலசத்துக்குப் பாயவும்.

3. புனிதப்படுத்தும் பழையவனான நீ, எங்களுக்குச் சோதிமண்டலங்களைப் புலப்படுத்தவும். செயலுக்கும் சக்தி க்கும் எங்களை ஊக்கப்படுத்தவும்.

4. யக்ஞம் விரும்பும் ரித்விஜர்களால் அலங்காரமாகி அவர்களின் கைகளால் பிழியப்பட்டு ஸோமன் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான்.

5. ஸோமன் ஈகையனுக்கு, சோதியிலோ, வானிலோ, விண்ணிலோ இருக்கும் எல்லாச் செல்வங்களையும், அளிப் பானாக.

6. ஸோமனே! உணவின் பாலகனே! எங்களுக்குப் பசுக்களையும், குதிரைகளையும், வீரப்புதல்வர்களையும் விரும்பி, நீ சோதியின் உச்சிக்கு ஏறுகிறாய். 7966

## 37. பவமான ஸோமன்

### 760. இராஹூகண ஆங்கிரஸன்

1. வர்ஷிக்கும் ஸோமம் தேவர்களுடைய பானத்துக் காகப் பொழியப்படுங்கால், தேவர்களை விரும்பி, அரக்கர் களை அழித்து, பவித்திரத்துக்குப் பாய்கிறது.

2. ஹரியும், அனைத்தையும் தாங்குபவனும், எல்லா வற்றையுங் காண்பவனுமான ஸோமன் பவித்திரத்துக்கு



ஓடுகிறான். பிறகு முழங்கிக் கலசத்துக்குப் பாய்கிறான்.

3. அரக்கர்களை அழிப்பவனும், சோதியை ஒளிப்படுத் துபவனும், குதிரையைப்போல் விரைபவனும், சுத்தனுமான ஸோமன், கம்பளமயப் பவித்திரத்தைக் கடந்து செல்லு கிறான்.

4. திருதனுடைய யக்ஞத்தின் உச்ச ஸ்தானத்தில் இருக்கும் சுத்தனான ஸோமன் சகோதரிகளான ரசிமி களோடு சேர்ந்து சூரியனை ஒளிப்படுத்துகிறான்.

5. விருத்திரனைக் கொல்பவனும், வர்ஷிப்பவனும்' செல்வத்தைத் தருபவனும், தடைபடாதவனும், பொழியப் பட்டவனுமான ஸோமன், போருக்குப் பாயும் குதிரையைப் போல் கலசத்துக்குச் செல்லுகிறான்.

6. தேவனான ஸோமன் கவியால் பிரேரிக்கப்பட்ட வுடன், இந்திரனுடைய பானத்துக்காகத் தன் பலத்தால் கலசங்களுக்குப் போகிறான். 7972

## 38. பவமான ஸோமன்

### 761. திரஹுகண ஆங்கிரஸன்

1. பிழியப்பட்டவனும், வர்ஷிப்பவனும், தேருமான இந்த ஸோமன் வழிபடுபவனுக்கு ஆயிரம்வித செல்வத்தை ஏந்திக்கொண்டு கம்பளப் பவித்திரன் வழியாய்ப் பாய்கிறான்.

2. திருதனுடைய விரல்கள் இப்பசுமை நிறமுள்ள ஸோமத்தை இந்திரனுடைய பானத்துக்காகக் கற்களால் பிழிகின்றன.

3. செயலில் ஊக்கமாயுள்ள பத்து விரல்கள் ஸோமத் தைப் பொழிகின்றன. அவற்றால் அது இந்திரனுடைய பானத்துக்காக சுத்தப்படுகின்றது.

4. அந்த ஸோமன் மனிதர்களின் நடுவே அமர பருந் தைப் போல் யுவதியினிடம் செல்லும் காதலனைப் போல் விரைகிறான்.

5. சோதியின் புதல்வனும், கம்பளத்தின் வழியாய்ச் செல்பவனும், மதப்படுத்துபவனுமான ஸோமன் அனைத்தையுங் காண்கிறான்

6. அனைத்தையும் ஏந்துபவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் தேவர்களுடைய பானத்துக்காகப் பிழியப்பட்டவுடன் தன் பிரியமான இடத்து முழங்கிக்கொண்டு செல்கிறான். 7978

## 39. பவமான ஸோமன்

### 762. பிருஹன்மதி ஆங்கிரஸன்

1. மகத்தான மதியுள்ள ஸோமனே! நீ உன்னுடைய தேவர்களுக்கு மிக்கப் பிரியமாயுள்ள தேகத்தோடு தேவர்கள் எங்கே? என வினவிக்கொண்டு பாயவும்.

2. நீ தூய்மையற்றவனைத் தூய்மைப்படுத்தி அளிப்பவனுக்கு உணவை ஏந்தி சோதியிலிருந்து மழையைப் பொழியவும்.

3. பொழியப்பட்டவுடன் ஸோமன் ஆற்றலோடு பவித்திரத்துக்குச் செல்லுகிறான். ஒளியைத் தருகிறான். எல்லாப் பொருள்களையுங் காண்கிறான். ஒளிப்படுத்துகிறான்.

4. இலகுவாய்ச் செல்லும் இந்த ஸோமன் சோதிக்கு ஏறுகிறான். பல தாரையோடு பவித்திரத்தின் வழியாய்ப் பாய்கிறான்.

5. பொழியப்பட்ட ஸோமன் தூரத்திலிருந்தாலும், அருகிலிருந்தாலும் தேவர்களைப் போற்றுகிறான். இந்திரன் மதுவாகப் பொழியப்படுகிறான்.

6. வழிபடுபவர்கள் ஒன்று சேர்ந்து அவனைப் போற்றுகிறார்கள். அவர்கள் பசுமை நிறமுள்ள அவனைக் கற்களால் பிழிகிறார்கள். தேவர்களே! யக்ஞத்தின் இடத்திலே அமருங்கள். 7984



## 40. பவமான ஸோமன்

### 763. பிருஹன்மதி ஆங்கிரஸன்

1. சுத்தனும் அனைத்தையுங் காண்பவனுமான ஸோமன் எல்லாப் பகைவர்களையும் ஜயிக்கிறான். வழிபடுபவர்கள் விப்பிரனைத் துதிகளால் விளக்குகிறார்கள்.

2. வர்ஷிக்கும் பழுப்பன் பிழியப்பட்டவுடன் தன் இடத்துக்கு ஏறுகிறான். அவன் இந்திரனிடம் போகிறான். அவன் இந்த சோதியின் நிலையான இடத்திலே அமருகிறான்

3. பவமான ஸோமனே! இந்துவே! மகத்தாயும் அனந்தமாயுமுள்ள செல்வங்களை எல்லாத் திசைகளிலிருந்தும் எங்களுக்குப் பொழியவும்.

4. பவமான ஸோமனே! இந்துவே! பலவித செல்வங்களை எங்களுக்களிக்கவும். ஆயிரக்கணக்கான உணவுகளைத் தரவும்.

5. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் வழிபடுபவர்களுக்கு வீரப்புதல்வனோடு செல்வத்தை அளிக்கவும். துதிப்பவனுடைய துதிகளைச் செழிப்பிக்கவும்.

6. இந்துவே! ஸோமனே! சுத்தமாகும் நீ எங்களுக்கு இரு உலகங்களிலிருந்து செல்வத்தை அளிக்கவும். இந்துவே! வர்ஷிப்பவனே! போற்றத்தகுந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். 7990

## 41. பவமான ஸோமன்

### 764. மேத்யாதிதி காண்வன்

1. கிருஷ்ண சருமமுள்ளவர்களை நீக்குபவவையும், துரிதமுள்ளவையும், துலங்குபவையும், பாய்பவையும், சலதாரைகளைப் போல் இறங்குபவையுமான ஸோம ரஸங்களைப் போற்றுங்கள்.

2. விரதங்களற்ற பகைவனை நாங்கள் ஜயிக்குங்கால் அரக்கர்களைச் சிறைப்படுத்தி அவர்களின் எதிர்ப்பைத்

தடுக்கும் மங்களகரமான ஸோமனுடைய செயலை நாங்கள் போற்றுகிறோம்.

3. சுத்தனான சக்தியுள்ள ஸோமனின் முழக்கம் மழையின் சத்தத்தைப் போல் செவியில் கேட்கிறது. அவனுடைய சலனங்கள் வானிலே சலனமாகின்றன.

4. இந்துவே! நீ பொழியப்படுங்கால், பசுக்களோடும், பொன்னோடும், குதிரைகளோடும், ஆற்றல்களோடுமுள்ள மகத்தான உணவை அளிக்கவும்.

5. அனைத்தையும் காணும் ஸோமனே! நீ பாயவும். நீ பரந்த வானையும், விண்ணையும், தன் ரசிமிகளால் தினங்களை நிரப்பும் சூரியனைப்போல் நிரப்பவும்.

6. ஸோமனே! நீ எங்கும் எங்களுக்கு சுகத்தைத் தரும் தாரையோடு இறக்கத்தில் விழும் நதியைப் போல் சுற்றிலும் பெருகவும். 7996

## 42. பவமான ஸோமன்

### 765. மேத்யாதிதி காண்வன்

1. ஹரியான ஸோமன் சோதியின் மண்டலங்களைப் பிறப்பித்து, வானிலே சூரியனைப் பிறப்பித்து, இறங்கும் சலங்களால் தன்னைப் போர்த்திக் கொண்டு பெருகுகிறான்.

2. அவன் பழைய பனுவலோடு பொழியப்படுங்கால் தேவர்களுக்குத் தேவனாகத் தாரையோடு பெருகுகிறான்

3. ஆயிரம் ஆற்றல்களுள்ள ஸோமரஸங்கள் உணவைத் துரிதமாய்ப் பெறுவதற்கும், செழிப்பிக்கவும் பாய்கின்றன.

4. பழைய பாலைக் கறக்கும் ஸோமன் பவித்திரத்தினுள் பொழியப்படுகிறான். அவன் முழங்கி தேவர்களைப் பிறப்பிக்கிறான்.

5. ஸோமன் சுத்தமாகுங்கால் இங்கு விரும்பத்தகுந்த எல்லாப் பொருள்களையுமளிக்கிறான். ருதத்தைப் பலப்படுத்தும் தேவர்களையும் அனுப்புகிறான்.



6. ஸோமனே! பொழியப்படும் நீ, எங்களுக்குப் பசுக்களும், வீரப் புதல்வர்களும், குதிரைகளும், வாய்மையும், மிக்க உணவுமுள்ள செல்வத்தையுமளிக்கவும். 8002

## 43. பவமான ஸோமன்

### 766. மேத்யாதிதி காண்வன்

1. நாங்கள் தேவர்களுடைய மதத்துக்காகப் பாலால் குதிரையைப்போல் சுத்தஞ் செய்யப்படுபவனும், அன்பனுமான ஸோமனைப் பாக்களால் அணிவிக்கிறோம்.

2. எங்களுடைய எல்லாத் துதிகளும் பாலனத்தை விரும்பி இந்த இந்துவை இந்திரனுடைய பாலனத்துக்காகப் பூர்வத்தில் போல் இப்பொழுதும் எழில் படுத்துகின்றன.

3. விப்பிரனான மேத்யாதிதியின் மொழிகளால் அன்பான ஸோமன், சுந்தரனாகி சுத்தனாய்ப் பாய்கிறான்.

4. இந்துவே! பவமான ஸோமனே! அபரிமித ஒளியுடனுள்ள மங்களகரமான செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

5. தேவர்களை விரும்பும் இந்து பாயுங்கால் போருக்குச் செல்லும் குதிரையைப்போல் பவித்திரத்தினுள் முழங்குகிறான்.

6. ஸோமனே! உன்னை ஏத்தும் விப்பிரனுடைய செல்வத்துக்கும், சமரில் ஜயிப்பதற்கும் நீ பெருகவும். வீரப் புதல்வனை அளிக்கவும். 8008

## 44. பவமான ஸோமன்

### 767. அயாஸ்ய ஆங்கிரஸன்

1. இந்துவே! நீ எங்களுக்கு மகத்தான செல்வத்தை அளிக்கப் பெருகுகிறாய். அயாஸ்யன் உன் அலையைத் தரித்து, தேவர்களிடம் செல்லுகிறான்.

2. விப்பிரனுடைய துதியால் கவியான ஸோமன் திருப்தியாகி யக்ஞத்துக்காக இயக்கப்பட்டு, பவித்திரத்திலிருந்து தூரமாயுள்ள இடத்திலே பிரேரிதமாகிறான்.

3. இந்த விழித்துள்ள ஸோமன் பொழியப்பட்டு, தேவர்களுக்காகப் பாய்கிறான். அனைத்தையுங் காணும் அவன் பவித்திரத்துக்குப் போகிறான்.

4. ஸோமனே! நீ எங்களுக்கு உணவை விரும்பிப் பெருக்கவும். எங்கள் யக்ஞத்தை மங்களப் படுத்தவும். தருப்பையுடன் அறிஞன் உன்னைப் போற்றுகிறான்.

5. பகனுக்காகவும், வாயுவுக்காகவும் விப்பிரர்களால் பிரேரிக்கப்படும் ஸோமன் சதா செழுமையாகி தேவர்களின் நடுவிலிருக்கும் செல்வத்தை எங்களுக்களிப்பானாக.

6. யக்ஞங்களைப் பெறுபவனும், புண்ணிய வழிகளை அறிபவனுமான நீ, நாங்கள் செல்வத்தைப் பெற இன்று எங்களுக்கு மிகுந்த உணவையும் ஆற்றலையுமளிக்கவும். 8014

## 45. பவமான ஸோமன்

### 768. அயாஸ்ய ஆங்கிரஸன்

1 இந்துவே! மனிதர்களைக் காணும் நீ, தேவர்களுடைய விருந்துக்காகவும், இந்திரனுடைய பானத்துக்காகவும் இனிமையாய்ப் பெருகவும்.

2. நீ தூதச் செயலுக்காக எங்களிடம் வா. இந்திரனுக்காகப் பருகப்படும் நீ, நண்பர்களான எங்களுக்காகத் தேவர்களிடம் செல்வத்தைச் செலுத்தவும்.

3. நாங்கள் அழகாயுள்ள உன்னை மதத்துக்காகப் பால் வண்ணப் படுத்துகிறோம். எங்களுக்குச் செல்வத்தையளிக்கக் கதவுகளைத் திறக்கவும்.

4. ஸோமன் பவித்திரத்தைக் கடந்து சலனமாகுங்கால் தேரின் தண்டைக் கடந்து செல்லும் குதிரையைப்போல் கடக்கிறான். அவன் தேவர்களின் நடுவில் செல்லுகிறான்.



5. நண்பர்கள், சலத்தில் கிரீடிப்பவனும், பவித்திரத்தைக் கடப்பவனுமான இந்துவைப் போற்றுகிறார்கள், அவர்களுடைய பாக்கள் அவனைப் பாடுகின்றன.

6. இந்துவே! அறியும் வழிபடுபவனுக்கு மிக்க ஆற்றலையளிக்கும் தாரையோடு பெருகவும். 8020

## 46. பவமான ஸோமன்

### 769. அயாஸ்ய ஆங்கிரஸன்

1. மலைகளில் தோன்றுபவையும், பெருகுபவையுமான ஸோமரஸங்கள் ஊக்கமாயுள்ள குதிரைகளைப் போல் செலுத்தப்படுகின்றன.

2. யக்ஞத்திலே பிழியப்பட்ட ஸோமரஸங்கள் தந்தையுள்ள மணமகளைப் போல் அலங்காரமாகி வாயுவுக்குப் பெருகுகிறான்.

3. இனிய உணவைத் தருபவையும் பிரகாசிப்பவையுமான இந்த ஸோமரஸங்கள் கலசத்தினுள் பொழியப்பட்டு யக்ஞங்களோடு இந்திரனைத் திருப்தி செய்கின்றன.

4. கைத்திறமுள்ள அறிஞர்களே! என்னிடம் வாருங்கள். சுத்த ஸோமனை சட்டுவத்தால் எடுங்கள். மதமளிக்கும் ரஸத்தைப் பாலோடும் தயிரோடும் சேருங்கள்.

5. செல்வத்தை ஜயிப்பவனும், என் விருப்பங்களைப் பூர்த்தி செய்ய அறிபவனும் எங்களுக்கு மிகுந்த செல்வத்தைத் தருபவனுமான ஸோமனும் நீ பெருகவும்.

6. பத்து விரல்கள் சுத்தப்படத் தகுந்ததும், சுத்தமாய்ப் பெருகுவதும், மதப்படுத்துவதுமான இரஸத்தை இந்திரனுக்காக சுத்தப்படுத்துகின்றன. 8026

## 47. பவமான ஸோமன்

### 770. கவி பார்கவன்

1. இந்த மங்களச் செயலால் ஸோமன் மகத்தான தேவர்களின் முன்னே செழிக்கிறான். மகிழும் அவன் காளையைப் போல் எழுகிறான்.

2. தஸ்யுவைக் கொல்லும் அவனுடைய வீரச் செயல்களை அவர்கள் கூறுகிறார்கள். தீரனான அவன் வழி படுபவனுடைய கடன்களைத் தீர்க்கிறான்.

3. இந்திரனுக்குத் தோத்திரங் கூறப்படுங்கால் அவனுக்குப் பிரியமாயுள்ள ஸோமன் வச்சிராயுதத்தைப் போல் வலியனாகி எங்களுக்கு ஆயிரக்கணக்கான செல்வங்களைத் தருகிறான்.

4. கவியான ஸோமன் விரல்களால் சுத்தமாகுங்கால் தானாகவே வழிபடுபவனுக்கு விருப்பங்களைப் பூர்த்திசெய்யும் இந்திரனால் செல்வமளிக்கப்பட விரும்புகிறான்.

5. நீ போரிலே ஜயிப்பவர்களுக்குச் செல்வத்தைச் சண்டையிலே குதிரைகளுக்கு தீவனங்களை அளிக்கும் மனிதர்களைப் போல் அளிக்க விரும்புகிறாய். 8031

## 48. பவமான ஸோமன்

### 771. கவி பார்கவன்

1. நாங்கள் உத்தமச் செயலால் உன்னிடம் மகத்தான சோதிமண்டலங்களிலிருக்கும் உன்னால் ஏந்தப்படும் மங்களச் செல்வங்களை வேண்டுகிறோம்.

2. நாங்கள் தீரப் பகைவனைத் தாழ்த்துபவனும், போற்றத் தகுந்தவனும், மகத்தான மேன்மையான விரதங்கள் அனுட்டிக்கப்படுபவனும், மதப்படுத்துபவனும், நூறு அசுரப்புரங்களை அழிப்பவனுமான உன்னிடம் செல்வங்களை வேண்டுகிறோம்.

3. ஸோமனே! உத்தம வினைத்திட்பனும், செல்வங்களின் அரசனுமான உன்னை ஒளி உலகத்திலிருந்து தளராத சுவர்ணன் ஏந்திவந்தான்.

4. பறவை சலத்தைப் பிரேரிப்பவனும், ருதத்தைப் பாலிப்பவனும் ஒவ்வொரு தேவனுக்கும் ஸமனாயிருப்பவனுமான உன்னை ஏந்தி வந்தது.



5. அனைத்தையும் காண்பவனும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனுமான ஸோமன் தன் ஆற்றலைப் பிரேரித்து, போற்றத் தகுந்த மகிமையை அடைகிறான். 8036

## 49. பவமான ஸோமன்

### 772. கவி பார்கவன்

1. எங்களுக்கு சோதியிலிருந்து மழையைப் பொழியவும். சலதாரையைப் பொழியவும். நோயற்ற மகத்தான உணவைப் பொழியவும்.

2. பகைவனுடைய பசுக்கள் இங்கு எங்களுடைய மனையிலே புலப்படுத்தும் தாரையோடு பொழியவும்.

3. யக்ஞங்களிலே தேவர்களுக்குப் பிரியனாயிருக்கும் நீ, சலத்தைத் தாரையால் பொழியவும். எங்களுக்கு மழையைப் பொழியவும்.

4. எங்களுக்கு உணவை அளிக்க, கம்பளப்பவித்திரத்துக்கு உன் தாரையோடு பெருகவும். தேவர்கள் என் நாதத்தைச் செவியுறுவார்களாக.

5. பவமான ஸோமன் அசுரர்களை அழித்துக்கொண்டு பாய்கிறான். அவன் பூர்வத்தில் போல் பிரகாசத்தைப் புலப்படுத்துகிறான். 8041

## 50. பவமான ஸோமன்

### 773. உசத்திய ஆங்கிரஸன்

1. கடலின் அலையிலிருந்து எழும் கர்ஜனையைப்போல் உன்னுடைய மகத்தான தாரைகள் பாய்கின்றன. பாயும் அம்பைப்போல் உன்னுடைய சத்தத்தைப் புலப்படுத்தவும்.

2. நீ பவித்திரத்தின் உச்ச ஸ்தானத்துக்குச் செல்லுங்கால் உன் பிறப்பிலே துதிப்பவனுடைய மும்மொழிகள் கூறப்படுகின்றன.

3. அறிஞர்கள் பிரியனும், ஹரியும், சுத்தப்படுத்துபவனும், தேன்சொட்டுபவனுமான ஸோமனை, கற்களால் பிழிந்து பவித்திரத்துக்குச் செலுத்துகிறார்கள்.

4. மிக்க மதமளிப்பவனும், அறிஞனும், ஸோமனுமான நீ, இந்திரனுடைய அங்கத்திலே அமர பவித்திரத்துக்குத் தாரையோடு பெருகவும்.

5. மிக்க மதமளிக்கும் இந்துவாம் நீ, பாலின், தயிரின் அஞ்சனங்களால் எழிலுடனாகி, இந்திரனுடைய பானத்துக்காகப் பெருகவும். 8046

## 51. பவமான ஸோமன்

### 774. உசத்திய ஆங்கிரஸன்

1. கற்களால் பிழியப்பட்ட ஸோமத்தைப் பவித்திரத்திலே பொழியவும். அதை இந்திரனுடைய பானத்துக்காகச் சுத்தப்படுத்தவும்.

2. அதவர்யுக்களே! சோதியின் உயர்ந்த அமுதமாயிருப்பதும், மிக்க இனிமையுள்ளதுமான ஸோமத்தை வச்சிரமேந்தும் இந்திரனுக்காகப் பொழியுங்கள்.

3. இந்துவே! தேவர்களும், மருத்துக்களும் உன்னுடைய இனிமையுள்ளதும், சுத்தப்படுத்துவதுமான பானத்தைப் பருகுகிறார்கள்.

4. ஸோமனே! நீ பொழியப்பட்டவுடன் வழிபடுபவனைத் துரிதமாய் மதப்படுத்தவும், பாலிக்கவும், அவனிடம் பெருகுகிறாய்.

5. அறிஞனான ஸோமனே! நீ பவித்திரத்துக்குத் தாரையோடு பிரேரிக்கப்பட்டவுடன் பெருகவும். எங்களுக்கு உணவையும், புகழையுமளிக்கவும். 8051

## 52. பவமான ஸோமன்

### 775. உசத்திய ஆங்கிரஸன்

1. செல்வத்தைப் பற்றுபவனும், பிரகாசிப்பவனுமான ஸோமன், எங்களுக்கு உணவோடு ஆற்றலை அளிப்பானாக. நீ பவித்திரத்துக்குப் பிரேரிக்கப்படுங்கால் துரிதமாகவும்.



2. உன்னுடைய ஆயிரந் தாரைகளுள்ளதும், தேவர்களுக்குப் பிரியமாயிருப்பதுமான ரஸம் பவித்திரத்துக்குப் பழைய வழிகளால் செல்லுகிறது.

3. ஸோமனே! பூரணகும்பத்தைப் போலுள்ள அவனை எங்களிடம் செலுத்தவும். இந்துவே! இப்பொழுது எங்களிடம் செல்வத்தைப் பிரேரிக்கவும். துரிதமாய்ப் பாயும் ஸோமனே! கற்களின் ஆட்டங்களால் அதை எங்களுக்குப் பிரேரிக்கவும்.

4. இந்துவே! பலரால் அழைக்கப்படும் நீ, எங்களை எதிர்க்கும் சனங்களின் ஆற்றலை அழிக்கவும்.

5. இந்துவே! செல்வங்களை வழங்குபவனான நீ, நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான சுத்த தாரைகளை எங்களுடைய பாலனத்துக்காகப் பொழியவும். 8056

## 53. பவமான ஸோமன்

### 776. அவத்ஸார காசியபன்

1. கற்களை ஏந்தும் ஸோமனே! உன்னுடைய உக்கிர தாரைகள் அரக்கர்களை அகற்றி எழுகின்றன. நீ எதிர்க்கும் பகைவர்களை விலக்கவும்.

2. நீ இந்த பலத்தால் பகைவர்களை அழிப்பவனாயிருக்கிறாய். நான் செல்வத்துக்காகவும், பகைவனை எதிர்த்து நிற்கும் தேர்ப்படைக்காகவும் அச்சமற்ற இருதயத்தோடு உன்னைப் போற்றுகிறேன்.

3. நீ பொழியப்படுங்கால் உன்னுடைய ஆற்றல் எந்த அரக்கனாலும் தடைபடாமலிருக்கிறது. உன்னை எதிர்ப்பவனைப் போரிலே அழிக்கவும்.

4. அறிஞர்கள் தேன் சிந்துவதும், வலியதும், மதப்படுத்துவதுமான இந்துவை இந்திரனுக்காக நதிகளிலே செலுத்துகிறார்கள். 8060

## 54. பவமான ஸோமன்

### 777. அவத்ஸார காசியபன்

1. அறிஞர்கள், ஸோமனுடைய பழைய தேகத்தைப் பின்பற்றி ஆயிரஞ்செல்வங்களைத் தரும் ரிஷியினிடமிருந்து பிரகாசமாயுள்ள பாலைக் கறக்கிறார்கள்.

2. அவன் சூரியனைப்போல் உலகத்தைக் கவனிக்கிறான். அவன் ஏரிகளுக்குப் பாய்கிறான். அவன் சோதியிலிருந்தும் இறங்கும் ஏழு நதிகளோடு சேர்கிறான்.

3. இந்த சுத்தனான ஸோமன், தேவனான சூரியனைப் போல் எல்லா புவனங்களுக்கும் மேலே நிலைக்கிறான்.

4. இந்திரனை விரும்பும் சுத்தனான ஸோமனே! எங்கள் யக்ஞத்துக்குப் பாலோடும் தயிரோடும் சேர்ந்த உணவைப் பொழியவும். 8064

## 55. பவமான ஸோமன்

### 778. அவத்ஸார காசியபன்

1. ஸோமனே! எங்களுக்குச் செழுமைச் செழிப்பையும், யவத்தையும், உணவையும், எல்லா சௌபாக்கியங்களையும் பொழியவும்.

2. உணவாகப் போற்றப்படுபவனும், தோன்றித்துலங்குபவனுமான நீ, உன்னை இன்புறுத்தும் தருப்பையின்மீது அமரவும்.

3. ஸோமனே! பசுக்களையும் குதிரைகளையுமளிப்பவனான நீ, துரிதமாய்ச் செல்லும் தினங்களைப்போல் உணவின் தாரைகளோடு எங்களுக்குப் பெருகவும்.

4. ஆயிரங்களை ஜயிக்கும் ஸோமனே! ஜயிப்பவனும், ஜயிக்கப்படாதவனுமான நீ, எதிர்த்துப் பகைவனை ஜயிப்பவனுமான நீ பெருகவும். 8068



## 56. பவமான ஸோமன்

### 779 அவத்ஸார காசியபன்

1. துரிதனும், தேவர்களை விரும்புபவனுமான ஸோமன், பவித்திரத்திலே அரக்கர்களை அழித்து எங்களுக்கு மகத்தான உணவைப் பொழிகிறான்.

2. ஸோமனுடைய, நூறு யக்ஞங்களை விரும்பும் தாரைகள் இந்திரனுடைய நட்பை அடையுங்கால் ஸோமன் எங்களுக்கு உணவை அளிக்கிறான்.

3. ஸோமனே! பத்து விரல்கள் உன்னை, காதலனை நாடும் யுவதியைப்போல் போற்றுகின்றன. நீ எங்களுக்குச் செல்வத்தையளிக்க சுத்தமாகிறாய்.

4. இந்துவே! இனியவனான நீ, இந்திரனுக்காகவும், விஷ்ணுவுக்காகவும் பெருகவும். உன்னைப் போற்றும் வழிபடுபவர்களைப் பாவத்திலிருந்து பாலிக்கவும். 8072

## 57. பவமான ஸோமன்

### 780. அவத்ஸார காசியபன்

1. உன்னுடைய தொடர்ச்சியற்ற தாரைகள் சோதியிலிருந்து பெய்யும் மழையைப் போல் எங்களுக்கு ஆயிரம் உணவுகளை அளிக்க முன்னேறுகின்றன.

2. ஹரியான ஸோமன் தேவர்களுக்குப் பிரியமான எல்லாச் செயல்களையும் கவனித்து, அரக்கர்களை எதிர்க்க ஆயுதங்களைச் செலுத்தி யக்ஞத்துக்குப் பாய்கிறான்.

3. எல்லா விரதங்களுமுள்ள அவன் அறிஞர்களால் சுத்தமாகி அரசனைப்போல் பயமில்லாதவனாகவும், பருந்தைப் போலும் சலங்களிலே அமருகிறான்.

4. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் வையத்திலும், விண்ணிலுமுள்ள செல்வங்களையெல்லாம் எங்களுக்குச் செலுத்தவும். 8076

## 58. பவமான ஸோமன்

### 781. அவத்ஸார காசியபன்

1. தேவர்களை இன்புறுத்தும் அவன், வழிபடுபவர்களைப் பாவத்திலிருந்து மீட்டுப் பெருகுகிறான். பிழியப்பட்ட ஸோமத்தின் தாரைப் பெருகுகிறது. தேவர்களை இன்புறுத்தும் அவன், வழிபடுபவர்களைப் பாவத்திலிருந்து மீட்டுப் பாய்கிறான்.

2. செல்வங்களை அளிக்கும் தேவி, வழிபடுபவனை எங்ஙனம் பாலிக்க வேண்டுமென்பதை அறிகிறாள். தேவர்களை இன்புறுத்தும் அவன், வழிபடுபவர்களை மீட்டுப் பெருகுகிறான்.

3. நாங்கள் துவஸ்ரனிடமிருந்தும், புருஷந்தியினிடமிருந்தும், ஆயிரக்கணக்கான செல்வங்களை அடைந்தோம். தேவர்களை இன்புறுத்தும் அவன், வழிபடுபவர்களைப் பாவத்திலிருந்து மீட்டுப் பெருகுகிறான்.

4. நாங்கள் இவர்களிடமிருந்து முன்னூறாயிரம் ஆடைகளை அடைந்தோம். தேவர்களை இன்புறுத்தும் அவன், வழிபடுபவர்களைப் பாவத்திலிருந்து மீட்டுப் பெருகு
கிறான். 8080

## 59. பவமான ஸோமன்

### 782. அவத்ஸார காசியபன்

1. ஸோமனே! பசுக்களை, குதிரைகளை, விசுவத்தை, செல்வத்தை ஜயிப்பவனான நீ, பாயவும். எங்களுக்கு மக்களோடு செல்வங்களை அளிக்கவும்.

2. சலங்களிலிருந்து பெருகவும். தடைபடாமல் ஓஷதிகளிலிருந்து பெருகவும். கற்களிலிருந்து பெருகவும்.

3. ஸோமனே! பாவமானனான நீ, எல்லாத் தடைகளையும் நீக்கவும். அறிஞனான நீ தருப்பையின்மீது அமரவும்.

4. பவமான ஸோமனே! நீ அனைத்தையுமளிக்கவும். இந்துவே! நீ பிறந்தவுடன் மகானாயிருக்கிறாய். இந்துவே!
நீ எல்லாப் பகைவர்களையும் ஜயிக்கிறாய். 8084



## 60. பவமான ஸோமன்

### 783. அவத்ஸார காசியபன்

1. சுத்தஞ் செய்பவனும், அனைத்தையுங் காண்பவனும், ஆயிரங் கண்களுள்ளவனுமான ஸோமனை, காயத்திரஸாமனால் பாடுங்கள்.

2. ஸோமனே! ஆயிரங்கண்களுள்ளவனும், ஆயிரந்தாங்குபவனுமான உன்னை அவர்கள் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகச் செய்கிறார்கள்.

3. பவமானன் பவித்திரத்தின் உரோமங்களின் வழியாய்ச் செல்லுகிறான். அவன் இந்திரனுடைய இதயத்திற்குச் செல்ல கலசங்களுக்குப் பாய்கிறான்.

4. அனைத்தையுங் காணும் ஸோமனே! நீ இந்திரனுக்குத் திருப்தியையளிக்க இனிமையைப் பெருகவும். வீரப் புதல்வர்களோடு எங்களுக்கு உணவை அளிக்கவும்.
8088

## 61. பவமான ஸோமன்

### 784. அமஹீயு ஆங்கிரஸன்

1. ஸோமனே! உன்னுடைய எந்த ரஸத்தால் இந்திரன் போர்களிலே பகைவனுடைய 99 நகரங்களை அழித்தானோ அந்த ரஸத்தை இந்திரன் அருந்த நீ பெருகவும்.

2. எந்த ரஸத்தைப் பருகி ஒரு இமைப்பொழுதிலே பகைவனுடைய புரங்களை இந்திரன் அழித்தானோ சத்தியச் செயலுள்ள திவோதாஸனுக்குத் துர்வசனையும், யதுவையும் வசப்படுத்தினானோ அந்த ரஸத்தோடு பெருகவும்.

3. இந்துவே! குதிரைகளை ஜயிப்பவனான நீ, எங்களுக்குப் பசுக்களோடும், பொன்னோடும், ஆயிரம் உணவோடுமுள்ள குதிரைகளைப் பெருக்கவும்.

4. நீ பவித்திரத்தின் மீது பாய்ந்து சொட்டுங்கால் உன்னுடைய நட்பை நாங்கள் வேண்டுகிறோம்.

5. ஸோமனே ! உன்னுடைய தாரையோடு பவித்திரத்தின் மீது பாயும் அலைகளால் எங்களை இன்புறுத்தவும். 8093

6. ஸோமனே ! அனைவரின் அரசனும் சுத்தப்படுத்து பவனுமான நீ, எங்களுக்கு வீரப்புதல்வனோடு, செல்வங்களை அளிக்கவும்

7. நதிகளைப் பெற்றோர்களாக அடைந்துள்ள இந்த ஸோமனைப் பத்துவிரல்கள் சுத்தப்படுத்துகின்றன. அவன் ஆதித்தியர்களோடு சேர்ந்து செல்லுகிறான்.

8. அவன் பிழியப்பட்டவுடன் பவித்திரத்துக்கு இந்திரனோடும், வாயுவோடும், சூரிய ரசிமிகளோடும் சேர்ந்து செல்லுகிறான்

9. இனிய சுவையோடும் அழகாயுமுள்ள நீ, எங்கள் யக்ஞத்திலே பகனுக்கும், வாயுவுக்கும், பூஷாவுக்கும், மித்திரனுக்கும், வருணனுக்கும் பாயவும்.

10. உன்னுடைய இரஸத்தின் பிறப்பு உச்சத்திலாகிறது. உன்னுடைய மேன்மையான சுகமும், மகத்தான உணவும், சோதியில் இருந்தாலும் அவற்றைப் புவி பெறுகிறது. 8098

11. இந்த ஸோமனால் மானிடர்களுக்குரிய எல்லா நல்லபொருள்களையும் அனுபவிக்க விரும்புபவர்களும் அடைபவர்களுமான நாங்கள் அவற்றை அனுபவிக்கிறோம்.

12. செல்வத்தை அடைந்துள்ள நீ, எங்களுக்காகவும், துதியாருக இந்திரனுக்காகவும், வருணனுக்காகவும், மருத்துக்களுக்காகவும் பெருகவும்.

13. தேவர்கள், நன்கு பிறந்தவனும், சலங்களால் செலுத்தப்பட்டவனும், பகைவர்களைப் புடைப்பவனும், பாலாலும் தயிராலும் வண்ணப்பட்டவனுமான ஸோமனிடம் செல்லுகிறார்கள்.

14. எங்களுடைய பாக்கள் இந்திரனுடைய மனத்தை விரும்பும் ஸோமனை, கன்றுகளைப் புட்டிப்படுத்தும் தாய்ப் பசுக்களைப்போல் பலப்படுத்துகின்றன.



15. ஸோமனே ! எங்களுடைய பசுக்களுக்கு ஸோமத்தைப் பொழியவும். எங்களுக்குப் புட்டியுள்ள உணவைக் கறக்கவும். போற்றத்தகுந்த சலத்தைப் பெருக்கவும். 8103

16. பவமான ஸோமன் ஒளி உலகிலே மகத்தான வைசுவாநரசோதியை அற்புதமான இடிமுழக்கத்தைப் போல் பிறப்பித்தான்.

17. பிரகாசிக்கும் ஸோமனே ! நீ பெருகுங்கால் உன்னுடைய, தீமையகன்றதும், மதப்படுத்துவதுமான ரஸம் கம்பளப் பவித்திரத்திலே பிரகாசிக்கிறது.

18. பவமான ஸோமனே ! உன்னுடைய ரஸம் பெருகுங்கால் மிக்கப் பிரகாசிக்கிறது. அவன் வியாபகமாயும், விசுவமாயுமுள்ள சோதியைக் காணப்படச் செய்கிறான்.

19. நீ உன்னுடைய மதப்படுத்துவதும், போற்றத் தகுந்ததும், தேவர்களைத் திருப்தி செய்வதும், அரக்கர்களை அழிப்பதுமான ரஸத்தோடு பெருகவும்.

20. நீ பகைவனான விருத்திரனைக் கொல்பவன். நீ தினந்தோறும் போரின் செல்வத்தைப் பற்றுபவன். நீ பசுக்களை அளிப்பவன். நீ குதிரைகளை அளிப்பவன். 8108

21. நீ பசுக்களின் தாங்கும் பாலோடும், தயிரோடும் சேர்க்கப்பட்டு, இப்பொழுது பிரகாசிக்கவும். உன்னுடைய இடத்திலே பருந்தைப் போல் இறங்கி விளங்கவும்.

22. மகத்தான சலங்களைத் தடுத்த விருத்திரனைக் கொல்ல இந்திரனுக்கு உதவி செய்த நீ பெருகவும்.

23. உத்தம வீரப் புதல்வர்களுள்ள நாங்கள் பகைவர்களின் செல்வங்களை ஜயிப்போமாக. ஸோமனே ! நீ வர்ஷிப்பவன். சுத்தமாகும் நீ எங்கள் பாக்களைச் செழிப்பிக்கவும்.

24. உன்னால் பாலனமாகும் நாங்கள் உன்னுடைய பாலனத்தால் பகைவர்களைக் கொன்று ஜயிப்போமாக. ஸோமனே ! நீ எங்கள் விரதங்களிலே விழித்திருக்கவும்.

25. ஸோமன் பகைவர்களைக் கொல்பவனும், கருமிகளை அழிப்பவனும், இந்திரனுடைய தனி இடத்துக்குப் பாய்பவனும் பெருகுகிறான். 8113

26. பவமான ஸோமனே! எங்களுக்கு மகத்தான செல்வத்தை அளிக்கவும். எங்கள் பகைவர்களை ஜயிக்கவும். எங்களுக்குப் புகழையும் வீரப் புதல்வர்களையுமளிக்கவும்.

27. நீ சுத்தமாகுங்கால் எங்களிடம் அநுகூலமாகி செல்வத்தை அளிக்க விரும்பும்போது உன்னை நூறு பகைவர்களும் தடுக்க இயலாமல் இருக்கிறார்கள்.

28. ஸோமனே! வர்ஷிப்பவனான நீ, பொழியப்படுங்கால் எங்களை மனிதர்களின் நடுவே பெருமைப்படுத்தவும். எங்கள் சத்துருக்களையெல்லாம் கொல்லவும்.

29. ஸோமனே! நாங்கள் இங்கு உன்னுடைய நட்பையும், உத்தம உணவையும் பெற்று எங்களை எதிர்க்க விரும்பும் பகைவர்களை ஜயிப்போமாக.

30. பகைவனைக் கொல்ல உன்னிடத்திலிருக்கும் பயங்கரமான கூரிய ஆயுதங்களால் எங்களைச் சத்துருக்களின் நிந்தையிலிருந்து பாலிக்கவும். 8118

## 62. பவமான ஸோமன்

### 785. ஜமதக்கினி பார்கவன்

1. இந்த வேகமாயுள்ள ஸோமரஸங்கள் எல்லா சௌபாக்கியங்களையும் பெற பவித்திரத்தின் வழியாய்ச் செலுத்தப்படுகின்றன.

2. வலியவையும், பல தீமைகளைத் தருபவையும், எங்கள் புதல்வர்களுக்கும் குதிரைகளுக்கும் சுகத்தையளிப்பவையுமான இந்த ரஸங்கள் பிரேரிக்கப்படுகின்றன.

3. அவை எங்களுக்கும், எங்கள் பசுக்களுக்கும், ஆதரிக்கும் செல்வத்தையும், உணவையும் பொழிந்து கொண்டு எங்கள் நல்ல துதியை நோக்கிப் பாய்கின்றன.



4. மலையில் தோன்றும் ஸோமன் மதத்துக்காகப் பெருகுகிறான். சலங்களிலே செழிக்கிறான். தன்னுடைய சொந்த இடத்திலே பருந்தைப் போல் அமருகிறான்.

5. பசுக்கள் தங்கள் பாலால் தேவர்களால் விரும்பப்படும் அழகிய உணவை இனிமைப்படுத்துகின்றன. மனிதர்களால் ஸோமன் பிழியப்படுங்கால் சலத்திலே சுத்தமாகிறான். 8123

6. பிறகு ரித்விஜர்கள் யக்ஞத்திலே மதமளிக்கும் ஸோமரஸத்தை அமுதத்துக்காகக் குதிரையைப் போல் சிறப்பிக்கிறார்கள்.

7. ஸோமனே! இனிய ரஸத்தைப் பொழிபவையும், நம்முடைய பாலனத்துக்காகச் சிந்தப்படுபவையுமான தாரைகளோடு நீ பவித்திரத்திலே அமரவும்.

8. ஸோமனே! நீ ஆட்டு உரோம பவித்திரத்தைக் கடந்து மரப்பாண்டங்களிலே உன் இடத்தில் அமர்ந்து இந்திரனுடைய பானத்துக்காகப் பெருகவும்.

9. ஸோமனே! மிக்க இனிப்பளிப்பவனும், செல்வங்களை அழிப்பவனுமான நீ, அங்கிரஸர்களுக்கு நெய்யையும் பாலையும் பொழியவும்.

10. அனைத்தையுங் காண்பவனும், பாத்திரங்களில் நிலைக்கப்பட்டவனும், பவமானனுமான இந்த ஸோமன், சலங்களில் தோன்றும் மகத்தான உணவைப் பிரேரிக்கிறான். அனைவராலும் அறியப்படுகிறான். 8128

11. வர்ஷிப்பவனும், வர்ஷிக்கும் விரதமுள்ளவனும், அரக்கர்களை அழிப்பவனுமான இந்தப் பவமான ஸோமன் அவியளிப்பவனுக்குச் செல்வங்களைத் தருகிறான்.

12. ஸோமனே! பலரால் விரும்பப்படுவதும், பலரை இன்புறுத்துவதும், பசுக்களும் குதிரைகளுமுள்ளதான ஆயிரக்கணக்கான செல்வத்தைப் பொழியவும்.

13. பல பாக்கள் உள்ளவனும், பேரறிவுள்ளவனுமான இந்த ஸோமன் மனிதர்களாகுங்கால் தெளிக்கப்படுகிறான்.

14. ஆயிரம் பாலனங்கள் அளிப்பவனும், நூறு செல்வங்கள் உள்ளவனும், உலகத்தை அளப்பவனும், கவியும், மதந்தருபவனுமான ஸோமன் இந்திரனுக்காகப் பெருகுகிறான்.

15. இந்த யக்ஞத்திலே பிறப்பிக்கப்பட்டு பாட்டால் போற்றப்பட்ட இந்து அவனுடைய இடத்திலே இந்திரனுக்காக உரை இடத்திலே பறவையைப் போல் அமர்த்தப் படுகிறான். 8133

16. மனிதர்களால் பிழியப்பட்ட சுத்த ஸோமன் சிருவங்களிலே திறமாயமர போருக்குச் செல்பவனைப் போல் பாய்கிறான்.

17. அவர்கள் அவனை ரிஷிகளின் மூன்று அங்கங்களும், மூன்று பீடங்களுமுள்ள தேரிலே ஏழு சந்தங்களால் தேவர்களிடம் செல்ல இணைக்கிறார்கள்.

18. ஸோமத்தைப் பொழிபவர்களே! செல்வந்தரும் துரிதமான திறக் குதிரையைப் போருக்குச் செல்ல ஊக்கப் படுத்துங்கள்.

19. பிழியப்பட்டவுடன் கலசத்தினுள் பாய்ந்து வீரனைப் போல் எங்களுக்கு எல்லா வெற்றியையும் தந்து ஸோமன் பசுக்களின் நடுவே நிற்கிறான்.

20. ஸோமனே! தேவர்களும் மனிதர்களும் உன்னுடைய இனிய ரஸத்தைக் கறக்கிறார்கள். 8138

21. தேவர்களால் மிக்க செவியுறப்படுவதும், மிக்க இனிப்புற்றதுமான ஸோமத்தை எங்களுக்காகவும், தேவர்களுக்காகவும் பவித்திரத்திலே பொழியுங்கள்.

22. மிக்க மதப்படுத்துவதும் இரஸத்தின் தாரையோடு மகத்தான உணவுக்காகப் போற்றப்படும் இந்த ஸோமங்கள் அறிஞர்களால் பெருக்கப்படுகின்றன.

23 சுத்தமாகும் நீ, பசுக்களின் செல்வங்களை அனுபவிக்கத் துரிதமாகிறாய். உணவை அளிக்கும் நீ பெருகவும்.



24. ஜமதக்கினியால் போற்றப்படும் நீ, பசுக்களுள்ளவையும், புகழத்தகுந்தவையுமான எல்லா உணவுகளையும் எங்களுக்குப் பொழியவும்.

25. ஸோமனே! முதல்வனான நீ, உன்னுடைய அற்புதப் பாலனங்களோடு எங்களுடைய காதைகளையும், காவ்யங்களையுங் கேட்கப் பாயவும். 8143

26. விசுவத்தைக் கலக்கும் ஸோமனே! முதல்வனான நீ, உன்னுடைய நாதத்தை எழுப்பி வானின் சலங்களைப் பொழியவும்.

27. கவியே! ஸோமனே! உன்னுடைய மகிமையிலே இவ்வுலகங்கள் எல்லாம் நிலைக்கின்றன. நதிகள் உன்னிடம் பாய்கின்றன.

28. உன்னுடைய தனித்தனி தாரைகள் வெண்மையாய்ப் பரந்துள்ள பவித்திரத்தின்மீது சோதியிலிருந்து மழையைப் போல் சொரிகின்றன.

29. திறத்தின் ஸாதகனும், செல்வத்தின் தலைவனும், நதிகளைத் தருபவனும், உக்கிரனுமான ஸோமனை இந்திரனுக்காக சுத்தப்படுத்துங்கள்.

30. ஸத்தியனும், கவியுமான பவமான ஸோமன் தொழுபவனுக்குத் திரத்திறத்தையளித்து, பவித்திரத்தின் மீது அமருகிறான். 8148

## 63. பவமான ஸோமன்

### 786. நித்ருவி காசியபன்

1. ஸோமனே! உத்தம வீரப் புதல்வர்களோடு ஆயிரக் கணக்கான செல்வத்தை எங்களுக்குப் பொழியவும். எங்களுக்கு உணவை ஸ்தாபிக்கவும்.

2. மிக்க மதத்தையளிக்கும் நீ, இந்திரனுக்கு ரஸத்தையும் உணவையும் பொழிகிறாய். பாண்டங்களிலே அமருகிறாய்.

3. இந்திரனுக்கும், விஷ்ணுவுக்கும், வாயுவுக்கும் பொழியப்பட்ட ஸோமம் கலசத்தினுள் சொட்டுகிறது. அது இனிய ரஸமாகுக.

4. வேகமாய்ப் பாயும் பழுப்பு நிறமுள்ள ஸோம ரஸங்கள் சலதாரைகளோடு அரக்கர்கள் மீது விடப்படு கின்றன.

5. ஸோமர்கள் இந்திரனைச் செழிப்பித்து சலங்களைப் பிரேரித்து, விசுவத்தை ஆர்யப்படுத்தி, கருமிகளைக் கொன்று பாய்கிறார்கள். 8153

6. பிழியப்பட்டவையும், பழுப்பு நிறமுள்ளவையுமான ரஸங்கள் இந்திரனிடம் பாய்ந்து, தங்கள் சொந்த இடத் துக்குத் துரிதமாகின்றன.

7. மானிடர்களுக்கு நலத்தையளிக்கும் சலங்களைப் பிரேரிக்கும் நீ, ஸோமனே! எந்தத் தாரையோடு சூரியனை ஒளிப்படுத்துகிறாயோ அந்தத் தாரையோடு பெருகவும்.

8. பவமான ஸோமன் வானின் வழியாய் மானிட னிடம் செல்ல சூரியனுடைய குதிரையை இணைக்கிறான்.

9. ஸோமன்! இந்திரன் எனக் கூறிக்கொண்டு இந்தப் பத்து திசைகளை நோக்கிச் செல்ல சூரியனுடைய குதிரை களை இணைக்கிறேன்.

10. துதிப்பவர்களே! வாயுவுக்கும் இந்திரனுக்கும் எல்லாத் திசைகளிலும் பிழியப்பட்ட ஸோமத்தைக் கம்பளத் துணியின் மீது சொட்டுங்கள். 8158

11. பவமான ஸோமனே! பகைவர்களால் எதிர்ப் பற்றதும், சத்துருவால் சிதைக்க இயலாததுமான செல் வத்தை எங்களுக்களிக்கவும்.

12. பசுக்களோடும் குதிரைகளோடுமுள்ள ஆயிரக் கணக்கான செல்வத்தை எங்களிடம் செலுத்தவும். எங்க ளிடம் உணவையும் பலத்தையும் செலுத்தவும்.



13. தேவனான சூரியனைப்போலுள்ள ஸோமன் பிழியப் பட்டவுடன் கலசத்தினுள் ரஸத்தினுள் ரஸத்தை ஸ்தா பிக்கப் பெருகுகிறான்.

14. பிரகாசமாயுள்ள இந்த ஸோமரஸங்கள் உத்தமர் களின் மனைகளை நோக்கிப் பாய்ந்து சலதாரையோடு பசுக் களையும் உணவையும் பொழிகின்றன.

15. வச்சிராயுதம் ஏந்தும் இந்திரனுக்காகப் பிழியப் பட்டவையும், தயிரோடு சேர்க்கப்பட்டவையுமான இந்த ஸோமரஸங்கள் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகுகின்றன. 8163

16. ஸோமனே! உன்னுடைய மிக்க இனிமையுள்ள தும், மதப்படுத்துவதும், தேவர்களால் விரும்பப்படுவதுமான ரஸத்தைப் பவித்திரத்தில் எங்களுக்குச் செல்வத்தை அளிக்கப் பொழியவும்.

17. மனிதர்கள் பசுமை நிறமுள்ளவனும், பலமுள்ளவ னும், மதப்படுத்துபவனுமான இந்துவை இந்திரனுக்காக வஸதீவரி சலங்களிலே சுத்தப்படுத்துகிறார்கள்.

18. ஸோமனே! பொன்னும், குதிரைகளும், வீரப் புதல்வர்களுமுள்ள செல்வத்தை எங்களுக்குப் பொழியவும். எங்களுக்கு உணவையும் பசுக்களையுமளிக்கவும்.

19. ஆட்டு உரோமக் கம்பளத்தின் மீது இந்திரனுக் காக. மிக்க இனிமையுள்ளதும், போரில் போராட விரும்பு வதுமான ஸோமத்தைப் பொழியுங்கள்.

20. பாலனத்தை விரும்பும் அறிஞர்கள், பாக்களால் பாங்கு செய்யத் தகுந்த கவியை எழில்படுத்துகிறார்கள். விருஷபன் முழக்கத்துடன் பெருகுகிறான். 8168

21. அறிஞர்கள் வர்ஷிப்பவனும், பிரேரிப்பவனுமான ஸோமனைத் துதிகளாலும், சிந்தனைகளாலும், ருதத்தின் தாரையாலும் முழக்கப்படுத்துகிறார்கள்.

22. தேவனான ஸோமனே! மானிடனோடு இயங்கும்

நீ பெருகவும். உன்னுடைய மதப்படுத்தும் ரஸம் இந்திரனுக்குச் செல்க. நீ தாரகமான ரஸத்தோடு வாயுவுக்கு ஏறவும்.

23. பவமான ஸோமனே! புகழைத் தரும் செல்வத்தைப் பொழியவும். அன்பனுகும் நீ. கடலுக்குச் செல்லவும்.

24. ஸோமனே! மதமளிக்கும் நீ, பகைவர்களை விலக்குபவனுயும், எங்களுக்கு அறிவைத் தருபவனுயும் பெருகுகிருய். தேவர்களை விரும்பாத சனங்களைக் கடத்தவும்.

25. பிரகாசிக்கும் பவமான ஸோம ரஸங்கள் எல்லாப் பாக்களின் நடுவே இயக்கப்படுகின்றன. 8173

26. பவமான ஸோம ரஸங்கள் எல்லாப் பகைவர்களையுமழித்துக் கொண்டு துரிதமாயும், துலக்கமாயும் பாய்கின்றன.

27. பவமான ஸோமங்கள் சோதியிலிருந்தும், வானிலிருந்தும் புவியின் உச்ச ஸ்தானமான யக்ஞத்திலே பொழியப்படுகின்றன

28. இந்துவே! உத்தமச் செயலுள்ளவனே! ஸோமனே! தாரையால் சுத்தமாகி எல்லாப் பகைவர்களையும் அரக்கர்களையுமழிக்கவும்.

29. ஸோமனே! நீ அரக்கர்களை அழித்து, முழங்கி, பிரகாசிப்பதும், பெருமையுள்ளதுமான பலத்தை எங்களுக்குப் பொழியவும்.

30. ஸோமனே! நீ எங்களுக்கு சோதியிலுள்ள புவியிலுள்ள செல்வங்களை அளிக்கவும். இந்துவே! விரும்பத் தகுந்த எல்லாப் பொருள்களையும் அளிக்கவும், 8178

## 64. பவமான ஸோமன்

### 787. கசியப மாரீசன்

1. ஸோமனே! வர்ஷிக்கும் நீ, பிரகாசிப்பவன்.



தேவனே! வர்ஷிக்கும் நீ வர்ஷிக்கும் விரதமுள்ளவன் வர்ஷிக்கும் நீ தருமங்களை ஏந்துகிருய்.

2. வர்ஷிப்பவனே! வர்ஷிக்கும் உன்னுடைய வலிமை, வர்ஷிக்கும் தன்மையுள்ளது. உன்னுடைய வழிபாடும் வர்ஷிக்கும் தன்மையுள்ளது. உன்னுடைய இரஸம் வர்ஷிக்கும் தன்மையுள்ளது. நீ மெய்யாகவே வர்ஷிக்கும் தன்மையுள்ளவன்.

3. ஸோமனே! வர்ஷிக்கும் நீ குதிரையைப் போல் கனைக்கிருய். நீ எங்களுக்குப் பசுக்களை அளிக்கிருய். எங்களுடைய செல்வத்துக்கு கதவுகளைத் திறக்கவும்.

4. வலியவையும், விளங்குபவையும், வேகமுள்ளவையுமான ஸோமரஸங்கள் பசுக்களையும், குதிரைகளையும், வீரப் புதல்வர்களையும் அடைய வேண்டுமென்னும் விருப்பத்தால் பொழியப்படுகிருர்கள்.

5. யக்ஞத்தை விரும்புபவர்களால் அழகு செய்யப்பட்டவையும், கைகளால் சுத்தப்பட்டவையுமான ஸோம ரஸங்கள் கம்பளத் துணியின் வழியாய்ப் பாய்கின்றன. 8183

6. அந்த ஸோமரஸங்கள் அவியளிப்பவனுக்கு சோதியிலுள்ள, வானிலுள்ள, புவியிலுள்ள செல்வங்களை எல்லாம் பொழிக.

7. விசுவத்தைக் காணும் ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் இப்பொழுது சூரியனுடைய ரசிமிகளைப் போல் பிரகாசமாயிருக்கப் பொழியப்படுகின்றன.

8. ஸோமனே! ஸமுத்திரனுயிருக்கும் நீ அறிவை அளித்து எங்களுக்கு எல்லா வடிவங்களையும், சோதியிலிருந்து பொழிகிருய். பலவித செல்வங்களைத் தருகிருய்.

9. பவமான ஸோமனே! உன்னுடைய ரஸம் பிரேரிக்கப்பட்டு, தேவனுன சூரியனைப் போல் தாரகமான பவித்திரத்தின் வழியாய்ப் பாயுங்கால் சத்தத்தை எழுப்புகிருய்

10. ஒளிப்படுத்துபவனும், அன்பனுமான ஸோமன்

கவிகளின் காதையால் பெருகுகிறான். அவன் தன் அலையைக் குதிரையைத் தேரோட்டி போல் இயக்குகிறான். 8188

11. ஸோமனே! உன்னுடைய தேவர்களை விரும்பும் அலையானது ருதத்தின் இடத்தில் இறங்கும் பவித்திரத்துக்குப் பாய்கிறது.

12. ஸோமனே! மதப்படுத்துபவனும், தேவர்களை மிக்க விரும்புபவனுமான நீ, இந்திரனுடைய பானத்துக்காகப் பவித்திரத்துக்குப் பாயவும்.

13. ஸோமனே! மனிதர்களால் சுத்தமாகும் நீ தாரையோடு எங்களுடைய உணவுக்காகப் பெருகவும், உணவோடு பசுக்களிடம் செல்லவும்.

14. பசுமை நிறமுள்ளவனும், துதிகளால் போற்றப்படுபவனும், பாலோடும், தயிரோடும் சேர்க்கப்படுபவனும், சுத்தப்படுபவனுமான நீ, வழிபடுபவனுக்குச் செல்வத்தையும் உணவையுமளிக்கவும்.

15. ஸோமனே! திறமையுள்ள வழிபடுபவர்களால் திரட்டப்பட்டுத் துலங்குபவனான நீ, தேவர்களுடைய விருந்துக்கு சுத்தமாகி, இந்திரனுடைய இடத்துக்குச் செல்லவும். 8193

16. வானை நோக்கிப் பிரேரிக்கப்படும் வேகமாயுள்ள ஸோமரஸங்கள் விரல்களால் பிழியப்பட்டு பொழியப்படுகின்றன.

17. துரிதமாயுள்ள ஸோமரஸங்கள் சுத்தமாகி வானுக்கு அநாயஸமாய்ச் செல்லுகின்றன. அவை ருதத்தின் இடத்துக்குப் பாய்கின்றன.

18. ஸோமனே! எங்களை விரும்பும் நீ, உன்னுடைய ஆற்றலால் எங்கள் செல்வங்களையெல்லாம் பாலிக்கவும். எங்கள் மனையையும் மக்கட்களையும் பாலிக்கவும்.

19. யக்ஞத்துக்கு அறிஞர்களால் இணைக்கப்பட்ட சுமைக் குதிரை கடலில் நிறுத்தப்பட்டவுடன் கனைக்கிறது.



20. யக்ஞத்தின் பொன் பீடத்திலே துரிதனான ஸோமன் தன் இடமென அமரும்போது அது அறிவில்லியின் யாகமென அறிந்தால் அங்கிருந்து நீங்குகிறான். 8198

21. பக்தர்கள் ஸோமனைப் போற்றுகிறார்கள். பேரறிஞர்கள் யக்ஞத்தை விரும்புகிறார்கள். விபரீத மனமுள்ளவர்கள் அமிழ்கிறார்கள்.

22. ஸோமனே! மிக்க இனிய ரஸமுள்ள நீ, மருத்துக்களோடு சேர்ந்துள்ள இந்திரனுக்காகப் பெருகவும். நீ ருதத்தின் இடத்திலே உட்காரவும்.

23. விப்பிரர்களும், செயல்களை நடத்துபவர்களும், மொழிகளை அறிபவர்களும், பவமான ஸோமனான உன்னை அலங்கரிக்கிறார்கள். மானிடர்கள் உன்னை சுத்தப்படுத்துகிறார்கள்.

24. கவியே! மித்திரனும், அரியமானும், வருணனும், மருத்துக்களும், பெருகும் உன்னுடைய ரஸத்தைப் பருகுகிறார்கள்.

25. துலங்கும் ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் ஆயிரங்களை ஊட்டுவதும் அறிவுள்ளதுமான மொழியைக் கூறுகிறாய். 8203

26. துலங்கும் ஸோமனே! நீ தூய்மையானவுடன் செல்வத்தை விரும்புவதும், ஆயிரங்களை ஊட்டுவதுமான மொழியை எங்களுக்களிக்கவும்.

27 பலரால் போற்றப்படும் ஸோமனே! சுத்தப்படுபவனும், வழிபடுபவர்களால் பிரியப்படுபவனுமான நீ, கலசத்தில் பாயவும்.

28. விளங்கும் காந்தியோடும் முழங்கும் தாரையோடும், பிரகாசிக்கும் ஸோமரஸங்கள் பாலோடும் தயிரோடும் சேர்க்கப்படுகின்றன.

29. வலிய ஸோமன் ஊக்கமுள்ளவர்களால் செலுத்தப்பட்டு, களத்துக்குச் செல்லும் திரண்ட போர்வீரர்களைப் போல் செல்லுகிறான்.

30. சோதியிலிருந்து அறிஞனான எங்களைச் செழிப்பிக்க வந்த ஸோமனே! நாங்கள் காண நீ சூரியனைப் போல் பெருகவும். 8208

## 65. பவமான ஸோமன்

### 788. பிருகு–வருணனுடைய புதல்வன் அல்லது ஜமதக்கினி பார்கவன்

1. இயக்கும் பந்துக்களான விரல்கள் உன்னைப் பிழிய விரும்பி ஊக்கப்படுத்துபவனும், தலைவனும், மகானுமான இந்துவைப் பிரேரிக்கின்றன.

2. பவமான ஸோமனே! தேவனான நீ ஒளிச்சுடரோடு தேவர்களிடமிருந்து எல்லாச் செல்வங்களையும் எங்களிடம் செலுத்தவும்.

3. பவமான ஸோமனே! தேவர்களை வணங்க நன்கு போற்றத்தகுந்த மழையைப் பொழியவும். இடைவிடாத மழையை எங்கள் உணவுக்காகப் பொழியவும்.

4. நல்ல செயல்களை நடத்தும் நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். ஏனெனில் ஒளியோடு பிரகாசிக்கும் பவமான ஸோமனே! நீயே பொழிபவன்.

5. கூரிய படையை ஏந்துபவனும், தேவர்களை மதப்படுத்துபவனுமான நீ, எங்களுக்கு வீரப்புதல்வர்களைப் பொழியவும். இந்துவே! நீ எங்கள் யக்ஞத்துக்கு வா. 8213

6. நீ இருகைகளால் சுத்தப்பட்டு மரப்பாண்டத்தோடு சலங்களிலே அமிழ்த்தப்படுங்கால் நீ உன் இடத்துக்கு வருகிறாய்.

7. மகானும், ஆயிரங்கண்கள் உள்ளவனும், பவமானனுமான ஸோமனுக்கு வியசுவனைப்போல் பாடுங்கள்.

8. பகை விலக்குபவனும், தேன்பொழிபவனும், பசுமை நிறமுள்ளவனும், இந்திரனுடைய பானத்துக்காகக் கற்களால் பிழியப்படுபவனுமான ஸோமனைப் பாடுங்கள்.



9. வலியனும், எல்லாச் செல்வங்களை ஜயிப்பவனுமான உன்னுடைய நட்பை அடைய நாங்கள் விரும்புகிறோம்.

10. வர்ஷிக்கும் நீ, தாரையோடு பெருகவும். மருத்துக்களின் தலைவனுக்கு மதமளிப்பவனாயிருக்கவும், உன் ஆற்றலால் எல்லாச் செல்வங்களை அளிப்பவனாயிருக்கவும். 8218

11. பவமான ஸோமனே! நான் சோதி புவிகளைத் தாங்குபவனும், சூரியனைக்காண்பவனும், சக்தியுள்ளவனுமான உன்னைப் போருக்குச் செலுத்துகிறேன்.

12. என்னுடைய இணக்கமுள்ள விரல்களால் பிழியப்பட்டு, பசுமை நிறமுள்ளவனாயிருக்கும் நீ, தாரையோடு பெருகவும். எங்கள் நண்பனான இந்திரனைப் போருக்கு ஊக்கப்படுத்தவும்.

13. விசுவத்தைப் புலப்படுத்தும் பவமான ஸோமனும் நீ. எங்களுக்கு மகத்தான உணவைப் பொழியவும். எங்களுக்கு சோதி செல்லும் வழியைப் புலப்படுத்துபவனாயிருக்கவும்.

14. ஸோமனே! அவர்கள் பலத்தோடுள்ள உன்னுடைய தாரைகளோடுள்ள கலசங்களைப் போற்றுகிறார்கள். இந்திரனுடைய பானத்துக்காக நீ பெருகவும்.

15. கற்களால் பிழியப்படுவதும், மதமளிப்பதும், தீவிரமாயிருப்பதும், தீய மனமுள்ளவர்களை அழிப்பதுமான ரஸம் பெருகுக. 8223

16. யக்ஞத்திலே சுத்தனான அரசன் – ஸோமன் – வானின் வழியில் செல்ல அறிஞர்களால் செலுத்தப்படுகிறான்.

17. ஸோமனே! நீ எங்கள் பாலனத்துக்காக, நூற்றுக்கணக்கான கால்நடைகளோடு பசுக்களின் செழிப்பையும், அழகிய குதிரைகளோடு தானச் செல்வத்தையும் அளிக்கவும்.

18. நீ தேவர்களுடைய பானத்துக்காகப் பிழியப்பட

வும். ஸோமனே ! எங்களுக்கு வலிமையையும், வேகத்தை யும், ஒளிப்படுத்த வடிவத்தையுமளிக்கவும்.

19. ஸோமனே ! மிக்கத் துலங்குபவனான நீ, முழக்கத் தோடு மாப்பாண்டங்களுக்கு, கூட்டுக்குப் பறக்கும் பருந் தைப்போல் துரிதமாகவும்.

20. சலத்தை விரும்பும் நீ, பாண்டங்களுக்கு இந்திர னுக்காகவும், வாயுவுக்காகவும், வருணனுக்காகவும், மருத் துக்களுக்காகவும், விஷ்ணுவுக்காகவும் பெருகவும். 8228

21. ஸோமனே ! எங்கள் புதல்வனுக்கு உணவை அளித்து எங்களுக்கு எல்லாத் திசைகளிலிருந்தும் ஆயிரக் கணக்கான செல்வத்தைப் பொழியவும்.

22. தூரத்திலோ அருகிலோ அல்லது இந்த சர்மண வதியிலோ

23. ஆர்ஜீகங்களின் நடுவிலோ அல்லது கிருத்வங் களின் நடுவிலோ அல்லது ஸரஸ்வதி நதிகளின் அருகிலோ அல்லது பஞ்ச சனங்களின் நடுவிலோ

24. பிரகாசமாயுள்ள ஸோமரஸங்கள் பிழியப்படுங் கால் எங்களுக்கு வீரப்புதல்வனோடு மழையை சோதியி லிருந்து பொழிக.

25. இன்புறுத்துபவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன், ஜமதக்கினியால் போற்றப்பட்டு, பசுவின் சருமத் திலே பிரேரிதமாகிப் பெருகுகிறான். 8233

26. உணவைத் தருபவையும், பிரகாசிப்பவையுமான ஸோமரஸங்கள் தயிரோடும் பாலோடும் சேர்க்கப்பட்டு சலங்களிலே தேரோட்டிகளால் செலுத்தப்படும் குதிரை களைப்போல் பிரேரிக்கப்பட்டு சுத்தமாகின்றன.

27. இயக்குபவர்கள் ரஸங்களோடு உன்னைத் தேவர் களுடைய விருந்துக்காகப் பிரேரிக்கிறார்கள். நீ இந்தக் காந்தியோடு பெருகவும்.

28. நாங்கள் இன்று உன்னுடைய சுகத்தைத் தருவ



தும், செல்வத்தைப் பிரேரிப்பதும், பாலனமளிப்பதும், பல ரால் விரும்பப்படுவதுமான ஆற்றலைப் போற்றுகிறோம்.

29. ஸோமனே ! மதப்படுத்துபவனும், போற்றத் தகுந்தவனும், அறிஞனும், விப்ரனும், பாலிப்பவனும், பல ரால் விரும்பப்படுபவனுமான உன்னை நாங்கள் போற்று கிறோம்.

30. வினைத்திட்பனே ! நாங்கள் உன்னுடைய செல் வத்தை விரும்புகிறோம். புதல்வனுக்காக அறிவை விரும்பு கிறோம். நாங்கள் பாலிப்பவனும், பலரால் விரும்பப்படுபவ னுமான உன்னைப் போற்றுகிறோம். 8238

## 66. பவமான ஸோமன்

### 789. சதம் வைகாநசர்கள்

1. அனைத்தையுங் காண்பவனே ! போற்றத் தகுந்த வனும், நண்பர்களான எங்களுடைய நண்பனான நீ எங்க ளுடைய எல்லா காவ்யங்களுக்கும் பெருகவும்

2 பவமான ஸோமனே ! உன்னை நோக்கி நிற்கும் மாதத்தின் இரு பட்சங்களால் நீ உலகத்தை அரசுபுரிகிறாய்.

3. பவமான ஸோமனே! உன்னுடைய இடங்களான இரவும் பகலும் எங்கும் பரவியிருக்கின்றன. கவியே ! நீ பருவங்களோடு எங்கும் இருக்கிறாய்.

4. ஸோமனே ! நண்பனான நீ, எங்களுடைய விரும் பத்தகுந்த தோத்திரங்களுக்காக, நண்பர்களான நாங்கள் பாலனமாக நீ உணவைப் பிறப்பித்துப் பெருகவும்.

5. ஸோமனே ! பிரகாசத்தோடுள்ள உன்னுடைய ஒளிக் கதிர்கள் சோதியின் அதோபாகத்திலே சுத்தப்படுத் தும் சலத்தைப் பரத்துகின்றன. 8243

6. ஸோமனே ! இந்த உன்னுடைய ஏழு நதிகள் உன் ஆக்ஞையால் பாய்கின்றன. பசுக்கள் உன்னிடம் துரிதமா கின்றன.

7. ஸோமனே! நீ பிழியப்பட்டவுடன் இந்திரனுக்கு மதத்தை அளிப்பவனுயும், எங்களுக்கு அழியாத உணவை அளிப்பவனுயும் பெருகவும்.

8. ஏழு பந்துக்களான அறிஞர்கள் துதித்து, யஜித்து, உன்னை யக்ஞத்திலே பாக்களோடு போற்றினுர்கள்.

9. நீ சத்தத்தோடு சலத்தால் தெளிக்கப்படுங்கால் துரிதமாய்க் கற்பிக்கப்பட்டதும், முழங்குவதுமான பவித்திரத்திலே உன்னை விரல்கள் சுத்தப்படுத்துகின்றன.

10. அறிஞனே! பவமான ஸோமனே! உணவுள்ளவனே! நீ சுத்தமாகுங்கால் உன்னுடைய ஊட்டத்தை விரும்பும் தாரைகள் குதிரைகளைப் போல் விடுவிக்கப்படுகின்றன. 8248

11. தேன்சொட்டும் கவசத்துக்குச் செல்ல அவை கம்பளப் பவித்திரத்திலே விடப்படுகின்றன. எங்களுடைய விரல்கள் ரஸங்களை விரும்புகின்றன.

12. ஸோமரஸங்கள் கடலுக்கு, தொழுவத்துக்குப் பசுக்களைப்போல் செல்லுகின்றன. அவை யக்ஞத்தின் ஸ்தானத்துக்குச் செல்லுகின்றன.

13. இந்துவே! நீ பாலோடும் தயிரோடும் சேர்க்கப்படுங்கால் எங்களுடைய மகத்தான யக்ஞத்துக்குப் பெருகும் சலங்கள் பாய்கின்றன.

14. இந்துவே! நீ உன்னுடைய நட்பில் நிலைக்கும் நாங்கள் பாலனமாக உன்னேடு, யக்ஞத்தை நாடி உன்னுடைய நட்பை விரும்புகிருேம்.

15. ஸோமனே! பெரியவனும், பசுக்களைத் தேடுபவனும், மனிதர்களைக் காண்பவனுமான நீ, இந்திரனுடைய உதிரத்தினுள் நுழையவும். 8253

16. ஸோமனே! நீ மகானுயிருக்கிருய். நீ தலைவனுயிருக்கிருய். நீ உக்கிரர்களின் நடுவே மிக்க உக்கிரனுயிருக்கிருய். போரில் ஈடுபட்டுள்ள நீ சதா ஜயிக்கிருய்.



17. உக்கிரர்களை முந்தும் உக்கிரனும், வீரர்களை முந்தும் வீரனும், வள்ளலை முந்தும் வள்ளலுமான நீ

18. ஸோமனே! தீரனுன நீ எங்களுக்கு உணவை அளிக்கவும். புதல்வர்களை அளிப்பவனுயிருக்கவும். நாங்கள் உன்னை நட்புக்காகவும் நேசத்துக்காகவும் விரும்புகிருேம்.

அக்கினி பவமானன்

19. அக்கினியே! நீ எங்கள் ஆயுசைப் பாவிக்கிருய். எங்களுக்கு உணவையும் பலத்தையும் பிரேரிக்கவும். அரக்கர்களைத் தூரத்திலே விலக்கவும்.

20. அக்கினி பவமானனுயிருக்கிருன். ரிஷி பஞ்சசனங்களுக்குத் தலைவனுயிருக்கிருன். பெரியவர்களால் போற்றப்படும் அவனை நாங்கள் வேண்டுகிருேம். 8258

21. அக்கினியே! நலத்தைச் செய்பவனுன நீ எங்களுக்குப் பிரகாசத்தையும்; உத்தமப் புதல்வனையும் பொழியவும். அவன் எங்களுக்குச் செல்வத்தையும் செழுமையையும் அளிப்பானுக.

22. பவமான ஸோமன் பகைவர்களைக் கடந்து செல்கிருன். வழிபடுபவர்களின் உத்தமப் பாக்களுக்குப் போகிருன். சூரியனைப்போல் அனைவர்க்கும் புலனுகிருன்.

23. அறிஞர்களால் மீண்டும் மீண்டும் சுத்தப்படுபவனும், உணவுமிகுந்தவனும், உணவுக்காக ஸ்தாபிக்கப்படுபவனும், அனைவரையுங் காண்பவனுமான ஸோமன் ஓயாமல் தேவர்களிடஞ் செல்லுகிருன்.

24 பவமானன் கருத்த இருட்டை அழித்தான். சத்தியமாயும் பரவுவதாயும் வெளுப்பாயுமுள்ள சோதியைப் பிறப்பித்தான்.

25. மீண்டும் மீண்டும் இருளை அழிப்பவனும், தேயாத ஒளியுள்ளவனும், பசுமை நிறமுள்ளவனுமான பவமானனின் மதமளிக்கும் துரிதமாய்ப் பாயும் தாரைகள் விடப்படுகின்றன. 8263

26. பவமான ஸோமனிடம் பல தேர்கள் இருக்

கின்றன. அழகிய ஒளியோடு மிக்கப் பிரகாசிப்பவன் பசுமை யான தாரைகளுள்ள அவன் மருத்துக்களோடிருப்பவன்.

27. மிக்கத் தாராளமாய் உணவை அளிப்பவனுன பவமான ஸோமன் வழிபடுபவனுக்கு உத்தமப் புதல்வனை அளித்து, தன் கதிர்களோடு எங்கும் பரவுவானாக.

28. ஸோமன் பிழியப்பட்டவுடன் கம்பளப் பவித் திரத்தின் வழியாய்க் கலசத்தினுள் செல்லுகிருன். இந்து சுத்தமாகி இந்திரனிடம் சேர்கிருன்.

29 இந்த ஸோமன் பசுச் சருமத்தின் மீது கற்களோடு கிரீடிக்கிருன். மதத்துக்காக இந்திரனை அழைக்கிருன்.

30. சுத்தப்பட்ட ஸோமனுன நீ, சோதியிலிருந்து எடுத்துவந்த உன்னுடைய புட்டியுள்ள பாலால் நாங்கள் நீடூழி வாழ எங்களை சுகப்படுத்தவும். 8268

## 67. ஸோமனும் பலதேவர்களும்

### 790. பல ரிஷிகள்–பவமான ஸோமன்
### பரத்வாஜ பார்ஹஸ்பத்யன்

1. ஸோமனே! மிக்க மதமளிப்பவனும், மிக்க வலிய னுமான நீ, எங்களுடைய யக்ஞத்திலே உன்னுடைய தாரையைப் பொழிய விரும்புகிருய். செல்வங்களைத் தருப வனுன நீ பெருகவும்,

2. மானிடர்களை மதப்படுத்துபவனும், யக்ஞத்தை ஏந்துபவனும், அறிஞனுமான நீ, பொழியப்பட்டவுடன் உணவால் இந்திரனை மிக்க மதப்படுத்துபவனுகவும்.

3 நீ கற்களால் பிழியப்பட்டவுடன் முழங்கிக் கொண்டு கலசத்துக்குச் செல்லவும். பிரகாசிப்பதும் மேன் மையாயுமுள்ள பலத்தை எங்களுக்கு அளிக்கவும்.

கசியப மாரீசன்

4. ஸோமன் கற்களால் பிழியப்பட்டு கம்பளப் பவித்தி ரத்தின் வழியாய்ச் செல்லுகிருன். ஹரி உணவை முழங்கு கிருன்.



5. இந்துவே! நீ உரோமமயப் பவித்திரத்தின் வழி யாய்ச் செல்லுகிருய். நீ எங்களுக்கு உணவையும் செல்வத் தையுந் தருகிருய். ஸோமனே! எங்களுக்குப் பசுச் செல் வத்தையளிக்கவும். 8273

6. இந்துவே! ஸோமனே! எங்களுக்கு நூற்றுக்கணக் கான பசுக்களும் குதிரைகளுமுள்ள செல்வத்தை அளிக் கவும். ஆயிரக்கணக்கான செல்வத்தையளிக்கவும்.

கோதமோ ராஹூ கணன்

7. துரிதமாய்ப் பாயும் சுத்தப்பட்ட ரஸங்கள் பவித் திரத்தின் வழியைக் கடந்து தங்கள் வழிகளால் இந்திர னிடம் சேர்கின்றன.

8. இந்திரனுக்குப் பாய்வதும், பழைய மனிதர்களால் பிழியப்பட்டதும், கலசங்களில் செல்வதுமான ஸோமத்தின் உத்தம ரஸம் சலனமாகும் இந்திரனுக்காக சுத்தப்படுகிறது.

9. விரல்கள், தேன் சொட்டுவதும், வீரத்தன்மை யுள்ளதுமான பவமான ஸோமத்தைப் பிழிகின்றன. வழி படுபவர்கள் துதியோடு அவனைப் போற்றுகிருர்கள்.

பவமானன் அல்லது பூஷா–அத்திரிபௌமன்

10. ஆட்டில் ஏறி வரும் பூஷா எங்களை அவனுடைய எல்லா வழிகளிலும் பாலிப்பானுக. எங்களுக்கு அவன் கன்னிப் பெண்களைக் கொடுப்பானுக. 8278

11. மகுடத்தைத் தரிக்கும் பூஷாவிற்கு இந்த ஸோமம் மதப்படுத்தும் நெய்யைப் போல் பாய்கிறது. அவன் எங்களுக்குக் கன்னிப் பெண்களை அளிப்பானுக.

12. பிரகாசிக்கும் பூஷாவே! உனக்காகப் பிழியப்பட்ட இந்த ஸோமம் சுத்த நெய்யைப்போல் பாய்கிறது. அவன் எங்களுக்குக் கன்னிப் பெண்களை அளிப்பானுக.

பவமானஸோமன் - விசுவாமித்திரகாதினன்

13. ஸோமனே! நீ கவிகளின் பாக்களைப் பிறப்பிப்ப

வன். நீ தாரையோடு பெருகவும். நீ தேவர்களுக்குச் செல்வத்தை அளிப்பவன்.

14. அவன் கூட்டுக்குப் பறக்கும் பருந்தைப் போல் பாண்டங்களுக்குப் பாய்கிறான். முழக்கத்தோடு மரக்கலசத்துக்குப் போகிறான்.

15. ஸோமனே! உன்னுடைய ரஸம் கலசத்தில் பொழியப்பட்டவுடன் எங்கும் பாய்ந்து பருந்தைப் போல் எங்கும் பரவுகிறது 8283

ஜமதக்கினி பார்கவன்

16. மிக்க இனிய ரஸமான நீ. இந்திரனுக்கு மதத்தையளித்துப் பெருகவும்.

17. ஸோமரஸங்கள் தேவர்களுடைய பானத்துக்காகப் பகைவனுடைய செல்வத்தை விரும்பும் தேர்களைப் போல் செலுத்தப்படுகின்றன.

18. பொழியப்பட்டவையும், பிரகாசிப்பவையும், மதமளிப்பவையுமான இந்த ஸோமரஸங்கள் வாயுவுக்காகச் செலுத்தப்படுகின்றன.

வசிஷ்ட மைத்திராவருணி

19. ஸோமனே! கற்களால் கசக்கப்பட்டு வழிபடுபவர்களால் பொழியப்பட்ட நீ, உத்தம வீரப்புதல்வனோடிருக்கும் செல்வத்தைத் துதிப்பவனுக்களிப்பவனாய்ப் பவித்திரத்துக்குச் செல்லுகிறாய்.

20. கற்களால் பிழியப்பட்டும், அனைவரால் போற்றப்பட்டும், அரக்கர்களைக் கொல்பவனுமான இந்த ஸோமன், கம்பளப் பவித்திரத்தின் வழியாய்க் கலசத்துக்குப் பாய்கிறான். 8288

21. என்னை இங்கும், அருகிலும், தூரத்திலும் பற்றும் எந்த பயத்தையும், சுத்த ஸோமனான நீ, விலக்கவும்.



பவித்திர ஆங்கிரஸன் அல்லது வசிஷ்டன் அல்லது இருவரும்

22. அனைத்தையுங் காண்பவனும், சுத்தப்படுத்துபவனுமான அந்த சுத்தப்பட்ட ஸோமன் சுத்தப்படுத்தும் சக்தியால் இப்பொழுது எங்களை சுத்தப்படுத்துவானாக.

பவமான அக்கினி

23. அக்கினியே! நீ எங்களுடைய பிரம்மமான தேகத்தை உன்னுடைய சோதியின் நடுவே பரவியுள்ளதும், சுத்தப்படுத்துவதுமான சோதியால் சுத்தப்படுத்தவும்.

24. அக்கினியே! உன்னுடைய ஒளி ஏந்தும் சுத்தப்படுத்தும் ஒளியால் எங்களை சுத்தப்படுத்தவும். பிரம்ம தாரைகளால் எங்களை சுத்தப்படுத்தவும்.

பவமானன் அல்லது ஸவிதா

25. தேவ ஸவிதாவான ஸோமனே! உன்னுடைய இரு சுத்தப்படுத்தும் ஒளியால், ஸோம தாரையால் என்னை சுத்தப்படுத்தவும். என்னை எங்கும் சுத்தப்படுத்தவும். 8293

பவமான அக்கினி ஸவிதா

26. தேவனான அக்கினி பவமானனே! தேவ ஸவிதாவே! உன்னுடைய பொழிபவையும், வலியவையுமான மூன்று தேகங்களால் எங்களை சுத்தப்படுத்தவும்.

விசுவேதேவர்கள்

27. தேவசனங்கள் என்னை சுத்தப்படுத்துவார்களாக. வசுக்கள் தங்கள் செயல்களால் என்னை சுத்தப்படுத்துவார்களாக. விசுவேதேவர்களே! என்னை சுத்தப்படுத்துங்கள். ஜாதவேதஸனே! என்னை சுத்தப்படுத்தவும்.

பவமான ஸோமன்

28. ஸோமனே! நீ எங்களைச் செழிப்பிக்கவும், நீ உன்னுடைய எல்லா ரஸங்களோடும் மிக்க உத்தம அவியைத் தேவர்களுக்காகப் பொழியவும்.

29. நாங்கள் பிரியமுள்ளதும், முழங்குவதும், இளமைத் தன்மையுள்ளதும், ஆஹுதிகளால் ஊட்டப்படுவதுமான அவியை ஏந்திக்கொண்டு உன்னிடம் வருவோமாக.

பாவமன்யத் தியேதா

30. பகைவனுடைய படை பகைவனையே அழிக்க. தேவனான ஸோமனே! எங்களிடம் பெருகவும் தேவனான ஸோமனே! துட்டனையே கொல்லவும்.

31. ரிஷிகளால் திரட்டப்பட்டவையும், வேதத்தின் இரஸமுள்ளவையுமான பாவமான ரிக்குக்களைக் கற்பவன் பூரணமாய் சுத்தமான உணவையே புசிக்கிறான். அந்த உணவு மாதரிசுவனால் இனிமைப்பட்டிருக்கிறது.

32. ரிஷிகளால் திரட்டப்பட்டவையும், வேதத்தின் இரஸமுள்ளவையுமான, பாவமான இருக்குக்களைக் கற்பவனுக்கு ஸரஸ்வதி பாலையும், நெய்யையும், மதமளிக்கும் ஸோமத்தையும் கறக்கிறாள். 8300

## 68. ஸோம பாவமானன்

### 791. வத்ஸப்பிரி – பலந்தனுடைய மகன்

1. மதப்படுத்தும் ஸோமரஸங்கள் தேவனான இந்திரனிடம் கன்றுகளினிடம் செல்லும் பசுக்களைப்போல் விரைகின்றன. சப்திக்கும் பசுக்கள் தருப்பையிலே நிலைத்து, தங்கள் மடிகளினுள் பெருகும் சுத்தமான ரஸத்தை ஏந்துகின்றன.

2. அவன் அரவத்தோடு முதன்மையான துதிகளை எதிரொலிக்கிறான். பசுமையான ஸோமன் வளரும் ஓஷதிகளைத் தனிப்படுத்தி இனிமைப்படுத்துகிறான். அவன் பவித்திரத்தைக் கடந்து வேகமுடனாகிறான். அவன் அரக்கர்களை அழிக்கிறான். தேவன் வழிபடுபவர்களுக்குச் செல்வத்தை அளிக்கிறான்.



3. இணைந்திருக்கும் இரட்டைகளான வையத்தையும், விண்ணையும் கற்பித்த மதப்படுத்துபவனான ஸோமன், தன் ரஸத்தால் அவை சேர்ந்து வளரவும், அழியாமலிருக்கவும், அவற்றைப் பாலிக்கிறான். அவன் மகத்தான எல்லையற்ற இந்த இரு உலகங்களையும், தனித்தனியாய் விளக்கப்படுத்துகிறான். எங்கும் சென்று அவன் அழியாத ஆற்றலைப்பற்றுகிறான்.

4. அறிஞன் இரு உலகங்களின் நடுவே சென்று, வானிலுள்ள சலங்களைப் பிரேரித்து, உணவால் தன் இடத்தைப் புட்டிசெய்துகொள்கிறான். நரர்களால் திரட்டப்பட்ட ஸோமரஸம் யவத்தோடு சேர்க்கப்படுகிறது. அது விரல்களால் பொருந்துகிறது. அது தலையைப் பாலிக்கிறது.

5. கவி ஊக்கமடைந்த மனத்தோடு பிறக்கிறான். சலத்தின் நடுவிலே இடமுள்ள அவன் வானிலே தேவர்களால் நியமத்தால் வைக்கப்படுகிறான். இளமையிலே இந்த இருவரும் சூரியனும், ஸோமனும் தனித்தனியாயிருந்தார்கள். ஒரு சரிபாதியின் பிறப்பு மர்மத்தில் வைக்கப்பட்டது. வேறு பாதி தெரிந்தது. 8305

6. அறிஞர்கள் தூரத்திலிருந்து பருந்தால் ஏந்திவரப்பட்ட உணவாம் மதப்படுத்தும் ஸோமரஸத்தின் வடிவத்தை அறிகிறார்கள். அவர்கள் போற்றத் தகுந்ததும், எங்கும் பெருகுவதும், தேவர்களை இன்புறுத்துவதும், ஊட்டப்படுவதுமான ஸோமத்தை சலங்களிலே சுத்தப்படுத்துகிறார்கள்.

7. ஸோமனே! பத்து விரல்கள் ரிஷிகளால் பாக்களோடும், யக்ஞங்களோடும், கம்பளப் பவித்திரங்களோடும், பிழியப்பட்டு, பாத்திரங்களிலே வைக்கப்பட்டுள்ள உன்னை சுத்தப்படுத்துகின்றன.

8. மனனத்துதிகள் உத்தமக் குழுவிலே அமர்பவனும், சோதியிலிருந்து தன் தாரையோடு விழுபவனும், மதமளிப்பவனும், பரந்து பெருகுபவனும், தேவர்களை இன்புறுத்து

பவனுமான ஸோமனைப் போற்றுகின்றன. அமிருதனும், செல்வஞ் ஜயிப்பவனுமான அவன் தன் குரலை எழுப்புகிறான்.

9. இந்த ஸோமன் ஒளி உலகிலிருந்து எல்லா சலத்தையும் செலுத்துகிறான். அவன் சுத்தப்பட்டு பாத்திரங்களிலே தங்குகிறான். சுத்தப்பட்ட இந்து இன்புறுத்தும் செல்வத்தைத் தருகிறான்.

10. செல்வத்தையளிக்கும் ஸோமனே! நீ சலத்தாலும் பாலாலும் சொரியப்பட்டவுடன் எங்களுக்குப் பலவித உணவைப் பொழியவும். நாங்கள் நட்புள்ள சோதியையும், புவியையும் அழைப்போமாக. தேவர்களே! உத்தம வீரப் புதல்வனுள்ள செல்வத்தை எங்களுக்கு அளியுங்கள். 8310

## 69. பவமான ஸோமன்

### 792. ஹிரண்யஸ்தூப ஆங்கிரஸன்

1. எங்களுடைய தோத்திரம் இந்திரனுக்கு வில்லுக்குச் சரத்தைப் போல் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸோமரஸம் இந்திரனுக்குப் பசுவின் மடிக்கு இடையனால் விடப்படும் கன்றைப் போல் விடப்படுகிறது. இந்திரன், செல்வங்களை, கன்றினிடம் வருங்கால், பால் நாரைகளுள்ள பசுவைப் போல் பொழிகிறான். இந்திரனுடைய விரதங்களிலே ஸோமன் பிரேரிக்கப்படுகிறான்.

2. இந்திரனோடு மனஞ் சேர்க்கப்படுகிறது. உத்தம ஸோமம் சொரியப்படுகிறது. இனிய ரஸத்தையளிக்கும் ஸோமதாரை இந்திரனுடைய வாயினுள் செலுத்தப்படுகிறது. சுத்தப்பட்டதும், பரவுவதும், மதப்படுத்துவதும், துரிதமாய்ப் பாய்வதுமான ஸோமம், பவித்திரத்துக்குப் போர் வீரர்களுடைய சரத்தைப் போல் பாய்கிறது.

3. மனைவியை விரும்பும் ஸோமன் ஆட்டின் சருமத்திலே சுத்தமாகிறான். அவன் வழிபடுபவனுக்காக அதிதியின் பெண்களைத் தனிப்படுத்துகிறான். பசுமை நிறமுள்ள



வனும், போற்றத் தகுந்தவனும், சேர்க்கப்பட்டவனும், மதப்படுத்துபவனுமான ஸோமன் தன் சத்துருக்களை ஜயிக்கிறான். அவன் தன் ஆற்றலைக் கூர்படுத்தி மகானைப்போல் பிரகாசிக்கிறான்.

4. காளை கத்துகிறது. பசுக்கள் அருகில் வருகின்றன. தேவிகள் தேவனுடைய சொந்த இடத்தை அணுகுகின்றனர். ஸோமன் வெள்ளாட்டின் சருமத்தைக் கடந்து செல்லுகிறான். அதனால் அவன் தன்னைப் பிரகாசிக்கும் கவசத்தைப்போல் போர்த்திக்கொள்கிறான்.

5. அமுதனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன், சுத்தமாகுங்கால் சுத்தப்படாததும், பிரகாசிப்பதுமான ஆடையால் போர்த்தப்படுகிறான். அவன் சோதியின் வரம்பிலிருக்கும் சூரியனை, பாவத்தையளிக்கவும், சுத்தப்படுத்தவும் பிறப்பித்தான். அவன் இரு உலகங்களின் போர்வையான ஆதித்தியனின் பிரகாசத்தைப் பிறப்பித்தான். 8315

6. பாய்பவையும், மதப்படுத்துபவையும், பகையழிப்பவையுமான ஸோமரஸங்கள் விடப்பட்டவுடன் பரந்த ஆடையைச் சுற்றிலும், சூரியகிரணங்களைப் போல் பெருகுகின்றன. அவை இந்திரனை அன்றி வேறு எவனையும் நோக்கிப் பாயவில்லை.

7. பொழிபவர்களால் பொழியப்படும் மதந் தருபவையுமான ஸோமரஸங்கள் நதியின் அருவியிலே இறக்கத்தில் வழியைக் காணும் சலங்களைப் போல் இந்திரனுக்குத் தாமாகவே வழியைக் காண்கின்றன. ஸோமனே! நாங்கள் எங்கள் மனைக்குத் திரும்புங்கால் எங்கள் ஆட்களையும் கால்நடைகளையும் சுகத்படுத்தவும். உணவும், மக்கட்களும் எப்பொழுதும் எங்களிடம் நிலைக்க.

8. ஸோமனே! பொருளும், பொன்னும், புரவியும், பசுவும், பவமும், உத்தம வீரப் புதல்வர்களுமுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும். ஸோமனே! சோதியின் தலைவர்களும், இயங்குபவர்களும், பலத்தைத் தருபவர்களுமான நீங்கள், என்னுடைய தந்தையாகத் துலங்குகிறீர்கள்.

9. சுத்தப்பட்ட இந்த ஸோமரஸங்கள் போற்றத் தகுந்த இந்திரனிடம் போருக்குச் செல்லும் இந்திரனுடைய குதிரைகளைப் போல் பாய்கின்றன. பிழியப்பட்ட அவை கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகின்றன. பொன் நிறமுள்ள அவை மழையைப் பெய்யத் தங்கள் போர் வையை நீக்குகின்றன.

10. ஸோமனே! மனிதர்களை இன்புறுத்துபவனும், குற்றமற்றவனும், பகைவர்களை அழிப்பவனுமான நீ, மகத்தான இந்திரனுக்காகப் பெருகவும். துதிப்பவனான எனக்கு இன்புறுத்தும் செல்வங்களை அளிக்கவும். சோதி புவிகளே!
தேவர்களோடு எங்களைப் பாலியுங்கள். 8320

## 70. பவமான ஸோமன்

### 793. ரேணு வைசுவாமித்திரன்

1. பழைய யக்ஞத்திலிருக்கும் பவமானனுக்கு மூவ்வேழு பசுக்கள் – 12 மாதங்கள், 5 ருதுக்கள், மூன்று உலகங்கள், சூரியன் – சத்தியமான கலவையைக் கறக்கின்றன. அவன் ருதங்களால் செழுமையாகுங்கால் நான்கு வேறு அழகிய புவனங்களை, தன்னை அலங்கரித்துக் கொள்ளக் கற்பிக்கிறான்.

2. மங்களமான அமுதத்துக்காகவே விரும்பப்படும் அவன் காவ்யத்தால் சோதியையும் புவியையும் திறக்கிறான். அறிஞர்கள் தேவனான ஸோமனுடைய இடத்தை அவியால் தெரிந்துகொள்ளுங்கால் அவன் பிரகாசமாயுள்ள சலங்களைத் தன் மகிமையால் போர்த்துகிறான்.

3. அவனுடைய எந்த அமுதமான தடைபடாத ரசிமிகள் மானிடர்களுடைய ஆற்றலையும் தேவாருகமான உணவையும் ஊக்கப்படுத்துகின்றனவோ அந்த ரசிமிகள் தாவர சங்கமப் பொருள்களைப் பாலிக்க.

4. திறச் செயல்களுள்ள பத்து விரல்களால் சுத்தமாகி, சலங்களின் நண்பன் நடுவிலிருக்கும் தாய்மார்களின் நடுவே உலகங்களை அளக்கிறான். மனிதர்களைக்காணும் அவன்



விரதங்களைப் பாலித்து மங்களமான அமிருதத்துக்காகத் தேவர்களையும், மனிதர்களையும் அனுசரித்துக் கவனிக்கிறான்.

5. உலகத்தைத் தாங்கும் இந்திரனுடைய ஆற்றலுக்காக சுத்தமாகி இரு உலகங்களின் நடுவில் நிலையாகும், அவன் எங்கும் செல்லுகிறான். வர்ஷிப்பவன் வில்லாளனைப் போல் அசுரர்களை எதிர்த்து, தன் ஆற்றலால் துன்மதிகளை
அழிக்கிறான். 8325

6. அவன் அடிக்கடி தன் பெற்றோர்களை - சோதியையும் புவியையும் – பார்ப்பவனாய், கன்றுகளை நோக்கிக் கதறும் பசுக்களைப் போலும், மருத்து கணத்தைப் போல் முழங்கும் கர்ச்சனையோடும் செல்லுகிறான். எல்லா மனிதர்களுக்கும் நலத்தையளிப்பதில் ருதம் – சலம் – சிறந்தது என்பதை அறிந்து அறிஞனான பவமானன் தான் போற்றப்பட மனிதனைத் தெரிந்தெடுத்தான்.

7. அச்சமற்ற காளையும், அனைவரையுங் காண்பவனுமான அவன், ஆற்றலை விரும்பி தன் பசுமை நிறமுள்ள கொம்புகளைக் கூர்மை செய்து கொண்டு கர்ச்சிக்கிறான். ஸோமன் தன் நன்கு செய்யப்பட்ட இடத்திலே அமருகிறான். பசுவின் சருமம் அவனை சுத்தப்படுத்துவதாயிருக்கிறது. ஆட்டின் சருமமும் அவனை சுத்தப்படுத்துவதாயிருக்கிறது.

8. பிரகாசிப்பவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் உச்சத்திலிருக்கும் கம்பளப் பவித்திரத்திலே வைக்கப்பட்டிருக்கிறான். மித்திரனுக்கும், வருணனுக்கும், வாயுவுக்கும் திருப்தியளிப்பதாயுள்ளதும், மதமளிப்பதுமான ஸோமம் மூன்று தாது துணைப்பொருள்களோடு சேர்க்கப்பட்டு உத்தமச் செயலாளர்களால் பக்குவம் செய்யப்படுகிறது.

9. ஸோமனே! பொழிபவனே! நீ தேவர்களுடைய பானத்துக்காகப் பெருகவும். இந்திரனுக்குப் பிரியமான

ஸோம பாத்திரத்தில் பாயவும். அரக்கர்கள் எங்களைத் துன்புறுத்துவதற்கு முன்னதாகவே எங்களைக் கடத்திச் செல்லவும். வழியையறிபவன் வழியைக் கேட்பவனுக்குத் திசையைப் புலப்படுத்துகிறான்.

10. ஸோமனே! நீ பாத்திரத்துக்குப் போருக்குச் செலுத்தப்படுங்கால் துரிதமாகுங் குதிரையைப்போல் பாயவும். இந்துவே! இந்திரனுடைய உதிரத்தினுள் விரையவும். அனைத்தையும் அறியும் ஸோமனே! படகால் நதியிலே கடத்திச் செல்லும் நாவிதர்களைப் போல் எங்களைக் கடத்திச் செல்லவும். நீ வீரனைப் போல் போர் செய்து பகைவனின் நிந்தையிலிருந்து எங்களைப் பாலிக்கவும். 8330

## 71. பவமான ஸோமன்

### 794. ரிஷப வைசுவாமித்திரன்

1. தக்ஷிணை அளிக்கப்படுகிறது. திட்பன் தங்குமிடத்துக்குப் போகிறான். விழித்திருப்பவன் வழிபடுபவர்களைத் துரோகிகளான அரக்கர்களிடமிருந்து பாலிக்கிறான். பசுமை நிறமுள்ள ஸோமன் சூரியனுடைய அனைத்தையும் தாங்கும் சலத்தைப் பிறப்பிக்கிறான். அவன் இரு உலகங்களைப் போர்த்தவும், பொருள்களை சுத்தப்படுத்தவும், மகத்தான சூரியனைச் செய்கிறான்.

௨. சக்தியுள்ள ஸோமன் மனிதர்களைக் கொல்லுபவன் போல் கர்ச்சித்துக்கொண்டு செல்லுகிறான். அவன் அசுரனைக் கொல்லும் பசுமை நிறத்தை வெளிப்படுத்துகிறான். அவன் தன் மூப்பை நீக்கிக் கொள்கிறான். உணவு கற்பிக்கப்பட்ட இடத்துக்குச் செல்லுகிறது. அவன் பரந்த பவித்திரத்துக்கு முன்னேறி தன் வடிவத்தைத் தரித்துக் கொள்கிறான்.

3. கற்கள் உள்ள கைகளால் பிழியப்பட்டு ஸோமன் பெருகுகிறான். அவன் காளையைப்போல் செல்லுகிறான். துதியால் துதிக்கப்பட்டு வானின் வழியிலே போகிறான். அவன் இன்புறுகிறான். அவன் தவழப்படுகிறான். அவன் துதியால் துதிக்கப்பட்டு வழிபடுபவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். அவன் சலங்களிலே சுத்தமாகிறான். தேவர்களால் பாலிக்கப்படும் யக்ஞத்திலே அவன் போற்றப்படுகிறான்.



4. சக்தியுள்ளவையும், மதப்படுத்துபவையுமான ஸோம ரஸங்கள் சோதியில் வசிப்பவனும், மேகங்களை வளர்ப்பவனும், பகைவனின் மனையை அழிப்பவனுமான இந்திரனுக்குப் பொழிகின்றன. அவிகளைப் புசிக்கும் பசுக்கள் உயரத்திலுள்ள மடியிலிருக்கும் சிறந்த பாலை மகிமை வாய்ந்த இந்திரனுக்கு ஸோமத்தோடு சேர்க்கின்றன.

5. கைகளின் பத்து விரல்கள் யக்ஞ பூமியின் அருகிலுள்ள நிலத்திலே ஸோமனைத் தேரைப்போல் இயக்குகின்றன. அவன் பாண்டங்களுக்குச் செல்லுகிறான். அறிஞர்கள் அவனுக்கு இடத்தைக் கற்பிக்குங்கால் அவன் பசுவின் மர்மமான பாலை அனுகுகிறான். 8335

6. தேவனான ஸோமன் தன் செயல்களால் கற்பிக்கப்பட்ட பொன்மயப் பீடத்துக்குத் தன் கூட்டுக்குப் பறக்கும் பருந்தைப்போல போகிறான். துதிப்பவர்கள் இந்தப் பிரியனான ஸோமனைத் தங்கள் துதியால் யக்ஞத்துக்குச் செலுத்துகிறார்கள். யக்ஞார்கனான ஸோமன் தேவர்களிடம் குதிரையைப்போல் போகிறான்.

7. கவியும், காந்தனும் தனித்தனி தாரைகளோடு பெருகுபவனுமான ஸோமன் வானிலிருந்து இறங்குகிறான். மூன்று யக்ஞங்களில் அளிக்கப்படும் ஸோமன் வழிபடுபவர்களின் துதிகளுக்கு எதிர் முழக்கஞ் செய்கிறான். வருபவனும் செல்பவனும், பல திசைகளில் செலுத்தப்படுபவனுமான அவன் பல உஷைகளிலே தேவர்களுக்குப் பாடுபவனைப் போல் பிரகாசிக்கிறான்.

8. அவனுடைய காந்தி ஒளிமய வடிவத்தைப் புலப்படுத்துகிறது. அது எந்தப் போர்க்களத்தில் விளங்கினாலும் அது பகைவர்களை அழிக்கிறது. சலத்தை அளிப்பவன்

சுவதாவோடு தேவ சனத்தினிடம் செல்லுகிறான். பாலோடு போற்றப்படும் பாக்களுக்கு அவன் வருகிறான்.

9. ஸோமன் தோத்திரங்களை அணுகுங்கால் பசு மந்தைகளை அணுகும் காளையைப்போல் கர்ச்சிக்கிறான். அவன் சூரியனுடைய ஒளியைத் தரித்துக் கொள்கிறான். சோதியில் தோன்றும் ஸுபர்ணனான அவன் அதோமுகத்தால் பூமியைப் பார்க்கிறான். ஸோமன் தன் அறிவால் எல்லா சீவப் பிராணிகளையும் நோக்குகிறான். 8339

## 72. பவமான ஸோமன்

### 795. ஹரிமந்த ஆங்கிரஸன்

1. அவர்கள் பொன்னிறமுள்ள ஸோமனை சுத்தப் படுத்துகிறார்கள். அவன் குதிரையைப்போல் இணைக்கப் படுகிறான். ஸோமன் கலசத்திலே பாலோடு சேர்க்கப் படுகிறான். அவன் தன் குரலை எழுப்புகிறான். வழிபடுபவர்கள் துதியைச் செலுத்துகிறார்கள். ஸோமன் பல துதிகளைக் கூறுபவனுக்கு இன்பந்தரும் எத்தனை செல்வங்களை அளிக்கிறான்.

2. அழகிய கைகளுள்ள மனிதர்கள் தங்களின் இணைந்த கைவிரல்களால் இன்பமாயிருப்பதும் மதந்தருவதுமான ஸோமத்தை சுத்தப்படுத்துங்கால், இந்திரனுடைய வயிற்றினுள் ரஸத்தைக் கறக்குங்கால் பல அறிஞர்கள் சேர்ந்து பாடுகிறார்கள்.

3. ஸோமன் பசுக்களின் பாலோடும் தயிரோடும் கலந்துகொள்ள இடைவிடாமல் பாய்கிறான். சூரியனுடைய புதல்விக்குப் பிரியமாயுள்ள நாதத்தை எழுப்புகிறான். துதிப்பவன் அவனுக்கு இன்பத்தை அளிக்கிறான். அவன் இரு கைகளிலுள்ள பத்து சகோதரிகளான விரல்களோடு இணைக்கப்படுகிறான்.

4. மனிதர்களால் சுத்தப்பட்டவனும், கற்களால் பிழியப்பட்டவனும், யக்ஞத்திலே பிரியமாயிருப்பவனும், உரிய பருவத்தில் பிறந்தவனும், பசுக்களின் தலைவனும், மிக்க வழங்குபவனும், மனிதர்களுக்காக யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவனும், சுத்தனும், இந்துவுமான ஸோமன், இந்திரனே! தன் தாரையோடு உனக்காகப் பெருகுகிறான்.

5. இந்திரனே! மனிதர்களுடைய கைகளால் இயங்கப்பட்டு, தாரையோடு பொழியப்படும் ஸோமன் ஆற்றலுக்காக உனக்குப் பாய்கிறான். நீ யக்ஞங்களைப் பூர்த்தி செய்கிறாய். நீ யாகத்திலே பகைவர்களை ஜயிக்கிறாய். பசுமை நிறமுள்ள ஸோமன் பாத்திரங்களிலே மரத்திலே உறையும் பறவையைப்போல் அமருகிறான். 8344

6. கவிகளும் செயலாளர்களுமான அறிஞர்கள் கவியும், கோஷிப்பவனும், தேயாதவனுமான ஸோமனைக் கறக்கிறார்கள். மீண்டும் தோன்றும் பசுக்களும், பாக்களும் சேர்ந்து ருதத்தின் மூலஸ்தானத்துக்குச் செல்லுகின்றன.

7. மகத்தான சோதியைத் தாங்குபவனும், புவியின் நாபியின் மீது வைக்கப்படுபவனும், நதிகளின் சலங்களின் அலைகளின் நடுவே நனைக்கப்படுபவனும், இந்திரனுடைய வச்சிராயுதனும், விருஷபனும், பரந்த செல்வமுள்ளவனுமான ஸோமன் மங்களமாய் மதப்படுத்த இந்திரனுடைய மனத்தை சுகப்படுத்தப் பாய்கிறான்.

8. மிக்க அறிஞனான ஸோமனே! போற்றுபவனுக்கும் குலுக்கிப் பொழிபவனுக்கும் செல்வங்களை அளிப்பவனாய்ப் புவியைச் சுற்றிலும் பெருகவும். எங்கள் மனைகளைச் செழிப்பிக்கும் செல்வத்தை எங்களிடமிருந்து நீக்காதே. நாங்கள் பிரகாசிப்பதும், பலவிதமாயிருப்பதுமான செல்வத்தைத் தரித்துக் கொள்வோமாக.

9. இந்துவே! எங்களுக்கு நூறு தானங்களோடும், குதிரைகளோடும், ஆயிரந் தானங்களோடும், பசுக்களோடும், பொன்னோடுமுள்ள செல்வத்தைத் துரிதமாயளிக்கவும். எங்களிடம் மிகுந்த செல்வங்களையும் உணவையும் செலுத்தவும். பவமான ஸோமனே! எங்களுடைய துதியைக் கேட்க வா. 8348

## 73. பவமான ஸோமன்

### 796. பவித்திர ஆங்கிரஸன்

1. சொரியும் பிழியப்பட்ட ஸோமதாரைகள் யக்ஞத்தின் தாடையிலே இசைந்து முழங்குகின்றன. ருதத்தின் இடத்துக்கு ஸோமதாரைகள் சேர்ந்து பாய்கின்றன. ஆற்றலுள்ள ஸோமன் மூன்று மேன்மையான உலகங்களை மானிடர்களும், தேவர்களும் பயன்படுத்தச் செய்தான். ஸத்தியஞன ஸோமனுடைய கலன்கள் மேம்படுத்துகின்றன.

2. மகான்கள் ஒன்று சேர்ந்து நன்ருய் ஸோமனைப் பிரேரிக்கிருர்கள். சோதியை விரும்பும் அவர்கள் ஸோமனை நதியின் அலையினிடம் செலுத்துகிருர்கள். அவர்கள் தோத்திரத்தைப் பிறப்பித்து இந்திரனுடைய பிரியமான தேகத்தை மதப்படுத்தும் ஸோமதாரையால் பலப்படுத்துகிருர்கள்.

3. ஸோமனுடைய சுத்தப்படுத்தும் ரசிமிகள் மொழியைச் சூழ்ந்து அமருகின்றன. பழைய ரசிமிகளின் தந்தையான ஸோமன் அவற்றின் விரதத்தைப் பாலிக்கிருன். வருணன் - ஸோமன் - மகத்தான சமுத்திரத்தை, வானை, தன் கிரணங்களால் மூடுகிருன். தீரர்கள் எல்லாம் தாங்கும் சலங்களிடம் ஸோமனைச் செலுத்த சக்தியுள்ளவர்களாயிருக்கிருர்கள்.

4. வானிலே இயங்கும் ஆயிரந்தாரைகளுள்ள ஸோம ரசிமிகள், கீழே இருக்கும் புவியோடு சேர்கின்றன—புவியை மழையால் வானேடு இணைக்கின்றன. சோதியின் உச்சியிலே இனிய நாவுள்ளவையும் தனித்தனியாய் இருப்பவையுமான ஸோம ரசிமிகள் துரிதமாய்ச் செல்பவை. எப்பொழுதும் கண்களை மூடாமலிருக்கின்றன. ஒவ்வொரு இடத்திலும் மனிதனைப் படுத்தும் பாசங்கள் இருக்கின்றன.

5. சோதியிலிருந்தும் புவியிலிருந்தும் தோன்றிய ஸோமனின் ரசிமிகள் ரிக்கினுல் துலக்கமாகி விரதமற்றவர்களை பஸ்மப்படுத்தி, இந்திரனுல் வெறுக்கப்படும் கருப்பு சருமமுள்ள அரக்கர்களைத் தங்கள் அறிவால் பரந்த புவியிலிருந்தும் ஒளி உலகிலிருந்தும் விலக்குகின்றன. 8353



6. சுலோகத்தைக் கிரமப்படுத்துபவையும், துரித யோசனையுள்ளவையுமான ஸோமனின் ரசிமிகள் பழைய வானிலிருந்து புலப்படுத்தப்பட்டவை. செவிடர்களும், குருடர்களும் அவற்றை விலக்குகிருர்கள். துட்டர்கள் சத்தியத்தின் வழியில் போகாமலிருக்கிருர்கள்.

7. கவிகளான அறிஞர்கள், ஆயிரந் தாரைகளோடிருப்பதும், பரந்துள்ளதும், சுத்தப்படுத்துவதுமான ஸோமம், விளங்கும் வானிலே எழும் குரலைப் போற்றுகிருர்கள். சலனமுள்ளவர்களும், துரோகமில்லாதவர்களும், போற்றத் தகுந்தவர்களும், மிக்க அழகுள்ளவர்களும், மனிதர்களைக் காண்பவர்களுமான ருத்திரப் புதல்வர்கள், அவர்களுடைய வசத்திலிருக்கிருர்கள்.

8. ருதத்தைப் பாலிப்பவனும், வினைத்திட்பனுமான ஸோமனை எவனுலும் எதிர்க்க இயலாது. அவன் தன் இருதயத்திலே மூன்று பவித்திரங்களை சுத்தப்படுத்துபவையான அக்கினியையும், வாயுவையும், சூரியனையும் ஏந்துகிருன். அறிஞனை அவன் எல்லா உலகங்களையும் பார்க்கிருன். அவன் யஜிக்காதவர்களையும், விரதமற்றவர்களையும் அதோமுகப்படுத்தி அடிக்கிருன்.

9. பவித்திரத்திலே பரவியுள்ள ருதத்தின் இழையான ஸோமன் வருணனுடைய நாக்கின் நுனியிலே சென்று தன் செயலால் நிலைக்கிருன். தீரர்கள் அனுகி நாவின் நுனியிலுள்ள ஸோமனிடஞ் சென்ருர்கள். செயலை நடத்த சக்தியற்றவன் இந்த உலகத்திலேயே கீழே விழுகிருன். 8357

## 74. பவமான ஸோமன்

### 797. கட்சீவான் தைர்க்கத் தமஸன்

1. வலியனும் விளங்குபவனுமான ஸோமன் சுவர்க்கத்தை அனுபவிக்க விரும்புங்கால் அவன் சலத்திலே பிறந்து

குழந்தையைப்போல் கதறுகிறான். பசுக்களைப் புட்டிப்படுத்தும் ரேதஸோடு கலந்து கொள்ள அவன் ஒளி உலகிலிருந்து வருகிறான். நாங்கள் எங்களுடைய பாக்களால் அவனிடம் செழிப்புள்ள மணியை விரும்புகிறோம்.

2. சுவர்க்கத்தைத் தாங்குபவனும், புவியை ஏந்துபவனும், பரந்து பெருகி பாத்திரங்களை நிரப்புபவனுமான ஸோமரஸன் எல்லாத்திசைகளிலும் பாய்கிறான். அவன் தன்னுடைய சொந்த பலத்தால் இரு பெரிய உலகங்களையும் இணைப்பானாக. அவன் சேர்ந்துள்ள அவற்றை ஏந்துகிறான். கவி வழிபடுபவர்களுக்கு உணவைத் தருவானாக.

3. இங்கு பெய்யும் மழைக்குத் தலைவனும், பசுக்கள் உள்ளவனும், சலங்களைப் பொழிபவனும், நாயகனும், இங்கு வரும் வழியிலுள்ளவனும், துதியாருகனும், யக்ஞத்துக்கு வருபவனுமான இந்திரனுக்கு ஸோமத்தால் நன்கு பக்குவப்பட்டதும், இனிமையுள்ளதுமான மகத்தான உணவு உண்டு.

4. ஸாரமுள்ள நெய்யும் பாலுமான ஸோமன் சூரியனிடமிருந்து கறக்கப்படுகிறான். யக்ஞத்தின் பந்தமான சலமும் அதனிடமிருந்தே தோன்றுகிறது. ஒருமித்துள்ள உத்தம வள்ளல்கள் அவனை இன்புறுத்துகிறார்கள். தலைவர்களும், பாலகர்களுமான ஸோம ரசிமிகள் திரண்ட சலத்தைப் பொழிகிறார்கள்.

5. ஸோமன் தரங்கத்தோடு சேர்ந்து கதறுகிறான். அவன் தன் தேவர்களைப் பாலிக்கும் சரீரத்தை மானிடனுக்காகப் பொழிகிறான். அவன் புவியின் அங்கத்திலே தன் கருவை ஸ்தாபிக்கிறான். அதனால் நாம் புதல்வர்களையும் பேரர்களையும் பெறுகிறோம். 8362

6. ஆயிரந்தாரைகளுள்ள மூன்றாவது உலகத்திலிருப்பவையும், தனித்தனியாயிருப்பவையும், மக்கட்களை அளிப்பவையுமான அந்த ஸோமரஸங்கள் இறங்குக. ஸோமனுடைய பந்துக்களான நால்வர் கீழே செலுத்தப்பட்டிருக்கிறார்கள். நெய் சிந்தும் அவர்கள் அமிருதத்தையும் அவியையும் ஏந்தி வருகிறார்கள்.



7. ஸோமன் சோதியைப்பற்றி விரும்புங்கால் வெண்ணிறத்தைத் தரிக்கிறான். பொழிபவனும், பலிஷ்டனுமான ஸோமன், மிகுந்த செல்வத்தை அளிக்க அறிகிறான். அவன் தன் அறிவால் உத்தமச் செயல்களோடு சேர்ந்திருக்கிறான். அவன் மேகத்தைப் பிளந்து வானிலிருந்து மழையைப் பெய்விக்கிறான்.

8. பிறகு ஸோமன் வெளுத்த பால் நனைந்த கலசத்தை நோக்கிக் குதிரையைப்போல் பாய்கிறான். தேவர்களை விரும்பும் மனிதர்கள் அவனைத் தங்கள் மனத்தால் ஊக்கப்படுத்துகிறார்கள். அவன் நூறு ஹோமங்களைக் கண்ட கட்சீவானுக்குப் பசுக்களைத் தருகிறான்.

9. பவமான ஸோமனே! நீ சலத்தோடு கலக்கப்படுங்கால் உன்னுடைய ரஸம் ஆட்டு உரோமக் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறது. மதமளிக்கும் பவமான ஸோமனே! நீ கவிகளால் சுத்தமாகி இந்திரனுடைய பானத்துக்கு இனிய ரஸமாகவும். 8366

## 75. பவமான ஸோமன்

### 798. கவி பார்கவன்

1. உணவுக்குரிய ஸோமன் மகத்தான ஸோமனால் செழிப்பிக்கப்படும் இன்பமான சலங்களுக்குப் போகிறான். அனைத்தையுங் காண்பவனும், மகானுமான ஸோமன், மகத்தான சூரியனுடைய எங்கும் செல்லும் தேரிலே ஏறுகிறான்.

2. பேசுபவனும், இந்த யக்ஞத்தின் தலைவனும், தடைபடாதவனும், யக்ஞத்தின் நாக்குமான ஸோமன், இன்புறுத்துவதும், மதப்படுத்துவதுமான ரஸத்தைப் பொழிகிறான். புதல்வன் ஒளி உலகின் பிரகாசத்திலே தன் பெற்றோர்களுக்குத் தெரியாமலுள்ள மூன்றாவது நாமத்தை ஏந்துகிறான்.

3. பிரகாசிப்பவனான ஸோமன் அறிஞர்களால் தங்கக் கோசலத்துக்குப் பிரேரிக்கப்பட்டு பாத்திரங்களிலே இறங்குங்கால் முழங்குகிறான். யக்ஞத்தைக் கறப்பவர்கள் அவனைப் போற்றுகிறார்கள். மூன்று யக்ஞங்களை ஏந்துபவன் யக்ஞ தினங்களிலே மிக்கப் பிரகாசிக்கிறான்.

4. கற்களாலும் காதைகளாலும் பிழியப்படுபவனும், உணவுக்குரியவனும், பிரபஞ்சத்தின் பெற்றோர்களான விண்ணையும், வையத்தையும் ஒளிப்படுத்துபவனும், சுத்தனுமான ஸோமன் ஆட்டு உரோமங்களின் நடுவே பாய்கிறான். சலத்தோடு மதமளிக்கும் தாரை சேர்க்கப்பட்டு தினந்தோறும் சுத்தப்படுகிறது.

5. ஸோமனே! எங்கள் ஸ்வஸ்திக்காகப் பெருகவும். நரர்களால் சுத்தப்படும் நீ, உன்னைப் பால் கலவையால் போர்த்திக்கொள்ளவும். உன்னுடைய மதமளிப்பவையும், முழங்குபவையும், மகத்தாயுமுள்ள ரஸங்களால் எங்களுக்குச் செல்வத்தையளிக்க இந்திரனை ஊக்கப்படுத்தவும்.
8371

## 76. பவமான ஸோமன்

### 799. கவி பார்கவன்

1. சுத்தாருகனும், தேவர்களைத் திறப்படுத்துபவனும், அறிஞர்களால் போற்றத் தகுந்தவனும், அனைத்தையும் தாங்குபவனுமான ஸோமன் வானிலிருந்து பாய்கிறான். பசுமை நிறமுள்ளவனும், தேரோட்டிகளால் பிரேரிக்கப்பட்ட குதிரையைப் போலிருப்பவனுமான ஸோமன், சலங்களிலே தன் பலத்தை அனாயாஸமாய்ப் புலப்படுத்துகிறான்.

2. அவன் தீரனைப் போல் தன் கைகளிலே படைகளை ஏந்துகிறான். யக்ஞத்தைப் பற்ற விரும்பி, வழிபடுபவனுக்குப் பசுக்களை நாட தேரிலே ஏறி இந்திரனுடைய ஆற்றலை ஊக்கப்படுத்தும் இந்து, செயல்களை விரும்பும் அறிஞர்களால் பிரேரிதமாகி, பாலாலும் தயிராலும் அபிடேகமாகிறான்.



3. ஸோமனே! ஆற்றலை விரும்புபவனும், சுத்தப்படுபவனுமான நீ, மகத்தான தாரையோடு இந்திரனுடைய உதிரத்தினுள் பெருகவும். எங்களுக்கு சோதியையும் புவியையும் மேகங்களைக் கறக்கும் மின்னலைப் போல் கறக்கவும். இப்பொழுது எங்களுக்கு யக்ஞத்தால் மிகுந்த உணவைக் கறக்கவும்.

4. விசுவத்தின் அரசனான ஸோமன் பெருகுகிறான். ரிஷிகளைக் கடப்பவனும், சூரியனுடைய ரசிமியால் சுத்தப்படுபவனும், துதிகளின் தலைவனும், ஒப்பில்லாத கவியுமான ஸோமன் இந்திரனுடைய செயலை விரும்புகிறான்.

5. நீ சலத்தின் அங்கத்தின் மீது காளையைப் போல் முழங்கிக்கொண்டு, கோசத்துக்கு மந்தையிலே நுழையும் விருஷபனைப் போல் பாய்கிறாய். உன்னால் பாலிக்கப்பட்டு நாங்கள் போரிலே ஜயத்தை அடைய நீ இந்திரனுக்கு மிக்க மதமளிப்பவனாய்ப் பெருகுகிறாய். 8376

## 77. பவமான ஸோமன்

### 800 கவி பார்கவன்

1. எழிலைக்கடக்கும் எழிலுள்ளவனும், இந்திரனுடைய வச்சிராயுதனும், இனியனுமான இந்த ஸோமன் கலசத்திலே முழங்குகிறான். இந்த சத்தியனான ஸோமனுடைய தாரைகள் மிக்கப் பாலையளிப்பவையாயும், சலத்தைச் சிந்துபவையாயும், பாலை ஏந்தும் பசுக்களைப்போல் முழங்கிக்கொண்டு பாய்கின்றன.

2. பிரேரிக்கப்பட்ட பருந்தால் சோதியிலிருந்து மூன்றாவது உலகத்தைக் கடந்து இங்கு புவிக்குப் பருந்தால் ஏந்தப்பட்டுவந்த ஸோமன் பாய்கிறான். அவன் பருந்து - வில்லாளனான கிருசானுவால் பயந்த மனமுள்ளவனாக இனிய ஸோமனைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறான்.

3. அழகுள்ளவர்களுக்கும் ஆபரணங்களை அணிந்த பெண்களைப்போல் இனியர்களும், ஒவ்வொரு தோத்திரத்

தையும் ஒவ்வொரு அவியைச் சேவிப்பவர்களும், பழைய வர்களும், புதியவர்களுமான ஸோமரஸர்கள் எங்களுக்கு மிக்க உணவையும் பாலையுமளிப்பார்களாக.

4. பலரால் போற்றப்படுபவனும், தலைவனான அக்கினியின் ஸதனத்திலிருப்பதால் மந்தைகளிலே கருவை ஸ்தாபிப்பவனும், எங்களுடைய பால்தரும் பசுமந்தைக்கு வருபவனும், எங்களைக் கொல்ல விரும்புபவர்களை அறிபவனுமான இந்த ஸோமன் இணைந்த மனத்தோடு அவர்களைக் கொல்வானாக.

5 அனைத்தையும் கற்பிப்பவனும், செயல் திறமுள்ளவனும், ரஸனும், மகானும், தபைடாதவனுமான வருணன் இங்குமங்கும் திரிபவனுக்காக சோதியிலிருந்து பெருகுகிறான். அனைவரின் நண்பனும், போற்றத் தகுந்தவனும், பெட்டை மந்தையின் ஆத்திரக் குதிரையைப்போல் அலறுபவனுமான ஸோமன் வருத்தத்திலே பிழியப்படுகிறான். 8381

## 78. பவமான ஸோமன்

### 801. கவி பார்கவன்

1. இந்த அரசனான ஸோமன், சத்தத்தை எழுப்பிக் கொண்டு பெருகுகிறான். அவன் சலத்தால் தன்னைப் போர்த்திக்கொண்டு பாக்களை நோக்கிப் பாய்கிறான். ஆடு தன் உரோமத்தால் அழுக்குக் குடலைப் பற்றுகிறது. சுத்தனான அவன் தேவர்களின் தனிஸ்தானத்துக்குச் செல்லுகிறான்.

2. ஸோமனே! நீ தலைவர்களால் இந்திரனுக்காகப் பிழியப்படுகிறாய் நரர்களைக் காண்பவனும், பிரேரிக்கப்பட்டவனும், அறிஞனுமான நீ. சலத்திலே நனைக்கப்படுகிறாய். நீ பாய உனக்குப் பலவழிகள் இருக்கின்றன. பாத்திரங்களிலே, பசுமை நிறமுள்ளவையும், பரவுபவையுமான ஆயிரந்தாரைகள் தங்குகின்றன.



3 யக்ஞத்தின் நடுவே அமர்ந்திருக்கும் சமுத்திரத்தின் அப்ஸர்கள் அறிஞனான ஸோமனிடம் பாய்கிறார்கள் யக்ஞ ஸதனத்தை ஈரப்படுத்தும் அவனை, சலங்கள் செழிப்பிக்கின்றன. வழிபடுபவர்கள் அழியாத பவமானனிடம் செல்வத்தை வேண்டுகிறார்கள்.

4. தேவர்களால் நமக்காகக் கற்பிக்கப்பட்டவனும், மதமளிப்பவனும், மிக்க இனிப்புள்ளவனும், சிகப்பனும், சுகப்படுத்துபவனும், பசுக்களை ஜயிப்பவனும், தேர்களை, பொன்னை, சுவர்க்கத்தை, சலத்தை, ஆயிரஞ் செல்வத்தை ஜயிப்பவனுமான ஸோமன் நமக்காகப் பாய்கிறான்.

5. பவமான ஸோமனே! நீ இந்த சத்தியமான செல்வங்களை யெல்லாம் அளித்து, எங்களிடம் விருப்பமாகிப் பெருகுகிறாய். எங்கள் அருகிலோ, தூரத்திலோ இருக்கும் பகைவனை அழிக்கவும். பரந்த வழியையும் அபயத்தையும் எங்களுக்கு அளிக்கவும். 8386

## 79. பவமான ஸோமன்

### 802. கவி பார்கவன்

1. பசுமை நிறமுள்ளவையும், பிழியப்பட்டவையும், தாமே ஓடுபவையுமான ஸோமரஸங்கள், பிரகாசமாயுள்ள யக்ஞங்களிலே எங்களிடம் பாய்க. எங்களுக்கு உணவை அளிக்காதவர்கள் அழிவார்களாக. தேவர்கள் எங்கள் செயல்களை விரும்புவார்களாக.

2. தேன் பொழியும் ஸோமரஸங்கள் எங்களுக்குப் பெருகுக. அவை எங்களுக்குச் செல்வங்களைச் செலுத்துக. அவற்றின் உதவியால் நாங்கள் வலிய பகைவனை எதிர்க்கிறோம். நாங்கள் எதிர்க்கும் ஒவ்வொருவனையும் ஜயித்து அவனுடைய செல்வத்தை ஏந்திச் செல்வோமாக.

3. ஸோமன் தன்னுடைய சொந்தப் பகை சத்துருவாயிருக்கிறான். மற்றவனுடைய பகைவனையும் அழிப்பவனு

யிருக்கிறான். பவமான ஸோமனே! பாலைவனத்திலே ஒருவனை வெல்லும் தாகத்தைப் போல் தடைபடாதவனான நீ இருவித சத்துருக்களையுங் கொல்லவும்.

4. அவியைப் பெற்றுக்கொள்ளும் சோதியின் நாபியிலே உன்னுடைய உத்தம ரஸமிருக்கிறது. புவியின் உச்சத்தின் மீது எறியப்பட்ட உன்னுடைய அங்கங்கள் வளர்கின்றன. கற்கள் பசுவின் சருமத்தின் மீது உன்னைப் புசிக்கின்றன. அறிஞர்கள் தங்கள் கைகளால் உன்னை சலத்தினுள் கறக்கிறார்கள்.

5. இந்துவே! அறிஞர்கள் – முதல்வர்கள் இங்ஙனம் கலவையைச் செய்து நல்ல இடமுள்ளதும், நல்ல வடிவமுள்ளதுமான ரஸத்தைப் பிரேரிக்கிறார்கள். பவமான ஸோமனே! எங்களை நிந்திக்கும் ஒவ்வொருவனையும் அழிக்கவும். உன்னுடைய பலப்படுத்துவதும், பிரியமுள்ளதும், மதப்படுத்துவதுமான ரஸம் தோன்றுக. 8391

## 80. பவமான ஸோமன்

### 803. வசு பாரத்வாஜன்

1. நரர்களைக் கவனிக்கும் ஸோமனுடைய தாரை பெருகுகிறது. அது ருதத்தால் சோதியின் மேலே இருக்கும் தேவர்களை அழைக்கிறது. அது பிரகஸ்பதியின் நாதத்தால் பிரகாசிக்கிறது. யக்ஞப் பொழிவுகள் புவியில் நதிகளைப் போல் பரவுகின்றன.

2. தங்கமணிந்த கைகளால் திருத்தப்பட்ட இடத்திலே உணவையளிப்பவனும், பசுக்களால் போற்றப்படுபவனுமான நீ, பிரகாசமுடன் ஏறுகிறாய். ஸோமனே! வர்ஷிப்பவனும், மதமளிப்பவனுமான நீ, அவிச்செல்வர்களுக்கு ஆயுளையும், மகத்தான உணவையும், செழிப்பித்து, இந்திரனுக்காகப் பெருகுகிறாய்.



3. மிக்க மதமளிப்பவனும், வலிமையை உடுத்தியிருப்பவனுமான ஸோமன் இந்திரனுக்கு உணவை அளிக்க, அவனுடைய உதரத்துக்குப் பாய்கிறான். ஸுமங்களமான அவன் எல்லா புவனங்களையும் நோக்கிப் பரவுகிறான். கிரீடிப்பவனும், பசுமை நிறமுள்ளவனும், துரிதனும், பொழிபவனுமான அவன் பெருகுகிறான்.

4. அறிஞர்களும், பத்து விரல்களும் மிக்க இனிமையுள்ளவனும், ஆயிரந் தாரைகளோடிருப்பவனுமான உன்னை, தேவர்களுக்காகக் கறக்கிறார்கள். கற்களால் பிழியப்பட்டு மனிதர்களால் பொழியப்பட்டவனும், ஆயிரஞ் செல்வங்களை ஜயிப்பவனுமான நீ, எல்லாத் தேவர்களுக்கும் பெருகவும். கைத்திறமுள்ளவனுடைய பத்து விரல்கள் கற்களால் இனிய ரஸமுள்ளவனும், வர்ஷிப்பவனுமான உன்னை சலங்களிலே கறக்கின்றன. ஸோமனே! இந்திரனையும் தேவ சனங்களையும் மதப்படுத்தும் நீ, சுத்தமானவுடன் நதியின் அலையைப் போல் பாய்கிறாய். 8396

## 81. பவமான ஸோமன்

### 804. வசு பாரத்வாஜன்

1. பவமான ஸோமங்கள் பிழியப்பட்டு பசுக்களின் புகழான தயிரோடு சேர்க்கப்பட்டு, வழிபடுபவர்களுக்குத் தானத்தை யளிக்க இந்திரனை ஊக்கப் படுத்துங்கால் ரஸத்தின் அலைகள் இந்திரனுடைய உதரத்துக்குப் பாய்கின்றன.

2. ஸோமன், கலசங்களுக்கு சுமைக் குதிரையைப் போல் இலகுவாயும், வர்ஷிப்பவனாயும் பாய்கிறான். அவன் யக்ஞத்துக்கு சோதியிலிருந்தும், புவியிலிருந்தும் வருபவர்களான தேவர்களை அறிந்துகொண்டு பாய்கிறான்.

3. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் எங்களுக்குச் செல்வத்தை வீசவும். இந்துவே! செல்வமுள்ள நீ எங்களுக்கு மிக்கச் செல்வங்களை அளிப்பவனாயிருக்கவும். உணவை அளிப்பவனே! நீ உன்னறிவால் பணிவிடை

செய்யும் எனக்கு உணவை அளிக்கவும். எங்களுடைய செல்வங்களை எங்களிடமிருந்து தூரத்திலே செலுத்தாதே.

4. உத்தம தானமளிப்பவர்களும், பரஸ்பரம் சேர்ந்திருப்பவர்களுமான பூஷாவும், பவமானனும், மித்திரனும், வருணனும், பிரகஸ்பதியும், மருத்துக்களும், வாயுவும், அசுவினிகளும், துவஷ்டாவும், ஸவிதாவும், அழகிய ஸரஸ்வதியும் எங்களிடம் வருவார்களாக.

5. எங்கும் பரவும் இருவரான சோதியும் புவியும், தேவனும், அரியமானும், அதிதியும், விதாவும், மனிதர்களால் தேவனும், அரியமானும், அதிதியும், விதாதாவும், மனிதர்களால் போற்றத்தகுந்த பகனும், பரந்தவானும், எல்லாத் தேவர்களும் பவமான ஸோமனைப் போற்றுகிறார்கள். 8401

## 82. பவமான ஸோமன்

### 805. வசு பாரத்வாஜன்

1. பிரகாசிப்பவனும், வர்ஷிப்பவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் பிழியப்பட்டிருக்கிறான். அரசனைப் போல் அழகாயிருக்கும் அவன் சலங்களை அணுகுங்கால் முழங்குகிறான். பருந்தைப்போல் தன் சலமய இடத்திலே அமர, அவன் சுத்தமாகுங்கால் உரோமமயப் பவித்திரத்தின் வழியாய் ஸோமன் செல்லுகிறான்.

2. கவியான நீ, யக்ஞத்தைச் செய்யும் விருப்பத்தோடு துதியாருகப் பவித்திரத்தைக் கடந்து செல்லுகிறாய். சுத்தமாகும் நீ, போருக்குப் பாயும் குதிரையைப்போல் பாய்கிறாய். துன்பங்களை விலக்கி எங்களை சுகப்படுத்தவும். நீ சலத்தை அணிந்து பவித்திரத்துக்குப் போகிறாய்.

3. பர்ஜன்யனைத் தந்தையாக அடைந்தவனும், மகத்தான சிறகுகளிப்பவனுமான ஸோமன் புவியின் நாபியிலே மலைகளின் நடுவிலே தன் இடத்தைச் செய்து கொள்கிறான். சகோதரிகளும், சலங்களும் பசுக்களின் பாலுக்கும்



தயிருக்கும் விரைகிறார்கள். பிரியமான யக்ஞத்திலே அவன் கற்களோடு சேர்கிறான்.

4. கணவனுக்கு மனைவியைப்போல் நீ வழிபடுபவனுக்கு இன்பத்தைத் தருகிறாய். பஜ்ரனின் புதல்வனான ஸோமனே! நான் கூறும் துதிகளைச் செவியுறவும். பாக்களின் நடுவே எங்களுக்கு ஆயுளை அளிக்க வரவும். ஸோமனே! குற்றமற்ற நீ எங்கள் பகைவனிடம் விழித்திருக்கவும்.

5. ஸோமனே! தடைபடாத நீ பூர்வத்திலிருந்த ரிஷிகளுக்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான செல்வத்தையளித்துப் பலப்படுத்த சென்றாய். அங்ஙனமே இப்பொழுதும் எங்களுடைய புதிய செல்வத்துக்குப் பெருகவும். சலங்கள் உன்னுடைய விரதத்தைப் பின்பற்றுகின்றன.

## 83. பவமான ஸோமன்

### 806. பவித்திர ஆங்கிரஸன்

1. பிரம்ஞஸ்பதியே! உன்னுடைய பவித்ரம் பரத்தப்பட்டிருக்கிறது. பிரபுவான நீ அதன் அங்கங்களில் எல்லாப் பக்கங்களிலிருந்தும் செல்லுகிறாய். தாபப்படாததும், பக்குவமற்றதுமான ரஸம் இந்தப் பவித்திரத்துக்குப் போகாது. யக்ஞத்தை ஏந்தும் தாபப்பட்ட பக்குவ ரஸங்களே பவித்திரத்துக்குப் பாய்கின்றன.

2. பகைவனைத் தாபப்படுத்தும் ஸோமனின் பவித்திரமானது சோதியின் உச்ச ஸ்தானத்திலே பரத்தப்பட்டிருக்கிறது. அவனுடைய பிரகாசிக்கும் இழைகள் தனித்தனியாய் விளங்குகின்றன. ஸோமனுடைய துரிதமாய்ப்பாயும் ரஸங்கள் சுத்தப்படுத்துபவனைப் பாலிக்கின்றன. அவை சோதியின் உச்ச ஸ்தானத்திலே தேவர்களிடம் செல்லும் விருப்பத்தோடு விளங்குகின்றன.

3. உஷையின் முதல்வனான சூரியன்-ஸோமன்-பிரகாசிக்கிறான். சலத்தைத் தெளிக்கும் அவன் உலகங்களுக்கு உணவை அளிக்க விரும்பி அவற்றை ஏந்துகிறான். அறிஞர்களான தேவர்கள் ஸோமனுடைய அறிவால் கர்ப்பிக்கிறார்கள் நரர்களைக் காண்பவர்களான பிதாக்கள் கருவை ஏந்துகிறார்கள்.

4. கந்தர்வன் மெய்யாகவே ஸோமனுடைய இடத்தைப் பாலிக்கிறான். அற்புதனான ஸோமன் தேவசந்ததிகளைத் தாங்குகிறான். பசுபதி பாசத்தால் பகைவனைப் பற்றுகிறான். உத்தமச் செயலாளர்கள் ஸோமத்தின் இனிய ரஸத்தைப் பருகுபவர்களாகிறார்கள்.

5. சலமுள்ள நீ சலத்தை அணிந்து யக்ஞத்தை ஏந்த மகத்தான தேவஸ்தானத்துக்குச் செல்லுகிறாய். உன்னுடைய பவித்திரத்தேரில் ஏறியுள்ள நீ, அரசனைப் போல் போருக்கு எழுகிறாய். ஆயிரம் படைகளை ஏந்தும் நீ, எங்களுக்காக ஆயிரம் உணவைத் தருகிறாய். 8411

## 84. பவமான ஸோமன்

### 807. வாச்யப் பிரஜாபதி

1. ஸோமனே! தேவர்களை மதப்படுத்துபவனும், தீர்க்கதரிசியுமான நீ, இந்திரனுக்காகவும், வருணனுக்காகவும், வாயுவுக்காகவும் பாயவும். இன்று எங்களுக்குச் செல்வத்தையும், சுவஸ்தியையுமளிக்கவும். யக்ஞத்தின் பரந்த நிலத்திலே தேவ சனங்களை அழைக்கவும்.

2. உலகங்களின் மீது நிலைக்கப்பட்ட அமுதனான ஸோமன், அவற்றையெல்லாம் பாலிக்க சுற்றச் செல்லுகிறான். பிரிப்பவனும், சேர்ப்பவனுமான ஸோமன், பாலனத்துக்காக யக்ஞத்தை, உஷையைச் சூரியன்போல் பின் பற்றுகிறான்.

3. சூரியனுடைய தாரைகளால சிருஷ்டிக்கப் பட்டவனும், தேவர்களைத் திருப்தி செய்ய ஓஷதிகளினே நிலைக்கப்படுபவனும், பகைவனிடமிருந்து செல்வத்தை எடுத்து, தேவர்களிடம் செல்ல விரும்புபவனுமான ஸோமன், பொழியப்பட்டவுடன் பிரகாசிக்கும் தாரையோடு இந்திரனையும், தேவ சனங்களையும் மதப்படுத்திப் பெருகுகிறான்.



4. ஆயிரங்களை ஜயிப்பவனும், உஷையோடு எழும் துரிதக்குரலை எழுப்புபவனுமான இந்த ஸோமன் பெருகுகிறான். இந்து தன் கடலான ரஸத்தைக் காற்றுகளோடு பிரேரிக்கிறான். அவன் இந்திரனுடைய இருதயத்துக்குப் பிரியமாகக் கலசங்களினுள் சேர்கிறான்.

5. பாக்களால் எல்லாப் பொருள்களை அளிப்பதும், பாலைப் பெருக்குவதுமான ஸோமத்தைப் பசுக்கள் தங்கள் பாலோடு சேர்க்கின்றன. செயலாளனும், இரஸனும், விப்பிரனும், கவியும், எல்லா உணவை அளிப்பவனும், செல்வங்களை ஜயிப்பவனுமான ஸோமன் காவ்யத்தோடு பெருகுகிறான். 8416

## 85. பவமான ஸோமன்

### 808. வேனோ — பார்கவன்

1. ஸோமனே! நீ இந்திரனுக்காக நன்கு பிழியப்பட்டு பெருகவும். நோயும் அரக்கர்களும் தூரத்திலிருப்பார்களாக. வஞ்சகர்கள் உன் ரஸத்தால் மதப்படாமலிருப்பார்களாக. இந்த யக்ஞத்திலே ஸோமரஸங்கள் செல்வம் நிறைந்தவையாகுக.

2. பவமான ஸோமனே! எங்களைப் போரிலே ஊக்கப்படுத்தவும். நீ வலியவனாயிருக்கிறாய். தேவர்களுக்குப் பிரியமானவன். நீ மதப்படுத்துபவன். எங்கள் பகைவர்களைக் கொல்லவும். துதிகளால் உன்னைப் போற்ற விரும்பும் எங்களிடம் வரவும். இந்திரனே! ஸோமத்தைப் பருகவும். எங்கள் பகைவர்களை அழிக்கவும்.

3. இந்துவே! தடைபடாதவனும், மிக்க மதப்படுத்துபவனுமான நீ பாய்கிறாய். சுயமாகவே உத்தமனாயுள்ள நீ,

இந்திரனுக்கு உணவாயிருக்கிறாய். இந்த உலகத்தின் அரசனான உன்னை, பல அறிஞர்கள் அணுகிப் போற்றுகிறார்கள்.

4. ஆயிரங்களுக்குத் தலைவனும், நூறு தாரைகளோடு பெருகுபவனும், அற்புதனும், பிரியனுமான ஸோமன், இந்திரனுக்குப் பாய்கிறான். எங்களுக்கு நிலத்தை, சலத்தை ஜயிப்பவனாய்ப் பவித்திரத்தை அணுகவும். ஸோமனே! பொழிபவனே! எங்கள் வழியைப் பரத்தவும்.

5. ஸோமனே! கலசத்திலே முழங்கும் நீ, பாலோடும், தயிரோடும் சேர்க்கப்படுகிறாய். நீ ஆட்டு உரோமப் பவித்திரத்தின் வழியே உடனே கடந்து செல்லுகிறாய். நீ குதிரைகளைப்போல் சுத்தஞ் செய்யப்பட்டு, தானங்களை வழங்கி, இந்திரனுடைய உதரத்துக்குப் பாய்கிறாய். 8421

6. இனியனான நீ, தேவகணத்துக்குப் பெருகவும். போற்றத் தகுந்த நாமமுள்ள இந்திரனுக்கு நீ இனியனாகப் பெருகவும். தடைபடாதவனும், இனிய ரஸனையுமுள்ள இனியனும் நீ, மித்திரனுக்கும், வருணனுக்கும், வாயுவுக்கும், பிரகஸ்பதிக்கும் பெருகவும்.

7. பத்து விரல்கள் குதிரையைக் கலசத்திலே சுத்தப்படுத்துகின்றன. விப்பிரர்களின் நடுவே வழிபடுபவர்கள் பாக்களைக் கூறுகிறார்கள். சுத்தப்பட்ட ரஸங்கள் சுந்தரத் துதிக்குத் துரிதமாகின்றன. மதப்படுத்தும் ஸோமரஸங்கள் இந்திரனிடம் சேர்கின்றன.

8. ஸோமனே! பவமானனான நீ எங்களுக்கு வீர சந்தானத்தையும், பரந்த மேய்தரைகளையும், மகத்தான விரிவான மனையையும் அளிக்கவும். இந்த யக்ஞத்தைத் தடுப்பவன் எங்களை வசப்படுத்தாமலிருப்பானாக. இந்துவே! நாங்கள் உன்னால் எல்லாச் செல்வத்தையும் ஜயிப்போமாக.

9. காலையும், அனைத்தையுங் காண்பவனுமான ஸோமன் சோதியின்மீது தன் இடத்தைச் செய்துகொண்டான். கவிசோதியின் மண்டலங்களை ஒளிப்படுத்தினான். அரசன் முழக்கத்தோடு பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான். மனிதர்களைக் காணும் ஸோமரஸங்கள் சோதியின் ரஸத்தை – அமிருதத்தை – கறக்கின்றன.



10. பிரகாசமாயுள்ள யக்ஞத்தின் சோதியிலே இனிய நாக்குள்ள வேநர்கள், பொழிபவனும், மலையிலிருப்பவனுமான ஸோமத்தைத் தனித்தனியாய்க் கறக்கிறார்கள். அவர்கள் சலங்களிலே வளர்ந்தவனும், ரஸமாயிருப்பவனும், கடலான கலசத்திலே பெருகுபவனுமான ஸோமத்தை நதியின் அலையிலே நனைக்கிறார்கள். அவர்கள் பவித்திரத்திலே இனியதைத் தெளிக்கிறார்கள். 8426

11. வேநனின் பல பாக்கள் சோதியிலிருப்பவனும், சுபர்ணனும், புவியிலிறங்குபவனுமான ஸோமனைப் போற்றுகின்றன. தோத்திரக்கள் பொன் பறவையும், நிலத்தில் சயனிப்பவனும், புலம்பும் பாலனுமான ஸோமனைச் சுவைக்கின்றன.

12 உயரத்திலிருக்கும் கந்தர்வன்—ஸோமன் – சூரியனுடைய எல்லா வடிவங்களையும் பார்த்துக்கொண்டு அதன் மேலே நிலைக்கிறான். சூரியன் வெண் ஒளியோடு பிரகாசிக்கிறான். ஒளியுள்ள அவன் படைப்பவையான சோதியையும் புவியையும் ஒளிப்படுத்துகிறான். 8428

## 86. பவமான ஸோமன்

### 809. பல ரிஷிகள்-அகிருஷ்டாமாஷார்கள்

1 பவமான ஸோமனே! உன்னுடைய பரவலான, மனோவேகமான மதமளிப்பவையான ரஸங்கள் வேகமாயுள்ள பெட்டைக்குதிரைகளின் குட்டிகளைப்போல் தாமாகவே பாய்கின்றன. வானிலே தோன்றியவையும், உத்தம சிறகுள்ளவையும், இனியவையும், மிக்க மதமளிப்பவையுமான ரஸங்கள் கோசத்திலே இறங்குகின்றன.

2. உன்னுடைய மதமளிப்பவையும், பரவுபவையுமான ரஸங்கள் தனித்தனி வழிகளிலே திருப்பப்பட்டு நேர்க் குதிரைகளைப்போல் பாய்கின்றன. இனிய ஸோமனுடைய

அலைகள் வச்சிரமேந்தும் இந்திரனிடம் கன்றினிடம் பாலோடு போகும் பசுவைப்போல் பாய்கின்றன.

3. அனைத்தையும் அறிபவனான நீ, மேகத்தைத் தாயாக அடைந்துள்ள கோசத்துக்குப் போருக்குச் செலுத்தப்படும் குதிரையைப் போல் சோதியிலிருந்து பாய்வாயாக. வர்ஷிப்பவனான ஸோமன் உலகத்தைத் தாங்கும் இந்திரனுடைய பலத்துக்காக உயரத்திலுள்ள ஆட்டு உரோமப் பவித்திரத்திலே சுத்தமாகிறான்.

4. பவமான ஸோமனே! உன்னுடைய திவ்யமான மனத்தைப்போல், துரிதமாயுள்ள குதிரையைப்போல், வேகமாயுள்ள தாரைகள் பாலோடு கலசத்தினுள் ஊற்றப்படுகின்றன. ரிஷிகளால் போற்றப்படும் ஸோமனே! உன்னை சுத்தப்படுத்துபவர்களும், யக்ஞத்தை நடத்துபவர்களுமான ரிஷிகள் உன் இடைவிடாத தாரைகளைப் பாத்திரத்தினுள் பொழிகிறார்கள்.

5. அனைத்தையுங் காண்பவனே! தலைவனான உன்னுடைய மகத்தான ரசிமிகள் எல்லாத் தேவ சரீரங்களையும் ஒளிப்படுத்துகின்றன. ஸோமனே! நீ எங்கும் பரவி உன்னுடைய தருமங்களோடு பெருகுகிறாய். எல்லா உலகத்தின் தலைவனான நீ அரசு புரிகிறாய். 8433

6. பசுமை நிறமுள்ள ரஸம் பவித்திரத்தில் சுத்தமாகி சயன இயல்புள்ள அது கலசங்களிலே தன் இடத்தில் இறங்குங்கால் நிலையாயிருக்கும் சுத்தப்பட்ட ஸோமனின் துவஜங்களான கதிர்கள் இரு உலகங்களிலிருந்தும் பரவுகின்றன.

7. யக்ஞத்தின் துவஜனும், உத்தம வேள்வியுமான ஸோமன் சுத்தமாகிப் பாய்கிறான். அவன் தேவர்களின் நன்கு செய்யப்பட்ட இடத்துக்குச் செல்லுகிறான். ஆயிரந் தாரைகளுள்ள அவன் கலசத்துக்குப் பெருகுகிறான். பொழிபவன் முழக்கத்துடன் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான்.



8. அரசனான ஸோமன் வானிலும், அங்குள்ள நதிகளிலும் பாய்கிறான். தாரைகளோடு கலந்துள்ள அவன் சலங்களின் தரங்கத்தோடு சேர்கிறான். மகத்தான சோதி உலகின் தாரகனும், சுத்தப்படுபவனுமான ஸோமன், புவியின் நாபியிலே உயர்த்தப்பட்ட பவித்திரத்தின் மீது நிற்கிறான்.

9. சோதியையும், புவியையும் தாங்கும் ஸோமன், சோதியின் சிகரத்தைப் போல் சப்தித்து முழங்குகிறான். இந்திரனுடைய நட்பை அடைந்து ஸோமன் பெருகுகிறான். அவன் சுத்தமாகி, கலசங்களிலே இறங்குகிறான்.

10. யக்ஞத்தின் சோதியான ஸோமன், தேவர்களுக்குப் பிரியமான மதுவைப் பொழிகிறான். தேவர்களைப் பாலிப்பவனும், அனைத்தையும் தோற்றுவிப்பவனும், மிகுந்த செல்வமுள்ளவனுமான ஸோமன், சோதி புவிகளிலே மறைந்திருக்கும் செல்வத்தை வழிபடுபவர்களுக்குத் தருகிறான். இரஸமாயுள்ள அவன் மிக்க மதமளிப்பவன். ஊக்கப்படுத்துபவன். இந்திரனைப் புட்டிப் படுத்துபவன். 8438

ஸிக்தா நிவாவரி

11. சோதியின் தலைவனும், நூறு தாரைகள் உள்ளவனும், அனைத்தையுங் காண்பவனும், துரிதனுமான ஸோமன் முழக்கத்துடன் கலசத்துக்குப் பாய்கிறான். ஆட்டு உரோமங்களாலும் சலங்களாலும் சுத்தப்பட்டவனும், வர்ஷிப்பவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் மித்திரனுடைய இடங்களிலே அமருகிறான்.

12 சுத்தப்பட்ட ஸோமன் சலங்களின் முன்னே பாய்கிறான். முதல்வனான அவன் மொழியின் முன்னே பாய்கிறான். அவன் ரசிமிகளின் நடுவே போகிறான். அவன் உணவை ஜயிக்கப் போரிலே முன்னணியில் போராடுகிறான். வர்ஷிப்பவனும், நல்ல படையை ஏந்துபவனுமான அவன் அவியை அளிப்பவர்களால் சுத்தஞ் செய்யப்படுகிறான்.

13. பிரியமான பாட்டை அடைந்துள்ள இந்த சோமன் சுத்தமாகி செலுத்தப்பட்டு, பறவையைப்போல் துரிதமாகி, ஆட்டு உரோமங்களின் வழியாய் ரஸதாரையோடு செல்லுகிறான். கவியான இந்திரனே! உன் அறிவாலும் ஆற்றலாலும் சுத்தனான சோமன் சோதி புவிகளின் நடுவே பாய்கிறான்.

14. ஒளியைப் பற்றும் கவசத்தை அணிந்தவனும், வானை மழையால் நிரப்புபவனும், துதியாருகனுமான சோமன் சலங்களில் நிலைக்கப்பட்டு, சோதியைப் பிறப்பிப்பவனாய் மழையோடு வருகிறான். சலத்தின் பாலகனான பழைய இந்திரனைப் போற்றுகிறான்.

15. இந்திரனுடைய ஒளிமய தேகத்தை முதலில் அடைந்த சோமன், இந்திரனுடைய நாழைவுக்காக மகத்தான சுகத்தை அளிக்கிறான். அந்த சோமனுடைய இடம் உத்தம ஒளி உலகில் இருக்கிறது. அவனால் இந்திரன் எல்லாப் போர்களிலும் ஜயிக்கிறான். 8443

16. இந்து இந்திரனுடைய இடத்துக்கு உதரத்துக்குச் செல்லுகிறான். நண்பன், நண்பனுடைய உதரத்தை இம்ஸியான். யுவதிகளோடு சேரும் இளைஞனைப்போல் நூறு தாரைகளுள்ள சோமன் கலசத்தோடு சேர்கிறான்.

17. உங்களை வழிபட்டுத் தியானிப்பவர்கள், மதமளிக்கும் சப்தத்தை விரும்பி, துதியை நாடி, யக்ஞ சதனங்களுக்குச் செல்லுகிறார்கள். தொழுபவர்களான மனத்தலைவர்கள் சோமனைத் தொழுகிறார்கள். பசுக்கள் பாலோடு சோமனிடஞ் செல்லுகின்றன

18. பிரகாசமாயுள்ள பவமான சோமனே! நீ எங்களுக்குத் தினத்திலே மும்முறை தடைபடாமல் கறக்கப்பட்டு ஆற்றலையும், மதுவையும், அழகான வீரப்புதல்வனையும், அளிக்கும் ஒளியோடு திரண்ட, தேயாத, புட்டியுள்ள உணவைப் பொழியவும்.

19. தொழுபவர்களுக்குப் பொழிபவனும், அனைத்தையுங் காண்பவனும், தினத்தையும் உஷையையும் சூரியனை



யும் செழிப்பிப்பவனுமான சோமன், அறிஞர்களால் போற்றப்பட்டு இந்திரனுடைய இருதயத்துக்குச் செல்ல கலசங்களுக்குப் பாய விரும்புகிறான்.

20. பழைய கவி அறிஞர்களால் சுத்தப்படுகிறான். அவன் மனிதர்களால் பிரேரிக்கப்பட்டு, கோசங்களுக்குப் பாய கர்ச்சிக்கிறான். அவன் திருதனுடைய முவ்வுலகிலுள்ள இந்திரனுடைய நாமத்தை சலத்தைத் தோற்றுவித்து இந்திரனுடையவும், வாயுவினுடையவும் நட்பைப் பெற மதுவைப் பொழிகிறான். 8448

பிருசினி அஜர்கள்

21. சுத்தமாகுங்கால் உஷையை ஒளிப்படுத்துபவன் சோமன். உலகத்தைக் கற்பிக்கும் அவன், நதிகளுக்காகச் செழிக்கிறான். இந்த சோமன் முவ்வேழு பசுக்களிடம் பாலையும், தயிரையுங் கலந்து மதமளிப்பவனாய் இருதயத்துக்குச் செல்ல இனிமையாய்ப் பாய்கிறான்.

22. சோமனே! நீ தேவர்களுடைய இடங்களுக்குப் பாயவும். விடப்பட்ட நீ, கலசத்துக்கும், பவித்திரத்துக்கும் பாயவும். நீ முழக்கத்தோடு இந்திரனுடைய உதரத்திலே இறங்கி, அறிஞர்களால் செலுத்தப்பட்டு சோதியிலே சூரியனை உயர்த்தவும்.

23. இந்துவே! கற்களால் பிழியப்பட்ட நீ, இந்திரனுடைய உதரத்துக்குச் செல்ல பவித்திரத்துக்குப் பாய்கிறாய் சோமனே! உற்று நோக்கும் நீ, மனிதர்களை அன்போடு பார்க்கிறாய். நீ அங்கிரஸர்களுக்காக மேகத்தைத் திறந்தாய்.

24. சோமனே! நீ சுத்தமாகுங்கால், உத்தமச் செயல்களுள்ள அறிஞர்கள் பாலனத்தை விரும்பி உன்னைப் போற்றினார்கள். இந்துவே! எல்லாப் பாக்களாலும் அழகுடனான உன்னை ஸுபர்ணன் சோதியிலிருந்து ஏந்தி வந்தான்.

25. ஆட்டு உரோமங்களாலான பவித்திரத்தின் வழியாய் சுத்தமாகிச் செல்லும் பசுமை நிறமுள்ள சோமனிடம் ஏழு பசுக்கள் வருகின்றன. மகான்களாயுள்ள மனிதர்

கள் சலங்களின் அங்கத்திலே கவியான உன்னை ருதஸ்தானத்துக்குப் பிரேரிக்கிறார்கள். 8453

26. ஸோமன் சுத்தமாகி வழிபடுபவனுக்குப் பகைவர்களை அழித்து எல்லா வழிகளை சுகப்படுத்திப் பாய்கிறான். தன் தேகத்தை ரஸப்படுத்தி அன்பனும் அறிஞனுமான ஸோமன் பவித்திரத்தின் வழியாய்க் கிரீடிக்கும் குதிரையைப் போல் ஓடுகிறான்.

27. தனித்துள்ளவையும், நூறு தாரைகள் உள்ளவையும், ஸோமனோடு சேர்பவையும், சலத்தை விரும்புபவையுமான சூரிய ரசிமிகள் பசுமை நிறமுள்ள ஸோமனிடம் வருகின்றன. சூரியனால் ஒளிப்படுத்தப்படும் மூன்றாவது மண்டலத்திலே ரசிமிகளால் பரவப்பட்ட ஸோமனை விரல்கள் சுத்தப்படுத்துகின்றன.

28. உன்னுடைய திவ்ய ரேதஸிலிருந்து இந்தப் பிரஜைகள் எல்லாம் தோன்றுகிறார்கள். நீயே எல்லா உலகத்தையும் அரசுபுரிகிறாய். சுத்தப்பட்ட ஸோமனே! இவ்வனைத்தும் உன் வசத்திலிருக்கிறது. நீ முதல்வன். நீ இடத்தை ஏந்துபவன்.

29. கவியே! நீ கடல். நீ விசுவத்தை அறிபவன். உன் ஆதரவில் இந்த ஐந்து திசைகளுமிருக்கின்றன. நீ வையத்தையும் விண்ணையும் ஏந்துகிறாய். பவமான ஸோமனே! சூரியன், உன்னுடைய ஒளிக்கதிர்களைச் செல்வப்படுத்துகிறான்.

அகிருஷ்டாமாஷார்கள் ஸிக்தா நிவாவரி பிருகினி அஜர்கள்

30. பவமான ஸோமனே! உலகத்தைத் தாங்கும் பவித்திரத்திலே நீ தேவர்களுக்காக சுத்தஞ் செய்யப்படுகிறாய். முதல்வர்கள் உன்னை விரும்பிப் பற்றுகிறார்கள். இந்த உலகங்கள் எல்லாம் உன்னிடம் சரணமாகின்றன. 8458

31. முழங்கும் ஸோமன் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான். பசுமை நிறமுள்ளவனும், வர்ஷிப்பவனுமான சலங்களிலே கதறுகிறான். வழிபடுபவர்கள்



ஸோமனை விரும்பி அவனை ஒருமித்துத் துதிக்கிறார்கள். பாலன் புலம்புங்கால் பாக்கள் அவனை சுவைக்கின்றன.

32. ஸோமன் தான் அறிவது போல் மூவ்வித இழையைப் பரத்துபவனாய், சூரியனுடைய ரசிமிகளை அணிந்து கொள்கிறான். சத்தியனுடைய புதிய பாக்களைச் செலுத்தி ஸ்திரீகளைப் பாலிப்பவன் உத்தமப் பாண்டத்துக்குப் போகிறான்.

33. ஸிந்துக்களின் அரசன் பாய்கிறான். சோதியின் தலைவன் முழக்கத்துடன் ருதவழிகளால் போகிறான். சுத்தப்படுங்கால் சொல்லைக் கூறுபவனும், செல்வத்தைத் தருபவனும், நூறு தாரைகள் உள்ளவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் ஊற்றப்படுகிறான்.

34. பவமான ஸோமனே! நீ ரஸக் கடலைச் செலுத்துகிறாய். நீ அற்புத சூரியனைப் போல் கம்பளப் பவித்திரங்களை அணுகுகிறாய். அறிஞர்களின் கைகளால் சுத்தமாகி கற்களால் பிழியப்பட்டு மகத்தான செல்வத்தையளிக்கும் போருக்குச் செல்கிறாய்.

35. பவமான ஸோமனே! நீ உணவையும் ஊக்கத்தையுமளிக்கப் பாய்கிறாய். உறை இடத்திலே இறங்கும் பருந்தைப் போல் நீ கலசங்களிலே இறங்குகிறாய். பிழியப்பட்டவனும், மதப்படுத்துபவனும், சோதியின் ஸ்தம்பத்தைப் போல் இருப்பவனும், அனைத்தையுங் காண்பவனும், இரஸனுமான நீ. இந்திரனுக்கு மதத்தைத் தருகிறாய். 8463

36. சலனமாகும் ஏழு தாய்மார்கள் – நதிகள் – புதிய பிறவியும், வெற்றியுள்ளவனும், அறிஞனும், சலங்களின் நடுவிலிருப்பவனும், சலத்தை ஏந்துபவனும், திவ்யனும், நரர்களைக் காண்பவனுமான ஸோமனை எல்லா உலகங்களுக்கும் அரசனாகச் செய்ய அவனிடம் செல்லுகின்றன.

37. இந்துவே! தலைவனான நீ, உன்னுடைய தேருக்குத் துரிதமாய்ச் செல்லும் குதிரைகளை இணைத்து இவ்வுலகங்களின் வழியாய்ச் செல்லுகிறாய். அவை இனிய சுவை

யுள்ளதும், பிரகாசிப்பதுமான ரஸத்தைப் பொழிக. ஸோமனே! உன்னுடைய விரதத்திலே எல்லா மனிதர்களும் நிற்பார்களாக.

38. ஸோமனே! மனிதர்களைக் காணும் நீ, எங்கும் இருக்கிறாய். பவமானனே! விருஷபனான நீ, இந்த சலங்களுக்குச் செல்லுகிறாய். பொன்னும், பலவித நிதிகளும் நிறைந்த செல்வங்களை எங்களுக்குப் பொழியவும். நாங்கள் உலகங்களில் வாழ வலியர்களாயிருப்போமாக.

39. பசுக்களை, பொருளை, பொன்னை ஜயிப்பவனும், ரேதஸை ஏந்துபவனும், சலங்களிலே நிலைக்கப்படுபவனுமான நீ, பாயவும். ஸோமனே! நீ உத்தம வீரன். அனைத்தையும் அறிபவன். இந்த அறிஞர்கள் துதியோடு உன்னை அணுகுகிறார்கள்.

40. இனிய ரஸத்தின் அலை துதிமொழிகளை எழுப்புகிறது. மகான் சலத்தை அணிந்து கலசத்தினுள் பாய்கிறான். பவித்திரத் தேருள்ள அரசன் போருக்கு அதில் ஏறுகிறான். நூறு படைகளை ஏந்தும் அவன், எங்களுக்கு மகத்தான செல்வத்தை ஜயிக்கிறான். 8468

பௌமோ அந்திரி

41. எங்கும் பரவும் ஸோமன் பிரஜையைத் தருபவையும், சுலபமாய் ஏந்தப்படுபவையுமான எல்லாத் துதிகளையும், இரவிலும் பகலிலும் பிரேரிக்கிறான். இந்துவே! நீ பருகப்பட்டவுடன், மனைகளை நிரப்பும் செல்வங்களையும், சந்தானத்தைத் தரும் உணவையும் எங்களுக்கு அளிக்கப்பட இந்திரனைக் கேட்கவும்.

42. காலையிலே பசுமை நிறமுள்ள இன்பமான மதமளிப்பதான ஸோமன் வழிபடுபவர்களின் அறிவாலும், துதிகளாலும் அறியப்படுகிறான். அவன் துதிப்பவனையும், யஜிப்பவனையும் அணுகி, சோதி புவிகளின் நடுவே செல்லுகிறான். அவன் யக்ஞத்தை நடத்துபவனுக்கு மானிடச் செல்வங்களையும் தெய்வச் செல்வங்களையும் தருகிறான்.



43. அறிஞர்கள் ஸோமனைப் பாலால் பூசி, அஞ்சனப்படுத்தி, துலக்கப்படுத்துகிறார்கள். தேவர்கள் பலப்படுத்தும் ரஸத்தை சுவைக்கிறார்கள். அவர்கள் அவனை இனிய பாலால் மெருகிடுகிறார்கள். பொன்னால் அவனை சுத்தப்படுத்தி, பொழிபவனும், பார்ப்பவனும், பொங்கும் சலத்தில் செல்பவனுமான ஸோமனை சலங்களினுள் பற்றுகிறார்கள்.

44. அறிஞனான பவமானனுக்குப் பாடுங்கள். அவன் மகத்தான தாரையைப் போல் உணவைப் பொழிகிறான். அவன் பழைய சருமத்திலிருந்து பாம்பைப்போல் வெளியே வருகிறான். விருஷபனும், பசுமை நிறமுள்ளவனுமான அவன் கிரீடிக்கும் குதிரையைப் போல் கலசத்துக்குச் செல்லுகிறான்.

45. தினங்களை அளப்பவனாக வானிலே ஸ்தாபிக்கப்பட்டவனும், முகப்பிலே செல்பவனும், அரசனும், சலத்தால் செம்மைப்படுபவனுமான ஸோமன், போற்றப்படுகிறான். பசுமை நிறமுள்ளவனும், நெய் சொட்டுபவனும், மிக்க அழகுள்ளவனும், சலமிருப்பவனும், சோதித் தேரில் இருப்பவனுமான ஸோமன், மனைக்கு நண்பனாய், செல்வத்தை அளித்துக் கொண்டு பாய்கிறான். 8473

கிருத்ஸமதன் சௌனகன்

46. சோதியைத் தாங்குபவனும், இயக்கப்பட்டவனும், மதமளிப்பவனுமான ஸோமன் பிழியப்படுகிறான். மூன்று தாதுக்களுள்ள ஸோமன் சலங்களுக்குப் பாய்கிறான். இருக்குக்களைக் கூறுபவர்கள் ரஸரூபனான ஸோமனை அணுகுங்கால் வழிபடுபவர்கள் முழங்கும் ஸோமரஸத்தை உருசிக்கிறார்கள்.

47. நீ சுத்தமாகுங்கால் உன்னுடைய துரித தாரைகள் ஒருமித்துச் சேர்ந்தவுடன் ஆட்டு உரோமக் கண்ணறைகளின் வழியாய்ச் செல்லுகின்றன. ஸோமனே! நீ பாண்டங்களிலே சலத்தோடு கலக்கப்படுங்கால் பொழியப்பட்ட நீ, கலசங்களிலே இறங்குகிறாய்.

48. ஸோமனே! துதியாருகனும், எங்கள் செயலை அறிபவனுமான நீ, எங்களுக்காகப் பெருகவும். ஆட்டு உரோமப் பவித்திரத்தின் மீது உன்னுடைய பிரியமான இனிய ரஸத்தை எங்களுக்குப் பெருக்கவும். இந்துவே! பட்சகர்களைக் கொல்லவும். உத்தமப் புதல்வர்களுள்ள நாங்கள், யக்ஞத்திலே நிறைந்த மொழிகளைக் கூறு வோமாக. 8476

## 87. பவமான ஸோமன்

### 810. உசநா காவ்யன்

1. ஸோமனே! நீ வேகமாய்ப் பாயவும். கோசத்தின் மீது அமரவும். மனிதர்களால் சுத்தமாகி நீ உணவை அளிக்கத் துரிதமாகவும். அவர்கள் உன்னை வலிய குதிரையைப் போல் சுத்தப்படுத்தி, தருப்பைக்கு விரல்களான தடைவார்களால் உன்னைச் செலுத்துகிறார்கள்.

2. அரக்கர்களை அழிப்பவனும், துன்பத்தைத் துடைப்பவனும், தேவர்களைப் பாலிப்பவனும், தோற்றுவிப்பவனும், நிறமுள்ளவனும், சோதியை ஏந்துபவனும், புவியைத் தாங்குபவனும், தேவனும், கூரிய ஆயுதமுள்ளவனுமான இந்து பெருகுகிறான்.

3. ரிஷியும், விப்பிரனும், மனிதர்களின் முதல்வனும், ரிபுவும், தீரனுமான உசநான் தன் காவ்யத்தால் அந்தப் பசுக்களின், மறைக்கப்பட்டும் மூடப்பட்டுமுள்ள இரகசியமாயிருக்கும் பாலைக் கண்டான்.

4. இந்திரனே! வர்ஷிப்பவனான உனக்கு வர்ஷிப்பதும், இனிப்புள்ளதுமான இந்த ஸோமம், பவித்திரத்துக்குப் பாய்கிறது. ஆயிரக்கணக்கான செல்வத்தையளிப்பவனும், நூற்றுக்கணக்கான செல்வத்தை அளிப்பவனும், சக்தியுள்ளவனுமான ஸோமன் நித்தியமான யக்ஞத்திலே விளங்குகிறான்.

5. பசுக்களால் தோற்றுவிக்கப்பட்ட ஆயிரம் உணவுகளை நோக்கிச் செல்பவையும், பவித்திரங்களால் சுத்தப்பட்டவையுமான இந்த ஸோமரஸங்கள் மகத்தான உணவுக்கும், அமிருதத்துக்கும் பகைப் படையை ஜயித்து உணவை விரும்பும் குதிரைகளைப் போல் பிரேரிக்கப்படுகின்றன. 8481



6. பலரால் போற்றப்படுபவனும், சுத்தப்படுபவனுமான ஸோமன், மானிடர்களுக்கு எல்லாப் போகங்களையுமளிக்கப் பெருகுகிறான். பருந்தால் ஏந்தப்படும் நீ, எங்களுக்கு உணவுகளை எடுத்து வரவும். செல்வத்தை அளிப்பவனாய் ரஸத்தைச் செலுத்தவும்.

7. பிழியப்பட்டவுடன் துரிதமாய்ப் பாயும் இந்த ஸோமன் தளர்த்தப்பட்ட குதிரையைப் போல் பவித்திரத்துக்கு ஓடுகிறான். அவன் செல்லுங்கால் தன் கொம்புகளைக் கூர்மை செய்துகொள்ளும் எருமையைப் போலும், பசுக்களுக்காகப் போராடும் வீரனைப் போலும் விரைகிறான்.

8. இந்த ஸோமதாரை உச்சமான இடத்திலிருந்து வந்து, மலையிலுள்ள கொட்டிலிலே எங்கோ மறைக்கப்பட்டிருந்த பசுக்களைக் கண்டுபிடித்தது. ஸோமனுடைய தாரை சோதியிலே மேகங்களால் தோன்றும் மின்னலைப் போல் இடித்து இந்திரனே! உனக்காகப் பாய்கிறது.

9. ஸோமனே! சுத்தனாகும் நீ, இந்திரனோடு ஒரு தேரிலே திருடப்பட்ட பசுக்களின் மந்தையைப் பற்றப் பின் பற்றுகிறாய். துரிதமாயளிப்பவனே! எங்களுக்கு மிக்க மிகுந்த உணவுகளை அளிக்கவும். ஏனெனில் உணவுள்ளவனே! அவை உனக்குரியவை. 8485

## 88. பவமான ஸோமன்

### 811. உசநா காவ்யன்

1. இந்திரனே! உனக்காக இந்த ஸோமம் பிழியப்பட்டிருக்கிறது. உனக்காக இது சுத்தஞ் செய்யப்பட்டிருக்கிறது. நீ இதைப் பருகவும். உன்னால் கற்பிக்கப்பட்டதும்,

மதத்துக்காக விரும்பப்படுவதும், உன்னுடைய நட்புள்ளது மான இந்துவாம் ஸோமமே இது.

2. எங்களுக்குப் பல செல்வங்களை ஏந்தி வர கனத்த பாரங்களைத் தாங்கும் தேரைப்போல் அது இணைக்கப்படுகிறது. பிறகு எங்கள் எதிர்ப்பை எதிர்பார்க்கும் பகைசனங்கள் எல்லாம் விரும்பத்தகுந்த சண்டைக்குச் செல்வார்களாக.

3. ஸோமனே! நீ செவியுறும் இடத்துக்கு நியுத் குதிரைகளோடுள்ள வாயுவைப் போல் போகிறாய். நீ அழைப்பைச் செவியுற்றவுடன் நாஸத்தியர்களைப் போல் மிக்கச் செல்வத்தை அளிக்கிறாய். நீ உன் தன்மையால் அனைவராலும் செல்வமளிப்பவனைப்போல் விரும்பப்படுகிறாய். நீ பூஷாவைப்போல் மனோவேகமுடனிருக்கிறாய்.

4. ஸோமனே! நீ இந்திரனைப்போல் மகத்தான செயல்களை நடத்துபவன். நீ விருத்திரர்களை அழிப்பவன் கோட்டைகளை இடிப்பவன். நீ பேதுவின் குதிரையைப் போல் பாம்புகள் எனப்படுபவர்களைக் கொல்பவன். நீ ஒவ்வொரு தஸயுவையுமழிப்பவன்.

5. வனத்திலே விடுவிக்கப்பட்ட அக்கினியைப்போல் ஸோமன், மகத்தான பகைவனை எதிர்த்து முழக்கத்துடன் போர் புரியும் மனிதனைப்போல் சலங்களில் தன் சக்தியை அனுயாஸமாய்ப் புலப்படுத்துகிறான். ஸோமன் சுத்தமாகுங்கால் தன் அலையைப் பிரேரிக்கிறான். 8490

6. இந்த ஸோமரஸங்கள் மேகங்களால் மொழியப்படும் சோதியின் மழைகளைப்போல் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ப் பாய்கின்றன. பிழியப்பட்ட ஸோம ரஸங்கள் கடலுக்கு இறக்கத்திலே பாயும் நதிகளைப்போல் கலசங்களுக்கு அனுயாஸமாய்ப் பாய்கின்றன.

7. சக்தியுள்ள நீ, மருத்துக்களின் படையைப் போலும், குற்றமற்ற தேவ சனங்களைப்போலும் பெருகவும். எங்



களிடம் சலங்களைப்போல் துரிதமாயனுகூலமாகவும். ஆயிரம் வடிவங்களுள்ள நீ, போரிலே ஜயமடையும் இந்திரனைப்போல் போற்றத் தகுந்தவனாயிருக்கிறாய்.

8. உன்னுடைய செயல்கள் அரசனான வருணனுடைய செயல்களைப்போல் விளங்குகின்றன. ஸோமனே! உன்னுடைய புகழ் உயரமாயும், ஆழமாயுமிருக்கின்றது. நீ பிரியமுள்ள மித்திரனைப்போல் சுத்தனாயிருக்கிறாய். ஸோமனே! நீ அர்யமானைப்போல் ஆற்றலுள்ளவனாயிருக்கிறாய். 8499

## 89. பவமான ஸோமன்

### 812. உசநா காவ்யன்

1. இச்சுமைக் குதிரை யக்ஞ வழிகளால் செல்லுகிறது. நீ சுத்தமானவுடன், சோதியிலிருந்து வரும் மழையைப் போல் பெருகுகிறாய். ஆயிரந் தாரைகளுள்ள ஸோமன் எங்களின் நடுவே அவனுடைய தாயின் அங்கத்திலே சலத்திலே அமருகிறான்.

2. அரசனான ஸோமன் சலங்களான ஆடையை அணிந்திருக்கிறான். அவன் ருதத்தின் மிக்க நேராகச் செல்லும் கப்பலிலே ஏறி இருக்கிறான். பருந்தால் ஏந்தி வரப்பட்ட ரஸம் சலங்களில் செழிக்கிறது. தந்தை, தந்தையின் புதல்வனான ஸோமனைக் கறக்கிறான்.

3. சலத்தைப் பிரேரிப்பவனும், பசுமை நிறமுள்ளவனும், சிகப்பனும், இந்த ஒளி உலகைப் பாலிப்பவனும், சிங்கத்தைப்போல் இருப்பவனுமான ஸோமனிடம் வழிபடுபடுபவர்கள் வருகிறார்கள். போர்களிலே தீரனும், தேவர்களில் முதல்வனுமான ஸோமன் திருடப்பட்ட பசுக்களைத் தேடுகிறான். அவனுடைய ஆற்றலால் பொழிபவனான இந்திரன் விசுவத்தைப் பாலிக்கிறான்.

4. அறிஞர்கள் பரந்த சக்கரமுள்ள தேரிலே இனிய முதுகுள்ளவனும், உக்கிரனும், ஊக்கமுள்ளவனும், அழகனுமான ஸோமனை இணைக்கிறார்கள். விரல்களான சகோதரி

கள் அவனை சுத்தப்படுத்துகிறார்கள். பந்துக்கள் பவிஷ்டனான அவனைப் பலப்படுத்துகிறார்கள்.

5. நெய்யை அளிக்கும் நால்வர்கள் ஒரே இடமான வானிலே அமர்ந்திருக்கும் அவனுக்கு சேவை செய்கிறார்கள். சுத்தமாகும் அவனிடம் அவர்கள் உணவோடு செல்லுகிறார்கள். அவனை ஒவ்வொரு பக்கத்திலும் பல பசுக்கள் சூழ்கின்றன.

6. சோதியை ஏந்துபவனும், புவியைத் தாங்குபவனுமான அவனுடைய கைகளிலே எல்லாப் பிரசைகளும் இருக்கிறார்கள். விருப்பங்களின் ஊற்றான ஸோமன் துதிப்பவனான உனக்குக் குதிரைச் செல்வனாயிருப்பானாக. இனிய ஸோமன் இந்திரியத்துக்காக சுத்தஞ் செய்யப்படுகிறான்.

7. ஜயிப்பவனும், ஜயிக்கப்படாதவனுமான நீ, தேவர்களுடைய பானத்துக்காகச் செல்லவும். ஸோமனே! விருத்திரர்களைக் கொல்பவனான நீ, இந்திரனுக்காகப் பாயவும். சிறந்த செழித்த செல்வங்களை எங்களுக்கு அளிக்கவும். நாங்கள் உத்தம வீர மக்கட்களுக்குத் தலைவர்களாயிருப்போமாக. 8500

## 90. பவமான ஸோமன்

### 813 வசிஷ்ட மைத்திராவருணி

1. சோதியையும், புவியையும் தோற்றுவித்த ஸோமன் அறிஞர்களால் செலுத்தப்பட்டு உணவை அளிக்க விரும்பி தேரைப்போல் முன்னேறுகிறான். இந்திரனிடம் செல்பவனும், தன் ஆயுதங்களைக் கூர் செய்து கொள்பவனுமான ஸோமன் தன் கைகளிலே எல்லாச் செல்வங்களையும் ஏந்திக் கொண்டு எங்களிடம் வருகிறான்.

2. மூன்று பாக்கள் உள்ளவனும், வர்ஷிப்பவனும், உணவை அளிப்பவனுமான ஸோமனை முழங்கும் வழிபடுபவர்களுடைய குரல்கள் பிரதி நாதமிடுகின்றன. நதிகளை



அணிந்து கொள்ளும் வருணன்போல் சலத்தை அணிந்துள்ளவனும், ரத்தினத்தைத் தருபவனுமான ஸோமன் விரும்பத் தகுந்த செல்வங்களை அளிக்கிறான்.

3. ஸோமனே! வீரப்படைகள் உள்ளவனும், எல்லா வீரர்களை அடைந்திருப்பவனும், ஆற்றலுள்ளவனும், ஜயிப்பவனும், செல்வங்களைத் தருபவனும், கூரிய ஆயுதமேந்துபவனும், போரிலே தடைபடாதவனுமான நீ, எதிர்ப்படைகளிலே எதிர்த்து வரும் பகைவர்களை ஜயித்துக் கொண்டு பெருகவும்.

4. ஸோமனே! பரந்த வழியுள்ள நீ, வழிபடுபவர்களுக்கு அபயத்தை அளிப்பவனாயும், சோதியையும் புவியையும் இணைப்பவனாயும் பெருகவும். நீ சலங்களையும், உஷையையும், சூரியனையும், ரசிமிகளையும் பற்ற விரும்பி முழங்குகிறாய். எங்களுக்கு மகத்தான உணவை அளிக்க முழங்குகிறாய்.

5. ஸோமனே! வருணனை மதப்படுத்து. மித்திரனை மதப்படுத்து. பவமான ஸோமனே! இந்திரனையும், விஷ்ணுவையும் மதப்படுத்து. மருத்துக்களின் படையை மதப்படுத்து. தேவர்களை மதப்படுத்து. இந்துவே! மதத்துக்காக மகத்தான இந்திரனை மதப்படுத்து.

6. ஸோமனே! நீ இங்ஙனம் போற்றப்பட்டு அரசனைப்போல் உன்னுடைய செயல்களை நடத்தி, நீ உன் ஆற்றலால் எல்லாத் தீமைகளையும் அழித்துப் பெருகவும். இந்துவே! நன்கு கூறப்பட்ட எங்கள் துதிக்கு உணவை அளிக்கவும். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள். 8506

## 91. பவமான ஸோமன்

### 814. கசியப மாரீசன்

1. தேவர்களுடைய மனங்களால் தியானிக்கப்படுபவனும், முதல்வனும், துதியைப் பெறுபவனுமான ஸோமன்,

யக்ஞத்திலே முழக்கத்தோடு தேர்ப் போர்களிலே விரல்களால் தளர்த்தப்படும் குதிரைகளைப்போல் பிரேரிக்கப்படுகிறான். பத்து சகோதரிகளான விரல்கள் அவி ஏந்தும் ஸோமனை உயர்ந்த இடத்திலே யக்ஞ ஸதனங்களுக்குப் பிரேரிக்கின்றன.

2. பவித்திரத்தாலும், பசுக்களின் பாலாலும், தயிராலும், சலங்களாலும், மானிடத் தலைவர்களாலும், சுத்தமாகும் அமிருதனும், வழிபடும் அறிஞர்களால் பொழியப்பட்டவனுமான ஸோமன் தேவர்களுடைய பானத்துக்காக யக்ஞத்துக்கு வருகிறான்.

3. வர்ஷிப்பவனும், பவமானனுமான ஸோமன், வர்ஷிக்கும் இந்திரனுக்கு முழங்கிக் கொண்டு பசுவின் வெண்மையான பாலோடு சேரப்போகிறான். துதிக்கப்படுபவனும், துதிகளை அறிபவனுமான தீரன், பவித்திரத்தின் வழியாய் இன்னலற்ற ஆயிரம் வழிகளால் கலசத்துக்குச் செல்லுகிறான்.

4. அரக்கர்களின் திரமான மனைகளை உடைக்கவும். சுத்தனான நீ, சக்தியை அணிந்து கொள்ளவும். மேலிருந்தும், அருகிலிருந்தும், தூரத்திலிருந்தும் வரும் அரக்கர்களையும், அவர்களுடைய தலைவனையும், உன்னுடைய அழிக்கும் ஆயுதத்தால் வெட்டித் துணிக்கவும்.

5. துதியாருகனான ஸோமனே! நீ பூர்வத்தில்போல் உன்னுடைய பழையவழிகளை, புதிய புலவனுக்குப் புலப்படுத்தவும். பல செயல்களை நடத்துபவனே! பல நாதங்களை எழுப்புபவனே! உன்னுடைய, பகைவர்களால் தகர்க்கக் கடினமாயிருப்பவையும், சத்ருக்களைத் துன்பப்படுத்துபவையும், மகத்தாயுமுள்ள அம்சங்களை நாங்கள் பெறுவோமாக.

6. ஸோமனே! இங்ஙனம் சுத்தமான நீ எங்களுக்கு வானையும், சோதியையும், புவியையும், பல புத்திரர்களையும், பௌத்திரர்களையும் அளிக்கவும். எங்கள் நிலத்தைச் செழிப்பிக்கவும். ஸோமனே! வானிலே நட்சத்திரங்களை அகல



மாய்ப் பரத்தவும். நாங்கள் சூரியனைக் காண நீண்ட ஆயுசை அளிக்கவும். 8512

## 92. பவமான ஸோமன்

### 815. கசியப மாரீசன்

1. பிழியப்பட்டு அறிஞர்களால் இயக்கப்படும் பசுமை நிறமுள்ள ஸோமன் தேரைப்போல் பவித்திரத்தில் செல்வங்களுக்காகப் பிரேரிக்கப்படுகிறான். சுத்தமாகும் அவன் இந்திரனுடைய துதியைப் பெறுகிறான். அவன் இன்புறுத்தும் அவிகளால் தேவர்களைப் போற்றுகிறான்.

2. சூரர்களைக் காண்பவனும், கவியுமான ஸோமன், சலத்தைத் தரித்துக்கொண்டு பவித்திரத்திலே தன் இடத்துக்குச் செல்லுகிறான். அவன் யக்ஞத்திலே ஹோதாவைப் போல் அமர்ந்து கிரகங்களுக்குப் பாய்கிறான். அறிஞர்களான ஏழு ரிஷிகள் ஸோமனை அணுகுகிறார்கள்.

3. பேரறிஞனும், பாதையை அறிபவனும், விசுவேதேவனும், சுத்தப்படுபவனுமான ஸோமன், தன்னுடைய நித்தியமான இடத்துக்குப் போகிறான். அவன் எல்லாக் காவ்யங்களிலும் இன்புறுகிறான். தீரன் பஞ்சசனங்களிடம் செல்ல முயற்சிக்கிறான்.

4. பவமான ஸோமனே! உன்னுடைய மர்மமான இடத்திலே முப்பத்து மூன்று விசுவேதேவர்கள் இருக்கிறார்கள். அங்ஙனம் விசுவேதேவர்கள் போலுள்ள உன்னை உயரத்திலுள்ள பவித்திரத்திலே பத்து விரல்கள் சுத்தப்படுத்துகின்றன. ஏழு பெரிய நதிகளும் உன்னை சுத்தப்படுத்துகின்றன.

5. வழிபடுபவர்கள் எல்லாம் வழுத்தக் குழுமியுள்ள ஸோமப் பவமானனுடைய அந்த இடம் எங்களுக்கு உரியதாகுக. பகலுக்குப் பிரகாசத்தை அளித்த அந்த ஸோமனுடைய சோதி மனுவைப் பாலித்தது. ஸோமன் அதை தஸ்யுவை ஜயிக்கச் செய்தான்.

6. ஸோமன் சுத்தப்படுங்கால் பசு நிறுத்தப்பட்டுள்ள யக்ஞ ஸ்தானத்துக்குச் செல்லும் ஹோதாவைப் போலும், போருக்குச் செல்லும் சத்தியச் செயலுள்ள அரசனைப் போலும் கலசங்களுக்கு, சலங்களுக்குச் செல்லும் 8518
எருமையைப் போலும் செல்லுகிறான்.

## 93. பவமான ஸோமன்

### 816. நோதா கௌதமன்

1. சகோதரிகள் சேர்ந்து தெளிந்து ஸோமத்தை சுத்தப்படுத்துகிறார்கள். பத்து விரல்கள் அறிஞனை ஸோமத்தைப் பிரேரிக்கின்றன. பசுமை நிறமுள்ளவன் சூரியனுடைய மனைவியைச் சுற்றிலும் பெருகுகிறான். அவன் கலசத்துக்குக் குதிரையைப்போல் பாய்கிறான்.

2 தேவர்களை விரும்புபவனும், வர்ஷிப்பவனும், பலரால் போற்றத் தகுந்தவனுமான ஸோமன் தாயினால் ஏந்தப்படும் குழந்தையைப் போல் சலங்களால் ஏந்தப்படுகிறான் யுவதியினிடம் செல்லும் இளைஞனைப்போல் சென்று அவன் பாலோடும் தயிரோடும் சேர்கிறான்.

3. பசுவின் மடி பெருகுகிறது. அறிஞனை ஸோமன் தன் தாரைகளோடு சேர்ந்திருக்கிறான். பாண்டங்களிலிருக்கும் உயர்ந்த ஸோமனை, பசுக்கள் தங்கள் பாலால் புதிய சுத்தப்பட்ட ஆடைகளைப் போல் போர்த்துகின்றன.

4. இந்து பவமானனே! எங்களுடைய நலத்தை விரும்பும் நீ, தேவர்களோடு சேர்ந்து குதிரைகளுள்ள செல்வங்களை எங்களுக்கு அளிக்கவும். செல்வங்களை எங்களுக்கு வழங்க தேருள்ளவர்களை விரும்பும் உன்னுடைய புரந்தியானது - பரந்த மனம் – எங்களிடம் வருக.

5. ஸோமனே! நீ சுத்தப்படுங்கால் எங்களுக்கும், எங்கள் ஆட்களுக்கும், செல்வத்தையும், அனைவரையும் இன்புறுத்தும் செல்வத்தையுமளிக்கவும். வந்திப்பவனுடைய வாழ்க்கை உன்னால் நீள்க. தன் அறிவால் செல்வத்தைச் சம்பாதிக்கும் ஸோமன் உஷையிலே துரிதமாய் எங் 8523
களிடம் வருவானாக.



## 94. பவமான ஸோமன்

### 817. கண்வ கௌரன்

1. குதிரையிலே அணிகலன்களைப் போலும், சூரியனிலே ரசிமிகளைப் போலும் இந்த ஸோமனில் விரல்கள் பரஸ்பரம் முந்தி இயங்குங்கால், அவன் சலங்களை அணிந்து கொண்டு வழிபடுபவர்களை, பசுக்களைப் புட்டிப்படுத்த இனிய கோசாலைக்குச் செல்லும் கோபாலனைப் போல் விரும்பிப் பெருகுகிறான்.

2. அவன் அமுதத்தின் தாரகமான வாளை, இரு பக்கங்களையும் திறந்து அவற்றின் நடுவே செல்லுகிறான். எல்லாம் அறியும் ஸோமனுக்குப் புவனங்கள் பரவுகின்றன. இன்புறுத்தும் பாக்கள் யக்ஞத்தில் விருப்பமாகி கொட்டிலை நோக்கிக் கதறும் பசுக்களைப் போல் ஸோமனை நோக்கி முழங்குகின்றன.

3 கவியான ஸோமன் அறிஞனுடைய பாக்களைப் போர்க்களத்தின் இடங்களையெல்லாம் சுற்றி வரும் தேரைப் போல் சுற்றிவருங்கால், தேவர்களிடமிருக்கும் செல்வத்தை மானிடர்களுக்கு அளிக்க விரும்புகிறான்; நிதிகளைப் பொழிகிறான். அவன் அளிக்கப்பட்ட செல்வங்கள் பாலனமாக அவன் யக்ஞத்தின் பல இடங்களிலே போற்றத் தகுந்தவனாகிறான்.

4. அவன் செல்வத்துக்காகப் பிறப்பிக்கப்படுகிறான். அவன் செல்வத்துக்காக வெளிப்படுகிறான். அவன் துதிப்பவர்களுக்குச் செல்வத்தையும், உணவையுமளிக்கிறான். அவர்கள் அவன் அளித்த செல்வத்தை அணிந்துகொண்டு அமுதத் தன்மையை அடைகிறார்கள். அளந்த சலனமுள்ள ஸோமனுடைய உதவியால் அவர்களுடைய போர்கள் வெற்றியைப் பெறுகின்றன.

5. ஸோமனே! எங்களுக்கு உணவையும், பலத்தையும், பசுக்களையும், குதிரைகளையும் பொழியவும். எங்களுக்குப் பரந்த சோதியையளிக்கவும். தேவர்களை மதப்

படுத்தவும். இந்த அரக்கர்கள் எல்லாம் உன்னால் சுலப
மாய் ஜயிக்கப்படுகிறார்கள். ஸோம பவமானனே ! எல்லாப்
பகைவர்களையுமழிக்கவும். 8528

## 95. பவமான ஸோமன்

### 818. பிரஸ்கண்வ காண்வன்

1. பசுமை நிறமுள்ள ஸோமன் பிரேரிக்கப்பட்ட வுடன் முழங்குகிறான். அவன் கலசத்தின் உதரத்திலே சுத்தப்படுங்கால் அமருகிறான். மனிதர்களால் செலுத்தப் படும் அவன் ஆடையாகப் பாலை அணிந்து கொள்கிறான். அவன் தன் சுவதாக்களால் பாக்களைப் பிறப்பிக்கிறான்.

2. பசுமை நிறமுள்ள ஸோமன் பிரேரிக்கப்பட்டவுடன் தோணியைச் செலுத்தும் தோணிக்காரனைப் போல் ருதத் தின் வழியைக் காட்டும் குரலைச் செலுத்துகிறான். தேவ னான ஸோமன் யக்ஞத்திலே வழிபடுபவனுக்குத் தேவர் களின் இரகஸ்யமான நாமங்களை அறிவிக்கிறான்.

3. சலங்களின் அலைகளைப் போல் துரிதமாகும் அறிஞர்கள் ஸோமனுக்குப் பாக்களைப் பிரேரிக்கிறார்கள். அவனைத் துதித்து அவர்கள் அவனை அணுகுகிறார்கள். அவர்கள் அவனோடு சேர்கிறார்கள். விரும்பும் பாக்கள் விரும்பும் ஸோமனில் பிரவேசிக்கின்றன.

4. அறிஞர்கள், மகிஷத்தைப் போல் உச்சமான இடத்திலே சுத்தஞ் செய்யப்படுபவனும், பொழிபவனும், அரைக்கும் கற்களின் நடுவே வைக்கப்பட்டவனுமான ஸோமனைக் கறக்கிறார்கள். விரும்பும் ஸோமனை, துதிகள் சேவிக்கின்றன. மூவ்வுலகங்களில் இலங்கும் இந்திரன் பகைவர்களை அழிக்கும் ஸோமனை வானிலே ஏந்துகிறான்.

5. ஸோமனே ! நீ சுத்தமாகுங்கால் வோதாவை ஆதரிப்பவன் போல் வழிபடுபவர்களின் தோத்திரத்தை ஊக்கப்படுத்தி ஹோதாவின் — தான புத்தியை விடுவிக் கவும். நீயும் இந்திரனும் யக்ஞத்தில் சேர்ந்திருக்குங்கால்



னாங்கள் செழுமையாயிருப்போமாக. நாங்கள் வீரத்
தன்மையை வசப்படுத்துபவர்களாயிருப்போமாக 8533

## 96. பவமான ஸோமன்

### 819. பிரதர்தனன் — திவோதாஸனுடைய புதல்வன்

1. படையின் தலைவனும், தீரனுமான ஸோமன் பகை வனின் பசுக்களைப் பிடிக்க விரும்பி, தேர்களின் முன்னே சண்டைக்குச் செல்லுகிறான். அவனுடைய படை இன்ப மாகிறது. ஸோமன் நண்பர்களான வழிபடுபவர்களுக்கு அவர்கள் இந்திரனுக்கு அளிக்கும் அவிகளைச் செழிப்பித்து, பாலும் தயிருமான ஆடைகளை அணிந்துகொள்கிறான்.

2. ரித்விஜர்கள் அவனுடைய பசுமை நிறமுள்ள ரஸத்தைப் பிழிகிறார்கள். குதிரையைச் செலுத்தும் காதை களால் தனிப்பட்ட தேரிலே ஸோமன் ஏறுகிறான். இந்திர னுடைய நண்பனும் அறிஞனுமான ஸோமன் வழிபடுபவனை நோக்கிச் செல்லுகிறான்.

3. தேவனே ! ஸோமனே! இந்திரனால் பருகத் தகுந்த நீ எங்களுடைய யக்ஞத்திலே அவனுடைய மகத்தான பானத்துக்காகப் பெருகவும். சலத்தைப் பிரேரித்து, சோதி யிலும், இப்புவியிலும், மழையைப் பெய்யச் செய்து பரந்த வானிலிருந்து வரவும். நீ சுத்தமாகி எங்களுக்குச் செல் வத்தை அளிக்கவும்.

4. நாங்கள் கொல்லப்படாமலும், வெல்லப்படா மலிருக்கப் பெருகவும். எங்களுடைய சுவஸ்திக்காகவும், மகத்தான யக்ஞத்துக்காகவும், எல்லாத் தேவர்களுக்காக வும் பெருகவும். என்னுடைய இந்த நண்பர்கள் எல்லாம் இந்தப் பாலனத்தை விரும்புகிறார்கள். பவமான ஸோமனே! நானும் இந்தப் பாலனத்தை விரும்புகிறேன்.

5. துதிகளைத் தோற்றுவிப்பவனும், சுவர்க்கத்தைத் தோற்றுவிப்பவனும், புவியைத் தோற்றுவிப்பவனும்,

சூரியனைத் தோற்றுவிப்பவனும், அக்கினியைத் தோற்றுவிப்பவனும், இந்திரனைத் தோற்றுவிப்பவனும், விஷ்ணுவைத் தோற்றுவிப்பவனுமான ஸோமன் பெருகுகிறான். 8538

6. தேவர்களின் நடுவே பிரமனும், கவிகளின் நடுவே தலைவனும், விப்பிரர்களிலே ரிஷியும், மிருகங்களிலே மகிஷனும், கழுகுகளிலே பருந்தும், கொடிய படைகளிலே கோடரியுமான ஸோமன் பவித்திரத்தின் வழியே செல்லுகிறான்.

7. பவமான ஸோமன் இன்புறுத்தும் துதிகளை, சப்திக்கும் அலையை ஊக்கப்படுத்தும் நதியைப் போல் ஊக்கப்படுத்துகிறான். விருஷபன் மறைந்திருக்கும் செல்வத்தைப் பார்த்து, பசுக்களின் நிலைகளை அறிந்து இந்தத் தடைபடாத ஆற்றல்களை வசப்படுத்துகிறான்.

8. மதமளிப்பவனும், போர்களிலே பகைவர்களைத் துன்புறுத்துபவனும், துன்பமாகாதவனும், நூறு தாரைகளிருப்பவனுமான நீ, பகைவனின் பலத்தை எதிர்த்துப் பாயவும். சுத்தமாகும் அறிஞனான நீ, நாதங்களை எழுப்பி, இந்திரனுக்கு ரஸத்தின் அலையைச் செலுத்தவும்.

9. பிரியனும், இன்பனுமான ஸோமன் தேவர்களால் அனுகப்பட்டு இந்திரனை மதப்படுத்த கலசத்துக்குப் போகிறான். ஆயிரம் தாரைகளும், நூறு ஆற்றல்களுமுள்ள ஸோமன் போருக்குப் பாயும் வலிய குதிரையைப் போல் பாய்கிறான்.

10. பழையவனும், தோற்றுவிக்கப்பட்டவுடன் செல்வத்தைக் காண்பவனும், சலங்களில் சுத்தப்படுபவனும், கல்லால் கறக்கப்படுபவனும், பகைவர்களிடமிருந்து பாலிப்பவனும், உலகத்தின் அரசனும், பிரமத்துக்காக சுத்தப்படுபவனுமான ஸோமன் வழிபடுபவனுக்கு நன்னெறியைப் புலப்படுத்துகிறான். 8543

11. பவமான ஸோமனே! உன்னால் எங்களுடைய பழைய அறிஞர்களான பிதாக்கள் தங்கள் செயல்களை நடத்தினார்கள். பகைவர்களிடத்தில் துன்பமாகாமலுள்ள நீ,



அரக்கர்களைக் கொல்லவும். வீர மக்கட்களோடும், குதிரைகளோடும் எங்களைச் செல்வப்படுத்த ஈகை மனமுள்ளவனாகவும்.

12. நீ மநுவுக்கு உணவளிப்பவனாயும், பகைவர்களைக் கொல்பவனாயும், செல்வமளிப்பவனாயும், அவியுள்ளவனாயும் பெருகினாய். இப்பொழுதும் எங்களுக்கு நீ அங்ஙனம் செல்வங்களை அளிப்பவனாய்ப் பெருகவும். நீ இந்திரனில் நிலைக்கவும். உன் ஆயுதங்களைப் புலப்படுத்தவும்.

13. மதப்படுத்தும் ரஸத்தோடும், யக்ஞத்தோடுமுள்ள நீ, சலத்தை அணிந்து உயர்ந்துள்ள பவித்திரத்துக்குப் பாயவும். சலமேந்தும் கலசங்களிலே இறங்கவும். மிக்க மதப்படுத்துபவனும், மதமளிப்பவனும், இந்திரனுடைய தனி பானமுமான நீ, கலசங்களில் தேங்கவும்.

14. ஸோமனே! நூறு தாரைகளோடு பெருகுபவனும், ஆயிரக்கணக்கான செல்வங்களை அளிப்பவனும், தேவர்களுடைய பானத்துக்கு உணவை அளிப்பவனான நீ, வானிலிருந்து மழையைப் பொழியவும். உணவை விரும்பும் நீ சலங்களோடு கலசத்திலே சேரவும். எங்களுடைய ஆயுளை நீடித்து கலசத்திலே பாலோடும் தயிரோடும் சேரவும்.

15. இந்த ஸோமன் பாக்களால் சுத்தஞ் செய்யப்படுகிறான். அவன் வலிய குதிரையைப் போல் பகைவர்களைக் கடத்துகிறான். பசுவினிடமிருந்து கறக்கப்படும் புட்டியான பாலைப் போல் அவன் சுத்தனாயிருக்கிறான். பரந்த வழியைப்போலும் பழக்கப்பட்ட சுமைக் குதிரையைப் போலும் அவன் போற்றத் தகுந்தவன். 8548

16. நல்லாயுதம் ஏந்துபவனும், உன்னைப் பிழிபவர்களால் சுத்தப்படுபவனுமான நீ, உன்னுடைய மறைந்திருப்பதும், விரும்பத் தகுந்ததாயுமுள்ள வடிவத்தை, ரஸத்தை, கலசங்களில் செலுத்தவும். உணவை விரும்பும் எங்களுக்குக் குதிரையைப் போல் உணவை ஏந்திவரவும்.

தேவனான ஸோமனே! எங்களுக்கு சீவனை அளிக்கவும். எங்களுக்குப் பசுக்களை அளிக்கவும்.

17. அவர்கள் விரும்பத் தகுந்த பாலனான ஸோமன் பிறந்தவுடன் அவனை சுத்தப்படுத்துகிறார்கள். மருத்துக்கள் ஏந்துபவனைத் தங்கள் படையால் அலங்கரிக்கிறார்கள். காதைகளோடு கவியும், காவ்யத்தோடு கவியுமான ஸோமன், கோஷத்தோடு பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறான்.

18. ரிஷியைப் போல் நினைப்பவனும், ரிஷியைப் போல் நடப்பவனும், ரிஷியைச் செய்பவனும், சோதியை அடைபவனும், ஆயிரங்களால் போற்றப்படுபவனும், கவிகளைச் செலுத்துபவனும், மகானுமாயுள்ள ஸோமன் மூன்றாவது உலகமான ஒளி உலகை அடைய விரும்பி, போற்றப்பட்டு, பிரகாசமாயுள்ள இந்திரனை ஒளிப்படுத்துகிறான்.

19. பாண்டங்களில் அமர்ந்தவனும், போற்றத் தகுந்தவனும், திறமுள்ளவனும், தாங்குபவனும், பசுக்களை அளிப்பவனும், பெருகுபவனும், ஆயுதங்களை ஏந்துபவனும், சலங்களைச் செலுத்துபவனும், வானை சேவிப்பவனும், மகிஷனுமான ஸோமன் நான்காவது உலகத்தை – ஒளி உலகை - போற்றுகிறான் – சேவிக்கிறான்.

20. தன்னை நன்கு அழகு செய்து கொண்ட மனிதனைப் போல் தன் தேகத்தை சுத்தஞ் செய்து வேகமான குதிரையைப் போல் செல்வத்தைப் பற்றப் பெருகி, மந்தைக்குப் பாயும் காளையைப் போல் கலசத்துக்குப் பாய்ந்து ஸோமன் அடிக்கடி முழங்கிக் கொண்டு பாத்திரங்களிலே
செல்லுகிறான். 8558

21. போற்றத் தகுந்த பெரியார்களால் சுத்தமாகிப் பெருகவும். அடிக்கடி முழங்கிக்கொண்டு பவித்திரத்தின் வழியாய்ப் பாயவும். கிரீடிப்பவனாய் நீ பலகைகளிலே சுத்தனாகிப் பிரவேசிக்கவும். உன்னுடைய மதப்படுத்தும் ரஸம் இந்திரனை மதப்படுத்துக.



22. ஸோமனுடைய மகத்தான தாரைகள் பாய்கின்றன. அவன் பாலோடும் தயிரோடும் கலக்கப்பட்டு கலசங்களுக்குச் செல்லுகிறான். பேரறிஞனும், ஸாமகானங்களை நன்கறிபவனுமான ஸோமன், ஸாமங்களைப் பாடி, தேவர்களை அழைத்துக் கொண்டு பாண்டங்களுக்கு நண்பனுடைய மனைவியினிடம் செல்லும் காமுகனைப் போல் துரிதமாகிறான்.

23. பவமான ஸோமனே! நீ வழிபடுபவர்களால் போற்றப்பட்டு கலசங்களில் பாய்ந்து பகைவர்களைக் கொன்று காதலியினிடஞ் செல்லும் காதலனைப் போல் பாய்கிறாய். பறந்து மரங்களிலே இறங்கும் பறவையைப் போல் ஸோமன் சுத்தமானவுடன் கலசங்களிலே இறங்குகிறான்.

24. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் உன்னுடைய காந்திகள், மிகுந்த பாலோடு, பெருகும் தாரைகளோடும் தன் குழந்தைக்குப் பாலையளிக்கும் காரிகையைப்போல் பாண்டங்களுக்குச் செல்லுகிறாய். பலரால் விரும்பப்படும் பசுமை நிறமுள்ள ஸோமன் சலங்களுக்கு ஏந்தப்பட்டு வருகிறான். தேவர்களை விரும்பும் வழிபடுபவர்களுடைய
கலசத்திலே அவன் அடிக்கடி முழங்குகிறான். 8557

## 97. பவமான ஸோமன்

### 820. பல ரிஷிகள்

#### மைத்திராவருணிவசிஷ்டன்

1. பிரேரிக்கப்படும் பொன்கையால் சுத்தமாகும் தேவனான ஸோமன் தன்னுடைய ரஸத்தைத் தேவர்களோடு சேர்க்கிறான். பிழியப்பட்டவுடன் ஸோமன் முழக்கத்தோடு பவித்திரத்துக்கு யக்ஞத்துக்கு ஆயத்தமாகும் பசுக்களுள்ள யாகசாலைகளுக்கு ஹோதாவைப் போல் போகிறான்.

2. மகானும், கவியும், மங்களமான போர்க்கவசங்களை அணிந்தவனும், துதிகளைப் போற்றுபவனும், அனைத்தையும்

காண்பவனும், தேவர்களுடைய விருந்தில் விழித்திருப்பவனுமான நீ, சுத்தமானவுடன் பாத்திரங்களில் செல்லவும்.

3. புகழுள்ளவர்களின் நடுவே மிக்கப் புகழுள்ளவனும், புவியில் பிறந்தவனும், பிரியனுமான ஸோமன், உயரமான பவித்திரத்திலே எங்களுக்காக சுத்தமாகிறான். சுத்தமாகுங்கால் வானிலே முழங்கவும். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள்.

வாஸிஷ்ட இந்திரப் பிரமதி

4 ஸோமனைப் பாடுங்கள். நாம் தேவர்களைப் பாடுவோமாக. மகத்தான செல்வத்தைப்பெற ஸோமனைப் பிரேரியுங்கள். அவன் இனிமையாய்ப் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகுபவனாக. நம்முடைய தேவர்களை விரும்பும் ஸோமன் கலசத்தில் தங்குவானாக.

5. ஸோமன் தேவர்களின் நட்பைப்பெற வந்து அவர்களை மதப்படுத்த ஆயிரந் தாரைகளோடு பெருகுகிறான். அவன் மனிதர்களால் போற்றப்பட்டு, தன்னுடைய பழைய இடத்துக்குப் போகிறான். வழிபடுபவர்களுக்கு மகத்தான செல்வம் தோன்ற அவன் இந்திரனிடம் செல்லுகிறான். 8562

6 ஸோமனே! நீ, எங்கள் துதி கூறப்படுங்கால் எங்களுக்குச் செல்வங்களை அளிக்கப் பசுமை நிறமுள்ளவனாகவும், சுத்தனாகவும் பெருகவும். உன்னுடைய மதப்படுத்தும் ரஸம் இந்திரனைப் போருக்கு ஊக்கப்படுத்துக. எங்களுக்குச் செல்வம் தோன்ற நீ தேவர்களோடு ஒரே தேரில் செல்லவும். நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்திகளோடு பாலியுங்கள்.

வாசிஷ்ட விருஷகணன்

7. தேவன் – விருஷகணன் - உசநாவைப்போல் காவ்யத்தைக் கூறி, தேவர்களின் ஜன்மங்களை அறிவிக்கிறான். மஹிவிரதனும், சுசிபந்துவும், பாவகனுமான ஸோமன் பவித்திரத்துக்குத் தன் பாதத்தால் வராஹனைப்போல் முழங்கிக்கொண்டு பவித்திரத்தை அணுகுகிறான்.



8. பகைவர்களால் துன்புறுத்தப்பட்ட விருஷகணர்கள் பகைவர்களின் பலத்திலிருந்து பாலிக்கப்படுவார்களாக, பிழிகின்ற ஸோம சத்தத்தைக் கேட்டு விரைவாக யக்ஞசாலையைச் சேர்வார்களாக. நண்பர்கள் பகைவர்கட்கு ஆற்ற இயலாத ஸோமத்தை நோக்கி வாத்தியத்தை முழங்குகிறார்கள்.

9. ஸோமன், பலரால் போற்றப்படும் தன்னுடைய வழியை அனுசரித்து வேகமாய்ச் செல்லுகிறான். அனாயாஸமாய்ச் செல்லும் அவனை வேறு எவனும் முந்த இயலாது. கூரிய கொம்புள்ள அவன் தன்னுடைய பலவித ஒளியைப் புலப்படுத்துகிறான். ஸோமன் பகலிலே பசுமை நிறமுடன் தோன்றுகிறான். இரவிலே துலக்கமாய்த் தென்படுகிறான்.

வாசிஷ்டோ மன்யு

10. இந்துவும், வலியனும், கீழே இறங்கும் தன்மையுள்ள ரஸமுள்ளவனுமான ஸோமன் இந்திரனை மதப்படுத்த அவனுக்குப் பலத்தை அளித்துப் பெருகுகிறான். ஆற்றலின் அரசன் ஆற்றலை அளித்து அரக்கர்களைக் கொல்லுகிறான். பகைவர்களைத் துன்புறுத்துகிறான். 8567

11. பிறகு கற்களால் கறக்கப்பட்ட ஸோமன் ஆட்டு உரோமப் பவித்திரத்தைக் கடந்து, தேவர்களை இணைத்து, இனிய தாரையோடு பெருகுகிறான். மதமளிக்கும் தேவனான இந்து, இந்திரனுடைய நட்பை விரும்பி, தேவனுடைய மதத்துக்காகப் பாய்கிறான்.

12. பருவத்தோடு பொருந்துவதும் இன்பந் தருவதுமான காந்தியை அணிந்தவனும், கிரீடிப்பவனும், தன்னுடைய இனிய ரஸத்தோடு தேவர்களிடம் செல்பவனும், சுத்தப்படுபவனுமான ஸோமன் பாய்கிறான். உயரமாயுள்ள பவித்திரத்துக்கு அவனைப் பத்து விரல்கள் செலுத்துகின்றன.

வாசிஷ்ட உபமன்யு

13. பசுக்களைத் தொடர்ந்து கர்ச்சிக்கும் காளையைப் போல் ஸோமன் முழக்கத்துடன் சோதியிலும் புவியிலும்

செல்லுகிறான். போரிலே அவனுடைய சப்தம் இந்திரனுடைய குரலைப் போல் கேட்கிறது. அவன் தன்னைப் புலப்படுத்திக் கொண்டு இந்த சப்தத்தை எழுப்புகிறான்.

14. சுவைக்க இனியனும், பால் சொரிபவனுமான நீ, இனிய ரஸத்தைப் பொழிந்து கொண்டு பெருகுகிறாய். சலங்களால் தெளிக்கப்பட்ட நீ, சுத்தமாகி இடையறாத தாரையோடு இந்திரனுக்குப் பெருகுகிறாய்.

15. மதமளிக்கும் ஸோமனே! நீ மேகத்தை உன் ஆயுதங்களால் வணக்கப்படுத்தி இந்திரனுடைய மதத்துக்காகப் பெருகவும். ஒளிமய நிறத்தை நீ தரித்து எங்களுடைய பசுக்களை விரும்பி, பவித்திரத்தில் பிரேரிக்கப்பட்ட நீ,
ஸோமனே! பெருகவும். 8582

### வாஸிஷ்டோ வியாக்ர பாத்

16. இந்துவே! எங்கள் பாக்களால் திருப்தியாகி பரந்த கலசத்தினுள் பெருகவும். நாங்கள் நல்ல வழிகளையும் செல்வங்களையும் சுலபமாய்ப் பெற எங்களுக்குச் செய்யவும். ஒவ்வொரு பக்கத்திலும் அரக்கர்களை தண்டாயுதத்தால் அடித்து நீ தாரையோடு உயரத்திலுள்ள ஆட்டு உரோமப் பவித்திரத்துக்குப் பாயவும்.

17. ஸோமனே! எங்களுக்குத் துரிதமாய்ப் பெய்வதும், உணவை அளிப்பதும், எங்கள் மனைக்கு சுகத்தைத் தருவதும், ஊக்கத் தானமுள்ளதுமான மழையைப் பொழியவும். அன்புள்ள குழந்தைகளை நாடும் ஒருவனைப்போல் உன்னுடைய பந்துக்களான புவியில் வீசும் காற்றுக்களை நாடுபவனாய்ப் பெருகவும்.

18. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் பாவத்தால் கட்டப்பட்டுள்ள என்னை முடிச்சை அவிழ்ப்பதுபோல் தளர்த்தி விடுவிக்கவும். எனக்கு நன்னெறியையும் ஆற்றலையுமளிக்கவும். பிரேரிக்கப்பட்டவுடன் பசுமை நிறமுள்ள நீ, குதிரையைப்போல் கர்ச்சிக்கிறாய். தேவனான ஸோமனே! மனையுள்ளவனும், மானிடனுடைய நண்பனுமான நீ வா.



### வாசிஷ்ட சக்தி

19 மதத்துக்குத் தகுந்தவனாயுள்ள இந்துவே! நீ யக்ஞத்திலுள்ள உயரமாயுள்ள பவித்திரத்துக்குத் தாரையோடு பெருகவும். சுகந்தனும், தடைபடாதவனும், ஆயிரந் தாரைகள் உள்ளவனுமான நீ, போரிலே செல்வ லாபத்துக்காகப் பெருகவும்.

20. இந்தப் பிரகாசமாயுள்ள ஸோமரஸங்கள் போர்களிலே தேர்கள் இல்லாமலும், இணைக்கப்படாமலும், தடைவார்கள் இல்லாமலும், சுதந்திரமாய் விடப்பட்ட குதிரைகளைப் போல் பாய்கின்றன. தேவர்களே! நீங்கள் அவற்
றைப் பருகச் செல்லுங்கள். 8577

21. இந்துவே! எங்கள் யக்ஞத்திலே பாண்டங்களினுள் சோதியிலிருந்து சலத்தைப் பொழியவும். ஸோமன் எங்களுக்கு வீரப் புதல்வனோடும் ஆற்றலோடுமுள்ள விரும்பத் தகுந்த, செழித்த செல்வத்தை அளிப்பானாக.

### வாசிஷ்ட கர்ண சுருத்

22. அளிக்கப்படும் ஆதரவுக்காகப் புகழுள்ள அரசனுடைய முகப்பிலே பாமரர்களால் முழங்கப்படும் பாக்களைப் போல் ஊக்கமாய் வழிபடுபவனுடைய பாட்டு ஸோமனைப் போற்றுகிறது. பிறகு பசுக்கள் தங்கள் பாலால் திருப்தியையளிக்கும் விருப்பத்தோடு, கலசத்திலிருப்பவனும், அனைவரின் தலைவனும், போற்றத் தகுந்தவனும், மதப்படுத்துபவனுமான ஸோமனிடம் வருகின்றன.

23. சோதியில் தோன்றியவனும், வள்ளல்களுக்குச் செல்வங்களைத் தருபவனும், அளிப்பவர்களுக்கு விருப்பப் பூர்த்திகளைப் பொழிபவனும், பேரறிஞனான ஸோமன், ஸத்தியனான இந்திரனுக்கு சத்தியமான ரஸத்தைப் பொழிகிறான். அரசனான ஸோமன் ஆற்றலை ஏந்துபவனாயிருக்கிறான். அவன் பத்து விரல்களால் முற்றும் வசப்படுகிறான்.

24. மனிதர்களைக் காண்பவனும், பவித்திரங்களால் சுத்தப்பட்டவனும், மானிடர்களுக்கும், தேவர்களுக்கும் உத்தம அரசனாயிருக்கிறான். அவன் பூர்வத்திலிருந்தே செல்வங்களின் செல்வபதியாயிருக்கிறான். இந்து சுந்தரமான நன்கு பாலிக்கப்படுவதான ருதத்தை ஏந்துகிறான்.

### வாசிஷ்டோ மிருடீகன்

25. ஸோமனே! எங்களுக்கு உணவை அளிக்கவும். செல்வத்தைச் சம்பாதிக்கவும். இந்திரனுக்கும், வாயுவுக்கும் உணவை அளிக்கவும். போரிலே குதிரையைப் போல் துரிதமாகவும். எங்களுக்குச் செழித்த ஆயிரக்கணக்கான உணவை அளிக்கவும். ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் எங்களுக்குச் செல்வங்களை அளிப்பவனாகவும். 8582

26. தேவர்களைத் திருப்தி செய்பவையும், பாத்திரங்களில் நிரப்பப்பட்டு வழிபவையுமான ஸோமரஸங்கள் எங்களுக்கு வீரப் புதல்வனையும், மனையையும் அளிக்க. ஹோதாவைப் போல் தேவர்களைத் துதிப்பவையும், சோதியில் தோன்றும் தேவர்களை யஜிப்பவையும், மிக்க மதமளிப்பவையும், தருபவையும், அனைவராலும் விரும்பத் தகுந்தவையுமான ஸோமரஸங் கலந்த அநுகூலமனத்தைப் பிரேரிக்க.

27. தேவனான ஸோமனே! தேவர்களின் பானமான நீ, யக்ஞத்திலே அவர்களுக்கு மிக்க உணவை அளிக்கப் பெருகவும். நாங்கள் உன்னால் பிரேரிக்கப்பட்டு, போரிலே வலிய சத்துருக்களையும் ஜயிப்போமாக. சுத்தமான நீ எங்களுக்கு சோதியையும், புவியையும் இனிய இருப்பிடங்களாகச் செய்யவும்.

### வாசிஷ்டோ வசுக்கிரன்

28. நீ காளைகளால் இணைக்கப்பட்டு குதிரையைப் போல் கனைக்கிறாய். சிங்கத்தைப் போல் பயங்கரமாயிருக்கும் நீ, வேகத்திலே மனத்தை முந்துபவன். இங்கு செலுத்



தப்படும் மிக்க நேரான வழிகளால், இந்துவே! எங்களுக்கு சுகத்தைப் பொழியவும்.

29. தேவர்களுக்காகத் தோன்றும் உன்னுடைய நூறு தாரைகள் பிரேரிதமாகின்றன. கவிகள் அந்த ஆயிரந் தாரைகளை சுத்தப்படுத்துகிறார்கள். இந்துவே! எங்களுக்கு சோதியிலிருந்து செல்வத்தைப் பொழியவும். நீ மகத்தான செல்வங்களுக்கு முன்னோடியாயிருக்கிறாய்.

30. சூரியனுடைய தினங்களின் ரசிமிகளைப் போல் ஸோமனுடைய தாரைகளும் பொழியப்படுகின்றன. அறிஞனான அரசன் – ஸோமன் – தன்னுடைய நண்பனைக் கைவிடாமலிருக்கிறான். தந்தையின் விருப்பங்களைப் பின்பற்றும் புதல்வனைப் போலுள்ள இந்த சனத்துக்குப் பாலனத்தை அளிக்கவும். 8587

### பராசர சாக்தியன்

31. நீ கம்பளப் பவித்திரத்தின் வழியாய் சுத்தப்பட்டு செல்லுங்கால் உன்னுடைய மதப்படுத்தும் தாரைகள் பிரேரிதமாகின்றன. பவமானனே! பசுக்களின் தாரகமான பாலுக்கு நீ பெருகுகிறாய். நீ பிறந்தவுடன், உன் காந்திகளால் சூரியனை நிரப்புகிறாய்.

32. ருதத்தின் வழியிலே ஸோமன் முழங்குகிறான் ஒளிமயமான நீ, அமுதத்தின் இடத்திலே பிரகாசிக்கிறாய். கவிகளின் பாக்களோடு குரலை எழுப்புபவனும், மதரஸமுள்ளவனுமான நீ, இந்திரனுக்காகப் பெருகுகிறாய்.

33. சோதியில் தோன்றியவனும் ஸுபர்ணனுமான நீ, யக்ஞத்திலே உன் தூய செயலால் உன்னுடைய தாரைகளைப் பொழிந்து கொண்டு நீ சோதியிலிருந்து கீழே பார்க்கிறாய். இந்துவே! நீ ஸோமனின் உறைக்கலமான கலசத்தினுள் நிறையவும். நீ முழங்கிக் கொண்டு சூரிய ரசிமிகளை அணுகவும்.

34. ஏந்துபவன் மூன்று மொழிகளைக் கூறுகிறான். அவன் ருதத்தைத் தாங்கும் பிரம்மத்தின் மனத்தைப் புலப்

படுத்துகிறான். பசுக்கள் கறக்கப்பட முழங்கிக்கொண்டு கோபதியினிடம் வருகின்றன. துதிப்பவர்கள் ஆர்வத்தோடு ஸோமனிடம் செல்லுகிறார்கள்.

35. பசுக்கள் ஸோமனை விரும்புகின்றன. அறிஞர்கள் அவனை அறிவோடும், புலனோடும் ஆய்கிறார்கள். பிழியப்பட்ட ஸோமன் சுத்தமாகிறான். அவன் பாலோடு சேர்க்கப்படுகிறான். எங்களுடைய திருஷ்டுபு மந்திரங்கள் ஸோமனோடு சேர்க்கின்றன. 8592

36. ஸோமனே! நாங்கள் உன்னை இங்ஙனம் பாத்திரங்களிலே பொழியுங்கால், நீ சுத்தமாகுங்கால் எங்கள் சுவஸ்திக்காகப் பெருகவும். மகத்தான முழக்கத்தோடு இந்திரனுள் செல்லவும். எங்கள் துதியை ஊக்கப்படுத்தவும். எங்களுக்கு மிக்க அறிவைப் பிறப்பிக்கவும்.

37. பொருந்துபவர்களும், யக்ஞத் தலைவர்களும். பரஸ்பரம் முந்துபவர்களும், மங்களக் கைகளுள்ளவர்களுமான அத்வர்யுக்களால் பற்றப்படுபவனும், சத்தியமான மொழிகளை அறிபவனும், விழித்திருப்பவனுமான ஸோமன் சுத்தமாகி பாண்டங்களிலே அமருகிறான்.

38. சுத்தனான ஸோமன் சூரியனை அணுகும் வருடத்தைப்போல் இந்திரனை அணுகுகிறான். அவன் தன் காந்தியால் சோதியையும், புவியையும் நிரப்புகிறான். அவன் தன்னொளியால் இருளைத் திறக்கிறான். எங்களுடைய பாலனத்துக்குப் பிரியமான தாரைகளுள்ள பிரியனான ஸோமன் எங்களுக்குச் செல்வத்தை உழைப்பவனுக்கு ஊதியத்தைப் போல் அளிப்பானாக.

39. செழிப்பவனும், செழிப்பிப்பவனும், சுத்தப்படுபவனும், சொரிபவனுமான ஸோமன், தன் காந்தியால் எங்களைப் பாலிப்பானாக. எங்களுடைய அனைத்தையுமறியும் பூர்வ பிதாக்கள் ஸோமனால் திருடப்பட்ட பசுக்களைச் சுவடுகளால் பின்பற்றி மலையிலிருந்து மீட்டார்கள்.



40. கடலும் அரசனுமான ஸோமன், பரந்துள்ளதும் சலத்தைத் தாங்குவதுமான வானிலே பிரசைகளைப் பிறப்பித்து எங்கும் ஆக்கிரமிக்கிறான். வர்ஷிப்பவனும், பிரகாசிப்பவனுமான ஸோமன் பிழியப்பட்டவுடன் உயர்ந்த இடத்திலுள்ள கம்பளப் பவித்திரத்திலே பெருகுகிறான். 8597

41. மகானான ஸோமன் இந்த மகத்தான செயலை நடத்தினான். சலங்களின் கருவான அவன் தேவர்களை வரித்தான் – விரும்பினான் - புட்டிப் படுத்தினான். பவமான ஸோமன் இந்திரனுக்குப் பலத்தை அளித்தான். இந்து சூரியனிலே சோதியைப் பிறப்பித்தான்.

42. ஸோமனே! எங்களுடைய உணவுக்கும் செல்வத்துக்கும் வாயுவை மதப்படுத்தவும். நீ சுத்தமானவுடன் மித்திரனையும் வருணனையும் மதப்படுத்தவும். மருத்துக்களின் படையை மதப்படுத்தவும். தேவனான ஸோமனே! சோதியையும், புவியையும் மதப்படுத்தவும்.

43. நேராகச் செல்பவனும் நேர்மையற்றுச் செல்பவனை அழிப்பவனுமான நீ, நோயையும், பகைவர்களையும் நீக்கிப் பெருகவும். உன்னுடைய ரஸத்தை நீ பசுக்களின் பாலோடு சேர்த்து, பாத்திரங்களுக்குப் பெருக்குகிறாய். நீ இந்திரனுடைய நண்பன். நாங்கள் உன்னுடைய நண்பர்கள்.

44. ஸோமனே! இனிய ரஸத்தைச் சொரியும் செல்வச் சுனையைப் பொழியவும். எங்களுக்கு வீரப் புதல்வர்களையும், செல்வங்களையும் பொழியவும். நீ சுத்தமானவுடன் இந்திரனுக்கு இனிமையாய்ப் பெருகவும். எங்களுக்குச் சமுத்திரத்திலிருந்து செல்வங்களைப் பொழியவும்.

### குத்ஸ ஆங்கிரஸன்

45. பிழியப்பட்ட ஸோமன் தாரையோடு குதிரையைப் போல் சென்று இறக்கத்தில் பாயும் நதியைப் போல் வலியன் பெருகுகிறான். அவன் சுத்தமாகி மரக்கலசத்திலே இறங்குகிறான். இந்து, பாலோடும் தயிரோடும் சேர்கிறான். சலங்களோடும் சேர்கிறான். 8602

46. அனைத்தையுங் காண்பவனும், தேரில் இருப்
பவனும், ஸத்தியமான பலமுள்ளவனும், தேவர்களை விரும்
பும் வழிபடுபவர்களுடைய விருப்பத்தைப் போல் செலுத்தப்
பட்டவனும், அறிஞனும், துரிதனுமான ஸோமன்
இந்திரனே! விருப்பமுள்ள உனக்குப் பாத்திரங்களிலே
நிறைகிறான்.

47. பழைய உணவோடு பெருகுபவனும், பெண்ணான
புவியின் தேகங்களைப் போர்த்துபவனும் முப்பாலனங்
களுள்ள யக்ஞசதனத்தை மூடுபவனும், சலங்களில் இருப்
பவனுமான ஸோமன், ஹோதாவைப் போல் முழங்கிக்
கொண்டு யக்ஞங்களுக்குச் செல்லுகிறான்.

48. தேவனே! ஸோமனே! சலங்களில் மிக்க இனிய
னாயிருப்பவனும், மது நிறைந்தவனும், யக்ஞத்திலே அளிக்
கப்பட்டவனும், அனைவரையும் பிரேரிப்பவனும், சத்திய
மான துதிக்கு இலக்காயிருப்பவனும், தேரில் ஏரியுள்ளவனு
மான நீ, பாண்டங்களுக்குள் பெருகவும்.

49. நீ போற்றப்பட்டு வாயுவினிடம் அவன் பருகு
வதற்குப் பாயவும். நீ சுத்தப்பட்டு மித்திராவருணர்களுக்
குப் பாயவும். நீ தலைவர்களும், மனத்தைப் போல் வேக
முள்ளவர்களும், தேரில் ஏறியிருப்பவர்களுமான அசுவினி
களுக்குப் பாயவும். வர்ஷிப்பவனும் வச்சிரமேந்துபவனு
மான இந்திரனுக்குப் பாயவும்.

50. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் எங்களுக்கு
அழகிய ஆடைகளையும், சுலபமாய்க் கறக்கும் பசுக்களையும்
அளிக்கவும். நாங்கள் போஷிக்கப்பட்ட திருப்தியளிக்கும்
பொன்னையும் அளிக்கவும். தேவனான ஸோமனே! தேர்
களுக்குத் தகுந்த குதிரைகளையுமளிக்கவும். 8607

51. ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் எங்களுக்கு
சோதியில் தோன்றும் செல்வங்களையும், புவியில் தோன்றும்
செல்வங்களையும் பொழியவும். எங்களுக்குச் செல்வங்களைச்
சம்பாதிக்கும் ஆற்றலையுமளிக்கவும். ஜமதக்கினியைப்
போல் ரிஷித்தன்மையையும் எங்களுக்கு அளிக்கவும்.



52. இந்த சுத்தப்பட்ட தாரையோடு எங்களுக்கு
அந்தச் செல்வங்களைப் பொழியவும். இந்துவே! கபிலமான
சலத்துக்குச் செல்லவும். சிகப்பாயும், வாயுவைப் போல்
துரிதனாயும், அறிவு நிறைந்தவனுமான இந்திரன், இந்த
யக்ஞத்திலே, ஸோமனை அணுகும் எனக்குப் புதல்வனை
அளிப்பானாக.

53. புகழுக்குரிய உன்னுடைய புகழான இடத்திலே நீ
இந்த சுத்தப்பட்ட தாரையோடு பெருகவும். பகைவர்களை
அழிப்பவனான ஸோமன், நாங்கள் ஜயமடைய
எங்களுக்கு அறுபதினாயிரம் செல்வங்களைப் பழுத்த பழ
முள்ள மரத்தைக் குலுக்கும் ஒருவனைப் போல் குலுக்கு
கிறான்.

54. ஸோமனுடைய மகத்தான இந்த இரு செயல்கள்
சரங்களின் மழையும், பகைவர்களின் தோல்வியும்,
சுகத்தைத் தருபவையாயிருக்கின்றன. அவை குதிரைப்
போரிலும், முட்டிச் சண்டையிலும், பகைவர்களை அழிப்
பவையாயிருக்கின்றன. அவன் பகைவர்களைச் சயனப்
படுத்தினான். களத்திலே ஓடச் செய்தான். ஸோமனே!
நீ பகைவர்களையும் போற்றாதவர்களையும் விலக்கவும்.

55. ஸோமனே! நீ பரத்தப்பட்ட மூன்று பவித்திரங்
களுக்குப் போகிறாய். நீ சுத்தப்படுங்கால் ஒவ்வொன்றின்
வழியாயும் விரைகிறாய். நீ பகன். நீ தானங்களை அழிப்
பவன் இந்துவே! நீ செல்வனை முந்தும் செல்வன். 8612

56. விசுவத்தை அறிபவனும், விசுவ புவனத்தின்
அரசனும், அறிஞனுமான இந்த ஸோமன் பெருகுகிறான்.
யக்ஞங்களிலே திவலைகளைப் பொழிந்துகொண்டு இந்து
ஆட்டு உரோமப் பவித்திரத்தின் வழியாய்ப் பூரணமாய்
வழிந்தோடுகிறான்.

57. தடைபடாதவர்களும், மகான்களுமான தேவர்கள்
ஸோம ரஸத்தை ருசிக்கிறார்கள். அவர்கள் அவனுடைய
இடத்திலே செல்வத்துக்காகப் பாடும் கவிகளைப் போல்

பாடுகிருர்கள். தீரர்கள் தங்கள் பத்து விரல்களால் ஸோமனைப் பிரேரிக்கிருர்கள். அவர்கள் அவனுடைய தேகத்தை சலங்களின் ரஸத்தால் எழில்படுத்துகிருர்கள்.

58. ஸோமனே! நாங்கள் சுத்தமாகும் உன்னேடு போரிலே மிகுந்த செல்வத்தை ஜயிப்போமாக. மித்திரனும், வருணனும், அதிதியும், ஸிந்துவும், சோதியும், புவியும் எங்களைச் செல்வப்படுத்துவார்களாக. 8615

## 98. பவமான ஸோமன்

### 821. அம்பரீஷவார்ஷாகிரன் அல்லது ரிஜிஸ்வர் பாரத்வாஜன்

1. இந்துவே! பலரால் விரும்பப்படுவதும், பலரைத் தாங்குவதும், மிக்கப் புகழுள்ளதும், வலிய பகைவர்களை ஜயிப்பதும், ஆற்றலை அளிப்பதுமான செல்வத்தை எங்களிடம் செலுத்தவும்.

2. பிழியப்பட்டவுடன் ஸோமன் கம்பளப் பவித்திரத்துக்குக் கவசமணிந்து தேரில் ஏறிப்போகும் வீரனைப்போல் பாய்கிருன்.

3. பிழியப்பட்ட ஸோமரஸம் மதத்தை அளிக்கப் பவித்திரத்தின் வழியாய்ச் செல்லுகிறது. மேம்படுத்தப்பட்ட ஸோமன் தயிரையும் பாலையும் விரும்புபவனுய், காந்தியோடு வானுலகுக்குச் செல்வதுபோல் தாரையோடு யக்ஞத்துக்குப் போகிருன்.

4. தேவனுன ஸோமனே! நீ அவிகளை அளிக்கும் ஒவ்வொருவனுக்கும் செல்வத்தை அளிக்கிருய். நூறு வடிவங்களுள்ளதும், ஆயிரக்கணக்காயுமுள்ள செல்வத்தைத் தருகிருய்.

5. பகைவர்களை அழிப்பவனே! நாங்கள் உன்னுடைய சனங்களாயிருப்போமாக. நாங்கள் பலரால் விரும்பப்படும் உன்னுடைய செல்வத்தின் அருகில் மிக்க நெருங்கி



இருப்போமாக. தடைபடாத ஸோமனே! நாங்கள் சுகத்தினருகில் இருப்போமாக. 8620

6. பத்து சகோதரிகளான விரல்கள் ஸ்வயமாகவே புகழுள்ளவனும், கற்களால் பிழியப்பட்டவனும், இந்திரனுக்குப் பிரியனும், அனைவராலும் விரும்பப்படுபவனும், தாரைகள் உள்ளவனுமான ஸோமனை சலங்களால் ஸ்னனஞ் செய்விக்கின்றன.

7. அனைவராலும் விரும்பப்படுபவனும், பசுமை நிறமுள்ளவனும், பழுப்பவனும், எல்லாத் தேவர்களிடமும் மதப்படுத்தச் செல்பவனும்மான ஸோமனை, பவித்திரத்தால் சகோதரிகள் சுத்தப்படுத்துகிருர்கள்.

8. வழிபடுபவர்களுக்கு மகத்தான உணவை அளிப்பவனும், சூரியனைப்போல் அனைவராலும் விரும்பப்படுபவனுன ஸோமனுடைய பாலனத்தால் வலிமைக்குச் சாதகமாயிருக்கும் ரஸத்தைப் பருகுங்கள்.

9. மநுவின் சந்தானங்களான சோதி புவிகளே! தேவனும், கற்களின் நடுவிலிருப்பவனுமான ஸோமன் உங்கள் யக்ஞங்களில் தோற்றுவிக்கப்படுகிருன். முழங்கும் யக்ஞத்திலே அறிஞர்கள் இவனை வருத்தப்படுத்தினுர்கள்.

10. ஸோமனே! விருத்திரனைக் கொல்லும் இந்திரனுக்காக அவன் பருக நீ பொழியப்படுகிருய். தேவனுக்கு அவியை அளிக்க யக்ஞ சாலைகளில் அமர்ந்திருக்கும் வழிபடுபவனுக்கு நீ பொழியப்படுகிருய். 8625

11. மறைந்திருப்பவர்களும், அறிவிகளுமான திருடர்களை உஷையிலே விலக்கி வரும் இந்தப் பழைய ரஸங்கள் வைகறைகளிலே பவித்திரத்துக்குப் பாய்கின்றன.

12. நண்பர்களும் அறிஞர்களுமான நீங்களும், நாங்களும், முகப்பிலே பிரகாசிப்பவனும், சுகந்தமுள்ளவனும், சக்தியளிப்பவனுமான ஸோமனைப் பருகுவோமாக. நாங்கள் மனையையும் உணவையும் அடைவோமாக. 8627

## 99. பவமான ஸோமன்

### 822. இரு ரேபசூநுக்கள்–கசியப குலம்.

1. அவர்கள் பிரியனும், வீரனுமான ஸோமனுக்கு வில்லைப் பரத்துகிறார்கள். ரித்விஜர்கள் யஜிக்க விரும்பி, தேவர்களுடைய முகப்பிலே வலியனான ஸோமனுக்கு வெண்மையான பவித்திரத்தைப் பரத்துகிறார்கள்.

2. வழிபடுபவனுடைய விரல்கள் பசுமை நிறமுள்ள ரஸத்தைப் பாத்திரங்களுக்குப் பாயச் செலுத்துங்கால் ஸோமன் இரவின் கடையிலே–உஷையிலே–உணவுகளை நோக்கிப் பாய்கிறான்.

3. பூர்வத்திலும், இப்பொழுதும், அணுகிலாகும் வழிபடுபவர்களால் தங்கள் வாய்களில் ஏந்தப்பட்டதும், மந்தப்படுத்துவதும், இந்திரனுடைய பானத்துக்குத் தகுந்ததுமான ஸோமரஸத்தை நாங்கள் சுத்தப்படுத்துகிறோம்.

4. அவர்கள் பழைய காதையால் சுத்தமாகும் ஸோமனைப் போற்றுகிறார்கள். விரல்கள் தங்கள் திறத்தை இயக்கி, தேவர்களுக்கு அவியையளிக்கத் திறமையுள்ளவையாகின்றன.

5. அவர்கள் சலத்தால் தெளிக்கப்பட்டவனும், அனைத்தையும் தாங்குபவையுமான ஸோமனை, கம்பளப் பவித்திரத்தில் சுத்தப்படுத்துகிறார்கள். அறிஞர்கள் அந்த ஸோமனை, தேவர்களுக்கு முன்னதாகவே அறிவிக்கத் தூதனைப்போல் கற்பிக்கிறார்கள். 8632

6. மிக்க மதமளிக்கும் ஸோமன் சுத்தமாகி பாத்திரங்களிலே இறங்குகிறான். பாண்டங்களிலே, பசுக்களிலே ரேதஸைப்போல், விருஷபத்தைப்போல், ரேதஸைப் பொழியும் யக்ஞபாலகன் போற்றப்படுகிறான்.

7. தேவர்களுக்காகப் பிழியப்பட்ட தேவனான ஸோமன் உத்தம செயல்களுள்ள அறிஞர்களால் சுத்தஞ் செய்யப்படுகிறான். இந்த சலங்களின் நடுவே அவன் செல்வங்களை அளிப்பவன் என அறியப்பட்டவுடன், அவன் மகத்தான சலங்களில் பாய்கிறான்.



8. இந்துவே! நீ பிழியப்பட்டு அறிஞர்களால் சேர்க்கப்படுங்கால் நீ பவித்திரத்துக்குச் செலுத்தப்படுகிறாய். மிக்க மதமளிக்கும் நீ, இந்திரனுக்காகப் பாண்டங்களில் இறங்குகிறாய். 8635

## 100. பவமான ஸோமன்

### 823. இரு ரேபசூனுக்கள்–கசியப குலம்

1. சிவனின் துவக்கத்திலே புதிய கன்றைச் சுவைக்கும் தாய்ப் பசுக்களைப்போல் மாசற்ற சலங்கள் இந்திரனுக்குப் பிரியமாயிருக்கும் ஸோமனிடம் செல்லுகின்றன.

2. இந்துவே ! ஸோமனே ! நீ சுத்தமாகுங்கால் இரு உலகங்களின் செல்வங்களை எங்களுக்கு அளிக்கவும். நீ அவியளிப்பவனுடைய மனையிலே எல்லாச் செல்வங்களையும் செழிப்பிக்கிறாய்.

3. மழையைப் பிரேரிக்கும் மேகத்தைப்போல் உன்னுடைய மனத்தைப்போல் வேகமாயுள்ள தாரையைப் பிரேரிக்கவும். நீ புவியிலும் சோதியிலும் தோன்றும் செல்வங்களைப் புட்டிப்படுத்துகிறாய்.

4. நீ பிழியப்படுங்கால் உன்னுடைய துரிதமாய் ஓடுவதும், உதாரத் தன்மையுமுள்ள தாரை, ஆட்டு உரோமப் பவித்திரத்தின் வழியாய் வெற்றியுள்ள வீரனுடைய குதிரையைப்போல் பாய்கிறது.

5. கவியே ! ஸோமனே ! இந்திரனும், மித்திரனும், வருணனும், பருகப் பிழியப்பட்ட நீ, எங்களுடைய அறிவுக்கும், ஆற்றலுக்கும் தாரையோடு பெருகவும். 8640

6. ஸோமனே ! மிக்க உணவைத் தரும் நீ பிழியப்பட்டவுடன் பவித்திரத்துக்குத் தாரையோடு பெருகவும். ஸோமனே ! இந்திரனுக்கும், விஷ்ணுவுக்கும், தேவர்களுக்கும் மிக்க இனிப்பாயிருக்கும் நீ பெருகவும்.

7. பவமானனே! மாசற்ற தாய்மார்களான சலங்கள் யக்ஞத்திலே பவித்திரத்தின்மீது பசுமை நிறமுள்ள உன்னைப் புதிய கன்றைச் சுவைக்கும் தாய்ப் பசுக்களைப்போல் சுவைக்கின்றன.

8. பவமானவனே! நீ பரந்த வானிலே பலவித அழகிய ரசிமிகளோடு பரவுகிறாய். நீ துரிதமாகி அளிப்பவனுடைய மனையிலே அரக்கர்களையெல்லாம் விலக்குகிறாய்.

9. பலவித செயல்களுள்ள ஸோமனே! நீ சோதியையும், புவியையும் தாங்குகிறாய். பவமானனே! மகத்வமுள்ள நீ கவசத்தை அணிந்து கொள்கிறாய். 8644

## 101. பவமான ஸோமன்

### 820. பல ரிஷிகள்

அந்திகுசியாவாசுவனுடைய புதல்வன்

1. நண்பர்களே! உங்கள் முன்னே வெற்றியை வைத்தவனான ஸோமனுடைய பிழியப்பட்டதும், மதப்படுத்துவதுமான ரஸத்தைப் பருக நீண்ட நாக்குள்ள நாயை அழிக்கவும்.

2. பிழியப்பட்டு சுத்தப்படுத்தும் தாரையோடு இங்கு பெருகி வருபவனான இந்து வேகமாயுள்ள குதிரையைப் போலிருக்கிறான்.

3. எதிர்ப்பற்றவனும், துதிக்கத் தகுந்தவனுமான ஸோமனை மனிதர்கள் விசுவமறியும் ஞானத்தோடு கற்களால் பிழிகிறார்கள்.

யயாதி நாஹுஷன்

4. பிழியப்பட்டு சுத்தப்பட்டவையான இனிமையான மதப்படுத்துபவையுமான ஸோம ரஸங்கள் இந்திரனுக்குப் பாய்கின்றன. மதப்படுத்தும் ரஸங்களான நீங்கள் தேவர்களிடஞ் செல்லுங்கள்.



5. துதிப்பவர்கள் கூறுகிறார்கள்: "இந்து இந்திரனுக்காகப் பாய்கிறான்." வாசஸ்பதியும், பலத்தால் விசுவத்தின் தலைவனுமான ஸோமன் நம்முடைய வணக்கத்தை விரும்புகிறான். 8649

6. ஆயிரம் தாரைகளுள்ள கடலும், துதியை எழுப்புபவனும், செல்வங்களின் தலைவனும், இந்திரனின் நண்பனுமான ஸோமன் தினந்தோறும் பாய்கிறான்.

நஹுஷன்மானவன்

7. அவர்கள் அவனை சுத்தப்படுத்துங்கால் அவன் பூஷாவாகவும், செல்வமாகவும், பகனாகவும் இந்த ஸோமன் வருகிறான். விசுவப் பொருள்களின் தலைவனான அவன், சோதியையும், புவியையும் ஒளிப்படுத்தினான்.

8. பிரியமானவையும், பரஸ்பரம் முந்துபவையுமான பசுக்கள் மதப்படுத்த ஸோமனைப் போற்றுகின்றன. பிரகாசமுள்ளவையும், சுத்தப்பட்டவையுமான ஸோமரஸங்கள் பாய தாமே வழிகளைச் செய்து கொள்ளுகின்றன.

9. பவமான ஸோமனே! பஞ்ச சனங்களுக்குப் பணி செய்வதும், தாங்கள் செல்வத்தைப் பெற காரணமாயிருப்பதுமான போற்றத் தகுந்த சுத்தப்பட்ட ரஸத்தை எங்களுக்கு அளிக்கவும்.

மநு ஸாம்வரணன்

10. தேவர்களிடம் நட்புற்றவையும், பிழியப்பட்டவையும், பாபமற்றவையும், தியானிப்பவையும், அனைத்தையும் அறிபவையும், பிரகாசிப்பவையும், வழியை அறிபவையுமான ஸோமரஸங்கள் எங்களுக்குப் பாய்கின்றன. 8654

11. கற்களால் பிழியப்பட்டவையும், பசுச் சருமத்தின் மீது அறியப்படுபவையும், செல்வத்தைப் பற்றுபவையுமான ஸோமரஸங்கள் எங்களுக்கு உணவை எல்லாப் பக்கங்களிலிருந்தும் அளிக்கின்றன

12. சுத்தப்பட்டவையும், அறிவுள்ளவையும், தயிரோடு கலக்கப்பட்டவையும், துரிதமானவையும், சலத்தில்

நிலையாயிருப்பவையுமான இந்த ஸோமரஸங்கள் சூரியர்களைப் போல் பிரகாசிக்கின்றன.

வாச்சின் மகனுன பிரசாபதி அல்லது விசுவாமித்திரனின் மகன்

13. பிழியப்படும் ஸோமனின் கோஷத்தை எந்த மனிதனும் கேட்காமலிருப்பானுக. மக்களை விலக்கிய ப்ருகுக்களைப் போல் யக்ஞங்களைச் செய்யாத நாயை நீக்குங்கள்.

14. தேவர்களின் பந்துவான ஸோமன் போர்த்தப்படும் பவித்திரத்தால் பாலிக்கும் பெற்ரேர்களின் கைகளிலிருக்கும் குழந்தையைப் போல் போர்த்தப்பட்டிருக்கிறன். அவன் தன் இடத்தில் அமர காதலியினிடஞ் செல்லும் காதலனைப் போலும், மனைவியினிடம் செல்லும் கணவனைப் போலும் துரிதமாகிறன்.

15. வீரனும், பசுமை நிறமுள்ளவனும், வலிமைக்கு ஸாதகனும், சோதியையும் புவியையும் தாங்குபவனுமான ஸோமன், தன் மனையில் அமரும் தலைவனைப் போல் கலசத்திலே அமரப் பவித்திரத்திலே போர்த்தப்பட்டிருக்கிறன்.

16. ஆட்டின் உரோமங்களால் சுத்தமாகி ஸோமன் பெருகுகிறன். வர்ஷிப்பவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் பசு சர்மத்தின் மீது முழங்கிக் கொண்டு இந்திரனுடைய நன்கு செய்யப்பட்ட இடத்துக்குச் செல்லுகிறன். 8660

## 102. பவமான ஸோமன்

### 825. திருத ஆப்தியன்

1. யக்ஞங்களை நடத்துபவனும் சலங்களின் புதல்வனுமான ஸோமன் யக்ஞத்தின் ஒளியைப் பிரேரித்து எல்லாப் பிரியமான பொருள்களிலும் பரவுகிறன். இரு உலகங்களிலும் நிலைக்கிறன்.

2. திருதனுடைய யக்ஞத்திலே இருக்கும் கற்களின் இரகசியமான இடத்திலே ஸோமன் சேர்ந்தவுடன் அறிஞர்கள் யக்ஞத்தைத் தாங்கும் ஏழு சந்தங்களால் பிரியன் ஸோமனைப் பாடுகிறர்கள்.



3. ஸோமனே! நீ உன்னுடைய தாரையால் திருதனுடைய மூன்று யக்ஞங்களைத் தாங்கவும். ஸாமங்களைச் செவியுற செல்வமளிக்கும் இந்திரனை வருவிக்கவும். இந்த இந்திரனைப் போற்றும் அறிஞன் பாக்களை அளக்கிறன்.

4. இந்த நிலையான ஸோமன் செல்வங்களை அறிந்து கொள்ள வழிபடுபவர்களின் செல்வத்துக்காக யக்ஞத்தைத் தோற்றுவிப்பவனுமான ஸோமன் பிறந்தவுடன் ஏழு தாய்மார்கள்—நதிகள்—அவனுக்குக் கற்பிக்கிறர்கள்.

5. ஸோமனுடைய விரதத்திலே துரோகமற்ற தேவர்கள் எல்லாம் ஒருமையுடனுகிறர்கள். தீரர்கள் இன்பமாகுங்கால் அவர்கள் விரும்பத் தகுந்தவர்களாயிருக்கிறர்கள். 8665

6. ருதத்தைச் செழிப்பிப்பவர்கள் - சலங்கள் - எந்த அழகுள்ளதும், அறிவுள்ளதும், போற்றத் தகுந்ததும், பலரால் விரும்பப்படுவதுமான எந்த ஸோம கருவை யக்ஞத்திலே காணப்பட பிறப்பித்தார்களோ, அதைத் தேவர்கள் போற்றுகிறர்கள்.

7. யக்ஞத்தை நடத்தும் அறிஞர்கள் அவனைக் கிரமமாய் சலங்களோடு சேர்க்குங்கால் அவன் தானுகவே ருதத்தின் பெரியார்களும், இணைந்திருப்பவர்களும், பெற்ரேர்களுமான சோதி புவியார்களிடம் செல்லுகிறன்.

8. ஸோமனே! ருதத்திலே உன்னுடைய யக்ஞத்தின் ஒளியான ரஸத்தைப் பிரேரித்து உன்னுடைய செயலால் ஒளிக்கதிர்களால் வானிலிருந்து கனத்த இருளை நீக்கவும். 8668

## 103. பவமான ஸோமன்

### 826. துவித ஆப்தியன்

1. யக்ஞத்தைத் தோற்றுவித்தவனும், சுத்தப்பட்டவனும், துதிகளால் இன்பமடைந்தவனுமான ஸோமனுக்கு, உழைப்பவனுக்கு ஊதியமளிக்கும் மனிதர்களைப் போல் துதியை முழங்கவும்.

2. ஸோமன் பாலோடும் தயிரோடும் கலக்கப்பட்டு கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ப் பாய்கிறான். பசுமை நிறமுள்ள ஸோமன் சுத்தப்பட்டு மூன்று இடங்களைப் பற்றுகிறான்.

3. ஸோமன் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்த் தன் இரஸத்தைத் தேன் சொரியும் கலசத்துக்குச் செலுத்துகிறான். ரிஷிகளின் ஏழு சந்தங்கள் ஸோமனைப் பாடுகின்றன.

4. துதிகளின் தலைவனும், விசுவேதேவனும், தடைபடாதவனும், பசுமை நிறமுள்ளவனுமான ஸோமன் சுத்தமாகி பாத்திரங்களில் நிறைகிறான்.

5. ஸோமனே! அறிஞர்களால் சுத்தப்படும் அறிஞனும், அமுதனுமான நீ, இந்திரனோடு ஒரே தேரிலே ஏறி தேவப் படைகளிடம் செல்லவும்.

6. குதிரையைப் போல் போரை விரும்புபவனும் தேவனும், தேவர்களுக்காகப் பிழியப்பட்டவனுமான ஸோமன், சுத்தமாகி பாத்திரங்களில் நிறைந்து பரவுகிறான். 8674

## 104. பவமான ஸோமன்

### 827 கண்வனுடைய புதல்வர்களான பர்வதனும் நாரதனும் அல்லது கசியபனுடைய இரு புதல்விகளான சிகண்டினகள் - அப்சரஸிகள்

1. நண்பர்களே! அமருங்கள். சுத்தப்பட்ட ஸோமனைப் பாடுங்கள். நீங்கள் அவனை யக்ஞங்களால் குழந்தையை அழகுபடுத்தும் பெற்றோர்களைப்போல் எழில்படுத்த அலங்கரியுங்கள்.



2. தேவர்களைப் பாலிப்பவனும், மதப்படுத்துபவனும், இருவிதப் பலங்களிருப்பவனும், மனையின் ஆதரவாயிருப்பவனுமான ஸோமனை, தாய்மார்களான சலங்களோடு தாய்ப் பசுவோடு கன்றைப்போல் சேருங்கள்.

3. பலத்துக்காகவும், பானத்துக்காகவும், மித்திரனையும், வருணனையும் சுகப்படுத்தவும். வலிமைக்குச் சாதகமாயிருக்கும் ஸோமனை சுத்தப்படுத்துங்கள்.

4. ஸோமனே! செல்வத்தை அளிப்பவனான உன்னை, துதிகள் எங்களுக்குப் பொருளை அளிக்கப் போற்றுகின்றன. நாங்கள் பசுக்களின் பாலாலும் தயிராலும் உன் வடிவத்தைப் போர்த்துகிறோம்.

5. எங்களை மதப்படுத்தத் தலைவனாயிருப்பவனே! இந்துவே! நீ ஒளி வடிவமாயிருக்கிறாய். நண்பனுக்கு நண்பனைப் போல் வழியைப் புலப்படுத்துபவனாயிருக்கவும்.

6. உன்னுடைய பழைய நட்பை எங்களுக்குப் புலப்படுத்தவும். அதேவனும், பட்சகனும், இரண்டகனுமான அரக்கனை விலக்கவும். பாவத்தை நீக்கவும். 8680

## 105. பவமான ஸோமன்

### 828. பர்வதனும் நாரதனும் – கண்வ வம்சம்

1. நண்பர்களே! சுத்தப்பட்ட ஸோமனைத் தேவர்களின் மதத்துக்காகப் பாடுங்கள். அவனை யக்ஞங்களாலும், துதிகளாலும், குழந்தையை ஆபரணங்களால் இனிமைப்படுத்தும் மனிதர்களைப் போல் இனிமைப்படுத்துங்கள்.

2. தேவர்களைப் பாலிப்பவனும், மதமளிப்பவனும், துதிகளால் துலங்குபவனும், பிரேரிக்கப்படுபவனுமான

ஸோமன், தாயால் கன்றைப் போல் சலங்களால் பாங்கா கிறான்.

3. இந்த ஸோமன் பலத்துக்கு ஸாதகனாகிறான். அவன் ஊக்கத்துக்காகவும், தேவர்களுடைய பானத்துக் காகவும், தோன்றுகிறான். பிழியப்பட்ட ஸோமன் தேவர்களுக்கு மிக்க இனியனாயிருக்கிறான்.

4. வலியனான ஸோமனே! பிழியப்பட்ட நீ, எங் களுக்குப் பசுக்களும் குதிரைகளும் நிறைந்த செல் வத்தைப் பொழியவும். நான் சுத்தமான ரஸத்தைப் பாலோடும் தயிரோடும் சேர்க்கிறேன்.

5. எங்கள் பழுப்புப் பசுக்களின் தலைவனே! மிக்கப் பிரகாசிக்கும் வடிவமுள்ளவனும் அறிஞர்களிடம் பிரிய னாயிருப்பவனுமான நீ, நண்பனுக்கு ஒளியைத் தரும் நண்பனைப் போல் எங்களுக்கு ஒளியைத் தருபவனாயிருக் கவும்.

6. உன்னுடைய பழைய நட்பைப் புலப்படுத்தவும். அதேவனும் பட்சகனுமான அரக்கனை விலக்கவும். இந்துவே! வெற்றியுள்ள நீ எங்களை வருத்தப்படுத்து பவர்களை ஜயிக்கவும். இரண்டகனை நீக்கவும். 8686

## 106. பவமான ஸோமன்

### 829. பல ரிஷிகள் – சக்ஷுஷனின் புதல்வன் – அக்கினி

1. துரிதமாய்ப் பிறப்பிக்கப்பட்டவையும், அனைத் தையும் அறிபவையும், பிழியப்பட்டவையும், பசுமை நிறமுள்ளவையுமான இந்த ஸோமரஸங்கள் வர்ஷிப் பவனான இந்திரனிடம் செல்க.

2. பிழியப்பட்டவனும், போருக்காகப் போற்றத் தகுந்தவனுமான இந்த ஸோமன் இந்திரனுக்காக சுத்தப் படுகிறான். எங்ஙனம் இந்திரன் ஜயிப்பவன் என அறி யப்படுகிறானோ அங்ஙனமே அவனை ஜயிப்பவன் என ஸோமன் அறிகிறான்.



3. இந்திரன் ஸோமத்திலே அனைவராலும் போற்றத் தகுந்த வில்லைப் பற்றுகிறான். அவன் சலங்களிலே விருத் திரனை ஜயித்து வர்ஷிக்கும் வச்சிராயுதத்தை ஏந்து வானாக.

#### மநுவின் புதல்வனான சக்ஷுஷன்

4. ஸோமனே! விழித்திருக்கும் நீ பெருகவும். நீ இந்திரனுக்காகப் பாத்திரங்களிலே நிறையவும். பிர காசிப்பதும், அனைத்தையுமளிப்பதும், ஜயிப்பதுமான ஆற்றலை எங்களுக்களிக்கவும்.

5. அனைவராலும் பார்க்கத் தகுந்தவனும், பல வழி களுள்ளவனும், வழியைப் புலப்படுத்துபவனும், அனைத்தையுங் காண்பவனுமான நீ, வர்ஷிப்பதும், மதப் படுத்துவதுமான இரஸத்தை இந்திரனுக்காகப் பெருக்கவும். 869|

6. எங்களுக்கு வழிகளைப் புலப்படுத்தும் உத்த மனும், தேவர்களுக்கு மிக்க இனிய பானமாயிருப்பவனு மான நீ, முழக்கத்தோடு ஆயிரம் வழிகளால் எங்களிடம் வா.

#### அப்ஸுவின் மகனான மநு

7. ஸோமனே! நீ தேவர்களுடைய பானத்துக் காக உன்னுடைய பலத்தோடும் தாரைகளோடும் பெருக வும். ஸோமனே! இனிய ரஸமுள்ள நீ எங்களுடைய கலசத்திலே நிறையவும்.

8. உன்னுடைய சலத்துக்குச் செல்லும் துரித ரஸங்கள் இந்திரனை மதப்படுத்தப் போற்றுகின்றன. தேவர்கள் சுகப்படுத்துபவனான உன்னை அமுதத்வத்துக் குப் பருகினார்கள்.

9. பிழியப்பட்டவர்களும், சுத்தப்பட்டவர்களும், வானை மழையால் நிரப்புபவர்களும், புவியிலே சலத்தைச் சொரிபவர்களும், சோதியைக் காண்பவர் களும், பிரகாசிப்பவர்களுமான ஸோம ரஸங்களாம் நீங்கள், எங்களிடம் செல்வத்தைச் செலுத்துங்கள்.

### சக்ஷுஷனின் புதல்வன் அக்கினி

10 சுத்தப்படுங்கால் துதிக்குரலுக்கு முன்னதாவே முழங்கும் ஸோமன் சுத்தப்படுவதால் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்த் தாரையோடு பெருகுகிறான். 8696

11. வலியனும் சலத்தில் கிரீடிப்பவனும், பவித்திரத்தின் வழியாய்ச் செல்லும் ஸோமனை அவர்கள் தங்கள் விரல்களால் பிரேரிக்கிறார்கள். பாக்கள் மூன்று இடங்களில் இருக்கும் அவனைப் போற்றுகின்றன.

12. வழிபடுபவனுக்கு உணவை அளிக்க விரும்பும் அவன் போரிலே குதிரையைப் போல் கலசங்களுக்குச் செலுத்தப்படுகிறான். சுத்தமான ஸோமன் சப்தித்துக் கொண்டு பாத்திரங்களுக்குப் பெருகுகிறான்.

13. இன்பமான பசுமை நிறமுள்ள ரஸம் வேகத்தோடு குடிலமாயுள்ள கலசங்களுள் பாய்கிறான். அவன் துதிப்பவர்களுக்கு உணவையும் வீரப் புதல்வர்களையுமளிக்கிறான்.

14. தேவர்களை விரும்பும் நீ, அந்தத் தாரையோடு பெருகவும். உன்னுடைய மதமளிக்கும் தாரைகள் பிரேரிக்கப்படுகின்றன. நீ முழக்கத்துடன் பவித்திரத்தின் வழியாய் எங்கும் பாய்கிறாய். 8700

## 107. பவமான ஸோமன்

**830. ஏழு ரிஷிகள் – பரத்வாஜ பார்ஹஸ்பத்தியன், கசியபமாரீசன், கோதம ராஹூகணன், பௌமோ அத்திரி, விசுவாமித்திர காதினன், ஜமதக்கினி பார்கவன், மைத்திராவருணி வசிஷ்டன்.**

1. தேவர்களுக்கு உத்தம அவியாயிருப்பதும், மானிடனுக்கு நலந்தருவதும், வானின் நடுவே செல்வதும், பிழியப்பட்டதுமான ஸோமரஸத்தை இங்கிருந்து தெளியுங்கள். அறிஞன் கற்களால் ஸோமத்தைப் பிழிந்தான்.



2. ஸோமனே! எதிர்ப்பற்றவனும், மிக்க சுகந்தமுள்ளவனும், பவித்திரத்தால் சுத்தப்படுபவனுமான நீ, எங்கும் பெருகவும். நாங்கள் பிழியப்பட்டவனும், சலங்களில் உத்தமனுமான உன்னை உணவோடும், பசுக்களின் பாலோடும், தயிரோடும் போற்றுகிறோம்.

3. தேவர்களை மதப்படுத்துபவனும், கர்த்தாவும், அனைத்தையும் காண்பவனும், துலங்குபவனும், பிழியப்பட்டவனுமான ஸோமன் அனைவரும் காணப் பெருகுகிறான்.

4. ஸோமனே! சுத்தமாகும் நீ, சலங்களை அணிந்து தாரையோடு பெருகுகிறாய். தேவனும், சுனையும், பொன்மூலனும், செல்வத்தைத் தருபவனுமான நீ, யக்ஞத்தின் இடத்திலே அமருகிறாய்.

5. மதப்படுத்துவதும், பிரியமுள்ளதும், சோதியதுமான ஆபீனத்தை வானின் ஸதஸிலே ஸோமன் கறப்பவனாய் அமருகிறான். உணவையளிப்பவனும், அறிஞர்களால் சுத்தப்பட்டவனும், அனைத்தையும் காண்பவனுமான ஸோமன், போற்றத் தகுந்த வழிபடுபவனிடம் செல்லுகிறான். 8705

6. ஸோமனே! விழித்திருப்பவனும், சுத்தப்பட்டவனும், பிரியனுமான நீ, ஆட்டு உரோமக் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகுகிறாய். விப்பிரனும், அங்கிரஸர்களின் முதல்வனுமான நீ, உன்னுடைய மதப்படுத்தும் ரஸத்தால் எங்கள் யக்ஞத்தைத் தெளிக்கவும்.

7. வழியைப் புலப்படுத்தும் முதல்வனும், ரிஷியும், விப்பிரனும், அனைத்தையும் காண்பவனுமான ஸோமன் பெருகுகிறான். ஸோமனே! நீ கவி. நீ தேவர்களை மிக்க விரும்புபவன். நீ சோதியிலே சூரியனை ஏகச் செய்கிறாய்.

8. பிழிபவர்களால் பிழியப்பட்ட ஸோமன் உயரமாயுள்ள ஆட்டு ஊரோமப் பவித்திரங்களிலே பாய்

கிறான். பசுமை நிறமுள்ளவன் பெட்டையை நாடும் குதிரையைப் போல் போகிறான். மதப்படுத்தும் தாரையோடு போகிறான்.

9. பசுக்களின் பாலோடும் தயிரோடும் சேர்ந்துள்ள ஸோமன் பசுக்களோடு கலசத்துக்குப் போகிறான். அவன் கறக்கப்பட்ட பசுக்களோடு பெருகுகிறான். அவனுடைய இன்பத்துக்குரிய ரஸங்கள் கடலுக்கு சலங்களைப் போல் கலசத்துக்குப் பாய்கின்றன.

10. ஸோமனே! நீ ஆட்டு உரோமங்களைக் கடந்து, பசுமை நிறமுள்ளவனுமான நீ, புரத்திலே நுழையும் மனிதனைப் போல் பாண்டங்களிலே நுழைந்து மரப் பாத்திரங்களிலே உன் இடத்தைச் செய்து கொள்கிறாய். 8710

11. உணவைத் தர விரும்பும் ஸோமன் உரோமக் கண்களின் வழியாய் வந்தவுடன், போரிலே குதிரையைப் போல் அலங்கரிக்கப்படுகிறான். விப்பிரர்களுடைய, அறிஞர்களுடைய, போற்றுபவர்களுடைய, மகிழ்ச்சிக்குரிய ஸோமன் பாங்காகிறான்.

12. ஸோமனே! நீ தேவர்களுடைய பானத்துக்காக சலத்தால் நதியைப் போல் உதகத்தால் ஊட்டப்படுகிறாய். மதமளிப்பவனும், விழித்துள்ளவனுமான உன்னுடைய ஸோமவல்லியின் ரஸத்தோடும், நீ தேன் சிந்தும் கலசத்துக்குப் போகிறாய்.

13. விரும்பத் தகுந்தவனும், பிரியனும், புதல்வனைப் போல் அலங்கரிக்கத் தகுந்தவனுமான ஸோமன், வெண்மையான ஆடையை அணிந்துகொள்கிறான். அவர்கள் தங்கள் கைகளால் அவனைத் தாரைகளுக்குப் போருக்குத் தேரைச் செலுத்தும் வீரர்களைப் போல் பிரேரிக்கிறார்கள்.

14. மனத்தை வசப்படுத்துபவர்களும், மதமளிப்பவர்களும், அனைத்தையும் அறிபவர்களும், துரிதர்களுமான ஸோமர்கள், தங்களுடைய இன்பமளிக்கும்



ரஸத்தை வானின் உயர்த்திய பவித்திரத்தின் மீது செலுத்துகிறார்கள்.

15. குதனும், பெரியவனும், தேவனும், ராஜனும், சுத்தப்படுபவனுமான ஸோமன், தாரையோடு வானத்தைக் கடக்கிறான். குதனும், பெரியவனுமான அவன், செலுத்தப்பட்டு, மித்திரனையும், வருணனையும் தாங்கப் பெருகுகிறான். 8715

16. வானிலிருப்பவனும், அறிஞனும், விரும்பத் தகுந்தவனும், தேவனும், அரசனுமமன ஸோமன், மனிதர்களால் இயக்கப்பட்டுப் பெருகுகிறான்.

17. மதமளிப்பவன் பிழியப்பட்டவுடன் மருத்துக்களோடுள்ள இந்திரனுக்காகப் பாய்கிறான். ஆயிரந் தாரைகளுள்ள அவன் கம்பளப் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகுகிறான். மனிதர்கள் அவனை சுத்தப்படுத்துகிறார்கள்.

18. பாண்டங்களிலே சுத்தப்படுபவனும், அறிவை எழுப்புபவனும், கவியுமான ஸோமன், தேவர்களின் நடுவே இன்புறுகிறான். சலங்களை அணிந்த அவன் மரப் பாண்டங்களிலே அமருகிறான். உத்தமன் பாலாலும் தயிராலும் தன்னைப் போர்த்திக் கொள்கிறான்.

19. இந்துவே! ஸோமனே! நான் உன்னுடைய நட்பிலே தினந்தோறும் இன்பமாகிறேன். பழுப்பு நிறமுள்ள ஸோமனே! பல அரக்கர்கள் என்னை எதிர்க்கிறார்கள். என்னைச் சூழ்ந்துள்ள இந்த அரக்கர்களை ஜயிக்கவும்.

20. பழுப்பு நிறமுள்ள ஸோமனே! உன்னுடைய ஸந்நிதானத்திலே நான் இரவும் பகலும் இன்பமாகிறேன். நாங்கள் உன் நட்புக்காக உன்னுடைய காந்தியால் சொலிக்கும் சூரியனுக்காகப் பால் பறவைகளைப் போல் பறந்து உன்னிடம் வருவோமாக. 8720

21. அழகிய விரல்களோடுள்ள ஸோமனே! நீ சுத்தமாகுங்கால் வானிலே சப்தத்தை எழுப்புகிறாய். பவமான ஸோமனே! நீ பலரால் விரும்பப்படுவதும், மிகுந்திருப்பதும் பொன்னிறமுள்ளதுமான செல்வத்தை அளிக்கிறாய்.

22. ஸோமனே! வர்ஷிப்பவனான நீ கம்பளப் பவித்திரத்திலே சுத்தப்பட்டு செம்மையாகுங்கால் நீ சலத்திலே முழக்கஞ் செய்கிறாய். ஸோமனே! பவமானனான நீ பாலாலும் தயிராலும் சேர்க்கப்பட்டு, தேவர்களுடைய நன்கு கற்பிக்கப்பட்ட இடத்துக்குப் போகிறாய்.

23. ஸோமனே! நீ எங்களுக்கு உணவை அளிக்க எல்லாக் காவ்யங்களுக்கும் பெருகவும். தேவர்களை மதப்படுத்தும் நீ, முதல்வன். நீ வானைத் தாங்குபவன்.

24. ஸோமனே! நீ உன்னுடைய தருமங்களோடு சோதியின் புவியின் உலகங்களுக்குப் பெருகவும். அனைத்தையும் காண்பவனே! அறிஞர்கள் பிரகாசமாயுள்ள உன்னைத் துதிகளோடும் விரல்களோடும் பிரேரிக்கிறார்கள்.

25. மருத்துக்களோடிருப்பவையும், மதமளிப்பவையும், இந்திரனைத் திருப்தி செய்பவையும், உணவையும், உணர்வையுமளிப்பவையுமான பவமான ஸோமங்கள் தாரையோடு பவித்திரத்தின் வழியாய்ப் பிரேரிக்கப்படுகின்றன.

26. வழிபடுபவர்களால் பிழியப்பட்டு இந்து சலங்களை அணிந்துகொண்டு கலசத்துக்குப் பாய்கிறான். அவன் சோதியைப் பிறப்பித்து, பசுக்களின் பாலோடும் தயிரோடும் தன் வடிவத்தை ஐக்கியப்படுத்தி இப்போது நம்முடைய பாக்களை விரும்புகிறான். 8726

## 108. பவமான ஸோமன்

### 831. பல ரிஷிகள்

### சக்தியின் புதல்வன் கௌரி வீதி

1. ஸோமனே! மிக்க அறிவுள்ளவனும், மகானும், மிக்கப் பிரகாசிப்பவனும், மதமளிப்பவனும், மிக்க இனிப்



புள்ளவனுமான நீ, இந்திரனுக்கு மதந்தருபவனாய்ப் பெருகவும்.

2. உன்னைப் பருகி விருடபன், விருடபனைப் போலாகிறான். அனைத்தையுங் காணும் உன்னைப் பருகி, பேரறிஞன், பகைவனின் உணவுகளை, போரைப் பற்றும் குதிரையைப்போல் பற்றுகிறான்.

### வசிஷ்டனின் புதல்வன் சக்தி

3. பவமான ஸோமனே! பிரகாசமாயுள்ள நீ தேவசனங்கள் அமுதத்தைப் பெற முழங்குகிறாய்.

### ஊரு ஆங்கிரஸன்

4. உன்னால் தத்தியங்க நவக்வன குகையைத் திறந்தான். உன்னால் ரிஷிகள் திருடப்பட்ட பசுக்களை மீட்டார்கள். உன்னால் வழிபடுபவர்கள் தேவர்களின் பாலனத்திலே இனிய அமுதத்தின் உணவுகளை அடைந்தார்கள்.

5. மிக்க மதமளிப்பவனும், சலங்களின் அலையைப் போல் கிரீடிப்பவனும், பிழியப்பட்டவனுமான இந்த ஸோமன், கம்பள உரோமங்களின் வழியாய்ப் பெருகுகிறான். 8731

### பரத்வாஜனின் புதல்வன் ரிஜிஸ்வான்

6. நீ மலையின் குகையிலிருந்து உன்னுடைய பலத்தால் சிகப்பாய் விளங்குபவையும், சலமாயுமிருந்த பசுக்களை மீட்டாய். நீ பசுக்களும், குதிரைகளுமிருந்த கொட்டிலை வசப்படுத்துகிறாய். வீரனான ஸோமனே! கவசமணிந்த வீரனைப்போல் அரக்கர்களை அழிக்கவும்.

7. ஸோமனைப் பிழியுங்கள். குதிரையைப்போல் வேகமாயிருப்பவனும், போற்றத் தகுந்தவனும், மழையைச் செலுத்துபவனும், ஒளியைப் பிரேரிப்பவனும், நீரைச் சொரிபவனும், சலத்தில் நீந்துபவனுமான ஸோமனை சலங்களால் தெளியுங்கள்.

ஊர்ந்து வஸத்மா ஆங்கிரஸன்

8 ஸோமன் சலத்தைச் செழிப்பிப்பவன். ஆயிரம் தாரைகளுள்ள விருஷபன். தேவ சனங்களுக்குப் பிரியமாயிருப்பவன். ருதத்திலே பிறந்தவன். ருதத்தால் வளர்பவன். அரசன்; தேவன்; மகானுன ருதன்—ஸோமன்.

9. உணவின் தலைவனே! தேவனே! தேவர்களை விரும்பும் நீ, எங்களுக்குப் பிரகாசமான, மகத்தான உணவை அளிக்கவும். நடுவிலுள்ள கேசத்தை விடுவிக்கவும்.

கிருதயசா ஆங்கிரஸர்கள்

10. மிக்க வலிமையுள்ளவனே! பிழியப்பட்ட நீ பிரஜைகளைத் தாங்கும் தலைவனைப்போல் கலசங்களுக்குப் பெருகவும். சோதியிலிருந்து மழையையும், சலத்தாரையையும் பொழியவும். பசுக்களை நாடும் வழிபடுபவனுக்கு யக்ஞங்களைப் பூர்த்தி செய்யவும். 8736

11. தேவர்களை விரும்பும் ரித்விஜர்கள் மதமளிப்பவனும், ஆயிரந் தாரைகள் உள்ளவனும், வர்ஷிப்பவனும், எல்லாச் செல்வங்களை ஏந்துபவனுமான ஸோமனைக் கறக்கிருர்கள்.

ரிணஞ்செய ராஜரிஷி

12. வர்ஷிப்பவனும், அமுதனுமான ஸோமன் சோதியைப் பிறப்பிப்பவனுயும், இருளை காந்தியால் நீக்குபவனுயும் பிறக்கிறுன். அறிஞர்களால் மிக்கப் போற்றப்பட்ட அவன் பிரகாசிக்கும் ஆடையைத் தரிக்கிறுன். அவனுடைய செயலால் முத்தாது ஏந்தப்படுகிறது.

13. செல்வங்களையும், நிதிகளையும், உணவையும், அழகிய மனைகளையும் ஏந்தி வருபவனுன ஸோமன் பிழியப்படுகிருன்.

சக்தி வாஸிஷ்டர்கள்

14. இந்திரன் பருகுவதும், மருத்துக்கள் பருகுவதும், அர்யமானேடு பகன் பருகுவதும், மகத்தான பாலனத்துக்காக மித்திரனுக்கும், வருணனுக்கும், இந்திரனுக்கும் அளிக்கப்படுவதுமான ஸோமம் பிழியப்படுகிறது.



15. ஸோமனே! மனிதர்களால் இயக்கப்பட்டதும், நல்லாயுதமுள்ளதும், மிக்க ஊக்கப்படுத்துவதும், மிக்க இனிப்புள்ளதுமான நீ, இந்திரனுடைய பானத்துக்காகப் பெருகவும்.

16. ஸோமனே! மித்திரனுக்கும், வருணனுக்கும், வாயுவுக்கும், விரும்பத் தகுந்தவனுயிருப்பவனும், சோதியை நிலைப்படுத்தும் உத்தமனுமான நீ, இந்திரனுடைய இருதயமான கலசத்துக்குப் பெருகவும். 8742

## 109. பவமான ஸோமன்

### 832. ஈசுவரனின் புதல்வர்களான யக்ஞாக்கினிகள்

1. ஸோமனே! இனிய ரஸமான நீ, இந்திரனுக்கும், மித்திரனுக்கும், பூஷாவுக்கும், பகனுக்கும் பாத்திரங்களிலே நிறையவும்.

2. ஸோமனே! அறிவுக்கும், ஆற்றலுக்கும் பிழியப்பட்ட உன்னை இந்திரனும், எல்லாத் தேவர்களும் பருகுவார்களாக.

3. ஸோமனே! சுத்தனும், சோதியிலே தோன்றியவனும், தேவர்களால் பருகத் தகுந்தவனுமான நீ, அமிருதத்துவத்துக்காகவும், மகத்தான வாசத்துக்காகவும் பெருகவும்.

4. ஸோமனே! மகானும், சமுத்திரமும், தேவர்களின் தந்தையுமான நீ, எல்லாத் தேகங்களுக்கும் பெருகவும்.

5. ஸோமனே! மிக்கப் பிரகாசமுள்ள நீ, தேவர்களுக்காகப் பெருகவும். சோதிக்கும், புவிக்கும், பிரசைகளுக்கும் சுகத்தை அளிக்கவும். 8747

6. ஸோமனே! பிரகாசிப்பவனும், பருகத் தகுந்தவனு

மான நீ, சோதியை ஏந்துபவனுயிருக்கிருய். சக்தனுன நீ, சத்தியமான யக்ஞத்துக்குப் பெருகவும்.

7. ஸோமனே! உணவுள்ளவனும், மிக்கத் தாரைகள் இருப்பவனுமான நீ, மகத்தான ஆட்டு உரோமக் கண்களின் வழியை அனுசரித்துப் பெருகவும்.

8. தோற்றுவிக்கப்பட்டவனும், சுத்தப்பட்டவனும், மதப்படுத்துபவனும், எல்லாமறிபவனும், அறிஞர்களால் கிரமப்பட்டவனுமான ஸோமன் எங்களுக்கு எல்லாச் செல்வங்களையுமளிப்பானுக.

9 இந்து சுத்தமாகுங்கால் தேவர்களைப் போற்றி எங்களுக்குச் சந்தானங்களையும், எல்லாவிதச் செல்வங்களையும் அளிப்பானுக.

10. ஸோமனே! குதிரையைப்போல் சுத்தப்பட்டவனுன நீ, அறிவுக்காகவும், ஆற்றலுக்காகவும், செல்வத்துக்காகவும் பெருகவும். 8752

11. உன்னைப் பிழியும் அறிஞர்கள் மதத்துக்காக உன்னுடைய ரஸத்தை சுத்தப் படுத்துகிருர்கள் அவர்கள் மகத்தான உணவுக்காக ஸோமனை சுத்தப் படுத்துகிருர்கள்.

12. அவர்கள் பிறந்திருக்கும் பாலனும், பசுமை நிறமுள்ளவனும், பிரகாசிப்பவனுமான ஸோமனை, தேவர்களுக்காகப் பவித்திரத்திலே சுத்தப்படுத்துகிருர்கள்.

13. அழகுள்ள அறிஞுன ஸோமன் சலத்தின் அங்கத்திலே, பவித்திரத்திலே, மதத்துக்காகவும் செல்வத்துக்காகவும் பெருகுகிருன்.

14. மங்களமான ஸோமன், இந்திரனுடைய தேகத்தைத் தாங்குகிருன். அதனுல் இந்திரன் அரக்கர்களையெல்லாம் அழித்தான்

15. மனிதர்களால் பிழியப்பட்டு, தயிரோடும், பாலோடும் கலக்கப்பட்ட ஸோமத்தை எல்லாத் தேவர்களும் பருகுகிருர்கள். 8757



16. பிழியப்பட்ட ஸோமன் ஆயிரந் தாரைகளோடு ஆட்டு உரோமப் பவித்திரத்தின் வழியாய்ப் பெருகுகிருன்.

17. ஆற்றலுள்ள ஸோமன் சலங்களால் சுத்தமாகி, பாலோடும் தயிரோடும் சேர்க்கப்பட்டு, ஆயிரந் தாரைகளோடு பெருகுகிருன்.

18. ஸோமனே! நீ கற்களால் பிழியப்பட்டு, மனிதர்களால் செலுத்தப்பட்ட நீ இந்திரனுடைய உதரத்துக்குச் செல்லவும்.

19. வலியனும், ஆயிரந் தாரைகள் உள்ளவனுமான ஸோமன் இந்திரனுக்காகப் பவித்திரத்தின் வழியாய்ச் செலுத்தப்படுகிருன்.

20 விருஷபனுன இந்திரனுடைய மதத்துக்காக அவர்கள் அவனுக்கு இந்த ஸோமனை இனிய பாலோடு சேர்க்கிருர்கள்.

21. அவர்கள் சலங்களை அணிந்தவனும், பசுமை நிறமுள்ளவனுமான உன்னை, அனுயாஸமாய்ச் சுத்தப் படுத்துகிருர்கள்.

22. இந்து, இந்திரனுக்காகப் பிழியப்படுகிருன். பிழியப்பட்டு கீழே பாய்கிருன். உக்கிரன் பாலோடு சேர்க்கப்பட்டு, சலத்தினுள் பாய்கிருன். 8764

## 110. பவமான ஸோமன்

### 833. திரயாருணனும் திரஸதஸ்யுவும்

1. ஸோமனே! உணவுக்காகப் போருக்குச் செல்லவும். வலிமையுள்ள நீ, பகைவர்களை எதிர்க்கவும். எங்கள் கடன்களைத் தீர்க்கும் நீ, பகைவர்களை விலக்கச் சொல்லுகிருய்.

2. ஸோமனே! பிழியப்பட்ட உன்னிலே மகத்தான மேன்மைக்கு இன்புறுகிருேம். பவமானனே! நீ மகத்தான செயல்களுக்கு இயங்குகிருய்.

3. பவமானனே! வழிபடுபவர்களுக்குப் பசுக்களைச் செலுத்தும் பேரறிவோடு, நீ துரிதமாகி, சலத்தைத் தாங்கும் வானிலே உன்னுடைய ஆற்றலால் சூரியனைத் தோற்றுவித்தாய்.

4. அமுதனே! ஸோமனே! நீ சத்தியமாயும், மங்களமாயுமுள்ள சலத்தைத் தாங்கும் வானிலே மனிதர்களின் நடுவே சூரியனைத் தோற்றுவித்தாய். நீ பொழிந்து கொண்டு, இடையறாமல் போருக்குச் செல்லுகிறாய்.

5. ஸோமனே! நீ உன்னுடைய உணவோடு சனங்களுக்குப் பானஞ் செய்ய அழியாத சுனையைத் திறப்பவனைப் போலும், இரு கைகளின் விரல்களோடு சலம் பற்றுபவனைப்போல் பவித்திரத்தை உடைத்துத் திறக்-
கிறாய். 8769

6. அவனை சோதியில் தோன்றிய சில வஸுருசர்கள் பார்த்து, தடைபடுத்தும் இருளை, பிரகாசமுள்ள ஸவிதா நீக்குவதற்கு முன்னே பந்துவைப் போல் போற்றுகிறார்கள்.

7. ஸோமனே! மானிடர்களின் முதல்வர்கள் தருப்பையைச் சீர்படுத்தி, தங்கள் மனங்களை உன்னிலே மகத்தான ஆற்றலுக்கும், உணவுக்கும் நிலைப்படுத்தினார்கள். தீரனே! எங்களைத் தீரத்துக்கு ஊக்கப்படுத்தவும்.

8: போற்றுவதற்குரியதும், சோதியிலே தேவர்களால் பருகத் தகுந்ததுமான பழைய ஸோமத்தை, சோதியிலிருந்தும், அகாத ஆழத்திலிருந்தும் அவர்கள் கறந்தார்கள். இந்திரனுக்காகத் தோற்றுவிக்கப்பட்டவுடன் ஸோமத்தை அவர்கள் புகழ்ந்தார்கள்.

9. பவமான ஸோமனே! நீ பசுக்களின் நடுவே அவற்றை வசப்படுத்தி முதன்மையாயிருக்கும் காளையைப் போல், உன்னுடைய பலத்தால் இவ்விரு உலகங்களையும், இவ்வெல்லா சீவர்களையும் வசப்படுத்தித் தலைவனாயிருக்கிறாய்.



10. ஆயிரந் தாரைகள் உள்ளவனும், நூறு ஆற்றல்கள் இருப்பவனும், துலங்குபவனும், பவமானனுமான ஸோமன், ஆட்டு உரோமக் கம்பளப் பவித்திரத்திலே குழந்தையைப் போல் விளையாடிக் கொண்டு பெருகுகிறான்.

11. உணவைத் தருபவனும், செல்வத்தையும், ஆயுளையுமளிப்பவனும், சுத்தப்படுத்துபவனும், இனிய ரஸமுள்ளவனும், ருதமிருப்பவனும், இனிமைப்படுத்தும் தாரை இருப்பவனுமான இந்த ஸோமன் இந்திரனுக்குப் பெருகுகிறான்.

12. ஸோமனே! கூரிய ஆயுதமேந்தும் நீ, எங்கள் பகைவர்களைக் கடத்தி, தடுப்பதற்குக் கட்டமாகும் அரக்கர்களை விலக்கி, சத்துருக்கர்களை ஜயித்துக் கொண்டு
பெருகவும். 8776

## 111. பவமான ஸோமன்

### 834. பருச்சேபனின் புதல்வன் அநாநதன்

1. ஸோமன் இந்தப் பிரகாசமான பசுமை நிறமுள்ள தாரையோடு சுத்தமாகுங்கால் எல்லா சத்துருக்களையும் தன்னோடு இணைக்கப்பட்ட ரஸங்களால் கதிர்களோடு இணைக்கப்பட்டு இருளை விலக்கும் சூரியனைப் போல் ஜயிக்கிறான். இரஸதாரையால் தன்னை சுத்தஞ் செய்து கொள்ளும் ஸோமன், போற்றுபவர்களோடும், ஏழு வாய்களுள்ள துதிப்பவர்களோடும், எல்லா வடிவங்களிலும் பரவுங்கால், பசுமை நிறத்தோடும், பாங்கோடும் பிரகாசிக்கிறான்.

2. ஸோமனே! நீ பணிகளால் திருடப்பட்ட செல்வத்தைக் கண்டுபிடித்தாய். நீ யக்ஞத்தைத் தாங்கும் தாய்மார்களால் உன்னுடைய சொந்த மனையிலே யக்ஞத்திலே சுத்தமாகிறாய். தூரத்திலே இருந்தே செவியுறப்படும் ஸாமகானத்தைப் போல் உனக்குப் பாடப்படும் ஸாமகானமும் அனைவராலும் கேட்கப்படுகிறது. அந்த ஸாமத்

திலே யக்ஞத்தை ஏந்துபவர்கள் இன்புறுகிறார்கள். பிரகாச மாயுள்ள ஸோமன் இவ்வுலகங்களைத் தாங்கும் பிரகாச மாயுள்ள சலங்களோடு உணவைத் தருகிறான்.

3. அறிஞனை ஸோமன் கீழ்த் திசைக்குச் செல்லு கிறான். உன்னுடைய அழகிய தேர், உன்னுடைய திவ்ய மான அழகிய தேர், சூரியனுடைய கதிர்களோடு சேர்ந்து செல்லுகிறது. ஆண்மைத்தனம் நிறைந்த துதிகள் இந்திர னுக்கு எழுகின்றன. அவனை ஜயத்துக்கு ஊக்கப்படுத்து கின்றன. அவனுடைய வச்சிராயுதமும் அவனிடம் செல்லு கிறது. அதனால் போர்களில் நீயும் இந்திரனும் வெல்லப் படாமலாகிறீர்கள். நீங்கள் வெல்லப்படாதவர்கள்.
8779

## 112. பவமானஸோமன்

### 835. சிசுராங்கிரஸன்

1. ஸோமனே! எங்கள் செயல்கள் நானாவிதமானவை. மனிதர்களுடைய தொழில்களும் நானாவிதமானவை. தச்சன் மரத்தை விரும்புகிறான். மருத்துவன் நோயை விரும்பு கிறான். அறிஞன் ஸோமத்தைப் பிழியும் வழிபடுபவனை விரும்புகிறான். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

2. காய்ந்த ஓஷதிகளாலும், பறவைகளின் சிறகுகளா லும் அம்புகள் செய்யப்படுகின்றன. தட்டான் தங்கமுள்ள வனை விரும்புகிறான். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

3. நான் புலவன். என் தந்தை மருத்துவன். என் தாய் திரிகைக் கற்களிலே தான்யத்தை இடுபவள். பல விதத் தொழில்கள் உள்ள நாங்கள் செல்வங்களை விரும்பி, இவ்வுலகத்தில் தொழுவத்திலுள்ள பசுக்களைப் போல் இருக்கிறோம். இந்துவே! இந்திரனுக்காக நீ பெருகவும்.

4. இழுக்கும் குதிரை இழுப்பதற்கு சுகமான தேரை விரும்புகிறது. விருந்தினர்களை அழைப்பவர்கள் மகிழ்ச்



சியை விரும்புகிறார்கள். ஆண் மகன் இன்பத்தை விரும்பு கிறான். தவளை சலத்தை விரும்புகிறது. இந்துவே! ஸோமனே! நீ இந்திரனுக்காகப் பெருகவும். 8783

## 113. பவமான ஸோமன்

### 836. கசியபன் மாரீசன்

1. விருத்திரனைக் கொல்பவனும், தன்னுள் நிறத்தைச் செலுத்திக் கொள்பவனும், மகத்தான வீரியத்தைப் புலப் படுத்த இருப்பவனுமான இந்திரன் சர்யணாவதியிலே ஸோமத்தைப் பருகுவானாக. இந்துவே! நீ இந்திரனுக் காகப் பெருகவும்.

2. திசைகளின் தலைவனே! பொழிபவனே! ருதம் பேசும் சத்தியமாயுள்ள மனிதனால் சிரத்தையோடும், தவத்தோடும் பொழியப்பட்ட நீ, ஆர்ஜீகனிடமிருந்து இங்கு வா. இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

3. சூரியனுடைய மகளான சிரத்தை பர்ஜன்யனைப் போல் வலிமையாயும், மகத்தாயுமுள்ள ஸோமத்தை சோதியிலிருந்து ஏந்தி வந்தாள். கந்தர்வர்கள் அதைக் கிரகித்தார்கள். ரஸத்தை ஸோமத்திலே ஸ்தாபித்தார் கள். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

4. இராஜனான ஸோமனே! சத்தியத்தைப் பேசு பவனும், சத்தியத்தால் பிரகாசிப்பவனும், சத்தியத்தைக் கூறுபவனும், சத்தியச் செயலுள்ளவனும், சிரத்தையாய்ச் சொல்பவனுமான நீ, யக்ஞத்லை ஏந்துபவனால் அலங் கரிக்கப்படுகிறாய். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

5. ஸத்திய உக்கிரனும், மிகப் பெரியவனுமான உன் னுடைய நன்றாய்ப் பெருகும் தாரைகள் நன்றாய்ப் பாய் கின்றன. ரஸனாயுள்ள உன்னுடைய ரஸங்கள் சேர்ந்து பெருகுகின்றன. பசுமை நிறமுள்ள ஸோமனே! நீ மந்

திரத்தால் சுத்தமாகி இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும். 8788

6. பவமான ஸோமனே! சந்தங்களோடு மந்திரத்தைக் கூறுபவனும், கற்களால் பிழியப்பட்ட ஸோமத்தைத் தேவர்களுக்கு இன்பத்தைத் தோற்றுவிப்பவனுமான அறிஞன் போற்றப்படும் இடத்தில் எல்லாம் இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

7. பவமான ஸோமனே! சோதி சாசுவதமாயிருக்கும் இடத்திலே சூரியன் ஸ்தாபிக்கப்பட்ட உலகத்திலே அந்த அமிருதமான அழியாத உலகத்திலே என்னை ஸ்தாபிக்கவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

8. விவஸ்வதன் அரசனுயிருக்கும் இடத்திலே சூரியனுடைய மர்மமான மாடமிருக்கும் நிலயத்திலே, இந்தப் பெரிய நதிகள் பாயும் இடத்திலே என்னை அமுதப்படுத்தவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பாயவும்.

9. சூரியன் தன் விருப்பம் போல் சுற்றிவரும் மூன்றுவது சோதியிலே, மூன்று இடங்களிலே சோதி நிறைந்துள்ள இடங்களிலே என்னை அமுதப்படுத்தவும் இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

10. விருப்பங்களும், ஆசைகளுமுள்ள இடத்திலே சூரியன் இருக்கும் உலகத்திலே உணவும், திருப்தியுமுள்ள இடத்திலே என்னை அமுதப்படுத்தவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

11. ஆனந்தமும், இன்பங்களும், சந்தோஷமும், சுகானுபவமும் தோன்றும் இடத்திலே விரும்புபவனின் விருப்பங்கள் நிறைவேறும் இடத்திலே என்னை அமுதப்படுத்தவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும். 8794



## 114. பவமான ஸோமன்

### 837. கசியபன் மாரீசன்

1. சுத்தஞ் செய்யப்படும் ஸோம ரஸங்களின் இடங்களுக்கெல்லாம் சென்று தொண்டு செய்யும் அறிஞனை மனிதர்கள் மக்கட் செல்வன் எனக் கூறுகிறுர்கள். உன்னில் மனஞ் செலுத்துபவனையும், மக்கட் செல்வமுள்ளவன் எனக் கூறுகிறுர்கள். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

2. ரிஷியான கசியபனே! மந்திரங்களைக் கற்பிக்கும் ரிஷிகளின் தோத்திரங்களால் உன்னுடைய குரலை எழுப்பி வனஸ்பதிகளின் பாலகனுய்ப் பிறந்திருக்கும் அரசனுன ஸோமனைப் போற்றவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

3. நானுவித சூரியர்களோடு ஏழு திசைகள் இருக்கின்றன. ஏழு ஹோதாக்கள் இருக்கிறுர்கள். தேவர்களான ஆதித்தியர்கள் எழுவர் இருக்கிறுர்கள். ஸோமனே! இவர்களோடு எங்களைப் பாலிக்கவும். இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும்.

4. அரசனுன ஸோமனே! நீ உனக்காகப் பக்குவப்பட்ட அவியோடு எங்களைப் பாலிக்கவும். எப்பகைவனும் எங்களை எதிர்க்காமலிருப்பானுக. எத்தீமையும் எங்களைத் துன்புறுத்தாமலிருக்க. இந்துவே! நீ இந்திரனுக்காகப் பெருகவும். 8798

மண்டலம் 9 : சூக்தங்கள் 114

இருக்குக்கள் 1108

## ஒன்பதாவது மண்டலம் முற்றிற்று

# பத்தாவது மண்டலம்

## 1. அக்கினி

### 838. திரித ஆப்தியன்

1. மகானான அக்கினி உஷையின் துவக்கத்திலே சுவாலையோடு எழுகிறான். தமத்திலிருந்து தோன்றி ஒளியோடு வருகிறான். எழிலங்கமுள்ள அக்கினி பிறந்தவுடன் எல்லா மனைகளையும் தன் காந்தியால் நிரப்புகிறான்.

2. அக்கினியே! நீ பிறக்குங்கால் சோதி புவிகளின் கருப்பமாயிருக்கிறாய். அழகான நீ, ஓஷதிகளில் ஏந்தப்படுகிறாய். பல நிறமுள்ள குழந்தையான நீ, இரவின், நமங்களை நீக்குகிறாய். தாய்மார்களான ஓஷதிகளிலிருந்து முழக்கத்தோடு வருகிறாய்.

3. தோன்றியவுடன் மகானும் அறிஞனாயிருக்கும் அவன், இங்ஙனம் விஷ்ணுவாகி, அவனுடைய மூன்றாவது தோற்றமான திரிதனும் என்னைப் பாலிப்பானாக. வழிபடுபவர்கள் அவனுக்குச் சொந்தமான சலத்தைத் தங்கள் வாய்களால் யாசிக்குங்கால் அவர்கள் ஒருமனத்தோடு அவனைப் போற்றுகிறார்கள்.

4. ஆதலால் எல்லாப் பொருள்களைப் பிறப்பிப்பவையும், அனைத்தையும் உணவால் பாலிப்பவையுமான ஓஷதிகள், உணவைச் செழிப்பிக்கும் உன்னிடம், உணவுகளோடு – அவிகளோடு வருகின்றன. வேறு வடிவங்கள் எடுத்த இந்த ஓஷதிகளிடம், நீ மீண்டும் செல்லுகிறாய். நீ மானிடப் பிரசைகளின் நடுவே, ஹோதாவாயிருக்கிறாய்.

5. நாங்கள் செல்வத்துக்காக யக்ஞத்தின் ஹோதாவும், பிரகாசிக்கும் தேரும், ஒவ்வொரு யக்ஞத்தின் ஒளி தரும் துவஜனும், மானிடர்களின் அதிதியும், மகத்வத்திலே ஒவ்வொரு தேவனையும் முந்துபவனுமான அக்கினியைச் செல்வத்துக்காகப் போற்றுகிறோம்.



6. அவன் அழகிய ஆடைகளை அணிந்து, புவியின் நாபியிலே தங்குகிறான். அரசனான அக்கினியே! பிரகாசிப்பவனும், இளையின் பதத்தில் பிரகாசிப்பவனுமான நீ, புரோகிதனாய்த் தேவர்களை யஜிக்கவும்.

7. அக்கினியே! நீ சோதியையும் புவியையும் தாய்மார்களைப் புதல்வன் போல் தாங்குகிறாய். மிக்க இளைஞனான நீ, உன்னை விரும்பும் எங்களிடம் வா. ஆற்றல் மகனே! தேவர்களை அழைத்து வா. 8805

## 2. அக்கினி

### 839. திரித ஆப்தியன்

1. மிக்க இளைஞனான அக்கினியே! செவியுற விரும்பும் தேவர்களை இன்புறுத்தவும். ருதுபதியே! ருதுக்களை அறியும் நீ, ருதுக்களைப் போற்றவும். தேவர்களிடமிருந்து தோன்றிய ரித்விஜர்களோடு போற்றவும். அக்கினியே! நீ ஹோதாக்களின் நடுவே மிக்க நன்றாக யஜிப்பவன்.

2. நீ சனங்களுக்காக ஹோதாச் செயலை விரும்புகிறாய். நீ போதாச் செயலை விரும்புகிறாய். நீ அறிஞனாயிருக்கிறாய். செல்வத்தைத் தருபவன். நீ சத்தியத்தைப் பாலிப்பவன். நாங்கள் ஸ்வாஹாவோடு அவிகளைத் தேவர்களுக்களிப்போமாக. போற்றத் தகுந்தவனும், தேவனுமான அக்கினி, தேவர்களை யஜிப்பானாக.

3. நாங்கள் செய்ய இயலும் செயலை நடத்த தேவர்களிடம் செலுத்தும் வழியைப் பற்றுவோமாக. அறிஞனான அக்கினி, யஜிப்பானாக. அவனே ஹோதா. அவன் யக்ஞங்களையும் ருதுக்களையும் கற்பிப்பானாக.

4. தேவர்களே! அறிவிலிகளான நாங்கள் அறிஞர்களான உங்கள் விரதங்களைப் பங்கஞ் செய்திருந்தால் ஒவ்வொரு தேவனுக்கும் அவனுக்குரிய பருவங்களைக்

கிரமப்படுத்துவதில் வல்லவனும், அறிஞனுமான அக்கினி எங்கள் குற்றங்களை நீக்குவானாக.

5. அற்ப ஆற்றலுள்ளவர்களும், அபக்குவ மனமுள்ளவர்களுமான மனிதர்கள், யக்ஞத்தின் நுட்பங்களை அறியார்கள். ஹோதாவும், யக்ஞத்தை உணர்பவனும், செய்வதற்குரியவற்றை நன்கு அறிபவனும், நன்கு யஜிப்பவனுமான அக்கினி, உரிய காலத்தை அனுசரித்து, தேவர்களை யஜிப்பானாக.

6. தலைவன் எல்லா யக்ஞங்களுக்கும் முதல்வனும், நானா ரூபமுள்ளவனும், ஒளிப்படுத்துபவனுமான உன்னைப் பிறப்பித்தான். மானிடர்கள் தங்கும் தரணியிலே தோன்றி வளர்ந்தவையும், விரும்பப்படுபவையும், எல்லா சனங்களுக்கும் நலம் தருபவையும், துதிகளோடு சேர்ந்தவையுமான அவி உணவுகளைத் தேவர்களுக்கு அளிக்கவும்.

7. சோதி புவிகளாலும், சலங்களாலும், உத்தம சிற்பியான துவஷ்டாவாலும் பிறப்பிக்கப்பட்டவனும் பிதிர்க்களிடம் செல்லும் வழியை அறிபவனுமான அக்கினியே! சொலிப்பிக்கப்படும் நீ விளங்கும் ஒளியோடு பிரகாசிக்கவும். 8812

## 3. அக்கினி

### 840. திரித ஆப்தியன்

1. அரசனான அக்கினியே! நீ அனைவருக்கும் தலைவனாயிருக்கிறாய். அவியை ஏந்திச் செல்பவனும், சொலிப்பிக்கப்பட்டு பிரகாசிப்பவனும், பயங்கரனும், ஸோமத்தைப் பெறுபவனுமான அக்கினி, மானிடர்களின் செல்வத்துக்காகத் தோன்றுகிறான். அனைத்தையுமறியும் அவன், பெருஞ்சோதியோடு பிரகாசிக்கிறான். அவன் கருத்த இரவை நீக்கி வெண்கதிருள்ள காலையோடு வருகிறான்.



2. அவன் கருத்த இரவைத் தன் காந்தியால் ஜயித்து மகத்தான தந்தையின் — சூரியனுடைய — புதல்வியான உஷையைப் பிறப்பித்து, சூரியனுடைய ஒளியை மேலே ஸ்தாபித்து, சலனமாகுங்கால் அவன் சோதியின் செல்வங்களோடு பிரகாசிக்கிறான்.

3. மங்களமான அக்கினி, மங்களமான உஷையால் போற்றப்பட்டு வருகிறான். காதலன் தன் சகோதரியை — உஷையை — பின்பற்றுகிறான். விளங்கும் ஒளியோடு மிக்கப் பிரகாசிக்கும் அக்கினி வெண்மையாய் அலங்கும் ஆடைகளால் இருளைப் போர்த்துகிறான்.

4. மகத்தான அக்கினியின் எரிச்சுவாலைகள் வழிபடுபவர்களை வருத்தப்படுத்தாமலிருக்கின்றன. விருஷபனும், பெரியவனும், துதியாருகனும், இனியவாயுள்ளவனுமான அக்கினியின் பயங்கரச் சுவாலைகள் யக்ஞத்திலே தென்படுகின்றன.

5. பிரகாசிப்பவனும், மகத்தாயிருப்பவனும், நன்கு ஒளி தருபவனும், மிக்க மேன்மையானவையும், மிக்க சோதியுள்ளவையும், மிக்க விளையாடுபவையும், மகத்தாயுமுள்ள கதிர்களோடு சோதியில் பரவுபவனுமான அக்கினியின் பயங்கரச் சுவாலைகள், மருத்துக்களைப்போல் முழங்கிக்கொண்டு செல்லுகின்றன.

6. அழகிய சுவாலைகளுள்ளவனும், தேவர்களிடம் விரைபவனுமான அக்கினியின் பயங்கரச் சுவாலைகள் மருத்துக்களின் குதிரைகளோடு முழங்குகின்றன. தேவர்களில் முதல்வனும், தூதனும், மகானுமான அக்கினி, பழையவையும், வெள்ளை நிறமுள்ளனவையும், முழங்குபவையுமான சுவாலைகளோடு மிக்கப் பிரகாசிக்கிறான்.

7. மகானான அககினியே! தேவர்களை எங்கள் யக்ஞத்துக்கு அழைத்து வா. இளைஞர்களான சோதி புவிகளின் தூதனான நீ, எங்கள் யக்ஞத்திலே அமரவும். துரித குதிரைகளோடு துரிதமாயிருப்பவனும், உக்கிர

குதிரைகளோடு உக்கிரமாயிருப்பவனும், மிக்க வேகமுகமாயிருப்பவனுமான அக்கினி இங்கு வருவானாக. 8819

## 4. அக்கினி

### 841. திரித ஆப்தியன்

1. அக்கினியே! நான் உனக்கு அவியைத் தருகிறேன். நான் உனக்குத் துதியைக் கூறுகிறேன். போற்றத்தகுந்த நீ, எங்கள் அழைப்புக்கு வர, உன்னை நான் போற்றுகிறேன். அக்கினியே! பழைய அரசனே! நீ போற்ற விரும்புபவனுக்குச் சுனையைப் போலிருக்கிறாய்.

2. மிக்க இளைஞனான அக்கினியே! வேப்பமுள்ள கொட்டிலுக்குச் செல்லும் பசுக்களைப்போல் சனங்கள் உன்னிடம் வருகிறார்கள். நீ மனிதர்களுக்கும், தேவர்களுக்கும் தூதன். நீ வானுலகால் சோதி புவிகளின் நடுவே சலனமாகிறாய்.

3. அக்கினியே! ஜயமுள்ள உன்னை, தாய் — தரணி — குழந்தையைப்போல் பாலித்து, உன்னுடைய பரிசத்தை விரும்பி, உன்னைத் தாங்குகிறாள். ஆர்வமுள்ள நீ, வானிலிருந்து இறக்கவழியால் வருகிறாய். நீ பசுக்களைப்போல் விடுவிக்கப்பட்டவுடன், அவியை நாடுகிறாய்.

4. பிழையற்றவனே! அறிஞனே! நாங்கள் மூடர்கள். உன்னுடைய மகிமையை அறியோம். அக்கினியே! நீயே உன் மகிமையை அறிகிறாய். அவன் வடிவத்தை ஏந்தி சயனிக்கிறான். அவன் சலனமாகி தன் நாவால்— சுவாலையால் — அவியை உண்கிறான். மனைத் தலைவனாகி அவன் யுவதியை — அவியை — சுவைக்கிறான்.

5. புதிதாய்ப் பிறந்தவன் எங்கே? அவன் பழைய ஓஷதிகளிலும், கட்டையிலுமிருக்கிறான். நரைத்தவன் புகைக் கொடியை ஏந்துகிறான். அவனுக்கு ஸ்நானம் அவசியமில்லை. ஆனால் தாகமடைந்த காளையைப்போல் சலத்துச்குச் செல்லுகிறான். மனிதர்கள் ஒருமனமுடன் அவனைப் போற்றுகிறார்கள்.



6. வனத்திலே பதுங்கியிருந்து பயணியைப் பிடித்து பத்து கயிறுகளால் கட்டும் உயிருக்குத் துணிந்த இரு திருடர்களைப்போல் — பத்து விரல்களோடு இருகைகள் அரணிக் கட்டையைப் பற்றுகின்றன. இந்தப் புதிய துதி உனக்குக் கூறப்படுகிறது உன்னுடைய காந்தியுள்ள அங்கங்களோடு நீ, உன்னை என் யக்ஞத்தில் தேரிலே குதிரைகளை இணைப்பவர்களைப்போல் இணைத்துக் கொள்ளவும்.

7. ஜாதவேதஸனே! இந்தத் தோத்திரம், இந்த வணக்கம், இந்தத் துதி, எப்பொழுதும் உன்னைச் செழிப்பிக்க. அக்கினியே! எங்கள் புதல்வர்களையும், எங்கள் பேரர்களையும் பாலிக்கவும். கவனமுடன் எங்கள் தேசங்களையும் பாலிக்கவும். 8826

## 5. அக்கினி

### 842. திரித ஆப்தியன்

1. ஏகனான அவன், சமுத்திரமாயிருக்கிறான். செல்வங்களை ஏந்துகிறான். பல பிறப்புக்களுள்ள அவன் நம்முடைய இருதயங்களைப் பார்க்கிறான். பறவை சுனையின் நடுவே வசிக்கிறது.

2. ஒரே இடத்தில் வசிக்கும் பெரிய விருஷபங்களும், பெட்டைக் குதிரைகளும் ஒன்று சேர்ந்தன. கவிகள் ருதத்தின் ஸ்தானத்தைப் பாலிக்கிறார்கள். ஆனால் முதன்மையான நாமங்களை மறைத்துக் கொண்டார்கள்.

3. சத்தியத்தைப் பாலிப்பவர்களும், அறிவுள்ளவர்களுமான சோதிபுவிகள், இந்த அக்கினியை ஏந்துகிறார்கள். அவர்கள் காலத்தை அளந்து, புதல்வனை

அக்கினியைப் பிறப்பித்து வளர்த்தார்கள். அப்பொழுது அறிஞர்கள், எல்லாத் தாவர, சங்கமப் பொருள்களின் நாயியான கவியின்—அக்கினியின்—இழையை விதவிதமாய் நினைத்தார்கள்.

4. யக்ஞத்தை நடத்திய புராதனர்கள் உணவை விரும்பி, நன்கு பிறந்த அக்கினியைப் போற்றினர்கள். அனைத்துமுள்ள சோதியும், சோதிகளின் மேலே உள்ள ஓஷதிகளிலுமுள்ள அவனை நெய்யாலும் சலத்திலிருந்து தோன்றும் உணவாலும் பாலிக்கிறர்கள்.

5. அறிஞனை அக்கினி வழிபடுபவர்களால் போற்றப்பட்டு, எல்லாப் பொருள்களும் தென்பட யக்ஞத்திலிருந்து ஏழு காந்தியுள்ள சகோதரிகளை—சுவாலைகளை—எழுப்பினன். பூர்வத்திலே தோன்றிய இவற்றை மானிடர்கள் விரும்பும் வரை அவன் வானிலே நிறுத்தினன். அவன் புவிக்கு வடிவத்தைத் தந்தான்.

6. கவிகள் ஏழு ஒழுக்க வழிகளைக் கற்பித்தார்கள். ஒரு வழியைத் தவறினலும் பாவம் தோன்றுகிறது. தவறும் மனிதனைத் தடுப்பவன் அக்கினி. அவன் அருகிலும் வானிலும் சலத்திலும் இருக்கிறன்.

7. ஸத்தும் அஸத்துமான-அக்கினி, பரம பதத்திலே, தட்சனுடைய சன்ம ஸ்தானத்திலே, அதிதியின் அங்கத்தில் இருக்கிறன். அக்கினி ருதத்தின் யக்ஞத்தின் பயனை அனுபவிக்கும் எங்களுக்கு முதல்வனய்ப் பிறந்தவன். பூர்வத்திலே அவன் காளையாயும் பசுவாயுமிருந்தான். 8833

## 6. அக்கினி

### 843. திரித ஆப்தியன்

1. காந்தனும் சூரிய ரசிமிகளின் உத்தம கிரணங்களை அணிந்து எங்கும் செல்பவனும், தன் பாலனங்களால் யக்ஞத்தில் வழிபடுபவனை அவனுடைய மனையிலே செல்வப்படுத்துபவனுமான இவனே அந்த அக்கினி.



2. இந்த அக்கினி சத்தியத்தைப் பாலிப்பவன். நித்தியன். பெருஞ்சோதியான அவன் தேவ தேஜசுகளோடு துலங்குபவன். துரித குதிரையைப் போல் களைப்படையாமல் வருபவன். நண்பர்களிடம் நட்புச் செல்வங்களோடு அணுகுபவன்

3. தேவர்களுக்கு அளிக்கப்படும் ஒவ்வொரு அவிக்கும் தலைவன். எங்கும் பரவும் அவன் உஷையின் உதயத்திலே யக்ஞத்தை நடத்துபவன். பகைவர்களால் தடைபடாத யக்ஞத்திலே உத்தம அவிகள் அளிக்கப் படுபவன்.

4. அவிகளால் வளர்பவனும், துதிகளால் போற்றப் படுபவனும், துரிதமாய் இயங்குபவனுமான அவன், தேவர்களிடம் செல்லுகிறன். தேவர்களுடைய துதியாருக ஹோதாவும், மிக்க யஜிக்கத் தகுந்தவனும், தேவர்களோடு சேர்ந்திருப்பவனுமான அக்கினி, தன் சுவாலையால் தேவர்களுக்கு அவியையளிக்கிறன்.

5. போகங்களைப் பொழிபவனும், பிரகாசிப்பவனும், ஒடுங்குபவனுமான அக்கினியை, இந்திரனைப் போல் மொழிகளாலும், அவிகளாலும் எங்கள் முன்னே புலப்படுத்துங்கள். ஜயமுள்ள தேவர்களை யஜிக்கும் ஜாத வேதஸனைப் போல் அறிஞர்களான வழிபடுபவர்களால் துதிகளோடு போற்றப்படுபவனை முகப்படுத்துங்கள்.

6. போரிலே சேர்க்கப்படும் துரித குதிரைகளைப் போல் அக்கினியே! உன்னிலே எல்லாச் செல்வங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்திரபாலனங்களை வெல்லும் பாலனங்களை எங்களுக்களிக்கவும்.

7. அக்கினியே! நீ உன் மகிமையால் பிறந்து, யக்ஞத்திலே அமர்ந்தவுடன், அவிக்கு அருகணுகிறய். தேவர்கள் உன்னுடைய துவஜத்துக்கு வருகிறர்கள். முதல்வர்கள் உன்னல் பாலிக்கப்பட்டுச் செழிக்கிறர்கள். 8840

# 7. அக்கினி

## 844. திரித ஆப்தியன்

1. தேவனுன அக்கினியே! நாங்கள் யக்ஞத்தைச் செய்ய நீ, எங்களுக்கு சோதியிலிருந்தும், புவியிலிருந்தும், செல்வத்தையும், செழிப்பான உணவையுமளிக்கவும்.

2. அக்கினியே! உனக்கு இந்தத் துதிகள் தோன்றுகின்றன. புரவிகளோடு சேர்ந்த செல்வத்துக்காக உன்னைத் துதிக்கின்றன. உன்னுல் அளிக்கப்படும் போகத்துக்குரிய செல்வத்தை அடையுங்கால் வசுவே! அக்கினியே! நன்கு பிறந்தவனே! செல்வங்களை அளிக்கும் நீ, எங்கள் பாக்களால் போற்றப்படுகிருய்.

3. நான் அக்கினியைத் தந்தையாக, அக்கினியைப் பந்துவாக, அக்கினியைச் சகோதரனுக, நித்திய நண்பனுகக் கருதுகிறேன். நான் சோதியிலே விளங்குவதும், சூரியனுடைய போற்றத்தகுந்ததும், ஒளியுள்ளதுமான மண்டலத்தை மகத்தான அக்கினியின் முகமெனப் போற்றுகிறேன்.

4. அக்கினியே! உனக்கு எங்களால் ஊக்கமாய்த் துதிகள் கூறப்படுகின்றன. தேவர்களின் நித்திய ஹோதாவான உன்னுல் பாலிக்கப்படுபவன், ஸத்தியவானுக. சிகப்புக் குதிரைகளையும் செழிப்பான உணவையும் பெறுவானுக. இரவிலும் பகலிலும் அவனுக்கு அனைத்தும் இன்பமாகுக.

5. மனிதர்கள் தங்கள் கைகளால், ஒளிக்கதிர்களால் அலங்கரிக்கப்படுபவனும், நண்பனுகவரிக்கப்படுபவனும், பழைய ஹோதாவும், யக்ஞத்தை நிறைவேற்றுபவனுமான அக்கினியைப் பிறப்பித்தார்கள். அவர்கள் அவனை சனங்களின் நடுவே ஹோதாவாக நியமித்தார்கள்.

6. தேவனுன அக்கினியே! நீ சோதியிலிருக்கும் தேவர்களை சுயமாகவே யஜிக்கவும். அறிவிலியும்,



அபக்குவ மனமுள்ளவனும் உனக்கு எதைச் செய்வான்? தேவனே! நீ உரிய பருவங்களில் தேவர்களை யஜித்தது போல், ஸுஜாதனே! நீ உன்னையே, உன்னுடைய தேகத்தையே யஜித்துக்கொள்ளவும்.

7. அக்கினியே! எங்களைப் பாலிப்பவனும் காப்பவனுயுமிருக்கவும். எங்களுக்கு உணவை அளிக்கவும். ஆற்றலையளிக்கவும். மகத்தான அக்கினியே! நாங்கள் அவிகளைப் பெற்றுக்கொள்ள, கவனமுடன் எங்கள் தேகங்களைப் பாலிக்கவும். 8847

# 8. அக்கினி

## 845. திரித ஆப்தியன்

1. அக்கினி மகத்தான கொடியோடு சோதிபுவிகளிலே சுற்றுகிருன். அவன் காளையைப் போல் கர்ச்சிக்கிருன் அவன் சோதியின் உயர்ந்த எல்லைகளுக்குச் செல்லுகிருன். மகிஷனுன அவன் சலங்களின் அங்கத்திலே செழிக்கிருன்.

2. சோதிபுவிகளின் கருவும், காளையும், காத்தனுமான அவன், இன்புறுகிருன். காலை மாலைகளின் புகழுள்ள குழந்தையும், யக்ஞங்களை நடத்துபவனுமான அவன் முழங்குகிருன். தேவர்களின் யக்ஞத்திலே ஊக்கச் செயல்களை நடத்தி தனக்குச் சொந்தமான இடங்களில் முதல்வனுய்ச் சலனமாகிருன்.

3. அவர்கள் பெற்றோர்களின்-சோதி புவிகளின்-தலையைப் பற்றிய அக்கினியின் அலையொளியை யக்ஞத்திலே ஸ்தாபித்தார்கள். அவனுடைய துரிதமான ஓட்டத்திலே குதிரைகளால் இழுக்கப்படும் உஷைகள் தங்கள் தேகங்களை ருதத்தின் ஸ்தானத்திலே இன்புறுத்துகிருர்கள்.

4. வசுவே! அக்கினியே! நீ ஒவ்வொரு உஷையையும் முந்துகிருய். நீ இரட்டைகளான இரவையும் பகலையும் ஒளிப்படுத்துகிருய். நீ உன் சுய தேகத்திலிருந்து

மித்திரனைத் தோற்றுவித்து, ருதத்துக்காக ஏழு உலகங்களைத் தாங்குகிறாய்.

5. நீ மகத்தான ருதத்தின் பாலகனாகும், கண்ணாகும். நீ ருதத்துக்குச் செல்லுங்கால் வருணனாகிறாய். ஜாதவேதஸனே! நீ சலத்தின் பேரனாயிருக்கிறாய். நீ எவனுடைய அவியைப் பற்றுகிறாயோ அவனுக்குத் தூதனாயிருக்கிறாய்.

6. நீ யக்ஞத்துக்கும், உன்னால் போற்றப்படும் மங்களமான குதிரைகளோடு செல்லும் இடத்துக்கும் தலைவனாயிருக்கிறாய். நீ சோதியிலே முதல்வனாயுள்ள சூரியனைத் தாங்குகிறாய். அக்கினியே! நீ உன் நாக்கை அவி ஏந்துபவனாகச் செய்கிறாய்.

இந்திரன்

7. திரிதன் யக்ஞத்திலே பாகத்தை விரும்பி தன் ஆற்றல்களால் உலகத்தின் உத்தம பாலகனான இந்திரனுடைய வீரச்செயலில் கலந்துகொள்ள அவனோடு நண்பனாகச் சேர்ந்தான். அறிஞர்களோடு சூழப்பட்டிருந்த அவன் பெற்றோர்களான சோதி புவிகளின் அருகிலுள்ள யக்ஞத்தில் தகுந்த துதியைக் கூறி தன் ஆயுதங்களை ஏந்தினான்.

8. தன் பெற்றோர்களின் ஆயுதங்களை உபயோகிக்க அறிந்தவனான ஆப்தியன்—சலத்தின் மகன், இந்திரனால் பிரேரிக்கப்பட்டு, பகைவனை எதிர்த்துப் போர் செய்தான். மூன்று தலைகளும், ஏழு ரசிமிகளுமுள்ள அசுரனைக் கொன்றான். பிறகு திரிதன் துவஷ்டாவினுடைய புதல்வரின் பசுக்களை விடுவித்தான்.

9. வீரர்களின் தலைவனான இந்திரன் அதிக பலத்தை அடைய நாடியவனும், தன்னை ஆற்றலுள்ளவனாக எண்ணியவனுமான சத்துருவைப் பிளந்தான். அழித்தான். அவன் முழக்க, தான் துவஷ்டாவின் விசுவரூபமுள்ள புதல்வனுடைய பசுக்களைப் பிடித்து, அவனுடைய மூன்று தலைகளைத் துணித்தான். 8856



# 9. சலங்கள்

## 846. ஸிந்துத்வீபன் — அம்பரீஷனுடைய மகன்

1. சலங்களே! நீங்கள் சுகத்தைத் தருபவர்கள். மகத்தான இன்பத்தைக் காண எங்களுக்கு ஆற்றலை அளியுங்கள்.

2. உங்களுடைய மிக்க மங்களகரமாயுள்ள ரஸத்திலே எங்களுக்குப் பாகத்தை அன்புமிகுந்த தாய்மார்களைப்போல் அளியுங்கள்.

3. நாங்கள் துரிதமாய் உங்களிடம் வருவோமாக. ஏனெனில் உங்களிடம் நோயை நீக்கும் ஆற்றலுண்டு. அதனால் எங்களை நீங்கள் இன்புறுத்துகிறீர்கள். சலங்களே! எங்களுக்கு சனன சக்தியை அளியுங்கள்.

4. எங்களுக்கு சுகம் தோன்றுக. தேவிகளான சலங்கள் எங்கள் யக்ஞத்துக்கும், பானத்துக்கும் தோன்றுவார்களாக. எங்களைச் சுற்றிலும் அவர்கள் பெருகுவார்களாக. அவர்கள் எங்களுக்கு ஆரோக்கியத்தையும் ஆற்றலையும் பொழிவார்களாக.

5. நான், உத்தமச் செல்வர்களின் தலைவர்களும், மானிடர்களுக்கு மனைகளையளிப்பவர்களுமான சலங்களிடம் மருந்தை வேண்டுகிறேன்.

6. சலங்களிலே, விசுவத்தை சுகப்படுத்தும் அக்கினியும், எல்லா மருந்துகளுமுண்டு என ஸோமன் என்னிடம் கூறினான்.

7. சலங்களே! நான் நீண்டகாலம் சூரியனைக் காண, என் தேகத்தில் எல்லா நோய் நீக்கும் ஔஷதங்களை நிரப்புங்கள்.

8. சலங்களே! நீங்கள் என்னில், எக்குற்றமிருந்தாலும், நான் எத்துரோகஞ் செய்திருந்தாலும், பழிச்சொல்லையோ, பொய்ச்சொல்லையோ கூறியிருந்தாலும், நீங்கள் அவற்றை என்னிடமிருந்து நீக்குங்கள்.

9. நான் இன்று சலங்களினுள் நுழைந்தேன். நாங்கள் அவற்றின் ரஸத்தோடு கலந்திருக்கிறோம். நீர்களிலுள்ள அக்கினியே! நீ வா. நீ என்னைத் திடப்படுத்தவும். 8865

# 10. இயமியும் இயமனும்

## 847. இயமியும் இயமனும்

விவசுவானின் புதல்வியும் புதல்வனும் இரட்டையர்கள்.

1. இயமி பேசுகிறாள். நான் என் நண்பனை நட்புக்காக அழைக்கிறேன். நான் பரந்திருப்பதும், தனித்திருப்பதுமான கடலைக் கடந்து வந்திருக்கிறேன். அறிஞன் சிந்தனை செய்து, தந்தை எனத் தெளிந்து உத்தம குணங்களுள்ள புதல்வனைப் புவியிலே என்னிலே ஸ்தாபிப்பானாக.

2. இயமன் பேசுகிறான் : உன் நண்பன் இந்த நட்பை விரும்பவில்லை. நாம் ஒரே மூலத்திலிருந்து வந்தாலும், நீ சகோதரியாயிருக்கிறாய். மகத்தான அசுரனுக்கு சோதியை ஏந்துபவர்களும், தூரத்திலிருந்தே பார்ப்பவர்களுமான வீரப் புதல்வர்கள், இருக்கிறார்கள்.

3. இயமி பேசுகிறாள் : மானிடனுக்கு விலக்கப்பட்டுள்ள இந்த ஸம்பந்தத்தைத் தேவர்கள் விரும்புகிறார்கள். உன் மனம் என் மனத்தோடு சேர்க. அனைத்தையும் பிறப்பித்தவன் புதல்வியின் கணவனாயிருந்தது போல், நீயும் என்னைக் கணவனாகப் பற்றுவாயாக.

4. இயமன் பேசுகிறான்: பூர்வத்தில் செய்யப்பட்ட எந்த பராக்கிரமச் செயலையும், நாம் இப்பொழுது செய்யவில்லை. சத்தியத்தைப் பேசும் நாம், இப்பொழுது அசத்தியமாயிருப்பதை எங்ஙனம் கூறுவோம்? கந்தர்வன் சூரியன் சலமய வானில் இருந்தான். சலம் அவனுடைய மனைவியாயிருந்தாள். அவர்களே நமது பெற்றோர்கள். ஆதலால் நாம் நெருங்கிய பந்துக்கள். சகோதர சகோதரி முறையிலிருக்கிறோம்.



5. இயமி பேசுகிறாள்: துவஷ்டாவும், ஸவிதாவும், விசுவரூபனுமான தந்தை நம்மைக் கருப்பையினுள்ளேயே புருடனும் மனைவியுமாகச் செய்தான். எவனும் அவனுடைய ஆக்ஞைகளைப் பங்கம் செய்யான். நம்முடைய இந்த ஸம்பந்தத்தை சோதியும் புவியும் அறிந்திருக்கிறார்கள். 8870

6. இயமன் பேசுகிறான்: நீ கூறும் அந்த முதல் தினத்தை எவன் அறிகிறான்? அதை எவன் கண்டான்? அதை இங்கு எவன் கூறினான்? மித்திரா வருணர்களுடைய ஆக்ஞை எங்கும் பரவியிருக்கிறது. மனிதர்களை நரகத்தால் மயக்கும், கண்டிக்கும் நீ என்ன பேசுகிறாய்?

7. இயமி பேசுகிறாள்: ஒரே சயனத்தில் உன்னோடு சயனிக்க யமியான எனக்கு யமனான உன் மீது காமம் தோன்றுகிறது. நான் கணவனிடம் மனைவியைப்போல் நான் என் தேகத்தை உன்னிடம் அதீனப்படுத்துகிறேன். நாம் பரஸ்பரம் சேர தேரின் இரு சக்கரங்களைப்போல் ஊக்கமுள்ளவர்களாவோமாக.

8. இயமன் பேசுகிறான் : தேவர்களின் ஒற்றர்கள் இங்கு நிற்காமல், இமைக்காமல் சுற்றித் திரிகிறார்கள். அழிப்பவளே ! நீ என்னிடமிருந்து விலகி வேறு எவனிடமாவது செல்லவும். அவனும் நீயும் ஐக்கியமாக நீங்கள் இருவரும் தேரின் இரு சக்கரங்களைப் போல் ஊக்கமாயிருங்கள்.

9. இயமி பேசுகிறாள் : வழிபடும் ஒவ்வொருவனும் இயமனை இரவிலும் பகலிலும் யஜிப்பானாக. அடிக்கடி சூரியனுடைய கண், யமனுக்கு உதயமாகுக. அவனுக்குப் பந்துக்களான தம்பதிகள்-இரவும் பகலும்-சோதியோடும் புவியோடும் சேர்வார்களாக. இயமனுடைய சகோதரத் தன்மையற்ற செயலை இயமி ஏந்துவாளாக. இயமனுடைய சகோதரத் தன்மையற்ற மறுப்பைப் பொறுமையோடு சகிப்பாளாக.

10. இயமன் பேசுகிறான் : சகோதரனைக் கணவனாக நாடாமல் வேறு எவனையாவது பதியாகப் பற்றும் காலங்கள் வரும். ஆதலால் செல்வியே ! என்னைத் தவிர வேறு எவனையாவது புருஷனாக விரும்பவும். விருஷபனுக்கு உன் புஜத்தைத் தலையணையாக அளிக்கவும். 8875

11. இயமி பேசுகிறாள் : நாதனில்லாத சகோதரிக்கு சகோதரன் சகோதரனா ? நிர்ருதி சகோதரனை அனுகுங்கால் சகோதரி சகோதரியோ? காமத்தால் வெல்லப்பட்ட நான், இங்ஙனம் பல மொழிகளைப் புலம்புகிறேன். என் தேகத்தை உன் தேகத்தால் தழுவிக்கொள்ளவும்.

12. இயமன் பேசுகிறான் : நான் என் தேகத்தை உன் தேகத்தோடு தழுவமாட்டேன். சகோதரியிடம் செல்பவனை அவர்கள் பாவி எனக் கூறுகிறார்கள். என்னை விட்டுவிடு. நீ வேறு எவனோடாவது இன்பத்தை அனுபவிக்கவும். செல்வியே ! உன்னுடைய சகோதரன் உன்னோடு இந்த இன்பத்தை விரும்பவில்லை.

13. இயமி பேசுகிறாள் : இயமனே ! நீ ஆற்றலற்றவன். நாங்கள் உன்னில் மனத்தையும் இருதயத்தையும் காணவில்லை. உன்னை வேறு ஒரு பெண் குதிரையைக் கட்டும் கச்சையைப் போலும், மரத்தைத் தழுவும் கொடியைப் போலும் தழுவுவாள்.

14. இயமன் பேசுகிறான்: இயமியே ! நீ வேறு ஒருவனை மரத்தைத் தழுவும் கொடியைப் போல தழுவவும். வேறு ஒருவன் உன்னை மரத்தைத் தழுவும் கொடியைப் போல தழுவுவானாக. நீ அவன் மனத்தை விரும்பவும். அவன் உன் மனத்தை விரும்புவானாக. நல்ல மங்களமான இன்பச் செல்வத்தை ஐக்கியம் செய்து கொள்ளவும். 8879



# 11. அக்கினி

## 848. அக்கினி ஹவிர்த்தானன்

1. விருஷபன்—ஸோமன் — விருஷபனுக்கு—வருணனுக்கு சோதியின் பாலை—ஸோமரஸத்தை—அளித்தான். அதிதியின் மகன் — வருணன் — எம்பொழுதும் இன்னலாகான். எங்ஙனம் வருணன் தன்னறிவால் அனைத்தையுமறிகிறானோ, அங்ஙனம் அக்கினியும் அறிகிறான். யக்ஞாருகனான அக்கினி யக்ஞாருக ருதுக்களைப் போற்றுவானாக.

2. கந்தர்வியும், சலச் செல்வியான அவியும் அக்கினியைப் போற்றுகிறார்கள். அவன் துதியிலே என் குரலை எழுப்பி என் மனத்துக்கு அனுகூலமாயிருப்பானாக. அக்கினி எங்களை யக்ஞத்தின் நடுவே ஸ்தாபிப்பானாக. வழிபடுபவர்களின் முதல்வனான எங்கள் மூத்த சகோதரன் பலவித ஸ்தோத்திரங்களைக் கூறுகிறான்.

3. அவர்கள் யக்ஞத்துக்காகத் துதிகளைக் கூறிய பிறகு விரும்பும் தேவர்களை அழைப்பவனும். ஆர்வமுள்ளவனுமான அக்கினியைப் பிறப்பித்தவுடன் போற்றத்தகுந்தவனும், முழங்குபவனும், புகழுள்ளவனுமான அந்த உஷை மானிடனின் நலத்துக்காகச் சூரியனோடு எழுகிறான்.

4. அக்கினியால் யக்ஞத்துக்குப் பிரேரிக்கப்பட்ட பருந்து மகத்தாயும், அனைத்தையும் காண்பதாயும், சொட்டுவதாயுமுள்ள - ஸோமத்தை ஏந்தி வந்தது. ஆரியசனங்கள் ஜயமுள்ள அக்கினியை ஹோதாவாக உயர்த்தியவுடன் தோத்திரம் தோன்றிற்று.

5. அக்கினியே! மந்தைகளைத் திருப்தி செய்யும் மேய்தரைகளைப் போல் வழிபடுபவர்களுக்கு நீ எப்பொழுதும் இனியனாயிருக்கிறாய். மனிதனுடைய யக்ஞங்களால் நன்கு போற்றப்படவும். விப்பிரனுடைய யக்ஞ அவி

யைப் பற்றி, துதியைப் போற்றி பல யக்ஞத் தேவர்களோடு வருங்கால் நீ இனியனுயிருக்கிறுய்.

6. அக்கினியே! நீ பெற்றேர்களை—சோதியையும்—புவியையும்—தன் ஒளியை எழுப்பும் சூரியனைப் போல் எழுப்பவும். வழிபடுபவவன் தேவர்களை யஜிக்க விரும்புகிறுன். அதனுல் அவர்கள் திருப்தியாகிறுர்கள். அவன் தன் முழு இருதயத்தோடு யஜிக்க விரும்புகிறுன். அவன் துதியை மீண்டும் கூற விரும்புகிறுன். ஏந்தும் ஹோதா நல்ல செயலை நடத்த விரும்புகிறுன். யக்ஞம் செழிப்பை விரும்புகிறது. அறிஞன் அறிவால் கலங்குகிறுன்.

7. அக்கினியே! ஆற்றல் மகனே! உன் ஸுமதியைப் பெறும் மானிடன் மிக்கப் புகழுள்ளவனுகிறுன். அவன் மிகுந்த உணவைப் பெறுகிறுன். குதிரைகளிலே செல்லுகிறுன். ஆற்றலையும் சிறப்பையுமடைந்து சீவிக்கும் நாட்களில் எல்லாம் பாங்குடன் விளங்குகிறுன்.

8. போற்றத்தகுந்த அக்கினியே! இந்த சங்கத் துதியானது தேவர்களின் நடுவே துலங்குங்கால் அவி ஏந்துபவனுன நீ, அரிய செல்வங்களைக் கூர்படுத்துங்கால் எங்களுக்கு சிரேஷ்டமான பாகத்தை அளிக்கவும்.

9. அக்கினியே! பொது இடத்தில் இருக்கும் நீ, எங்களைக் கேட்கவும். உன்னுடைய துரிதமாயுள்ள தேரை இணைக்கவும். தேவப் புதல்விகளான சோதியையும், புவியையும் எங்களிடம் செலுத்தவும். தேவர்களிலே எந்தத் தேவனும் வரத் தவருமலிருப்பானுக. நீயும் இங்கே தவருமல் வரவும். 8888

## 12. அக்கினி

### 849. ஹவிர்தான அக்கினி

1. தேவனுன அக்கினி மானிடர்களை யக்ஞத்துக்குப் பிரேரித்து, தன் சுவாலையை எழுப்பி, தேவர்களின் ஹோதாவாக அவர்கள் முன்னே அமருங்கால் சத்தியத்தைக் கூறுபவர்களும், முதல்வர்களுமான சோதியும் புவியும் ருதத்தோடு சேர்ந்துள்ள அழைப்பிலே பிரசன்னமாயிருப்பார்களாக.



2. முதல்வனும், அறிஞனும், தூமகேதுவும், ஸமிந்தனத்தில் எழுப்பப்பட்டவனும், உயர்ந்த சுவாலையுள்ளவனும், போற்றத் தகுந்தவனும், துதியோடு நித்திய ஹோதாவும், தேவனுமான அக்கினியாம் நீ, தேவர்களில் முதல் தேவனுக அவர்களைச் சூழ்ந்துகொண்டு ருதத்தோடு எங்கள் அவியைச் செலுத்தவும்.

3. தேவனுன அக்கினியின் தானே சேரும் சலத்தை, தன் ஒளியிலிருந்து அக்கினி பிறப்பிக்குங்கால் அச்சலத்திலிருந்து தோன்றும் ஓஷதிகள் சோதியையும் புவியையும் தாங்குகின்றன. உன்னுடைய வெண் ஒளியால் கறக்கப்பட்டதும் திவ்யமாயும் புட்டியளிப்பதாயுமுள்ள சலதானத்தை எல்லாத் தேவர்களும் போற்றுகிறுர்கள்.

4. நீங்கள் என்னைச் செல்வப்படுத்த உங்களுடைய செயலைப் போற்றுகிறேன். சோதி புவிகளே! நெய் சொட்டும் இரு உலகங்களே! செவியுறுங்கள். இரவுகளும் பகல்களும் சீவகர்களின் உலகத்துக்குச் செல்லுங்கால் பெற்றேர்கள் — சோதி புவிகள் — எங்களை இனிய சலந்தால் புதிப்பிப்பார்களாக.

5. அரசனுன அக்கினி எங்களுடைய அவிகளை ஏற்றுக்கொள்வானு? நாங்கள் எங்கள் விரதங்களைச் சரியாக நிறைவேற்றினேமா? எவன் அறிகிறுன்? இப்பொழுது எங்களுடைய தோத்திரம் அன்பாய் அழைக்கப்பட்ட நண்பனைப் போல் தேவர்களிடம் செல்க. மிச்சப்பட்ட அவியும் சேர்ந்து செல்க.

6. அமிருதனுடைய — எமனுடைய — நாமத்தை — தன்மையை, இயல்பை அறிவது கடினமாயிருக்கிறது. அவன் ஒரே மூலத்திலிருந்து வந்தாலும், வேறு வடிவத்துடனிருக்கிறுன். எமனேடு எமி பிறந்தாலும் அவன்

அவனுடைய சகோதரியாகவே இருக்கிறாள். மகானான அக்கினியே! அறிவதற்குச் சுலபமாயுள்ள எமனுடைய இயல்பை அறிபவனைக் கவனமாய்ப் பாலிக்கவும்.

7. தேவர்கள் யக்ஞத்திலே அவனிடம் இன்பத்தைக் காண்கிறார்கள். அவர்கள் யக்ஞம் நடத்துபவனுடைய ஸதனத்திலே தாமாகவே அமர்ந்து கொள்கிறார்கள். அவர்கள் சூரியனிலே சோதியை ஸ்தாபித்தார்கள். சந்திரனில் கதிர்களை ஸ்தாபித்தார்கள். இவர்கள் ஓயாமல் எங்கும் ஒளியைத் தருகிறார்கள்.

8. அனைத்தையும் ஒளிப்படுத்தும் அக்கினி, இருக்கும் இடத்திலே தேவர்கள் எல்லாம் சேர்கிறார்கள். அவன் மறைந்திருந்தால் அவனிருக்கும் இடத்தை நாம் அறியோம். ஆதலால் இந்த யக்ஞத்திலே மித்திரனும், அதிதியும், ஸவிதாவும் நாங்கள் பாபமற்றவர்கள் என வருணனிடம் கூறுவார்களாக.

9. அக்கினியே! பொது இடத்தில் இருக்கும் நீ எங்களைக் கேட்கவும். உன்னுடைய துரிதமாயுள்ள அமுதத் தேரை இணைக்கவும். தேவப் புதல்விகளான சோதியையும் புவியையும் எங்களிடம் செலுத்தவும். தேவர்களிலே எவனும் வரத் தவறாமலிருப்பானாக. நீயும் இங்கே தவறாமல் வரவும். 8897

## 13. ஹவிர்த்தானங்கள்

### 850. விவஸ்வான்—அதிதியின் புதல்வன்

1. நான் உங்களுடைய அவி சுமக்கும் இரு சகடங்களுடைய பழைய மந்திரத்தைத் துதியால் இணைக்கிறேன். நீங்கள் வருங்கால் தோன்றும் சபதமானது தேவர்களிடம் வழிபடுபவனுடைய வழியைப் போல் செல்க.

2. நீங்கள் இருவரும் துரிதமாகி இரட்டைச் சகோதரிகளைப்போல் அருகில் வந்தவுடன் வழிபடும் தேவ பக்தர்கள் உங்களை முற்படுத்தினார்கள். உங்களுக்குரிய



இடத்தை அறியும் நீங்கள் அங்கே நிலையுங்கள். எங்கள் ஸோமத்துக்கு இனிய இருப்பிடங்களாயிருங்கள்.

3. நான் புவியிலிருந்து ஐந்து அடிகள் உயர்ந்தேன். நான் யக்ஞத்தின் ஐந்து அங்கங்களை – தானியம், பசு, ஸோமம், புரோடாசம், நெய் – சகடங்களில் ஏற்றினேன். நான்கு கால்களுள்ள சந்தங்களை விரதத்தோடு பின்பற்றுகிறேன். நான் இதை அட்சரத்தால் அளந்தேன். நான் ருதத்தின் நாபியிலே ஸோமத்தை சுத்தப்படுத்துகிறேன்.

4. தேவர்களுக்காக அவன்–எமன்-எந்த மிருத்யுவை வரித்தான்? மானிடர்களுக்காக எந்த அமுதத்தை வரிக்கவில்லை. எமனைத் தேவர்கள் அழிக்காமலிருக்கவும். மானிடர்கள் அமுதத்தை அடையவும் விதித்தான். அவர்கள்– அறிஞர்கள் -பிரகஸ்பதி ரிஷியை யக்ஞமாகச் செய்தார்கள். எமன் எங்களுடைய பிரியமான தேகங்களைப் பாலிக்கிறான்.

5. துதியோடு சூழ்ந்திருப்பவனும், துதிக்கத் தகுந்தவனுமான தந்தைக்கு ஸோமத்துக்கு ஏழு சந்தங்கள் எழுகின்றன. அவனுடைய புதல்வர்கள்—ரித்விஜர்கள்—அவனுடைய சத்தியமான துதியைக் கூறுகிறார்கள். சகடங்களான நீங்கள் இருவரும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் தலைவர்கள். நீங்கள் இருவரும் ஊக்கமாயிருங்கள். நீங்கள் தேவர்களையும் மனிதர்களையும் புஷ்டிப் படுத்துபவர்கள். 8902

## 14. எமன்

### 852. வைவஸ்வத எமன்

1. மானிடர்களை ஒருமித்துச் சேர்ப்பவனும், நல்லவர்களைப் புவியின்மேலே செலுத்துபவனும், பலருக்கு சோதியின் வழியைப் புலப்படுத்துபவனும், விவஸ்வானின் புதல்வனும், தலைவனுமான எமனை அவிகளால் போற்றவும்.

2. முதல்வனுன எமன் நாம் வசிக்கும் இடத்தை அறிந்தான். இந்தப் புற்றரையை எவனும் நம்மிடத்தி லிருந்து அபகரிக்க இயலாது. நம்முடைய பூர்வ பிதாக்கள் சென்ற வழியிலே பிறந்திருக்கும் அனைவரும் தங்களுக்குத் தாங்களே வகுத்துக்கொண்ட வழிகளிலே செல்லு கிருர்கள்.

3. மாதலீ கவ்யர்களோடு செழிக்கிருன். யமன் அங்கிரஸர்களோடு செழிக்கிருன். பிரகஸ்பதி ரிக்வர் களோடு செழிக்கிருன். தேவர்களால் செழிப்பிக்கப் படுபவர்களிலே தேவர்களைச் செழிப்பிப்பவர்களில் சிலர் -தேவர்கள்-சுவாஹாவிலும், சிலர் -பிதுருக்கள்- ஸ்வதா விலும் இன்புறுகிருர்கள்.

4. எமனே! அங்கிரஸர்களான பிதிர்க்களோடு சேர்ந்துள்ள நீ, இந்த யக்ஞத்திலே உட்காரவும். கவி களால் கூறப்படும் மந்திரங்கள் உன்னை இங்கு ஏந்தி வருக. அரசனே! இந்த அவியானது உன்னை இன்புறுத்துக.

5. எமனே! யக்ஞார்கர்களும், விசுவருபங்களுமுள்ள அங்கிரஸர்களோடு வா. இன்பமாகவும். யக்ஞஞ் செய் பவனை இன்புறுத்தவும். நான் இந்த யக்ஞத்திலே உன்னுடைய தந்தையான விவஸ்வானை அழைக்கிறேன். அவன் தருப்பையிலே யக்ஞஞ் செய்பவனை இன்புறுத்து வானுக. 8907

### பிதாக்கள்

6. அங்கிரஸர்களும், நவக்வர்களும், அதர்வர்களும்' பிருகுக்களும் ஸோமார்களாயிருக்கிருர்கள். பிதாக்களா யிருக்கிருர்கள். நாங்கள் இந்த யக்ஞர்களின் ஸுமதியில் சதா இருப்போமாக. இவர்களுடைய மங்களமான நல் மனத்திலே நாங்கள் பற்றப்படுவோமாக.

7. போகவும். எங்கள் பூர்வ பிதாக்கள் சென்ற பழைய வழிகளால் போய் விடவும். அங்கு நீ சுவதா



விலே இன்பமாகும் இரு அரசர்களான யமனையும் தேவனுன வருணனையும் காண்பாய்.

8. நீ பரம நிலயத்திலே பிதிர்க்களோடும், யமனுேடும், விருப்பப்பூர்த்தியோடும் சேர்ந்து கொள்ளவும். நீ பாவத்தை விட்டு உன்னுடைய மனைக்குத் திரும்பவும். ஒளியான தேகத்தோடு ஐக்கியமாகவும்.

9. இங்கிருந்து சென்றுவிடுங்கள். நீங்குங்கள்; வெகுதூரம் விலகுங்கள். பிதுருக்கள் அவனுக்கு இந்த ஸ்தானத்தை அளித்தார்கள். தினங்களாலும், சலங் களாலும், இரவுகளாலும், சுத்தப்பட்ட தகனஸ்தானத்தை அவனுக்கு யமன் அளித்தான்.

10. இறந்தவனே! ஸரனமயின் சந்ததிகளும், புள்ளி களுள்ளவையும், நான்கு கண்களிருப்பவையுமான இரு நாய்களைப் பத்திரமான வழியால் கடந்து செல்லவும். பிறகு யமனுேடு மகிழ்ந்து இன்புறும் நல்ல அறிஞர்களான பிதிர்க் களுடன் சேரவும். 8912

11. அரசனே! இரு நாய்களின் தலைவனே! யமனே! நீ பிரேதத்தை, யமப்பவனத்தைப் பாலிப்பவை யும், நான்கு கண்களிருப்பவையும், வழியைப் பாலிப்பவை யும், மனிதர்களால் புகழப்படுபவையுமான இரு நாய்களி னிடம் பாலனத்துக்களிக்கவும். அவனுக்குச் செல்வத் தையும் சுகத்தையுமளிக்கவும்.

12. யமனுடைய பரந்த மூக்குள்ளவையும், மிக்கப் பல முள்ளவையும், உயிரைக் குடித்துத் திருப்தியடைபவை யும், தூதர்களுமான இரு நாய்கள் சனங்களின் நடுவே சுற்றித் திரிகின்றன. இன்று இங்கு நாங்கள் சூரியனைக் காணவும், செல்வமான வாழ்க்கையில் விளங்கவும் அவை எங்களுக்கு இடமளிக்க வேண்டும்.

13. யமனுக்கு ஸோமத்தைப் பிழியுங்கள். அவியை யளியுங்கள். அக்கினியைத் தூதனுக உள்ளதும், நன்கு செய்யப்பட்டதுமான யக்ஞம் யமனுக்குச் செல்லுகிறது.

14. யமனுக்கு நெய் கலந்த அவியையளியுங்கள். அருகில் நில்லுங்கள். தேவர்களின் நடுவிலிருக்கும அவன், நாம் நலமுடன் வாழ நீண்ட ஆயுளை அளிப் பானுக.

15. அரசனுன யமனுக்கு இந்த மிக்க இனிமையான அவியையளியுங்கள். எங்களுடைய இந்தத் தோத்திரம் நல்ல வழிகளைச் செய்த முதல்வர்களான பழைய ரிஷி களுக்குக் கூறப்படுகிறது.

16. யமன் மூன்று திரிகதுருக யக்ஞங்களையும், சோதிடம், கௌ, ஆயு, ஆறு பரப்புக்களையும், சோதி, புவி, ஓஷதி, சலம், சூரியன், சத்தியம், ஏகமாயும் மகத் தாயுமுள்ள ஜகத்தையும் அடைகிருன். திருஷ்டுபுவும், காயத்திரியும் எல்லாச் சந்தங்களும் யமனில் சேர்கின்றன. 8918

## 15. பிதாக்கள்

### 852. சங்கன் எமனுடைய புதல்வன்

1. உயர்ந்தவர்களும், தாழ்ந்தவர்களும், மத்தியர் களுமான பிதாக்கள் ஸோமத்தை ஏற்றுக்கொண்டு எழு வார்களாக இன்னல் செய்யாதவர்களும், ருதத்தை அறிபவர்களுமான பிதாக்கள் நாங்கள் அழைக்குங்கால் எங்களுடைய சீவன்களைப் பாலிப்பார்களாக.

2. நாங்கள் இப்பொழுது இந்த வணக்கத்தை, முந்தியவர்களும், பிந்தியவர்களும், சென்றவர்களும், புவியின் நிலயத்திலே அமர்ந்திருப்பவர்களும், மகத்தான சனங்களின் நடுவே வசிப்பவர்களுமான பிதாக்களுக்கு அளிப்போமாக.

3. நான் நன்கறியும் பிதாக்களை அடைந்தேன். நான் விஷ்ணுவினிடமிருநது அழிவின்மையையும் ஆண்மை யையும் அடைந்தேன். ஸ்வதாவோடு – அவியோடு – ஸோமத்தை இன்புறும் அவர்கள் அடிக்கடி இங்கு வருகிருர்கள். தருப்பையின் மீது அமர்கிருர்கள்.



4. தருப்பையின் மீது அமரும் பிதாக்களே! இங்கு வாருங்கள். எங்களைப் பாலியுங்கள். நாங்கள் உங்களுக்கு இந்த அவிகளைக் கற்பித்திருக்கிறேம். இவற்றை ஏற்றுக் கொள்ளுங்கள். எங்களுக்கு சுகத்தையும், இன்பத்தையும் அளியுங்கள். துன்பத்திலிருந்து நீக்குங்கள்.

5. ஸோமார்களான பிதாக்கள் தருப்பையின் மீது அமைக்கப்பட்டுள்ள பிரியமான அவிகளுக்கு எங்களால் அழைக்கப்படுகிருர்கள். அவர்கள் வருவார்களாக. எங்கள் துதிகளைச் செவியுறுவார்களாக. சம்மதத்தைக் கூறுவார்களாக. எங்களைப் பாலிப்பார்களாக. 8923

மடக்கிய முழந்தாள்களோடு தென் பக்கத்தில் கீழே உட்கார்ந்து நீங்கள் அனைவரும் இந்த யக்ஞத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். பிதாக்களே! மானிடர்களின் துர்ப்பலத் தால் நாங்கள் ஏதேனும் குற்றம் செய்திருந்தால் நீங்கள் அக் குற்றத்துக்காக எங்களைத் துன்புறுத்தாதீர்கள்.

7. தேவர்களின் அருகிலே அமர்ந்திருக்கும் நீங்கள் அவியளிக்கும் மனிதனுக்குச் செல்வங்களை அளியுங்கள். பிதாக்களே! அவனுடைய புதல்வர்களுக்குச் செல்வத்தை யளியுங்கள். இங்கு எங்களுக்குச் செல்வத்தை அளியுங் கள்.

8. மகத்தான செல்வமுள்ளவர்களும், அதை விரும்பு பவர்களும், ஸோமத்தை முறையாகத் தேவர்களுக்கும் பிதாக்களுக்கும் செலுத்தியவர்களுமான பழைய ஸோமா ருகப் பிதாக்களோடு யமன் ஆர்வமுள்ளவர்களோடு — பிதாக்களோடு—ஆர்வமாகி, இன்பமாகி எங்கள் அவிகளை அருந்துவானுக.

9. அக்கினியே! நன்கறிந்தவர்களும், சத்தியத்தைப் பேசுபவர்களும், புலவர்களும், யக்ஞத்தை நிறைவேற்று பவர்களும், தேவத்தன்மையைக் கிரமமாய் அடைபவர் களும், யக்ஞத்தை நன்கு நடத்த அறிந்தவர்களும், தோத்

திரங்களோடு ஸ்தோத்திரங்களை நன்கு கூறுபவர்களும் ஸோம தாகமுள்ளவர்களுமான பிதாக்களோடு எங்கள் முன்னே வாருங்கள்.

10. அக்கினியே! சத்தியத்தைப் பேசுபவர்களும், அவிகளைப் புசிப்பவர்களும், அவிகளைப் பருகுபவர்களும், இந்திரனோடும் தேவர்களோடும் ஒரே தேரில் செல்பவர்களும், தேவர்களைப் போற்றுபவர்களும், பழையவர்களும், இனி வரப்போகும் புதியவர்களும் சோதியில் வசிப்பவர்களுமான ஆயிரம் பிதாக்களோடு வா. 8928

11. அக்கினியால் சுவைக்கப்பட்ட பிதாக்களே! நீங்கள் இங்கு வாருங்கள். நல்ல வழியிலே செலுத்தும் நீங்கள் உங்களுக்குரிய இடங்களில் அமருங்கள். தருப்பையின் மீது பரத்தியுள்ள அவிகளைப் புசியுங்கள். வீரப் புதல்வர்களோடு செல்வங்களை அளியுங்கள்.

12 ஜாதவேதஸனான அக்கினியே! எங்களால் போற்றப்படும் நீ எங்களுடைய அவிகளை சுகந்தப்படுத்தி ஏந்திச் சென்றாய். அவற்றைப் பிதாக்களுக்கு அளித்தாய். அவர்கள் ஸ்வதாவோடு அவற்றை அருந்துவார்களாக தேவனான அக்கினியே! அளிக்கப்படும் அவிகளை நீயும் புசிக்கவும்.

13. ஜாதவேதஸனே! நீ இந்த உலகத்திலே இல்லாதவர்களும், இருப்பவர்களும், எங்களால் நன்கு அறியப்படாதவர்களும், அறியப்படுபவர்களுமான எல்லாப் பிதாக்களையும் நீ அறிகிறாய். சுவதாக்களோடு நன்கு செய்யப்படும் யக்ஞத்தை நீ ஏற்றுக்கொள்ளவும்.

14. அக்கினியால் பற்பப்பட்டவர்களும், அக்கினியால் பற்பப்படாதவர்களும், சோதியின் நடுவிலிருக்கும் ஸ்வதாவால் திருப்தியடைவார்களாக. சக்கரவர்த்தியே! நீ அவர்களோடு சேர்ந்து சுவாசத்தோடுள்ள தேகத்தைக் கற்பித்துக்கொள்ளவும். 8932



# 16. அக்கினி

## 853. தமனன்-இயமனுடைய புதல்வன்

1. அக்கினியே! முற்றும் தகிக்காத அவனைத் துன்பப்படுத்தாதே. அவனுடைய தேகத்தையோ, சருமத்தையோ இங்குமங்கும் சிதறடிக்காதே. ஜாதவேதஸனே! நீ அவனைப் பக்குவப்படுத்தியவுடன் பிதாக்களிடம் செலுத்தவும்.

2. ஜாதவேதஸனே! அவனைப் பக்குவப்படுத்திய பிறகு பிதாக்களிடம் செலுத்தவும். அவன் சீவன் தோன்றும் பாகத்துக்குச் செல்லுங்கால் தேவர்களின் வசத்திலாகிறான்.

3. கண் சூரியனிடம் செல்க. மூச்சுக் காற்றினிடம் செல்க. நீ உன்னுடைய தருமத்தால் புவிக்கோ சோதிக்கோ செல்லவும். நீ சலங்களுக்கு, வானுக்குச் செல்லவும். அங்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் உன்னுடைய கரும பலத்தை ஓஷதிகளிலே உன் சரீரங்களோடு நீ வசிக்கவும்.

4. அக்கினியே! தேகத்திலே பிறப்பில்லாத ஒரு பாகம் இருக்கிறது. நீ உன்னுடைய தாபத்தால் அதைத் தாபப்படுத்தவும். உன்னுடைய சுவாலை, காந்தி, அதைத் தாபப்படுத்துக. தூய்மை செய்க. ஜாதவேதஸனே! உன்னால் அழிக்கப்பட்ட அந்த மங்களமய அங்கங்களோடு அவனை சுகிருத உலகத்துக்கு ஏந்திச்செல்லவும்.

5. அக்கினியே! உனக்கு அளிக்கப்பட்டு சுவதாக்களோடு வருபவனை, பிதாக்களிடம் மீண்டும் செலுத்தவும். அவன் சீவனை அடைந்து தன் சந்ததியை வளர்ப்பானாக. ஜாதவேதஸனே! அவன் மீண்டும் தேகத்தோடு சேர்வானாக. 8937

6. கருப்புக் காக்கையோ, எறும்போ, பாம்போ, நரியோ — பிரேதமான உன்னுடைய அங்கத்தைக் காயம்

செய்திருந்தால் அனைத்தையும் புசிக்கும் அக்கினியும் பிராமணர்களிடம் சென்ற ஸோமனும் அதைக் குணப் படுத்துவார்களாக.

7. அக்கினியின் கவசத்தை — சுவாலையை நெய், பால் முதலியவற்றால் போர்த்தவும். அதை மச்சையாலும், கொழுப்பாலும் மறைக்கவும். பிறகு தீரனும், தன் உக்கிர தாபத்திலே எக்களிப்பவனும், கர்வமுள்ளவனுமான அக்கினி உன்னை—பிரேதத்தை — பற்பப்படுத்த உன்னை முற்றும் தழுவுவானாக.

8. அக்கினியே! இப் பாண்டத்தை — துடுப்பை— ஆட்டாதே. இதைத் தேவர்களும் ஸோமர்களான பிதாக்களும் விரும்புகிறார்கள். இது தேவர்கள் பருகும் பாத்திரம். அமிருதர்களான தேவர்கள் இதில் இன்புறு கிறார்கள்.

9. நான் மாமிசம் புசிக்கும் அக்கினியைத் தூர தேசத் திலே செலுத்துகிறேன். அவன் பாவத்தை ஏந்தி அரச னான யமனுடைய இடத்துக்குச் செல்வானாக. அனைவரா லும் அறியப்படும் வேறு அனலான இந்த ஜாதவேதஸன் அவியைத் தேவர்களிடம் எடுத்துச் செல்வானாக.

10. நான் பிதாக்களின் யக்ஞத்துக்காக வேறு அக் கினியான இந்த ஜாதவேதஸனைப் பார்த்தவுடன் உங்கள் மனையிலே நுழைந்திருந்த மாமிசம் புசிக்கும் அக்கினியை அகற்றுகிறேன். அவன் பிதாக்களுக்கு யக்ஞத்தை மிக்க உத்தம சபையில் நடத்துவானாக. 8942

11. மாமிசத்தைப் புசிக்கும் அக்கினி ஸத்தியத்தால் செழிக்கும் பிதாக்களை யஜிப்பானாக. அவன் தேவர்களுக் குரிய அவி எவை எனவும், பிதாக்களுக்கு உரியவை எவை எனவும் அறிவிப்பானாக.

12. உற்சாகமுள்ள நாங்கள் உன்னைக் கீழே ஸ்தா பிக்கிறோம். உற்சாகமுள்ள நாங்கள் உன்னை சொலிப்



பிக்கிறோம். உற்சாகமுள்ள நீ, உற்சாகமுள்ள பிதாக்களை. அவிகளைப் புசிக்க ஏந்தி வரவும்.

13. அக்கினியே! நீ தாபப்படுத்திய ஸ்தானத்தை மீண்டும் தண்மைப் படுத்தவும். அங்கு நீராம்பல் தோன்றுக. இளம்புல்லும் இளம்பூண்டும் தோன்றுக.

14. குளிர்ந்தவளே! ஈர நிலமே! பசும் புற்கள் நிறைந்தவளே! இன்புறுத்துபவளே! இன்புறுத்தும் மரங்கள் நிறைந்தவளே! பெண் தவளைகளோடு சேரவும். இந்த அக்கினியை இன்புறுத்தவும். 8946

## 17. பலதேவர்கள்

### 854. தேவசிரவஸன் — யமன் புதல்வன்

#### ஸரண்யூ

1. துவஷ்டா தன் புதல்வியின் மணத்தை நடத்து கிறான். உலகமெல்லாம் இதை அறிந்து ஒன்றுகிறது. யமனுடைய தாய், மகத்தான விவஸ்வானுடைய மனைவி அவனுடைய மனைக்குச் செலுத்தப்படுங்கால் மறைந்தாள்.

2. மானிடர்களுக்காகத் தேவர்கள் அமுதியான ஸரண்யூவை மறைத்தார்கள். அவர்கள் அவளைப்போல் வேறொரு பெண்ணைக் கற்பித்து விவஸ்வானுக்கு அளித் தார்கள். ஸரண்யூ, விவஸ்வானுக்கு வேறு வடிவத்திலே — குதிரை வடிவை எடுத்தவுடன் — அவனோடு சேர்ந்து இரு அசுவினிகளை ஏந்தினாள். பிறகு இரு இரட்டை களான யமனையும் யமியையும், இரு அசுவினிகளையும் விட்டு விட்டுச் சென்றாள்.

#### பூஷா

3. அறிஞனும், நஷ்டமாகாத பசுக்கள் உள்ள வனும், புவனத்தைப் பாலிப்பவனுமான பூஷா, உன்னை உத்தம உலகத்துக்குச் செலுத்துவானாக. உன்னை இந்த பிதாக்களிடம் அளிப்பானாக. அக்கினி உன்னைப் பேரறி ஞர்களான தேவர்களுக்கு அளிப்பானாக.

4. எங்கும் வியாபகமாகும் வாயு உன்னைப் பாலிப்பானாக. உத்தம வழியிலே முதல்வனாயிருக்கும் பூஷா உன்னைப் பாலிப்பானாக. தேவனான ஸவிதா உத்தமச் செயலாளர்கள் சென்று வசிக்கும் இடத்திலே உன்னை ஸ்தாபிப்பானாக.

5. பூஷா இந்தத் திசைகளையெல்லாம் தனித்தனியாய் அறிகிறான். அவன் எங்களை அச்சமற்ற வழியால் நடத்திச் செல்வானாக. செல்வத்தைத் தருபவனும், காந்தி-யுள்ளவனும், எல்லா வீரர்களால் பின்பற்றப்படுபவனும், விழித்திருப்பவனும், நன்கறிபவனுமான அவன் எங்கள் முன்னே செல்வானாக. 8951

6. வழிகளின் உத்தம வழியிலே, சோதியின் உத்தம வழியிலே, புவியின் உத்தம வழியிலே பூஷா தோன்றுகிறான். பிரியப்படுபவையும், சபைகளிலிருப்பவையுமான இரு உலகங்களிலே அனுகூலமாகவும், பிரதிகூலமாகவும் செல்லுகிறான்.

### ஸரஸ்வதி

7. தேவபக்தர்கள் ஸரஸ்வதியை அழைக்கிறார்கள். அவர்கள் யக்ஞத்தை நடத்துங்கால் ஸரஸ்வதியைப் போற்றுகிறார்கள். சுகிருதர்கள்—உத்தமச் செயல்களைச் செய்பவர்கள்—ஸரஸ்வதியை அழைக்கிறார்கள். ஸரஸ்வதி அவிகளை அளிப்பவனுக்குப் போற்றத் தகுந்த செல்வத்தை அளிப்பாளாக.

8. ஒரே தேரிலே பிதாக்களோடு செல்லும் ஸரஸ்வதி அவர்களோடு சுவதாக்களிலே—அவிகளிலே—இன்புறுகிறாள். நீ இந்தத் தருப்பையிலே அமர்ந்து இன்பமாகவும். எங்களுக்கு நோயற்ற உணவை அளிக்கவும்.

9. எங்கள் யக்ஞத்துக்கு நேராக வந்திருக்கும் பிதாக்களால் அழைக்கப்பட்ட ஸரஸ்வதியான நீ, எங்களுக்கு ஆயிரம் சனங்களுக்குப் போதுமான உணவின் பாகத்தையும் செல்வச் செழிப்பையுமளிக்கவும்.



### சலங்கள்

10. தாய்மார்களான சலங்கள் எங்களை சுத்தப் படுத்துவார்களாக. நெய்யை, வேறுசலத்தை சுத்தப் படுத்துபவர்கள் நெய்யால் எங்களை சுத்தப்படுத்துவார்களாக. தேவிகள் பாபத்தை யெல்லாம் எங்களிடமிருந்து எடுத்துச் செல்லுகிறார்கள். நான் சுத்தமாகி அவர்களிடமிருந்து எழுகிறேன். 8956

### ஸோமம்

11. புவிக்குரிய சோதிக்குரிய உலகங்களுக்குச் சென்றதும் காணும் இந்த உலகத்துக்கும், இதற்கு முன்னாலிருந்த உலகத்தில் தோன்றியதும், இப்பொழுதும் ஒரே இடத்துக்குப் பாய்வதுமான ஸோம பிந்துவை—ரஸத்தை—ஏழு ஹோதாக்கள் கிரமமாய் யக்ஞத்தில் அளித்த பிறகு நான் அளிக்கிறேன்.

12. விழுவதும் கைகளால் ஆட்டப்பட்ட உன் இழையையும் பிழியும் ஸாதனத்திலிருந்து தோன்றுவதும், அக்வர்யுவின் சுத்தப்படுத்தும் பவித்திரத்திலிருந்து பாய்வதுமான ரஸத்தை நான் மனத்தோடு வஷட் சத்தத்தோடு உனக்களிக்கிறேன்.

13. சட்டுவத்தின் இரு பக்கங்களிலிருந்து விழுவதுமான உன் ரஸத்தை ஸோம இழைகளையும், தேவனான பிரகஸ்பதி எங்களைச் செல்வப்படுத்தத் தெளிப்பானாக.

### சலங்கள்

14. ஓஷதிகள் சலத்தால் செழிக்கிறது. சொல் சலத்தால் செழிக்கிறது. சலத்தின் ஸாரம் சலத்தால் செழிக்கிறது. நீங்கள்—சலங்கள்—என்னை அதனால் சுத்தப்படுத்துங்கள். ஓஷதிகள் பால் நிறைந்தவை. என்னுடைய இந்த மொழி பால் நிறைந்தது. சலங்கள் பால் நிறைந்தது. நீங்கள் அவற்றால் என்னை சுத்தப்படுத்துங்கள். 8960

# 18. பலதேவர்கள்

## 855. ஸங்குஸுகன்—யமன் புதல்வன்

### மிருத்தியு

1. மிருத்தியுவே! தேவர்கள் செல்லும் வழியிலிருந்து தனியாயிருப்பதும், உனக்குச் சொந்தமாயுமுள்ள வழியால் நீ நீங்கவும். நான் கண்களுள்ள உன்னிடம், செவிகளுள்ள உன்னிடம் கூறுகிறேன். எங்கள் சந்தானத்தையும், வீரர்களையும் துன்புறுத்தாதே.

2. நீங்கள் மிருத்யுவின் வழியிலிருந்து விலகி, தேவர்கள் செல்லும் வழியிலே சென்று, நீண்டுள்ளதும், நலமுள்ளதுமான ஆயுளை ஏந்தினல் யக்ஞத்தில் கவனமாயிருக்கும் நீங்கள்—யக்ஞஞ் செய்பவர்களே—செல்வத்தோடும் சந்தானத்தோடும் செழித்து, சுத்தர்களாகவும் தூயர்களாகவும் தோன்றுங்கள்.

3. சீவித்திருப்பவர்கள் மிருத்யுக்களிலிருந்து—பிதிர்க்களிடமிருந்து—தனிமையாயிருப்பார்களாக. இன்று எங்களுடைய தேவ அழைப்பு வெற்றியுடனுருக. நாங்கள் நீண்டிருப்பதும், மேன்மையாயுமுள்ள ஆயுளை ஏந்தி நடிப்புக்கும் சிரிப்புக்கும் முகப்பில் போவோமாக.

4. நான் இந்த வட்டத்திலே, சீவிப்பவர்களைத் தவிர வேறு எவனும் வராமலிருக்க எல்லையை வகுக்கிறேன். பல நல்ல செயல்களை நடத்துபவர்களாய் அவர்கள் நூறு வருஷங்கள் வசிப்பார்களாக. இவ்வெல்லையைப் புலப்படுத்தும் கல்லின் கீழே மிருத்தியு புதைக்கப்படுவானுக.

### தாதா

5. தினங்களைக் கிரமமாய்த் தினங்கள் பின்பற்றுகின்றன. பருவங்களைக் கிரமமாய்ப் பருவங்கள் பின்பற்றுகின்றன. முந்துபவனைப் பிந்துபவன் விடாமலிருக்கிருன். அங்ஙனமே தாதாவே—அனைத்தையும் ஏந்துபவனே! என்னுடைய இந்த சனங்களை ஏந்தவும். 8965



### துவஷ்டா

6. சீவித்திருப்பவர்களே! நீங்கள் முதுமையைப் போற்றி, பூரணுயுசுடன் சீவியுங்கள். நீங்கள் எல்லாம் இயங்கி ஒருவரை ஒருவர் பின்பற்றுங்கள். நல்ல பிரஜைகளைக் கற்பிக்கும் துவஷ்டா உங்களோடு ஐக்கியமாகி இந்த யக்ஞத்திலே உங்களுக்கு நீண்ட ஆயுசையளிப்பாருக.

### பிதிருமேதம்

7. உத்தமக் கணவர்களோடுள்ள அவிதவைகளான இந்தப் பெண்கள் அஞ்சனத்தோடும், நெய்யோடும் மனைகளுக்குத் திரும்புவார்களாக. கண்ணீர் விடாமலிருப்பவர்களும், துக்கமில்லாமலிருப்பவர்களும், நகைகளால் அலங்காரஞ் செய்துகொண்டிருப்பவர்களுமான இந்தப் பெண்கள் முதலில் மனைக்குச் செல்வார்களாக.

8. ஸ்திரியே! விதவையான பெண்ணே! நீ எழுந்திருக்கவும். நீ சீவர்களுள்ள இந்த உலகத்துக்கு வா. இவனருகிலே நீ ஏன் சயனித்திருக்கிருய்? இவனுக்கு உயிரில்லை. உன்னைக் கையால் பிடித்துக் காதலித்த கணவனுன இவனிடம் மனைவியாயிருந்து நீ அனுபவித்த காலம் முடிந்தது.

9. மரித்தவனுடைய கையிலிருந்து நான் அவன் ஏந்திய வில்லை அது எங்களுக்கு க்ஷத்திரமாகவும், சக்தியாயும், புகழாயுமிருக்க எடுக்கிறேன். வில்லே! நீ என்னுடிருக்கவும். இங்கு நாங்கள் உத்தம வீரர்களோடு எங்களை எதிர்க்கும் எல்லாப் படைகளையும் ஜயிப்போமாக.

10. மிகக் பரந்திருப்பதும், விசாலமுள்ளதும், சுகத்தைத் தருவதுமான தாயாம் இந்தப் புவியினிடஞ் செல்லவும். இந்த யுவதி—தரணி—ஈகையனுக்குக் கம்

பளத்தைப் போல் மிருதுவாயிருக்கிறாள். அவள் உன்னை அழிவின் அங்கத்திலிருந்து காப்பாளாக. 8971

11. நிலமே! நீ அவன் மேலே ஏறவும். நீ அவனை அழுத்தாதே. அவனைக் கவனித்துக்கொள்ளவும். அவனை சுகப்படுத்தவும். அவனைத் தன் ஆடையின் முந்தானையால் குழந்தையைப் போர்த்தும் தாயைப்போல் போர்த்தவும்.

12. அவன் மீது குவிக்கப்பட்ட மண் திரமாயிருக்க. ஆயிரம் மண் அணுக்கள் அவன் மேலே நிலைக்க. அவை அவனுக்கு நெய் சிந்தும் மனையாகுக. அவை எப்பொழுதும் மனையளிக்கும் வீடாகுக.

13. நான், நீ இருக்கும் குண்டத்தின் மீது இந்த மண் கட்டியை மூடியாக வைத்து, உன் மீது மண் வராமலிருக்கத் தடுக்கிறேன். நான் துன்பப்படாமலாவேனாக. பிதாக்கள் உன்னுடைய இந்த ஞாபகார்த்த ஸ்தம்பத்தைப் பாலிப்பார்களாக. உனக்கு யமன் இங்கு மனையைச் செய்வானாக.

14. அவர்கள் என்னைத் தினத்தின் தேய்விலே, இணக்க தினத்திலே, அம்பின் சிறகுகளைப் போல் ஸ்தாபித்தார்கள். நான் என்னுடைய தேயும் குரலை, கடிவாளத்தால் குதிரையை அடக்குபவர்களைப் போல் அடக்கினேன். 8974

## 19. சலங்கள் அல்லது பசுக்கள்

### 856. மதிதயாமாயனன் அல்லது பிருகுவாருணி அல்லது பார்க்கசியவனன்

1. எங்களிடம் திரும்பி வாருங்கள். வேறு எவனிடமும் செல்லாதீர்கள். செல்வம் நிறைந்த நீங்கள் எங்களைப் பணியுங்கள்.

**அக்கினி ஸோமர்கள்**

மீண்டும் எங்களுக்குச் செல்வங்களை ஏந்திவரும் நீங்கள் எங்களுக்குச் செல்வத்தையளியுங்கள்.



2. ஆத்மாவே மீண்டும் சலங்களை முற்படுத்தவும். அவற்றைப் பணியச் செய்யவும். இந்திரன் அவற்றை மீண்டும் இங்கு செலுத்துவானாக. அக்கினி அவற்றை அருகில் பிரேரிப்பானாக.

3. அவை மீண்டும் என்னிடம் வருக. இந்தப் பாலகனால் புட்டிப்படுக. அக்கினியே! நீ அவற்றை இங்கு ஸ்தாபிக்கவும். இருக்கும் எந்தச் செல்வமும் இங்கு நிலைக்க.

4. நான் அவற்றின் இடத்தையும், போக்கையும், வரவையும், நீக்கத்தையும், திரிவையும், திரும்புகையையும் அறிய விரும்புகிறேன். அவற்றைப் பாலிப்பவனை நான் அழைக்கிறேன்.

5. இந்தப் பசுக்களைப் பற்றுபவனும், தவறும் பசுக்களை, திரியும் பசுக்களை, திரும்பும் பசுக்களைப் பற்றுபவனுமான கோபாலனை அழைக்கிறேன். 8979

6. இந்திரனே! நீ திரும்பவும். பசுக்களைத் திருப்பவும். மீண்டும் எங்கள் பசுக்களை அளிக்கவும். அவை உயிருடனிருக்கின்றன என நாங்கள் இன்புறுவோமாக.

7. நான் எங்குமிருக்கும் தேவர்களாம் உங்களை, தயிராலும், நெய்யாலும், பாலாலும் புட்டிப்படுத்துகிறேன். யக்ஞார்கர்களான அந்தத் தேவர்கள் எல்லாம் எங்களுக்குச் செல்வத்தையளிப்பார்களாக.

8. ரிஷியே! அவற்றை வீட்டுக்குச் செலுத்தவும். மனைக்குச் செலுத்தவும். நீ அவற்றை மீட்கவும். புவிக்கு நான்கு திசைகள் இருக்கின்றன. நீ அவற்றை அங்கிருந்து மனைக்குத் திருப்பவும். 8982

## 20. அக்கினி

### 857. விமதன் அல்லது வசுகிருதன்

1. அக்கினியே! எங்களிடம் அனுகூல மனத்தைப் புலப்படுத்தவும்.

2. அவி புசிக்கும் தேவர்களின் நடுவே மிக்க இளைஞனும், கடமையைக் கூறும் நண்பனும், தடை படாதவனும், எவனுடைய வணக்கத்திலே, தருமத்திலே தோத்திரங்கள், தாயான பசுவின் ஆபீனத்தை நாடும் கன்றுகளைப்போல் நாடுகின்றனவோ அத்தகைய சிறப்பு உள்ளவனுமான அக்கினியை நான் போற்றுகிறேன்.

3. தோத்திரத்தால் போற்றப்படுபவனும், செயல் களைத் தாங்குபவனும், ஒளிக்கொடி ஏந்துபவனுமான அக்கினி விருப்பங்களையெல்லாம் அளித்துக்கொண்டு பிரகாசிக்கிறான்.

4. அன்பனும், சனங்களைச் செழிப்பிப்பவனும், மேகங் களுக்கு ஒளியையளிக்கும் அறிஞனுமான அக்கினி சோதியின் எல்லைகளுக்குச் செல்லுங்கால் வருகிறான்.

5. வழிபடுபவனுடைய யக்ஞத்திலே அளிக்கப்படும் அவிகளை ஏற்றுக் கொண்டு மகத்தான சுவாலையோடு எழுகிறான். அவன் தன் இடத்தை நிலைப்படுத்தி முன்னேறுகிறான். 8987

6 அக்கினி, மனிதர்களைப் பாலிக்கும் ஆற்றலுள்ள வன். அவனே யக்ஞம். அவனே அவி. துரிதமாகவே அவனுடைய ஆத்மா செல்லுகிறது. துதிகளை ஏந்தும் அக்கினியிடம் தேவர்கள் வருகிறார்கள். சுத்திகள் ஏந்தும் அக்கினியிடம் தேவர்கள் வருகிறார்கள்.

7. தேவர்களை அழைக்கச் செல்பவனும், யக்ஞத்தை ஏந்துபவனும், மேகத்தின் மகன் எனக் கூறப்படு பவனுமான அக்கினியை உத்தம சுகத்துக்காக நான் போற்ற விரும்புகிறேன்.



8. எங்களுடைய சனங்கள் எல்லாம் அவிகளால் அக்கினியைச் செழிப்பித்து விரும்பத்தகுந்த அன்னத்தை யும் பெற்றுக்கொள்வார்களாக.

9. அவன் செல்லும் வழி கருப்பாயிருக்கிறது. வெண்மையாயிருக்கிறது. சிகப்பாயிருக்கிறது. பழுப்பா யிருக்கிறது. கருஞ்சிகப்பாயிருக்கிறது. இரத்தச் சிவப்பா யிருக்கிறது. புகழாயிருக்கிறது. அன்னத்தையும் பிறப்பித் தவன் அவனுக்குப் பொன் தேரை அளித்தான்.

10. அக்கினியே! ஆற்றலின் மகனே! அமிருதர் களோடு சேர்ந்த விமதன் அறிவை விரும்பி உனக்குத் துதிகளைக் கூறினான். நீ அவனிடம் ஸுமதியோடு அணுகி அவனுக்கு உணவையும், பலத்தையும், நல்ல மனையையும் செல்வத்தையும், அன்னத்தையும் அளிக்கவும். 8992

## 21. அக்கினி

### 858. விமதன் அல்லது வசுகிருதன்

1. அக்கினியே! நாங்கள் இப்பொழுது, தருப்பைப் பரத்தப்பட்டுள்ள யக்ஞத்துக்காக, சுயமாய்க் கற்பிக்கப் பட்ட துதிகளோடு எங்கும் சயனித்திருப்பவனும், சுத்தப் படுத்தும் காந்தியுள்ளவனும், ஹோதாவும், அக்கினியு மான உன்னை அழைக்கிறோம். உன் மதத்துக்காக உன்னை அழைக்கிறோம். நீ மகானாயிருக்கிறாய்.

2. தன் ஒளியால் துலங்குபவனும், குதிரைச் செல்வனுமான உன்னை வழிபடுபவர்கள் போற்று கிறார்கள். உன்னில் பொழியப்படும் ஆஹுதி அக்கினியே! உன்னை மதப்படுத்த நேராக உன்னிடம் வருகிறது. நீ மகானாயிருக்கிறாய்.

3. யக்ஞத்தை ஏந்துபவர்கள் அவியோடு நிறைந்த துடுப்புக்களோடு உன்னை, புவியைப் போற்றும் மழைத் தாரைகளைப்போல் போற்றுகிறார்கள். நீ கருமையான, வெண்மையான எல்லா எழில்களையும், உன்னுடைய மதத்துக்காகத் தாங்குகிறாய். நீ மகானாயிருக்கிறாய்.

4. ஆற்றலுள்ளவனும், அமுதனுமான அக்கினியே! எங்களுக்கு ஆற்றல் தோன்ற உன்னால் மேன்மை எனக் கருதப்படும் உத்தமச் செல்வத்தை எங்களுக்களிக்கவும். யக்ஞத்திலே உன் மதத்துக்காக அதை ஏந்தி வா. நீ மகானாயிருக்கிறாய்.

5. அதர்வணனால் பிறப்பிக்கப்பட்ட அக்கினி எல்லா காவியங்களையும் அறிகிறான். அவன் உங்களுடைய மதத்துக்காக யமனுடைய பிரிய நண்பனான விவஸ்வானின் யக்ஞம் செய்பவனின் தூதனாயிருக்கிறான். நீ மகானாயிருக்கிறாய்.

6. அக்கினியே! வழிபடுபவன் யக்ஞங்களிலே யாகம் நடத்தப்படுங்கால் உன்னைப் போற்றுகிறான். நீ அவியை அளிப்பவனுக்கு விரும்பத் தகுந்த செல்வங்களையெல்லாம் அளிக்கிறாய். நீ மகானாயிருக்கிறாய்.

7. அக்கினியே! மனிதர்கள் யக்ஞங்களிலே ஹோதாவும், அழகனும், நெய் முகமுள்ளவனும், சொலிப்பவனும், கண்களால் அனைத்தையும் அறிபவனுமான உன்னை உன் மதத்துக்காக ஸ்தாபிக்கிறார்கள். ஆதலால் நீ மகானாயிருக்கிறாய்.

8. அக்கினியே! மகத்தான நீ உன்னுடைய ஒளியுள்ள காந்தியால் பரந்தும், தூரமாயுமுள்ள இடத்திலும் அறியப்படுகிறாய். நீ கர்ச்சித்து, காளையைப் போல் பாய்ந்து, சகோதரிகளான ஓஷதிகளை உன் மதத்திலே சினைப்பிக்கிறாய். நீ மகானாயிருக்கிறாய். 9000

## 22. இந்திரன்

### 859. விமதன் அல்லது வசுகிருதன்

1. ரிஷிகளின் ஆசிரமத்திலோ, இரகசியத்திலோ, வனத்திலோ துதிக்கப்படும் இந்திரன் எந்த இடத்தில் கழுடனிருக்கிறான்? எந்த ஜனத்திலே அவன் மித்திரனைப் போல் புகழுடனிருக்கிறான்?



2. இங்கும் இந்திரன் புகழுள்ளவனாயிருக்கிறான். வச்சிரமேந்துபவனும், துதியாருகனுமான அவன் இன்று எங்களால் போற்றப்படுகிறான். ஒப்பற்ற செல்வத்தை மித்திரனைப் போல் தருபவனான அவன் போற்றப்படுகிறான்.

3. மகத்தான பலத்தின் தலைவனும், ஒப்பற்றவனும், பெருஞ் செல்வத்தைத் தருபவனும், பயங்கர வச்சிராயுதத்தை அன்பான புதல்வனைப் போல் தாங்குபவனுமான இந்திரன் எங்களைப் பாலிப்பானாக.

4. வச்சிராயுதனே! தேவனான நீ, தேவனான வாயுவைக்காட்டிலும் வேகமாயுள்ள உன்னுடைய குதிரைகளை இணைத்து, பிரகாசமாயுள்ள வழியிலே சென்று போருக்கு வழியைப் புலப்படுத்துங்கால் நீ போற்றப்படுகிறாய்.

5. எந்தத் தேவனுக்கும் மானிடனுக்கும் வசப்படாதவையும், எவனாலும் அடையப்படாத வேகமுள்ளவையும், நேராகச் செல்பவையும், தாமே இழுப்பவையும், வாயுவின் விசையுள்ளவையுமான இந்தக் குதிரைகளின் மீது ஏற நீ வருகிறாய். 9005

6. இந்திராக்கினிகளான நீங்கள் வருங்கால், உசனன் உங்களை வினவுகிறான். எங்கள் மனைக்குத் தூரத்திலிருந்து ஏன் வந்தீர்கள்? சோதி புவிகளிலிருந்து மானிடனிடம் ஏன் வந்தீர்கள்?

7. இந்திரனே! எங்களால் எழுப்பப்படும் தோத்திரத்தை ஏற்றுக்கொள்ளவும். நீ எந்த பாலனத்தால் மானிடத் தன்மையற்ற சுஷ்ணனைக் கொன்றாயோ அந்தப் பாலனத்தை நாங்கள் உன்னிடம் நாடுகிறோம்.

8. கடமைகளற்றவனும், எங்களை நன்கறியாதவனும், வேறு விரதங்களைப் பின்பற்றுபவனும், மனிதத் தன்மையற்றவனுமான தஸ்யு எங்களைச் சுற்றிலும் திரிகிறான்.

சத்துருவைக் கொல்பவனான நீ, அந்த தாஸனுடைய ஆயுதத்தை விலக்கவும்.

9. சூரனே! இந்திரனே! வீரர்களான மருத்துக்களோடு எங்களைப் பாலிக்கவும். உன்னால் பாலிக்கப்பட்டு பகைவர்களை ஜயிக்கும் ஆற்றலுள்ளவர்களாவோமாக. உன்னுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் தானங்கள் பல சனங்களிடம், தலைவனிடம் பணிந்தவர்களைப் போல செல்லுகின்றன.

10. சூரனே! இந்திரனே! வச்சிராயுதமேந்துபவனே! நீ நட்சத்திர மண்டலத்தைப் போற்றும் கவிகளையும், அறிஞர்களின் மருமத்துதிகளையும் செவியுற்றவுடன் போரிலே விருத்திரனைக் கொல்ல நீ வீரர்களை—மருத்துக்களை ஊக்கப்படுத்துகிறாய். 9010

11. சூரனே! இந்திரனே! தானசீலனான நீ, உன் நண்பர்களான மருத்துக்களோடு சுஷ்ணனின் வம்சத்தையெல்லாம் அழித்தபோது போர்க்களத்தில் உன்னால் ஊக்கமாய் நடத்தப்பட்ட வீரச்செயல்களை வழிபடுபவர்கள் போற்றுகிறார்கள்.

12. சூரனே! இந்திரனே! எங்களுடைய பல யக்ஞங்கள் பயனின்மையற்றதாகுக. எங்கள் விருப்பங்கள் பயனுள்ளவையாக நாங்கள் உன் ஆதரவை இடையறாமல் பெற்று வருவோமாக.

13. இந்திரனே! எங்களுடைய தோத்திரங்கள் உன்னை அணுகிப் பயனை அளிக்க. எங்களுக்கு இன்னலற்றதாகுக. தோத்திரங்களிலிருந்து தோன்றும் செல்வங்களை -வச்சிராயுதனே! உன்னிடமிருந்து பசுக்களிலிருந்து பால் முதலியவற்றைப் பெறும் கோபாலனைப்போல் அடைவோமாக.

14. கைகளும் கால்களுமில்லாத புவி துதியாகுகத் தேவர்களின் செயல்களால் செழிக்கும் போது நீ விசுவாயுசுவுக்காகப் புவியை வலது பக்கமாய்ச் சுற்றி வந்து சுஷ்ணனைக் கொன்றாய்.



15. சூரனே! பருகவும். இந்திரனே! ஸோமத்தைப் பருகவும். செல்வங்களை அளிக்கும் நீ உத்தமனாயிருப்பதால் எங்களைத் துன்புறுத்தாதே. தானச்செல்வர்களையும் வழிபடுபவர்களையும் பாலிக்கவும். மகத்தான செல்வங்களால் எங்களைச் செல்வப்படுத்தவும். 9015

## 23. இந்திரன்

### 860. விமதன் அல்லது வசுகிருதன்

1. நாங்கள் வலதுகையில் வச்சிராயுதமேந்துபவனும், பல செயல்களுள் கபில நிறக் குதிரைகளைச் செலுத்துபவனுமான இந்திரனைப் போற்றுகிறோம். அவன் தாடியை அசைத்துக்கொண்டு மேலே எழுந்தான். அவன் தன் படைகளால் எதிரிகளைக் கொன்று, வழிபடுபவர்களுக்குச் செல்வத்தைத் தருகிறான்

2. யக்ஞத்திலே செல்வங்களை அளிக்கும் இரு கபில குதிரைகளோடு செல்வத்தோடு செல்வனாயுள்ள இந்திரன் விருத்திரனைக் கொல்பவன். பிரகாசிப்பவனும், வலியனும், மகானுமான இந்திரன், பலத்தின் தலைவன். அவனால் நான் தாஸனுடைய தலையை வெட்டுகிறேன்.

3. நீண்ட புகழுள்ளவனும், பல சிறப்புள்ள பலத்தின் தலைவனும், செல்வனுமான இந்திரன், பொன் ஆயுதத்தை ஏந்தி வழிபடுபவர்களோடு இரு கபில நிறக் குதிரைகளால் இழுக்கப்படும் தேரிலே ஏறுகிறான்.

4. அனைத்தையும் மழையைப்போல் மருத்துக்களின் படைகளால் பின்பற்றப்படும் இந்திரன், மருத்துக்களின் தாடிகளை ஸோமத்தால் தெளித்து நனைக்கிறான், அவன் யக்ஞத்தின் இனிய ஸதனத்துக்குச் செல்லுகிறான். பிழியப்பட்ட ஸோமம் அவனுடைய அங்கத்தை, வனத்தைக் காற்றுப்போல் குலுக்குகிறது.

5. நாங்கள் தன் பேச்சால் பலவிதமாய்ப் பேசுபவர்களைப் பேசாமல் செய்தவனும், பல்லாயிரம் பகைவர்களை அழித்தவனும், புதல்வனின் பலத்தைத் தந்தையைப் போல் உலகத்தின் பலத்தைத் தாங்குபவனுமான இந்திரனின் ஆண்மையைப் போற்றுகிறோம்.

6. இந்திரனே! விமதர்களான நாங்கள் இந்தப் பூர்வத்தில் கூறப்படாததும், பலவிதமாயிருக்கும் ஸ்தோமத்தை, உன்னுடைய தானத்தை அடைய கற்பித்திருக்கிறோம். தலைவனான அவனுடைய எந்த செல்வத்தை நாங்கள் அறிகிறோமோ அதை பசுக்களை அழைக்கும் கோபனைப்போல் எங்கள் முன்னே விரும்புகிறோம்.

7. இந்திரனே! உன்னுடையவும் விமதரிஷியினுடையவும் நட்புக்கள் பிரியாமலிருக்க. தேவனே! அந்த நட்பானது சகோதரனிடம் சகோதரிக்கிருப்பதைப்போல் உள்ளதென்பதை நாங்கள் அறிகிறோம். நம்முடைய
நட்பு மங்களகரமாகுக. 9022

## 24. இந்திரன்

### 861. விமதன் அல்லது வசுகிருதன்

1. இந்திரனே! ஸோமத்தைப் பிழியும் பலகைகளால் பிழியப்பட்டும், மிக்க இனிமையாயுமுள்ளதுமான ரஸத்தைப் பருகவும். உன் மதத்திலே எங்களுக்கு ஆயிரக் கணக்கான செல்வங்களை அளிக்கவும். புருவசுவே! நீ மகானாயிருக்கிறாய்.

2. நாங்கள் உன்னை யக்ஞங்களாலும், தோத்திரங்களாலும், அவிகளாலும் வேண்டுகிறோம். ஆற்றல்களின் தலைவனே! நீ ஆற்றல்களின் தலைவனாகிறாய். உன் மதத்தில் எங்களுக்கு விரும்பத் தகுந்த உத்தம செல்வத்தையளிக்கவும். நீ மகானாகிறாய்.

3. இந்திரனே! நீ விரும்பத் தகுந்த செல்வங்களின் தலைவனாயிருக்கிறாய். வழிபடுபவனை ஊக்கப்படுத்துகிறாய். துதிப்பவர்களைப் பாலிக்கிறாய். எங்களைத் துவேஷிகளிட



மிருந்து பாலிக்கவும். பாவத்திலிருந்து பாலிக்கவும். நீ மகானாகிறாய்.

#### அசுவினிகள்

4. நாசத்தியர்களான நீங்கள், விமதனால் போற்றப்பட்டுக் கடைந்தபோது, ஆற்றலுள்ளவர்களும், அறிஞர்களுமான நீங்கள் இருவரும் சேர்ந்து அனலைப் பிறப்பிக்கக் கடைந்தீர்கள்.

5. நீங்கள் இருவரும் சேர்ந்து அனல் பொறிகளை எழச் செய்தபோது, தேவர்கள் எல்லாம் உங்களைப் போற்றினார்கள். தேவர்கள் இரு நாசத்தியர்களிடம் அக்கினி மீண்டும் எங்கள் அவிகளை எடுத்துச் செல்வானாக எனக் கூறினார்கள்.

6. மனையிலிருந்து நான் புறப்பட்டுச் செல்வது இனிமையாகுக. திரும்பி வருவதும் இனிமையாகுக. தேவர்களே! உங்களுடைய தேவத்தன்மைகளால் எங்களை
இனிமையால் செல்வப்படுத்துங்கள். 9028

## 25. ஸோமன்

### 862. விமதன் அல்லது வசுக்கிருதன்

1. ஸோமனே! எங்கள் மனத்தை, எங்கள் இருதயத்தை, எங்கள் அறிவைச் செல்வப்படுத்தவும். உன்னை வழிபடுபவர்கள், ஸோமான்னத்தால் தோன்றும் மதத்திலே நீ மகிழுங்கால், உன்னுடைய நட்பிலே புற்றரையிலே பசுக்களைப் போல் இன்புறுவார்களாக. நீ மகானாகிறாய்.

2. ஸோமனே! உன்னுடைய இருதயத்தைப்பற்ற விரும்புபவர்கள், உன்னை எல்லா இடங்களிலும் போற்றுகிறார்கள். உன்னுடைய மதத்திலே என்னுடைய இருதயத்திலிருந்து இந்த விருப்பங்கள் செல்வத்துக்காக எழுகின்றன. நீ மகானாகிறாய்.

3. ஸோமனே! நான் உன்னுடைய விரதங்களையெல்லாம் பக்குவ அறிவோடு பாலிக்கிறேன். நீ உன்னுடைய

மதத்திலே புதல்வனை சுகப்படுத்தும் தந்தையைப் போல் எங்களை சுகப்படுத்தவும். பகைவர்களால் கொல்லப்படாமல் எங்களைப் பாலிக்கவும். நீ மகானாகிறாய்.

4. கூபத்துக்குச் செல்லும் மந்தைகளைப் போல் எங்களுடைய தோத்திரங்கள் சோமனான உன்னிடம் வருகின்றன. சோமனே! நீ எங்களுடைய ஆற்றல்களை நாங்கள் நீடூழி வாழ, உன் மதத்துக்காக சோம கலசங்களை ஸ்தாபிக்கும் அறிஞனைப்போல் ஸ்தாபிக்கவும். நீ மகானாகிறாய்.

5. நிலையான விருப்பங்கள் உள்ளவர்களும், தீரர்களுமான தலைவர்கள், தங்கள் திறச் செயல்களோடு சோமனே! அறிஞனும் வலியனுமுள்ள உனக்கு விவிதத் துதிகளைக் கூறுகிறார்கள். உன்னுடைய,உங்களுடைய மதத்திலே, பசுக்களும் குதிரைகளும் நிறைந்த கொட்டிலை மகானாயிருக்கும் நீ எங்களுக்களிக்கவும். 9033

6. சோமனே! நீ எங்களுடைய பசுக்களையும், மிக்கப் பரந்திருக்கும் சலனமாகும் உலகத்தையும் பாலிக்கிறாய். உன்னுடைய மதத்திலே, எலலாப் பொருள்களையும் உற்றுநோக்கி அவை சீவிக்க அவற்றைப் பக்குவப்படுத்துகிறாய். நீ மகானாகிறாய்.

7. சோமனே! எதிர்ப்பற்றுள்ள நீ எல்லாப் பக்கங்களிலும் எங்கள் பாலகனாயிருக்கவும். அரசனே! உன் மதத்திலே எங்கள் பகைவர்களை விலக்கவும். தூற்றுபவன் எங்களை அரசு புரியாமலிருப்பானாக. நீ மகானாகிறாய்.

8. சோமனே! நீ உத்தமச் செயல்களை நடத்துபவன். நிலங்களைத் தாராளமாய்த் தருபவன். எங்களுக்கு உணவை அளிக்க விழித்திருக்கவும். உன்னுடைய மதத்திலே எங்களை வருத்தும் மனிதர்களிடமிருந்தும் பாவத்திலிருந்தும் பாலிக்கவும். ஏனெனில் நீ மகானாகிறாய்.

9. பகைவர்களை முற்றுமழிப்பவனும், இந்திரனுடைய மங்களகரமான நண்பனுமான சோமனே! வீரப்பகைவர்



கள் எங்கும் எங்களை, சந்தானத்தையளிக்கும் போருக்கு அழைக்குங்கால் எங்களைப் பாலிக்கவும். உன்னுடைய மதத்திலே எங்களைப் பாலிக்கவும். ஏனெனில் நீ மகானாகிறாய்.

10. இந்த மதமளிக்கும் சோமன் வெற்றியுள்ளவனாயிருக்கிறான். மதமளிப்பவனும், இந்திரனுக்குப் பிரியனுமான அவன் உன்னுடைய மதத்திலே மகத்தாயும் அறிஞனுமுள்ள கட்சீவானுடைய அறிவை வளர்த்தான். ஏனெனில் நீ மகானாயிருக்கிறாய்.

11. இந்த சோமன் அறிஞனான ஈகையனுக்குப் பசுக்களோடு உணவைத் தருகிறான். இந்த சோமன் எழுவர்களுக்கு உன்னுடைய விமதத்திலே, மதத்திலே, பலவித மதத்திலே, போற்றத்தகுந்த செல்வத்தைத் தருகிறான். சோமன் குருடனுக்கும் முடவனுக்கும், காட்சியையும் கால்களையும் தந்தான். 9039

# 26. பூஷா

## 863. விமதன் அல்லது வசுக்கிருதன்

1. கற்பிக்கப்பட்டவையும், விரும்பத் தகுந்தவையுமான பாக்கள் பூஷாவுக்குக் கூறப்படுகின்றன. எப்பொழுதும் இணைக்கப்பட்டுள்ள தேர் உள்ளவனும், அழகனும், மகானுமான அவன் எங்களைப் பாலிப்பானாக.

2. பூஷாவின் பக்குவ மழையாகப் புலனாகும் மகிமையை இந்த அறிஞனான மனிதன் தோத்திரங்களோடு போற்றுகிறான். அவன் இந்த உத்தமத் துதிகளை அறிந்துகொள்வானாக.

3. பூஷா உத்தமத் தோத்திரங்களை அறிகிறான். அவன் சோமனைப் போல நலங்களை வர்ஷிப்பவனாயிருக்கிறான். சுந்தரனான அவன் எங்கள் மீது மழையைப் பொழிகிறான். எங்கள் பசுக்களின் மேய்தரைகளிலும் மழையைப் பெய்கிறான்.

4. நாங்கள் எங்கள் விருப்பங்களை நிறைவேற்று பவனும், அறிஞர்களை எழுப்புபவனும், தேவனுமான பூஷாவாம் உன்னைப் போற்றுகிறோம்.

5. பூஷா ஒவ்வொரு யக்ஞத்திலும் பங்குள்ளவன். குதிரைகள் இணைத்து சதா செல்லுபவன். ரிஷி, மானிடர்களுக்கு நலத்தைச் செய்பவன். விப்பிரனுக்குச் சத் துருக்களைத் தனிப்படுத்துபவன். 9044

6. விரும்பத் தகுந்த சுசையின் தலைவன். ஆட்டின் உரோமங்களால் கம்பளத்தை நெய்பவன். அவன் ஆடைகளை சுத்தப்படுத்தினான்.

7. அவன் அரசன். செல்வங்களின் தலைவன். பிரபுவான அவன் எல்லாச் செழுமைகளுக்கும் நண்பன். தடைபடாமலுள்ள அவன் ஆதரவை விரும்புபவனுடைய ஸோமத்தைப் பருகுங்கால் மெதுவாகத் தன் தாடியை அசைத்துக்கொள்கிறான்.

8. ஒவ்வொரு யாசகனின் நண்பனும், முன்பே பிறந்தவனும், கடமையிலே தவறாதவனுமான பூஷாவே! உன்னுடைய தேரின் நுகத்தை -சுமையை- ஆடுகள் சுமக்கின்றன.

9. மகானான பூஷா எங்களுடைய தேரைத் தன் பலத்தால் பாலிப்பானாக. எங்களுக்கு உணவைச் செழிப்பிப்பவனாயிருப்பானாக. எங்களுடைய இந்த அழைப்பைக் கேட்பானாக. 9048

## 27. இந்தின்

### 864. வசுக்கிரன்

1. இந்திரன் பேசுகிறான்: துதிப்பவனே! நான் ஸோமத்தைப் பிழியும் வழிபடுபவனைப் பாலிக்கத் திடமனமுள்ளவனாகிறேன். ஆனால் நான் துன்புறுத்துபவனும், பாவத்தைச் செய்பவனும், சத்தியத்தைப் புறக்கணிப்பவனும், ஸோமத்தை அளிக்காதவனுமான மனிதனை அழிக்கிறேன்.



2. ரிஷி பேசுகிறார்: தேவர்களைப் போற்றாதவர்களும், பிரகாசமான தேகங்களுமுள்ள சனங்களிடம் போராட என் நண்பர்களைச் செலுத்துங்கால் உனக்கு மனையிலே வலிய காளையைப்போல் பக்குவப்படுத்துகிறேன். உனக்குப் பஞ்சதச ஸோமத்தையளிக்கிறேன்.

3. இந்திரன் பேசுகிறான்: போரிலே அதேவர்களை அழிப்பவன் நான் எனக் கூறும் எந்த மனிதனையும் நான் காணவில்லை. உக்கிரப் போர் நடப்பதைப் பகைவர்கள் பார்த்தவுடன் அவர்கள் என்னுடைய வலிய குதிரைகளின் பெருமைகளைக் கூறுகிறார்கள்.

4. நான் முன் சம்பவியாத போர்களுக்குச் சென்றவுடன் அங்கு இயங்கும் என்னிடம் அவிச்செல்வர்கள் வருகிறார்கள். நான் உலகத்தைப் பாலிக்க, வலியனும் வீழ்த்துபவனுமான சத்துருவை அழிக்கிறேன். நான் அவனுடைய கால்களைப் பிடித்து அவனை மலையிலிருந்து கீழே தள்ளுகிறேன்.

5. போரிலே இயங்கும் என்னை எவனும் தடை செய்யான்? நான் தீர்மானித்தால் மலைகள் எங்கே தடை செய்யும்? நான் கர்ச்சித்தால் செவிடனும் கலங்குவான். இங்ஙனமே ஒளிக்கதிர்களுள்ள சூரியனும் தினந்தோறும் நடுங்குகிறான். 9053

6. நான், இந்திரனில்லாமல் ஸோமத்தைப் பருகுபவர்களையும், வழிபடுபவர்களைத் துன்புறுத்த எதிர்த்து, அவர்களை வெட்டித் துணிப்பவர்களையும் பார்த்தவுடன் என் ஆயுதங்கள் அவர்கள் மீது பாய்கின்றன. உங்கள் ஆற்றலுள்ள நண்பனை நிந்திப்பவர்கள் மீதும் பாய்கின்றன.

7. ரிஷி பேசுகிறார்: இந்திரனே! நீயே புலனாகிறாய். நீ புவியை ஒவ்வொரு பருவத்திலும் நனைக்கிறாய். இந்திரன் எல்லா சீவர்களிலும் பரவுகிறான். பழையவனான இந்திரன் பகைவனை அழிக்கிறான். மற்றவன் இந்திரனை அழிக்கான். பிரபஞ்சத்துக்கப்பால் பரவும் இந்திரனுடைய

மகிமையை, சேர்ந்திருக்கும் சோதியும் புவியும் வெல்லார்கள்.

8. இந்திரன் பேசுகிறான்: சேர்ந்திருக்கும் பசுக்கள் புற்றரையில் மேய்கின்றன. தலைவனான நான், கோபாலனால் பாலிக்கப்படும் பசுக்கள் மேய்வதைப் பார்க்கிறேன். அவை அழைக்கப்பட்டால் தலைவனைச் சுற்றிச் சேர்கின்றன. அவை அணுகுங்கால் தலைவன் எத்தனை பாலைக் கறக்க விரும்புகிறான்?

9. வசுக்கிரன் பேசுகிறான்: நான் புற்களைத் தின்னும் மிருகங்களையும், பரந்த பயிர் நிலத்தில் தோன்றும் தானியங்களைப் புசிப்பவையையும், மானிடர்களோடு இணைக்கிறேன். இணைக்கப்பட்டவன் அவிழ்க்கப்பட விரும்புகிறான். இணைக்கப்படாமலிருப்பவனை எதிர்ப்பவன் இணைக்க விரும்புகிறான்.

10. நான் பிராணிகளையும், சனங்களையும் சிருட்டிப்பவன் என இப்பொழுது கூறுவதை உண்மையான நீ அறிகிறாய். வர்ஷிப்பவனான என்னை விட்டுவிட்டு ஸ்திரீகளோடு — மெலிந்தவர்களோடு—போராட விரும்புபவர்களிடமிருந்து போராட்டமன்னியில் செல்வத்தைப் பற்றி நான் அதை வழிபடுபவர்களுக்கு அளிக்கிறேன். 9058

11. எப்பொழுதும் எங்கும் விளங்கும் என்னுடைய கண்ணில்லாத பெண்ணை — பிரகிருதியை — என்னையன்றி வேறு எந்தத் தேவன் அறிகிறான்? என்னையன்றி வேறு எவன் அவள் குருடியாயிருந்தாலும் அவளைப் போற்றுகிறான்? இரண்டு தேவர்களிலே எவன் பகைவன் மீது ஆயுதத்தைச் செலுத்துகிறான்? அவனை எதிர்ப்பவனா? அல்லது அவனைப் பாலிப்பவனா?

12. உத்தமச் செல்வங்களுக்காக மணக்கப்படும் பெண்களிலே எத்தனை பெண்கள் பணங்கேட்போனுக்குத் திருப்தியைத் தருகிறார்கள். பாக்கியமும் பாங்குமுள்ள



யுவதி மனிதர்களின் நடுவே தானாகவே நண்பனைத் தெரிந்தெடுக்கிறாள். செல்வியும் சுந்தரியுமான பெண் சனங்களின் நடுவே தானே தன் கணவனை வரிக்குங்கால் மனிதனுடைய விருப்பத்தின் புகழ்மொழியால் எத்தனை பெண்கள் இன்பமாகிறார்கள்.

13. இந்திரன் சூரியனாகப் போற்றப்படுகின்றான். அவன் தன் கால்களால் சலத்தைப் பற்றுகிறான். அது அருகில் வந்தவுடன் அதை அருந்துகிறான். அவன் சோதியின் தலையைச் சுற்றி, பாலகனாக ஸ்தாபிக்கிறான். அவன் மேலே உட்கார்ந்து தன் கதிர்களை மேலே அருகிலுள்ள சோதி மண்டலத்துக்குச் செலுத்துகிறான். அவன் அவற்றைக் கீழே பரந்துள்ள பூமிக்குச் செலுத்துகிறான்.

14. மகானான சூரியன் நிழலற்றவன். நாசமற்றவன். சதா செல்பவன். நிலைப்பவன். விடுவிக்கப்பட்ட உலகத்தைச் செய்பவன். அவன் மூவுலகங்களின் கருவாயிருக்கிறான். அவிகளைப் புசிக்கிறான். வேறு தாயின் குழந்தையைக் கொஞ்சுகிறான். அவன் திசைகளைக் கற்பிக்கிறான். எந்த எண்ணத்தோடு தாய்ப் பசு—சோதி—தன் ஆதீனத்தைச் சூரியனுக்கு அளித்தாள்?

15. இந்திரன் பிரஜாபதியாகப் போற்றப்படுகிறான். இந்திரனுடைய அதோபாகத்திலிருந்து ஏழு புதல்வர்கள் —விசுவாமித்திரர் முதலியவர்கள் தோன்றினார்கள். மேற்பாகத்திலிருந்து எண்மர்கள் — வாலகில்யர்கள் பிறந்தார்கள். நிலைகளுள்ள ஒன்பது பிருகுக்கள் பின்புறத்திலிருந்து வந்தார்கள். முன்புறத்திலிருந்து பதின்மர்களான அங்கிரஸர்கள் பிறந்து உணவைப் புசித்து சோதியின் உச்சியிலே பரவினார்கள். 9063

16. மற்ற அங்கிரஸர்கள், பதின்மர்களில் ஒருவனும், பிரஜாபதிக்கு ஒப்பான பலமுள்ளவனுமான கபிலனை, ரிஷியை, சூரியனை, யக்ஞத்தைப் பூர்த்தி செய்ய அனுப்பி

ணர்கள். திருப்தியடைந்து, தாய் தன் மார்பிலே பிரஜா பதியால் ஸ்தாபிக்கப்பட்டதும், நிலையான ஸ்தானத்தை விரும்பாததுமான கருவை, சூரியனைப் பாலிக்கிருள்.

17. அறிஞர்கள் பருமனுயிருந்த மேஷத்தை –மேகத்தை– பக்குவப்படுத்தினுர்கள். அவர்கள் பிரஜா பதியை ஒருவர் ஒருவராய் அனுசரித்து சூதாட்டத்தில் எறியப்பட்ட காய்களைப்போல் பின்பற்றினுர்கள். அவர் களின் நடுவே பவித்திரமுள்ளவர்களும், சுத்தப்பட்டவர் களுமான இருவர், சூரியனும் சந்திரனும், சலங்களின் நடுவே செழிப்பிப்பவனுன பிரகிருதியினிடமும் அறி வினின் சாதனமாகக் கபிலனிடமும் செல்லுகிருர்கள்.

18. அவர்கள் — அங்கிரஸர்கள் — பிரஜாபதியை முழங்கிக்கொண்டு எல்லாத் திசைகளிலும் செல்லுகிருர் கள். அவர்களில் பாதிப்பேர்கள் தங்கள் அவிகளைப் பக்குவஞ் செய்கிருர்கள். மற்ற பாதி சமைக்காம லிருக்கிருர்கள். தேவனுன ஸவிதா என்னிடம் இதைச் சொன்னுன். வனத்தையும் நெய்யையும் உணவாகவுள்ள அக்கினி, பிரஜாபதியை அவிகளால் போற்றுகிருன்.

19. நான் சக்கரங்கள் இல்லாமல் சுய பலத்தால் செல்வதும் தூரத்தில் வருவதுமான படையைப் பார்க் கிறேன். புதிய பலமுள்ளவனும், அனைவரின் தலைவனும், அரக்கர் கூட்டங்களை அழிப்பவனுமான இந்திரன் பருவங் களைக் கிரமப்படுத்துகிருன்.

20. அழிப்பவனுன என்னுடைய யக்ருத்துக்கோ, பகைவனை எதிர்க்கவோ, இணைக்கப்பட்டவையான இரு குதிரைகளைப் போற்றவும். அவற்றை நிறுத்தித் திருப் பாதே. சலங்கள் இந்திரனுடைய எண்ணத்தை நிறை வேற்றுகின்றன. அனைத்தையும் சுத்தப்படுத்துபவனும், மேகத்தைப் போல் துரிதனுயுமுள்ள சூரியனும் நிறை வேற்றுகிருன். 9068

21. இந்த இடியானது சூரியனுடைய மகத்தான மண்டலத்திலிருந்து மழைக்காகக் கீழே விழுகிறது. வானு



லகத்துக்கப்பால் சூரியமண்டலத்திலிருக்கும் சலம், மேகத் திலிருக்கும் சலத்துக்கு வேராக இருக்கிறது. அவர்கள் சூரியமண்டலத்திலிருக்கும் சலங்களை வருத்தப்படாமல் வானின் வழியால் நடத்துகிருர்கள்.

22. ஒவ்வொரு வில்லிலும் கட்டப்பட்டுள்ள ஞாண் ஒலிக்கிறது. பிறகு பறவைகளைப் போல் பறப்பவையும், மானிடர்களை அழிப்பவையுமான சரங்கள், சத்துருக்கள் மீது பாய்கின்றன. இந்த உலகமெல்லாம் கலங்குகிறது. இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழிகிறது. ரிஷிகளுக்கு தட்சிணை தோன்றுகிறது.

23. தேவர்களுடைய மனையிலே முதல் சிருட்டிக்கப் பட்ட மேகங்கள் நின்றன. அவை தனிப்பட்டவுடன் மழை சலங்கள் வந்தன. மூன்று தேவர்களான பர்ஜன் யனும், வாயுவும், ஆதித்தியனும் ஒருவரை ஒருவர் தொடர்ந்து விதைத்து வெப்பப்படுத்தினுர்கள். இருவ ரான வாயுவும் ஆதித்தியனும் அனைத்தையும் இன்புறுத் தும் சலத்தைச் சூரியமண்டலத்துக்கு ஏந்திச் செல்லு கிருர்கள்.

24. சூரியனேடு ஐக்கியமாகும் உன் தன்மை சீவனைப் பிறப்பிக்கிறது. அவனுடைய இந்த வடிவம் போரிலே போற்றத்தகுந்தது என அறிந்துகொள்ளவும். அனைத்தையும் சுத்தப்படுத்தும் சூரியனுடைய சலனம் பிரபஞ்சத்தைப் புலப்படுத்துகிறது. அது ஈரத்தைக் குடிக்கிறது. ஓயாமல் செல்லுகிறது. 9072

## 28. இந்திரன் வசுக்கிரன்

### 865. வசுக்கிரன் மனைவி, இந்திரன், வசுக்கிரன்.

#### இந்திரன்

#### வசுக்கிரன் மனைவி

1. வசுக்கிரன் மனைவி பேசுகிருள்: ஒவ்வொரு தேவ தலைவனும் வந்துவிட்டான். ஆனுல் என் மாமனுர் வர

வில்லை. அவர் பொரியைப் புசித்து ஸோமத்தைப் பருகுவாராக. அவர் திருப்தியாகி மனை திரும்புவாராக.

வசுக்கிரன்

2. இந்திரன் பேசுகிறான்: கூரிய கொம்புகளுள்ள காளை போன்று முழங்குகிறான். அவன் புவியின் பரப்பின் உச்சியிலே நிற்கிறான். ஸோமத்தைப் பிழிந்து என் உதரத்தின் இரு பக்கங்களை நிரப்பும் வசுக்கிரனை நான் எல்லாப் போர்களிலும் பாலிக்கிறேன்.

இந்திரன்

3. வசுக்கிரன் பேசுகிறான்: மானிடர்கள் கல்லால் உனக்குத் தீவிரமாயிருப்பவையும், இன்புறுத்துபவையுமான ஸோமங்களைப் பிழிகிறார்கள். நீ அவற்றைப் பருகுகின்றாய். உனக்காகக் காளைகளைப் பக்குவப் படுத்துகிறார்கள். மகவானான நீ, யக்ஞ உணவுக்கு அழைக்கப்பட்டவுடன் அவற்றைப் புசிக்கிறாய்.

4. துதிப்பவனே! எனக்கு இந்த மறைபொருளை விளக்கவும். நதிகள் தங்கள் பிரவாகத்தைப் பின்னோக்கிச் செலுத்துகிறது. புல்லைத் தின்னும் மிருகம் சிங்கத்தை எதிர்க்கிறது. நரி, காட்டுப்பன்றியைக் குகையிலிருந்து துரத்துகிறது.

5. இந்திரனே! அறிவும் ஆற்றலுமுள்ள உனக்குத் துதியைக்கூற அருகனுருக உன்னுடைய இந்தத் திறத்தை அறியும் திறமை அபக்குவனான என்னிடம் ஏது? நீ உரிய காலத்தில் அறிவிக்கவும். மகவானே! உன்னுடைய செல்வத்தேர் எங்கே செல்கிறது? 9077

வசுக்கிரன்

6. இந்திரன் பேசுகிறான்: உன்னுடைய தோத்திரங்கள் இங்ஙனம் என் சக்தியை வளர்ப்பதால், மகானான எனக்குக் கூறப்படும் துதி சோதிக்குமேலே ஏறுக. நான் நொடிப் பொழுதில் பல்லாயிரம் பகைவர்களை அழிக்கிறேன். ஏனெனில் பிரஜாபதி என்னைப் பகைவனன்னியில் பிறப்பித்தான்.



இந்திரன்

7. வசுக்கிரன் பேசுகிறான்: இந்திரனே! தேவர்கள் என்னைப் பலமுள்ளவனாகவும், ஒவ்வொரு சண்டையிலும் உக்கிரனாகவும், வர்ஷிப்பவனாகவும் அறிகிறார்கள். நான் மதத்திலே உன் வச்சிராயுதத்தால் விருத்திரனைக் கொன்றேன். நான் அவியளிப்பவனுக்கு மேகங்களை என் மகிமையால் திறந்தேன்.

வசுக்கிரன்

8. இந்திரன் பேசுகிறான்: தேவர்கள் வந்தார்கள். கோடரிகளை ஏந்தினார்கள். அவர்கள் காடுகளை அழித்தார்கள். அவர்கள் ஆட்களோடு நெருங்கினார்கள். நல்ல மரத்தை நெருப்புக்களித்தார்கள். புல் தோன்றும் இடத்தில் புல்லை எரித்தார்கள்.

8. ஸாயணர் உரை: தேவர்கள் மேகங்களை வெட்ட வச்சிராயுதங்களை ஏந்திச் செல்லுகிறார்கள். மருத்துக்களோடு தொடரப்பட்ட அவர்கள் மழை சலங்களை நோக்கிப் போகிறார்கள். நன்கு பாயும் மழை சலத்தை நதிகளிலே ஸ்தாபிக்கிறார்கள். பிறகு சலத்தை மறைத்துள்ள மேகங்களை சலம் பெருகுவதற்கு எரித்தார்கள்.

இந்திரன்

9. வசுக்கிரன் பேசுகிறான்: முயல் எதிர்த்த சௌரக்கத்தியை விழுங்கிற்று. எதிர்த்த புலி முதலியவற்றைப் பற்றுகிறது. சாய்க்கிறது. நான் மண்கட்டியால் தூரத்திலுள்ள மலையைப் பிளக்கிறேன். பெரியவனைச் சிறுவனுக்கு வசப்படுத்துவேன். கன்று வலிமையால் வலுப்பட்டு காளையைத் தின்கிறது.

10. ஸுபர்ணன் தன் கொடுக்கை – நகத்தை – சோதியிலே ஒரு கூட்டிலே காலின்மீது மற்றொரு காலைச் சாய்த்திருக்கும் சிங்கத்தைப்போல் இணைத்திருக்கிறான்.

பிடிக்கப்பட்ட மகிஷம் தாகமடைவதுபோல் இந்திரன் ஸோமத்துக்குத் தாகமானான். காயத்ரி சோதியிலிருந்து சுலபமாய் ஸோமத்தை எடுத்து வந்தாள்.

11. இந்திரனுடைய உணவுகளால் திருப்தியாகி, பகைவர்களின் துன்பங்களைத் துடைத்த தேவர்களின் நன்மைக்காக காயத்ரி சுலபமாய் எடுத்து வந்தாள் தேவர்கள் இந்திரனால் பருகி விடப்பட்ட ஸோம பிந்துக்களையெல்லாம் பருகி, தாமாகவே பகைவர்களின் படைகளையும் தேகங்களையும் அழித்தார்கள்.

12. ஸோம யாகத்தில் தேவர்கள் தங்கள் தேகங்களைத் திறப்படுத்திய யக்ஞச் செயல்களால் நல்ல செயலாளரானார்கள். இந்திரனே! மனிதனைப் போல் பேசி எங்களுக்கு உணவுகளை அளிக்கவும். ஆதலால் நீ சோதியிலே வீரனுடைய புகழையும் நாமத்தையும் ஏந்துகிறாய். 9084

## 29. இந்திரன்

### 866. வசுக்கிரன்

1. மரத்திலே தன் கூட்டிலே குஞ்சை வைத்து ஆர்வமாய் அதைச் சுற்றிப் பறக்கும் பறவையைப் போல் ஏந்துபவர்களான அசுவினிகளே! சுத்த தோத்திரம் உங்களை விழித்திருக்கச் செய்கிறது. இரவிலே ஸோமமளிக்கப் படுபவனும், மானிடர்களின் நடுவே மிக்க மனிதத் தன்மையுள்ளவனும், மானிடர்களின் நண்பனுமான இந்திரன் பல தினங்கள் இந்த ஸ்தோமனுக்கு ஹோதாவாயிருந்தான்.

2. இந்த உஷையும் அடுத்தவளும்—வரும் உஷையும்—நடிக்குங்கால் மனிதர்களின் நடுவே உத்தமத் தலைவனுயுள்ள உன்னைப் போற்றி நாங்கள் செழிப்போமாக. திரிசோகன், உன் ஆதரவால் பின்பற்றும் நூறு மனிதர்களை அடைந்தான். உனக்கும் அவனுக்கும்



குத்ஸனுக்கும் பொதுவாயிருந்த தேரை, குத்ஸன் அடைந்தான்.

3. இந்திரனே! உனக்கு எந்த மதம் ஸோமம் பிரீதியுள்ளதாயிருக்கும் உக்கிரனான நீ, எங்களுடைய யக்ஞக் கவாடங்களுக்கும், தோத்திரங்களுக்கும் வரவும். ஸோமம் எப்பொழுது தோன்றும்? என்னிடம் எப்பொழுது அறிவு துலங்கும்? உன்னைத் துதித்து நான் செல்வத்தையும் உணவையும் அடைவேனாக.

4. இந்திரனே! எங்கள் அவியை எப்பொழுது ஏற்றுக்கொள்வாய்? எந்த யக்ஞத்தால் நீ மானிடர்களை உனக்கு ஒப்பாகச் செய்வாய்? அவர்களை எப்பொழுது எங்களிடம் செலுத்துவாய்? பரந்த புகழுள்ள நீ, அனைவருடைய மனங்களும் உணவை நாடுங்கால் எங்களைப் பாலிக்க நீ உண்மையான நண்பனைப் போலிருக்கவும்.

5. பல ரூபங்களுள்ள இந்திரனே! பழைய துதிகளோடும், உணவுகளோடும் உன்னைப் பற்றுபவர்களும், உன் விருப்பத்தை மனைவிகளைத் திருப்திசெய்யும் கணவர்களைப் போல் பூர்த்தி செய்பவர்களும், துதிப்பவர்களுமான சனங்களை அப்பாலுள்ள உண்மையாம் கரைக்குச் செலுத்தும் சூரியனைப் போல் சத்தியத்துக்குச் செலுத்தவும்.

6. இந்திரனே! உன்னுடைய ஜயிக்கும் ஆற்றலால் அனைத்தையும் அளப்பவையும், மகத்தாயுமுள்ள சோதி புவிகள் கற்பிக்கப்படுகின்றன. மிக்க உத்தமனான உனக்கு நெய் கலந்த ஸோமரஸங்கள் ஏற்றுக்கொள்ளத் தகுந்தவையாகுக. அவை உன் பானத்துக்கு இனிமையாகுக.

7. வழிபடுபவர்கள் இனிய ஸோமம் நிறைந்திருந்த பாத்திரத்திலிருந்து ரஸத்தை இந்திரனுக்காக அக்கினியிலே பொழிந்தார்கள். ஏனெனில் அவன் செல்வத்தைச் சொன்னதுபோல் அளிக்கிறான். மனிதர்களுக்கு நலஞ்செய்பவனும், சங்கற்பமுள்ளவனும், ஆண்மையுள்ள

னுமான இந்திரன் வானின் பரந்த இடத்திலே பெரிய வனானான்.

8. மிக்க வலியனான இந்திரன் போர்களிலே ஜயித்தான். மகத்தான படைகள் அவனுடைய நட்பைப் பெற முயற்சிக்கின்றன. இந்திரனே! மங்கள ஸுமதியோடு உன்னால் எங்களிடம் செலுத்தப்படும் தேரிலே பகைவனுடைய படைகளை எதிர்க்கச் செல்லும் தேரிலே ஏறுவது போல் ஏறவும். 9092

## 30. சலங்கள்: சலங்களின் பேரன்

### 867. கவஷன் — இலூஷ புதல்வன்

1. துதியால் துதிக்கப்பட்டுப் பாயும் ஸோமம் திவ்ய சலங்களுக்கு மனத்தின் வேகத்தைப் போல் விசைக. வழிபடுபவனே! மகத்தான அவியையும், நல்ல தோத்திரத்தையும், மித்திராவருணர்களுக்கும், பரந்து செல்பவனுமான இந்திரனுக்கும் அளிக்கவும்.

2. அத்வர்யுக்களே! அவியை அளிக்கும் பொறுப்பு உங்களிடமிருப்பதால் அதை அளிக்க விரும்பும் நீங்கள் அதை விரும்பும் சலங்களிடத்தில் செல்லுங்கள். சிகப்புச் சுபர்ணன்—ஸோமன்—மேகங்களிலிருந்து இறங்கி வரும் அந்த சலங்களைப் பார்க்கிறான். திறக் கைகளுள்ள நீங்கள் அந்த ஸோம அலையை—பெருக்கை – இன்று பவித்திரத்தினுள் ஊற்றுங்கள்.

3. அத்வர்யுக்களே! சலத்துக்குச் செல்லுங்கள். கடலுக்கு – நீராசயத்துக்குச் செல்லுங்கள். அவிகளோடு சலங்களின் பேரனைப் போற்றுங்கள். அவன் இன்று உங்களுக்கு சுத்தப்பட்ட சலத்தை அளிப்பானாக. நீங்கள் அவனுக்குத் தேன் நிறைந்த ஸோமத்தைப் பொழியுங்கள்.

4. சலங்களின் நடுவே ஸமிந்தனமில்லாமல் பிரகாசிப்பவனும், யக்ஞங்களிலே அறிஞர்களால் போற்றப்படுபவனுமான சலங்களின் பேரன் ஸோமரஸத்தால் கலக்கப்படும் எந்த இனிய சலங்களால் வீரச்செயல்களுக்கு



இந்திரன் எழுகிறானோ அந்த இனிய சலங்களை எங்களுக்களிப்பானாக.

5. எந்த சலங்களோடு ஸோமன், அழகிய யுவதிகளோடு ரமிக்கும் மனிதனைப்போல் மகிழ்ந்து எக்களிக்கிறானோ அந்த சலங்களிடம் அத்வர்யுவே! நீ செல்லவும். நீ அவற்றைத் தெளிக்குங்கால், பவித்திரத்திலே ஸோம ஓஷதிகளோடு அச்சலங்களை சுத்தப்படுத்தவும். 9097

6. யுவதிகள் தங்களை விரும்பும் இளைஞனோடு இன்புறுகிறார்கள். இளைஞன் தன்னை விரும்பும் யுவதிகளோடு இன்புறுகிறான். இங்ஙனம் அத்வர்யுக்களும், அவர்களுடைய மொழியும் தேவிகளான சலங்களோடு ஒருமனமுள்ளவர்களாகிறார்கள். பரஸ்பரம் தெரிந்து கொள்கிறார்கள்.

7. சலங்களே! நீங்கள் மேகங்களால் மூடப்பட்டிருந்தபோது வழியைச் செய்தவனும், உங்களைப் பெருந்துன்பத்திலிருந்து விடுவித்தவனுமான அந்த இந்திரனுக்கு மது நிறைந்ததும், தேவர்களை இன்புறுத்துவதுமான ஸோமமிசிரத்தையளியுங்கள்.

8. நதிகளே! உங்களிடமிருந்து தோன்றியதும், மதுவின் சுனையும், நெய்யங்கமுள்ளதும், யக்ஞங்களில் போற்றப்படுவதும், இனிமை நிறைந்ததுமான அலையை இந்திரனுக்குப் பிரேரியுங்கள். செல்விகளான சலங்களே! என் அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

9. நதிகளே! உங்களுடைய இரு பயன்களை அளிப்பதும், மதத்தைத் தருவதும், ஸோமத்தோடு சேர விரும்புவதும், வானிலே தோன்றியதும், மூவுலகங்களில் பரவுவதும், பெருகுவதும், சுனையும் இந்திர பானமுமான இன்பமளிக்கும் ஸாரமான அலையை எங்கள் யக்ஞத்துக்குப் பிரேரியுங்கள்.

10. ரிஷியே! இந்திரப்போர், மேகங்களைப்போல் சலமுள்ளவையும், பல தாரைகள் இருப்பவையும், திரும்புபவையும், ஸோமனோடு சேர விரும்புபவையும், உலகத்

தைத் தோற்றுவிப்பவையும், அதைத் தாங்குபவையும், செழிப்பித்து ஸோமத்தோடு சேர்ந்திருப்பவையுமான சலங்களைப் போற்றவும். 9102

11. ரித்விஜர்களே! எங்கள் யக்ஞத்தை தேவயஜனத்தோடு செலுத்துங்கள். செல்வங்கள் தோன்ற தோத்திரத்தைச் செலுத்துங்கள். யக்ஞம் நடைபெறுங்கால் ஆபீனத்தைப் புலப்படுத்துங்கள். சலங்களே! எங்களுக்கு சுகத்தைத் தருபவர்களாயிருங்கள்.

12. செல்விகளான சலங்களே! நீங்கள் செல்வங்களை நடத்துகிறீர்கள். நீங்கள் செயலையும், சௌபாக்கியத்தையும், அமுதத்தையும் ஏந்துகிறீர்கள். நீங்கள் செல்வத்தையும், சந்தானத்தையும் பாலிப்பவர்கள். ஸரஸ்வதி, போற்றுபவனுக்குச் செல்வத்தையெல்லாம் தருவாளாக.

13. சலங்களே! நான் நெய்யையும், பாலையும் ஏந்தி வருபவர்களும், அத்வர்யுக்களோடு பேசிக்கொள்பவர்களும், இந்திரனுக்கு நன்கு பிழியப்பட்ட ஸோமத்தைத் தாங்குபவர்களும், யக்ஞத்துக்கு வருபவர்களுமான உங்களைக் காண்கிறேன்.

14. செல்விகளும், சீவர்களைத் தாங்குபவர்களுமான சலங்கள் என்னுடைய யக்ஞத்துக்கு வந்திருக்கிறார்கள். நண்பர்களான அத்வர்யுக்களே! அவர்களை உட்காரச் செய்யுங்கள். ஸோமத்தையளிப்பவர்களான நீங்கள் சலங்களின் பேரனோடு பேசிக்கொண்டு அவர்களைத் தருப்பையின் மீது ஸ்தாபியுங்கள்.

15. விருப்பமுள்ள சலங்கள் இப்பொழுது இந்தத் தருப்பைக்கு வந்திருக்கிறார்கள். தேவர்களைத் திருப்தி செய்ய விரும்பும் அவர்கள், எங்கள் யக்ஞத்திலே அமர்ந்திருக்கிறார்கள். அத்வர்யுக்களே! இந்திரனுக்காக ஸோமத்தைப் பிழியுங்கள். உங்களுக்குத் தேவர்களை யஜிப்பது சுலபமாயிருக்கிறது. 9107



# 31. விசுவேதேவர்கள்

## 868. கவஷன்

1. வழிபடுபவர்களான எங்களால் போற்றத் தகுந்தவனும், யஜிக்கத் தகுந்தவனுமான இந்திரன், துரிதர்களான மருத்துக்களோடு எங்களுடைய பாலனத்துக்கு வருவானாக. நாங்கள் அவர்களோடு உத்தம நண்பர்களாயிருப்போமாக. எல்லாப் பாபங்களையும் கடப்போமாக.

2. மானிடன் எப்பொழுதும் செல்வத்தை விரும்புவானாக. அதைச் சம்பாதித்து ருத வழியிலே அவியோடு போற்றுவானாக. அவன் தன்னுடைய சொந்த மனத்தாலே, தேவர்களைத் தியானிப்பானாக. அவன் தன் மனத்தாலே மிக்கப் புகழுள்ளவனும், சர்வ வ்யாபகனுமான தேவனைக் கிரகிப்பானாக.

3. எங்களால் யக்ஞம் கற்பிக்கப்படுகிறது. அவியின் திருப்தி செய்யும் பாகங்கள் உத்தம சன்மமுள்ள சுந்தரமான தேவனிடம் புண்ணிய தீர்த்தத்திலே அளிக்கப்படும் சலங்களைப் போல் செல்லுகின்றன. நாங்கள் சுவர்க்கத்தின் சுகத்தை அடைவோமாக. நாங்கள் அமுதர்களை அறிவோமாக.

4. செல்வத்தின் தலைவனும், தான மனமுள்ளவனும், நித்தியனுமான பிரஜாபதி, தேவனான ஸவிதாவால் பிறப்பிக்கப்பட்டவனுக்குச் செல்வங்களை அளிக்க விரும்புவானாக. பகனும், அரியமானும், அவனுக்குப் பசுக்களை அளிப்பானாக. அவன் — வேறு தேவன் — அவனுக்குத் தோன்றுவானாக. இனியனாயிருப்பானாக.

5. புகழுள்ள தேவர்கள் பலத்தோடு சேருங்கால் எங்களுடைய இந்தத் தோத்திரம் உஷையிலே சேரத் தகுந்ததாகும். புவியைப்போல் சேரத் தகுந்ததாகுக. சுகத்தைத் தரும் வாஜன் இந்தத் துதிப்பவனின் தோத்திரத்தை விரும்பி எங்களிடம் வருவானாக. 9112

6. பழையதும் புட்டியுள்ளதும் இந்தத் தேவ சபையைப் போற்றுவதுமான இந்த நல்ல தோத்திரம் தேவர்களை அணுகி மிக்கப் பரவுக. கூடியிருக்கும் தேவர்கள் எல்லாம், அசுரபலமுள்ள என்னுடைய சாதாரணமான தேவர்களைப் புட்டிப்படுத்தும் யக்ஞ ஸ்தானத்துக்குத் தெரியும், தெரியாத பயன்களை ஏந்திக் கொண்டு வருகிறார்கள்.

7. எந்த வனத்திலிருந்து எந்த மரத்திலிருந்து தேவர்கள் நன்கு நிலைத்திருப்பவையும், தேயாதவையும், தேவர்களுக்குப் பாலனமளிப்பவையுமான சோதியையும், புவியையுங் கற்பித்தார்கள்? அவர்கள் எல்லா தினங்களையும், பல உஷைகளையும் கற்பித்தார்கள். அவர்களை மனிதர்கள் போற்றுகிறார்கள்.

8. அவர்களுக்கு அந்த ஆற்றலில்லை. அவர்களுக்கு உத்தமனாய் வேறொருவன் இருக்கிறான். கற்பிப்பவனான அவன், சோதிபுவியையும் ஏந்துகிறான். ஸ்வதாவுள்ள — ஆற்றலுள்ள — அவன் இரண்யக்கருப்பன், தனக்கு சுத்தமான சருமத்தை, காந்தியை, தேகத்தை அவனுடைய குதிரைகள் சூரியனிடம் ஏந்திச் செல்வதற்கு முன், சிருஷ்டிக்கு முன்னே எடுத்துக்கொள்கிறான்.

9. சூரியன் பரந்த பூமியைக் கடந்து போகான். காற்று மழையைப் புவியிலிருந்து விலக்காது. எவனிலே மித்திரா வருணர்கள் விளக்கப்பட்டு, தங்கள் காந்தியை வனத்திலே அக்கினியைப் போல் பரத்துகிறார்களோ, அந்தப் பிரஜாபதியை நான் போற்றுகிறேன்.

10. மலட்டுப்பசு திடீரென்று சினைப்பிக்கப்பட்டால் கன்றை ஏந்துகிறாள். தீமைகளை விலக்குபவளும், துன்பத்திலிருந்து நீங்கியவளும், தற்காப்புள்ளவளுமான அவள், குழந்தையைப் பிறப்பிக்கிறாள். பழைய புதல்வனான அக்கினி, தன் பெற்றோர்களால் பிறப்பிக்கப்படுங்கால் புவி, ரித்விஜர்கள் தேடும் சமீயை வெளிப்படுத்துகிறது.



11. மலட்டுப்பசு சம்மரம். அது அசுவத்தத்தைப் பிறப்பிக்கிறது. இந்த இருமரங்களின் கட்டைகளிலிருந்து இரு அரணிகள் செய்யப்படுகின்றன. இவை தேய்க்கப்பட்டால் அக்கினி தோன்றுகிறது. மேற்கட்டை சம்மரத்திலிருந்து வந்தது. கீழ்க்கட்டை அசுவத்தம் மிருதுவாயிருக்கும்.

12. கண்வனை நிருஷதனுடைய மகன் என வேத அறிஞர்கள் சொன்னார்கள். கருப்பனான அவனிடம் உணவு இருந்தது. அவன் செல்வத்தைச் சம்பாதித்தான். அக்கினி, கருப்பனுக்கு அலங்கும் ஆபீனத்தைப் பொழிந்தான். அக்கினியைத் தவிர வேறு எந்தத் தேவனும் கண்வனுக்கு ருதத்தை — யக்ஞத்தை — செழிப்பிக்கவில்லை 9119

## 32. இந்திரன்

### 869. கவஷன் - ஐலூஷன்

1. இந்திரனுடைய வருகையை எதிர்பார்க்கும் வழிபடுபவனுக்கு சேவை செய்ய அவன் தன்னுடைய துரித குதிரைகளை அனுப்புகிறான். அவன் இசைந்த வழிகளால் போற்றும் வழிபடுபவனுடைய உத்தமத் தோத்திரங்களைப் பெற வருவானாக. இந்திரன் ஸோமனைத் தருபவனால் அளிக்கப்படும் உணவை, சுவையை அறியுங்கால் அவன் எங்களுடைய அவிகளாலும், துதிகளாலும் திருப்தியாகிறான்.

2. இந்திரனே! பலரால் போற்றப்படும் நீ, உன் ஒளியால் சோதி புவிகளின் ஒளி மண்டலங்களிலே பரவுகிறாய். எங்களுடைய யக்ஞங்களுக்கு உன்னை அடிக்கடி ஏந்திவரும் குதிரைகள் எங்கள் துதியால் இன்பமாகி ஏழைகளான எங்களுக்குச் செல்வங்களைத் தாங்கி வருக.

3. இந்திரன் எனக்கு சுந்தரப் பொருள்களிலே மிக்க அழகாயிருக்கும் யக்ஞத்தின் இச்செயலை, தன் பெற்றோர்களை அறிவித்துக்கொள்ள விரும்பும் புதல்வனைப்போல்

விரும்புவானாக. மனைவி இனிய மொழிகளால் கணவனை ஏந்துகிறாள் — அணுகச் செய்கிறாள். கணவனுடைய சௌபாக்கியம் திருமணத்தால் பூர்த்தியாகிறது.

4 இந்திரனே! எங்களுடைய தோத்திரங்கள் உன்னுடைய வருகையை, தங்கள் கொட்டில்களை விரும்பும் பசுக்களைப் போல் விரும்புங்கால் யக்ஞத்தின் இந்த அழகான இடத்திலே நீ பிரகாசிக்கவும். ஏனெனில் வழிபடுபவனான என்னுடைய துதி சங்கத்துதியை முந்துகிறது. இவன் ஏழு சந்தங்களோடு துதிக்கிறான். 9123

5. ஹோதா — அக்கினி — அனைவருக்கும் முன்னால் உங்கள் இடத்துக்கு வருகிறான். துரிதமாய்ச் செல்லும் முதல்வனான இந்திரன் ருத்திரர்களோடு, மருத்துக்களோடு வருகிறான். பாலிக்கும் தேவர்களுக்கும், துதியால் செல்வத்தைத் தரும் அமுதர்களுக்கும், மதப்படுத்தும் ஸோமத்தைப் பொழியுங்கள்.

6. தேவர்களின் விரதபாலகனான இந்திரன், சலங்களிலே மறைந்திருந்த என்னிடம் — அக்கினியினிடம் — கூறினான்: அக்கினியே! அறிஞனான நான் — இந்திரன் — உன்னைப் பின்பற்றி, நீ இருப்பதைக் கண்டுபிடித்தேன். ஆதலால் உன்னால் கற்பிக்கப்பட்ட நான், சோதிக்குச் செல்வேனாக.

7. வழிதெரியாதவன், தெரிந்தவனிடம் கேட்கிறான். வழி தெரிந்தவனால் கற்பிக்கப்பட்டு, தன் இடத்துக்குச் செல்லுகிறான். இதுவே உண்மையாகக் கற்பனையின் செல்வம். இதனால் அவன் நேராகச் செல்லும் வழியைக் காண்கிறான்.

8. இன்று அக்கினி சுவாசித்தான். அவன் இந்தத் தினங்களைச் சிந்தித்தான். ஒளியால் சூழப்பட்டுள்ள அவன் தாயின் பாலைக் குடித்தான். வழிபடுபவர்களுடைய தோத்திரம் எப்பொழுதும் தருணனாயிருக்கும் அக்கினிக்குச் செல்லுகிறது. அக்கினி சாந்தனாகவும் செல்வனாகவும் ஸுமதியுள்ளவனுமானான்.



9. கலசமே! குருசிரவணனே! செல்வங்களைத் தருமம் உனக்கு இந்த மங்களப் பாக்களை நாங்கள் கூறுவோமாக. செல்வர்களான உங்களுக்கு இந்திரன் செல்வத்தைத் தருவானாக. என் இருதயத்திலே என்னால் பாலிக்கப்படும் ஸோமனும் செல்வத்தை அளிப்பானாக. 9128

# 33. பலதேவர்கள்

## 870. கவஷன் ஐலூஷன்

### விசுவேதேவர்கள்

1. மனிதர்களை நியமிக்கும் தேவர்கள் என்னைக் குருசிரவணனுக்கு நியமித்தார்கள். நான் வழியிலே பூஷாவை ஏந்தினேன். விசுவேதேவர்கள் என்னுடைய பாலகர்கள். துசாஸு வருகிறார் எனக் கோஷம் எழுகிறது.

### இந்திரன்

2 என்னுடைய விலா எலும்புகள் இரு பக்கங்களிலும் எதிரித்தனமுள்ள மனைவிகளைப்போல் என்னை வருத்தப்படுத்துகின்றன. நோயும், நக்கினமும், பசியும் என்னைத் துன்புறுத்துகின்றன. என் மனம் வேடனால் பயமடைந்த பறவையைப்போல் நடுங்குகிறது.

3. சதக்கிரதுவே! வழிபடுபவனான என்னை, கவலைகள் நூற்களைத் தின்னும் எலிகளைப்போல் தின்கின்றன. இந்திரனே! மகவானே! நல்ல தானத்தால் எங்களை சுகப்படுத்தவும். தந்தையைப்போல் பாலிப்பவனாயிருக்கவும்.

### குருசிரவணன்

4. ரிஷியான நான், வள்ளலும், இளவரசனும், திரஸதஸ்யுவின் புதல்வனுமான குருசிரவணனை அத்வர்யுக்களுக்குச் செல்வத்தை அளிக்க வேண்டுகிறேன்.

5. குருசிரவணனுடைய மூன்று குதிரைகள் என்னை இனிமையாய்த் தேரிலே இழுத்துச் செல்கின்றன. நான் யக்ஞத்திலே ஆயிரங்களை அளிக்கும் அவனைப் போற்றுகிறேன். 9133

உபமசிரவஸன்

6. உபமசிரவஸனே! உன்னுடைய தந்தையின் மொழிகள் தரித்திரனுக்கு அளிக்கப்பட்ட இனிய நிலத்தைப் போல் இனிமையாயிருந்தன.

7. உபமசிரவஸனே! மித்திராதிதியின் பேரனே! மகனே! என்னிடம் வா. நான் உன் தந்தையைப் போற்றியவனுயிருந்தேன்.

8. நான் மனிதர்களுக்கும் அமிருதர்களுக்கும் தலைவனுயிருந்தாலும் வள்ளலான அவன் சாகாமலிருப்பானே?

9. தேவர்களால் கற்பிக்கப்பட்டது நூறு வயதுக் கப்பால் எவனும் சீவியான். ஆதலால் அவன் நண்பர்களிடமிருந்து பிரிக்கப்பட்டான். 9137

## 34. அட்சங்கள்

### 871. கவஷன் ஐலூஷன் அல்லது அட்சமௌஜவான் சூதன்

1. ஆடும் உச்சிகளிலே உயர்ந்த மரங்களிலிருந்து தோன்றிய காய்கள் சூதாட்டப் பலகையின் மீது உருளுங்கால் என்னை மதப்படுத்துகின்றன. விழித்திருக்கும் அக்கங்கள் மௌஜவத்திலிருந்து தோன்றிய ஸோமத்தின் பானத்தைப் போல் என்னை இன்புறுத்துகின்றன.

2. என்னுடைய மனைவி என்னை ஒருபோதும் வருத்தப்படுத்தவில்லை. என்னிடம் கோபித்ததும் இல்லை. என்னிடமும் என் நண்பர்களிடமும் அவள் பிரியமாகவே இருந்தாள். ஆனுல் நான் ஒன்று அல்லது வேருன அக்கத்துக்காக என் அன்புள்ள இந்த மனைவியைக் கைவிட்டேன்.

3. என் மாமி என்னை நிந்திக்கிருள். என் மனைவி எதிர்க்கிருள். யாசகன் சுத்தப்படுத்துபவனைக் காணவில்லை. மூப்படைந்த உயரிய குதிரையைப் போலுள்ள நான் சூதனுடைய போகத்தைக் காணவில்லை.



4. எந்த சூதனுடைய செல்வத்தை ஆற்றலுள்ள அக்கம் விரும்புகிறதோ அவனுடைய மனைவியை வேறு சூதர்கள் பரிகசிக்கிருர்கள், பற்றுகிருர்கள். அவனுடைய தாயும், தந்தையும், சகோதரர்களும் கூறுகிருர்கள்: நாங்கள் அவனை அறியோம். அவனை விலங்கிட்டு எடுத்துச் செல்லுங்கள்.

5. நான் சிந்திக்குங்கால் நினைக்கிறேன். நான் இனி காய்களோடு ஆடேன். ஆனுல் என்னைக் கைவிடும் என் நண்பர்களைக் கவனிக்கிறேன். சிகப்புக் காய்கள் எறியப்படுங்கால் சத்தத்தை எழுப்புகின்றன. நான் சந்திக்கும் இடத்துக்குக் காதலியைப் போல் ஆடும் இடத்துக்குச் செல்லுகிறேன். 9141

6. கொதிக்கும் தேகமுள்ள சூதன் ஆடும் இடத்துக்குப் போகிருன். தன்னையே வினவிக்கொள்கிருன். நான் ஜயிப்பேனு? எதிரியோடு ஆட்டக்கலைகளை அவன் பயிலுங்கால் காய்கள் அவனுடைய விருப்பத்தை அதிகப்படுத்துகின்றன.

ஆயங்கள்

7. அட்சங்கள் அங்குசங்களையும், கொக்கைகளையும் ஏந்துகின்றன. அவை ஆயுதங்களால் சூதனைக் குத்தி, வருத்தித் துன்புறுத்துகின்றன. ஜயிப்பவனுக்குத் தேனுல் பூசப்பட்ட கழல்கள் புதல்வர்களைத் தருகின்றன. ஆயங்கள் சூதனுடைய அனைத்தையும் அபகரித்து அவனை மீண்டும் அழிக்கின்றன.

8. ஐம்பத்துமூன்று காய்களுள்ள சங்கமானது, சத்திய தருமமுள்ள தேவஸவிதாவைப் போல் கிரீடிக்கிறது. எந்த உக்கிரனுடைய கோபத்துக்கும் அவை வணங்காமலிருக்கின்றன. அரசனும் அவற்றை வணங்குகிருன்.

9. இப்பொழுது ஆயங்கள் கீழே உருளுகின்றன. இப்பொழுது மேலே எழுகின்றன. கீழே இருக்கும் அவை சூதர்களின் நெஞ்சுகளிலே துடிக்கின்றன. கைகளில்லாத

அவை கைகளுள்ள சூதனை ஜயிக்கின்றன. சூதாட்டப் பலகையின் மீது சோதியின் இடியிலிருந்து எறியப்பட்ட கரிகளைப் போலிருக்கும் அக்கங்கள் தண்மையாயிருந்தாலும் சூதனின் இருதயத்தைத் தகிக்கின்றன.

### சூதன்

10. சூதனுடைய கைவிடப்பட்ட மனைவி தவிக்கிறாள். இஷ்டம்போல் திரியும் தன் மகனுக்காகத் தாய் வருந்துகிறாள். கடனுள்ளவனும், கலங்குபவனுமான அவன், செல்வத்தை விரும்பி, மற்றவர்களுடைய மனைகளுக்கு இரவிலே அதைத் திருடச் செல்லுகிறான். 9146

11. சூதன் மற்றொருவனுடைய சந்தோஷமான மனைவியையும், அவனுடைய அழகான வீட்டையும் பார்த்து வருந்துகிறான். ஆனால் காலையிலே பழுப்புக் குதிரைகளைப் பூட்டுகிறான். பாவி இரவிலே அக்கினியின் அருகே சயனிக்கிறான்.

### அட்சங்கள்

12. அக்கங்களே! உங்கள் மகத்தான படையின் சேனாதிபதியும், உங்கள் படையின் முதல்வனுமான அக்கத்துக்கு நான் என் வணக்கத்தையளிக்கிறேன். நான் அவனுக்காக, அக்கத்துக்காக, செல்வத்தைச் சம்பாதிக்கவில்லை. நான் அவனுக்கு என் விரித்த பத்து விரல்களைக் காட்டுகிறேன். நான் சத்தியத்தையே கூறுகிறேன். என்னிடம் பணமில்லை.

### பயிர்த்தொழில்

13. சூதனே! என் மொழியை நம்பவும். காய்களோடு விளையாடாதே. நிலத்தைப் பண்படுத்தி, பயிர்த்தொழிலை நடத்தவும். இதனால் வரும் செல்வத்திலே இன்பமாகவும். சூதனே! அங்கு பசுக்கள் தோன்றுகின்றன. அங்கு மனைவியிருக்கிறாள். இதையே இந்தத் தலைவனான ஸவிதா என்னிடம் கூறினான்.



### அக்கங்கள்

14. அக்கங்களே! நீங்கள் எங்களிடம் நண்பர்களாய் இருங்கள். எங்களை சுகப்படுத்துங்கள். உக்கிரக் கோபத்தோடு எங்களிடம் வராதீர்கள். உங்கள் கோபம் எங்கள் சத்துருக்கள் மீது செல்க. எங்கள் பகைவன் பழுப்புள்ள அக்கங்களால் பந்தப்படுவானாக. 9150

# 35. விசுவேதேவர்கள்

## 872. லூசன் தாநாகன்

1. இந்திரனோடு இணைந்துள்ள அக்கினிகள் சோதியை உஷையின் துவக்கத்திலே புலப்படுத்தி எழுகின்றன. மகத்தான சோதியும் புவியும் எங்கள் செயலை அறிவார்களாக. நாங்கள் இன்று தேவர்களின் பாலனத்தை விரும்புகிறோம்.

2. நாங்கள் சோதி புவிகளின் பாலனத்தை விரும்புகிறோம். நாங்கள் தாய்மார்களான ஸிந்துக்களையும், ஏரிகளுள்ள மலைகளையும், சூரியனையும், உஷையையும் பாவத்திலிருந்து பிரியப்போற்றுகிறோம். இப்பொழுது பிழியப்படும் ஸோமம் எங்களுக்கு சௌபாக்கியத்தை அளிப்பானாக.

3. மகத்தான தாய்மார்களான சோதியும் புவியும் பாவமற்ற எங்களை இன்று சுகத்துக்காகப் பாலிப்பார்களாக. உதயமாகும் உஷை எங்கள் பாவத்தை நீக்குவாளாக. நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை ஸ்வஸ்திக்காகப் போற்றுகிறோம்.

4. செல்வியான இந்த முதல் உஷை, ஈகையர்களான எங்களுக்குச் செல்வங்கள் நிறைந்ததும், தேவர்களுக்குத் தகுந்ததாயுமுள்ள பருவத்தை உதயப்படுத்துவாளாக. நாங்கள் துட்ட செல்வனுடைய கோபத்தைத் தூரத்தில் விலக்குவோமாக. நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை ஸ்வஸ்திக்காகப் போற்றுகிறோம்.

5. சூரியனுடைய கிரணங்களோடு சேர்ந்திருப்பவர்களும், உதயத்திலே சோதியை ஏந்தி வருபவர்களுமான உஷைகளாம் நீங்கள், இன்று புகழுக்காக எங்கள் மீது பிரகாசியுங்கள். நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை சுவஸ்திக்காகப் போற்றுகிறோம். 9155

6. நோயற்ற உஷைகள் எங்களிடம் வருவார்களாக. மகத்தான சோதியோடு அக்கினிகள் எழுவார்களாக. அசுவினிகள் துரிதமாய்ச் செல்லும் தேரை, எங்களிடம் அவர்கள் வர இணைப்பார்களாக. நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை சுவஸ்திக்காகப் போற்றுகிறோம்.

7. ஸவிதாவே! நீ இன்று எங்களுக்குப் போற்றத் தகுந்ததும், உயர்ந்ததுமான செல்வத்தை அளிக்கவும். நீயே பொருள்களை வகுத்தளிப்பவன். நான் செல்வங்களைப் பிறப்பிக்கும் துதியைக் கூறுகிறேன். நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை ஸ்வஸ்திக்காகப் போற்றுகிறோம்.

8. மனிதர்களான நாங்கள் அறிந்து கூறும் சத்தியத்தோடு சேர்ந்த தேவர்களின் ஸ்தோத்திரம் என்னைப் பாலிக்க. சூரியன் உஷையின் ஒளியையெல்லாம் பரிசித்துக் கொண்டு எழுகிறான். நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை சுவஸ்திக்காகப் போற்றுகிறோம்.

9. நாங்கள் இன்று தருப்பையைப் பரத்திப் பிழியுங் கற்களைச் சேர்த்து, துதியைப் பூர்த்தி செய்து துவேஷமில்லாமல் போற்றுகிறோம். வழிபடுபவனே! நீ ஆதித்தியர்களின் சுகத்திலே நிலைத்து உன் கடமைகளைச் செய்கிறாய். நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை சுவஸ்திக்காகப் போற்றுகிறோம்.

10. எங்களுடைய தேவர்கள் சேர்ந்து இன்புறுவதும், பிரகாசமுள்ளதும், பரந்திருப்பதுமான தருப்பையின் மீது அக்கினியே! நீ ஏழு ஹோதாக்களையும், இந்திரனையும், மித்திரனையும், வருணனையும், பகனையும் அமர்த்துவாயாக.



நான்செல்வத்துக்காகத் தேவர்களைப் போற்றுகிறேன். நாங்கள் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியை சுவஸ்திக்காகப் போற்றுகிறோம். 9160

11. ஆதித்தியர்களே? எங்கள் யக்ஞத்துக்கு வாருங்கள். இசைந்துள்ள நீங்கள் நாங்கள் செழிக்க யக்ஞத்தைப் பாலியுங்கள். நாங்கள் சுவஸ்திக்காகப், பிரகஸ்பதியையும். பூஷாவையும், அசுவினிகளையும், பகனையும், சொலிப்பிக்கப்பட்ட அக்கினியையும் போற்றுகிறோம்

12. தேவர்களான ஆதித்தியர்களே! எங்கள் பசுக்களும், மக்கட்களும், பேரர்களும் வாழ எங்களுக்குப் புகழுள்ளதும், செழிப்புள்ளதும். மனிதர்களைப் பாலிப்பதுமான மனையையளியுங்கள். நாங்கள் சுவஸ்திக்காக சொலிப்பிக்கப்பட்ட அக்கினியைப் போற்றுகிறோம்.

13. இன்று எல்லா மருத்துக்களும், எல்லாத் தேவர்களும், பாலனத்தோடு எங்களருகில் இருப்பார்களாக. எங்கள் அக்கினிகள் எல்லாம் நன்கு சொலிப்பிக்கப்படுக. எல்லாத் தேவர்களும் பாலனத்தோடு வருவார்களாக. எல்லாச் செல்வங்களும், உணவுகளும் எங்களுக்குத் தோன்றுக.

14. எங்கள் விருப்பங்களைப் பூர்த்திசெய்யத் துரிதமாகும் தேவர்களே! உன்னால் போரிலே பாலிக்கப்படுபவனும், பகைவர்களிடமிருந்து பாலிக்கப்படுபவனும், பாவத்திலிருந்து நீக்கப்பட்டு விருப்பப்பூர்த்திகளைப் பெறுபவனும், பாலனத்தில் நிலைத்துப் பயமன்றியிருப்பவனும், இவனைப்போல் இப்பாலனங்களையெல்லாம் அடையும் நாங்களும், தேவர்களுக்கு யக்ஞத்தைச் செய்வதில் ஊக்கமுள்ளவர்களாயிருப்போமாக. 9164

## 36. வசுவேதேவர்கள்

### 873. லுசன் தானாகன்

1. நான் மகத்தாயும், அழகாயுமுள்ள பகலையும், இரவையும், சோதியையும், புவியையும் அரியமானோடு

மித்திரனையும், வருணனையும், இந்திரனையும், மருத்துக்களையும், மலைகளையும், சலங்களையும், ஆதித்தியர்களையும், வானையும், எல்லாத் தேவர்களையும் அழைக்கிறேன்.

2. அறிஞர்களும், சத்தியர்களுமான சோதியும் புவியும், எங்களைப் பாவத்திலிருந்தும், துன்பத்திலிருந்தும் பாலிப்பார்களாக. துன்மதியுள்ள நிர்ருதி எங்களை வசப்படுத்தாமலிருப்பாளாக. நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

3. செல்வர்களான மித்திராவருணர்களின் தாயான அதிதி எங்களை எல்லாத் துன்பத்திலிருந்தும் பாலிப்பாளாக. நாங்கள் பகைவனற்ற சோதியின் ஒளியை அடைவோமாக. நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

4. சப்திக்கும் கல் அரக்கர்களையும், தீக்கனவுகளையும், நிர்ருதியையும், எல்லாப் பட்சகர்களையும் விலக்குக. நாங்கள் மருத்துக்களுடைய ஆதித்தியர்களுடைய சுகத்தை அடைவோமாக. நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

5. இந்திரன் தருப்பையின் மீது அமர்வானாக. இளை பொழிவாளாக. துதிப்பவனான பிரகஸ்பதி ஸாம கானங்களோடு எங்களைப் போற்றுவானாக. நாங்கள் சீவிக்க அறிவு நிறைந்த தோத்திரத்தைக் கூறுகிறோம். நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்பு
கிறோம். 9169

6. அசுவினிகளே! எங்களுடைய யக்ஞத்தை சோதிக்கு ஏறச் செய்யுங்கள். அது எங்களுக்குத் துன்பமற்றதாகி இன்பத்தை அளிக்க அதை ஊக்கப்படுத்துங்கள். நெய்யளிக்கப்பட்ட அக்கினியைத் தேவர்களை நோக்கி எரியச் செய்யுங்கள். நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.



7. நான் இங்கே செவிச்செல்வர்களும், பெரியவர்களும், சுத்தப்படுத்துபவர்களும், சுகத்தைத் தருபவர்களுமான மருத்துக்களின் படையை நட்புக்காக அழைக்கிறேன். உங்கள் நாமத்தைப் போற்ற நாங்கள் எங்கள் செல்வத்தை அதிகரித்துக் கொள்வோமாக. நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

8. நாங்கள் சலங்களைப் பாலிப்பவனும், சீவனைத் தாங்குபவனும், தேவர்களை இன்புறுத்துபவனும், நன்கு போற்றப்படுபவனும், யக்ஞத்தின் செல்வனும், பிரகாசிக்கும் கிரணங்களுள்ளவனும், வலியனுமான ஸோமனை அளிக்கிறோம். நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

9. சீவித்திருக்கும் புதல்வர்களோடு வாழ்பவர்களும், குற்றமற்றவர்களுமான நாங்கள், எங்களோடு பகிர்ந்து கொள்பவர்களோடு பகிர்ந்து கொண்டு, தேவர்களுக்கு அவிகளை அளிப்போமாக. பிரம்மத்துவேஷிகள் எங்கள் பாவத்தைப் பல திசைகளுக்கு எடுத்துச் செல்வார்களாக. நாங்கள் இன்று தேவர்களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

10. தேவர்களே! மானிடர்கள் போற்றுவதற்குகர்களான நீங்கள் எங்கள் தோத்திரங்களுக்குச் செவி கொடுங்கள். நாங்கள் விரும்புவதை அளியுங்கள். ஜயிப்பதற்குரிய அறிவையும், செல்வத்தோடு புகழையும், ஆண்சந்ததியையும் அளியுங்கள். நாங்கள் இன்று தேவர்
களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம். 9174

11. நாங்கள் செல்வங்களையும், வீரப்புதல்வர்களையும் அடைய, இன்று பெரியவர்களும், தடைபடாதவர்களும், வலியர்களுமான தேவர்களின் மகத்தான பாலனத்தை நாடுகிறோம். நாங்கள் இன்று தேவர்களுடைய இந்த மகத்தான பாலனத்தை விரும்புகிறோம்.

12. நாங்கள் சோபிப்பிக்கப்பட்ட மகத்தான அக்கினியின் சுகத்தில் இருப்போமாக. பாவமன்னியி லிருப்போமாக. ஸ்வஸ்திக்காக மித்திரா வருணர்களின் பாலனத்திலிருப்போமாக. ஸவிதாவின் உத்தம சந்நதி யின் நடுவிலிருப்போமாக. நாங்கள் இன்று தேவர் களுடைய இந்தப் பாலனத்தை விரும்புகிறோம்.

13. ஸத்தியத்தின் தந்தையான ஸவிதாவாலும், மித்திரனாலும், வருணனாலும் நடத்தப்படும் விசுவே தேவர்களான நீங்கள் எங்களுக்கு வீரப்புதல்வர்களோடு செல்வத்தையும், பசுக்களும் பல நிதியுமுள்ள செழிப்பை யும் அளியுங்கள்.

14. ஸவிதா மேற்கிலிருந்து, கிழக்கிலிருந்து, வடக்கி லிருந்து, தெற்கிலிருந்து எங்களுக்கு விரும்பத்தகுந்த செல்வத்தையெல்லாம் செலுத்துவானாக. ஸவிதா எங் களுக்குத் தீர்க்காயுளை அளிப்பானாக. 9178

## 37. சூரியன்

### 874. அபிதபவன்

1. மித்திரா வருணர்களுடைய கண்ணுக்கு வணக் கத்தை அளியுங்கள். தூரமாய்க் காண்பவனும், துவஜ னும், தேவர்களில் பிறந்தவனும், மகத்தாயுமுள்ள தேவ னுக்கு இந்த யக்ஞத்தை நடத்துங்கள். சோதியின் மகனான சூரியனுக்குத் துதிகளைப் பாடுங்கள்.

2. சத்தியமொழியால் சோதியும் புவியும், இரவு களும் பகல்களும் பரவுகின்றன. சத்தியமொழியிலே சலனமாகும் வேறு அனைத்தும் இளைப்பாறுகிறது. தினந் தோறும் சலங்கள் பாய்கின்றன. சூரியன் தினந்தோறும் எழுகிறான். அந்த சத்தியமொழி என்னை எங்கும் பாலிக்க.

3. சூரியனே! உன்னுடைய துரித குதிரைகளைத் தேரிலே இணைக்க விரும்புங்கால் உன்னருகிலே எந்தப் பழைய அரக்கனும் தங்கான். நீ வேறு சோதியோடு எழுங்கால் பழைய சோதி உன்னைப் பின்பற்றுகிறது.



4. சூரியனே! நீ எந்த சோதியால் இருளை நீக்கு கிறாயோ, எந்தக் காந்தியால் சலனமாகும் ஒவ்வொன் றையும் செலுத்துகிறாயோ அதனால் எங்களிடமிருந்து எல்லா வறுமையையும், வணக்கமின்மையையும், நோயை யும், தீக்கனவுகளையும் நீக்கவும்.

5. கோபமில்லாத நீ, அழைக்கப்படுங்கால், ஒவ் வொருவனுடைய விரதத்தையும் பாலிக்கிறாய். நீ சுவதா வுக்குப்பின் எழுகிறாய். சூரியனே! நாங்கள் உன்னை இன்று அழைக்குங்கால் தேவர்கள் எங்களுடைய இந்த நோக்கத்தைப் பாலிப்பார்களாக. 9183

6. சோதியும் புவியும், சலங்களும், இந்திரனும் மருத்துகளும் எங்களுடைய இந்த அழைப்பையும், துதி யையும் கேட்பார்களாக. சூரியனைக் காணுங்கால் நாங் கள் துக்கமில்லாமலிருப்போமாக. நாங்கள் நீடூழி வாழ்ந்து மங்கலமான மூப்பை அடைவோமாக.

7. நல்ல மனமுள்ளவர்களும், நல்ல கண்களுள்ள வர்களும், சந்தானமுள்ளவர்களும், நோயற்றவர்களும், பாபமற்றவர்களுமான நாங்கள், தினந்தோறும் உன்னைப் போற்றுவோமாக. சூரியனே! உன்னுடைய நண்பர் களைப் பாலிப்பவனும், தினந்தோறும் எழுபவனுமான உன்னை, நாங்கள், நீ நீடூழி வாழ்வதைக் காண்போமாக.

8. சூரியனே! அனைத்தையும் காண்பவனே! மகத் தான சோதியை ஏந்துபவனும், பிரகாசிப்பவனும், ஒவ் வொரு கண்ணையும் களிப்புறுத்துபவனும், பரந்திருப் பதும், பலமுள்ளதுமான கடலின்மீது எழுபவனுமான உன்னை, நாங்கள் நீடூழி வாழ்ந்து தினந்தோறும் காண் போமாக.

9. பொன்கேசமுள்ள சூரியனே! உன் ஒளியால் எல்லா சீவன்களும் பகலிலே சலனமாகிறார்கள். இர விலே இளைப்பாறுகிறார்கள். நீ எங்களிடம் பாவத்தை

நீக்குவதும் சுகப்படுத்துவதுமான சீவனோடு தினந் தோறும் எங்களிடம் வா.

10. ஒளியால் எங்களை சுகப்படுத்தவும். பகல் ஒளி யால் எங்களை சுகப்படுத்தவும். சீதத்தால் — பனியால் — எங்களை சுகப்படுத்தவும். வெப்பத்தால் சுகப்படுத்தவும். சூரியனே! எங்கள் வழியிலும், எங்கள் மனையிலும், எங்களை சுகப்படுத்த பலவிதமான செல்வத்தை எங் களுக்களிக்கவும்.

11. தேவர்களே! எங்களுடைய இருவித சீவப் பிராணிகளுக்கும், மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் அவர்கள் பருகவும், பலப்படுத்தும் உணவைப் புசிக் கவும் பாலனத்தை அளியுங்கள். எங்களுக்கு சுகத்தை யும், இன்பத்தையும், பாபமின்மையையுமளியுங்கள்.

12. நாங்கள், எங்கள் நாக்கால் மனத்தின் மதியின் மையின் வேகத்தால் பாவத்தைச் செய்து தேவர்களைக் கடுங் கோபப்படுத்தியிருந்தால் வசுக்களே! அந்தப் பாவத்தை எங்களை எதிர்த்துப் பயமுறுத்தும் பகை வனின் மீது செலுத்துங்கள் 9190

## 38. இந்திரன்

### 875. இந்திரன் முஷ்கவிசிஷ்டன்

1. உக்கிரர்களாயும் வீரர்களாயுமுள்ள போர்வீரர் கள் மீது ஆயுதங்கள் ஒவ்வொரு பக்கத்திலும் பாய்ந்து பசுக்கள் பற்றப்படுகின்றன. மனிதர்கள் ஜயிக்கப்படுகி றார்கள். இந்திரனே! இந்தப் போரிலே புகழுக்குரிய ஊக்கச் சண்டையிலே நீ கர்ச்சிக்கிறாய். செல்வத்தை ஜயிக்க எங்களுக்கு உதவுகிறாய்.

2. இந்திரனே! உணவும், பசுக் கூட்டங்களும் நிறைந்த, சிறந்த செல்வங்களை எங்கள் மனையிலே சேர்க் கவும். சக்கரனே! ஜயிப்பவனான உன் ஆதரவால் நாங் கள் சக்தியுள்ளவர்களாய் இருப்போமாக. வசுவே! நாங்கள் விரும்புவதை அளிக்கவும்.



3. இந்திரனே! புருஸ்துதனே! எங்களை எதிர்க்க விரும்புபவன் தாஸனாகவோ, ஆரியனாகவோ அல்லது தேவர்களின் பகைவனாகவோ இருக்கலாம். ஆனால் உன் னுடைய பாலனத்தால் அவர்கள் எல்லாம் எங்களால் சுலபமாய் ஜயிக்கப்படுவார்களாக. உன் உதவியால் நாங் கள் அவர்களைப் போரிலே ஜயிப்போமாக.

4. மனிதனை அழிப்பதும், அன்னத்தையும் புசிப்பது மான போரிலே செல்வத்தை ஜயிப்பவனும், சிலராலும் பலராலும் அழைக்கத்தகுந்தவனும், சுத்தனும், புகழுள்ள வனும், தலைவனுமான இந்திரனை இன்று எங்களுடைய பாலனத்துக்காக எங்கள் முன்னே முற்படுத்துவோமாக.

5. இந்திரனே! விருஷபனே! பிறர் உதவியன்னியில் தானே துலைப்பவனும், எதிர்பாராத பலத்தையளிப்பவ னும், செல்வனை ஊக்கப்படுத்துபவனுமான உன்னை நான் செவியுற்றிருக்கிறேன். நீ குத்ஸனிடமிருந்து நீயே விடு தலையாகி இங்கு வா. உன்னைப் போலுள்ள ஒருவன் எங்ஙு னம் பந்தப்பட்டிருப்பான்? 9195

## 39. அசுவினிகள்

### 876. காட்சீவதிகோஷை

1. நாங்கள் பூர்வகாலங்களிலிருந்தே, அசுவினி களே! உங்களுடைய புகழுள்ளதும், எங்கும் செல்வதும், நன்கு திரும்புவதும், வழிபடுபவனால் காலையிலும் மாலையி லும் அழைக்கத் தகுந்ததுமான இந்தத் தேரை, தந்தை யின் பெயரைப்போல் மதிப்புக்குரிய நாமத்தால் அழைக் கிறோம்.

2. அசுவினிகளே! எங்கள் சத்தியமொழிகளை ஊக் கப்படுத்துங்கள். செயல்களைப் பூர்த்தி செய்யுங்கள். எங்களுடைய பல புலன்களை இயக்குங்கள். நாங்கள் இதையே விரும்புகிறோம். செல்வத்திலே புகழுள்ள பாகத்தை எங்களுக்களியுங்கள். செல்வர்களின் நடுவே எங்களைச் செல்வ ஸோமனைப்போல் ஸ்தாபியுங்கள்.

3. நாஸத்தியர்களே! மனையிலே மூப்படையும் பெண்ணுக்கு நீங்கள் செல்வமாயிருக்கிறீர்கள். நீங்கள் ஏழைகளை, தாழ்ந்தவர்களை, குருடர்களை, மெலிந்தவர்களைப் பாலிப்பவர்கள். உங்களை ருதத்தின் வைத்தியர்கள் என அறிஞர்கள் கூறுகிறார்கள்.

4. நீங்கள் தேய்ந்த தேரைப்போல் மூப்படைந்திருந்த சியாவானனை மீண்டும் யுவனாகச் செய்து சலனமாகும் சக்தியைத் தந்தீர்கள். நீங்கள் சலங்களிலிருந்து துக்கிரனுடைய புதல்வனை உயர்த்தினீர்கள். உங்களுடைய இந்த வீரச் செயல்கள் எல்லாம் எங்கள் யக்ஞங்களிலே போற்றப்படவேண்டும்.

5. அசுவினிகளே! நாஸத்தியர்களே! நான் உங்களுடைய பழைய வீரச்செயல்களை சனங்களின் நடுவே சொல்லுகிறேன். நீங்கள் சுகத்தைத் தரும் வைத்தியர்களாயிருந்தீர்கள். நாங்கள் எங்கள் பாலனத்துக்காக நீங்கள் இருவரும் துதியாருகன் என எண்ணுகிறோம். உன்னை வழிபடும் இவள் உங்களிடம் விசுவாஸத்தோ
டிருக்கிறாள். 9200

6. நான் — கோஷை — இங்கு உங்களை அழைக்கிறேன். அசுவினிகளே! என் அழைப்பைக் கேளுங்கள். புதல்வனுக்கு அளிக்கும் பெற்றோர்களைப்போல் எனக்குச் செல்வத்தை அளியுங்கள். நான் ஏழை. எனக்கு உறவு இல்லை. நண்பனில்லை. இரத்தப் பாசங்களில்லை. இந்த சாபம் – சருமரோகம் – அதிகமாவதற்கு முன்னே என்னை இந்த நோயிலிருந்து நீக்குங்கள்.

7. நீங்கள் உங்கள் தேரிலே புருமித்திரனுடைய பெண்ணான சுந்தியுவை ஏற்றிச் சென்று விமதினிடம் மனைவியாகச் சேர்த்தீர்கள். வத்திரிமதியின் அழைப்புக்கு வந்தீர்கள். பேரறிவுள்ள அவனுக்கு உத்தமப் புதல்வனைத் தந்தீர்கள்.



8. மூப்பையடைந்த விப்பிரனான கலியின் சீவனை மீண்டும் இளமைப்படுத்தினீர்கள். வந்தனை கிணற்றிலிருந்து மீட்டீர்கள். விச்பலையை உடனே நடக்கச்செய்தீர்கள்.

9. வர்ஷிக்கும் அசுவினிகளே! குகையிலே அடைக்கப்பட்டு மரித்துக்கொண்டிருந்த ரேபனை வெளிப்படுத்தினீர்கள். அக்கினிகுண்டத்தை அத்திரிக்காகச் சீதப்படுத்தினீர்கள். ஸப்தவத்திரிக்கு விடுதலையை அளித்தீர்கள்.

10. நீங்கள் பேதுவுக்குப் போரிலே ஜயிப்பதும், பகைவனின் நண்பர்களை ஓடச் செய்வதும், ஏற்றந் தருந்தும்,மனிதர்களுக்குச் செல்வத்தைப்போல் இன்பத்தைத் தருவதும், வலியதும், வெண்மையாயுமுள்ள குதிரையை
வேறு 99 குதிரைகளோடு தந்தீர்கள். 9205

11. அரசர்களே! அசுவினிகளே! அழைப்பதற்கருகர்களும், துதிகளில் போற்றப்படும் வழிகளில் செல்லுபவர்களுமான நீங்கள் எவனை அவனுடைய மனைவியோடு உங்கள் தேரின் முகப்பிலே அமரச்செய்கிறீர்களோ அவனுக்கு எந்தத் திசையிலிருந்தும் தீமை தோன்றாது. அவனுக்குக் கஷ்டமில்லை. விபத்தும் இல்லை.

12. அசுவினிகளே! ரிபுக்களால் கற்பிக்கப்பட்டதும், மனத்தைக்காட்டிலும் வேகமாயுள்ளதுமான தேரிலே வாருங்கள். நீங்கள் தேரை இணைக்குங்கால் சோதியின் புதல்வி — உஷை — தோன்றுகிறாள். விவஸ்வதனிடமிருந்து—சூரியனிடமிருந்து—மங்கலமான பகலும் இரவும் தோன்றுகின்றன.

13. அசுவினிகளே! உங்களுடைய ஜ ய மு ள் ள தேரிலே மலைக்கு ஏறும் வழியிலே செல்லுங்கள். நீங்கள் சயுவுக்காக மலட்டுப் பசுவைப் புதுப்பித்தீர்கள். உங்கள் செயல்களால் காடையை ஓநாயின் வாயிலிருந்து மீட்டீர்கள்.

14. அசுவினிகளே! உங்கள் தேரைக் கற்பித்த பிருகுக்களைப் போல் நாங்கள் இந்த ஸ்தோமத்தைச் செய்தோம். இந்தத் தோத்திரத்தைக் கற்பித்தோம். யக்ஞங்களை நித்தியமாய் நடத்தும் இந்த ஸ்தோமத்தை ஆபரணங்களோடு மனிதர்களின் நடுவே மனைவியைப் போல் அலங்கரித்தோம். 9209

# 40. அசுவினிகள்

## 877. காட்சிவதி கோஷை

1. தலைவர்களே! உங்களுடைய யக்ஞத்துக்கு உஷையிலே செல்வதும், எங்கும் பரவுவதும், தினந்தோறும் ஒவ்வொரு மனிதனுக்கும் செல்வத்தை ஏந்திச் செல்வதும், பிரகாசிப்பதும், சலிப்பதுமான தேரை யக்ஞத்திலே தன் நன்மைக்காக எவன் உங்களுக்காக அலங்கரிக்கிறான்? அது எங்கே சென்றது?

2. அசுவினிகளே! நீங்கள் மாலையில் எங்கு இருக்கிறீர்கள்? காலையிலே எங்கு இருக்கிறீர்கள்? நீங்கள் பகலிலே தங்குமிடம் எங்கே? இரவிலே எங்கு தங்குகிறீர்கள்? உங்களை எவன் யக்ஞ சதனத்திலே தன் முன்னே தேவரனை தன் சயனத்துக்கு முற்படுத்திக் கொள்ளும் விதவையைப் போலும், கணவனைத் தன்னிடம் செய்து கொள்ளும் மனைவியைப் போலும் அழைத்துக் கொள்கிறான்.

3. தலைவனே! அழைப்பவனுடைய குரலால் உஷையிலே நீங்கள் இருவரும் இரு பழைய அரசர்களைப் போல் போற்றப்படுகிறீர்கள். துதியாருகர்களான நீங்கள் வழிபடுபவனுடைய மனைக்குத் தினந்தோறும் செல்லுகிறீர்கள். எவனுடைய குற்றங்களை நீங்கள் அழிக்கிறீர்கள்? எவனுடைய அவிகளுக்கு இராஜப் புதல்வர்களைப் போல் செல்லுகிறீர்கள்?



4. அசுவினிகளே! இரு காட்டு யானைகளை வேட்டையாடும் மனிதர்களைப் போல் ஊக்கமாகி நாங்கள் இரவிலும் பகலிலும் அவிகளோடு உங்களைப் போற்றுகிறோம். தலைவர்களே! வழிபடுபவன் எல்லாப் பருவங்களிலும் உங்களுக்கு அவியையளிக்கிறான். பிரகாசிக்கும் மழையின் தலைவர்களான நீங்கள் மானிடர்களுக்கு உணவைச் செலுத்துங்கள்.

5. அசுவினிகளே! உங்களிடம் அரசனுடைய புதல்வியான கோஷை வந்திருக்கிறாள். வீரர்களே! அப் புதல்வியான நான் இதை உங்களிடம் கூறுகிறேன். நான் கேட்டுக்கொள்கிறேன். பகலில் என்னருகில் இருங்கள். இரவில் என்னருகில் இருங்கள். குதிரைகளும் தேருமுள்ள என்னுடைய சகோதரனுடைய புதல்வனுக்கு ஆதரவையளிக்க ஆற்றலுடனிருங்கள். 9214

6. அறிஞர்களான அசுவினிகளே! உங்கள் தேரின் அருகிலே நில்லுங்கள். மானிடர்களிடம் தன் தேரை அணுகச் செய்த குத்ஸனைப்போல் வழிபடுபவனுடைய யக்ஞத்தை அதை-உங்கள் தேரை–அணுகச்செய்யுங்கள். அசுவினிகளே! தேனீ உங்களுடைய தேனை, அதன் வாயிலே சுத்தப்பட்ட தேனை, தன் வாயில் ஏந்தும் வனிதையைப் போல் ஏந்துகிறது.

7. அசுவினிகளே! நீங்கள் புஜ்யுவை மீட்க வந்தீர்கள். நீங்கள் வசனைப் பாலிக்க வந்தீர்கள். நீங்கள் சிஞ்சாரனிடம் விரும்பத் தகுந்த துதியைக் கேட்க வந்தீர்கள். அவிகளை அளிப்பவன் உங்கள் நட்பை முற்றுகை போடுகிறான். நான் உங்களுடைய பாலனத்தால் சுகத்தை விரும்புகிறேன்.

8. அசுவினிகளே! நீங்கள் மெலிந்தவனைப் பாலிக்கிறீர்கள். சயுவைப் பாலிக்கிறீர்கள். நீங்கள் போற்றுபவனையும், விதவையையும், வத்திரிமதியையும் பாலிக்கிறீர்கள். அசுவினிகளே! நீங்கள் ஏழு வாய்களோடு முழங்கும் மேகத்தை அவியளிப்பவர்களுக்குத் திறந்தீர்கள்.

9. மங்கை பிறந்திருக்கிருள். கோஷையிருக்கிருள். கணவன் அணுகுவாஞக. மழைக்குப் பிறகு அவனுக்கு ஓஷதிகள் தோன்றுக. இறக்கத்திலிருந்தது போல் அவனுக்கு சலங்கள் பெருகுக. தலைவஞன அவனுக்கு கணவனுக்குரிய ஆற்றலும் ஆண்மையும் தோன்றுக.

10 மனைவிகளுடைய சீவனுக்காகப் புலம்பும் கணவர்கள் அவர்களை யக்ஞத்திலே அமர்த்தி, தீர்க்கமாய்த் தழுவிப் பற்றுகிருர்கள். அவர்கள் இந்த விரும்பத் தகுந்த சந்தானத்தைப் பிதிர்க்களுக்குப் பிரேரிக்கிருர்கள். மனைவிகள் இந்தக் கணவர்களுக்கு அவர்கள் தழுவப் பட்டு இன்பத்தையளிக்கிருர்கள். 9219

11. அசுவினிகளே! அவனுடைய இந்த சுகத்தை நாங்கள் அறியோம். இளைஞஞன கணவன் மனைவியின் மனையிலே ஏன் வசிக்கிருன் என்பதை விளக்குவீர்களாக. அசுவினிகளே! என்னுடைய பிரியமான, இளைஞஞன, விருஷபஞன, வீரியமுள்ள கணவனுடைய மனைக்கு நான் செல்வேஞக. இதுவே என்னுடைய விருப்பம்.

12. அசுவினிகளே! உணவுச் செல்வர்களும், சலங்களின் தலைவர்களும், இரட்டையர்களுமான உங்களுடைய நல்ல மனம் எங்களிடம் தோன்றுக. எங்கள் இருதயங்களிலுள்ள விருப்பங்கள் நிறைவேறுக. நீங்கள் எங்கள் பாலகர்களாயிருந்தீர்கள். பிரியமுள்ள நான் கணவனுடைய மனைக்குச் செல்வேஞக.

13. கணவனின் மனையில் மகிழ்ந்து, உங்களைத் துதிக்கும் எனக்குச் செல்வங்களையும் வீரப் புதல்வர்களையுமளியுங்கள். சலபதிகளே! சனங்கள் பானஞ் செய்யத் துறையைக் கற்பியுங்கள். வழியைத் தடுக்கும் மரத்தையும், துன்மதியையும் நீக்குங்கள்.

14. அழகர்களே! அசுவினிகளே! சலத்தலைவர்களே நீங்கள் எந்த இடத்திலே, எந்த சனங்களின் நடுவே நீங்கள் இன்று இன்புறுகிறீர்கள்? உங்களை எவன் தாமதப் படுத்துகிருன்? எந்த விப்பிரனுடைய மனைக்கு அல்லது எந்த யக்ஞகர்த்தாவிடம் சென்றிருக்கிறீர்கள்? 9223



## 41. அசுவினிகள்

### 878. ஸுஹஸ்தியன் கோஷையின் புதல்வன்

1. அசுவினிகளே! உதயத்திலே நாங்கள் உங்களுடைய பலரால் போற்றப்படுவதும், புகழத்தகுந்ததும், மூன்று சக்கரங்கள் உள்ளதும், யக்ஞங்களுக்கு வருவதும், எங்கும் செல்வதும், யக்ஞத்துக்கு இதமாயிருப்பதுமான ஸாதாரண தேரை நாங்கள் குற்றமற்ற மொழிகளால் அழைக்கிரேம்—போற்றுகிரேம்.

2. நாஸத்தியர்களே! எந்தத் தேரிலே யக்ஞஞ் செய்யும் பிரஜைகளிடமும், ரிஷியிருக்கும் வறிஞனுடைய யக்ஞத்துக்குச் செல்லுகிறீர்களோ, எது உஷையில் இணைக்கப்பட்டு செலுத்தப்படுகிறதோ அந்த மது ஏந்தும் தேரிலே ஏறுங்கள்.

3. அசுவினிகளே! ஸுஹஸ்தியன் மது வைக்கையில் ஏந்தும் அத்வர்யுவாயிருந்தாலும் அல்லது திறமுள்ள—தான மனமுள்ள அக்கினி, போஷகஞயிருந்தாலும் அவனிடம் வா. வேறு விப்பிரனுடைய யக்ஞங்களுக்குச் சென்றிருந்தாலும், அங்கிருந்து அசுவினிகளே நான் அளிக்கும் ஸோமபானத்துக்கு வாருங்கள். 9226

## 42. இந்திரன்

### 879. கிருஷ்ண ஆங்கிரஸன்

1. உங்களுடைய ஸ்தோமத்தை-குறிப்புக்கு-நீண்ட சரத்தை எய்பவனைப் போலவும், தன் ஆபரணங்களை அணிவிக்கும் அலங்கரிப்பவனைப் போலும் இந்திரனுக்குச் செலுத்துங்கள். அறிஞர்களே! உங்கள் குரலால் பகைவனின் குரலைத் தாழ்த்துங்கள். துதிப்பவனே! இந்திரனே! ஸோமத்தால் இன்புறுத்தவும்.

2. துதிப்பவனே! உங்கள் நண்பனை—இந்திரனை—கறப்பதற்குப் பசுவைப்போல் வசப்படுத்தவும். இந்திரனை எழுப்பவும். சலத்தால் நிறைந்த கலசத்தைப்போல் செல்வத்தால் பூரணமாயிருக்கும் சூரனை, செல்வ தானத்துக்காக முகப்படுத்தவும்.

3. மகவானே! அறிஞர்கள் ஏன் உன்னைத் துதிப்பவர்களைப் போஷிப்பவன் எனக் கூறுகிறார்கள். என்னைச் செல்வத்தால் ஊக்கப்படுத்தவும். ஏனெனில், நீ ஊக்கமளிப்பவன் எனச் செவியுறுகிறேன். சக்கரனே! என் அறிவு செயலுடன் சேர்க. இந்திரனே! எங்களுக்குச் செல்வத்தைத் தரும் பாக்கியத்தை அளிக்கவும்.

4. சனங்கள் சங்கிரமங்களிலே உன்னை ஊக்கத்தோடு அழைக்கிறார்கள். அவர்கள் போரிலே ஒருமித்து நிற்குங்கால் உன்னை அழைக்கிறார்கள். இந்த அழைப்பிலே இந்திரன் அவியளிப்பவனை நண்பனாகச் செய்து கொள்கிறான். சூரன் அவியளிக்காதவனுடைய நட்பை விரும்புவதில்லை.

5. ஏழைகளுக்கு அளிக்கப்படும் மிக்க சங்கமச் செல்வத்தைப்போல் தீவிர ஸோமங்களை இந்திரனுக்கு அளிக்கும் அவிச்செல்வனுக்குக் காலையிலே அவனுடைய கூரிய படை ஏந்தி ஊக்கமாயிருக்கும் எதிரிப்படைகளை ஜயிக்கிறான். அவனுடைய பகைவனை நீக்குகிறான். 9231

6. எங்களால் துதியாகி எங்களுடைய விருப்பப் பூர்த்திகளைச் செய்யும் செல்வனான இந்திரனுடைய பகைவன் தூரத்திலிருந்தாலும், அவனிடம்–இந்திரனிடம்-பயந்தோடிருப்பான். பகைவனுடைய தேசத்திலுள்ள போகங்களெல்லாம் இந்திரனுக்குப் பணிய வேண்டும்.

7. புருஹூதனே! உன்னுடைய உக்கிர வச்சிராயுதத்தால் பகைவனைத் தூரமாய் விலக்கவும். இந்திரனே! யவங்களும், பசுக்களும் நிறைந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். வழிபடுபவனுக்கு அவனுடைய யக்ஞத்தையும், ஆற்றலையும் செல்வங்களையும் விளைவிக்கச் செய்யவும்.



8. பொழிபவர்களால் பொழியப்பட்ட தீவிர ஸோமங்களின் பெருக்கைப் பருகிய இந்திரன் யக்ஞ வள்ளலைக் கைவிட்டான். மகவான் அவியளிப்பவனுக்கு மிகுந்த செல்வத்தைத் தருகிறான்.

9. எதிர்ப்பவனை விலக்கி அவன் ஜயிக்கிறான். போர் நடைபெறுங்கால் பகைவனை சூதனைப் போல் தெரிந்தெடுக்கிறான். தேவர்களைத் திருப்தி செய்ய விரும்புபவன் செல்வத்தைப் பிடித்து வைத்துக்கொள்வதில்லை. ஆற்றலுள்ள இந்திரன் அவனைச் செல்வத்தோடு சேர்க்கிறான்.

10. இந்திரனே! புருதனே! நாங்கள் வறுமையால் வரும் மதியின்மையைப் பசுக்களால் கடப்போமாக. யவத்தால் எல்லாப் பசியையும் கடப்போமாக. நாங்கள் செல்வப் பிரபுக்களிடமிருந்து முதன்மையான செல்வங்களை அடைவோமாக. நாங்கள் பலத்தால் ஜயிப்போமாக.

11. பிரகஸ்பதி பின்புறத்திலிருந்து, மேலேயிருந்து, கீழேயிருந்து வரும் துட்டர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பானாக. இந்திரன் முன்னிருந்தும், நடுவிலிருந்தும் வரும் பகைவர்களிடமிருந்தும் பாலிப்பானாக. எங்களுடைய நண்பனான அவன் நண்பர்களான எங்களுக்குச் செல்வத்தை அளிப்பானாக. 9237

## 43. இந்திரன்

### 880. கிருஷ்ண ஆங்கிரஸன்

1. என்னுடைய அனைத்தையும் காண்பவையும், இசைந்திருப்பவையும், ஊக்கமுள்ளவையுமான துதிகள் இந்திரனைப் போற்றுகின்றன. மகவானை, கணவனைத் தழுவும் மனைவிகளைப்போல் தழுவுகின்றன. சுத்தமான மனிதனைப் பாலனத்துக்காகத் தழுவும் மங்கையர்களைப் போல் தழுவுகின்றன.

2. இந்திரனே! சுந்தரனே! புருஹூதனே! உன்னைப் பற்றும் என் மனம் உன்னிடமிருந்து வேறு எங்கும் திரியா

மலிருக்கிறது. உன்னிலே என் விருப்பத்தை நிறுத்து கிறேன். இந்தத் தருப்பையின் மீது அரசனைப்போல் அமரவும். நீ இந்த ஸோமத்தைப் பருகுவாயாக.

3. இந்திரன் தாகத்தையும் பசியையும் நீக்குபவனுயிருப்பானுக. ஏனெனில், மகவான் அரிய செல்வங்களுக்குத் தலைவனுயிருக்கிருன். விருஷபனுடைய இந்த ஏழு நதிகள் இறக்கத்திலே பாய்ந்து உணவைச் செழிப்பிக்கின்றன.

4. நல்ல இலைகளுள்ள மரத்திலே தங்கும் பறவைகளைப்போல் பத்திரங்களில் நிறைந்துள்ள ஸோமங்கள் இந்திரன் அமர்ந்து பருக அவனிடம் செல்லுகின்றன. வேகத்தோடுள்ள இந்த ஸோமத்தின் முகப்பு பிரகாசிக்கிறது. இந்திரன் தானுகவே மனிதனுக்கு உத்தம சோதியை யளிப்பானுக.

5. மகவான் மழையையளிக்க சூரியனை அதன் ரஸத்தைக் கிரகித்து ஆட்டத்திலே எதிரியை ஆய்ந்தெடுத்து ஜயிக்கும் சூதனைப்போல் ஜயிக்கிருன். மகவானே! உன்னுடைய இந்த வீரச் செயலைப்போல் பூர்வத்தில் செய்தவன் எவனும் இல்லை. இப்பொழுது செய்பவனும் இல்லை. 9242

6. வர்ஷிக்கும் மகவான் எல்லா சனங்களையும் சூழ்கிருன். மானிடர்களின் துதிகளைக் கவனிக்கிருன். சக்கரனை யக்ஞத்திலே கர்த்தா கூரிய —காரமுள்ள— ஸோமத்தால் சமர் செய்ய விரும்பும் பகைவர்களை ஜயிக்கிருன்.

7. ஸோமங்கள் இந்திரனை நோக்கிக் கடலுக்குச் செல்லும் நதிகளைப் போலும், ஏரிக்குப் பாயும் சலங்களைப் போலும் பெருகுங்கால், அறிஞர்கள் யக்ஞஸதனத்திலே அவன் மகிமையை, யவத்தைச் செழிப்பிக்கும் சோதியின் தானமான மழையைத் தரும் பர்ஜன்யனைப்போல் செழிப்பிக்கிருர்கள்.



8. உலகத்திலே வேறு காளையின் மீது பாயும் கோபமுள்ள காளையைப்போல், இந்திரன் மேகத்தின் மீது பாய்ந்து, புவியின் தலைவனுடைய பத்தினிகளான சலங்களை எங்களிடம் செலுத்துகிருன். ஸோமம் பிழியப்பட்டவுடன், பன்கவா ஊக்கமாய் அளிப்பவனும், அவிகளை அளிப்பவனுமான மனிதனுக்கு சோதியைத் தருகிருன். இந்திரனுடைய கோடரியானது சோதியோடு செலுத்தப்படுக. ஸத்திய மொழியானது பூர்வத்தில் போல் தோன்றுக. சுத்த சோதியான இந்திரன் ஒளியோடு பிரகாசிப்பானுக. நல்லவர்களின் தலைவனுன இந்திரன் சூரியனைப்போல் சுடராய்ப் பிரகாசிப்பானுக.

10. இந்திரனே! புருஹூதனே! நாங்கள் வலுமையால் வரும் மதியின்மையைப் பசுக்களால் கடப்போமாக. யவத்தால் எல்லாப் பசியையும் கடப்போமாக. நாங்கள் செல்வப் பிரபுக்களிடமிருந்து முதன்மையான செல்வங்களை அடைவோமாக. நாங்கள் பலத்தால் ஜயிப்போமாக.

11. பிரகஸ்பதி பின்புறத்திலிருந்து, மேலேயிருந்து கீழேயிருந்து வரும் துட்டர்களிடமிருந்து, எங்களைப் பாலிப்பானுக. இந்திரன் முன்னிருந்தும், நடுவிலிருந்தும், வரும் பகைவர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பானுக. எங்களுடைய நண்பனுன அவன் நண்பர்களான எங்களுக்குச் செல்வத்தை அளிப்பானுக. 9248

## 44. இந்திரன்

### 881. கிருஷ்ண ஆங்கிரஸன்

1. வேகமுள்ளவனும், வலியனும், தன்னுடைய மகத்தான அபார சக்தியால் பகைவனின் படைகளையெல்லாம் ஜயித்து, அவர்களைக் கடந்து செல்பவனும், செல்வத்தின் தலைவனுமான இந்திரன், மதத்துக்காகத் தன்னுடைய தாரகமான தேரிலே இங்கு வருவானுக.

2. மனிதர்களின் தலைவனே! உங்களுடைய தேர் நன்கு நிலைத்திருக்கிறது. உன்னுடைய குதிரைகள் நன்கு பழக்கப்பட்டவை. நீ உன்னுடைய கைகளிலே வச்சிரத்தைப் பிடித்திருக்கிறாய். அரசனே! நல்ல வழியால் நீ சீக்கிரம் எங்களிடம் வா. நீ ஸோமத்தைப் பருகுங்கால் நாங்கள் உன் ஆற்றல்களை ஊக்கப்படுத்துவோம்.

3. நார்பதியும், வச்சிராயுதம் ஏந்துபவனும், உக்கிரனும், பகைவர்களையழிப்பவனும், விருஷபனும், சந்தேகமற்ற பலமுள்ளவனுமான இந்திரனை, உக்கிரமுள்ளவையும், திறமுள்ளவையும், களிப்புள்ளவையுமான குதிரைகள் இங்கு எங்களிடம் ஏந்தி வருக.

4. துரோண கலசத்தை சேவிப்பதும், புலனுள்ளதும் பலத்தைத் தாங்குவதும், பாலிப்பதுமான ஸோமத்தை நீ உன்னுடைய பரந்த உதரத்தினுள் ஊற்றிக்கொள்கிறாய். நீ எங்களைப் பலப்படுத்தவும். என்னை உன்னோடு சேர்த்துக்கொள்ளவும். நீ அறிஞர்களை மேம்படுத்தும் தலைவனாயிருக்கிறாய்.

5. உன்னால் அளிப்பதற்குரிய செல்வம், எங்களிடம் சீக்கிரம் தோன்றுக. ஏனெனில், நான் உன்னைப் போற்றினேன். ஸோமமளிப்பவனுடைய போற்றத்தகுந்த யக்ஞத்துக்கு வா. ஏனெனில், நீ செல்வத்தின் தலைவனாயிருக்கிறாய். இந்தத் தருப்பையின் மீது அமரவும். உன்னுடைய இந்த ஸோம பாத்திரங்கள் பகைவர்களின் செயலால் பங்கப்படாமலிருக்க வேண்டும். 9253

6. அவர்கள் தேவர்களின் உலகங்களுக்குத் தனித்தனியாய்ச் செல்லுகிறார்கள். தேவர்களுக்கு அவிகளை அளிப்பவர்கள் எவராலும் பற்ற இயலாத புகழை அடைகிறார்கள். அவர்களே முதல்வர்கள். யக்ஞத்தின் கப்பலிலே ஏறத் திறனற்றவர்கள், கடனில் மூழ்கி அதமர்களாகி, அதோகதியிலாகிறார்கள்.



7. யக்ஞத்தேருக்குத் துட்ட குதிரைகளை இணைக்கும் துர்ப்புலனுள்ள அறிவிலிகள் அதோகதியிலே சாய்வார்களாக. ஆனால் மரிப்பதற்கு முன்னால் தானமுள்ளவர்களாகி, தேவர்களுக்குப் பல உத்தம அவிகளையளிப்பவர்கள் மேன்மைக்குச் செல்லுகிறார்கள்.

8. இந்திரன், திரிபவையும் நடுங்குபவையுமான மேகங்களைத் தடுத்து நிறுத்தினான். சோதி கலங்கிக் கதறுகிறது. அவன் வானத்தைக் கலக்குகிறான். அவன் சேர்ந்துள்ள சோதியையும் புவியையும் நிலை நிறுத்துகிறான். அவன் பொழிந்த ஸோமத்தைப் பருகி மதத்திலே புகழ்மொழிகளைக் கூறுகிறான்.

9. மகவானே! உன்னுடைய நன்கு செய்யப்பட்ட அங்குசத்தை நான் ஏந்துகிறேன். மகவானே! நீ அதனால் குளம்பால் அழிப்பவர்களைக் காலால் மிதிக்கும் யானைகளை அழிக்கிறாய். என்னுடைய இந்த யக்ஞத்திலே உன் இடத்தை வைத்துக்கொள்ளவும். மகவானே! போற்றத்தகுந்த நீ, ஸோமம் பிழியப்பட்ட யக்ஞத்திலே என் துதியை ஏற்றுக்கொள்ளவும்.

10. இந்திரனே! புருஹூதனே! நாங்கள் வறுமையைக் கடப்போமாக. யவத்தால் எல்லாப் பசியையும் கடப்போமாக. நாங்கள் செல்வப்பிரபுக்களிடமிருந்து முதன்மையான செல்வங்களை அடைவோமாக. நாங்கள் பலத்தால் ஜயிப்போமாக.

11. பிரகஸ்பதி பின்புறத்திலிருந்து, மேலேயிருந்து, கீழேயிருந்து வரும் துட்டர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பானாக. இந்திரன் முன்னிருந்தும், நடுவிலிருந்தும் வரும் பகைவர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பானாக. எங்களுடைய நண்பனான அவன் நண்பர்களான எங்களுக்குச் செல்வத்தை அளிப்பானாக. 9259

## 45. அக்கினி

### 862. வத்ஸப்பிரிபாலந்தனன்

1. அக்கினி சோதியின்மேல் முதலில் சூரியனாகப்

பிறந்தான். ஜாதவேதஸனாக நம்முடைய நடுவே இரண்டாவதாகப் பிறந்தான். மானிடனுடைய நண்பன் சலங்களிலே மூன்றாவதாகப் பிறந்தான். அறிஞன் நித்தியனான அவனை சொலிப்பித்துத் துதிக்கிறான்.

2. அக்கினியே! நாங்கள் உன்னுடைய மூன்று இடங்களையும்—புவி, வானம், சோதி—மூன்று வடிவங்களையும்—அனல், வாயு, ஆதித்தியன்—வடிவங்களையும் அறிகிறோம். நாங்கள் உன்னால் வியாபிக்கப்பட்ட பல இடங்களையும் அறிகிறோம். இரகசியத்திலிருக்கும் உன்னுடைய மிக உத்தமப் பெயரையும் அறிகிறோம். நாங்கள் நீ பிறந்த மூலத்தையும் அறிகிறோம்.

3. அக்கினியே! கடலிலே பிறந்து, சலங்களின் நடுவே வடவானலாயிருக்கும் உன்னை மானிடர்களிடம் நல்ல மனமுள்ள வருணன் ஒளிப்படுத்துகிறான். மனிதர்களைக் காண்பவன்—ஆதித்தியன்—உன்னை சோதியின் ஆசனத்திலே, ஆதித்திய மண்டலத்திலே ஒளிப்படுத்துகிறான். மகிஷர்கள், மருத்துக்கள் முதலியவர்கள் இவ்வுலகங்களைப் பூர்த்தி செய்யும் மழையின் இடமான வானிலே மின்னலாயிருக்கும் உன்னை அதிகப்படுத்துகிறார்கள், ஊக்கப்படுத்துகிறார்கள், மேம்படுத்துகிறார்கள்.

4. அக்கினி இடிக்கும் சோதியைப்போல் கர்ச்சிக்கிறான். அவன் ஓஷதிகளை எரித்து, புவியைச் சுவைக்கிறான். அவன் பிறந்தவுடன் இவ்வெரியும் அனலை கிறான். அவன் சோதி புவிகளின் நடுவே நன்கு காண்கிறான். அவன் சோதி புவிகளின் நடுவே தன் சொந்தக் காந்தியோடு பிரகாசிக்கிறான்.

5. ஐசுவர்யங்களை எழுப்புபவனும், செல்வங்களை ஏந்துபவனும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், ஸோமபாலகனும், வசுவும், பலத்தின் மகனும், சலங்களிலிருப்பவனுமான அரசன், உஷையின் துவக்கத்திலே சொலிப்பிக்கப்பட்டுப் பிரகாசிக்கிறான். 9264



6. விசுவத்தைப் புலப்படுத்துபவனும், புவனத்தின் கருவுமான அவன் தோன்றியவுடன் சோதியையும் புவியையும் நிரப்புகிறான். அவன் முன்னேறி, கனத்த மேகத்தைப் பிளக்கிறான். அதற்காகப் பஞ்ச சனங்கள் அவனைப் போற்றுகிறார்கள்.

7. அவிகளை விரும்புபவனும், சுத்தஞ் செய்பவனும், துரிதமாய்ச் செல்பவனும், பேரறிஞனும், அமிருதனுமான அக்கினி, மானிடர்களிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். அவன் புகையை எழுப்புகிறான். அவன் ஒளி வடிவத்தை ஏந்தி எழில் சுடரோடு சோதியிலே பரவிச் செல்லுகிறான்.

8. விளங்கும் சுந்தரனான அக்கினி மிக்க சோதியோடு பிரகாசிக்கிறான். அவன் செல்வத்துக்கு அழியாத ஆயுளைப் பிரகாசிக்கிறான். அதிக ரேதஸுள்ள சோதி அவனைப் பிறப்பித்தபோது அவன் தன் ஆற்றல்களால் அமிருதனானான்.

9. மங்களமான ஒளியுள்ளவனும், தேவனுமான அக்கினியே! மிக்க இளைஞனான நீ, நெய் கலந்துள்ள புரோடாசத்தை அளிக்கும் உத்தமனுக்கு மிகுந்த செல்வத்தையளிக்கவும். தேவபக்தனுக்குத் தேகத்தைத் தரவும்.

10. அக்கினியே! எழிலவிகள் தரப்பட்டு உத்தமத் துதிகள் கூறப்படுங்கால் வழிபடுபவனுக்கு சுகத்தையளித்து சேவை செய்யவும் அவன் சூரியனுக்கும் அக்கினிக்கும் பிரியனாவானாக. அவன் தன் புதல்வனாலும், பிறக்கப்போகும் புதல்வர்களாலும் பகைவர்களை ஜயிப்பானாக.

11. அக்கினியே! துதிப்பவர்கள் உனக்குத் தினந்தோறும் விரும்பத்தகுந்த எல்லாச் செல்வங்களையும் அளிக்கிறார்கள். உன்னிடத்திலிருக்கும் செல்வத்தை விரும்புபவர்களான தேவர்கள் பசுச் சாலையைத் திறந்து விடுகிறார்கள்.

12. மானிடர்களின் நண்பனும், ஸோமபாலகனுமான அக்கினி வைசுவாநரன், ரிஷிகளால் போற்றப்பட்டிருக்கிறான். நாங்கள் துவேஷரகிதர்களான சோதியையும் புவியையும் அழைக்கிறோம். தேவர்களே! எங்களுக்குச் செல்வங்களையும், ஆண் மக்கட்களையும் அளியுங்கள். 9271

# 46. அக்கினி

## 883. வத்ஸப்பிரிபாலந்தனன்

1. மகானான ஹோதாவும், பிறந்தவனும், மேகங்களை அறிபவனும், மனிதர்களோடு வசிப்பவனுமான அக்கினி சலங்களின் அங்கத்திலே அமர்த்தப்பட்டிருக்கிறான். செல்வத்தைத் தருபவனும், போற்றுபவனுடைய தேகத்தைப் பாலிப்பவனுமான அக்கினி உனக்கு ஆற்றல்களைத் தர ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான்.

2. அக்கினி சலங்களின் நடுவே மறைந்திருக்குங்கால் ரிஷிகள் அவனைத் துதித்து, அவனுடைய காலடிச் சுவடுகளை இழக்கப்பட்ட பசுவைப் பின்பற்றும் மனிதர்களைப் போல் பின்பற்றினார்கள். அறிஞர்களான பிருகுக்கள், இருதயங்களிலே விருப்பமுள்ளவர்களாகி அவனைத் தேடினார்கள். அவன் குகையில் மறைந்திருப்பதைத் தங்கள் தோத்திரங்களால் கண்டுபிடித்தார்கள்.

3. விபூவஸனுடைய புதல்வனான திரிதன், அவனைத் தேடி மகத்தான அக்கினியைப் பசுவின்—புவியின்—தலையிலே கண்டான். சுகத்தைச் செழிப்பிப்பவனும், மனைகளில் தோன்றுபவனும், இளைஞனுமான அவன், ஆதித்தியனின் நாபியாகிறான்.

4. போற்ற விரும்பும் அறிஞர்கள், மதப்படுத்துபவனும், ஹோதாவும், இடம்விட்டு வேறு இடத்துக்குச் செல்பவனும், யஜிக்கத்தகுந்தவனும், யக்ஞத்தலைவனும், சுத்தப்படுத்துபவனும், அவிகளை ஏந்துபவனுமான அக்கினியை, மனிதர்களின் நடுவே தங்கள் துதிகளால் எல்லா சனங்களுக்கும் தலைவனாகச் செய்தார்கள்.



5. துதிப்பவனே! ஜயிப்பவனும், மகானும், அறிஞர்களை ஏந்துபவனுமான அக்கினியைப் போற்ற சக்தியுடனாகவும். மதியினர்களும், மதியின்மையற்றவனும், கோட்டைகளை இடிப்பவனுமான அவனைப்போற்றுகிறார்கள். அவர்கள் அரணியின் குழந்தையான அக்கினியைப் பொன்கேசமுள்ளதும், துரிதமாய்ச் செல்வதுமான குதிரையைப்போல் செலுத்தி, துதியையும் செல்வத்தையும் விரும்பி, யக்ஞத்துக்கு எடுத்து வருகிறார்கள். 9176

6. அவன் மூன்று இடங்களிலும் பரவி, வழிபடுபவனுடைய மனையைத் திரப்படுத்தி, சுவாலைகளால் சூழப்பட்டு யக்ஞ ஸதனத்தின் வேதியிலே அமருகிறான். அவன் அவிகளைத் தேவர்களிடம் சேர்க்க ஏற்கிறான். இவற்றை அவர்களுக்கு அளிக்கப் பல வழிகளிலே செல்லுகிறான். அங்கு பகைவர்களைத் தடுக்கிறான். அப்பால் தேவர்களிடம் போகிறான்.

7. வழிபடுபவனுடைய தீமைகளிலிருந்து நீக்குபவையும், துதியாறாகப் புகையுள்ளவையும், சுத்தப்படுத்துபவையும், வெண்மையாகுபவையும், துரிதமுள்ளவையும், அவி ஏந்துபவையும், வனத்திலிருப்பவையும், அழியாதவையுமான சுவாலைகள் வேகமாய்ப் பாயும் ஸோம ரஸங்களைப்போல் தோன்றுகின்றன.

8. நாக்கால் அவியை ஏந்துபவனும், புவியின் பாலனத்துக்காக அனுகூல மனத்தோடு துதிகளைத் தாங்குபவனுமான அக்கினியை, மனிதர்கள் பிரகாசிப்பவனாகவும், சுத்தப்படுத்துபவனாகவும், மகிழும் ஹோதாவாகவும், யஜிப்பதற்கு மிக்க அருகனாகவும் ஸ்தாபித்தார்கள்.

9. சோதிபுவிகளால் பிறப்பிக்கப்பட்டவனும், சலங்

களாலும், துவஷ்டாவாலும், பிருகுக்களாலும் அவர்களுடைய ஆற்றல்களால் சனிப்பிக்கப்பட்டவனும், மாதரிசுவனால் முதலில் பிறப்பிக்கப்பட்ட துதியாருகனுமான அக்கினியை, தேவர்கள் மநுவுக்காகப் போற்றத் தகுந்தவனாய்க் கற்பித்தார்கள்.

10. தேவர்களால் அவி வகிக்க நியமிக்கப்பட்டவனும், பல நலன்களை நாடும் மனிதர்களால் யக்ஞாருகன் எனக் கருதப்படும் அக்கினியே! யக்ஞத்திலே உன்னைப் போற்றுபவனுக்கு உணவையளிக்கவும். தேவர்களை விரும்பும் பக்தன் பெரும் புகழை அடைகிறான். 9218

## 47. இந்திரவைகுண்டன்

### 884. ஸப்தகு—ஆங்கிரஸன்

1. வசுக்களின் வசுபதியே! செல்வத்தை விரும்பும் நாங்கள் உன்னுடைய வலது கையைப் பிடித்துக்கொள்கிறோம். சூரனே! நாங்கள் உன்னைக் கோக்களின் கோபதியாக அறிகிறோம். விரும்பத் தகுந்ததும், செழிப்பிப்பதுமான செல்வத்தை எங்களுக்கு அளிக்கவும்.

2. நீ நல்லாயுதத்தை ஏந்துபவன். உத்தமப் பாலகன். வழிகாட்டும் அன்பன். உன்னுடைய புகழ் நான்கு கடல்களையும் கடக்கிறது. செல்வக்களஞ்சியம். அடிக்கடி துதிப்பர்க்கருகன். பல துன்பங்களைத் தடுப்பவன். விரும்பத் தகுந்ததும், செழிப்பிப்பதுமான செல்வத்தை எங்களுக்கு அளிக்கவும்.

3. தோத்திரங்களால் துதிக்கத் தகுந்தவனும்,தேவர்களால் போற்றப்படுபவனும், பெரியவனும், பரந்தவனும், ஆழ்ந்தவனும், விசால மூலமுள்ளவனும், ரிஷிகளுக்குப் புகழைத் தருபவனும், உக்கிரனும், பகைவர்களை ஜயிப்பவனுமான இந்திரனே! நீ எங்களுக்கு விரும்பத்தகுந்ததும், செழிப்பிப்பதுமான செல்வத்தையளிக்கவும்.

4. இந்திரனே! விப்பிரப்புதல்வனைத் தரும் உணவை



யளிப்பவனும், பாலகனும். செல்வத்தால் மனிதர்களை நிரப்புபவனும், செழிப்பை நல்குபவனும், மிக்க வலியனும், தஸ்யுக்களைக் கொல்பவனும், கோட்டைகளை இடிப்பவனும், சத்தியத்தைப் பாலிப்பவனுமான நீ, விரும்பத் தகுந்த செழிப்பிக்கும் செல்வத்தை அளிக்கவும்.

5. இந்திரனே! குதிரைகளும், தேர்களும், வீரர்களும், நூறும் ஆயிரமுமுள்ள பசுக்கள் இருப்பதும், இனிய ஆட்களுள்ளதும், விப்பிரர்களும், தீரர்களும் நிறைந்ததும், சக்தியுள்ளதும், அனைத்தையும் அனுபவிப்பதும், விரும்பத் தகுந்ததுமான செல்வத்தை எங்களுக்களிக்கவும். 9286

6. சத்தியத்தைப் பாலிப்பவனும், நல்ல அறிஞனும், பிரகஸ்பதியும், அங்கிரஸ கோத்திரத்தில் வந்தவனும், அவிகளோடு தேவர்களிடம் சென்றவனும், சப்தகுவான என்னிடம் தேவர்களுக்குக் கூறப்பட்ட துதி வருகிறது. இந்திரனே! எங்களுக்கு விரும்பத்தகுந்த செழிப்பிக்கும் செல்வத்தை அளிக்கவும்.

7. என்னுடைய தூதர்களைப்போல் இருப்பவையும், இருதயத்தைப் பற்றுபவையும், மனத்திலிருந்து கூறப்படுபவையுமான ஸ்தோமங்கள் இந்திரனுடைய ஸுமதியை நாடி அவனிடம் செல்லுகின்றன. இந்திரனே! நீ எங்களுக்கு விரும்பத்தகுந்த செழிப்பிக்கும் செல்வத்தை அளிக்கவும்.

8. இந்திரனே! நான் விரும்புவதையளிக்கவும். மற்ற சனங்களோடு பொதுவாக இல்லாத தனிமையாயிருக்கும் பெரிய மனையையளிக்கவும். சோதியும் புவியும் அதை அங்கீகரிப்பார்களாக. எங்களுக்கு விரும்பத் தகுந்த செழிப்பிக்கும் செல்வத்வையளிக்கவும். 9289

## 48. இந்திரவைகுண்டன்

### 885. இந்திரவைகுண்டன்

1. நான் செல்வத்தின் முதற்தலைவனாயிருக்கிறேன் நான் பல பகைவர்களின் செல்வத்தை ஜயிக்கிறேன்.

தந்தையை அழைக்கும் புதல்வர்களைப்போல் சீவர்கள் என்னை அழைக்கிறார்கள். நான் அவியளிப்பவனுக்கு உணவைத் தருகிறேன்.

2. இந்திரனான நான் அதர்வணனுடைய புதல்வனின் தலையைத் துணித்தேன். நான் திரிதனுக்காக மேகத்தின் பிடிப்பிலிருந்து சலங்களைப் பிறப்பித்தேன். மாதரிசுவனுடைய புதல்வனான ததீசிக்கு மேகங்களை வசப்படுத்தி, தஸ்யுக்களிடமிருந்து அவர்களுடைய செல்வத்தை எடுத்துச் சென்றேன்.

3. துவஷ்டா எனக்கு இரும்பினால் செய்யப்பட்ட வச்சிராயுதத்தைக் கற்பித்தான். என்னிலே தேவர்கள் வினைத்திட்பத்தைச் சேர்த்தார்கள். என்னுடைய படை சூரியனுடைய படையைப் போல் எவனாலும் கடக்க இயலாதது. நான் செய்த, செய்யப்போகும் செயல்களுக்காக என்னைத் தலைவனாக சனங்கள் போற்றுகிறார்கள்.

4. நான் என்னுடைய ஆயுதத்தால், பசுக்களும், குதிரைகளும், மந்தைகளும், சலமும், பொன்னுமுள்ள இந்தச் செல்வத்தை ஜயித்தேன். ஸோமங்களும், தோத்திரங்களும், என்னை இன்புறுத்தும்போது, நான் அவி அளிப்பவனுக்கும் பல்லாயிரங்களைத் தருகிறேன்.

5. நான் இந்திரன். செல்வத்திலே என்னை முந்துபவன் எவனுமில்லை. நான் மிருத்யுவுக்கு ஒருபோதும் வசப்படேன். ஸோமத்தைப் பொழிந்து என்னிடம் செல்வத்தை நாடுங்கள். மனிதர்களே! என்னுடைய நட்பை இழக்காதீர்கள். 9294

6. வச்சிரமேந்தும் இந்திரனான என்னை எதிர்க்கும் வலிய பகைவர்களை இருவர் இருவராகப் பிரித்து அழிக்கிறேன். கடும்மொழிகளைக் கூறித் துதிப்பவர்களைத் துலைக்கும், துதிக்காதவர்களும், என்னைப் போருக்கு அழைப்பவர்களுமான சத்துருக்களை நான் சங்காரத்தால் சங்கரித்தேன்.



7. ஒருவனாயுள்ள நான் ஏகனான பகைவனைக் கொல்லுகிறேன். நான் இரண்டு பகைவர்களையும் கொல்லுகிறேன். மூவர் என்னை என்ன செய்வார்கள்? நான் பல பகைவர்களைப் போராடிக் களத்திலே கதிர்க் கட்டுகளைப்போல் அடிக்கிறேன். இந்திரனற்ற என் பகைவர்கள் என்னை எப்படி நிந்திப்பார்கள்?

8. நான், பர்ணயனும் காஞ்சனும் கொல்லப்பட்ட பெரிய விருத்திரப் போரிலே புகழை அடைந்தவுடன், நான் கங்குகளின் பாலத்துக்காக அதிதிக்வனைப் பலப்படுத்தினேன். நான் பகைவர்களைக் கொல்லும் அவனை சனங்களுக்கு ஆதரவாக, உணவாக, போகத்துக்காக ஏந்துகிறேன்.

9. என்னுடைய போகத்துக்காக ஸாப்யநமீ என்னிடம் வந்தான். பசுக்களைத் தேடும் பழைய நண்பனாக அவன் என்னிடம் சேர்ந்தான். நான் போருக்காக அவனுக்கு சதத்தையளித்தபோது அவனைப் பாட்டுக்கும் புகழ்மொழிக்கும் அருகனாகச் செய்தேன்.

10. போராடும் இருவரிலே ஒருவனிடம் ஸோமம் தோன்றுகிறான். கோபதி — இ ந் தி ர ன் — மற்றவனுக்கு என்பை — வச்சிரத்தைப் புலப்படுத்துகிறான். உரிய கொம்புகளுள்ள காளைகளோடு சண்டை செய்ய விரும்பியவன் ஜயித்தவனால் கனத்த இருளிலே கட்டப்பட்டு நிற்கிறான்.

11. தேவனான நான் தேவர்களுடைய, வசுக்களுடைய, ருத்திரியர்களுடைய, ஆதித்தியர்களுடைய ஆக்ஞைகளை மீறாமலிருப்பேன். இந்தத் தேவர்கள் என்னைத் தோல்வியாகாத, துன்பமாகாத, வெல்லப்படாத மங்கலமான ஆற்றலுக்குக் கற்பிப்பார்களாக. 9300

## 49. இந்திரன்

### 886. இந்திரவைகுண்டன்

1. நான் உத்தம செல்வத்தால் துதிப்பவனைச் செல்வப்படுத்தினேன். என்னைப் பலப்படுத்த நான் தோத்திரத்தைக் கூறினேன். நான் யஜிப்பவனை ஊக்கப்படுத்துகிறேன். நான் துதிக்காதவனை ஒவ்வொரு போரிலும் ஜயித்தேன்.

2. சோதியிலே, சலங்களிலே, புவியிலே உள்ள சனங்கள் என்னைத் தேவர்களின் நடுவே இந்திரன் என்னும் பெயரோடு ஸ்தாபித்தார்கள். நான் என்னுடைய தேரிலே வேகமுள்ளவையும், பல செயல்களுள்ளவையும், வலியவையுமான இரு கபில நிறமுள்ள குதிரைகளை இணைத்தேன்.

3. நான் அறிஞனை—கவியை—காக்கப் பல்லாயுதங்களால் அத்கனைப் புடைத்தேன். நான் என்னுடைய இந்தப் பாலனங்களால் குத்ஸனைப் பாலித்தேன். சுஷ்ணனைக் கொன்ற நான் வச்சிராயுதத்தை ஏந்தினேன். நான் ஆரியன் என்னும் பெயரை தஸ்யுக்களுக்களிக்கவில்லை.

4. புதல்வனுக்குத் தந்தையைப்போல் நான், குத்ஸன் விரும்பியதுபோல் அவனுக்கு வேதசுக்களையும், துக்ரனையும், ஸ்மதிபனையும் வசப்படுத்தினேன். நான் துஜிக்கு, அவன் பகைவர்களை எதிர்க்கப் பிரியமான செல்வங்களை அளித்தபோது துதிப்பவனை நடத்தத் தகுந்த அரசனானேன்.

5. நான் மிருகயனை சுருதர்வணனுக்கு வசப்படுத்தினேன். ஏனெனில், அவன் எப்பொழுதும் என்னைப் பின்பற்றினான். என் சொற்களைக் கேட்டான். நான் ஆயுவுக்காக வேசனைத் தாழ்த்தினேன். நான் ஸவ்யனுக்குப் பட்கிரிபியை வசப்படுத்தினேன். 9305

6. பெருகிப் பரவும் பகைவர்களை ஒருவர் பின் ஒருவராக ஒளி மண்டலத்தின் தூரமான வரம்புக்குச் செலுத்திய



போது விருத்திரனை வீழ்த்திய நான், விருத்திரனைப்போல் தாஸனைக் கொன்ற நான், நவவாஸ்துவையும் பிரஹத்ரதனையும் கொன்றேன். ஒளி மண்டலத்தின் தூர வரம்பிலே சோதிகளைப் பரத்தி அதிகப்படுத்தும் தேவனை, ஒளியை வருவித்தபோது பகைவர்களைக் கொல்லும் விருத்திர சங்காரனான நான் தாஸனையும் நவவாஸ்துவையும் பிரஹத்ரதனையும் கொன்றேன்.

7. நான் சூரியனுடைய துரிதமான, வெண்மையான குதிரைகளால் வகிக்கப்பட்டு என்னுடைய ஆன்ம பலத்தால் பரவுகிறேன். மானிடனின் ஸோமப் பொழிவு—யக்ஞத்தின் ஒளி—எழிலுக்கு என்னை அழைக்குங்கால் நான் அழிப்பதற்குரிய தாஸனை என் ஆயுதங்களால் அழிக்கிறேன்.

8. நான் ஏழு அசுரர்களை அழிப்பவன். நான் நஹுஷனைக் காட்டிலும் அதிக ஆற்றல் உள்ளவன். நான் துருவசையும் யதுவையும் பலத்தால் பெருமைப்படுத்தினேன். நான் வழிபடும் வேறொருவனைப் பலத்தால் பலப்படுத்தினேன். நான் தொண்ணூற்றொன்பது வலிய பகைவர்களைப் புடைத்தேன்.

9. வர்ஷிக்கும் நான் புவியின்மீது பெருகிப் பாயும் ஏழு நதிகளைத் தாங்கினேன். நல்ல செயல்களை நடத்தும் நான் சலங்களைப் பரத்துகிறேன். போரே மானிடனுக்கு வெற்றியின் வழி எனக் கண்டேன்.

10. நான் பசுக்களின் ஆபீனங்களிலே எந்தத் தேவனாலும், துவஷ்டாவாலுங் கட்டத் தாங்க இயலாத பிரகாசமாயுள்ள விரும்பத் தகுந்த பாலை வைத்தேன். நான் நதிகளிலே சலத்தின் உற்பத்தியாகும் இடத்தின் வரையுள்ள சலத்தையும், இன்புறுத்தும் ஸோமத்தையும், பாலையும், தயிரையும் ஏந்துகிறேன்.

11. இந்திரன் பேசுகிறான் : இங்ஙனம் மகவானும் சத்தியச் செல்வனுமான இந்திரன் தன் பலத்தால் தேவர்

களையும் மனிதர்களையும் ஊக்கப்படுத்துகிருன். குதிரைகளிருப்பவனும், பெரிய செயல்களை நடத்துபவனும், சுயப்புகழுள்ளவனுமான இந்திரனே! அறிஞர்கள் உன்னுடைய இந்த வீரச் செயல்களை யெல்லாம் போற்றுகிருர்கள். 9311

# 50. இந்திரவைகுண்டன்

## 887. இந்திரவைகுண்டன்

1. மகானுன இந்திரனுடைய புகழையும், ஆண்மையான ஆற்றலையும், சோதியும் புவியும் போற்றுகின்றன. அவனுடைய ஜயிக்கும் சக்தி போரிலே மிக்கச் சக்தியுடனிருக்கிறது. அனைத்தையும் படைத்த அவன் அனைவர்க்கும் தலைவனுயிருக்கிருன். ஸோமத்தால் இன்பமாகும் அவனை நான் போற்றுகிறேன்.

2. நரர்களிடம் பிரியமாயிருப்பவனும், அனைவர்க்கும் தலைவனும், நண்பனுல் போற்றப்படுபவனுமான இந்திரன், என்னைப்போலுள்ள மனிதர்களால் அடிக்கடி போற்றத் தகுந்தவன். சூரனே! நல்லவர்களைப் பாலிப்பவனே! அனைத்தையும் ஏந்துபவையும், உணவைத் தருபவையும், மேகத்திலிருப்பவையுமான சலங்களிலே நீ போற்றப்படுகிருய்.

3. இந்திரனே! உன்னிடமிருந்து சுகத்தையும் செல்வத்தையும் அடைய விரும்பி உனக்கு உணவையளிப்பதில் சிறந்தவர்களாயிருக்கும் மனிதர்கள் யார்? எவர் உனக்கு அவிகளையளித்து அசுரனை அழிப்பதற்கேற்ற ஆற்றலை விரும்புகிருர்கள்? எவர் உனக்கு அவிகளையளித்து, தாமாகவே பெருகும் சலங்களையும், பயிரிடத் தகுந்த நிலங்களையும், ஆண்மையையும் விரும்புகிருர்கள்?

4. இந்திரனே! நீ எங்கள் தோத்திரத்தால் மகானுனுய். எல்லா யக்ஞங்களிலும் போற்றத் தகுந்தவனுனுய். நீ ஒவ்வொரு போரிலும் பகைப் படைகளின் தலைவர்களைச் சாய்ப்பவனுயிருக்கிருய். அனைத்தையுங் காணும் நீ, மந்திரனுயிருக்கிருய். தலைவனுயிருக்கிருய்.



5. இந்திரனே! அனைவர்க்கும் உத்தமனுயுள்ள நீ, யக்ஞத்தில் கவனமாயிருப்பவர்களைப் பாலிக்கவும். உன்னுடைய பாலனம் மகத்தானது என்பதை சனங்கள் அறிகிருர்கள். நீ தேயாமலிருக்கவும், நீ திறமுள்ளவனுகவும், நீ இந்த யக்ஞங்களையெல்லாம் ஊக்கப்படுத்துகிருய்.

6. நீ இந்த யக்ஞங்களையெல்லாம் ஊக்கப்படுத்தினுய். பலத்தின் மகனே! நீயே அவற்றைத் தாங்குகிருய். பகைவர்களை எதிர்க்க உன்னுடைய பாலனம் தோன்றுக. எங்களைத் தாங்கச் செல்வம் தோன்றுக. யக்ஞமும், மந்திரமும், தோத்திரமும், குரலும் உனக்கு எழுகின்றன.

7. விப்பிரனே! இந்திரனே! வழிபடுபவர்கள் சங்கமாய்ச் சேர்ந்து, உன்னிடமிருந்து செல்வங்களையும், நிதிகளையும் பெறத் துதிக்குங்கால், மனத்தின் வழியால் உன்னிடமிருந்து சுகத்தையடைய நீ ஸோமத்தில் மகிழுங்கால் அதற்கேற்ற ஆற்றலைப் பெறுவார்களாக. 9318

# 51. தேவர்களும் அக்கினியும்

## 888. அக்கினிஸௌசீகனும் விசுவேதேவர்களும்

1. தேவர்கள் பேசுகிருர்கள்: அக்கினியே! நீ பெரிதாயும் கனத்ததாயுமுள்ள போர்வையைப் போர்த்திக் கொண்டு சலத்துக்குள் நுழைந்தாய். அக்கினி ஜாதவேதஸனே! ஒரு தேவன் உன்னுடைய பலவித வடிவங்களைப் பார்த்தான்.

2. அக்கினி பேசுகிருன்: எவன் என்னைப் பார்த்தான்? தேவர்களில் எவன் என்னுடைய பலவித வடிவங்களை முற்றும் பார்த்தான்? மித்திராவருணர்களே! தேவர்களிடம் செலுத்தும் ஸமித்தனங்கள் எல்லாம் எங்கு இருக்கின்றன?

3. தேவர்கள் பேசுகிறார்கள்: அக்கினி ஜாதவேதஸனே! ஓஷதிகளிலும் சலங்களிலும் மறைந்திருந்த உன்னைப் பல இடங்களிலே நாங்கள் தேடினோம். யமன், மறைந்துள்ள பத்து இடங்களிலிருந்து—சோதி, வானம், புவி, அக்கினி, வாயு, ஆதித்தியன், சலங்கள், மரங்கள், பிராணிகளின் சரீரங்கள், பிரகாசிப்பவனும் துதியாருகக் கிரணங்களும் உள்ள உன்னை அறிந்தான்.

4. அக்கினி: தேவனான வருணனே! தேவர்கள் என்னை மீண்டும் அவி வகிக்கச் செய்வார்களோ என எண்ணி ஹோதாவுக்குப் பயந்து இங்கு வந்தேன். ஆதலால் என் வடிவங்கள் சலத்துக்குள்ளும், பல இடங்களிலும் சென்றன. அக்கினியான நான் அந்த வேலையைச் செய்ய விரும்பவில்லை.

5. தேவர்கள்: அக்கினியே! வா; தேவபக்தனான மநு, யக்ஞஞ்செய்ய விரும்புகிறான். உன்னை அலங்கரித்துக்கொண்டு நீ இருட்டிலே வசிக்கிறாய். தேவர்களிடம் செல்லும் வழிகளை சுகப்படுத்தவும். நல்ல மனத்தோடு எங்கள் அவிகளை வகித்துச் செல்லவும். 9323

6. அக்கினி: என்னுடைய மூத்த சகோதரர்கள், வழியைக் கடக்கும் தேரோட்டியைப் போல் அந்தச் செயலை நடத்தினார்கள். ஆனால் அவர்கள் அழிக்கப்பட்டார்கள் – ஆதலால் வருணனே! நான் பயந்து வெகு தூரம் ஓடிவிட்டேன். நான் வில்லின் நாணுக்கு நடுங்கும் காட்டுக் காளையைப் போல் நடுங்குகிறேன்.

7. தேவர்கள்: அக்கினியே! நாங்கள் உனக்கு அழிவற்ற ஆயுளைத் தருகிறோம். ஜாதவேதஸனே! இதனால் மரணம் உனக்குத் தோன்றாது. அக்கினியே! ஸுஜாதனே! நீ நல்ல மனமுள்ளவனாகி, தேவர்களுக்கு அவர்களுக்குரிய அவியின் பாகத்தை எடுத்துச் செல்லவும்.

8. அக்கினி: எனக்கு முதல் அவிகளையும், அடுத்த அவிகளையும், அவிகளின் ஸாரபாகங்களையும், அனைத்தையுமளிக்கவும். சலங்களின் ஸாரமான நெய்யையும், ஓஷதிகளின் ஸாரமான மனிதனையுமளிக்கவும். அக்கினியான எனக்குத் தீர்க்காயுசு தோன்றுக.



9. தேவர்கள்: அக்கினியே! உனக்கே முதல் அவிகளையும், அடுத்த அவிகளையும், அவியின் ஸாரபாகங்களும் தோன்றுக. இந்த யக்ஞங்கள் எல்லாம் உனக்கே தோன்றுக. உலகத்தின் நான்கு திசைகளும் உனக்கு வணக்கமளிக்க. 9327

## 52. விசுவேதேவர்கள்

### 889. ஸௌசீக அக்கினி

1. விசுவேதேவர்களே! நான் ஹோதாவாக நியமிக்கப்பட்டதால் நான் இங்கு அமர்ந்து எங்ஙனம் உங்களைப் போற்றவேண்டும் எனக் கற்பியுங்கள். நீங்கள் உங்களுடைய பாகத்தையும், நீங்கள் அதை எங்ஙனம் பெற்றீர்கள், எந்த வழியால் உங்களுக்கு நான் அவியைச் செலுத்த வேண்டுமென்பதையும் எனக்கு அறிவியுங்கள்.

2. நான் யக்ஞத்துக்கு மிகுந்த அருகனாகி நான் ஹோதாவாக அமர்ந்திருக்கிறேன். தேவர்களான மருத்துக்கள் எல்லாம் என்னை அவியை வகிக்கப் பிரேரிக்கிறார்கள். அசுவினிகளே! நீங்கள் அத்வர்யுக்களின் கடமையைத் தினந்தோறும் செய்ய வேண்டும். சந்திரன் பிரம்மனாவானாக. அவன் உங்களுடைய அவியாயுமிருப்பானாக.

3. ஹோதாவாக இருக்கும் இவன் யார்? யமனுக்குப் பயந்து அவன் தேவர்கள் பெற்றுக்கொள்ள எந்த அவியை எடுத்துச் செல்லுகிறான்? அக்கினி தினந்தோறும் பிறக்கிறான். அவன் மாதந்தோறும் பிறக்கிறான். ஆதலால் தேவர்கள் அவனையே அவி வகிப்பவனாகச் செய்து கொண்டார்கள்.

4. தேவர்கள் சென்ற பிறகு திரும்புபவனும், பல கஷ்ட வழிகளிலே செல்லுபவனுமான என்னை அவி வகிப்பவனாகச் செய்துகொண்டார்கள். அவர்கள் இந்த அக்

கினியை அறிஞன் எனக் கூறிக்கொண்டு ஐந்து வழிகளுள்ளதும், முவ்விதமாயிருப்பதும், ஏழு இழைகள் இருப்பதுமான யக்ஞத்தைப் பூர்த்தி செய்வான் எனச் சொன்னார்கள்.

5. தேவர்களே! நான் உங்களைப் போற்ற அமுதத் தன்மையையும், நல்ல புதல்வனையும் உங்களிடம் விரும்புகிறேன். இந்திரன் இந்தப் பகைப் படைகளையெல்லாம் ஜயிக்க அவனைத் தன் கைகளிலே வச்சிரமேந்தச் செய்கிறேன்.

6. மூவாயிரத்து முன்னூற்று முப்பத்தொன்பது தேவர்கள் அக்கினியைத் துதித்தார்கள். அவர்கள் என்னை நெய்யால் தெளித்தார்கள். அவர்கள் தருப்பையைப் பரத்தினார்கள். பிறகு என்னை ஹோதாவாக அமர்த்தினார்கள். 9333

# 53. அக்கினி சௌசீகன் : தேவர்கள்

## 890. அக்கினி சௌசீகன் : தேவர்கள்

1. தேவர்கள்: எங்களுடைய மனங்களால் நாடப்பட்ட அவன் வந்துவிட்டான். யக்ஞத்தை உணர்பவனும், அதன் பல அங்கங்களை அறிபவனும் வந்துவிட்டான். அவன் யக்ஞக் கடமைகளைச் செய்வானாக. யஜிக்கத் தகுந்தவர்களின் நடுவே முதல்வனாக அமர்வானாக.

2. உத்தம ஹோதாவான அவன் வேதியிலே அமர்வதால் பிரதிட்டையாக —அவியைப் பெறத்தகுந்தவனாகிறான். தன் முன்னால் நன்கு வைக்கப்பட்டுள்ள அவிகளைக் கவனிக்கிறான். நாம் யக்ஞாருகத் தேவர்களை நெய்யோடு சீக்கிரம் போற்றுவோமாக. நாம் துதியாருகர்களையும் போற்றுவோமாக.

3. நாம் தேவர்களுக்கு அளிக்கும் விருந்தை அவன் சித்தப்படுத்தினான். நாம் யக்ஞத்தின் மருமமான



நாக்கை அடைந்தோம். அவனுக்குத் தேவர்களால் அளிக்கப்பட்ட ஆயுளை அணிந்து சுகந்தமாய் வந்தான். இன்று நாம் தேவர்களுக்கு அளிக்கும் அவியை மங்களப்படுத்தினான்.

4. அக்கினி: தேவர்களான நாம் அசுரர்களை எங்ஙனம் கொல்லலாம் என்பதற்கு உத்தம வழியை இன்று உங்களிடம் கூறுகிறேன். யக்ஞ உணவைப் புசிப்பவர்களும் யக்ஞாருகர்களும் பஞ்ச சனங்களுமான நீங்கள் என்னுடைய ஹோதாச் செயலால் இன்பமாகுங்கள்.

5. பஞ்சனங்களும் கிருதத்துக்காக —நெய்க்காக— பிறந்தவர்களும், யக்ஞாருகர்களும் என்னுடைய அவியால் இன்புறுவார்களாக. புவி எங்களை எல்லாப் புவியின் பாவத்திலிருந்தும் பாலிப்பாளாக. வானம் சோதியிலிருந்து வரும் பாவத்திலிருந்து எங்களைப் பாலிப்பானாக. 9338

6. தேவர்கள்: யக்ஞத்தைப் பரத்தி உலகத்தை ஒளிப்படுத்தும் சூரியனைப் பின்பற்றவும். செயல்களால் கற்பிக்கப்பட்ட தேவர்களின் சோதி வழிகளைப் பாலிக்கவும். அக்கினி வழிபடுபவர்களின் செயல்களைக் குற்றத்திலிருந்து பாலிப்பானாக. நீ மநுவாகவும். தேவசங்கத்தைப் பிறப்பிக்கவும்.

7. தேவர்கள் பரஸ்பரம் பேசிக்கொள்கிறார்கள்: ஸோமத்தைப் பருகுபவர்களே! தேரிலே இணைப்பதற்குரிய குதிரைகளைப் பூட்டுங்கள். வாய்வடங்களை சீர்ப்படுத்துங்கள். குதிரைகளுக்குச் சாமான்களைப் போடுங்கள். எட்டு பீடங்களிருப்பதும், தேவர்களால் எங்களுக்களிக்கப்பட்ட விரும்பத்தகுந்த செல்வத்தை ஏந்தி வருவதுமான தேரை எங்கும் பின்பற்றுங்கள்.

8. இங்கு அச்மன்வதி பாய்கிறது. பரஸ்பரம் இருகப் பிடித்துக்கொள்ளுங்கள். மூழ்காமல் உயரமாய் இருங்கள். நண்பர்களே! நதியைக் கடந்து செல்லுங்கள். நாம்

மங்களமான செல்வங்களுக்குக் கடந்து செல்ல,சுகத்தைத் தராத செல்வங்களை நீக்குவோமாக.

9. சிற்பிகளிலே உத்தமச் சிற்பியும், பருகும் பாண்டங்களைக் கற்பிக்கும் தலைகளை அறிபவனுமான துவஷ்டா, தேவர்கள் பருகும் பாத்திரங்களை ஏந்தி நிற்கிருன். அவன் நல்ல இரும்பால் செய்த கோடரியைக் கூர்ப்பிக்கிருன். வெண்ணிறப் பிரகஸ்பதி அதனுல் பகைவர்களை வெட்டுகிருன்.

10. அறிஞர்களான ரிபுக்களே! அமுதமேந்தும் பாத்திரங்களைக் கற்பிக்க நீங்கள் உங்கள் கருவிகளைக் கூர்ப்பியுங்கள். அறிஞர்களான நீங்கள் எந்த மர்மமான வழிகளால் தேவர்கள் அமுதத்தன்மையை அடைந்தார்களோ, அந்த மர்மமான வழிகளைச் செய்யுங்கள்.

11. மருத்துக்கள் இறந்த பசுவின் சருமப் போர்வையினுள்ளே பெண்ணையும், இறந்த பசுவின் வாயிலே கன்றையும், தேவத்தன்மையை விரும்பும் மனத்தோடும், நாக்கோடும் வைத்தார்கள். அவர்கள் மருமமான நாக்கோடும், மறைந்த மனத்தோடும் கருப்பத்திலே மங்கையையும், வாயினுள் கன்றையும் வைத்தார்கள். அவர்கள் எப்பொழுதும் அவர்களுடைய பாலனத்தோடு எங்கள் அருகில் இருக்கிருர்கள். வெற்றிக்கு ஊக்கமாகும் பாட்டு
வெற்றியைத் தருகிறது. 9344

## 54. இந்திரன்

### 891. பிருஹதுக்தன்—வாமதேவ்யன்

1.மகவானே! நீ உன் பலத்தால் சம்பாதித்த மகத்தான புகழை நான் போற்றுகிறேன். சோதியும் புவியும் கலங்கி உன்னை அழைத்தபோது நீ தேவர்களைப் பாலித்தாய். அவர்களுடைய பகைவனை அழித்தாய். வழிபடும் ஒருவனுக்கு நீ பலத்தை அளித்தாய். இந்திரனே! நான் உன்னை அதற்காகப் போற்றுகிறேன்.



2. இந்திரனே! நீ உன் வடிவத்திலே வளர்ந்து, சனங்களின் நடுவே உன் வலிமையைக் கூறிக்கொண்டு சென்றபோது அந்த மனிதர்கள் எல்லாம் உன்னுடைய போர்களை மாயை-பொய்-எனக் கூறினுர்கள். எதிர்க்க ஒரு பகைவனையும் நீ இப்பொழுது காணவில்லை. நீ பூர்வத்தில் எந்தப் பகைவனையாவது பார்த்தாயா?

3. நீ உன்னுடைய தேகத்திலிருந்து உடனே தாயையும் தந்தையையும் — சோதியையும் புவியையும்—பிறப்பித்தபோது எங்களுக்கு முன்னுலிருந்த ரிஷிகளிலே எவன் உன் முழு மகிமையின் எல்லையைக் கண்டான்?

4. மகத்தாயுள்ள உனக்கு அசுரர்களை அழிப்பவையும், தடைபடாதவையுமான நான்கு நாமங்கள், வடிவங்கள்—உண்டு. மகவானே! வீரச் செயல்களை நடத்திய அந்த வடிவங்களையெல்லாம் நீ அறிகிருய்.

5. தெரிந்தும், தெரியாமலுமுள்ள எல்லாச் செல்வங்களையும் நீயே தனியனுக ஏந்துகிருய். ஆதலால் மகவானே! நீ என் விருப்பத்தைப் புறக்கணிக்காதே. நீ என் விருப்பத்தை அறிகிருய். நீ அளிப்பவன்.

6. சோதிப் பொருள்களில் சோதியை ஸ்தாபித்தவனும், மதுவோடு மதுப்பொருள்களைச் சேர்த்தவனுமான இந்திரனுக்குப் பிரியமாயுள்ளதும், பலப்படுத்துவதுமான தோத்திரம் மந்திரத்தைச் செய்யும் பிருஹதுக்தனுல் கூறப்
பட்டது. 9350

## 55. இந்திரன்

### 892. பிருஹதுக்தன்

1. பராமுகமுள்ள மனிதர்களால் தரிக்கப்பட்ட உன்னுடைய நாமம்-வடிவம்-தூரத்திலிருக்கிறது.சோதி புவிகள் கலங்கி ஆதரவுக்காக உன்னை அழைத்தபோது அவற்றை —சோதி புவிகளை—அருகிலே பரஸ்பரம் மோதாமல் நிலைப் படுத்தினுய். மகவானே! நீ உன்னுடைய சகோதர

னுடைய—பர்ஜன்யனுடைய — புதல்வர்களை ஒளிப்படுத்தினாய்.

2. அந்த மர்மமான நாமம்–வடிவம்–மகத்தாயிருக்கிறது. பலரால் விரும்பப்படுகிறது. அதனால் நீ இருப்பதையும், இருக்கப்போகும் அனைத்தையும் செய்தாய்' அவனால் விரும்பப்படும் சனங்கள் பூர்வத்திலே செய்யப்பட்டதும் அவனால் விரும்பப்படுவதுமான சோதியிலே நுழைந்தார்கள்.

3. அவன் சோதியையும், புவியையும், நடு வானத்தையும் தன் வடிவத்தால்—தேஜஸால்—நிரப்பினான். அவன் பஞ்சதேவர்களையும் — தேவர்களை, மனிதர்களை, பிதிர்க்களை, அசுவினிகளை, அரக்கர்களை — ஏழு ஏழுகளையும், மருத்துக்களின் ஏழு கணங்களையும், சூரியனின் ஏழு ரசிமிகளையும், ஏழு புலன்களையும், ஏழு உலகங்களையும், ஏழு ஏழாய்ப் பிரிந்த மற்ற வகையையும் உரிய பருவங்களிலே ஸமான ரூபமுள்ள சோதியோடு பலவித செயல்களுள்ள முப்பத்துநாலு தேவர்களோடு, எட்டு வசுக்களோடு, பதினொன்று ருத்திரர்களோடு, பன்னிரண்டு ஆதித்தியர்களோடு, பிரசாபதியோடு, வஷட்காரனோடு, விராஜனோடு சுற்றிலும் கவனித்தான்.

4. உஷையே! ஒளிகளின் நடுவே முதல்வனாயிருக்கும் நீ, பிரகாசித்த போது, புஷ்டிக்குப் புட்டியான சூரியனைப் பிறப்பித்தாய். மகத்தாயுள்ள உன் மகத்வமும் அசுரத்வமும் நிகரற்றது. நீ மேலே இருந்தாலும், கீழே இருக்கப்பட்டவர்களுக்குப் பந்துவாயிருக்கிறாய்.

5. இந்திரன் காலன்: இளைஞனாயிருப்பதால் போரிலே பல பகைவர்களைச் சிதறடிக்கும் போர்க்குணமுள்ள மனிதனை நரைத்த உரோமமுள்ளவன் விழுங்கினான். தேவனுடைய மகத்தான திட்பத்தைப் பாருங்கள். அவன் இன்று மரிக்கிறான். அவன் நாளை உயிரோடிருக்கிறான்.



6. அவன் சக்தியால் சக்தன். சிவப்பு நிறமுள்ள ஸுபர்ணன் வருகிறான். அவன் மகான். அவன் சூரன். அவன் பழையவன். அவனுக்கு உறையிடமில்லை. அவன் அறிவது சத்தியமாயிருக்கிறது. அது வீணாகாது. அவன் ஜயிப்பவன். விரும்பத் தகுந்த செல்வத்தையளிப்பவன்.

7. இந்த மருத்துக்களோடு சேர்ந்து செழிப்பிக்கும் சக்திகளை இந்திரன் தருகிறான். அவர்களோடு சேர்ந்து வச்சிராயுதன் மழையைச் செலுத்துகிறான். மகத்தான இந்திரனால் நடத்திய செயலுக்கு உதவி செய்ய மழையை யளிப்பவர்களான மருத்துக்கள் தோன்றினார்கள்.

8. விசுவ பலமுள்ளவனும், அரக்கரையழிப்பவனும்' விசுவ மனமுள்ளவனும், பகைவர்களைத் துரிதமாய் ஜயிப்பவனும், சோதியிலிருந்து இறங்கி வந்து ஸோமத்தைப் பருகி ஊக்கமடைந்தவனும், சூரனுமான இந்திரன், மருத்துக்களின் உதவியால் தன் செயலை நடத்தி, தன் வச்சிராயுதத்தால் தஸ்யுக்களை அழிக்கிறான். 9358

## 56. விசுவேதேவர்கள்

### 892. பிருகதுக்தன்

1. உனக்கு இங்கு ஒரு ஒளி புவியிலுள்ள தகனக்கினி இருக்கிறது. வேறு பாகமான ஒளி தூரத்திலே, வானிலே இருக்கிறது. உன்னுடைய மூன்றாவது ஒளியோடு வானுக்கப்பால் உத்தம நிலையத்திலுள்ள சோதியோடு சேர்ந்து கொள்ளவும். தேவர்களின் உத்தம சனன ஸ்தானமான சூரியனிலே நீ நுழையுங்கால் நீ சுந்தரனாகவும். நீ பிரியனாகவும்.

2. வாஜினனே! நீ இந்த தேகத்தை, புவியை வகித்துச் செல்பவனாய் எங்களுக்கு அரிய செல்வத்தையளிக்கவும். உனக்கு சுகத்தைச் செய்துகொள்ளவும். நீ இடறாமல் மகத்தான தேவர்களைத் தாங்க நுழையவும். நீ சோதியிலுள்ள ஒளியிலும், சூரியனிலும், உன்னுடைய சொந்த ஒளியிலும் நுழையவும்.

3. நீ வாஜினனால் வலிமையால் வலியனாயிருக்கிறாய். நீ அன்பனாயிருக்கிறாய். பிரேரிதனான நீ, உன் ஸ்தோமத்தின் நோக்கத்தைப் பின்பற்றவும். பிரேரிதமாகி நீ சோதிக்குச் செல்லவும். பிரேரிதமாகி முதன்மையாயும், சத்தியமாயுமுள்ள தருமத்தைப் பின்பற்றவும். பிரேரிதமாகி தேவர்களைப் பின்பற்றவும். பிரேரிதமாகி சோதியிலிருந்து இறங்கும் ஒளியைப் பின்பற்றவும்.

4. நமது பிதாக்கள்—அங்கிரஸர்கள்—இந்தத் தேவர்களின் மகத்வத்துக்குத் தலைவர்களானார்கள். அவர்கள் தேவர்களாகி, தேவர்களைத் தங்கள் சங்கற்பத்துக்கு உட்படுத்தினார்கள். அங்கு பிரகாசித்த காந்திகளோடு சேர்ந்தார்கள். மீண்டும் அவர்கள் தேவர்களின் தேகங்களிலே நுழைந்தார்கள்.

5. அவர்கள் தங்கள் ஆற்றல்களால் உலகத்தையெல்லாம் சுற்றினார்கள். அவர்கள் அதுவரை அளக்கப்படாதிருந்த பழைய இடங்களை அளந்தார்கள். இருக்கும் எல்லா சீவர்களையும் உரிய ஸ்தானங்களிலே கட்டுப்படுத்தினார்கள். அவர்கள் சனங்களின் நடுவே பல திசைகளிலும் ஒளியைப் பரப்பினார்கள்.

6. ஆதித்தியனின் புதல்வர்களான அங்கிரஸர்கள், தங்களுடைய மூன்றுவது கடமையால், செயலால், பிரமசரியத்தால் ரிஷிகளும், யக்ஞத்தால் தேவர்களும், பிரசையால் பிதாக்களும், ஆற்றலுள்ளவனும், அனைத்தையுங் காண்பவனுமான சூரியனை, இரு செயல்களோடு—உதயத்தோடும் அஸ்தமத்தோடும்—ஸ்தாபித்தார்கள். பிதுருக்கள் தங்கள் சொந்தப் பிரசையைப் பிறப்பித்து, அவர்களிலிருந்த உத்தமர்களிலே பிதாக்களின் பலத்தை ஸ்தாபித்தார்கள். சந்ததியின் இழையை நீட்டினார்கள்.

7. புவியின் பல திசைகளுக்குச் செல்ல கப்பலிலே சலத்தின் மீது சென்று எல்லாக் கஷ்டங்களையும் சுவஸ்திகளோடு கடக்கும் மனிதர்களைப்போல் பிருகதுக்தன் தன் பலத்தால் தன் புதல்வனை—வாஜினனை—இங்கு அக்கினி



முதலியவற்றில், அங்கு ஸூரியன் முதலியவற்றில் ஸ்தாபித்தான். 9365

## 57. விசுவேதேவர்கள்

### 894. பந்து—சுருதபந்து—விப்பிரபந்து

1. இந்திரனே! நாங்கள் வழியிலிருந்து நீங்காமலிருப்போமாக. ஸோமமளிப்பவனுடைய யக்ஞத்திலிருந்தும் நீங்காமலிருப்போமாக. எங்களுடைய இடங்களில் பகைவர்கள் அமராமல் இருப்பார்களாக.

2. தேவர்களுக்கு நூற்கப்பட்டதும், யக்ஞத்தைப் பூர்த்தி செய்வதுமான இழைக்கு—அக்கினிக்கு—நாங்கள் அவிகளை அளித்து அவனுடைய ஆதரவை அடைவோமாக.

3. நாங்கள் நாராசம்ஸ ஸோமத்தோடும், பிதிர்க்களின் தோத்திரங்களோடும், ஸுபந்துவின் மனத்தை அழைக்கிறோம்.

4. ஸுபந்துவே! உன்னுடைய மனம், செயலைச் செய்யவும், பலத்தைப் பயிலவும், சீவிக்கவும், நீண்டகாலம் சூரியனைக் காணவும் மீண்டும் இங்கு வருக.

5. பிதாக்கள் இந்திரிய சங்கத்தை மீண்டும் அளிப்பார்களாக. தேவசங்கமும் இந்திரிய சங்கத்தை அளிப்பார்களாக. நாங்களும் இந்திரிய சங்கத்தோடு இயங்குவோமாக.

6. ஸோமனே! பிரஜைகளோடுள்ள நாங்கள் உன்னுடைய விரதத்தைச் செலுத்தி இந்திரிய சங்கத்தை அடைவோமாக. 9371

## 58. மனம்

### 895. பந்து—சுருதபந்து—விப்பிரபந்து

1. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே விவஸ்வானுடைய மகனான யமனிடம் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் உன்னிடம் வரச் செய்கிறோம்.

2. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே சோதிக்கும் புவிக்கும் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் உன்னிடம் வரச் செய்கிறோம்.

3. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், தூரத்திலே புவியின் நான்கு திசைகளுக்குச் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

4. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே வெளியின் நான்கு திசைகளுக்கும் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

5. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே சலங்களுள்ள மேகத்துக்குச் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம். 9376

6. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே பரவும் ஒளிக்கதிர்களுக்குச் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

7. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே சலங்களுக்கும் ஓஷதிகளுக்கும் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

8. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே சூரியனுக்கும் உஷைக்கும் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் இங்கு வரச் செய்கிறோம்.

9. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே பெரிய மலைகளுக்குச் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

10. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே இந்த விசுவமான சகத்தில் எந்த இடத்திலும் சென்றுள்ள உன் மனத்தை மீண்டும் வரச் செய்கிறோம்.

11. நாங்கள், நீ இங்கு வசிக்கவும், சீவிக்கவும், தூரத்திலே சென்ற காலத்துக்கும் வருங்காலத்துக்கும் சென்றுள்ள உன் மனத்தை வரச் செய்கிறோம். 9382



# 59. நிருதியும் மற்ற தேவர்களும்

## 896. பந்து – சுருதபந்து – விப்பிரபந்து

### நிருதி

1. ஸுபந்துவினுடைய ஆயுசு நீடித்து, புதுமையாகி, பூரணாயுசுக்குச் செலுத்தப்பட கைப்பழக்கமுள்ள தேரோட்டியால் தேரிலே பத்திரமாய்ச் செலுத்தப்படும் மனிதர்களைப்போல் செலுத்தப்படுவானாக. ஆயுளிலிருந்து தேய்பவன் பூர்ணாயுசுடன் வாழ அதிகமாய் விரும்புகிறான். நிருதி தூரத்திலே செல்வாளாக.

2. நாம் உணவுக்காகவும், செழுமைக்காகவும், செல்வத்துக்காகவும், ஸாமத்தைப் பாடுகிறோம். நாம் புகழுக்காகப் பல செயல்களை நடத்துவோமாக. எங்களுடைய இந்தச் செயல்கள் எல்லாம் பாடுபவனை இன்புறுத்தும். நிருதி தூரத்தில் செல்வாளாக.

3. நாங்கள் எங்களுடைய வீரச்செயல்களால் எங்களுடைய பகைவர்களை, புவியை, ரசிமிகளால் சூரியனைப் போலும், மேகங்களை அடிக்கும் வச்சிரக் கோல்களைப் போலும் ஜயிப்போமாக. எங்களுடைய இந்தச் செயல்கள் எல்லாம் பாடப்படும் என அவள் அறிகிறாள். நிருதி தூரத்தில் செல்வாளாக.

### நிருதியும் ஸோமனும்

4. ஸோமனே! எங்களை மிருத்யுவுக்களிக்காதே. நாங்கள் உதய சூரியனை வெகு காலம் பார்ப்போமாக. முறைப்படி வரும் முதுமை எங்களுக்கு சுகமாகுக. நிருதி வெகு தூரத்தில் செல்வாளாக.

### அஸுநீதி

5. அஸுநீதியே! எங்கள் இந்திரியங்களிலே மனத்தைத் தாங்கவும். நாங்கள் நீடூழி வாழ எங்களாயுளை நீடிக்கவும். நாங்கள் வெகுகாலம் சூரியனைக்

காணை எங்களை நிலைப்படுத்தவும். நாங்கள் அளிக்கும் நெய்யால் உன் தேகத்தைச் செழிப்பித்துக் கொள்ளவும். 9387

6. அஸுநீதியே! எங்களுக்கு மீண்டும் கண்ணையளிக்கவும். எங்களுக்கு மீண்டும் பிராணனையும் போகத்தையுமளிக்கவும். நாங்கள் வெகு காலம் உதய சூரியனைக் காண்போமாக. அநுமதியே! எங்களை சுவஸ்தி யோடு செல்வப் படுத்தவும்.

7. புவி மீண்டும் எங்களுக்குப் பிராணனை அளிப்பாளாக. தேவியான சோதியும் வானும் அதை மீண்டும் அளிப்பார்களாக. ஸோமன் மீண்டும் எங்களுக்குத் தேகத்தை அளிப்பானாக. பூஷா ஸ்வஸ்தியாயுள்ள வாக்கை அளிப்பானாக.

### சோதியும் புவியும்

8. ருதத்தின் பெற்றோர்களும், பெரியார்களுமான சோதியும் புவியும் ஸுபந்துவுக்கு சுகத்தையளிப்பார்களாக. சோதியும் புவியும் எல்லாக் குற்றத்தையும் நீக்குவார்களாக. சோதி எல்லாக் குற்றத்தையும் நீக்குவானாக உன்னை எந்தத் துன்பமும் அணுகாமலிருக்க.

9. சோதியிலிருந்து மருத்துக்கள் இருவராகவும், அசுவினிகளாகவும், மூவராகவும், இளையபாரதி ஸரஸ்வதியாகவும் வருகின்றன. அல்லது ஒன்றாகவே புவியில் சுற்றுகிறது. சோதியும் புவியும் எல்லாக் குற்றத்தையும் நீக்குவார்களாக. சோதி எல்லாக் குற்றத்தையும் நீக்குவானாக. எந்தத் தீமையும் உன்னை அணுகாலிருக்க.

### இந்திரனும் சோதியும் புவியும்

10. இந்திரனே! உசீநராணி ஓஷதி நிறைந்துள்ள சகடத்தை ஏந்தி வா. ஊக்கமுள்ள எருதைச் செலுத்தவும். சோதியும் புவியும் எல்லாக் குற்றத்தையும் நீக்குவார்களாக. சோதி எல்லாக் குற்றத்தையும் நீக்குவானாக. எந்தத் தீமையும் உன்னை அணுகாமலிருக்க. 9392



## 60. அஸமாதியும் வேறு தேவர்களும்

**897. பந்து–சுருதபந்து – விப்ரபந்து – கௌபாயனர்கள்**

### அஸமாதி

1. நாங்கள் மகத்தானவர்களின் நடுவே போற்றப் படுபவனும், காந்தி வடிவமுள்ளவனுமான சனத்தினிடம்–ஒருவனிடம், மனிதனிடம் — நமஸ்காரத்தை ஏந்தி வந்திருக்கிறோம்.

2. பகைவரை அழிப்பவனும், ஒளியுள்ளவனும் செல்வத்தைத் தர துரிதத் தேரைப் போல் இருப்பவனும், பஜேரத வம்சத்தில் வந்தவனும், நல்லவர்களைப் பாலிப்பவனுமான அஸமாதி ஆசனிடம் வந்திருக்கிறோம்.

3. கத்தியை ஏந்தியும், ஏந்தாமலும், பகைவர்களைப் போரிலே எருமைகளை அழிக்கும் சிங்கத்தைப் போல் ஜயிப்பவனுமான அரசனிடம் நாங்கள் வந்திருக்கிறோம்.

4. எவனுடைய நல்ல ஆட்சியிலே செல்வனும்' ஜயிப்பவனுமான இட்சுவாகு செழிக்கிறானோ, எவனிடம் பஞ்ச சனங்கள் சுவர்க்கத்திலிருப்பது போல் இன்புறுகிறார்களோ, அவனிடம் வந்திருக்கிறோம்.

### இந்திரன்

5. இந்திரனே! நீ அனைவருங் காண சோதியிலே சூரியனைத் தாங்குவதுபோல் இரதப் பிரோஷட—அஸமாதியிலே—பலத்தைத் தாங்கவும்—ஸ்தாபிக்கவும். 9397

### அஸமாதி
### (அகஸ்தியரின் தாய்)

6. நீ உன்னுடைய தேரிலே அகஸ்தியருடைய சகோதரியின் புதல்வர்களுக்காக உன் தேரிலே இரு சிகப்புக் குதிரைகளை இணைக்கவும். அரசனே! அவி அளிக்காத எல்லாக் கருமிகளையும் ஜயிக்கவும்.

**சீவன்**

7. உன்னுடைய தாயான இந்த அக்கினி, உன்னுடைய தந்தையான இந்த அக்கினி, உனக்கு சீவனை அளிக்கும் இந்த அக்கினி வந்திருக்கிறான். ஸுபந்துவே! சலனமாகும் சக்தியுள்ள உன்னுடைய இந்தத் தேகத்துக்கு மீண்டும் வா.

8. ஆதரவுக்காகக் கயிறுகளால் நுகத்தைக் கட்டும் மனிதர்களைப்போல் அக்கினி, தேகத்திலே சீவனுக்காக உன் மனத்தைச் சேர்த்திருக்கிறான். மரணத்துக்கு இல்லை. பாலனத்துக்கே இணைத்திருக்கிறான்.

9. இந்த மரங்களைத் தாங்கும் பரந்த புவியைப்போல் அக்கினி தேகத்திலே சீவனுக்காக உன்னுடைய மனத்தைச் சேர்க்கிறான். மரணத்துக்கு இல்லை. பாலனத்துக்கே இணைத்திருக்கிறான்.

10. அக்கினி பேசுகிறான்: நான் ஸுபந்துவினுடைய மனத்தை விவஸ்வானுடைய புதல்வனான யமனிடமிருந்து எடுத்து வருகிறேன். மரணத்துக்கு இல்லை. பாலனத்துக்கே எடுத்து வருகிறேன்.

11. காற்று கீழாக வீசுகிறது. சூரியன் கீழ்நோக்கி எரிகிறான். பசு கீழாகவே தன் பாலையளிக்கிறது. அங்ஙனம் உன்னுடைய பாவம் கீழே செல்க.

12. ரிஷிகள் பேசுகிறார்கள்: இந்த என்னுடைய கை பகவான்—செல்வம், இந்த என்னுடைய வேறு கை, இன்னும் மிக்க பகவத் தன்மையுள்ளது. இந்த என்னுடைய கை எல்லா மருந்துகளையுமடைந்திருக்கிறது. இது மங்களப் பரிசமுள்ளது. 9404

## 61. விசுவேதேவர்கள்

### 898. நாபாநேதிஷ்டன் – மநு வம்சம்

1. உக்கிரக் குரலுள்ள நாபாநேதிஷ்டன் தன் அறிவால் அங்கிரஸர்கள் நிறைந்திருந்த யக்ஞத்தின்



நடுவே ருத்திரனின் இத் துதியை, தனக்குரிய பாகத்தையளிக்காமல் மற்ற சகோதரர்களுக்குப் பகிர்ந்தளித்த தந்தையையும், பாகம் பூர்த்தியாய் விட்டது, இனி எதையும் தரோம் என மறுத்த சகோதரர்களையும் போற்றுவதுமான இத் துதியைக் கூறினான். யக்ஞப் பூர்த்தியாகும் தினத்திலே ஏழு ஹோதாக்களின் செயல்களையும் பூர்த்தி செய்தான்.

2. உருத்திரன் துதிப்பவர்களுக்குச் செல்வ தானத்தை அளித்து, அவர்களுடைய பகைவர்களை அழித்து, தன் ஆயுதங்களால் அரக்கர்களைத் தாழ்த்தி, வேதியைக் கற்பித்தான். துரிதமாய்ச் சலிப்பவனும், உக்கிர மொழியுள்ளவனும், சுற்றிலுமுள்ள சலத்தைப் போல் ரேதஸைப் பொழிபவனுமான உருத்திரன் கற்பித்தான்.

3. அசுவினிகளே! உங்களை இந்த அவிகளுக்கு நான் அழைக்கிறேன். வழிபடுபவன் அழைத்து, நீங்கள் மனோவேகத்துடன் வருகிறீர்கள். அவிச் செல்வன் உங்களுக்குரிய அவியைக் கையில் ஏந்தி உங்கள் முன்னே அவன் தன் விரல்களால் சிரஞ் செய்கிறான். நீங்கள் அவனை இன்புறுத்துகிறீர்கள்.

4. உஷைத் தேரின் சிகப்புக் காளைகள் தோன்றுவதற்கு முன்னே கருமையான இரவு நீங்குங்கால், அசுவினிகளே! சோதியின் புதல்வர்களான உங்களை நான் அழைக்கிறேன். என்னுடைய யக்ஞத்தை விரும்புங்கள். என்னுடைய உணவுக்கும், அவிகளுக்கும் குற்றங் காணாமல் சேர்ந்து புசிக்கும் இரு குதிரைகளைப் போல் வாருங்கள்.

5. மானிடர்களுக்கு நலத்தைச் செய்யும் உருத்திரன் வீரிய சக்தியிலே வேகமாகி வளர்ந்தான். பொழிந்தவுடன் ஆகரிஷித்தான். மீண்டும் தடைபடாத அவன் சக்தியைச் சேர்க்கிறான். துஹிதாவினிடம் செலுத்துகிறான்.

6. விருப்பம் போல் நடக்கும் தந்தையினருகே நடு வானிலே யுவதியான உஷையும் வந்தாள். சேர்ந்தார்கள். பிறகு அவர்கள் அற்ப ரேதஸைக் கீழே விழச் செய்தார்கள். அது யக்ஞத்தின் உச்ச ஸ்தானத்தில் பொழியப்பட்டது.

7. பிரஜாபதி உஷையோடு சேர்ந்த பிறகு அவன் புவியோடு இணைந்து, தன் ரேதஸால் புவியை நனைத்தான். பிறகு அறிஞர்களான தேவர்கள் பிரமனைப் பிறப்பித்தார்கள். அவர்கள் விரதங்களைப் பாலிக்கும் வாஸ்தோஷ்பதியையும் பிறப்பித்தார்கள்.

8. அவன் வாஸ்தோஷ்பதி போரிலே நுரையைக் கனைந்து எரியும் இந்திரனைப் போல், அற்ப மனத்தோடு எங்களிடமிருந்து போகலானான். ஆனால் தட்சிணைகளை விட்டுவிட்டு ஒரு அடிகூட நகரவில்லை. அவன் பறிப்பதில் வல்லவனாயிருந்தாலும என்னுடைய இந்தப் பசுக்களைப் பிடிக்கவில்லை.

9. பிரஜைகளைத் துன்புறுத்தும் அக்கினி பகலிலே துரிதமாய் அணுகான். ஆனால் நக்கனர்களான அரக்கர்கள் அக்கினியை இரவிலே அணுகார்கள். ஸமித் தனத்தைத் தருபவனும், உணவைத் தருபவனும், யக்ஞத்தை ஏந்துபவனுமான அக்கினி, தன் பலத்தால் எல்லாப் பகைவர்களையும் கொன்று தோன்றுகிறான்.

10. ஒன்பது மாதங்கள் யக்ஞத்தை அனுசரித்த அங்கிரஸர்கள் யக்ஞத்துக்கேற்ற துதியைக் கூறி துரிதமாய் யுவதியின் நட்பைப் பெற்றார்கள். இரு பீடங்களில் — சோதி புவிகளில் — அமர்ந்திருந்த அங்கிரஸர்கள் தங்கள் பாலகனிடம் வந்தார்கள். தட்சிணை அடையாத அவர்கள் வற்றாத ஊற்றைக் கறந்தார்கள். 9414

11. அவர்கள் இந்திரனான உனக்கு அமுதத்தைத் தரும் பசுவின் பாலான சுத்த செல்வங்களை அளிக்குங்கால் யுவதியின் நட்பைச் சீக்கிரமாயடைந்து, புதிய செல்வத்தைப் போல் சலத்தைப் பொழிந்தார்கள்.



12. துதிப்பவர்கள் கொட்டங்களில் பசுக்களில்லை என்பதை அறிந்தவுடன் யக்ஞத்தை நடத்துபவன் கூறுகிறான். இனியனும், செல்வத்தின் செல்வபதியும், இரக்கமுள்ளவனும், பாபமற்றவனுமான இந்திரன், பறிக்கப்பட்ட எல்லாப் பசுக்களையும் மீட்கிறான்.

13. பிறகு பணியாட்களான ரசிமிகள் இந்திரனைச் சூழ்ந்திருந்தன. பல இடங்களிலே வசித்த அசுரர்கள் திருஷ்தனுடைய மகனைக் கொல்ல நாடினார்கள். ஆனால் தடைபடாத இந்திரன் பல பிரஜைகளுள்ளவனான சுஷ்ணுவின் குகையினுள் மறைத்து வைக்கப்பட்டிருந்ததும், நன்கு இசைக்கப்பட்டுமிருந்ததுமான கவசத்தைக் கண்டான்.

14. பர்க என, பிரகாசம் என அழைக்கப்படும் உன்னுடைய பீடங்களிலே தேவர்கள் சுவர்க்கத்தில் போல் அமர்ந்திருக்கிறார்கள். நீ பர்க எனவும், அக்கினி எனவும், ஜாதவேதஸன் எனவும் அழைக்கப்படுகிறாய் ஹோதாவே! ருதத்தின் ஹோதாவான நீ, எங்களுடைய கபடமற்ற அழைப்பைக் கேட்கவும்.

15. இந்திரனே! ருத்திரனுடைய இரு பிரகாசமுள்ள புதல்வர்களான நாஸத்தியர்கள் என்னுடைய துதியிலும், யக்ஞத்திலும் இருப்பார்களாக. களிப்புள்ளவர்களும், சனங்களுக்குச் செல்வத்தை வழங்குபவர்களும், போற்றுவதற்கருகர்களும், மதுவின் யக்ஞத்தில் போல் என் தருப்பையில் அமர்ந்து எனக்குச் செல்வத்தை அளிப்பார்களாக. 9419

16. இந்த அரசனான ஸோமன், படைப்பவனாகப் போற்றப்படுகிறான். விப்பிரனான அவன், தனக்குத் தானே சேதுவாயிருக்கும் அவன் வானெங்கும் பரவுகிறான். அவன் கட்சவானை நடுங்கச் செய்தான். அவன் தேரின் சுலபமாய்ச் சுழலும் சக்கரத்தைச் சுழற்றும் குதிரைகளைப் போல் அக்கினியை ஆட்டினான்.

17 சயு, மித்திராவருணர்களையும், அரியமானையும் மிக்க மேன்மையான போற்றத் தகுந்த துதிகளால் போற்றியபோது, இரு உலகங்களின் பந்துவும், வைதரணனும், அனைத்தையும் கடத்துபவனுமான அக்கினி, அவனுக்கு-சயுவுக்கு—கன்று ஈனமாயிருந்த அமுதமளிக்கும் பசுவைப் பாலளிக்கச் செய்தான்.

18. புவியின் பந்துவும், சோதியிலிருக்கும் உன்னைத் துதிப்பவனும், யக்ஞத்தை ஏந்துபவனும், நாபாநேதிஷ்டனுமான நான், செல்வத்தை விரும்பிப் புலம்புகிறேன். நம்முடைய மிக்க மேன்மையான பந்தம், நாபியாயிருக்கும் சோதி, சூரியனுடைய இருப்பிடமாயிருக்கிறது. நானும் அவனிடமிருந்து, சூரியனிடமிருந்து பல தலைமுறைகளுக்குப்பால் வந்தவன்.

19. இங்கு என்னுடைய நாபி, பந்தம், பந்துத் தன்மையிருக்கிறது. இங்கு என்னுடைய இடம் இவர்கள்—சூரிய ரசிமிகள்—என்னுடைய தேவர்கள். நான் இந்த அனைத்துமாகிறேன். நான் துவிஜன். நான் சத்தியத்தின் முதல் தோன்றிய புதல்வன். பசு பிறந்தவுடன் இந்த உலகத்தைக் கறந்தது.

20. இத்திசைகளிலே இன்புறுபவனும், தூதனும், ஒளி வீசுபவனும், இரு உலகங்களில் செல்பவனும், காடுகளில் புசிப்பவனும், யக்ஞத்தின் அணவில் மறைபவனும், இழையைப் போல் மேலே எழுபவனும், போற்றத் தகுந்தவனும், துரிதமாய்ப் பகைவர்களையழிப்பவனும், திரமாயிருப்பவனும், சுகத்தைச் செழிப்பிப்பவனுமான அக்கினியை அவனுடைய தாய் பிறப்பித்தாள். 9424

21. சாந்தனான நாபாநேதிஷ்டனுடைய துதிமொழிகள் ஆதர்சனான இந்திரனிடம் செல்லுகின்றன. செல்வத்தைத் தரும் அக்கினியே! நீ எங்களைச் செவியுறவும். நீ எங்களுடைய இந்திரனை யஜிக்கவும். நீ ஆச்வக்கனுடைய—என்னுடைய—துதிகளால் போற்றப்படுகிறாய்.



22. இந்திரனே! அரசனும், வச்சிராயுதத்தை ஏந்துபவனுமான நீ, எங்களுக்கு மகத்தான செல்வங்களை அளிக்க எங்களைக் கவனித்துக் கொள்ளவும். உன் துதியைக் கூறும் அவிச் செல்வர்களான எங்களைப் பாலிக்கவும். குதிரைகளிருப்பவனே! உன் வருகையிலே நாங்கள் குற்றமற்றிருப்போமாக.

23. அரசர்களான மித்திரா வருணர்களே! சலனமாகும் யமன் பசுக்களின் தானத்தை விரும்பி இப்பொழுது நெருங்குகிறான். யக்ஞத்தை நடப்பிக்கும் அங்கிரகணத்துக்குத் துதியை விரும்புகிறான். விப்பிரனான நாபாநேதிஷ்டன் அவர்களால் மிக்கப் பிரியமுள்ளவனாகக் கருதப்படுகிறான். நாபாநேதிஷ்டன் கடமையை நிறைவேற்றுவானாக. அவன் அங்கிரஸர்களைச் சித்தப் படுத்துவானாக.

24. நாங்கள் இந்த உத்தம மனிதனுடைய ஆதரவுக்காக அனாயாசமாய் உன்னை-வருணனை-பாடி உன்னிடம் இதை வேண்டுகிறோம். அவனுடைய குதிரையும், புதல்வனும், வேகமும் வலிமையுமுள்ளவர்களாவார்களாக. வருணனே! நீ அறிஞன். நீ எங்களுக்கு உணவைத் தர இயங்குகிறாய்.

25. உங்கள் இருவருடைய — மித்திராவருணர்களுடைய—நட்புக்கும், எங்களைப் பலப்படுத்துவதற்கும் உங்களை அத்வர்யு போற்றினால், அதனால் வரும் நட்புத் தன்மையால் அங்கிரஸர்களின் துதிகள் எங்கும் ஒரே திசையில் செல்லுகின்றன. துதியைக் கூறுபவனுக்கு அவன்–வருணன்-பழைய வழியைப் போல் இன்பத்தை அளிப்பானாக.

26. வருணன் சலங்களோடிருப்பவன். அவனைத் தேவர்கள் பின்பற்றுகிறார்கள். உத்தம வம்சத்திலிருந்து வந்தவன் என இங்ஙனம் வணக்கத்தோடும் சூக்தங்களோடும் போற்றப்படும் அவன், எங்களை எங்களுடைய

துதிகளுக்காகவும், தோத்திரங்களுக்காகவும் செல்வப் படுத்துவானாக. இப்பொழுது பசுவைக் கறக்கலாம். வழி திறந்திருக்கிறது.

27. போற்றத் தகுந்த தேவர்களே! பல திசைகளில் சென்று எங்களுக்கு உணவைத் தருபவர்களும், கலக்க மில்லாமல் பசுக்களைக் காண்பவர்களுமான நீங்கள், எங்களுடைய மகத்தான பாலனத்துக்காக ஒருமை யுடனிருங்கள். 9431

## 62. விசுவேதேவர்கள்

### 899. நாபா நேதிஷ்டன்

1. யக்ஞத்தோடும், தட்சிணையோடும் சேர்ந்துள்ள நீங்கள் இந்திரனுடையவும், அமிருதருவத்தினுடையவும் நட்பை அடைந்தீர்கள். அங்கிரஸர்களே! உங்களுக்கு மங்களம் தோன்றுக. பேரறிஞர்களே! மநுவின் புதல்வ னான என்னை உபசரியுங்கள்.

2. அங்கிரஸர்களே! பசுக்களை மீட்டவர்களும், வருஷம் முடிந்தவுடன் பலனான அசுரனை அழித்தவர் களும், எங்கள் பிதாக்களாயுமிருக்கும் உங்களுக்குத் தீர்க் காயுசு தோன்றுக. மநுவின் புதல்வனான என்னை உபசரி யுங்கள்.

3. அங்கிரஸர்களே! ருதத்தால் சூரியனை சோதி யிலே உயர்த்தியவர்களும், தாயான பூமியைப் பெருமைப் படுத்தியவர்களுமான உங்களுக்கு உத்தம ஸந்தானம் தோன்றுக. பேரறிஞர்களே! மநுவின் புதல்வனான என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்.

4. தேவப் புதல்வர்களே! ரிஷிகளே! அங்கிரஸர்-களே! இந்த நாபநேதிஷ்டன் யக்ஞஞ் செய்பவனுடைய மனையிலே உங்களுக்கு இந்த மங்கள மொழியைக் கூறு கிறான். செவியுறுங்கள். அங்கிரஸர்களே உங்களுக்கு உத்தம தேவ ஒளி தோன்றுக. பேரறிஞர்களே! மநுவின் புதல்வனான என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்.



5. இந்த ரிஷிகள் வெவ்வேறு ரூபங்களுள்ளவர்கள். ஆனால் கம்பீரச் செயல்களை நடத்துபவர்கள். அக்கினி யின் புதல்வர்களாகப் பிறந்த அவர்கள் அங்கிரஸர்கள். 9436

6. பல ரூபங்களுள்ள அவர்கள் அக்கினியிலிருந்தும், சோதியிலிருந்தும் தோன்றினார்கள். தவக்வனும், தசக் வனுமான முதல் அங்கிரஸன் தேவர்களோடு சேர்ந்து எனக்குச் செல்வத்தை அளிக்கிறான்.

7. அவிகளை ஏற்றுக்கொள்பவர்கள்—விசுவேதேவர்-கள் இந்திரனைத் துணைவனாக அடைந்து எனக்குப் பசுக் களும், கோக்களும் நிறைந்த கோசாலைகளைத் திறந்துவிட் டார்கள். பூரணமாய் வளர்ந்த ஆயிரம் பசுக்களை அளித் தார்கள். அவர்களின் நடுவே புகழை அடைந்தார்கள்.

### ஸாவர்ணியின் தானம்

8. எனக்கு உடனே நூறு குதிரைகளையும், ஆயிரம் பசுக்களையும் அளிக்கும் இந்த மநுவான ஸாவர்ணி பிரஜை களோடு தோன்றுக. நன்கு ஈரப்பட்ட விதையைப்போல் செழிக்க.

9. தானத்திலே சோதியின் உச்சியைப் போல் உயர்ந்துள்ள அவனைத் தானத்தால் அணுக இயலாது. ஸாவர்ணியின் தானம் நதியைப்போல் பரந்து இருக்கிறது.

10. யதுவும், துர்வனும், ஸாவர்ணியின் போகத்துக் குப் பசுச் செல்வங்களையும், அநுகூலமாய்ப் பணிபுரியும் இரு தாஸர்களையுந் தந்தான்.

11. கிராமத்தின் தலைவனும், ஆயிரம் பசுக்களை அளித்தவனுமான மநு, எப்பொழுதும் துன்பத்தில் ஆகாம லிருப்பானாக. அவனுடைய தானத்தின் புகழ் சூரியனோடு சேர்ந்து பரவுக. ஸாவர்ணியின் உணவை அநுபவிப்பவர் களும், களைப்பற்றவர்களுமான நாங்கள், அவனுடைய ஆயுளைத் தேவர்கள் நீடிப்பார்களாக எனத் தேவர்களைப் போற்றுகிறோம். 9442

# 63. விசுவேதேவர்கள்

## 900. கயன்பிளாதன்

1. வெகுதூரத்திலிருந்து வந்து மனிதர்களோடு தங்கள் பந்துத் தன்மையைப் புலப்படுத்துபவர்களும், மனிதர்களால் பிரியப்படுபவர்களுமான தேவர்கள் விவஸ்வதனுடைய புதல்வனான மநுவின் வம்சங்களைத் தாங்குகிறார்கள். நஹுஷனுடைய புதல்வனான யயாதியின் தருப்பையில் அமர்ந்திருக்கும் அவர்கள் எங்களிடம் அனுகூலமாய்ப் பேசுவார்களாக.

2. தேவர்களே! உங்களுடைய நாமங்கள் எல்லாம் வந்திக்கத் தக்கவை. போற்றத் தக்கவை. யஜிக்கத் தக்கவை. நீங்கள் சோதியிலிருந்தோ, வானிலிருந்தோ புவியிலிருந்தோ தோன்றினாலும், இந்த யக்ஞத்திலே என் அழைப்பைக் கேளுங்கள்.

3. எந்தத் தேவர்களுக்குத் தாயான புவி, தன் இனிமை நிறைந்த பாலைப் பொழிகிறாளோ, மேகம் சூழ்ந்துள்ள அதிதியான சோதி அமுதத்தை அளிக்கிறாளோ, எந்த ஆதித்தியர்களுக்குத் துதியே பலமாயிருக்கிறதோ, மழைகளைத் தருபவர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களுமான அவர்களுக்கு உங்களுடைய ஸ்வஸ்திக்காக ஸ்தோமத்தை அளியுங்கள்.

4. எப்பொழுதும் தூங்காமல் மானிடர்களைப் பார்ப்பவர்களும், துதியாருகர்களுமான தேவர்கள், மகத்தான அமரத்தன்மையை அடைந்தார்கள். சோதித் தேர்களிலே செல்பவர்களும், ஒப்பில்லாத ஞானமுள்ளவர்களும், பாவமில்லாதவர்களுமான அவர்கள் சோதியின் உச்ச ஸ்தானத்திலே மானிடர்களின் நன்மைக்காக வசிக்கிறார்கள்.

5. அனைவர்க்கும் அரசர்களும் மிக்க உயர்ந்தவர்களும், தடைபடாதவர்களும், சோதியில் வசிப்பவர்களுமான தேவர்கள், யக்ஞத்துக்கு வந்திருக்கிறார்கள். ரிஷியே! மகத்தான ஆதித்தியர்களையும், அதிதியையும், ஸ்வஸ்திக்காக வணக்கத்தோடும் தோத்திரங்களோடும் போற்றவும். 9447



6. அறிஞர்களே! விசுவேதேவர்களே! நீங்கள் எத்தனை தேவர்களிருந்தாலும், நீங்கள் விரும்பும் ஸ்தோமத்தை எவன் கூறுகிறான்? பலரைப் பிறப்பிக்கும் தேவர்களான உங்களுக்கு, எங்களுடைய நன்மைக்காக எங்களைத் துன்பத்திலிருந்து கடத்துவதற்குரிய யக்ஞத்தை எவன் கற்பிப்பான்?

7. மநுவால் அனல் சொலிப்பிக்கப்பட்டு மனத்தோடும், ஏழு ஹோதாக்களோடும், முதல் யக்ஞம் அளிக்கப்பட்ட ஆதித்தியர்களான நீங்கள், எங்களுக்கு அபயமான சுகத்தை அளியுங்கள். சுவஸ்திக்குச் சுலபமாய்ச் செலுத்தும் சுகவழிகளைப் புலப்படுத்துங்கள்.

8. அசையும் அசையாத எல்லா உலகத்தையும் அரசுபுரிபவர்களும், அனைத்தையும் அறிபவர்களும், பேரறிஞர்களுமான நீங்கள், எங்களுடைய க்ஷேமத்துக்காக நாங்கள் செய்த செய்யாத பாவத்திலிருந்து எங்களை இன்று விடுவியுங்கள்—கடத்துங்கள்.

9. நாங்கள் போர்களிலே செவிச்செல்வனான இந்திரனையும், துக்கத்தை நீக்கும் சோதியின் எல்லாத் தேவப்படையையும், செல்வத்தைப்பெற அக்கினியையும், மித்திரனையும்; வருணனையும், சுவஸ்திக்காக சோதியையும், பகனையும், மருத்துக்களையும், புவியையும் அழைக்கிறோம்.

10. தாங்கள் எங்கள் ஸ்வஸ்திக்காக, நன்கு கடத்துவதும், குற்றமற்றதும், பரந்திருப்பதும், நல்ல சுகத்தையளிப்பதும், நன்கு செலுத்துவதும், அதிதியும், நல்ல துடுப்புக்களுள்ளதும், தீமையற்றதும், தேயாமலிருப்பதும், கப்பலைப்போலிருப்பதுமான சோதியிலே ஏறுவோமாக. 9452

11. துதியாருகர்களான விசுவேதேவர்களே! நாங்கள் பாலனமாக எங்களுக்கு அநுகூலமாய்ப் பரிந்து பேசுங்கள். கொடுமையான வறுமையிலிருந்து எங்களைப் பாலியுங்கள். எங்களுடைய பாலனத்துக்காகவும், சுவஸ்திக்காகவும், எங்கள் துதியைச் செவியுறும் தேவர்களாம் உங்களை நாங்கள் சத்தியமான துதியால் அழைப்போமாக.

12. எங்களிடமிருந்து நோயை நீக்குங்கள். அனுஹூதியையும் அற்பத்தனத்தையுமகற்றுங்கள். துன்புறுத்த விரும்புபவர்களின் பகைமையை விலக்குங்கள். துவேஷிப்பவர்களைத் தூரத்திலே தள்ளுங்கள். தேவர்களே ! சுவஸ்திக்காக மிக்க சுகத்தை அளியுங்கள்.

13. ஸ்வஸ்திக்கு எல்லாத் தீமைகளையும் நன்னெறிகளோடு ஆதித்தியர்களால் கடத்தப்படும் மனிதன் துன்பரகிதனாகி செழிக்கிறான். கடமைகளை நிறைவேற்றிய பிறகு பிரஜைகளோடு பெருகுகிறான்.

14. தேவர்களே ! எங்களுக்கு உணவை அளிக்க உங்களால் பாலிக்கப்படும் தேரிலே, மருத்துக்களே ! குவிக்கப்பட்டுள்ள செல்வத்துக்காகப் போரிலே உங்களால் பாலிக்கப்படும் தேரிலே நாங்கள் ஏறுவோமாக. இந்திரனே ! நாங்கள் எங்கள் சுவஸ்திக்காகக் காலையிலே செல்வதும், விரும்பத் தகுந்ததும், தடைபடாததுமான தேரிலே ஏறுவோமாக.

15. மருத்துக்களே ! எங்களுக்கு வழிகளிலே சுவஸ்தியைச் செய்யுங்கள். பாலைவனங்களிலும்., சலங்களிலும், எதிர்க்கும் படைகளின் பலத்தின் நடுவிலும் சுவஸ்தியைச் செய்யுங்கள். புதல்வனைத் தரிக்கும் கருப்பாசயங்களிலும் சுவஸ்தியைச் செய்யுங்கள். செல்வங்களை சம்பாதிக்கவும்· சுவஸ்தியை அளியுங்கள்.

16. உத்தம வழிக்கு சுவஸ்தியைத் தருபவனும், விரும்பத் தகுந்த யக்ஞத்துக்குச் செல்லும் செல்வியுமான



பூமி எங்கள் மனையைக் காப்பாளாக. அவள் நாங்கள் செல்வதற்குரிய வழியிலே எங்களைப் பாலிப்பாளாக. தேவர்களால் பாலிக்கப்படும் அவள் எங்களுக்கு இனிய இருப்பிடமாகுக.

17. விசுவேதேவர்களே ! ஆதித்தியர்களே ! அதிதியே ! பிலதியின் மகனான அறிஞன்–கயன்–இங்ஙனம் உங்களைப் போற்றினான். எந்தத் தேவ சனங்களையும், தேவர்களின் அமுத கணத்தையும் போற்றினால் சனங்கள் செல்வபதிகளாகிறார்களோ அவர்கள் கயனால் போற்றப்பட்டார்கள். 9459

## 64. விசுவேதேவர்கள்

### 901. கயப்பிளாதன்

1. யக்ஞத்திலே செவியுறும் தேவர்களின் நடுவே எவனுக்கு எங்ஙனம் நாங்கள் போற்றுவதற்குரிய நாமத்தைக் கூறுவோம் ? எங்களை எவன் சுகப்படுத்துவான். எவன் இன்பத்தைத் தருவான். எவன் எங்கள் பாலனத்துக்கு வருவான் ?

2. என் இருதயத்தினுள் பாலிக்கப்படும் விருப்பங்கள் அவனைப் போற்ற இயங்குகின்றன. எங்கள் விருப்பங்கள் தேவர்களை விரும்புகின்றன. எங்களால் கூறப்பட்டு தேவர்களிடம் செல்லுகின்றன. அவர்களை அன்றி சுகப்படுத்துபவன் வேறு எந்தத் தேவனுமில்லை. தேவர்களிலே என் விருப்பங்கள் நிலைக்கின்றன.

3. நான் துதிகளோடு நராசம்ஸனையும், பூஷாவையும், கிரகிக்கப்படாதவனும், ரிஷிகளால் சொலிப்பிக்கப்பட்டவனுமான அக்கினியைத் துதிக்கிறேன். நான் சூரியனையும் சந்திரனையும், இருபட்சங்களையும், சோதியிலுள்ள யமனையும், திரிதனையும், வரதனையும், உஷையையும், இரவையும், அசுவினிகளையும் துதிக்கிறேன்.

4. கவியான அக்கினி எங்ஙனம் பலரால் போற்றப்படுகிறான் ? எந்தப் பாக்களாலே ? பிரகஸ்பதி மங்களத்

துதிகளால் போற்றப் படுகிறான். தனிமையாய்ச் செல்லும் அஜன் நல்ல அழைப்புகளாலும், ரிக்குகளாலும் போற்றப் படுகிறான். அஹிர்புத்னியன் எங்கள் அழைப்பைச் செவியுறுவானாக.

5. அதிதியே! நீ தட்சனுடைய – சூரியனுடைய – சன்மத்திலே அவனுடைய விரதத்திலே அரசர்களான மித்திரனையும், வருணனையும் யக்ஞத்திலே போற்றுகிறாய். நியதகதியுள்ளவனும், பலருக்கு இன்பத்தைத் தருபவனும் ஏழு ஹோதாக்களோடுமுள்ள அரியமான் பல ரூபங்கள் உள்ள பிராணிகளிடஞ் செல்லுகிறான். 9464

6. அழைப்புக்களைச் செவியுறுபவர்களும், வலியவர்களும், வழியிற் துரிதமாய்ச் செல்பவர்களுமான தேவர்களின் குதிரைகள் எல்லாம் எங்கள் மொழிகளைக் கேட்பார்களாக. யக்ஞத்திலே போல் தாமாகவே ஆயிரங்களை அளிப்பவர்களும், போரிலே மகத்தான செல்வத்தை ஜயித்தவர்களுமான அவர்கள் கேட்பார்களாக.

7. வழிபடுபவர்களே! அறிஞர்களும், ஒருமனமுள்ளவர்களும், தேவர்களுமான தன் தேரை இணைக்கும் வாயுவும், புரந்தீயும், பூஷாவும், ஸவிதா தோன்றுங்கால் யக்ஞத்தைப் போற்ற, அவர்களுடைய நட்பைப் பெற அவர்களைத் துதிகளால் முற்படுத்துங்கள்.

8. நாங்கள் பாலனத்துக்காக மூவேழு பாயும் நதிகளையும், அவற்றின் மகத்தான சலங்களையும், மரங்களையும், மலைகளையும், அக்கினியையும், கிருசானுவையும், விற்காரர்களையும், திஷ்யனையும் எங்கள் கழகத்துக்கு அழைக்கிறோம். நாங்கள் துதிப்பவர்களின் நலத்துக்காக ருத்திரத் துதிக்கு அருகனான ருத்திரனையும் அழைக்கிறோம்.

9. மிக்கப் பெரிய நதிகளான ஸரஸ்வதியும், ஸரயும், ஸிந்துவும் தங்கள் அலைகளோடு எங்கள் பாலனத்துக்கு வருவார்களாக. தேவமாதாக்களும், ஊக்கப்படுத்து



பவர்களுமான சலங்கள் நெய்யோடும் தேனோடுங் கலந்த தங்கள் சலத்தை எங்களுக்களிப்பார்களாக.

10. மகத்தாய்ப் பிரகாசிக்கும் தாய் எங்களைக் கேட்பாளாக. தேவர்களோடு தந்தையான துவஷ்டாவும் தேவப் பத்தினிகளும் எங்கள் மொழிகளைக் கேட்பார்களாக. ரிபுக்ஷணனும், வாஜனும், இரதஸ்பதியும், பகனும், மகிழும் துதியாருக மருத்துக்களும் துதிப்பவர்களைப் பாலிப்பார்களாக. 9469

11. மருத்துக் கணங்களின் இனிய தோற்றம், உணவு நிறைந்துள்ள மனையைப் போலிருக்கிறது. ருத்திரனுடைய புதல்வர்களான மருத்துக்களின் அநுகூல மனம் செல்வத்தைத் தருகிறது. நாங்கள் சனங்களின் நடுவே பசுக்களில் புகழுள்ளவர்களாயிருப்போமாக. தேவர்களே! நாங்கள் எப்பொழுதும் யக்ஞ அவியோடு உங்களிடம் வருவோமாக.

12. மருத்துக்களே! இந்திரனே! தேவர்களே! வருணனே! மித்திரனே! நீங்கள் எங்களுக்கு அளித்த அறிவைப் பாலால் கன்றைப்போல் பெருக்குங்கள். நீங்கள் என் துதிகளை உங்கள் தேரிலே குவித்திருக்கிறீர்கள்.

13. மருத்துக்களே! நீங்கள் இந்த பந்துத்வத்தை மீண்டும் நினைப்பதில்லையா? பந்துத்தன்மையை அடிக்கடி புலப்படுத்துங்கள். நாங்கள் அவிகளை அளிக்க முதலில் கூடும் இடத்திலே அதிதி எங்களுக்குப் புவியின் நாபியிலே மனிதர்களோடு பந்துத்தன்மையை யளிப்பாயாக.

14. இரு பெரியார்களும், தாய்மார்களும், தேவிகளும், துதியாருகர்களுமான சோதியும் புவியும், தேவர்களின் குலத்தோடு வருகிறார்கள். சோதியும் புவியும் தேவர்களையும், மனிதர்களையும், பலவித போஷணங்களால் தாங்குகிறார்கள். அவர்கள் பிதுருக்களோடு சேர்ந்து மிருந்தரேதஸைப் பொழிகிறார்கள்.

15. பிரகஸ்பதியும், அழியாமலிருப்பதும், தேவர்களைப் போற்றுவதுமான குரல் விரும்பத் தகுந்த எல்லாச் செல்வத்தையுமடைகிறது. அக்குரலின் எழுச்சியால் இனிய ஸோமத்தைப் பிழியும் மகத்தான கல் போற்றப் படுகிறது. துதிப்பவர்கள் தங்கள் துதிகளால் தேவர்களை யக்ஞத்தை விரும்புபவர்களாகச் செய்கிறார்கள். 9474

16. கவியும், பல துதிகளைக் கூறுபவனும், ருதங்களை அறிபவனும், செல்வத்தை விரும்புபவனும், விப்பிரனுமான கயன், துதிகளாலும், தோத்திரங்களாலும், சோதியில் தோன்றும் தேவர்களைப் போற்றுகிறான்.

17. விசுவேதேவர்களே! ஆதித்தியர்களே! அதிதியே! பிலதியின் மகனான அறிஞன்-கயன்-இங்ஙனம் உங்களைப் போற்றினான். எந்தத் தேவ சனங்களையும், தேவர்களின் அமுத கணத்தையும் போற்றினால் சனங்கள் செல்வபதிகளாகிறார்களோ அவர்கள் கயனால் போற்றப் பட்டான். 9476

# 65. விசுவேதேவர்கள்

## 902. வசுகர்ணன்–வாசுக்கிரன்

1. அக்கினியும், இந்திரனும், வருணனும், மித்திரனும், அரியமானும், வாயுவும், பூஷாவும், ஸரஸ்வதியும், ஆதித்தியர்களும், விஷ்ணுவும், மருத்துக்களும், மகத்தான சோதியும், ஸோமனும், உருத்திரனும், அதிதியும், பிரமணஸ்பதியும் இசைந்து, பரந்த வானைத் தங்கள் பலத்தால் நிரப்பினார்கள்.

2. நல்லவர்களின் தலைவர்களும், ஒரே ஸ்தானத்தில் இருப்பவர்களும், விருத்திரனைக் கொல்லும் போர்களிலே பரஸ்பரம் ஊக்கமளித்துக்கொள்பவர்களுமான இந்திரனும் அக்கினியும், தன் மகிமையை இயக்கும் நெய்ப் புகழுள்ள ஸோமனும் பரந்த வானைத் தங்கள் பலத்தால் நிரப்பினார்கள்.



3. ருதமறியும் நான், ஸ்வய வலிமையால் வலியர்களும், எதிர்ப்பற்றவர்களும், ருதத்தால் உயர்ந்தவர்களுமான இந்தத் தேவர்களுக்கு ஸ்தோமங்களைக் கூறுகிறேன். பலவித செல்வங்களுள்ள அவர்கள் சுந்தரமான சலமேகத்தைப் பொழிவார்களாக. நட்புச் செயல்களுள்ள அவர்கள் எங்களுடைய மேன்மைக்குச் செல்வத்தை அளிப்பார்களாக.

4. அவர்கள் தங்கள் பலத்தால் ஒளித் தலைவனும் சூரியனையும், வானின் விண் சுடர்களையும், சோதியையும் புவியையும், அகண்ட ஆகாயத்தையும் தாங்குகிறார்கள். ஏழைகளுக்கு உணவை அளிப்பவர்கள் போல் அவர்கள் வழிபடுபவர்களை உயர்த்துகிறார்கள். ஈகையுள்ள தேவர்கள் மானிடனுக்குச் செல்வத்தைத் தருகிறார்கள். அவர்கள் யக்ஞத்திலே போற்றப்படுகிறார்கள்.

5. விழித்துள்ள மனமுள்ளவர்களும், தருமத்தால் பிரகாசிக்கும் மகத்தான தேகமுள்ளவர்களும், நாடும் இரு உலகங்களை அதீனத்தில் அடைந்திருப்பவர்களும், அரசர்களும், தானமுள்ளவர்களுமான மித்திரா வருணர்களைப் போற்றவும். 9481

6. பாலை அளிப்பவளும், யக்ஞத் தலைவியுமான பசு, அழைக்கப்படாமலேயே நியமிக்கப்பட்ட இடத்துக்குச் செல்லுகிறாள். என்னால் போற்றப்படும் அவள் அவிகளை அளிக்கும் எனக்கும், தான மனமுள்ள வருணனுக்கும், மற்ற தேவர்களுக்கும் பாலையளிப்பாளாக.

7. யக்ஞத்தை வளர்ப்பவர்களும், அக்கினி நாக்குள்ளவர்களுமான தேவர்கள், சோதியிலே பரவி, யக்ஞ ஸ்தானத்திலே அமர்ந்து, சிந்தனையிலாகிறார்கள். அவர்கள் சோதியைத் தாங்கி, தங்கள் பலத்தால் சலத்தைத் தோற்றுவிக்கிறார்கள். அவர்கள் யக்ஞத்தைப் புலப்படுத்தி அதனால் தங்கள் தேகங்களை அலங்காரஞ் செய்து கொள்கிறார்கள்.

8. பூர்வத்திலே பிறந்தவர்களும், ஒரே மனையுள்ளவர்களும், சர்வ வியாபகர்களும், தந்தைகளுமான சோதியும் புவியும், யக்ஞ ஸ்தானத்திலே அமருகிறார்கள். ஒரே விரதமுள்ள அவர்கள் துதியாருகனான வருணன் மீது, நெய்யோடு கலந்த சலத்தைத் தெளிக்கிறார்கள்.

9. விருஷபர்களான பர்ஜன்யனும், வாதனும், சலத்தைச் செலுத்தும் இருவரான இந்திரனும் வாயுவும், வருணனும் மித்திரனும், அரியமானும் எங்குமிருக்கிறார்கள். நாங்கள் தேவர்களான ஆதித்தியர்களையும், அதிதியையும், புவியிலோ, சோதியிலோ, சலங்களிலோ வசிக்கும் தேவர்களையும் அழைக்கிறோம்.

10. ரிபுக்களே! இந்திரனுடைய நண்பனும், இங்கு உங்கள் சுவஸ்திக்காகத் துவஷ்டாவையும், வாயுவையும், இரு ஹோதாக்களான அசுவினிகளையும், உஷையையும், பிரகஸ்பதியையும், விருத்திரனைக் கொல்லும் அறிஞனையும், இங்கு செலுத்துபவனுமான ஸோமனிடம், செல்வத்தை விரும்பும் நாங்கள் செல்வத்தை விரும்புறோம். 9486

11. உணவையும், பசுக்களையும், குதிரைகளையும், ஓஷதிகளையும், மரங்களையும், புவியையும், மலைகளையும், சலங்களைத் தோற்றுவிப்பவர்களும், சோதியிலே சூரியனை உயர்த்துபவர்களும், ஈகையுள்ளவர்களும், புவியிலே ஆரிய விரதங்களைப் பாலிப்பவர்களுமான தேவர்கள் எங்கும் இருக்கிறார்கள்.

12. அசுவினிகளே! நீங்கள் புஜ்யுவைத் துன்பத்திலிருந்து விடுவித்தீர்கள். நீங்கள் வத்திரிமதிக்குப் புதல்வனான சியாவனை அளித்தீர்கள். நீங்கள் கமத்யுவை விமதனுக்கு மனைவியாக அளித்தீர்கள். நீங்கள் விசுவகனிடம் இழந்த மகனைச் சேர்ப்பித்தீர்கள்.

13. ஆயுதமுள்ளவனும், கர்ச்சிப்பவனுமான வாக்கும், சோதியைத் தாங்குபவனான அஜஏகப்பாதனும், கடலும், வானின் சலங்களும், விசுவேதேவர்களும், செயல்



களோடும் புறந்தீயோடுமுள்ள ஸரஸ்வதியும் என்னுடைய மொழிகளைக் கேட்பார்களாக.

14. செயல்களோடும், பலவித அறிவோடுள்ளவர்களும், மனிதர்களுடைய யக்ஞத்திலே போற்றத்தகுந்தவர்களும், அமுதர்களும், சத்தியத்தை அறிபவர்களும், அளிக்கப்படும் அவியைப் போற்றுபவர்களும், யக்ஞத்துக்குச் சேர்ந்து வருபவர்களும், அனைத்தையும் அறிபவர்களுமான விசுவேதேவர்கள், எங்களுடைய எல்லாத் துதிகளையும், மகத்தான தோத்திரத்தையும், ஸ்தோமத்தையும் ஏற்றுக்கொள்வார்களாக.

15. வசிஷ்ட வமிசத்தில் வந்த நான் எல்லா உலகங்களையும் ஜயிக்கும் அமிருதர்களான தேவர்களைப் புகழ்ந்தேன். அவர்கள் இன்று எங்களுக்குப் பரந்த புகழை அளிப்பார்களாக. தேவர்களான நீங்கள் எங்களை சதா சுவஸ்திகளோடு பாலியுங்கள். 9491

## 66. விசுவேதேவர்கள்

### 903. வசுகர்ணன் – வாசுக்கிரன்

1. நான், மிக்க உணவைத் தருபவர்களும், சோதியைச் செய்பவர்களும், பேரறிஞர்களும், செல்வங்கள் எல்லாம் நிறைந்தவர்களும், அமுதர்களும், இந்திரனைத் தலைவனாக உள்ளவர்களும், ருதத்தால் வளர்ந்தவர்களும், மிக்கச் செழித்தவர்களுமான தேவர்களை யக்ஞத்தின் ஸ்வஸ்திக்காக அழைக்கிறேன்.

2. நாங்கள், இந்திரனால் ஊக்கமடைந்து, வருணனால் கற்பிக்கப்பட்டு, சூரியனுடைய சோதியிலே பயமடைந்தவர்களும், மகவானைச் சூழ்ந்திருப்பவர்களுமான மருத்துக்களின் படைக்குத் துதியைக் கூறுகிறோம். அறிஞர்கள் யக்ஞத்தைப் பிறப்பிக்கிறார்கள்.

3. இந்திரன் வசுக்களோடு எங்கள் மனையைப் பாலிப்பானாக. அதிதி ஆதித்தியர்களோடு எங்களுக்கு

சுகத்தைத் தருவாளாக தேவனுன ருத்திரன் ருத்திரர் களோடு எங்களை சுகப்படுத்துவானுக. துவஷ்டா தேவ பத்தினிகளோடு எங்களைச் செல்வப்படுத்த அனுகூலமா யிருப்பாளுக.

4. அதிதியும், சோதியும், புவியும், மகானுன சத்திய னும், அக்கினியும், இந்திரா விஷ்ணுக்களும், மருத்துக் களும், மகத்தான சூரியனும் எங்குமிருக்கிருர்கள். நாங்கள் இந்தத் தேவர்களையும், தேவர்களான ஆதித் தியர்களையும், நல்ல செயல்களுள்ள ஸவிதாவையும் எங்கள் பாலனத்துக்காக அழைக்கிருேம்.

5. மகத்தான செயல்களை நடத்துபவர்களும், அமி ருதர்களும், செல்வங்களையெல்லாம் அடைந்திருப்பவர் களுமான புலன்களோடுள்ள ஸரஸ்வானும், விரதங்களை ஏந்தும் வருணனும், பூஷாவும், விஷ்ணுவும், மகித்வ முள்ள வாயுவும், அசுவினிகளும் எங்களுக்குத் தீமையி லிருந்து முக்காப்புகளைத் தரும் மனையை அளிப்பார்களாக. 9496

6. எங்கள் யக்ஞம் வர்ஷிப்பதாயிருக்க. யக்ஞாருகர் களான தேவர்களும், வர்ஷிப்பவர்களாயிருப்பார்களாக. அவிகளை அளிப்பவர்களும், வர்ஷிப்பவர்களாயிருப்பார் களாக. யக்ஞத்தோடுள்ள சோதியும் புவியும் வர்ஷிப் பவர்களாயிருப்பார்களாக. பர்ஜன்யன் வர்ஷிப்பவனு யிருக்க. வர்ஷிக்கும் தோத்திரமுள்ளவர்களும் வர்ஷிப் பவர்களாயிருப்பார்களாக.

7. நான் உணவைப்பெற பலரால் போற்றப்படுபவர் களும், வர்ஷிப்பவர்களும், பொழிபவர்களுமான அக்கினி ஸோமர்களைப் போற்றுகிறேன். வர்ஷிப்பவர்களான அறிஞர்களால் தேவ யஜனத்தோடு போற்றப்படும் இவர்கள் எங்களுக்கு முக்காப்புகளுள்ள மனையை அளிப் பார்களாக.



8. விரதமேந்துபவர்களும், க்ஷத்திரியர்களும், யக்ஞத்தை நடத்துபவர்களும், மகத்தான சோதியுள்ள வர்களும், யக்ஞங்களைக் காப்பவர்களும், சத்தியத்தைக் பற்றுபவர்களும், எதிர்ப்பற்றவர்களுமான தேவர்கள் விருத்திரனேடு செய்த போரிலே சலங்களை விடுவித் தார்கள்.

9. தேவர்கள் சோதியையும் புவியையும், அவற்றிற் குரிய செயல்களோடும், சலங்களையும், ஓஷதிகளையும், போற்றுவதற்குரிய மரங்களையும் பிறப்பித்தார்கள். அவர் கள் வானத்தையெல்லாம் அதன் பாலனத்துக்காக ஒளி யால் நிரப்பினுர்கள். தேவர்கள் யக்ஞத்தைத் தங்க ளோடு ஐக்கியஞ் செய்துகொண்டு தங்களை எழில் செய்து கொண்டார்கள்.

10. சோதியைத் தாங்குபவர்களும், சத்தியத்தோடு பிரகாசிப்பவர்களும், நல்ல ஆயுதங்களை ஏந்துபவர்களும், மகத்தான இடிமுழக்கத்தை முழங்குபவர்களுமான வாத னும், பர்ஜன்யனும், சலங்களும், ஓஷதிகளும், எங்களு டைய மொழிகளைச் செழிப்பிப்பார்களாக. ஈகையனுன பகனும், வாஜினர்களும், அக்கினியும், வாயுவும், சூரிய னும் என்னுடைய அழைப்புக்கு வருவார்களாக. 9501

11. ஸமுத்திரமான ஸிந்துவும், வானமும், அனில மும், அஜரகபாதனும், மழை ஏந்தி முழங்கும் மேகமும் அஹிர்ப்புத்தினியனும் என் மொழிகளைக் கேட்பானுக. அறிஞர்களான விசுவேதேவர்கள் என் தோத்திரங்களைக் கேட்பார்களாக.

12. மானிடர்களான நாங்கள் தேவர்களுக்கு அவி யையளிக்க யக்ஞஞ் செய்பவர்களாயிருப்போமாக. பழைய யக்ஞத்தை வெற்றிக்குச் செலுத்துங்கள். ஆதித்தி யர்களே! ருத்திரர்களே! ஈகையுள்ள வசுக்களே! கூறப்படும் இந்தத் தோத்திரங்களை ஏற்றுக்கொள்ளுங்கள்.

13. நான் ருதத்தின் வழியிலே வெற்றியுடன் பழைய ஹோதாக்களும், தேவப் புரோகிதர்களுமான அக்கினியை

யும், ஆதித்தியனையும் பின்பற்றுகிறேன். நாங்கள் அருகிலிருக்கும் க்ஷேத்திரபதியையும், அமிருதர்களையும், கவனமின்மையற்றிருக்கும் விசுவேதேவர்களையும் வேண்டுகிறோம்.

14. பூர்வ ரிஷிகளைப் போல் தேவர்களைப் போற்றுபவர்களான வசிட்டர்கள், வசிட்டகுலத்தில் வந்தவர்கள், தந்தையைப்போல், வசிட்டனைப் போல்,ஸ்வஸ்திக்காகத் தோத்திரத்தைக் கூறினார்கள். தேவர்களே! நீங்கள் எங்களிடம் வந்து, நாங்கள் விரும்புவது போல் எங்களுக்குச் செல்வத்தை அன்புள்ள பந்துக்களைப் போல் அளியுங்கள்.

15. வசிஷ்ட வம்சத்திலே பிறந்த நான், எல்லா உலகங்களையும் ஜயிக்கும் அமிருதர்களான தேவர்களைப் புகழ்ந்தேன். அவர்கள் இன்று எங்களுக்குப் பரந்த புகழை அளிப்பார்களாக. தேவர்களான நீங்கள் எப்பொழுதும் எங்களை சுவஸ்தியோடு பாலியுங்கள். 9506

## 67. பிரகஸ்பதி

### 904. அயாஸ்ய ஆங்கிரஸன்

1. எங்கள் தந்தையான அங்கிரஸன், இந்தப் பெரிய ஏழு தலைகளுள்ள சத்தியத்திலிருந்து பிறந்த யக்ஞத்தை—தோத்திரத்தை—கண்டான். எல்லா சனங்களுக்கும் நண்பனாயிருக்கும் அயாஸ்யன் இந்திரனுக்குத் துதியைக் கூறுங்கால் நான்காவது தூய்மையான சூக்தத்தைப் பிறப்பித்தான்.

2. பிரகாசிப்பவனும், ஆற்றலுள்ளவனுமான அக்கினியின் வீரப் புதல்வர்களான அங்கிரஸர்கள், ஸத்திய துதியைக் கூறி, சரியாய்த் தியானஞ் செய்து, அறிவுள்ளதும், யக்ஞத்தை ஏந்துவதுமான பதத்தை ஏந்திக் கொண்டு துவக்கத்திலிருந்தே துதிக்கிறார்கள்.

3. அன்னங்களைப் போல் ஆரவாரிக்கும் நண்பர்களோடு—மருத்துக்களோடு—அசுரர்களுடைய கற்களால் கட்டப்பட்டு, பசுக்களைத் தடைசெய்திருந்த சுவர்களை உடைத்தவுடன் பிரகஸ்பதி, தேவர்களிடம் பசுக்களை எடுத்துச் செல்ல முழங்கினான். அனைத்தையும் அறிந்த அவன் தேவர்களைப் போற்றினான்; பாடினான்.



4. பிரகஸ்பதி இருட்டிலே சோதியைச் செலுத்த விரும்பி, குகையிலே கீழாகவுள்ள இருட்டினிடத்தில் நிற்கும் பசுக்களை இரு வழிகளாலும், மேலே நிற்பவையை ஒரு வழியாலும் வெளிப்படுத்தினான். அவன் அசுரர்களுடைய மூன்று கதவுகளையும் திறந்தான்.

5. பிரகஸ்பதி அசுர புவியினருகே சாய்ந்து மேற்புரத்தை உடைத்து உடனே வலனிடமிருந்து உஷையையும், சூரியனையும், பசுவையும் கைப்பற்றினான். அவன் சோதியைப் போல் இடித்து, துதியாருகனான சூரியனை வெளிப்படுத்தினான். 9511

6. ஒற்றைக் கையால் செய்வது போல், இந்திரன் தன் முழக்கத்தோடு பசுக்களைக் காப்பவனான வாலனை வீழ்த்தினான். பொழியும் பாலைத் தேடி, வியர்க்கும் தோழர்களோடு அவன் பாணியை அழவிட்டு அவனது பசுக்களைத் திருடினான்.

7. அவன் பிரகாசமான, விசுவாசமுள்ள, திருடப்பட்ட பொருட்களைப் பெற்ற நண்பர்களுடன் பசுவிலிருந்து பால் கறப்பவர்களைச் சிதறடித்தான். உஷ்ணத்தால் வியர்த்து பிரகஸ்பதி வலிமையும் வீரமுமுள்ள காட்டுப் பன்றிகளுடன் ஏராளமான செல்வத்தைக் கைப்பற்றினான்.

8. சத்திய மனத்தால் பசுக்களைத் தேடிய மருத்துக்கள் தங்கள் வீரச்செயல்களால் பிரகஸ்பதியைக் கோபதியாகச் செய்ய விரும்பினார்கள். பிரகஸ்பதி நிந்தையிலிருந்து தாமே பரஸ்பரம் பாலித்துக்கொள்பவர்களும், தாமே இணைந்துகொள்பவர்களுமான மருத்துக்களோடு சேர்ந்து, பசுக்களை விடுவித்தான்.

9. வர்ஷிப்பவனும், நடு வானிலே சிங்கத்தைப் போல் கர்ச்சிப்பவனும், ஜயிப்பவனுமான பிரகஸ்பதியைப் போற்றி நாம் அவனைச் சூரர்கள் ஜயிக்கும் போரிலே மங்களத்துதிகளோடு போற்றுவோமாக.

10 வர்ஷிப்பவனான பிரகஸ்பதி பலவிதமான உணவைப் பற்றும்போதும், சோதியிலே ஏறும்போதும், வடதிசையின் இடங்களிலே உயரும்போதும், அவனைப் பல திசைகளிலிருக்கும் தேவர்கள் சோதியை ஏந்தி, தங்கள் வாயால் போற்றுகிறார்கள். 9516

11. உணவையளிக்க எங்கள் துதியை உண்மைப் படுத்துங்கள். நீங்கள்–தேவர்கள்–உங்கள் சலனங்களால் உங்களைப் போற்றுபவனான என்னைப் பாலியுங்கள். எங்கள் பகைவர்கள் எல்லாம் மீண்டும் விலக்கப்படுவார்களாக. விசுவத்தை இன்புறுத்தும் சோதிபுவிகளே! எங்களுடைய இந்த மொழியைக் கேளுங்கள்.

12. இந்திரன் தன் மகத்வத்தால் பரந்துள்ளதும், சலமுள்ளதுமான மேகத்தின் தலையைப் பிளந்தான். அவன் அஹியைக் கொன்றான். அவன் ஏழு நதிகளைப் பெருகச் சய்தான். சோதிபுவிகளான நீங்கள் தேவர்களோடு சேர்ந்து எங்களைப் பாலியுங்கள். 9518

# 68. பிரகஸ்பதி

## 905. அயாஸ்ய ஆங்கிரஸன்

1. பக்குவத்தானியங்களிலிருந்து பறவைகளை விலக்கச் சத்தமிட்டு இறைக்கும் உழவர்களைப்போலும், கர்ச்சிக்கும் இடிமேகத்தின் முழக்கத்தைப்போலும், மேகங்களிலிருந்து விழும் தாரைகளின் சத்தத்தைப் போலும் துதிப்பவர்கள் பிரகஸ்பதியைப் போற்றுகிறார்கள்.

2. அங்கிரஸனின் புதல்வன் தன் ஒளியால் பரவி துதிப்பவர்களைப் பசுக்களோடு சேர்த்தான். சனங்களோடு தன் காந்தியைச் சேர்க்கும் மித்திரனை–சூரியனைப் போல் அவன் கணவனையும் மனைவியையும் சேர்த்தான். பிரகஸ்பதியே! நீ உன்னுடைய காந்திகளை உன்னை வழிபடுபவர்களுக்குப் போருக்குக் குதிரைகளைப்போல் செலுத்தவும்.



3. பிரகஸ்பதி சதா செல்லுபவையும், தேடப்படுபவையும், விரும்பத்தகுந்தவையும், நல்ல நிறமுள்ளவையும், புகழுக்குரிய வடிவமுள்ளவையும், சுத்தமான பாலைத் தருபவையுமான பசுக்களை மலைகளிலிருந்து, களஞ்சியங்களிலிருந்து, தானியத்தை வெளிப்படுத்தும் மனிதர்களைப் போல் வெளிப்படுத்தி, தேவர்களிடம் சேர்க்கிறான்—எங்கும் மழையைப் பொழிகிறான்.

4. புவியை சலத்தால் நனைத்து, சலமேகத்தைக் கலைத்து, துதியாருகனான பிரகஸ்பதி சோதியிலிருந்து உற்கையைப்போல் மலையிலிருந்து பசுவை எழுப்பி மழையால் புவியைப் பிளக்கும் பர்ஜன்யனைப்போல் புவியின் சருமத்தைப் பசுக்களின் குளம்புகளோடு பிளந்தான்.

5. அவன் இருளை நடுவானிலிருந்து சோதியால் சலத்திலிருந்து அல்லியை நீக்கும் காற்றைப் போல் விலக்கினான். வலனுடைய மேகத்தைப் பற்றும் காற்றைப் போல் பிரகஸ்பதி தனக்கே பசுக்களைச் சேர்த்துக் கொண்டான். 9523

6. பிரகஸ்பதி அனலைப்போல் எரியும் ரசிமிகளால் துன்புறுத்தும் வலனுடைய ஆயுதத்தை அழித்தபோது, அவன் படைகளால் சூழப்பட்டிருந்த வலனைப் பற்களால் சூழப்பட்ட உணவைத் தின்னும் நாக்கைப்போல் புசித்தான். பசுக்களின் மறைந்துள்ள இடத்தைப் புலப்படுத்தினான்

7. குகையினுள் தங்கள் இடத்தில் கதறிய பசுக்களின் அந்த நாமத்தைப் பிரகஸ்பதி அறிந்தவுடன், தன் சுய பலத்தால் பாறையிலிருந்து பசுக்கூட்டங்களைப்

பறவையின் அண்டங்களிலிருந்து கருவை வெளிப்படுத்துபவன் போல் புலப்படுத்தினான்.

8. பிரகஸ்பதி அடைக்கப்பட்டிருந்த பசுக்களை அற்ப சலாசயத்திலே மீனைக் கவனிக்கும் ஒருவனைப் போல் சுற்றிலும் பார்த்தான். அவன் வலனைக் கர்ச்சனையோடு பிடித்தான். மரத்திலிருந்து பாண்டத்தைப்போல் வெட்டி அவனைப் பற்றினான்.

9. பிரகஸ்பதி உஷையையும், சூரியனையும், அக்கினியையுங் கண்டான். அவன் சோதியால் இருளை நீக்கினான். பசுக்களால் சூழப்பட்டிருந்த வலனுடைய குகையிலிருந்து, என்பிலிருந்து மச்சையைப் பற்றுபவன் போல் பசுக்களைக் கிரகித்தான்.

10. வலன், பிரகஸ்பதியால் எடுத்துச் செல்லப்பட்ட பசுக்களுக்குப் பனியால் இழக்கப்பட்ட இலைகளுக்கு வருந்தும் மரங்களைப் போல் வருந்தினான். அவன் எப்பொழுதும் செய்யாமலிருந்த செயலை நடத்தினான். ஒப்பற்ற செயலைச் செய்தான். அதனால் சூரியனும் சந்திரனும் மாறி மாறி எழுகின்றன.

11. பாலிக்கும் தேவர்கள் நட்சத்திரங்களால் சோதி மண்டலத்தைக் கருப்புக் குதிரையைப் பொன் சாமான்களால் வண்ணப்படுத்தும் மனிதர்களைப் போல் அலங்கரித்தார்கள். அவர்கள் இரவிலே இருட்டையும், பகலிலே ஒளியையும் ஸ்தாபித்தார்கள். பிரகஸ்பதி மலையைப் பிளந்தான். பசுக்களை மீட்டான்.

12. நாங்கள் இந்த வணக்கத்தை நடுவானிலிருப்பவனும், கிரமமாய் மந்திரங்களைக் கூறுபவனுமான பிரகஸ்பதிக்கு அளித்தோம். அவன் எங்களுக்கு, பசுக்களோடு, குதிரைகளோடு, புதல்வர்களாடு, ஆட்களோடு உணவை அளிப்பானாக. 9530



# 69. அக்கினி

## 906. ஸௌமித்திரன்–வத்யசிரவன்

1. அக்கினியின் தரிசனம் வத்ரியசுவனுக்கு மங்களமளிப்பதாகுக. அவனுடைய தலைமைத் தன்மையும் மங்களமாகுக. அவனுடைய வருகைகள் அநுகூலமாகுக. ஸௌமித்திர சனங்கள் முதலில் அக்கினியைச் சொலிப்பித்து நெய்யாகுதி செய்து அக்கினி பிரகாசிக்குங்கால் அவன் போற்றப்படுகிறான்.

2. நெய் வத்ரியசுவனுடைய அக்கினியை வளர்க்க. நெய் அவனுடைய உணவாகுக. நெய்யே அவனைப் புஷ்டிப்படுத்துக. அவன் நெய்யால் ஆஹௌதமாகி மிக்க அதிகமாய்ப் பரவுகிறான். அவனில் நெய் பொழியப் படுங்கால் அவன் சூரியனைப் போல் பிரகாசிக்கிறான்.

3. அக்கினியே! உன்னுடைய, மநுவும் சுமித்திரனும் சொலிப்பிக்கப்பட்ட சுவாலை படை மிக்கப் புதியதாகுக. நீ செல்வமாய்ப் பிரகாசிக்கவும். நீ எங்களுடைய துதிகளைப் பற்றவும். நீ எங்களுடைய பகைவர்களின் பலத்தையழிக்கவும். எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

4. அக்கினியே! வத்ரியசுவனால் பூர்வத்தில் சொலிப்பிக்கப்பட்டு போற்றப்பட்ட நீ, இந்தத் தோத்திரத்தை ஏற்றுக்கொள்ளவும். ஏங்கள் யக்ஞங்களைப் பாலிப்பவனாயிருக்கவும். எங்கள் தேகங்களைப் பாலிப்பவனாயிருக்கவும். உன்னால் எங்களுக்கு அளிக்கப்பட்ட இந்த செல்வத்தைப் பாலிக்கவும்.

5. வத்ரியசுவ குலத்தில் வந்த அக்கினியே! நீ செல்வமுள்ளவனாயும், எங்கள் பாலகனாயுமிருக்கவும். எவனும் உன்னை எதிர்க்காமலிருப்பானாக. நீ பகை சனங்களை ஜயிப்பவன். ஸௌமித்திரனான நான் வத்யசிரவனுடைய பந்துக்களின் நாமங்களைப் போற்றுகிறேன். 9535

6. அக்கினியே! நீ சனங்களுக்கு நலத்தையளிக்கும் மலைச் செல்வங்களை ஜயித்தாய். நீ வலியர்களான ஆரியர்களின், தாஸர்களின் எதிர்ப் படைகளைத் தீரனுன வீரனைப் போல் ஜயித்தாய். பகைவர்களை ஜயிக்கும் அக்கினியே! போருக்கு விருப்பமுள்ளவர்களை ஜயிக்கவும்.

7. நீண்ட இழைகள் உள்ளவனும், மிக்க ரசிமிகள் உள்ளவனும், ஆயிரம் போர்வைகளிருப்பவனும், அவி முதலியவை நூறு நெய்யவிகளின் தலைவனும், மகானும், பிரகாசிப்பவர்களின் நடுவே மிக்கப் பிரகாசிப்பவனுமான இந்த அக்கினி, மனிதர்களால் போற்றப்படுகிறுன். அக்கினியே! தேவர்களை விரும்பும் சுத்திரர்கள் மீது பிரகாசிக்கவும்.

8. ஜாதவேதஸனே! இடைவிடாமல் ஆதித்தியனேடு சேர்ந்து அமுதத்தைக் கறப்பதும், பால் நிறைந்ததுமான பசு இருக்கிறது. அக்கினியே! தட்சிணைக்கருகர்களும், தேவர்களை விரும்புபவர்களுமான சுமித்திரர்களால் நீ சொலிப்பிக்கப்படுகிருய்.

9. ஜாதவேதஸனே! வத்ரியசுவ அக்கினியே! —அமுதர்களான தேவர்கள் உன்னுடைய மகிமையை அறிவித்தார்கள். மானிடப் பிரசைகள் எவன் அசுரர்களைக் கொல்வான் என உங்களிடம் முறையிட்டபோது நீ தலைவர்களோடும், உன்னுல் செழித்தத் தேவர்களோடுஞ் சேர்ந்து நீ தடை செய்தவர்களை ஜயித்தாய்.

10. அக்கினியே! வத்ரியசுவன் உன்னைப் போற்றி வேதியின் மீது உன்னை புதல்வனைத் தன் அங்கத்தின் மீது வைத்துக்கொள்ளும் தந்தையைப் போல் ஸ்தாபித்தான். தேவர்களில் மிக்க இளைஞனுயுள்ள நீ, ஸமிந்தனத்தால் இன்பமாகி, பழைய பகைவர்களை, யக்ஞம் தடுப்பவர்களை ஜயித்தாய்.

11. வத்ரியசுவனுடைய அக்கினி ஸோமத்தைப் பிழிந்த வீரர்களோடு அவனுடைய பகைவர்களை எப்பொழுதும் ஜயிக்கிறுன். சித்திரபானுவே! நீ சங்கிராமத்தைத் தகிக்கிருய். சுயமாகவே சக்தியை அடைந்தவன் தன் வலிய சத்ருவை அழிக்கிறுன்.



12. பூர்வத்திலிருந்தே விருத்திரர்களைக் கொல்லும் இவ்வக்கினி வத்ரியசுவனின் அவியால் சொலிப்பிக்கப்பட்டது. அவன் வணக்கத்தோடு போற்றப்படவேண்டும். வத்ரி வம்சத்தில் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியே! பந்துக்களும், பந்துக்களுமில்லாத எங்கள் சத்ருக்களை ஜயிக்கவும். 9542

## 70. ஆப்பிரீ சூக்தம்

### 907. சுமித்திரன் - வாத்திரியச்சிரவன்

#### ஸமிந்தனம்

1. அக்கினியே! இளாயின் இடத்தில்–வேதிகையில்–வைக்கப்பட்டுள்ள இந்த என்னுடைய ஸமிந்தனத்தை ஏற்றுக்கொள்ளவும். நெய் நிறைந்த சட்டுவத்தில் இன்புறவும். பேரறிஞனே! தினங்கள் எழிலோடு துலங்கும்போது நீ தேவர்களை யஜிப்பதற்காகப் புவியின் உச்சத்திலே எழுந்திருக்கவும்.

#### நராசம்ஸன்

2. தேவர்களை முந்தும் நராசம்ஸன் பலவித ரூபங்களுள்ள குதிரைகளோடு இங்கு வருவானுக. போற்றத் தகுந்தவனும், தேவர்களின் தலைவனுமான அக்கினி ருத வழியால் தோத்திரத்தோடு தேவர்களிடம் அவியைச் செலுத்துவானுக.

#### இளை

3. அவிகளை அளிக்கும் மனிதர்கள் நித்தியனுன அக்கினியை அவன் தூதக்கடமையைச் செய்ய வேண்டும் எனப் போற்றுகிருர்கள். நீ உன்னுடைய வலிய குதிரை

களோடும், சுலபமாய்ச் செல்லும் தேர்களோடும் எங்கள் அவியைத் தேவர்களிடம் செலுத்தவும். நீ இங்கு ஹோதாவாக அமரவும்.

தருப்பை

4. எங்களுடைய தருப்பை தேவர்கள் விரும்பத் தகுந்ததாகுக. முறுக்குள்ளவையும், கோணலாயுள்ளவையும், பிரிக்கப்பட்டு நீட்டப்படுக. அது நீளமாயிருக்க. நீண்டிருக்க. சுகந்தமாயிருக்க. தேவனே! தருப்பையே! நீ கோபமழிந்த மனத்தோடு யக்ஞத்தை விரும்புபவர்களும், இந்திரனைத் தலைவனுகவுமுள்ள தேவர்களை யழிக்கவும்.

கதவுகள்

5. கதவுகளே! சோதியின் உச்சமான உத்தம ஸ்தானத்தோடு சேர்ந்திருங்கள். அல்லது புவியின் அளவோடு இசைந்து பரவுங்கள். தேவர்களை விரும்புபவர்களும், தேரை விரும்புபவர்களுமான நீங்கள் உங்கள் பலத்தால் மகத்தான தேவர்களால் ஏறப்பட்டுள்ள பிரகாசமாயுள்ள தேரைத் தாங்குங்கள். 9547

உஷையும் இரவும்

6. உத்தம சிற்பிகளும், தேவிகளும், சோதியின் புதல்விகளுமான உஷையும், இரவும், யக்ஞத்தின் ஸ்தானத்திலே அமர்வார்களாக. செல்வமடைந்திருப்பவர்களும், செல்வத்தை விரும்புபவர்களுமான தேவிகளே! உங்களுடைய பரந்த அங்கத்திலே அவிகளை விரும்பும் தேவர்கள் அமர்வார்களாக.

ஹோதாக்கள்

7. பிழியுங்கல் உயர்த்தப்படுகிறது. மகத்தான அக்கினி சொலிப்பிக்கப்படுகிறுன். விரும்பத் தகுந்த யக்ஞப் பாத்திரங்கள் புவியின் அங்கத்திலே தயாராயிருக்கின்றன. புரோகிதர்களும், ரித்விஜர்களும், அறிஞர்களுமான நீங்கள், இந்த யக்ஞத்திலே எங்களுக்குச் செல்வத்தை அளியுங்கள்.



மூன்று தேவிகள்

8. மூன்று தேவிகளே! நாங்கள் பரத்தியுள்ள இந்தப் பரந்த தருப்பையின் மீது நீங்கள் அமருங்கள். இளையும் ஸரஸ்வதி தேவியும், நெய் காலுள்ள பாரதியும், எங்கள் யக்ஞத்தையும், நன்களிக்கப்படும் அவிகளையும், மநுவால் அழிக்கப்பட்டன போல் ஏற்றுக்கொள்வார்களாக.

துவஷ்டா

9. தேவனுன துவஷ்டாவே! நீ எங்கள் அவிகளால் அழகுடனுனுய். நீ அங்கிரஸர்களின் நண்பனுனுய். செல்வத்தைத் தருபவனும், உத்தம நிதியுள்ளவனும், அறிபவனுமான நீ, தேவர்களுடைய உணவை அவர்களுக்கு அளிக்கவும்.

வனஸ்பதி

10. வனஸ்பதியே! அறிஞுன நீ, உணவைப் பாசத்தால் பந்தஞ் செய்து அதைத் தேவர்களிடம் செலுத்தவும். தேவனுன வனஸ்பதி அதை சுவைப்பானுக. அவன் அவிகளைத் தேவர்களிடம் எடுத்துச் செல்வானுக. சோதியும் புவியும் என் அழைப்பைப் பாலிப்பார்களாக.

சுவாஹா

11. அக்கினியே! நீ எங்கள் யக்ஞத்துக்கு சோதியிலிருந்து வருணனையும், இந்திரனையும், வானிலிருந்து மருத்துக்களையும் அழைத்து வா. யக்ஞாருகர்களான விசுவேதேவர்கள் தருப்பையின் மீது அமர்வார்களாக. அமுதர்களான தேவர்கள் சுவாஹாவோடு அளிக்கப்படும் அவியில் இன்புறுவார்களாக. 9553

# 71. ஞானம்

## 908. பிரகஸ்பதி ஆங்கிரஸன்

1. பிரகஸ்பதியே! மனிதர்கள் பொருள்களுக்கு நாமங்களை அளிக்குங்கால் வாக்கின் முதற் சொல்லைக் கூறினார்கள். குற்றமில்லாமல் மேன்மையாயிருந்ததை யெல்லாம் தங்களுக்குள் வைத்துக் கொண்டார்கள். அதைத் தங்கள் அன்பால் வெளிப்படுத்தினார்கள்.

2. அறிஞர்கள் மொழியை, யவத்தின்மாவை, சலிக்கும் சல்லடையைப் போல் மனத்தால் சுத்தப்படுத்துகிறார்கள். பிறகு நண்பர்கள் நட்புத்தன்மையை யறிந்து கொள்கிறார்கள். அறிஞர்களுடைய மொழிகளிலே செல்வி தோன்றுகிறாள்.

3. அறிஞர்கள் மொழியின் வழியை யக்ஞத்தால் பற்றினார்கள். அது ரிஷிகளின் உள்ளங்களில் இருந்தது என்பதைக் கண்டார்கள். அவர்கள் அதைக்கற்று, பல இடங்களில் ஸ்தாபித்தார்கள். ஏழு பறவைகள் இசைந்த நாதத்தோடு சுவரங்களை எழுப்புகின்றன.

4. ஒருவன் மொழியைக் கண்டுங்காணான். ஒருவன் கேட்டும் கேளான். ஒருவனுக்கு அது தன் வடிவத்தைக் கணவனுக்குத் தன் தேகத்தைப் புலப்படுத்தும் நல்லாடையை அணிந்த மனைவியைப்போல் விளக்குகிறது.

5. அறிஞர்கள் ஒருவனை மொழியின் நட்பிலே திரமாய் நிலைக்கிறான் எனக் கூறுகிறார்கள். புலவர்கள் அவனைத் தங்கள் சங்கத்திலிருந்து விலக்கார்கள். மொழியின் உரை யறியாத அறிவிலி மலட்டுப்பசுவாம் மாயைகளோடும், மலர்களும் பழங்களுமில்லாத மொழியை ஏந்தித் திரிகிறான். 9558

6. நட்புத் தன்மையை யறியும் நண்பனை நீக்குபவனுடைய மொழியிலே தினையளவு செல்வமுமில்லை. அவன் கேட்டும் வீணுக்கே கேட்கிறான். ஏனெனில் அவன் உத்தமச் செயலின் வழியை யறியவில்லை.



7. கண்களையும், காதுகளையும் பார்த்தால் சமமான நண்பர்களைப் போல் பலர் தோன்றுகிறார்கள். ஆனால் மனத்திண்மையிலும், கூர்மையிலும் அவர்கள் வேறுபடுகிறார்கள். சிலர் வாய் வரை வரும் கேணிகளைப்போலும், சிலர் இடைவரை வரும் குட்டைகளைப் போலும், மற்றவர்கள் அமிழ்ந்து ஸ்னானஞ் செய்வதற்குரிய நிறைந்த ஏரிகளைப் போலுமிருக்கிறார்கள்.

8. நண்பர்களான அறிஞர்கள் இருதயத்தால் இழைக்கப்பட்ட மனக்கூர்மையில் ஒருமித்திருக்குங்கால் தங்கள் சங்கத்திலிருந்து அறிவதற்குரியதை அறியாதவனை நீக்குகிறார்கள். பிறகு அறிஞர்கள் எனக் கருதப்படுபவர்கள் விருப்பம் போல் முன்னேறுகிறார்கள்.

9. இந்த உலகத்திலே அறிஞர்களோடும், பரத்திலே தேவர்களோடும், செல்லாதவர்கள் அறிஞர்களுமில்லை, ஸோமனைப் பொழிபவர்களுமில்லை. அறிவற்ற அவர்கள் பயனற்ற மொழியைப் பற்றுகிறார்கள். பாவச் சொல்லுள்ள அவர்கள் கன்னிகைகளைப் போல் நூலை நூற்கிறார்கள்.

10. சபையை ஜயித்து வரும் சொல்வன்மை பெற்ற நண்பனைக் கொண்டு அறிஞர்கள் எல்லாம் இன்புறுகிறார்கள். புன்மை பிரிக்கும் அவன் புஷ்டியைத் தருகிறான். பக்குவனான அவன் போருக்கு அருகனும் வீரனுகிறான்.

11. ஒருவன் இருக்குக்களைப் பயன்படுத்தி, புட்டிப் படுத்தும் பணியிலே பொருந்துகிறான். மற்றவன் சக்வரச் சந்தங்களிலே காயத்தர ஸாமனைப் பாடுகிறான். எதைச் செய்ய வேண்டும் என்னும் அறிவைப் பிரமன் கூறுகிறான். ஒருவன் யக்ஞத்தின் நியமங்களை விதிக்கிறான். 9564

# 72. தேவர்கள்

## 909. பிரகஸ்பதி அல்லது அதிதி

1. இனி வருங்காலத்தில் துதிக்கப்படுங்கால் வழிபடுபவனைத் தேவர்கள் அனுகூலமாய்ப் பார்க்க நாம் தேவர்களின் சன்மங்களை சுத்த உச்சரிப்போடு கூறுவோமாக.

2. பிரம்மணஸ்பதி தேவர்களின் இந்த சன்மங்களை—வம்சங்களை—தன் துருத்திகளை நிரப்பும் கருமானைப் போல் காற்றால்—சுவாசத்தால் நிரப்பினான். தேவர்களின் முதல் யுகத்திலே அஸத்திலிருந்து ஸத்து பிறந்தது.

3. தேவர்களின் முதல் யுகத்திலே அஸத்திலிருந்து ஸத்து பிறந்தது. பிறகு திசைகள் பிறந்தன. அவற்றிற்குப் பிறகு மேலாக வளரும் மரங்கள் பிறந்தன.

4. மேலாக வளரும் மரத்திலிருந்து புவி வளர்ந்தது. திசைகள் புவியிலிருந்து பிறந்தன. அதிதியினிடமிருந்து தட்சை பிறந்தாள். அப்பால் தட்சையிடமிருந்து அதிதி பிறந்தாள்.

5. தக்ஷையே! உன்னுடைய புதல்வி அதிதி பிறந்தாள். அவளுக்குப் பிறகு அமிருதபந்துக்களும் துதியாருகர்களுமான தேவர்கள் பிறந்தார்கள்.

6. தேவர்களே! நீங்கள் இந்த சலத்திலே நன்கு சேர்ந்திருக்குங்கால் உங்களிடமிருந்து ஆடுபவர்களிடமிருந்து போல் — நடிப்பவர்களிடமிருந்து போல் கூரிய அணு புழுதி எழுந்தது.

7. தேவர்களே! நீ எங்கள் உலகங்களை, உங்கள் காந்தியால், புவியை மழையால் நிரப்பும் மேகங்களைப் போல் நிரப்புங்கால் சமுத்திரத்திலிருந்த சூரியனை வெளிப்படுத்தினீர்கள்.

8. அதிதிக்குத் தன் தேகத்திலிருந்த புதல்வர்கள் எண்மர். அவள் ஏழு புதல்வர்களோடு தேவர்களிடம் சென்றாள். மார்த்தாண்டனை — சூரியனை — மேலே எறிந்தாள்.

9. அதிதி ஏழு புதல்வர்களோடு பழைய யுகத்துக்குச் சென்றாள். பிராணிகள் பிறக்கவும், சாகவும், அவள் மீண்டும் மார்த்தாண்டனை ஏந்தினாள். 9573



# 73. இந்திரன்

## 910. கௌரிவீதி சாக்தியன்

1. உக்கிரனும், போற்றத்தகுந்தவனும், மிக்கப் பலமுள்ளவனும், பெருமை நிறைந்தவனுமான நீ, ஆற்றலுக்காகவும், பகைவர்களை அழிப்பதற்காகவும் பிறப்பிக்கப்பட்டால் அவனை ஏந்துபவளான தாய், அவனை ஏந்திய போது மருத்துக்கள் விருத்திரப் போரிலே அவனை வலிமைப்படுத்தினார்கள்.

2. பகைவனைத் துன்புறுத்தும் இந்திரனுடைய படைகள், துரித மருத்துக்களால் பின்பற்றப்படும் அவனைச் சுற்றி நிற்கிறது. மருத்துக்கள் அவனைப் பூரணத் துதியோடு ஊக்கப்படுத்தினார்கள். இருள் வடிவத்தோடு வந்த விருத்திரனிடமிருந்து கருக்களான சலங்கள் பெரிய கொட்டத்திலே அடைபட்டிருந்த பசுக்களைப் போல் வெளியில் வந்தன.

3. இந்திரனே! உன்னுடைய பாதங்கள் மகத்தானவை. நீ வருங்கால் வாஜர்கள் அல்லது இருக்கு, வேறு தேவர்கள் உன்னை ஊக்கப்படுத்தினார்கள். இந்திரனே! நீ உன்னுடைய வாயிலே ஆயிரம் ஓநாய்களை ஏந்துகிறாய். நீ அசுவினிகளை இங்கே மீண்டும் செலுத்தவும்.

4. போருக்குத் துரிதமாகும் நீ, யக்ஞத்துக்கு வருகிறாய். நீ நட்புக்காக இரு நாஸத்தியர்களை அழைத்து வருகிறாய். இந்திரனே! நீ ஆயிரம் செல்வக் குவியல்களை அடைந்திருக்கிறாய். சூரனே! அசுவினிகள் எங்களுக்குச் செல்வங்களைத் தந்தார்கள்.

5. துரிதமாய்ச் செல்லும் நண்பர்களால்—மருத்துக்களால் -பின்பற்றப்படும் இந்திரன் யக்ஞத்திலே மகிழ்ந்து சனங்களுக்குச் செல்வத்தை அளித்தான். அவன் சனங்களோடு, தஸ்யுவின் மாயைகளை அழிக்க வந்தான். அவன் இருட்டையும், கறுத்த மேகங்களையும் அழித்தான். 9578

6. இந்திரனே! நீ ஒரே நாமமுள்ள இருவரை விலக்கினாய். விருத்திரன், உஷையின் சகடத்தை அழித்தபோது அவனை நீ அழித்தாய். நீ விருத்திரனைக் கொல்ல ஆர்வமுள்ள மகத்தான நண்பர்களான மருத்துக்களோடு சேர்ந்து முன்னேறினாய். நீ அவனுடைய அழகிய அங்கங்களை அழித்தாய்.

7. யக்ஞத்தைத் தாக்க விரும்பிய தாஸனை நமூசியைத் தாழ்த்தினாய். ரிஷிகளை எதிர்த்த அவனுடைய மாயைகளை மாய்த்தாய். தேவர்களுக்குச் செல்லும் வழிகளை மநுவுக்கு முறைப்படுத்த இனிமைப்படுத்தினான்

8. இந்திரனே! தலைவனும், கைகளிலே வச்சிரத்தை ஏந்துபவனுமான நீ, இந்த சலங்களை நிரப்பினாய். வலிமையோடுள்ள உன்னைத் தேவர்கள் போற்றுகிறார்கள். நீ மேலே தேர்களுள்ள மேகங்களை அதோமுகப்படுத்தினாய்.

9. அவனுடைய வானிலே எங்கும் நிலைத்துள்ள சக்கரம் அவனுக்கு சலத்தை அதீனப்படுத்திற்று. புவியின் மீது விடப்பட்ட சலம் ஓஷதிகளிலும், பசுக்களிலும் பாலை நிரப்புகிறது.

10. சிலர் அவனைக் குதிரையிலிருந்து—சூரியனிலிருந்து—வந்தான் எனச் சொன்னாலும், நான் அவனைப் பலத்தின் புதல்வனாக அறிகிறேன். அவன் கோபத்திலிருந்து வந்தான். அவன் போர்க்களங்களிலே மலைகளில் போல் நிற்கிறான்—இயங்குகிறான். இந்திரன் எங்கிருந்து பிறந்தான் என்பதை அவனே அறிகிறான்.

11. பிரியமேதர்களும், ரிஷிகளும் அழகிய சிறகுகளுள்ள பறவைகளைப் போல் போற்றிக்கொண்டு இந்திரனின் அருகே வந்திருக்கிறார்கள். இந்திரனே! இருளை விலக்கவும். கண்ணை ஒளியால் நிரப்பவும். எங்களைப் பாசத்தால் கட்டப்பட்டுள்ள மனிதர்களைப்போல் விடுவிக்கவும்.
9584



# 74. இந்திரன்

## 911. கௌரிவீதி சாக்தியன்

1. போர்ச்செயலாலோ, யக்ஞங்களாலே, செல்வங்களை அடைய விரும்புபவர்களும், சோதிபுவிகளிலிருப்பவர்களுமான சனங்களால் செல்வத்தையளிக்க விரும்பும் இந்திரன் கவரப்படுகிறான். களத்திலே பொருளைப்பற்ற சுறுசுறுப்பாயிருப்பவர்களாலும் ஜயமுள்ளவர்களாகி வெற்றியுடன் பகைவர்களைத் துன்புறுத்துபவர்களாலும் கவரப்படுகிறான்.

2. இந்த அங்கிரஸர்களின் ஊக்கப்படுத்தும் அழைப்பு சோதியிலே பரவிற்று. அவர்கள் புகழை விரும்பும் மனத்தோடு நிலத்தை முத்தமிட்டார்கள். அங்கு இழந்த பசுக்களைப் பார்த்து தங்களுடைய சொந்த நலத்துக்காக சௌபாக்கியத்துக்குத் தங்கள் சுயகாந்தியால் சூரியனைப்போல் ஒளிப்படுத்தினார்கள்.

3. யக்ஞத்திலே செல்வத்தை யளிக்கும் இந்த அமிருதர்களான தேவர்களின் துதியே இது. அவர்கள் எங்கள் யக்ஞத்தையும் துதியையும் பூர்த்தி செய்து ஒப்பில்லாத செல்வங்களை எங்களுக்கு அளிப்பார்களாக.

4. இந்திரனே! பசுக்கள் நிறைந்த கொட்டத்தை இடிக்க விரும்பியவர்களும், ஆயிரங்களைப் பொழிவதும், பல குழந்தைகளின் தாயும், பரந்திருப்பதும், ஒருமுறை பிறப்பித்ததுமான புவியைக் கறந்தவர்களுமான மனிதர்கள், உன்னைப் போற்றினார்கள்.

5. செயலாளர்களே! உங்களுடைய பாலனத்துக்காக, ஜயிக்கப்படாதவனும், பகைப் படைகளை வசப்படுத்துபவனும், மகானும், மகவானும், மிக்கப் புகழப்பட்டவனும், முழங்குபவனும், மனிதனிடம் நட்புத்தன்மையுடனுள்ள வச்சிரத்தை ஏந்துபவனுமான இந்திரனைச் சேர்த்துக் கொள்ளுங்கள்.

6. புரங்களை உடைக்கும் இந்திரன் மிக்க வலியனான விருத்திரனைக் கொன்றபோது விருத்திரனை அழிப்பவன் சலங்களை நிரப்பினான். பகைவர்களை ஜயிப்பவனும், அனைவரின் தலைவனும், மிக்கச் செல்வனுமான இந்திரன், அனைவராலும் பார்க்கப்படுகிறான். எங்களால் விரும்பப்படும் செயலை அவன் நடத்துவானாக. 9590

## 75. நதிகள்

### 912. ஸிந்துட்சிதன்—பிரியமேதனுடைய புதல்வன்

1. சலங்களே! பாடுபவன் உங்களுடைய மேன்மையாயுள்ள மகத்வத்தை விவஸ்வானுடைய மனையிலே பாடுவானாக. நதிகள் மூன்று மூன்றாயும் ஏழு ஏழாயும் பாய்கின்றன. ஸிந்து, பலத்திலே எல்லா நதிகளையும் முந்துகின்றன.

2. ஸிந்துவே! நீ உணவுக்குப் பாய்ந்ததால் உனக்கு வழியை வருணன் கிழித்தான். நீ புவிக்கு உயர்ந்த வழியிலே இறங்கி வருகிறாய். நீ வரும் வழியிலே அரசு புரிகிறாய் என்பதை உலகங்கள் பிரத்யட்சமாய்க் காண்கின்றன.

3. முழக்கம் புவிக்கு மேலே சோதிக்குச் செல்லுகிறது. ஸிந்து தன்னுடைய துலங்கும் அலையால் தன் அனந்தமான வேகத்தை ஊக்கப்படுத்துகிறாள். ஸிந்து மேகத்திலிருந்து முழங்கிவரும் மழையைப் போல் காளையைப்போல் கர்ச்சித்து முன்னேறுங்கால் முழங்குகிறாள்.

4. ஸிந்துவே! வேறு நதிகள் தங்கள் புதல்வர்களுக்குக் கதறும் தாய்மார்களைப் போலும், தங்கள் பாலோடு தாய்ப் பசுக்களைப் போலும் உன்னிடம் துரிதமாகின்றன. உன்னோடு இறங்கும் ஆறுகளின் முன்னணியிலே நீ பாயுங்கால் நீ போருக்குச் செல்லும் அரசனைப் போல் உன்னுடைய இரு பக்கப் படைகளையும் நீ செலுத்தி நடத்துகிறாய்.



5. கங்கையே! யமுனையே! ஸரஸ்வதியே! சுதுத்திரியே! பருஷ்ணியே! அஸின்யையோடு மருதவிருதையே! விதஸ்தையே! என்னுடைய இந்த ஸ்தோமத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். ஸுஷோமையோடு ஆர்ஜீகீயே! செவியுறுங்கள். 9595

6. ஸிந்துவே! நீ துரிதமாய்ப் பெருகும் கோமதியுடன் சேர, நீ முதலில் திருஷ்டாமயையுடன் ஐக்கியமானாய். நீ ஸுஸர்த்தோடு, இரஸத்தோடு, சுவேதியோடு, குபையோடு, மேகத்துனுவோடு சேர்ந்து ஒரே தேரிலே செல்ல ஐக்கியமாகவும்.

7. நேராகச் செல்பவளும், வெண்ணிறமுள்ளவளும், பிரகாசிப்பவளுமான ஸிந்து, வேகமாய்ப் பாயும் சலங்களை ஏந்துகிறாள். தடைபடாத ஸிந்து வேகமான நதிகளின் நடுவே மிக்க வேகமுள்ளவளாயிருக்கிறாள். குதிரையைப் போல் விரும்பத் தகுந்தவளாயிருக்கிறாள். அழகிய பெண்ணைப்போல் அழகுடனிருக்கிறாள்.

8. ஸிந்து நல்ல குதிரைச் செல்வமுள்ளவள். நல்ல தேர்ச் செல்வமுள்ளவள். நல்லாடைச் செல்வமுள்ளவள். பொன் செல்வமுள்ளவள். நன்கு கற்பிக்கப்பட்டவள். உணவுச் செல்வமுள்ளவள். கம்பளச் செல்வமுள்ளவள். யுவதி. ஸிலாமா ஓஷதிச் செல்வமுள்ளவள். சௌபாக்கியவதி மதுவைச் செழிப்பிக்கும் மலர்களை அணிந்திருக்கிறாள்.

9. ஸிந்து சுலபமாய்ச் செல்வதும், நல்ல குதிரைகள் உள்ளதுமான தேரை இணைத்தாள். அதனால் அவன் எங்களுக்கு உணவை ஏந்தி வருவானாக. தடைபடாததும், சுயபுகழுள்ளதும், மகத்தாயுமுள்ள இந்தத் தேரின் மகிமை மேன்மையானது எனப் போற்றப்படுகிறது. 9599

## 76. கிராவாணங்கள்

### 913. ஜரத்கரணஸர்ப்பஜாதி - இராவதியின் புதல்வன்

1. நான் உணவை அடைந்துள்ள உஷையினுடைய உதயத்திலே உங்களைப் போற்றுகிறேன். நீங்கள்

இந்திரனையும், மருத்துக்களையும், சோதியையும் புவியையும் புலப்படுத்துகிறீர்கள். ஒன்றாய்த் தோன்றிய சோதியும் புவியும் எல்லா யக்ஞ ஸ்தானங்களிலும் எங்களை உபசரிப்பார்களாக. எங்களைச் செல்வத்தோடு நிரப்புவார்களாக.

2. இந்த உத்தம ரஸத்தைப் பொழியுங்கள். கையால் பற்றப்பட்ட கல் ஸோமத்தைப் பிழியுங்கால் குதிரையைப் போல் இருக்கிறது. மகத்தான செல்வத்துக்காகக் கல் குதிரைகளை அளிக்குங்கால் ஊக்கமுள்ளவன் பகைவர்களை ஜயித்து ஆண்மையான ஆற்றலை அடைகிறான்.

3. பூர்வத்தில் மானிடனுக்குச் செல்வத்தைத் தந்தது போல் இந்தக் கல்லால் பிழியப்படும் ஸோமரஸம் எங்கள் குற்றத்தை நீக்குக. திருடப்பட்ட பசுக்களால் மறைக்கப்பட்ட துவஷ்டாவின் மகன்—திரிசிரன்—குதிரையின் வடிவத்தை எடுத்தான். அப்பொழுது அவன் அழிக்கப்படுங்கால் வழிபடுபவர்கள் யக்ஞங்களிலே தடைபடாத கற்களையே நாடினார்கள்.

4. கபடமுள்ள அரக்கர்களைத் தூரத்திலே விலக்குங்கள். நிருதியை நீக்குங்கள். வறுமையை அகற்றுங்கள். ஆண் சந்ததியோடு எங்களுக்குச் செல்வங்களைப் பொழியுங்கள். கற்களே! தேவர்களை இன்புறுத்தும் தோத்திரத்தை ஏந்துங்கள்.

5. அத்வர்யு, ஆதித்தியனைக் காட்டிலும் மிக்க ஆற்றலுள்ளவர்களும், விபவனைக் காட்டிலும் சுருசுருப்பாய் வேலை செய்பவர்களும், வாயுவைக்காட்டிலும் ஸோமத்தை அதிகமாய்ப் பரத்துபவர்களும், அக்கினியைக் காட்டிலும் அதிகமாய் உணவை அளிப்பவர்களுமான உங்களைப் போற்றுகிறார்கள்.

6. புகழுள்ள கற்கள் பொழிந்த ஸோமரஸத்தை எங்களுக்களிக்க, அவர்கள் பரஸ்பரம் முந்திக்கொண்டு சுற்றிலும் முழங்குபவர்களாயுள்ள அறிஞர்கள், விரும்பத்தகுந்த ஸோமரஸத்தைப் பிழியும் இடத்திலே, பிரகாசமாய் உள்ள ஸோமத்திலே பிரகாசமான தோத்திரத்தோடு எங்களை ஸ்தாபிப்பார்களாக.



7. துரித சலமுள்ள கற்கள் துதியை விரும்பி ஸோமத்தைப் பிழிகின்றன. அதன் இரஸத்தைக் கறக்கின்றன. அக்கினியில் தெளிக்கப்பட்ட அவை ரஸத்தைக் கறக்கின்றன. யக்ஞத் தலைவர்கள் தங்கள் வாய்களால் அவிகளை சுத்தப்படுத்துகிறார்கள்.

8. கற்களே! தலைவர்களே! நீங்கள் நல்ல செயல்களை நடத்துபவர்கள். இந்திரனுக்காக ஸோமத்தைப் பிழியும் நீங்கள் சோதியின் புகழுக்காக விரும்பத்தகுந்த செல்வத்தை யெல்லாம் செய்யவும். நீங்கள் புவியிலே பொழிபவனுக்கு எல்லாச் செல்வங்களையும் தருகிறீர்கள்.
9607

## 77. மருத்துக்கள்

### 914. ஸ்யூமரசிமி பார்கவன்

1. மருத்துக்கள் எங்கள் துதியால் இன்பமாகி மேகங்களால் செலுத்தப்படும் சலபிந்துக்களைப் போல் செல்வத்தைப் பொழிகிறார்கள். அவர்கள் அவிகளால் மிகுந்த யக்ஞங்களைப் போல் உலகத்தைப் பிறப்பிப்பவர்கள். நான் மருத்துக்களின் மகத்தான படையை அவர்களுடைய புகழுக்கும் பெருமைக்கும் தக்கவாறு போற்றாமலிருந்தேன்.

2. அழிக்கும் மருத்துக்கள் தங்களை அலங்கரித்துக்கொள்ள ஆபரணங்களைச் செய்தார்கள். எதிர்க்கும் பல படைகள் மருத்துக்களின் கணத்தை ஜயிக்க இயலாதவையாயிருக்கின்றன. சோதியின் சலனப் புதல்வர்கள் வெளியில் வராமலிருக்கிறார்கள். அதிதியின் புதல்வர்கள் அதிகப்படாமலிருக்கிறார்கள்.

3. மருத்துக்கள் சோதி புவிகளின் மகத்வத்தால் தங்கள் சொந்த சரீரங்களிலிருந்து, மேகத்திலிருந்து சூரியனைப் போல் தோன்றினார்கள். வலிய வீரர்களைப் போல் புகழை விரும்புகிறார்கள். பகைவர்களை ஜயிக்கும் மனிதர்களைப் போல் பிரகாசிக்கிறார்கள்.

4. பாயும் சலங்களைப் போலுள்ள உங்கள் இணைப்பு, புவியை அசைக்காது, தளர்த்தாது. இந்த விசுவரூபமான யக்ஞம் உங்களிடம் வருகிறது. உணவுள்ளவர்களைப் போல் சுகத்தைத் தருபவர்களான நீங்கள் சேர்ந்து வாருங்கள்.

5. வாய்வடங்களால் தேர்த்தண்டுகளில் இணைக்கப்பட்ட குதிரைகளைப் போல் நீங்கள் செல்லுகிறீர்கள். உதயத்திலே நீங்கள் ஒளி மண்டலங்களைப் போல் காந்தியோடு சேர்ந்திருக்கிறீர்கள். நீங்கள் மருத்துக்களைப் போலும், பகைவர்களை அழிப்பவர்களைப் போலும், சுயப் புகழுள்ளவர்கள் என நீங்கள் புவியில் பயணிகளைப் போல் பரவுகிறீர்கள். நீங்கள் எங்கும் செல்லுகிறீர்கள்.

6. மருத்துக்களே! பசுக்களே! விரும்பத் தகுந்த, பிரியப்படும் , மிகுந்த செல்வத்தையளிப்பவர்களான நீங்கள், தூரத்திலிருந்து வருங்கால் எங்களுடைய மறைந்திருக்கும் பகைவர்களை விலக்குங்கள்.

7. யக்ஞத்தின் பூர்த்தியிலே யக்ஞத்தில் ஈடுபடும் தலைவன் மருத்துக்களுக்குப் போல் தட்சிணைகளை அழித்தால் செல்வத்தோடு உணவையும், ஆண் சந்ததியையும் அடைகிறான். அவன் தேவர்கள் பானம் செய்யுமிடத்தில் இருப்பானாக.

8. யக்ஞங்களில் யக்ஞாருகர்களும், ஆதித்திய நாமத்தோடு சுகத்தைத் தருபவர்களும், பாலிப்பவர்களுமான தேவர்களும், தங்கள் தேர்களைத் துரிதப்படுத்துபவர்களும், மிகுந்த அவிகளை விரும்புபவர்களுமான மருத்துக்கள், யக்ஞத்துக்கு வந்தவுடன் எங்கள் துதியைப் பாலிப்பார்களாக. 9615

## 78. மருத்துக்கள்

### 915. ஸ்யூமரசிமி பார்கவன்

1. மருத்துக்கள் மந்திரங்களால் விப்பிரர்களைப் போல் உயர்ந்த மனமுள்ளவர்களாகிறார்கள். அவர்கள்



யக்ஞங்களால் தேவர்களைத் திருப்தி செய்பவர்களை யக்ஞங்களை நடத்துபவர்களாயிருக்கிறார்கள். பல ஆபரணங்களோடு அலங்காரமாயுள்ள அவர்கள் அரசர்களைப்போல் அழகாயிருக்கிறார்கள். அவர்கள் மனைகளின் தலைவர்களான மனிதர்களைப்போல் பாபமற்றவர்களாயிருக்கிறார்கள்.

2. அக்கினியைப்போல் ஒளியோடு துலங்குபவர்களும், உங்கள் மார்புகளிலே பொன்னுபரணங்களை அணிந்தவர்களும், காற்றுகளைப்போல் தாமே இணைந்து கொள்பவர்களும், துரிதர்களும், பேரறிஞர்களைப் போற்றத் தகுந்தவர்களும், உத்தம வழிகாட்டிகளும், இன்பத்தைத் தரும் ஸோமரஸங்களைப்போல் இருப்பவர்களுமான நீங்கள் யக்ஞத்துக்குச் செல்லும் வழிபடுபவனிடம் வாருங்கள்.

3. காற்றுகளைப்போல் சனங்களை நடுங்கச் செய்பவர்களும், துரிதமாய்ச் செல்பவர்களும், அனல் சுவாலைபோல் சொலிப்பவர்களும், கவசமணிந்த வீரர்களைப் போல் தீரச்செயல்களை நடத்துபவர்களும், பிதாக்களின் துதிகளைப்போல் உத்தம ஈகையர்களுமான மருத்துக்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக.

4. தேர்ச் சக்கரங்களின் பற்களைப்போல் ஒரே நாபியில் சேர்ந்திருப்பவர்களும், ஜயமுள்ள வீரர்களைப் போல் பிரகாசிப்பவர்களும், தானமுள்ள மனிதர்களைப் போல் சலத்தைத் தெளிப்பவர்களும், துதியைக் கூறும் மனிதர்களைப்போல் இனிய குரலுள்ளவர்களுமான மருத்துக்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக.

5. மிக்க மேன்மையாக இருப்பவர்களும், குதிரைகளைப்போல் துரிதமாயுள்ளவர்களும், தேர்களின் தலைவர்களும், செல்வமுள்ளவர்களைப்போல் தாராளமாயிருப்பவர்களும், உச்சத்திலிருந்து இறங்கும் சலத்தோடுள்ள நதிகளைப்போல் வேகமாய்ச் செல்பவர்களும், விசுவரூபமுள்ள அங்கிரஸர்களைப்போல் ஸாமங்களோடு

எங்கும் செல்பவர்களுமான மருத்துக்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக.

6. சலங்களையளிக்கும் மேகங்களைப்போல் நதிகளின் தாய்மார்களாயிருப்பவர்களும், அழிக்கும் வச்சிராயுதங்களைப்போல் பகைவர்களை ஒழிப்பவர்களும், அன்புள்ள தாய்மார்களுள்ள குழந்தைகளைப்போல் விளையாடுபவர்களும், பவனியிலே மகாசனசங்கத்தைப்போல் காந்தியுள்ளவர்களுமான மருத்துக்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக.

7. உஷையின் கதிர்களைப்போல் யக்ஞங்களில் பிரகாசிப்பவர்களும், சௌபாக்கியம் விரும்புபவர்களைப் போல் ஆபரணங்களோடு விளங்குபவர்களும், நதிகளைப்போல் வேகமாய்ச் செல்பவர்களும், பிரகாசமான ஆயுதங்கள் ஏந்துபவர்களும், வெகு தூரத்திலிருந்து வந்த குதிரைகளைப்போல் பல யோசனைகளைக் கடந்தவர்களுமான மருத்துக்கள் எங்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக.

8 தேவர்களே! மருத்துக்களே! நீங்கள் எங்கள் துதியால் போற்றப்பட்டு உங்களைத் துதிக்கும் எங்களைச் செல்வப்படுத்துங்கள். செழிப்பியுங்கள். எங்கள் துதியையும், நட்பையும் ஞாபகஞ் செய்து கொள்ளுங்கள். எங்களுக்கு அளிக்கப் பூர்வத்திலிருந்தே உங்களிடம் செல்வமிருக்கிறது. 9623

## 79. அக்கினி

### 916. அக்கினி சௌசீகன் அல்லது அக்கினி வைசுவாநரன் அல்லது ஸப்திவாஜம்பரின் புதல்வன்

1. நான் மானிடப் பிரசைகளின் இருதயங்களிலே நித்தியனுயிருக்கும் வைசுவாநரனுடைய மகத்தான மகத்வத்தைக் காண்கிறேன். இப்பொழுது அவனுடைய மோவாய்கள் திறந்திருக்கின்றன. மீண்டும் சேர்ந்திருக்கின்றன. அவன் மெல்லாமல் விழுங்கி மிகுந்த ஸமித்தனத்தைப் புசிக்கிறான்.



2. அவனுடைய தலை குகையினுள், மனிதர்களின் உதரங்களினுள் வைக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய கண்கள்–சூரியனும் சந்திரனும்–தனிமையாயிருக்கின்றன அவன் தன் நாக்கால் மெல்லாமல் கட்டையைப் புசிக்கிறான். அத்வர்யுக்கள் உயர்த்திய கைகளோடு கால்களால் அவனிடம் சென்று வணக்கத்தோடு அவிகளை அளிக்கிறார்கள்.

3. அவன் தாயின் மறைந்திருக்கும் மார்பகத்தை நாடும் குழந்தையைப் போல் பரந்தடர்ந்த ஸமித்தனங்களூடே ஊர்கிறான். புவியின் அதலங்களை முத்தமிட்டுக் கொண்டு அவன் ஒளிரும் அவியைக் காண்கிறான்.

4. சோதி புவிகளே! நான் இப் புனிதச் சட்டத்தை உங்களுக்குக் கூறுகிறேன். அக்கினி தான் பிறந்தவுடன் தன் தாய்தந்தையரைப் புசித்தான். மனிதனுன நான் மகவானை அறியேன். அக்கினி அவனை அறிவான். ஏனெனில் அவன் ஞானம் உள்ளவன்.

5. தனக்கு விரைவாக அவியை அளித்து, நெய்யும் தைலமும் அளித்து ஆதரிக்கும் மனிதனை அக்கினி தன் ஆயிரம் கண்களால் எல்லாத் திசைகளிலிருந்தும் நோக்குகின்றான்.

6. அக்கினியே! அறியாமையால் உன்னைக் கேட்கின்றேன். புவியிலிருப்பது போல் நீ தேவர்களிடையே பாவமோ, பிழையோ செய்துவிட்டாயா? விளையாடியும், விளையாடாமலும் தங்க நிறத்தையுடையவனும், பற்களற்றவனுமான அக்கினி தன் அவியை, இலக்கை வெட்டும் கத்தியைப் போல் கூராக்கினன்.

7. ஸமித்தனத்தில் பிறந்த அவன் மின்னும் கடிவாளங்களுடன் எல்லாத் திசைகளிலும் விரையும் தன்னுடைய

புரவிகளை நுகத்தில் பூட்டினான். அக்கினி வசுக்களோடு தன் அவியைப் பகிர்ந்தான். தன் ஸமிந்தனங்களிலே பெருகுகிறான். வளமடைந்தான்.

## 80. அக்கினி

### 917. அக்கினி ஸௌசீகன் அல்லது அக்கினி வைசுவாநரன் அல்லது ஸப்திவாஜம்பரின் புதல்வன்

1. கடமையில் உறுதியானவனும், புகழ்பெற்ற வீரனுமான அக்கினி தன் படைகளுக்குப் பரிசு பெறும் புரவியை அளித்தான். அக்கினி சோதி புவிகளில் நுழைந்து மறைக்கின்றான். வீரர்களோடு நிறைந்திருக்கும் பலரும் பெண்ணை நிரப்புகின்றான்.

2. ஊக்கமுள்ள அக்கினியின் ஸமிந்தனம் மங்களமாயிருக்க. அக்கினி பரந்த சோதியிலும் புவியிலும் நுழைந்தான். அக்கினி தனியானாகவே போர்களிலே உற்சாகப் படுத்துகிறான். அக்கினி பல பகைவர்களை அழிக்கிறான்.

3. அக்கினி ஜாத்கர்ணனைப் பாலித்தான். அவன் தன் சுவாலைகளால் ஜருதனைத் தகித்தான். அக்கினியைத் தாபமுள்ள குகையிலிருந்து மீட்டான். அக்கினி நிருமேதனுக்குச் சந்ததியை யளித்தான்.

4. அக்கினி சுவாலைகளை எழுப்பி செல்வத்தைத் தருகிறான். அக்கினி ஆயிரம் பசுக்களைச் சம்பாதிக்கும் ரிஷிக்குப் புதல்வனைத் தருகிறான். அவன் சோதியிலே அவியைப் பரத்துகிறான். அக்கினியின் வடிவங்கள் பல இடங்களில் புலப்படுகின்றன.

5. ரிஷிகள் துதிப்பாக்களாலே அக்கினியை அழைக்கிறார்கள். போரிலே வருத்தப்பட்டால் மனிதர்கள் அக்கினியை அழைக்கிறார்கள். நடுவானிலே பறக்கும் பறவைகள் அக்கினியை அழைக்கின்றன. அக்கினி ஆயிரம் பசுக்களைச் சுற்றி வருகிறான்.



6. மனிதப்பிறவியில் வந்த ஸந்ததிகள் அக்கினியைப் போற்றுகிறார்கள். அங்ஙனமே அரசனான நஹுஷனிடமிருந்த மனிதர்களும் அக்கினியைப் போற்றுகிறார்கள். அக்கினி யக்ஞ வழிக்குத் தகுந்ததாய் இருக்கும் குரலைக் கேட்கிறான். அக்கினியின் வழி நெய்யில் எங்குமிருக்கிறது.

7. ரிபுக்கள் அக்கினிக்காகத் துதியைக் கற்பித்தார்கள். நாங்கள் மகத்தான அக்கினிக்குத் துதியைக் கூறினோம். அக்கினியே! இளைஞனே! துதிப்பவனைப் பாலிக்கவும். அக்கினியே! அவனுக்கு மிகுந்த செல்வத்தை யளிக்கவும். 9637

## 81. விசுவகர்மன்

### 918. விசுவகர்மன்—புவனனுடைய புதல்வன்

1. ரிஷியும் ஹோதாவுமான எங்கள் தந்தை இவ்வுலகங்களையெல்லாம் ஆஹுதி செய்து தன் ஆசனத்தில் அமர்ந்தான். கற்பித்த முதல்வன் ஆசிமொழிகளால் செல்வத்தை விரும்பி தாழ்ந்த சீவன்களிலே நுழைந்தான்.

2. விசுவங்காணும் விசுவகருமன் தன் வலிமையால் புவியைச் செய்து சோதியைப் புலப்படுத்தியபோது அவன் இருந்த இடம் எங்கிருந்தது? அவனை எது ஏந்திற்று? அது எங்ஙனமிருந்தது? நிலை எது? சாதனம் எது? எங்ஙனம் செய்யப்பட்டது?

3. எங்கும் கண்களிருப்பவனும், எங்கும் முகமிருப்பவனும், எங்கும் கைகளிருப்பவனும், எங்கும் கால்கள் இருப்பவனுமான அவன் தன் கைகளால் சோதியைக் கடக்கிறான். துரிதமாய்ச் செல்லும் கால்களால் புவியைக் கடக்கிறான். சோதியையும் புவியையும் பிறப்பிக்கும் அவன் ஏக தேவனாயிருக்கிறான்.

4. அவர்கள் எந்தக் காட்டிலிருந்து, எந்த மரத்திலிருந்து சோதியையும் புவியையும் கற்பித்தார்கள்? அறிஞர்களே! உங்கள் மனங்களிலே சிந்தியுங்கள். அவன்

எல்லா உலகங்களையும் ஏந்துங்கால் ஸ்தாபிக்குங்கால் எங்கு நின்றான்?

5. விசுவகர்மனே! உன்னுடைய உயர்ந்த, தாழ்ந்த, நடுவான இந்த சரீரங்களை அவியிலே —யக்ஞத்திலே— உன்னுடைய நண்பர்களுக்கு அளிக்கவும். ஸ்வதாவுள்ளவனே! நீயே அவிகளால் இச் சரீரங்கள் எல்லாம் உள்ள உன் தேகத்திலே செழித்து சுயமாகவே உன்னை யஜித்துக்கொள்ளவும். யக்ஞஞ் செய்துகொள்ளவும்.

6. விசுவகர்மனே! நீ அவியால் வளர்ந்து உன்னையே, சோதி புவிகளான உன்னையே யஜிக்கவும். வறு சனங்கள் எங்கும் கலங்குவார்களாக. அவிச் செல்வன் இங்கு செல்வத்தைப் பிரேரிப்பவனாயிருப்பானாக.

7. நாங்கள் இன்று எங்களுடைய பாலனத்துக்காக மனத்தைப்போல் துரிதமாயிருப்பவனும், விசுவத்தைக் கற்பிப்பவனுமான வாசஸ்பதியை அழைப்போமாக. நற்செயல்களை நடத்துபவனும், எல்லா சுகத்தையும் தருபவனுமான அவன், எங்களுக்குப் பாலனத்தை அளிக்க எங்கள் எல்லா அவிகளாலும் போற்றப்படுவானாக. 9644

## 82. விசுவகர்மன்

### 919. விசுவகர்மன்

1. புலங்களின் தந்தையும், தீரமனமுள்ளவனுமான அவன், சலத்தைப் பிறப்பித்தான். இந்த இருவரான சோதியும் புவியும், சலத்திலே மிதந்தார்கள். பிறகு இந்தப் பழைய எல்லைகள் ஸ்தாபிக்கப்பட்டன. அப்பால் சோதியும் புவியும் பரப்பப்பட்டன.

2. விசுவகர்மன் மகத்தான மனமுள்ளவன். மகான். வியாபகன். படைப்பவன். விதிப்பவன். உத்தமத் தலைவன். எவனிலே புலன்களின் விருப்பங்கள் சலத்தோடு இன்புறுகின்றனவோ, அவனை அவர்கள், ஏழு ரிஷிகளுக்கப்பாலுள்ள ஏகன் எனக் கூறுகிறார்கள்.



3. நம்மைப் பிறப்பித்தவனும், பாலிப்பவனும், அனைத்தையும் படைப்பவனும், நம்முடைய இடங்களை அறிபவனும், எல்லாப் புவனங்களையும் தெரிந்தவனும், தேவர்களுக்கு நாமத்தை அளிப்பவனுமான விசுவகர்மா ஒருவனே உண்டு. எல்லா சீவர்களும் அறிந்துகொள்ள அவனிடமே செல்லுகிறார்கள்.

4. தாவர ஜங்கமப் பொருள்களைத் தங்கள் ஒளியால் எழில்படுத்திய பழைய ரிஷிகள் அவனுக்குப் பல துதிகளோடு துதிப்பவர்களைப் போல் யக்ஞச் செல்வத்தை அளிக்கிறார்கள்.

5. எந்தக் கருவை சலங்கள் முதலில் ஏந்தித்தோ, எதில் தேவர்கள் எல்லாம் சேர்ந்து பரஸ்பரம் பார்த்துக் கொண்டார்களோ, எது சோதிக்கப்பாலும், புவிக்கப்பாலும், தேவர்களுக்கு அப்பாலும், அசுரர்களுக்கப்பாலுமிருந்ததோ அந்தக் கருப்பொருள் எது?

6. எல்லாத் தேவர்களும் சேர்க்கப்பட்டுள்ள அந்தக் கருவை சலங்கள் முதலில் ஏந்தின. எந்த ஒன்றில் எல்லா புவனங்களும் நிலைக்கின்றனவோ அது அஜனுடைய நாபியின் மீது வைக்கப்பட்டிருக்கிறது.

7. இந்த உலகங்களை எவன் கற்பித்தான் என உங்களுக்குத் தெரியாது. உங்கள் உள்ளத்திலே அந்நியனை அவன் இருக்கிறான். அவனை அறிய நீங்கள் மூடுபனியான அறிவின்மையிலிருந்தும், பிதற்றும் மொழியிலிருந்தும், உயிராசையிருந்தும், சடங்குகளிலிருந்தும் நீங்கள் பிரியவேண்டும். 9651

## 83. மன்யு

### 920. மன்யு—தவத்தின் புதல்வன்

1. மன்யுவே! —கோபமே— வச்சிராயுதனும், பகைவர்களை அழிப்பவனுமான உன்னைப் போற்றுபவன் உன்னுடைய எல்லா ஆற்றலையும், பலத்தையும் இடை.

விடாமல் புட்டி செய்துகொள்கிறான். நாங்கள் பலப்படுத்துபவனும், பலமுள்ளவனும், பலத்தைத் தருபவனுமான உன்னுடைய நட்பால் தாஸனையும், ஆரியனையும் ஜயிப்போமாக.

2. மன்யு இந்திரனாயிருக்கிறான். மன்யுவே தேவனாயிருந்தான். மன்யுவே ஹோதா. அவன் அனைத்தையும் அறியும் வருணன். மனித குலத்தில் வந்த பிரஜைகள் மன்யுவைப் போற்றுகிறார்கள். மன்யுவே! நீ தவத்தோடு இணைந்து எங்களைப் பாலிக்கவும்.

3. மன்யுவே! வலியர்களின் நடுவே மிக்க வலியனாயிருக்கும் நீ, எங்களிடம் வா. நீ நண்பனான தவத்தோடு எங்கள் பகைவர்களை ஜயிக்கவும். நட்பற்றவர்களை அழிப்பவனும், விருத்திரர்களைக் கொல்பவனும், தஸ்யுக்களைத் துளைப்பவனுமான நீ, எங்களுக்கு எல்லாச் செல்வங்களையுமளிக்கவும்.

4. மன்யுவே! ஜயிக்கும் சக்தியுள்ளவனும், சுவஸ்பூவும், பயங்கரனும், பகைவர்களை வெல்லுபவனும், அனைவரையும் பார்ப்பவனும், நிலைத்திருப்பவனும், வலியனுமான நீ, எங்களுக்குப் போர்களிலே பலத்தை அளிக்கவும்.

5. பேரறிஞனான மன்யுவே! வலியனான உன்னுடைய செயலோடு நான் கலந்துகொள்ளவில்லை. ஆதலால் என் பகைவர்களிடமிருந்து பின் வாங்கினேன். மன்யுவே! செயலற்ற நான் உன்னிடம் கோபமானேன். ஆதலால் என் தேகத்தோடுள்ள நீ, பலத்தையளிக்க என்னிடம் வரவும்.

6. ஜயிப்பவனே! அனைவரையும் தாங்குபவனே! நீ இங்கு வா. நான் உனக்கு உரியனாயிருக்கிறேன். நீ முன்னே என்னை நோக்கவும். மன்யுவே! வச்சிராயுதம் ஏந்தும் நீ என்னிடம் வா. நாம் தஸ்யுக்களை அழிப்போமாக. உன்னுடைய பந்துவை ஞாபகஞ் செய்துகொள்ளவும்.



7. அணுகவும். எனது வலது பக்கத்திலிருக்கவும். நாம் பகைவர் கூட்டத்தை அழிப்போமாக. நான் இனியதும் உத்தமமாயுமுள்ள ஸோமத்தை உன்னை ஆதரிக்க உனக்களிக்கிறேன். நாம் அதைத் தனிமையாய்ப் பருகுவோமாக. 9658

## 84. மன்யு

### 921. மன்யு – தவத்தின் புதல்வன்

1. மன்யுவே! முன்னேறுபவர்களும், எக்களிப்பவர்களும், உக்கிரர்களும், ஆயுதங்களைக் கூர்செய்துகொள்பவர்களும், கூரிய சரங்களை ஏந்துபவர்களுமான வீரத் தலைவர்கள் அக்கினி வடிவமெடுத்து, மருத்துக்களால் பின்பற்றப்படும் உன்னோடு ஒரே தேரிலே ஏறி, போருக்குச் செல்வார்களாக.

2. மன்யுவே! அக்கினியைப் போல் சொலித்து, சத்துருக்களை ஜயிக்கவும். ஜயிப்பவனான நீ போரிலே அழைக்கப்படுங்கால் எங்கள் படைத் தலைவனாயிருக்கவும். பகைவர்களை அழித்து அவர்களுடைய செல்வத்தை எங்களுக்குப் பகிர்ந்தளிக்கவும். எங்களைப் பலப்படுத்திப் பகைவர்களையழிக்கவும்.

3. மன்யுவே! எங்களை எதிர்ப்பவனை ஜயிக்கவும். எங்கள் பகைவர்களை எதிர்த்து, புண்படுத்தி, கொன்று, அழித்து முன்னேறவும். உன் உக்கிர பலத்தை எவன் தடுப்பான்? ஒரு நண்பனும் இல்லாத நீ, அவர்களை நடத்தி வசப்படுத்துகிறாய்.

4. மன்யுவே! நீ ஒருவனாகவே பல பகைவர்களை ஜயிப்பவன் எனப் போற்றப்படுகிறாய். எல்லா சத்துரு சனங்களோடும் போராட எங்களை ஊக்கப்படுத்தவும். பூரண காந்தியுள்ளவனே! உன்னைத் துணைவனாக

அடைந்துள்ள நாங்கள் விஜயத்துக்கு வெற்றி கோஷத்தை எழுப்புவோம்.

5. மன்யுவே! நீ இந்திரனைப்போல் ஜயத்தை அளிப்பவன். குற்றமில்லாதவன். நீ எங்களுடைய உத்தமத் தலைவனாயிருக்கவும். ஜயிப்பவனே! தாங்கள் உன்னுடைய பிரிய நாமத்துக்குத் துதிகளைப் பாடுகிறோம். நீ எந்த சுனையிலிருந்து இங்கு வந்தாயோ, அந்தச் சுனையை நாங்கள் அறிகிறோம்.

6. மன்யுவே! அழிக்கும் வச்சிராயுதனும், பகைவர்களை ஜயிப்பவனும், ஜயத்தோடு இரட்டையர்களாகப் பிறந்தவனுமான நீ, மிக்க அதிகமான பலத்தை அடைந்திருக்கிறாய். செயல்களில் எங்களிடம் அநுகூலமாயிருக்கவும். பலரால் போற்றப்படும் நீ, மகத்தான போரின் அதிர்ச்சியிலும் எங்களிடம் அநுகூலமாயிருக்கவும்.

7. வருணனும் மன்யுவும் பூரணமாயிருப்பதும், திரட்டப்பட்டதுமான இருவித செல்வங்களை எங்களுக்களிப்பார்களாக. இருதயங்களிலே பயத்தை ஏந்தும் சத்துருக்கள் ஜயிக்கப்படுவார்களாக. அடியோடு அழிக்கப்படுவார்களாக. 9665

# 85. திருமணம்

## 922. சூரியை—ஸவிதாவின் புதல்வி

### ஸோமன்

1. சத்தியத்தால் புவி ஏந்தப்படுகிறது. சோதி சூரியனால் ஏந்தப்படுகிறது. ருதத்தால் ஆதித்தியர்கள் நிறுத்தப்படுகிறார்கள். ஸோமன் சோதியிலே உயர்ந்தவனாயிருக்கிறான்.

2. ஸோமனால் ஆதித்தியர்கள் சக்தியுடனிருக்கிறார்கள். ஸோமனால் புவி மகத்தாயிருக்கிறது. ஸோமன் இந்த நட்சத்திரங்களின் நடுவிலிருக்கிறான்.



3. பருகியவன் மானிடர்களால் பிழியப்பட்ட ஓஷதியை ஸோமன் என நினைக்கிறான். பிராமணர்கள் அறியும் ஸோமனை எவனும் அருந்துவதில்லை.

4. ஸோமனே! போர்த்தும் விதிகளால் பாலிக்கப்படுபவனும், பிரகத் ஸாமங்களால் காக்கப்படும் நீ, கற்களுக்குச் செவிகொடுத்து நிற்கிறாய். புவியிலுள்ள எவனும் உன்னைப் பருகுவதில்லை.

5. தேவனே! அவர்கள் உன்னைப் பருகத் துவங்குங்கால் நீ மீண்டும் பெருகுகிறாய். வாயு ஸோம பாலகனாயிருக்கிறான். ஸோமன் வருஷங்களைக் கற்பிக்கிறான். 9670

### சூரியையின் திருமணம்

6. ரைபீ அவளுடைய மணத் தோழியாயிருந்தாள். நாராசம்ஸீ அவளுடைய தாஸியாயிருந்தாள். சூரியையுடைய அழகான ஆடை காதையால் அலங்கரிக்கப்பட்டிருந்தது

7. சித்தி -மனம்- அவளுடைய தலையணையாயிருந்தது. கண்களுக்குக் காட்சியே அஞ்சனமாயிருந்தது. அவள் கணவனிடம் சென்றபோது சோதி புவிகளே கோசமாயிருந்தது.

8. ஸ்தோமங்கள் அவள் ஏறிய தேரின் குறுக்குச் சட்டங்களாயிருந்தன. குரீரச் சந்தம் தேரை அலங்கரித்தது. அசுவினிகள் மணமகனுடைய-ஸோமனுடைய-நண்பர்களாயிருந்தார்கள். அக்கினி பவனியின் தலைவனாயிருந்தான்.

9. ஸோமன் மணமகளை நாடினான். ஸவிதா விருப்பமுள்ள சூரியைக் கணவனிடம் அளித்தபோது அசுவினிகள் மருமகனுடைய தோழர்களாயிருந்தார்கள்.

10. அவளுடைய உள்ளம் மணத் தேராயிருந்தது. சோதி பந்தலாயிருந்தது. சூரியை தன்னுடைய கணவனின் மனைக்குச் சென்றபோது அவளுடைய தேரைப் பிரகாசிக்கும் இரு காளைகளான சூரியனும் சந்திரனும் இழுத்தார்கள். 9675

11. ரிக்காலும் ஸாமனாலும் இணைக்கப்பட்ட அவ்விரு காளைகள் ஸமமாய் இசைந்து செல்லுகின்றன. இரு சக்கரங்களும் உன்னுடைய செவிகளாயிருந்தன. செல்லும் வழி சோதியிலிருந்தது.

12. நீ சென்றபோது உன்னுடைய தேரின் சக்கரங்கள் சுத்தமாயிருந்தன. வியானன்—வாயு—இணைக்கப்பட்ட அச்சாயிருந்தான். கணவனிடம் செல்லும் சூரியை மனோமயமான தேரிலே ஏறினாள்.

13. ஸவிதாவால் நடத்தப்பட்ட மணமகளான சூரியையின் பவனியானது முன்சென்றது. மக நட்சத்திரங்களிலே காளைகள் அடிக்கப்பட்டன. அர்ஜுனி நட்சத்திரங்களிலே அவள் கணவனுடைய மனைக்கு ஏந்தி செலுத்தப்பட்டாள்.

14. அசுவினிகளே! உங்களுடைய முச்சக்கரத் தேரிலே, ஸோமனோடு மணஞ்செய்துகொள்ள சூரியையின் தந்தையை நாடியபோது தேவர்கள் எல்லாம் அம் மணத்துக்குச் சம்மத மளித்தார்கள். உங்கள் புதல்வனை பூஷா—ஸவிதா—உங்களைப் பிதாக்களாக, பாலகர்களாகத் தெரிந்தெடுத்தான்.

15. சலத்தின் தலைவர்களான நீங்கள் அளிப்பவனை—ஸவிதாவினிடம்—சூரியையை அழைத்துச் செல்ல வந்தபோது உங்களுடைய தேரின் ஒரு சக்கரம் எங்கிருந்தது? நீங்கள் ஸவிதாவின் அழைப்புக்கு எங்கு நின்றீர்கள்? 9680

16. சூரியை தனக்குத் தானாகவே சொல்லிக்கொள்கிறாள். சூரியையே! உன்னுடைய தேரின் இரு சக்கரங்களை அறிஞர்கள் ருதுக்களிலே அறிகிறார்கள். மறைந்துள்ள தேரின் ஒரு சக்கரத்தை இரு சக்கரங்களான சோதிபுவிகளுக்கப்பால் சூட்சம உலகத்தையும் பேரறிஞர்கள் அறிகிறார்கள்.



### தேவர்கள்

17. நான் இந்த வணக்கத்தைச் சூரியனுக்கும், தேவர்களுக்கும் மித்திராவருணர்களுக்கும் படைக்கப்பட்ட சீவர்களிடம் அன்புடனிருப்பவர்களுக்கும் செலுத்துகிறேன்.

### ஸோமனும் சூரியனும்

18. தங்களுடைய சொந்த தன்மைகளால் சூரியனும் சந்திரனும் ஒருவரையொருவர் தொடர்ந்து செல்லுகிறார்கள். அவர்கள் விளையாடும் குழந்தைகளைப்போல் யக்ஞத்தைச் சுற்றி வருகிறார்கள். இவர்களில் ஒருவன்—சூரியன்—எல்லா புவனங்களையும் பார்க்கிறான். மற்றவன் சந்திரன்—ருதுக்களைக் கிரமப்படுத்தி அடிக்கடி பிறக்கிறான்.

### சந்திரன்

19. புதியவனாய்த் தினந்தோறும் சந்திரன் பிறக்கிறான். தினங்களைப் புலப்படுத்தும் அவன்—கிருஷ்ண பட்ச சந்திரன், உஷைகளின் முன்னே செல்லுகிறான். அவன் செல்லுங்கால் தேவர்களுக்கு உரிய பாகத்தை அளிக்கிறான். சந்திரன் தீர்க்காயுளை நீட்டுகிறான்.

### திருமண மந்திரங்கள்

20. சூரியையே! நல்ல கீம் சுகத்தினாலும் சல்மலியாலும் கற்பிக்கப்பட்டதும், விசுவ ரூபமுள்ளதும், பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும், நன்கு இயங்குவதும், நல்ல சக்கரமுள்ளதுமான தேரிலே ஏறவும். உனது கணவனுக்கு சுகப்படுத்தும் உலகத்தையும் திருமண பவனியையும் இயக்கவும். 9685

21. இங்கு இருந்து எழுந்திருக்கவும். விசுவாவசுவே! இவளுக்குக் கணவனிருக்கிறான். நான் விசுவாவசுவான உன்னை வணக்கத்தோடும், துதிகளோடும் வணங்குகிறேன். தந்தையின் மனையிலே அழகோடிருக்கும் வேறு கன்னிகையை விரும்பவும். அதுவே உன்

னுடைய பாகம். இதைத் தெரிந்து கொள்ளவும். உன்னுடைய பிறப்பிலிருந்தே அதைப் பற்றவும்.

22. விசுவாவசுவே! இங்கிருந்து எழுந்திருக்கவும். நாங்கள் உன்னை வணக்கத்தோடு துதிக்கிறோம். பெரிய நிதம்பங்களுள்ள வேறு பெண்ணை விரும்பவும், மனைவியைக் கணவனோடு விடவும்.

23. மணமகளின் தந்தையின் மனைக்குச் செல்லும் நண்பர்களுடைய வழிகள் நேராகவும் முட்களன்னியிலும் விளங்குக. அர்யமானும், பகனும் எங்களைச் செலுத்துவார்களாக. தேவர்களே! தம்பதிகளுடைய ஐக்கியத்தைப் பூர்த்தி செய்யுங்கள்.

24. நான், உன்னைத் துதியாருகனால், ஸவிதாவால் கட்டப்பட்டிருந்த வருணனுடைய பாசத்திலிருந்து விடுவிக்கிறேன். நான் யக்ஞத்தின் இடத்திலே நல்ல செயல்களுள்ள உலகத்திலே, உன்னைத் துன்பமாகாமல் கணவனோடு இணைக்கிறேன்.

25. நான் உன்னை இங்கிருந்து – தந்தையின் மனையிலிருந்து–விடுவிக்கிறேன். அங்கிருந்து – கணவனுடைய மனையிலிருந்து - விடுவிக்கவில்லை. அங்கு புருடனுடைய மனையிலே நன்கு பந்தப்படுத்துகிறேன். இந்திரனே! வர்ஷிப்பவனே! அங்கு உத்தமப் புதல்வர்களுடனும், சௌபாக்கியத்துடனும் உன்னால் வாழ்வாளாக. 9690

26. பூஷா உன்னைக் கையால் பற்றி இங்கிருந்து நடத்திச் செல்வானாக. அசுவினிகள் தங்கள் தேரிலே உன்னை ஏந்திச் செல்வார்களாக. நீ மனையின் தலைவியாயிருப்பதால் கணவனுடைய மனைக்குச் செல்லவும். கணவனுக்குப் பணிந்து மனையிலுள்ளவர்களை நடத்தவும்.

27. உன்னுடைய கணவனுடைய இந்தக் குடும்பத்திலே சந்தானத்தோடு அன்பு பெருகுக. நீ இந்த மனையிலே உன் குடும்பத்தை நடத்த விழித்திருக்கவும். நீ இந்தக் கணவனோடு உன் தேகத்தை ஐக்கியஞ் செய்து



கொள்ளவும். நீங்கள் இருவரும் முதுமையோடு வளர்ந்து உங்கள் குடும்பத்தை நடத்துங்கள்.

28. அவள் வடிவம் சிகப்பாயும் நீலமாயுமிருக்கிறது. அவளைப் பிடித்திருந்த கிருத்யை விலக்கப்பட்டாள். அவளுடைய பந்துக்கள் செழிக்கிறார்கள். கணவன் பந்தங்களோடு பந்தமாயிருக்கிறான்.

### அழுக்காடைகள்

29. தேகத்தால் அழுக்கடைந்த ஆடையை நீக்கவும் அறிஞர்களுக்குச் செல்வத்தை அளிக்கவும். இந்தக் கிருத்யைக் கால்களுடனாகி, கணவனுடைய இருதயத்திலே மனைவியாக நுழைகிறாள்.

30. கணவன் தன் மனைவியின் ஆடைகளால் தன்னுடைய சொந்த அங்கங்களைப் போர்த்திக்கொள்ள விரும்புங்கால் இந்தத் துட்டையான கிருத்தியையோடு விளங்கும்போது கணவனுடைய தேகம் எழிலில்லாமலாகிறது. 9695

### யட்சம நாசம்

31. துதியாருகர்களான தேவர்கள் மணமகளின் பிரகாசமான பவனியைப் பின்பற்றும் சனங்களிடமிருந்து வரும் க்ஷய நோய்களை மீண்டும் வந்த இடத்துக்கே செலுத்துவார்களாக.

### சூரியை

32. கணவனையும் மனைவியையும் அணுகும் திருடர்கள் அவர்களைப் பற்றாமலிருக்க. அவர்கள் இனிய வழிகளால் துன்பத்தைக் கடப்பார்களாக. பகைவர்கள் விலகுவார்களாக.

33. இந்த மணமகள் சுமங்கலி. நீங்கள் அனைவரும் வாருங்கள். அவளைப் பாருங்கள். நீங்கள் அவளுக்கு உங்கள் சௌபாக்கியத்தை அளித்து, உங்களுடைய பல மனைகளுக்குச் செல்லுங்கள்.

34. இவ்வாடை காரமுள்ளது. கசப்புள்ளது. ஸாரமற்ற ஸோமத்தைப் போலிருக்கிறது. நஞ்சைப் போல் தோன்றுகிறது. இது அணியத் தகுந்ததில்லை. சூரியையை அறியும் அறிஞன் மணமகளின் ஆடைக்கு அருகனுகிறன்.

35. சூரியையின் வடிவங்களை — நிறமுள்ள ஆடைகளை—கரையுள்ள ஆடையை, தலையிலணியும் ஆடையை, பிரித்துச் சேர்த்த ஆடையைப் பார்க்கவும். அறிஞன் அவற்றை சுத்தப்படுத்துகிறன். 9700

36. நீ கணவனுன என்னோடு முதுமைப் பருவமடைய நான் உன்னுடைய கையை சௌபாக்கியத்துக்காகப் பற்றுகிறேன். நான் குடும்பத்தின் தலைவனுயிருக்கத் தேவர்களான பகனும், அரியமானும், ஸவிதாவும், புரந்தீயும் உன்னை எனக்கு அளித்தார்கள்.

37. பூஷா மிக்க மங்கலமாயிருக்கும் அவளில் மானிடர்கள் பீஜத்தைத் தெளிக்கவும். மிக்க அன்புடனிருக்கும் அவள் எங்களோடு இசைந்திருக்கவும், விருப்பத்தால் ஆர்வமாகி, அவளில் நாங்கள் பிரசையைத் தோற்றுவிக்கவும் ஊக்கப்படுத்துவாருக.

38. அக்கினியே! கந்தர்வர்கள் உனக்கு மணமகளின் ஆபரணங்களோடு சூரியை அளித்தார்கள். அக்கினியே! கணவர்களான எங்களுக்கு மனைவியைப் பிரஜையோடு மீண்டும் அளிக்கவும்.

39. அக்கினி மனைவியை மீண்டும் ஆயுளோடும் ஒளியோடும் தந்தான். அவளுக்குக் கணவனுயிருப்பவன் நீண்ட ஆயுசை அடைந்து நூறு வருடங்கள் வாழ்வாருக.

40. ஸோமன் அவளை முதலில் அடைந்தான். பிறகு அவளைக் கந்தர்வன் அடைந்தான். அக்கினியான நீ உன்னுடைய மூன்ருவது கணவனுயிருந்தான். உன்னுடைய நான்காவது கணவன் மானிடனுய்த் தோன்றுகிறன். 9705



41. ஸோமன் அவளைக் கந்தர்வனுக்கு அளித்தான். கந்தர்வன் அவளைக் கந்தர்வனுக்களித்தான். அக்கினி அவளை எனக்குச் செல்வத்தோடும் புதல்வர்களோடு மளித்தான்.

42. நீங்கள் இருவரும் இங்கு சேர்ந்திருங்கள். நீங்கள் பிரியாமலிருங்கள். நீங்கள் புதல்வர்களோடும், பேரர்களோடும் விளையாடிக் கொண்டு உங்களுடைய சொந்த மனையிலே இன்பமாகி, உங்கள் ஆயுட் காலமெல்லாம் நீங்கள் சேர்ந்து வசியுங்கள்.

43. பிரஜாபதி எங்களுக்கு பிரசையைப் பிறப்பிப்பாருக. அரியமான் மூப்பு வரை எங்கள் இருவரையும் சேர்த்து இணைப்பாருக. நீ எல்லா கெட்ட அங்கங்களிலிருந்து நீங்கி கணவனுடைய மனைக்குச் செல்லவும். எங்களுடைய ஆட்களுக்கும் கால்நடைகளுக்கும் சுகத்தைத் தருபவளாயிருக்கவும்.

44. கோபக் கண்ணோடு உன் கணவனை நோக்காதே. கணவனை எதிர்ப்பவளாயிருக்காதே. பசுக்களிடம் அன்புடனிருக்கவும். நல்ல மனமுடனிருக்கவும். நல்ல புகழுடனிருக்கவும். வீரப் புதல்வர்களின் தாயாயிருக்கவும். தேவர்களை விரும்பவும். சுகத்தைத் தருபவளாயிருக்கவும். எங்களுடைய ஆட்களுக்கும் கால்நடைகளுக்கும் செல்வத்தைத் தருபவளாயிருக்கவும்.

45. வர்ஷிப்பவனுன இந்திரனே! இவளைக் கணவனுக்குப் பிரியமுள்ளவளாகவும், புதல்வர்களின் தாயாகவும் செய்யவும். அவளுக்குப் பத்து புதல்வர்களை அளிக்கவும். பதியைப் பதினென்ருவது மகனுகச் செய்து கொள்ளவும்.

46. நீ உன்னுடைய மாமனுக்கு அரசியாயிருக்கவும். மாமிக்கு அரசியாயிருக்கவும். கணவனுடைய சகோதரிக்கு அரசியாயிருக்கவும். கணவனுடைய சகோதரர்களுக்கு அரசியாயிருக்கவும்.

47. விசுவேதேவர்கள் நம்மிருவருடைய இருதயங்களையும் இணைப்பார்களாக. அவற்றை சலங்கள் இணைப்பார்களாக. மாதரிசுவானும், தாத்ருவும், தான மனமுள்ள ஸரஸ்வதியும் நம்மிருவருடைய இருதயங்களையும் இணைப்பார்களாக. 9712

## 86. இந்திரன்

### 923. இந்திரன் – இந்திராணி – விருஷாகபி

1. இந்திரன் பேசுகிறான்: மானிடர்கள் ஸோமத்தைப் பொழியத் தவறினார்கள். சிறந்த விருஷாகபி என்னுடைய நண்பனாகி இன்பமடைந்த செழிப்பான யக்ஞங்களிலே அவர்கள் தேவனான இந்திரனைப் போற்றவில்லை. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

2. இந்திராணி பேசுகிறாள் : இந்திரனே ! நீ மிக்க வருந்தி விருஷாகபியை நோக்கிச் செல்லுகிறாய், நீ ஸோமத்தைப் பருக வேறு இடத்தைக் காணவில்லை. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

3. நீ கபில நிறமுள்ள மிருகனான விருஷாகபிக்குப் புஷ்டியையும், செல்வத்தையும் வள்ளலைப்போல் தந்தாய். இவன் உனக்கு என்ன நன்மையைச் செய்தான் ? இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

4. இந்திரனே ! உன்னால் பிரியமுள்ள புதல்வனைப் போல் பாலிக்கப்படும் இந்த விருஷாகபியைப் பன்றியைத் துரத்தும் நாய், செவியால் பிடித்துப் புசிக்க. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

5. வழிபடுபவர்களால் எனக்களிக்கப்பட்ட பிரியமுள்ளவையும். நெய் சொலிப்பவையுமான அவிகளை விருஷாகபி கொடுத்தான். நான் அவனுடைய தலையைத் துணிப்பேனாக. தீமை செய்பவனுக்குத் தீமையே தோன்றுக. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான். 9717



6. ஸ்திரீகளிலே என்னைப்போல் மிக்க இனியவள் வேறு எவளும் இல்லை. உத்தமப் புதல்வர்களை ஏந்துபவளும் இல்லை. என்னைப்போல் இயக்குபவளும், இன்புறுத்துபவளும் வேறு எவளுமில்லை. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

7. விருஷாகபி பேசுகிறான்: தாயே ! இனிய இணக்கமுள்ள உனக்கு நீ கூறியதுபோல தோன்றும் என் தந்தையும், தாயும் சேர்வார்களாக. அது என் தந்தையையும், பறவையைப்போலுள்ள உன் தலையையும் இன்புறுத்துக. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

8. இந்திரன் பேசுகிறான் : அழகிய கைகளும் அழகிய விரல்களும், நீண்ட கேசங்களும், பரந்த சகனங்களுமுள்ளவளே ! சூரனுடைய மனைவியே ! நீ ஏன் நம்முடைய விருஷாகபியினிடம் கோபமாகிறாய் ? இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

9. இந்திராணி பேசுகிறாள் : இந்தக் குரூரமான மிருகம் என்னைப் பாலிக்க எவளும் இல்லை என அசட்டை செய்கிறது. ஆனால் நான் புதல்வர்களுள்ள தாய். மருத்துக்களோடுள்ள இந்திரனுடைய மனைவி என்பதை அது அறியவில்லை. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

10. யக்ஞத்தை விதிப்பவளும், வீரப்புதல்வர்களின் தாயும், இந்திரனுடைய மனைவியுமான அன்னை முதலிலே ஐக்கிய யக்ஞத்துக்கும், போருக்கும் செல்லுகிறாள். துதிப்பவர்களால் போற்றப்படுகிறாள். இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான். 9722

11. இந்திரன் பேசுகிறான்: நான் ஸ்திரீகளின் நடுவே இந்திராணி மிக்க சௌபாக்கியமுள்ளவள் எனக் கேட்டிருக்கிறேன். ஏனெனில் அவளுடைய கணவனான இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான். ஏனெனில் அவனுக்கு மூப்பால் இறப்பே இல்லை.

12. இந்திராணியே! என்னுடைய நண்பனான விருஷாகபியின் இங்கும் தோன்றும் விரும்பத்தகுந்த அவி சலத்தால் சுத்தமாகி தேவர்களிடஞ் செல்லுகிறது. ஆதலால் அவனில்லையேல் எனக்கு இன்பமில்லை. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

13. விருஷாகபி பேசுகிறான்: விருஷாகபியின் தாயே! உத்தமப் புதல்வர்களும், உத்தம மருமகள்களும் உள்ள செல்வியே! இந்திரன் உன்னுடைய காளைகளைப் புசிப்பானாக. அவனுக்குப் பிரியமுள்ளதும், இன்புறுத்துவதுமான அவியை அளிக்கவும். இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

14. இந்திரன் பேசுகிறான்: வழிபடுபவர்கள் எனக்குப் பதினைந்து காளைகளையும், இருபது காளைகளையும் பக்குவப்படுத்துகிறார்கள். நான் அவற்றைப் புசிக்கிறேன். பருமனுடனாகிறேன். அவை என் உதரத்தின் இரு பக்கங்களையும் நிரப்புகின்றன. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

15. இந்திராணி பேசுகிறாள்: மந்தைகளின் நடுவே கர்ச்சிக்கும் காளையைப் போலுள்ள நீ, உன்னுடைய இருதயத்தை உன் மொழிவால் இன்பஞ் செய்து கொள்ளவும். உன்னை இன்புறுத்த விரும்பும் அவள் உனக்காக உன் மொழிவை வெளிப்படுத்துகிறாள். இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான். 9727

16. ஆற்றலற்றவனுக்குப் பிரஜை தோன்றாது. ஆற்றலுள்ளவனுக்கே ஸந்தானம் தோன்றும். இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருகிகிறான்.

17. இந்திரன் பேசுகிறான்: ஆற்றலுள்ளவனுக்குப் பிரஜை தோன்றும். ஆற்றலற்றவனுக்குத் தோன்றாது. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

18. இந்திராணி பேசுகிறாள்: இந்த விருஷாகபி இறந்த காட்டுமிருகத்தைக் கண்டான் அதை வெட்ட



கத்தியை எடுப்பானாக. அவன் அடுப்பையும், புதிய பாண்டத்தைக் கட்டை நிறைந்த சகடத்தையும் பற்றுவானாக. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

19. இந்திரன் பேசுகிறான்: நான் யக்ஞத்துக்கு வருகிறேன். வழிபடுபவர்களைப் பார்க்கிறேன். தாஸனையும், ஆரியனையும் தெரிந்து கொள்கிறேன். பக்குவ மனத்தோடு ஸோமத்தைப் பிழியும் வழிபடுபவனுடைய ரஸத்தை நான் பருகுகிறேன். நான் தீரனைக் கவனிக்கிறேன். இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

20. விருஷாகபியே! பகைவர் பதுங்கியிருக்கும் பாலைவனத்திலிருந்தும், வனத்திலிருந்தும், அங்கிருந்து எத்தனை தூரத்திலிருந்தாலும், அங்கிருந்தும், அருகிலுள்ள இடத்திலிருந்தும் யக்ஞத்தின் சதனங்களுக்கு மனைக்குச் செல்லவும். 9732

21. விருஷாகபியே! நாங்கள் உனக்கு இதமாயுள்ளவற்றைச் செய்ய நீ திரும்பி வா. உறக்கத்தை அழிப்பவனான நீ, வழியால் மீண்டும் மனைக்கு வா. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

22. இந்திரனே! விருஷாகபியே! எழுந்திருங்கள். மனைக்கு வாருங்கள். மனிதர்களை இன்புறுத்தும், அழிக்கும் அந்த சக்தி எங்கு சென்றது? எந்த இடத்துக்குச் சென்றது? இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான்.

23. மநுவின் புதல்வியான பர்சு என்னும் பெயருள்ளவள் இருபது குழந்தைகளைச் சேர்ந்து பிறப்பித்தாள். இந்திரனுடைய சரமே சந்தானம் செழித்த உதரமுள்ள அவளுக்கு மங்களம் தோன்றுக. இந்திரன் எல்லா உலகத்துக்கும் தலைவனாயிருக்கிறான். 9735

# 87. இரட்சோஹாக்கினி

## 924. பாயுர் பாரத்வாஜன்

1. நான் ஆற்றலுள்ளவனும், அரக்கரையழிப்பவனுமான அக்கினிக்கு ஆஹுதியையளிக்கிறேன். நான் மிக்கப் புகழுள்ள நண்பனிடம் தங்கப் போகிறேன். எங்கள் யக்ஞங்களால் சொலிப்பிக்கப்பட்டு கூர்ப்பிக்கப்படும் அக்கினி, எங்களைத் தீமையிலிருந்து இரவும் பகலும் பாலிப்பானாக.

2. ஜாதவேதஸனே! இரும்புப் பற்களுள்ள நீ, சொலிப்பிக்கப்பட்டவுடன், உன் சுவாலையால் யாதுதானர்களைத் தரிசிக்கவும். உன் நாக்கால் அழிக்கும் அரக்கர்களை அழிக்கவும். மாமிசம் புசிப்பவர்களை வெட்டி உன் வாயினுள் செலுத்திக்கொள்ளவும்.

3. அக்கினியே! அரக்கர்களை அழிப்பவனும், இருவரிசை பற்களுள்ளவனுமான நீ, அவற்றைக் கூர்ப்பித்துக் கொண்டு அரக்கர்களிடம் செலுத்தவும். மேல் உலகத்தையும், கீழுலகத்தையும் பாலிக்கவும். துலங்கும் நீ, வானிலே அரக்கர்களை எதிர்த்துச் செல்லவும். உன் வாய்களால் யாதுதானர்களைப் புசிக்கவும்.

4. அக்கினியே! எங்களுடைய யக்ஞங்களாலும், துதியாலும் வளைந்த சரங்களைச் சீர்படுத்தி, அம்புகளைக் கூர்மை செய்து, யாதுதார்களின் இருதயத்திலே உன் காந்தியோடு செலுத்தவும். உன்னை எதிர்க்க உயர்த்தியுள்ள அவர்களுடைய கைகளை உடைக்கவும்.

5. அக்கினி ஜாதவேதஸனே! யாதுதானனின் சர்மத்தைக் கிழிக்கவும். வெட்டவும். உன்னுடைய அழிக்கும் வச்சிராயுதம் அவனை அதன் நெருப்பால் அழிக்க. அவனுடைய கணுக்களை ஒடிக்கவும். புலாலை விரும்புபவனும், புலாலைப் புசிப்பவனும், தன் சிதைந்த தேகத்தைப் புசிப்பானாக. 9740



6. அக்கினி ஜாதவேதஸனே! இப்பொழுது நீ அவனைப் பார்க்குங்கால், அவன் நின்றிருந்தாலும், சென்றிருந்தாலும், வானிலே வழிகளிலே இயங்கியிருந்தாலும், விற்காரனான நீ, உன் அம்புகளைக் கூர் செய்து அவற்றால் அவனை அடிக்கவும்.

7. ஜாதவேதஸனே! நான் பிடிக்கப்பட்டால் நீ உன்னாயுதங்களால் என்னைப் பாலிக்கவும். என்னைப் பற்றிய யாதுதானனிடமிருந்து என்னைப் பாலிக்கவும். அக்கினியே! நீ அவனை முன்னதாகவே அறிந்து உக்கிரமாய்ச் சொலித்து அவனை அழிக்கவும். மாமிசம் புசிப்பவையும், துரிதமாய்ப் பறப்பவையுமான பருந்துகள் அவனைப் புசிக்க.

8. தேவர்களில் மிக்க இளைஞனே! இந்த யக்ஞத்திலே இதைச் செய்யும் யாதுதானன் யார் என எனக்குக் கூறவும். உன்னுடைய சொலிக்கும் சுவாலையால் அவனை அழிக்கவும். நரர்களைக் காண்பவனே! நீ உன் காந்தியால் அவனை வசப்படுத்தவும்.

9. அக்கினியே! உன்னுடைய கூரிய கண்களால் இந்த யக்ஞத்தைப் பாலிக்கவும். அறிஞனான நீ, நாங்கள் செல்வங்களை அடைய இதை முன்னே செலுத்தவும். யாதுதானர்கள் நரர்களைக் காண்பவனும், உக்கிரமாய் சொலித்து அரக்கர்களை அழிப்பவனுமான உன்னைத் துன்புறுத்தாமலிருப்பார்களாக.

10. நரர்களைக் காண்பவனே! மனிதர்களின் நடுவிலிருக்கும் அரக்கனைக் கவனித்துக்கொள்ளவும். அவனுடைய மூன்று தலைகளையும் வெட்டவும். உன் பலத்தால் அவனுடைய இரு பக்கங்களையும் வெட்டவும். யாது-தானனின் முவ்வித கால்களை வெட்டவும். 9745

11. அக்கினி ஜாதவேதஸனே! சத்தியத்தை, அசத்தியத்தால் ஜயிக்கும் யாதுதானன் உன்னுடைய சுவாலைகளின் பந்தத்திலே மும்முறை வருவானாக. உன் திறத்

தால் அவனைத் துலைத்து, அவனை உன்னைத் துதிப்பவனை என்னிடமிருந்து விலக்கவும்.

12. அக்கினியே! நீ எந்தக் கண்ணால் தன் குளம்பால் எதிர்க்கும் யாதுதானனைக் காண்கிறாயோ, அந்தக் கண்ணை கர்ச்சிக்கும் இரு அரக்கர்கள் மீது செலுத்தவும். தெய்வ சோதியுள்ள அதர்வனைப் போல், அசத்தியத்தால் சத்தியத்தை எதிர்க்கும் அறிவிலியான அரக்கனைப் பற்பப்படுத்தவும்.

13. அக்கினியே! இன்று எந்த வன்சொற்களைத் தம்பதிகள் சொல்லுகிறார்களோ, காயகர் கோஷிக்கும் எச்சொற் கொடுமையுண்டோ, மனக்கோபத்தால் தோன்றும் எக்கணையுண்டோ இவ்வனைத்தாலும் யாது-தானர்களின் இருதயத்தைத் துளைத்து விடவும்.

14. உன்னுடைய கொளுத்தும் நெருப்பால் யாது-தானர்களை அழிக்கவும். அக்கினியே! உன்னுடைய தாபத்தால் அரக்கர்களை அழிக்கவும். மூட தேவர்களை — மதியற்ற தேவர்களை — தழலால் தாழ்த்தவும். உக்கிரமாய்ச் சொலித்து, தனக்குத் தானே வாழ்பவர்களை அழிக்கவும்.

15. தேவர்கள் இன்று தீமை செய்பவனை அழிப்பார்களாக. நம்முடைய கொடுஞ் சாபங்கள் அவனை எதிர்க்க. சரங்கள் அசத்தியம் பேசுபவனை அவனுடைய மர்ம ஸ்தானத்திலே அடிக்க. எங்கும் பரவும் அக்கினியின் பந்தத்திலே யாதுதானர்கள் செல்வார்களாக. 9750

16. மனிதனின் மாமிசத்தால் தங்களை நிரப்பிக் கொள்பவர்களும், குதிரைகளுடைய, வேறு மிருகங்களுடைய மாமிசங்களால் தங்களை நிரப்பிக்கொள்பவர்களும், பசுவின் பாலைத் திருடுபவர்களுமான யாதுதானர்களின் தலைகளை உன் சுவாலையால் சேதிக்கவும்.

17. நரர்களைக் காண்பவனே! வருஷந்தோறும் பசுவினிடம் பால் தோன்றுகிறது. அதை யாதுதானன் பருகா



மலிருப்பானாக. அவர்களில் எவனாவது சீம்பாலைப் பருக விரும்பினால் நீ உன்னுடைய சுவாலையால் அவனுடைய மரும ஸ்தானத்தை அழிக்கவும்.

18. யாதுதானர்கள் பசுக்களின் விஷத்தைப் பருகுவார்களாக. அதிதி தீயோர்களைத் தள்ளுவார்களாக. தேவனான ஸவிதா அவர்களை நாசத்துக்குச் செலுத்துவானாக. அவர்கள் ஓஷதிகளின் பாகத்தை இழப்பார்களாக.

19. அக்கினியே! நீ பூர்வத்திலிருந்தே யாதுதானர்-களை எதிர்த்தாய். போர்களிலே உன்னை ஒருபோதும் ஜயிக்கவில்லை. மாமிசம் புசிக்கும் காதகர்களை ஒவ்வொருவனாக பஸ்பப்படுத்தவும். அவர்கள் உன்னுடைய திவ்ய சரத்திலிருந்து தப்பாமலிருப்பார்களாக.

20. அக்கினியே! எங்களைத் தெற்கிலே, வடக்கிலே, மேற்கிலே, கிழக்கிலே பாலிக்கவும். உன்னுடைய அழியாத, சுடப்படுத்துகிற, சொலிக்கிற சுவாலைகளால் காதகனைத் தகிக்கவும். 9755

21. அரசனான அக்கினியே! கவியான நீ உன் காவ்யத்தால் கிழக்கிலே, மேற்கிலே, வடக்கிலே, தெற்கிலே எங்களைப் பாலிக்கவும். நண்பனே! தேயாத நீ உன் நண்பனான என்னை மூப்புக்குப் பாலிக்கவும். அழியாத நீ அழியும் எங்களைப் பாலிக்கவும்.

22. நாங்கள் தினந்தோறும், பலத்திலிருந்து பிறந்தவனும், செயல்களை நிறைவேற்றுபவனும், அறிஞனும், பயங்கர வடிவமுள்ளவனும், தினந்தோறும் வஞ்சகர்களை அழிப்பவனுமான அக்கினியைத் தியானிக்கிறோம்.

23. அக்கினியே! நீ உன்னுடைய எங்கும் பரவும் கூரிய சுவாலையாலும், சுடர் கூர் சரங்களாலும், வஞ்சகர்களான அரக்கர்களைப் பற்பப்படுத்தவும்.

24. அக்கினியே! இந்த யாதுதான தம்பதிகளையும், கிமிதீனிகளையும் பற்பப்படுத்தவும் அறிஞனே! நான்

தடைபடாத உன்னை எனது துதிகளால் கூர்மைப்படுத்துகிறேன்—துதிக்கிறேன். நீ விழித்திருக்கவும்.

25. அக்கினியே! நீ சுவாலையோடு அழிக்கவும். அவர்களை ஒவ்வொரு பக்கத்திலும் உடைக்கவும். யாதுதானனுடைய பலத்தையும் அரக்கனுடைய வீரியத்தையும் புடைக்கவும். 9760

## 88. சூரியனும் வைசுவாநரனும்

### 924. ஆங்கிரஸ மூர்த்தன்வான் அல்லது வாமதேவ்ய மூர்த்தன்வான்

1. பிரியமாயுள்ளதும், அழிவில்லாததுமான ஸோமம் சூரியனைக் காண்பவனும், சோதியில் பரவுபவனும், சுகத்தைத் தருபவனுமான அக்கினிக்கு அளிக்கப்படுகிறது. அவன் சுவதாவால் உலகத்தை ஏந்தவும், தாங்கவும் அவனைத் தேவர்கள் பரத்துகிறார்கள்.

2. உலகம் விழுங்கப்பட்டு இருளால் மறைக்கப்பட்டிருந்தது. அக்கினி பிறந்தான். ஒளி தோன்றிற்று. தேவர்களும், சோதியும் புவியும், சலங்களும், ஓஷதிகளும் அவனுடைய நட்பில் மகிழ்ந்தார்கள்.

3. யக்ஞாருகர்களான தேவர்களால் பிரேரிக்கப்பட்ட நான், தன் ஒளியால் வானையும், இரு உலகங்களையும், புவியையும் சோதியையும் பரத்தியவனும், அமிருதனும், மகானுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

4. தேவர்களால் போற்றப்பட்டு முதல் ஹோதாவாயிருந்தவனும், போற்றுபவர்களால் நெய்யால் பாங்கானவனுமான அக்கினி ஜாதவேதஸன், பறப்பவையையும், நடப்பவையையும், நிலைப்பவையையும், சலிப்பவையையும் துரிதமாய்க் கற்பித்தான்.

5. அக்கினி ஜாதவேதஸனே! நீ சூரியனோடு உலகத்தின் உச்சியிலே நிலைப்பதால் நாங்கள் மந்திரங்களோடும், துதிகளோடும், தோத்திரங்களோடும் உன்



னிடம் வந்திருக்கிறோம். நீ சோதி புவிகளை நிரப்புபவன். நீயே யக்ஞாருகன். 9765

6. அக்கினி இரவிலே எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாயிருக்கிறான். பிறகு காலையிலே யக்ஞாருகச் சூரியனாக உதயமாகி பிறந்தான். துரிதமாய்ச் செல்லும் சூரியன் அறிஞனாயிருப்பதால் வானிலே செல்லுகிறான். அவனை அறிஞர்கள் யக்ஞாருகத் தேவர்களின் பிரக்ஞை எனக் கூறுகிறார்கள்.

7. மானிடர்களின் தேகங்களைப் பாலிப்பவர்களான விசுவேதேவர்கள் துதிமொழியோடு அவியைத் தன் மகிமையால் துலங்கித் தெரிபவனும், காந்தனும், சோதியிலே நிலையுள்ளவனும், பிரகாசிப்பவனுமான இந்த அக்கினிக்கு அளித்தார்கள்.

8. தேவர் முதலில் சூக்த மொழிகளைப் பிறப்பித்தார்கள். பிறகு அக்கினியையும், அப்பால் அவியையும் தோற்றுவித்தார்கள். அவன் இந்தத் தேவர்களின் யக்ஞத்துக்கு அருகனாயிருக்கிறான். அவன் தேகங்களைப் பாலிப்பவனாயிருக்கிறான். அவனை சோதி அறிகிறது. அவனைப் புவியும் சலங்களும் அறிகின்றன.

9. தேவர்களால் பிறப்பிக்கப்பட்டவனும், எல்லாப் புவனங்களாலும் அவிகள் அளிக்கப்பட்டவனும், நேராகச் செல்பவனுமான அக்கினி, தன்னுடைய காந்தியால், மகத்வத்தால், புவியையும் இந்த சோதியையும் தாபப்படுத்தினான்.

10. தேவர்கள் வானிலே தன் ஆற்றல்களால் சோதியையும் புவியையும் நிரப்பும் அக்கினியை ஸ்தோமத்தால் பிறப்பித்தார்கள். அவர்கள் இன்பமளிக்கும் அக்கினியை முவ்வித நிலைகளிலே—அனலிலே, மின்னலிலே, சூரியனிலே நிலைப்படுத்தினார்கள். அவன் பலவித ஓஷதிகளைப் பக்குவப் படுத்துகிறான். 9770

11. யக்ஞாருகர்களான தேவர்கள் அவனையும், அதிதியின் புதல்வனான சூரியனையும், சோதியிலே ஸ்தாபித்தபோது துரிதமாய்ச் சலனமாகும் இருவரான அக்கினியும் வைசுவாநரனும் தோன்றும்போது எல்லாப் புவனங்களும் அவர்களைப் பார்த்தன.

12. தேவர்கள், பிரகாசிக்கும் உஷைகளைப் பரத்துபவனும், சலனமாகுங்கால் தன் ஒளியால் இருளை நீக்குபவனுமான அக்கினி, வைசுவாநரனை எல்லா உலகத்துக்கும் தினங்களின் துவஜமாகக் கற்பித்தார்கள்.

13. அறிஞர்களும், துதியாருகர்களுமான தேவர்கள் அழியாமலுள்ள அக்கினி வைசுவாநரனைப் பிறப்பித்தார்கள். அவன் தன் ஒளியால், துதியாருகத்தேவனைச் செலுத்துபவனும், வலியனும், பெரியவனும், பழையவனும், துரிதமாய்ச் செல்பவனுமான நட்சத்திரத்தை ஜயித்தான்.

14. நாங்கள் மகிமையில் சோதியையும் புவியையும் முந்துபவனும், கீழே உள்ள தேவனும், நமக்கு மேலே உள்ள தேவனும், எப்பொழுதும் பிரகாசிப்பவனும், அறிஞனுமான அக்கினி வைசுவாநரனை மந்திரங்களால் தினந்தோறும் போற்றுகிறோம்.

15. நான் தேவர்களுக்கும், மனிதர்களுக்கும், பிதுருக்களுக்கும் இருவழிகள் உண்டு எனக் கேட்டிருக்கிறேன். தந்தையான சோதிக்கும் தாயான புவிக்கும் நடுவிலுள்ள இந்த உலகமெல்லாம் அதன் வழியிலே இந்த இருவழிகளால் செல்லுகிறது. 9775

16. சலிப்பவனும், தலையிலிருந்து பிறந்தவனும், மனத்தால் தூய்மையடைந்தவனுமான அக்கினியை இணைந்திருக்கும் இருவரான சோதியும் புவியும் தாங்குகிறார்கள். விழித்துள்ளவனும், துரிதனும், காத்தனுமான அவன் எல்லாப் புவனங்களின் முன்னே தோன்றுகிறான்.

17. புவியிலுள்ள அக்கினியும், வாயுவான அக்கினியும் பரஸ்பரம் பேசிக்கொண்டார்கள். தலைவர்களான நம்மிருவர்களிலே எவன் யக்ஞத்தை நடத்த நன்கறிகிறான். பிறகு நண்பர்கள் —ரித்விஜர்கள்— யக்ஞத்தை நடத்தும் ஆற்றலுள்ளவர்களாயிருந்தார்கள். அவர்கள் யக்ஞத்துக்கு வந்தார்கள். இதை எவன் அறிவிப்பான்?



18. எத்தனை அக்கினிகள் இருக்கின்றன? எத்தனை சூரியர்கள் இருக்கிறார்கள்? எத்தனை உஷைகள் இருக்கின்றன? பிதிர்க்களே! நான் பரிகாசத்துக்காகக் கேட்கவில்லை. அறிஞர்களே! நான் உண்மையை அறியக் கேட்கிறேன்.

19. மாதரிசுவனே! துரிதமாய்ச் செல்லும் இரவுகள் உஷையின் முகத்தை மறைக்கும் வரை பிராமணன் ஹோதாவின் கீழே அமர்ந்து யக்ஞத்தை அணுகி யக்ஞத்தை தாங்குகிறான். 9779

## 89. இந்திரன்

### 926. ரேணு - விசுவாமித்திரன்

1. எவனுடைய மேன்மை மற்றவர்களுடைய சிறப்பையும், புவியின் எல்லைகளையும் முந்துகின்றதோ, ஜயிக்கின்றதோ அந்த இந்திரனைப் போற்றவும். மனிதர்களைத் தாங்குபவனும், பரிமாணத்திலே கடலைக் கடப்பவனும், சோதியையும் புவியையும் காத்தியால் நிரப்புபவனுமான இந்திரனைப் போற்றவும்.

2. வீரனான இந்திரன் தேரின் சக்கரங்களைச் சுற்றச் செய்யும் தேரோட்டியைப் போல் ஒளியின் பல கதிர்களை மீண்டும் மீண்டும் வரச் செய்கிறான். அவன் தன் காந்தியால் கனத்த இருட்டைக் களைப்பாகாத, ஊக்கமான குதிரையைப் போல் அழிக்கிறான்.

3. யக்ஞங்களில் தோன்றும் தோத்திரங்களைப் போல் தன் பகைவர்களை ஜயிப்பவனும், தன் நண்பனை நாடாதவனுமான இந்திரனுக்கு சோதியையும் புவியையும் முந்துவதும், ஓயாமலிருப்பதுமான புதிய பாட்டை என்னோடு பாடவும்.

4. நான் இடைவிடாத பெருக்கோடு இந்திரனுக்குத் துதிகளைக் கூறுவேன். நான் வானின் நிலையத்திலிருந்து சலங்களை, சோதியையும் புவியையும் தேரின் சக்கரங்களை நிறுத்தும் அச்சைப் போல் நிறுத்தியவனுமான இந்திரனுக்குச் செலுத்துகிறேன்.

5. கோபத்தைத் தணிப்பவனும், தாக்குபவனும், பகைவரைக் கலக்குபவனும், பெரிய செயல்களை நடத்துபவனும், ஆயுதங்களை ஏந்துபவனும், சாரமற்ற எச்சமுள்ளவனுமான ஸோமன் அதஸ வனங்களைச் செழிப்பிக்கிறான். ஆனால் இந்திரன் ஸோமனுக்கு ஒப்பில்லாத எவற்றையும் ஏற்றுக்கொள்ளான். 9784

6. இந்திரனுடைய கோபம் பகைவர்களிடம் சென்று அவர்களுடைய திறத்தையும், திரத்தையும் அழிக்கும் போது இந்திரனுக்குச் சமமாய் சோதியும் புவியுமில்லை; சலமுமில்லை; வானுமில்லை; மலைகளுமில்லை. அவனுக்கு சோமம் பாய்கிறது.

7. இந்திரன் விருத்திரனை மரத்தை வெட்டும் கோடரியைப்போல் வெட்டினான். அவன் பகைவர்களுடைய புரங்களை இடித்தான். அவன் நதிகளை வெட்டினான். அவன் மேகத்தைப் புதிய பானையைப்போல் உடைத்தான். அவன் மருத்துக்களான நண்பர்களோடு சேர்ந்து பசுக்களை மீட்டான்.

8. இந்திரனே! அறிஞனை நீ வழிபடுபவர்களின் குற்றத்தைத் தண்டிக்கிறாய். நீ அவர்களுடைய பாபங்களை, பசுக்களின் அங்கங்களைத் துணிக்கும் கத்தியைப் போல் வெட்டுகிறாய். நீ மித்திராவருணர்களுடைய நெருங்கிய நண்பனைப்போலுள்ளதுமான தாரகச் செயலைப் பங்கப்படுத்தும் சனங்களை துணிக்கிறாய்.

9. இந்திரனே! வர்ஷிப்பவனே! நீ உன்னுடைய வேகமாயுள்ளதும், வர்ஷிப்பதும், காந்தியுள்ளதுமான வச்சிராயுதத்தை, மித்திராவருணர்களையும், உன்னுடைய



நண்பர்களான மருத்துக்களையும், வருணனையும் பங்கப்படுத்துபவர்களையும், உன்னுடைய பகைவர்களையும் எதிர்க்கக் கூர்மை செய்துகொள்ளவும்.

10. இந்திரன் சோதியையும், புவியையும், சலங்களையும், மேகங்களையும் அரசு புரிகிறான். இந்திரன் முதியவர்களையும், இந்திரன் அறிஞர்களையும் அரசு புரிகிறான். செல்வத்தைச் சம்பாதிக்கவும், பாலிக்கவும், இந்திரனே, அழைக்கத் தகுந்தவன். 9789

11. இந்திரன் இரவுகளைவிடப் பரந்தவன். தினங்களைவிடப் பரந்தவன். வானைவிடப் பரந்தவன். கடலைத் தாங்கும் இடத்தைவிடப் பரந்தவன். காற்றைவிடப் பரந்தவன். வெளியை விட, புவியின் எல்லைகளைவிடப் பரந்தவன். அவன் நதிகளையும் மனிதர்களையும் முந்துகிறான்.

12. இந்திரனே! உன்னுடைய பங்கப்படாத படை, பகைவர்களை எதிர்த்துப் பிரகாசிக்கும் உஷையின் கொடியைப் போலும், சோதியிலிருந்து வீசப்படும் வச்சிரத்தைப் போலும் செல்க. உன்னுடைய கர்ச்சிப்பதும், பஸ்பப்படுத்துவதுமான ஆயதத்தால் துரோகிகளைக் குத்தவும்.

13. இந்திரன் பிறந்தவுடன் அவனை மாதங்களும், வனங்களும், ஓஷதிகளும், மலைகளும், அன்புள்ள சோதியும் புவியும், சலங்களும் பின்பற்றுகின்றன.

14. இந்திரனே! போருக்கு விரைந்த அரக்கர்களை நீ பிளந்தபோது பகைவர்களின்மீது எறிவதற்கான உன்னுடைய ஆயுதம் எங்கிருந்தது? பலி பீடத்திலே பசுக்களைப்போல் நிலத்தில் குழம்பி மித்திரத் துரோகிகள் சயனத்திருந்தபோது உன்னுடைய ஆயுதம் எங்கிருந்தது?

15. இந்திரனே! கூட்டமாய்ச் சேர்ந்து எங்களை உக்கிரமாய் எதிர்த்து எங்களைத் தாக்கும் பகைவர்கள் கனத்த இருளால் மூடப்படுவார்களாக. பிரகாசிக்கும் பகல்களும் இரவுகளும் அவர்களை ஜயிக்க. 9794

16. பல அவிகளும் மனிதர்களின் துதிகளும் உன்னை இன்புறுத்துக. நீ உன்னைப் போற்றும் ரிஷிகளின் இந்த அழைப்பை மதித்து வழிபடும் மற்றவர்களைக் கவனிக்காமல் உன்னுடைய பாலனத்தோடு எங்களிடம் வரவும்

17. இந்திரனே! விசுவாமித்திரத்தில் வந்த நாங்கள் தினத்திலே உன்னுடைய பாலனத்துக்காகப் போற்றி உன்னுடைய பாலிக்கும் சுமதிகளை நாங்கள் பெறுவோமாக. நாங்கள் உன்டைய புதிய சுமதிகளைப் பெறுவோமாக.

18. நாங்கள் இந்தப் போரிலே எங்கள் பாலனத்துக்காக சுத்தனும், செல்வனும், சமரிலே மிக்க வீரமுள்ளவனும், செவி கொடுப்பவனும், உக்கிரனும், களங்களில் விருத்திரர்களைக் கொல்பவனும், பகைவர்களுடைய பொருளைப் பற்றுபவனுமான இந்திரனை அழைக்கிறோம். 9797

# 90. புருடன்

## 927. நாராயணன்

1. புருடன் ஆயிரம் தலைகளும், ஆயிரங் கண்களும், ஆயிரங் கால்களுமுள்ளவன். அவன் புவியின் எல்லாத் திசைகளிலும் பரவி பத்து விரல்கள் அளவுள்ள இடத்தை ஆக்கிரமிக்கிறான்—நிரப்புகிறான்.

2. காணும் இந்த அனைத்தும், இருக்கும் அனைத்தும், இருக்கப்போகும் அனைத்தும் புருடனே! அவன் அமுதத்தின் தலைவன். அவன் சீவர்களின் உணவுக்காகத் தன் தன்மைக்கப்பால் ஏறுகிறான்—பரவுகிறான்.

3. அவனுடைய மகிமை அத்தனை பெரியது. அவன் இந்த மகிமையை முந்தும் மகிமையுள்ளவன். எல்லா சீவர்களும், அவனுடைய கால் மகிமையாகின்றன. அவனுடைய முக்கால் பாகம் அமுதமாவதால் சோதியிலே நிலைக்கிறது.

4. புருடனுடைய முக்கால் பாகம் ஏறிற்று. இந்த உலகத்தில் மிகுதியாயிருந்த கால் பாகம் அடிக்கடி



இயங்குகிறது. அது பல வடிவங்களோடு உயிருள்ள உயிரற்ற பொருள்களுக்கெல்லாம் சென்றது.

5. அவனிடமிருந்து விராஜன் பிறந்தான். விராஜனிடமிருந்து புருடன் பிறந்தான். பிறந்தவுடன் புலனானான். பிறகு பூமியை சிருட்டித்தான். பிறகு தேகங்களை சிருட்டித்தான். 9802

6. தேவர்கள், புருடன் என்னும் அவியால் யக்ஞத்தை நடத்தியபோது, வசந்தம் அதன் நெய்யாயிருந்தது. ஸமிந்தனம் கிரீஷ்மமாயிருந்தது. சரத் அவியாயிருந்தது.

7. அவர்கள் சிருட்டிக்கு முன்னாலிருந்த புருடனை யக்ஞத்திலே பசுவாக சலத்தால் தெளித்தார்கள். பலியிட்டார்கள். ஸாத்தியர்களும், ரிஷிகளுமான தேவர்கள், புருடனை அவியால் யக்ஞத்தை நடத்தினார்கள்.

8. ஸர்வாத்மாவான புருடனளிக்கப்பட்ட யக்ஞத்திலிருந்து தயிரும் நெய்யுஞ் சேர்ந்த கலவை—போகப் பொருள்கள் தோன்றிற்று. பிறகு அவன் வாயுவின் அதீனத்திலுள்ள மிருகங்களையும், வன மிருகங்களையும், கிராம ஜந்துக்களையும் கற்பித்தான்.

9. ஸர்வாஹுதமான அந்த யக்ஞத்திலிருந்து இருக்குக்களும் ஸாமன்களும் தோன்றின. அந்த யக்ஞத்திலிருந்து சந்தங்கள் பிறந்தன. அந்த யக்ஞத்திலிருந்து யஜுர் பிறந்தது.

10. அந்த யக்ஞத்திலிருந்து குதிரைகளும், இரு வரிசைப் பற்களுள்ள எல்லா மிருகங்களும் பிறந்தன. அந்த யக்ஞத்திலிருந்து ஆடுகளும் பிறந்தன. 9807

11. அவர்கள் — தேவர்கள், புருடனைப் பிறப்பிக்குங்கால் அவனை எத்தனை வகைகளால் பலவிதமாய்க் கற்பித்தார்கள்? அவனுடைய முகத்தை எப்படி அழைத்தார்கள்? கைகளையும், தொடைகளையும், கால்களையும் எப்படி அழைத்தார்கள்?

12. பிராமணன் அவனுடைய வாயாயிருந்தான். அவனுடைய கைகளிலிருந்து இராஜன்யன் கற்பிக்கப்பட்டான். அவனுடைய வாமங்கள் வைசியனாயிற்று. அவனுடைய பாதங்களிலிருந்து ஏனையோர் பிறந்தனர்.

13. சந்திரன் மனத்திலிருந்து பிறப்பிக்கப்பட்டான். கண்ணிலிருந்து சூரியன் பிறந்தான். அவனுடைய வாயிலிருந்து இந்திராக்கினிகள் பிறப்பிக்கப்பட்டார்கள். அவனுடைய சுவாசத்திலிருந்து வாயு பிறப்பிக்கப்பட்டான்.

14. அவனுடைய நாபியிலிருந்து வானம் வந்தது. அவனுடைய சிரத்திலிருந்து சோதியும், கால்களிலிருந்து புவியும், செவியிலிருந்து திசைகளும் பிறப்பிக்கப்பட்டன இங்ஙனம் அவர்கள் உலகங்களைக் கற்பித்தார்கள்.

15. தேவர்கள் புருடனைப் பலியாகப் பந்தஞ் செய்து யக்ஞத்தை நடத்தியபோது யக்ஞத்துக்கு ஏழு பரிதிகள் சந்தங்கள் செய்யப்பட்டன. மூவேழு சமிந்தனங்கள், பன்னிரண்டு மாதங்கள், ஐந்து ருதுக்கள், மூன்று உலகங்கள், சூரியன் செய்யப்பட்டன.

16. தேவர்கள் யக்ஞத்தால் யக்ஞனை யஜித்தார்கள். இவை முதல் தருமங்களாயிருந்தன. பழைய சாத்தியர்கள் வசிக்கும் இடமான சுவர்க்கத்துக்கு மகாத்மாக்கள் சென்றார்கள். 9813

## 91. அக்கினி

### 928. அருணன்—வீதஹவ்யன் புதல்வன்

1. எல்லா அவிகளையுமளிப்பவனும், போற்றத் தகுந்தவனும், விபுவும், நல்ல நட்பை விரும்புபவனுக்குப் பிரகாசிப்பவனுமான தானமுள்ளவன், கவனமுள்ள வழிபடுபவர்களால் போற்றப்பட்டு, இளையின் பதத்தில் உணவை விரும்புபவனாயிருக்கிறான். அவன் யக்ஞ ஸதனத்திலே சொலிப்பிக்கப்படுகிறான்.

2. ஒவ்வொரு மனையிலும், அதிதியும், உத்தமப் புகழுள்ளவனுமான அவன் துரிதச் சிறகுள்ள பறவையைப்



போல் ஒவ்வொரு மரத்திலும் இடத்தைக் காண்கிறான். மானிடர்களுக்கு இதமாயிருக்கும் அவன் சீவிக்கும் மனிதனை இகழாமலிருக்கிறான். மானிடப் பிரசைகளின் நண்பனான அவன் ஒவ்வொரு இனத்திலும் வசிக்கிறான்.

3. அக்கினியே! நீ வலிமையால் மிக்க வலியனாயிருக்கிறாய். செயலால் செயல் செய்பவனாயிருக்கிறாய். நீ காவ்யத்தால் கவியாயிருக்கிறாய். நீ அனைத்தையும் அறிகிறாய். நீ செல்வங்களைத் தருபவனாயிருக்கிறாய். நீ தனியனாய் வசிக்கிறாய்.

4. பேரறிஞனான அக்கினியே! நீ இளையின் பதத்திலே ருதத்தோடு இசைந்ததும், நெய்யுள்ளதுமான இடத்திலே நீ அமர்ந்திருக்கிறாய். உன்னுடைய ரசிமிகள் சூரியனுடைய ரசிமிகளைப் போல் அழகுள்ளவையாயும், உஷைகளின் கதிர்களைப் போலும் புலனாகின்றன.

5. அக்கினியே! நீ ஓஷதிகளையும் வனங்களையும் எரித்துவிட்டு, நீங்கி உன் வாயினுள்ளே எல்லாப் பக்கங்களிலிருந்தும் உணவை உன் வாயினுள் செலுத்தும்போது உன்னுடைய ரசிமிகளான செல்வங்கள் வர்ஷிக்கும் மேகத்தின் மின்னல்களைப் போல் பல நிறங்களோடு உஷையின் ஒளிக்கதிர்களைப் போல் பிரகாசிக்கின்றன.
9818

6. ஓஷதிகள் அவனை உரிய பருவத்தில் தரிக்கப்பட்ட கருவைப் போல் ஏந்துகின்றன. தாய்மார்களான சலங்கள் அக்கினியைப் பிறப்பிக்கின்றன. மரங்களும், கரு தரித்த ஓஷதிகளும் தங்களைப் போலுள்ள அவனைத் தினந்தோறும் பிறப்புக்கிறார்கள்.

7. அக்கினியே! காற்றினால் பிரேரிக்கப்பட்டு, காந்தர்களான வனஸ்பதிகளின் நடுவே சென்று உணவைப் புசிப்பவனாய் நீ பரவுங்கால் தகிப்பவனான உன்னுடைய அழியாத ஆற்றல்களான சுவாலைகள் தேரோட்டிகளைப் போல் பாய்கின்றன.

8. அறிவைத் தருபவனும், யக்ஞத்தைச் சித்தப்படுத்து பவனும், தேவர்களை அழைப்பவனும், பகைவர்களை ஜயிக் கும் முதல்வனும், நலங்கூறுபவனும், சின்ன அவியிலும் பெரிய அவியிலும் சமமாய் அழைக்கப்படுபவனும், நாடப் படும் தனியனுமான உன்னையே ஹோதா வேண்டுகிறுன்.

9. வழிபடும் பக்தர்கள் அவிகளை ஏந்தி நறுக்கிய தருப்பையைப் பரத்தி உனக்கு அவிகளை அளிக்கும்போது, அக்கினியே! யக்ஞங்களை நடத்துபவர்கள் உன்னில் நாட்டமாகி இங்கு யக்ஞங்களிலே உன்னையே ஹோதா வாக வேண்டுகிறுர்கள்.

10. அக்கினியே! ஹோதாவின் செயல் உன்னுல் செய்யப்படுகிறது. போதாவின் செயல் உன்னுல் உரிய காலத்தில் செய்யப்படுகிறது. நேத்திரியின் செயல் உன் னுடையது. நீ யக்ஞ கர்த்தாவின் அக்கினியாயிருக் கிறுய். பிரஸ்தோத்திரியின் செயல் உன்னுடையது. நீ அத்வர்யுவால் இயங்குகிறுய். நீ பிரமனுயிருக்கிறுய். நீ எங்களுடைய மனையிலே கிரகபதியாயிருக்கிறுய். 9823

11. அக்கினியே! அமுதனுன உனக்கு அவியளிக் கப்படுங்கால் ஸமிந்தனம் தரும் மனிதனுக்கு நீ ஹோதா வாயிருக்கிறுய். அவனுக்குத் தூதனுகத் தேவர்களிடஞ் செல்லுகிறுய். நீ யக்ஞத்தை நடத்துகிறுய். நீ யஜிக் கிறுய். நீ அத்வர்யுவாயிருக்கிறுய்.

12. எங்களிடமிருந்து இந்தத் தோத்திரங்களும், துதி களும், ரிக்குக்களும், பாக்களும் இசைந்து, செல்வத்தைத் தரும் ஜாதவேதஸனிடம் சென்றன. செல்வத்தை நாடும் மொழிகள் செழிப்பாகுங்கால், செழிப்பிப்பவன் இன்புறு கிறுன்.

13. நான் துதியால் இன்பமாகும் பழைய அக்கி னிக்குப் புதிய நல்ல துதியைக் கூறுவேன். அவன் எங் களைச் செவியுறுவானுக. நான் அவனுடைய இருதயத் தின் நடுவே அதைப் பரிசிக்கக் கணவனுடைய இருதயத்



திலிருக்கும் அன்புள்ளவளும், நல்லாடை அணிந்தவளு மான மனைவியைப் போல் இருப்பேனுக.

14. நான் என்னுடைய எல்லா இதயத்தோடு சுந்தர மான துதியை, சலத்தைப் பருகுபவனும், முதுகில் ஸோமம் சிந்தப்பட்டவனும், யக்ஞத்தை விதிப்பவனும், குதிரைகளும், காளை மலட்டுப் பசுக்களும், ஆடுகளும், ஆஹுதிகளாக அளிக்கப்படுபவனுமான அக்கினிக்குக் கூறுகிறேன்.

15. அக்கினியே! உன்னுடைய வாயினுள், அவி சட்டுவத்தினுள் நெய்யைப் போல், பாண்டத்தினுள் ஸோமத்தைப் போலும் நிரப்பப்படுகின்றன. நீ உண வைத் தருவதும், உத்தம சந்தானமுள்ளதும், புகழுள்ள தும், சிறப்புள்ளதும், மகத்தாயுமுள்ள செல்வத்தை எங் களுக்கு அளிக்கவும், 9828

## 92. விசுவேதேவர்கள்

### 929. சார்யாதன் – மநுவின் புதல்வன்

1. தேவர்களே! நீங்கள் யக்ஞத்தின் ஸாரதியும், தேவர்களின் ஹோதாவும், சனங்களைப் பாலிப்பவனும், இரவின் அதிதியும், பிரகாசிப்பவனுமான அக்கினியைப் போற்றுங்கள். காய்ந்த ஓஷதிகளின் நடுவே சொலிப்ப வனும், பசுந்தரையிலே மேய்பவனும், விருப்பங்களைப் பொழிபவனும், ஒளியின் துவஜமுமான அக்கினி, சோதி யிலே சயனிக்கிறுன்.

2. தேவர்களும், மனிதர்களும் அக்கினியைத் துரிதப் பாலகனுகவும், தாரகனுகவும் யக்ஞத்தைச் சித்தப்படுத்து பவனுகவும் செய்தார்கள். அவர்கள் சூரியனைப்போல் பரந்திருப்பவனும், உஷையின் முன்னேடியும், பிரகாசமா யுள்ள வாயுவின் புதல்வனுமான அக்கினியை அணைத்துக் கொள்கிறுர்கள்–அவனிடம் சேர்கிறுர்கள்.

3. நாங்கள் அவனுடையவும், கருமியினுடையவும் வழிகளைத் தெரிந்து கொள்கிறேம். அவன் புசிப்பதற்

காக ஆஹுதிகள் அளிக்கப்படுகின்றன. அவனுடைய அமிருதர்களின் உலகத்துக்குச் சென்றவுடன் மனிதர்கள் தேவசனத்தைப் போற்றுகிறார்கள்.

4. பரந்த சோதியும், விரிந்த வானும், புகழுள்ளதும், எல்லையற்றதுமான புவியும் யக்ஞத்தின் அக்கினியை வணங்குகின்றன. சுத்த ஆற்றல்களுள்ள இந்திரனும், மித்திரனும், வருணனும், பகனும், ஸவிதாவும் அக்கினியின் மேன்மையைத் தெரிந்துகொள்ள சேர்கிறார்கள்.

5. நதிகள் சலனமாகும் ருத்திரப் புதல்வனோடு பெருகுகிறார்கள். மருத்துக்கள் எல்லையற்ற புவியைக் கடக்கிறார்கள். அவர்களோடு எங்கும் பரவும் இந்திரன் பரந்த வெளியிலே வேகமாய்ச்சென்று வானிலே கர்ச்சனை செய்து உலகத்தை யெல்லாம் நனைக்கிறான். 9833

6. சோதியின் பருந்துகளும், மேகத்தில் வசிப்பவர்களும், ருத்திரனின் புதல்வர்களுமான மருத்துக்கள் மனிதர்களோடு சேர்ந்து தங்கள் கடமைகளைச் செய்கிறார்கள். குதிரைகளுள்ள தேவர்களும், வருணனும், மித்திரனும், அர்யமானும், குதிரைகளுள்ள இந்திரனும் கவனிக்கிறார்கள்.

7. இந்திரனைப் போற்றுபவர்கள் பாலனத்தை அடைகிறார்கள். சூரியனைப் போற்றுபவர்கள் காட்சியைப் பெறுகிறார்கள். வலியனான இந்திரனைப் போற்றுபவர்கள் ஆண்மையைப் பெறுகிறார்கள். ஊக்கத்தோடு இந்திரனைத் துதிப்பவர்கள் மனிதர்களின் மனைகளிலே வச்சிராயுதத்தை நண்பனாக அடைகிறார்கள்.

8. சூரியன் அவனுடைய ஆக்ஞைக்குப் பணிந்து அவன் முகப்பிலே இன்புறுகிறான். வலியனான இந்திரனுக்கு ஒவ்வொரு தேவனும் பயப்படுகிறான். பயங்கரமாகப் பெருமூச்செறியும் உதரத்திலிருந்து எல்லாந் தாங்கும் தடைபடாத தேவன் தினந்தோறும் முழங்குகிறான்.



9. விருப்பங்களைப் பூர்த்தி செய்பவர்களும், குதிரைகளில் ஏறி வருபவர்களுமான மருத்துக்களால் பற்றப்படுபவனும், அவர்களோடு சேர்ந்து சுகத்தை அளிப்பவனும், உறவுள்ளவனும், சோதியிலிருந்து தெளிப்பவனும், பகைவர்களை ஜயிப்பவனும், சுய புகழுள்ளவனும், வலியனுமான உருத்திரனுக்கு இன்று வணக்கத்துடன் ஸ்தோமத்தைக் கூறுங்கள்.

10. வர்ஷிப்பவனான பிரகஸ்பதியும், ஸோமபந்துக்களான விசுவேதேவர்களும், சனங்கள் பாலனமாக உணவை அளிக்கிறார்கள். அதர்வன் யக்ஞங்களால் முதலில் தேவர்களைப் பலப்படுத்தினான். பலத்தால் தேவர்களும் பிருகுக்களும் பசுக்களை அறிந்தார்கள். 9838

11. ரேதஸு நிறைந்த சோதியும் புவியும், யமனும், அதிதியும், தேவதுவஷ்டாவும், செல்வந்தரும் அக்கினியும், ரிபுக்களும், ரோதஸியும், மருத்துக்களும், விஷ்ணுவும் நான்கு அனலுள்ள யக்ஞத்துடன் நராசம்ஸனும் எங்களால் துதிக்கப்படுகிறார்கள்.

12. அவிகளளிக்கப்படுங்கால் ஆர்வமுள்ள எங்களின் துதி முழக்கத்தை வானின் அறிஞனான அஹி கேட்பானாக. சோதியிலுள்ளவர்களான சூரியனும் சந்திரனும், புவியும் வானும், தங்கள் அறிவால் இந்தத் துதியின் கருத்தை அறிந்துகொள்வார்களாக.

13. பூஷா எங்களுடைய அசையும் பொருளையெல்லாம் பாலிப்பானாக. சலங்களின் பேரனும், விசுவேதேவர்களின் நண்பனுமான வாயு, நாங்கள் யக்ஞத்தை நடத்த எங்களைப் பாலிப்பானாக. உத்தம உணவைப்பெற அனைத்தின் ஆத்மாவான காற்றைப் போற்றுங்கள். அழைப்பதற் கருகர்களான அசுவினிகளே! நீங்கள் உங்கள் வழியிலே எங்களைச் செவியுறுங்கள்.

14. நாங்கள் அச்சமற்ற இந்த சனங்களின் நடுவில் இருப்பவனும், சுயமாகவே புகழுள்ளவனுமான அக்

கினியைப் பாக்களோடு போற்றுகிறோம். நாங்கள் எல்லாத் தேவபத்தினிகளோடுள்ள தடைபடாத அதிதியைப் போற்றுகிறோம். நாங்கள் இரவின் இளைஞனையும் சந்திரனையும் போற்றுகிறோம். நாங்கள் மனிதனின் நண்பனான சூரியனைப் போற்றுகிறோம். நாங்கள் அனைவருக்கும் தலைவனான இந்திரனைப் போற்றுகிறோம்.

15. சன்மத்தில் முதல்வனாயுள்ள அங்கிரஸன் இங்கு தேவர்களைப் போற்றுகிறான். உயர்த்திய கற்கள் யக்ஞத்தின் ஸோமத்தைக் காண்கின்றன. இந்தக் கற்களால் அறிஞனான இந்திரன் மகானானான். கூரிய கோடரி, போரிலே அழகிய இடத்தை அடைகிறது. 9843

## 93. விசுவேதேவர்கள்

### 930. தான்வபார்த்தியன்

1. சோதிபுவிகளே! நீங்கள் பெரியவர்கள். நீங்கள் பரந்தவர்கள். மகத்தான சோதிபுவிகளே! நீங்கள் எங்களிடம் மனைவிகளைப்போல் இருக்கிறீர்கள். இவற்றால் எங்களுடைய வலிய சத்துருவினிடமிருந்து எங்களைப் பாலியுங்கள். உங்களுடைய பாலனங்களால் எங்களைப் பலப்படுத்தப் பாலியுங்கள்.

2. மிக்கக் கேள்வியுள்ளவனும், திருப்தியளிக்கும் அவிகளைப் போற்றுபவனுமான மனிதன் ஒவ்வொரு யக்ஞத்திலும் தேவர்களை இன்புறுத்துகிறான்.

3. எல்லா உலகங்களின் தலைவர்களான நீங்கள், தேவர்களின் மகத்தான செல்வத்தை எங்களுக்கு அளியுங்கள். நீங்கள் அனைவரும் விசுவப் புகழுள்ளவர்கள். எல்லா யக்ஞங்களிலும் போற்றப்படவேண்டும்.

4. அர்யமானும், மித்திரனும், பரிஜ்மானும், வருணனும், அறிஞர்களால் போற்றப்படும் ருத்தரனும், மருத்துக்களும், பூஷாவும், பகனும் அமுதத்தின் தலைவர்கள். போற்றத் தகுந்தவர்கள்.



5. அஹிர்புத்னி உங்களோடு வானிலே —மேகங்களிலே— உட்காருங்கால், செல்வத்தை வர்ஷிக்கும் அசுவினிகளான நீங்கள் இருவரும் சமச்செல்வர்களும், சலங்களின் தலைவர்களும், சூரியனும், சந்திரனுமான நீங்கள் இரவிலே எங்கள் மனைக்கு வாருங்கள். 9848

6. சுத்த சலங்களின் தலைவர்களும், தேவர்களுமான அசுவினிகளும், மித்திரனும், வருணனும், தங்கள் ஆக்ஞைகளால் எங்களைப் பாலிப்பார்களாக. அவர்களால் பாலிக்கப்படுபவன் மிக்கச் செல்வங்களை அடைகிறான். பாலைவனத்தைக் கடக்கும் பயணியைப் போல் அவன் துன்பங்களைக் கடக்கிறான்.

7. உருத்திரர்களும், அசுவினிகளும் எங்களை சுகப்படுத்துவார்களாக. தேர்களின் தலைவனான பூஷாவும், பகனும், ரிபுவும், வாஜனும், ரிபுக்ஷிணனும், பரிஜ்மானும்–வாயுவும்– விசுவேதேவர்களும் விசுவத்தை அறிபவர்கள். எங்களை சுகப்படுத்துவார்களாக.

8. மகானான இந்திரன் யக்ஞத்தால் பிரகாசிக்கிறான். வழிபடுபவனுடைய இன்பமும் யக்ஞத்தால் பிரகாசிக்கிறது. உன்னுடைய யக்ஞத்தை நோக்கி வரும் குதிரைகள் வலியவை. இந்திரனுக்குப் பாடப்படும் ஸாமனும் தடைபடாதது. இது தனி யக்ஞம். மனிதனுக்கில்லை.

9. தேவனான ஸவிதா எங்களை நாணத்திலிருந்து விலக்கவும். நீ செல்வனின் அறிஞர்களால் போற்றப்படுகிறாய். சலந்தாங்கும் மருத்துக்களோடுள்ள இந்திரன் மானிடர்களான எங்களுடைய பலத்தைத் தேர்ச் சக்கரத்தையும் கயிறுகளையும் போல் இணைப்பானாக.

10. சோதிபுவிகளே! எங்களுடைய இந்தப் புதல்வர்களுக்கு சனங்களிடமெல்லாம் பரவும் மகத்தான புகழை அளியுங்கள். பலத்தைப் பெற உணவை அளியுங்கள். பகைவர்களை ஜயிக்க செல்வத்தோடு சேர்ந்த உணவை அளியுங்கள். 9853

11. வலியனுன இந்திரனே ! எங்களை விரும்பும் நீ, உன்னைத் துதிக்கும் இவன் எங்கிருந்தாலும், அவன் தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ள நீ அவனை சதா பாலிக்கவும். வசுவே ! உன் அறிவால் எனக்குக் கற்பிக்கவும்.

12. அறிஞர்கள் பகைவர்களையழிப்பதும், சூரியனிலே கதிர்களைப் போல் ஒளியுள்ளதும், இந்த என்னுடைய தோத்திரத்தைத் தருந்த தேரைச் செலுத்தும் சிற்பியைப் போல் திறப்படுத்தி செலுத்துவார்களாக.

13. எவர்களுடைய தோத்திரம் செல்வத்தோடு திரும்புகிறதோ அது அவர்களுக்குப் பொன்னுபரணத்தைப் போலும், போரிலே ஜயத்தை அனுயாஸமாய் அளிக்கும் வீரச் செயல்களைப்போலும் விளங்குகிறது.

14. நான் இதைத் துச்சீமனின், பிருதவானனின், வேநனின், மகத்தான ராமனின் மற்ற செல்வர்களின் முன்னே அறிவிக்கிறேன். அவர்கள் ஐந்நூறு தேர்களை இணைத்து இங்கே வந்தார்கள். அவர்கள் எங்களிடம் வைத்திருந்த அன்பு, அவர்களுடைய வழியிலே புகழுள்ளதாயிருந்தது.

15. அவர்களின் நடுவே தான்வன் உடனே எழுபது பசுக்களை நாடினுன். உடனே பார்த்தியனும் கேட்டான். உடனே மாயவனும் கேட்டான். 9858

## 94. கிராவாணம்

### 931. அற்புதன்—கத்ருவின் புதல்வனுன ஸர்ப்பன்

1. இந்தக் கற்கள் பேசுக. நாம் பேசுங் கற்களுக்குப் பதில் அளிப்போமாக. அறிஞர்களே ! நீங்கள் துதியைக் கூறுங்கள். துரிதப்படும் கனத்த கற்களான நீங்கள் சேர்ந்து இந்திரனுக்குத் துதி முழக்கத்தைக் கூறுங்கள். நீங்கள் ஸோமரஸத்தால் நிரம்புகிறீர்கள்.

2. அவர்கள் நூறு மனிதர்களைப் போலும், ஆயிரம் மனிதர்களைப் போல் முழங்குகிறுர்கள். அவர்கள் பசுமை



நிற முகங்களோடு கர்ச்சிக்கிறுர்கள். சுகிருதர்களான கற்கள் யக்ஞத்திலே வந்து ஹோதாவான அக்கினிக்கு முன்னே அவியைப் புசிக்கிறுர்கள்.

3. அவர்கள் பேசுகிறுர்கள் : அவர்கள் தங்கள் வாயினுள் இனிய ஸோமரசத்தைப் பெற்றுர்கள். பக்குவப்பட்ட மாமிசத்தின் மீது உங்கார சப்தத்தை எழுப்புகிறுர்கள். அவாவுள்ள காளைகள் சிகப்பு மரத்தின் கிளையை மென்று கர்ச்சித்தன.

4. அவர்கள் மதப்படும் பிழிந்த ஸோமத்தோடு இந்திரனை அறைகூவி அழைக்கிறுர்கள். அவர்கள் தங்கள் வாயினுள் இனிய ஸோமத்தை ஊற்றிக் கொண்டார்கள். வீரர்களான கற்கள் சகோதரிகளான விரல்களால் பற்றப்பட்டு புவியை இசையால் நிரப்பி ஆடினுர்கள்.

5. சோதியிலே பருந்துகள் சத்தத்தை எழுப்பின. அவர்கள் கொட்டத்திலே மானைப் போல் நடித்தார்கள். அவர்கள் மேற்புறமுள்ள கல்லிலிருந்து பிழிந்த ரஸத்தை இறக்குகிறுர்கள். சூரியனைப்போல் வெளுப்பாயிருக்கும் அவர்கள் மிக்க ரஸத்தை ஏந்துகிறுர்கள்-பொழிகிறுர்கள்.
9864

6. ஸோமத்தோடு இணைக்கப்பட்டு யக்ஞச் சுமையை ஏந்திய அவர்கள் ஊக்கமுள்ள குதிரைகளைப் போல் உழைத்தார்கள். அவர்கள் பெருமூச்சு விட்டு ஸோமத்தைப் பிழியுங்கால் அவர்களுடைய நெடுமூச்சு குதிரைகளின் சீறலைப் போல் கேட்கிறது.

7. பத்து ஆட்களுள்ளவர்களும், பத்து கச்சைகள் இருப்பவர்களும், பத்து நுகங்களுள்ளவர்களும், பத்து செயலாளர்களும், பத்து சூழ்பவர்கள் இருப்பவர்களும், பத்து சுமைகள் உள்ளவர்களும், யக்ஞத்தை ஏந்துபவர்களும், அழியாதவர்களுமான கற்களைப் போற்றுங்கள்.

8. பத்து ரசிமிகளுள்ள இந்தக் கற்கள் துரிதமாய்ச் சலனமாகின்றன. அவற்றின் இன்புறுத்தும் சுழற்சிகள் வட்டமிடுகின்றன. பெருகும் ஸோமரஸத்தை அவர்கள் முதலில் பருகினுர்கள். ஸோமத் தண்டின் பாலான ரஸத்தை அவர்கள் முதலில் அனுபவித்தார்கள்.

9. ஸோமத்தைப் பருகும் இவர்கள் இந்திரனுடைய கபில நிறக் குதிரைகளை முத்தமிடுகிருர்கள். அவர்கள் இரஸத்தைக் கறந்து பசுவின் மீது அமர்கிருர்கள். அவர்களால் கறக்கப்பட்ட இனிய ஸோமரஸத்தை இந்திரன் பருகி செழிக்கிருன். பருமனுகிருன். வலியனுகிருன்.

10. ஸோமன் யக்ஞத்திலே உங்களுக்கு வர்ஷிப்பவனுகிருன். உணவு மிகுந்தவர்களைப் போல் உங்களுக்குத் துன்பமில்லை. நீங்கள் எப்பொழுதும் அருந்துகிறீர்கள். தேஜசுள்ள செல்வர்களைப் போலுள்ள கற்களான நீங்கள் இன்புறும் யக்ஞத்திலே தேஜஸோடும் மங்களத்தோடும் விளங்குகிறீர்கள். 9868

11. கற்களே! நீங்கள் பிளப்பவர்கள். பிளக்கப்படாதவர்கள். களைப்பற்றவர்கள். தளராதவர்கள். அமிருதர்கள். நோயற்றவர்கள். மூப்பற்றவர்கள். எழுபவர்கள். இறங்குபவர்கள். திடர்கள். தாகமற்றவர்கள். தாகந் தணிப்பவர்கள்.

12. உங்களைப் பிறப்பித்தவர்கள் மலைகள். ஒவ்வொரு யுகத்திலே திரமாயிருக்கும் அவர்கள் அமைதியை நாடுவதால் சபைகளிலே கலந்துகொள்ள விருப்பமில்லை. மூப்பில்லாத அவர்கள் ஸோமத்தை அனுபவித்து ஸோமத்தோடு பசுமையாய்ப் பாய்ந்து, தங்கள் குரலால் சோதியையும் புவியையும் செவியுறச் செய்தார்கள்.

13. கற்கள் ஸோமரஸம் வருங்கால் தங்கள் ஆரவாரத்தால் துரிதமாய்ப் பாலிக்கும் தேவர்களைப் போல் அந்த ரசத்தை அறிவிக்கிருர்கள். விதைக்குங்கால் நிலத்தை உழுபவர்கள் போல் ஸோமத்தைப் புசிக்கும் கற்கள் அதைச் சேர்க்கிருர்கள். அதைத் துன்புறுத்தாமலிருக்கிருர்கள்.



14. யக்ஞத்திலே ஸோமம் பிழியப்படுங்கால் விளையாட்டிலே தங்கள் தாயை அடிக்கும் குழந்தைகளைப் போல் சப்தித்தார்கள். ஸோமத்தைப் பிழிந்த கல்லின் துதியைப் புலப்படுத்தவும். போற்றப்படும் கற்கள் பிரிக்கப்படுவார்களாக. 9872

## 95. புரூரவனும் ஊர்வசியும்

### 932. புரூரவனும் ஊர்வசியும்

1. புரூரவன் பேசுகிருன்: ஹே, கோபமுள்ள மனைவியே! அமைதியான மனத்தோடு சற்று நிற்கவும். நாம் கலந்து பேசிக்கொள்வோம். இதுவரை பேசிக்கொள்ளாமலிருந்த நமது இரகசியமான எண்ணங்கள் கடைசி தினத்திலுங்கூட நமக்கு சுகத்தை அளிக்கவில்லை.

2. ஊர்வசி பேசுகிருள்: இந்தப் பேச்சால் நாம் எதைச் செய்ய இயலும்? நான் உன்னிடமிருந்து உஷைகளின் முதல் உஷையைப்போல் நீங்கினேன். புரூரவனே! நீ உன் மனைக்குத் திரும்பிச் செல்லவும். நான் காற்றைப் போல் பற்றப்படக் கஷ்டமாயிருப்பவள்.

3. புரூரவன்: அம்பருத் தூணியிலிருந்து புகழுக்காக எறியப்பட்ட சரத்தைப்போலும் அல்லது பசுக்களை ஜயிப்பதும், நூறு செல்வங்களை ஜயிப்பதுமான குதிரையைப் போலும் பேடர்கள் திட்டமிட்டது போல் மின்னல் மின்னியதாகத் தெரிந்தது. பரணர்கள் —கந்தர்வர்கள்— துன்பத்திலிருந்த ஆட்டைப்போல் கத்திருர்கள். புகழுக்காக அம்பருத் தூணிலிருந்து சரத்தை எடுத்து எறியும் ஆற்றல் என்னிடமில்லை. பகைவனுடைய பசுக்களையும் நூறுவித செல்வங்களையும், பற்றுவதற்கான பலமும் என்னிடமில்லை. என்னுடைய ஆற்றல் வீரத்தன்மையை இழந்து விட்டது. அதனுல் தீரத்தன்மை தோன்றுது.

போரிலே பகைவனைப் பயமுறுத்தும் என் வீரர்களின் செவிக்கு என் குரல் எட்டாது.

4. ஊர்வசி: உஷையே! இந்த ஊர்வசி, மாமனுக்கு உணவையும் செல்வத்தையும் தந்தாலும் அவள் கணவனையே விரும்புகிறாள். அருகிலிருந்த மனையிலிருந்து கணவனுடைய மனைக்குச் சென்றாள். அங்கு கணவனை விரும்பினாள். அவனுடைய ஆலிங்கனங்களால் இரவிலும் பகலிலும் இன்பமானாள்.

5. புரூரவனே! தினத்திலே மும்முறை என்னைத் தழுவினாய். நான் சற்று, பாராமுகமாயிருந்தாலும் நீ என்னை விரும்பினாய். உன் இடத்துக்கு நான் உன்னைத் தொடர்ந்து வந்தேன். நான் உன் விருப்பங்களுக்-கிசைந்தேன். வீரனே! நீ என் தேகத்துக்கு அரசனாயிருந்தாய். 9877

6. புரூரவன்: ஸுஜூர்ணி, சிரேணி, ஸுமன ஆபி, ஹிருதேசக்ஷி, கிரந்தினி முதலியவர்களோடு ஊர்வசியுமிருந்தாள். சிகப்பு நிறமுள்ளவர்களும், ஆபரணங்களைத் தரித்தவர்களுமான அவர்கள், சற்றுத் தயங்கினார்கள் அவர்கள் பாலனத்துக்காகப் பாற் பசுக்களைப்போல் சப்தித்தார்கள்.

7. ஊர்வசி: அவன் பிறக்குங்கால் தேவபத்தினிகள் சேர்ந்து —சூழ்ந்து— அமர்ந்தார்கள். தாமே பாயும் நதிகள் அவனை வளர்த்தன. புரூரவனே! தேவர்கள் உன்னை மகத்தான போருக்கும், தஸ்யுக்களை அழிப்பதற்கும் திறப்படுத்தினார்கள்.

8. புரூரவன்: மானிடனான நான் தங்கள் ஆடைகளை நீக்கிவைத்திருந்த இந்த அப்ஸரஸ்களை விரும்பியபோது அவர்கள் பாம்பைப்போல் கலங்கி என்னிடமிருந்து ஓடிவிட்டார்கள். தேரில் இணைத்தவுடன் ஓடும் குதிரைகளைப் போல் மறைந்தார்கள்.



9. ஊர்வசி: மானிடன் இந்த அமிருதர்களான அப்ஸரஸ்களோடு கலந்து செயல்களாலும், சொற்களாலும் பேசுங்கால் அவர்கள் அன்னங்களைப்போல் தங்கள் தேகங்களின் அழகைப் புலப்படுத்துகிறார்கள். விளையாட்டினால் கடிக்கும் குதிரைகளைப்போல் இருக்கிறார்கள்.

10. புரூரவன்: மின்னும் மின்னலைப்போல் மின்னிய ஊர்வசி வானிலிருந்து விரும்பத்தகுந்த சலங்களை ஏந்தி வந்தாள். செயலில் திறமுள்ளவனும், மானிடனிடம் நட்புள்ளவனுமான புதல்வன் தோன்றினான். ஊர்வசி என்னுடைய தீர்க்காயுளை நீட்டினான். 9882

11. ஊர்வசி: நீ புவியைப் பாலிக்க இங்ஙனம் பிறப்பிக்கப்பட்டாய். நீ என் உதரத்தினுள், இந்த வீரியத்தை வைத்தாய். நான் எதிர்காலத்தை அறிந்து, நீ ஒவ்வொரு தினமும் என்ன செய்யவேண்டுமென்பதைக் கற்பித்தேன். நீ கேட்கவில்லை. நான் கூறியதைப் புறக்கணித்த நீ, இப்பொழுது ஏன் என்னிடம் பேசுகிறாய்?

12. புரூரவன்: உன்னிடமிருந்து பிறக்கும் மகன் எப்பொழுது என்னைத் தந்தை என நாடுவான்? என்னை அறிந்தவுடன் எப்பொழுது அழுது கண்ணீரைச் சொரிவான். உன் இருதயத்திலுள்ள அக்கினி ஒளியின் வடிவான கரு, கணவனின் பெற்றோர்களின் மனங்களில் பிரகாசிப்பதால் எந்தப் புதல்வன் கணவனையும், மனைவியையும், தந்தையையும், தாயையும் பிரிப்பான்?

13. ஊர்வசி: நான் பதிலளிக்கிறேன். அந்த எதிர்பார்க்கும் மங்களமான தினம் வருங்கால் உன்னுடைய மகன் அழுது கதறி கண்ணீரைச் சொரிவான்? என்னுள்ளே இருக்கும் உன்னுடைய அந்தக் குழந்தையை உன்னிடம் அனுப்புவேன். நீ உன் மனைக்குத் திரும்பவும், மூடனே! என்னை உன்னால் தடுக்க இயலாது.

14. புரூரவன்: உன்னோடு மகிழ்ந்த கணவன் இப்பொழுது நீங்குவானாக. அவன் திரும்பி வருவதற்கியலாத தூரமான இடத்துக்குச் செல்ல நீங்குவானாக. அவன் நிருதியின் —அழிவின்— அங்கத்திலே சயனிப்பானாக. அல்லது வேகமாயுள்ள ஓநாய்கள் அவனைப் புசிக்க.

15. ஊர்வசி: புரூரவனே! நீ சாகாதே. நீ சாயாதே கொடிய ஓநாய்கள் உன்னை உண்ணாமலிருக்க. ஸ்திரீகளுக்கு நட்புக்கள் இல்லை. அவர்களுடைய இருதயங்கள் நரிகளுடைய இருதயங்கள். 9887

16 நான் மனிடர்களின் நடுவே வேறு வடிவத்தோடு திரிந்தபோது நான் நான்கு வருடங்கள் அவர்களோடு இரவுகளைக் கழித்தேன். நான் தினத்திலே ஒரு தடவை நெய்யின் ஒரு துமியைச் சுவைத்தேன். நான் இப்பொழுதும் அதனால் திருப்தியாகிறேன்.

17. புரூரவன் : வசிட்டனான நான், ஒளியால் வானை நிரப்புபவனும், மழையை அளப்பவனுமான ஊர்வசியை வசப்படுத்துகிறேன். உத்தமச் செயலை நடத்தும் ஈகையனான புரூரவன், உன்னருகில் நிற்பானாக. நீ திரும்பி வரவும். என் இருதயம் எரிகிறது.

18 ஊர்வசி : ஐலனே! புரூரவனே! இந்தத் தேவர்கள் இங்ஙனம் உன்னிடம் கூறுகிறார்கள். நீ மிருத்யுவின் அதீனத்திலிருப்பதால் உன்னுடைய புதல்வர்கள் தேவர்களை அவிகளோடு யஜிப்பார்களாக. நீயும் சோதியிலே இன்புறுவாயாக. 9890

# 96. இந்திரனுடைய குதிரைகள்

## 933. வரு அங்கிரஸகுலம் அல்லது இந்திரனுடைய புதல்வன் ஸர்வஹரி

1. இந்திரனே! நான் மகத்தான யக்ஞத்திலே உன்னுடைய இரு கபில நிறக் குதிரைகளைப் போற்று



வேன். நான் அழிப்பவனான உன்னுடைய இனிமையான மதத்தை விரும்புகிறேன். என்னுடைய துதிகள், அழகிய நெய்யைப்போல் சலத்தைப் பொழிபவனும், பொன்னிறமுள்ளவனும், குதிரைகளோடிருப்பவனுமான உன்னிடம் சேர்க.

2. திவ்ய ஸதனத்துக்கு இந்திரன் வர புரவிகளைப் பிரேரித்து அவன் அமரும் அசுவத்தைப் போற்றும் நீங்கள் பாலால் பசுக்களைப்போல் பொன்னிற ஸோமத்தோடு மனிதர்களால் இன்புறுத்தப்படும் இந்திரனுடைய குதிரைகளோடிருக்கும் பலத்தைப் போற்றுங்கள்.

3. அவனுடைய கைகளிலே பொன் நிறமுள்ளதும், பகைவர்களை யழிப்பதும், விரும்பத் தகுந்ததுமான வச்சிராயுதம் இருக்கிறது. அவனிடம் செல்வங்களுண்டு. சுந்தரத் தாடைகளுள்ள அவன் ஆயுதமேந்துகிறான். எதிரிகளைக் கொல்லும் கோபமும் அவனிடமுண்டு. இந்திரனிலே பல பொன்னிற வடிவங்கள் சேர்ந்திருக்கின்றன.

4. அவன் ஒளியின் கொடியான சூரியனைப்போல் சோதியிலே வழிபடுபவர்களால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். அவனுடைய விரும்பத்தகுந்த வச்சிராயுதம் சூரியனுடைய செங்கதிர்களைப் போல், வேகத்தோடு பகைவனிடம் செல்லுகிறது. கபில நிறத்தாடைகளுள்ள அவன், குதிரைகளுள்ளவன். ஆயிரங் காந்திகளோடு பிரகாசித்தான். அவனுடைய வச்சிராயுதம் அஹியைக் கொன்றது.

5. இந்திரனே! பொன் கேசங்களுள்ள நீ, பழைய புலவர்களால் போற்றப்பட்டவுடன் அவியை விரும்பினாய். பொன் நிறத்தோடு புலனாகும் நீ, உன்னுடைய விசுவமான துதியையும், தனிச்சிறப்புள்ளதும், இன்புறுத்துவதுமான அவியை விரும்புகிறாய். 9895

6. இந்த இன்புறுத்துபவையான இரு கபில நிறக் குதிரைகள் வச்சிராயுதனும், துதியாருகனும், மகிழ்பவனுமான இந்திரனை அவனுடைய தேரிலே ஸோமரஸத்தின்

மதத்துக்காக ஏந்தி வருகின்றன. காந்தனை இந்திரனுக்குப் பொன்னிற ஸோமரஸங்களின் தாரைகள் பாய்கின்றன.

7. பொன்னிற ஸோமரஸங்கள் அவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யப் பாய்கின்றன. மஞ்சத் திவலைகள் இரு துரித குதிரைகளை ஆற்றலுள்ளவனுக்கு ஊக்கப்படுத்துகின்றன. அவனுடைய ஊக்கமுள்ள குதிரைகளோடு போருக்குப் பாயும் தேர் ஸோமனளிக்கப்படும் அவனால் விரும்பப்படும் யக்ஞத்துக்குச் செல்லுகிறது.

8. மஞ்சள் தாடியும், மஞ்சள் கேசமும், இரும்பு இதயமுள்ளவனும், ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரன், துரித பானத்திலே, பலத்திலே பலமுடனுள்ளன். துரித குதிரைகளால் யக்ஞ அவிச் செல்வமுள்ள அவன், தன்னுடைய குதிரைகளை எல்லாத் துன்பங்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக

9. ஸோம பாண்டமிருக்குங்கால் தன் குதிரைகளைத் தேய்க்கும் போது, விரும்பப்படும் இனிய ரஸத்தை, தீவிரமான பானத்தை அவன் பருகியவுடன், மீண்டும் பலத்துக்காக ரஸத்தை கலக்குங்கால் அவனுடைய மஞ்சள் நிறத் தாடைகள் சட்டுவங்களைப் போல் சலனமாகின்றன.

10. அன்பு மிகுந்த இந்திரனுடைய மனை, சோதியிலும் புவியிலுமிருக்கிறது. அவன் ஸோமத்தால் மதமடைந்து போருக்குப் பாயும் குதிரையைப் போல் உக்கிரமமாய்ப் பாய்கிறான். மகத்தான மொழி வலியனான இந்திரனையே விரும்புகிறது. நீ பக்தனுக்கு மிகுந்த உணவைத் தருகிறாய். 9900

11. விரும்பப்படும் நீ, சோதியையும், புவியையும், உன் மகிமையால் நிரப்புகிறாய். நீ புதிது புதிதான, பிரியமான தோத்திரத்தை விரும்புகிறாய். அசுர பலமுள்ளவனே! சலத்தைப் பற்றும் சூரியனுக்கு விரும்பத்தகுந்த சலத்தின் ஸ்தானத்தைப் புலப்படுத்தவும்.



12. இந்திரனே! தேரிலே இணைக்கப்பட்ட குதிரைகள், யக்ஞத்தை விரும்பும் பொன் மோவாய்களுள்ள உன்னை வழிபடுபவர்களின் நடுவே ஏந்தி வருக. பத்து விரல்களால் பக்குவமான, திரட்டப்பட்டுள்ள இனிய ஸோமத்தை, யக்ஞத்தை விரும்பும் நீ பருகியவுடன் குதிரைகள் உன்னைப் போருக்கு ஏந்தி வருக.

13. குதிரைகளின் தலைவனே! நீ பூர்வத்திலே ஸோமரஸத்தைப் பருகினாய். இந்த யக்ஞம் உனக்கே தனிமையாகத் தோன்றுகிறது. இந்திரனே! இனிய ஸோமத்தால் நீ மதமுடனாகவும். மிகுந்த மழையைப் பொழிபவனே! அதை உன் உதரத்தினுள் பொழிந்து கொள்ளவும். 9903

## 97. ஓஷதிகள்

### 934. ஆதர்வண பிஷஜன்

1. நான் பூர்வத்திலே தேவர்களுக்கு மூன்று யுகங்கள் முன்னால் தோன்றியவையும், பழுப்பு நிறமுள்ளவையுமான ஓஷதிகளின் நூறு ஏழு இடங்களை, ஆற்றல்களைக் கூறுவேன்.

2. தாய்மார்களே! உங்கள் மனைகள்—இடங்கள்—நூறு. உங்கள் வளர்ச்சிகள், உற்பத்திகள், ஆயிரம். நூறு ஆற்றல்களுள்ள நீங்கள் என்னுடைய இந்த நோயாளியைப் பிணியிலிருந்து நீக்குங்கள்.

3. ஓஷதிகளே! மிகுந்த மலர்களையும், பழங்களையும் ஏந்துபவர்களும், இணைந்து நோயை வெற்றியுள்ள குதிரைகளைப் போல் ஜயிப்பவர்களும், எழுந்து மனிதர்களைப் பிணிக்கப்பால் கடத்திச் செல்பவர்களுமான நீங்கள் இன்புறுங்கள்.

4. ஓஷதிகளே! நான் உங்களை இங்ஙனம் தெய்வத் தாய்மார்கள் எனப் போற்றுகிறேன். மருத்துவனே! வைத்தியனே! நான் உனக்குக் குதிரையை, பசுவை, ஆடையை, என்னையே அளிப்பேன்.

5. உங்களுடைய மனை அசுவத்தத்தில் இருக்கிறது. பர்ணத்திலே—பலாசத்தில் — உங்கள் வீடு ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது. நீங்களே நிச்சயமாகப் பசுக்களை வழங்கு கிறீர்கள். ஏனெனில் நீங்கள் அவற்றை வைத்தியனுக்குத் தருகிறீர்கள். 9908

6. போரிலே சேர்ந்துள்ள அரசர்களைப் போல் ஓஷதிகளான நீங்கள், சேரும் இடத்திலே, அரக்கர்களை அழிப்பவனும், நோயை நீக்குபவனுமான விப்பிரன், வைத்தியன் என அழைக்கப்படுகிருன்.

7. நான் இந்த நோயையழிக்க இந்த எல்லா ஓஷதி களான அசுவதியையும், ஸோமவதியையும், ஊர்ஜயந்தி யையும், உதோஜஸையும் போற்றுகிறேன்.

8. மனிதனே! இந்த ஓஷதிகளிலிருந்து செல் வத்தை அளிக்க விரும்பும் பச்சிலைகளின் ஆற்றல் — தன்மைகள் — உன் தேகத்துக்குக் கொட்டயத்திலிருந்து வரும் பசுக்களைப் போல் வருகின்றன.

9. உங்கள் தாயின் பெயர் இஷ்கிருதி — நோய்களி லிருந்து நீக்குபவள். ஆதலால் நீங்களும் நிஷ்கிருதிகள் — நோய்களிலிருந்து மீட்பவர்கள் என அழைக்கப்படு கிறீர்கள். நீங்கள் பறக்கும் சிறகுகளோடுள்ள நதிகள். ஒருவன் நோயுடனிருந்தால் அவனை நீங்கள் குணப் படுத்துகிறீர்கள். குணப்படுத்துங்கள்.

10. ஸர்வ வியாபகமாய் எங்குமிருக்கும் ஓஷதிகள், நோய்களைக் கோசாலையைத் தாக்கும் திருடனைப் போல் எதிர்க்கின்றன. அவை தேகத்திலுள்ள எந்த நோயை யும் நீக்குகின்றன. 9913

11. நான் இந்த ஓஷதிகளைக் கையில் எடுத்தவுடன் நொய்த்தவன் ஊக்கமுள்ளவனுகிருன். வியாதியின் ஆத்மா உயிரைப் பறிப்பவனுடைய முன்னிலையிலே, சந் நிதியிலே, நீங்கும் உயிரைப் போல் மருந்தை உட்கொள் வதற்கு முன்னே வியாதியின் ஆத்மா அழிகிறது.



12. ஓஷதிகளே! நீங்கள் எந்த நோயாளியின் தேகத்திலே ஒரு அங்கத்திலிருந்து வேறு அங்கத்துக்கு, ஒரு கணுவிலிருந்து வேறு கணுவுக்கு நகர்ந்து செல்லு கிறீர்களோ, அவனிடமிருந்து, நோய்களைப் படையின் நடு விலிருந்து பகைவர்களை ஜயிக்கும் உக்கிரனுன அரசனைப் போல் நீக்குகிறீர்கள்.

13. நோயே! யட்சமமே! நீ சாஷப் பறவையோடு, கிகிதீவினத்தோடு, காற்றின் வேகத்தோடு பறந்து விட வும். புயலோடு அழியவும்; முதலையோடொழியவும்.

14. ஓஷதிகளே! நீங்கள் ஒவ்வொருவனும் மற்ற வனோடு சேருங்கள். நீங்கள் ஒவ்வொருவனும் மற்ற வனுக்குதவி செய்யுங்கள். இங்ஙனம் நீங்கள் எல்லீரும் ஒருமையுடனுகி என்னுடைய இந்த மொழியைப் பாலி யுங்கள்.

15. பிரகஸ்பதியின் சந்தானங்களான மலர்பவர் களும், மலராதவர்களும், பழமுள்ளவர்களும், பழமளிக் காதவர்களுமான ஓஷதிகள் எங்களை நோயிலிருந்து, பாவத்திலிருந்து நீக்குவார்களாக. 9918

16. அந்த ஓஷதிகள் பழிச் சொல்லால் வரும் பாவத் திலிருந்தும், வருணனுல் தோன்றும் பாவத்திலிருந்தும், யமனுடைய விலங்குகளிலிருந்தும், தேவர்களால் வரும் எல்லாப் பாவத்திலிருந்தும் என்னை விடுவிப்பார்களாக.

17. எந்த உயிருள்ள புருடனில் நாங்கள் வியாபக மாகிறேமோ அவன் அழியான் என சோதியிலிருந்து இறங்கும் ஓஷதிகள் கூறின.

18. ஸோமனை அரசனுக உள்ள பல ஓஷதிகளிலே, நூறு வடிவங்களுள்ள ஓஷதிகளிலே ஸோமனே! நீ உத்தமன். அன்புள்ள இருதயத்தை சுகப்படுத்துபவனு யிருக்கவும்.

19. ஸோமனை உங்கள் அரசனுக உள்ளவர்களும், புவியிலே விவிதமாயிருப்பவர்களும், பிரகஸ்பதியின் சந்

தானங்களுமான ஓஷதிகளே! நோயுள்ள இந்தத் தேகத்துக்குப் பலத்தைத் தாருங்கள்.

20. புவியிலிருந்து உங்களைக் கொல்லுபவன், உங்களைத் துன்பப்படுத்தாமலிருப்பானாக. எந்த நோயாளிக்காக நான் உன்னைக் கொல்லுகிறேனோ அவன் உங்களைத் துன்புறுத்தாமலிருப்பானாக. என்னுடைய எல்லா ஆட்களும், கால்நடைகளும் நோயிலிருந்து நீங்கியிருப்பார்களாக. 9923

21. இந்த மொழியைச் செவியுறும் ஓஷதிகளும், தூரத்திலே சென்றிருப்பவர்களுமான எல்லா ஓஷதிகளுமான நீங்கள், ஒருமையுடன் வந்து இந்த நோயுள்ள தேகத்துக்கு வீரியத்தை அளியுங்கள்.

22. தங்கள் அரசனான ஸோமனோடு சேர்ந்து எல்லா ஓஷதிகளும் கூறுகின்றன. அரசனே! அறிஞனால் மருந்து தரப்படுபவன் எங்களால் பாலிக்கப்படுகிறான்.

23. ஸோமனே! நீ ஓஷதிகளிலே உத்தமன். உனக்கு எல்லா மரங்களும் பணிகின்றன. எங்களை எதிர்ப்பவன் எங்கள் அதீனப்படுவானாக. 9926

## 98. தேவர்கள்

### 935. தேவாபி—ரிஷ்டிசேனனின் மகன்

1. தேவாபி: பிரகஸ்பதியே! நீ மித்திரனாகவோ அல்லது வருணனாகவோ அல்லது பூஷாவாகவோ அல்லது ஆதித்தியர்களோடு, வசுக்களோடு அல்லது மருத்துக்களோடு சேர்ந்திருந்தாலும் நீ, என் நிமித்தம் தேவர்களிடம் செல்லவும். நீ சந்தனுக்குப் பர்ஜன்யனை மழை பெய்யச் செய்யவும்.

2. பிரகஸ்பதி: தேவாபியே! உன்னால் அனுப்பப்பட்ட அறிஞனும், துரிதனும், தேவனுமான தூதன் என்னிடம் வருவானாக. பிரகஸ்பதியே! என் பக்கம் திரும்பி என்னிடம் வா. நான் உனக்காக என் வாயிலே பிரகாசமான தோத்திரத்தை வைத்திருக்கிறேன்.



3. தேவாபி: பிரகஸ்பதியே! நாம் இருவரும் சந்தநுவுக்காக சோதியிலிருந்து மழையை அடைய நீ என்னுடைய வாயினுள் தெளிவான, திடமான குற்றம் நீங்கிய தோத்திரத்தை வைக்கவும். உன்னால் செலுத்தப்பட்ட இனிய பிந்து எங்கள் குரலில் நுழைந்தது.

4. சந்தநு: மழையின் இனிய துமிகள் எங்கள் மீது வீழ்க. இந்திரனே! எங்களுக்கு ஆயிரம் தேர்ச்சுமைகளை அளிக்கவும். தேவாபியே! ஹோதாவின் கடமைகளைச் செய்ய நீ உட்காரவும், உரியகாலத்திலே தேவர்களை யஜிக்கவும். அவர்களை அவிகளோடு போற்றவும்.

5. ரிஷ்டிசேனனுடைய புதல்வனான தேவாபிரிஷி தேவர்களை எங்ஙனம் போற்ற வேண்டுமென்பதை அறிந்து ஹோதாவின் கடமைகளைச் செய்ய அமர்ந்தான். அவன் உயரத்திலுள்ள சமுத்திரத்திலிருந்து புவியிலுள்ள சமுத்திரத்துக்கு சோதியின் மழை சலங்களைக் கொண்டு வந்தான். 9931

6. இந்த உயரத்திலுள்ள சமுத்திரத்திலே தேவர்களால் தடைபட்டு சலங்கள் நின்றன; தேங்கின. ரிஷ்டிசேனனுடைய புதல்வனான தேவாபியால் விடுவிக்கப்பட்டு அவை சமவெளிகளின் மீது செலுத்தப்பட்டன.

7. சந்தநுவின் புரோகிதனாகத் தேவாபி, ஹோதாவின் கடமைக்கு வரிக்கப்பட்டவுடன் துதித்தபோது, இன்பமடைந்த பிரகஸ்பதி தேவர்களிடம் சென்றதும் சலங்களை ஜயித்ததுமான குரலை அளித்தான்.

8. அக்கினியே! ரிஷ்டிசேனனுடைய புதல்வனும், மானிடனுமான தேவாபி உன்னை ஒளிப்படுத்தி சொலிப்பித்தான். எல்லாத் தேவர்களோடும் போற்றப்பட்ட நீ, மழை ஏந்தும் மேகத்தைக் கீழே செலுத்தவும்.

9. உன்னைப் பழைய ரிஷிகள் துதிகளோடு அணுகினார்கள். புருஹூதனே! வழிபடுபவர்கள் எல்லாம் உன்னை யக்ஞங்களில் போற்றுகிறார்கள். ஆயிரம் தேர்ச

சுமைகளை எங்களுக்களிக்கவும். சிகப்புக் குதிரைகளுள்ள நீ, எங்கள் யக்ஞத்துக்கு வரவும்.

10. அக்கினியே! உனக்கு இந்த 99000 தேர்ச் சுமைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. சூரனே! நீ அவற்றால் உன்னுடைய பல தேகங்களைப் பலஞ் செய்து கொள்ளவும். இங்ஙனம் வேண்டப்பட்ட நீ எங்களுக்கு சோதியிலிருந்து மழையைச் செலுத்தவும்.

11. அக்கினியே! வர்ஷிக்கும் இந்திரனுக்கு அவனுடைய பங்கான 90000 செல்வங்களை அளிக்கவும். தேவர்களால் சென்ற வழிகளை அறிந்து, உரிய காலத்திலே ஔலானை—சந்தநுவை-சோதியிலே தேவர்களின் நடுவே ஸ்தாபிக்கவும்.

12. அக்கினியே! எங்கள் பகைவர்களை விலக்கவும். எங்கள் துன்பங்களை நீக்கவும். நோயையகற்றவும். அரக்கர்களைத் துரத்தவும். இந்த சமுத்திரத்திலிருந்து பரந்த சோதியிலிருந்து எங்களுக்கு இங்கே மிகுந்த மழையைச் செலுத்தவும் 9938

## 99. இந்திரன்

### 936. வம்ரன்—விகாஸனுடைய புதல்வன்

1. இந்திரனே? பரந்துள்ளதும், போற்றத்தகுந்ததுமான எந்த விரும்பத்தகுந்த செல்வத்தை எங்கள் அவசியத்தை அறிந்து நாங்கள் செழிக்க நீ அளிப்பாய்? அவனுடைய வலிமை உதயமாகுங்கால் அவன் எங்களுக்கு எந்த தானத்தை அளித்தான்? அவன் விருத்திரனை அழிக்கும் வச்சிராயுதத்தைக் கற்பித்தான். சலங்களைப் பெருகச் செய்தான்.

2. அவன் பிரகாசிக்கும் மின்னலை ஏந்தி சாமம் பாடும் இடத்துக்குச் செல்லுகிறான். அசுரபலமுள்ளவனாகி, அவன் யக்ஞத்தின் பரந்த ஸ்தானத்திலே தானாகவே அமர்ந்தான். அவன் நண்பர்களான மருத்துக்களோடு ஜயமுள்ளவனாகிறான். அவனுடைய ஏழாவது



சகோதரனுடைய தந்திரங்கள் யக்ஞத்திலே பலிக்கவில்லை.

3. போருக்குச் செல்லும் அவன் துன்பமற்ற வழியால் கடந்து பொருளை விரும்பி எல்லாச் செல்வத்தையும் பற்றும் பணியிலாகிறான். வெல்லப்படாத அவன் சிச்ன தேவர்களைச் சாய்த்து நூறு கதவுகளுள்ள புரத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்த எல்லாச் செல்வங்களையும் தன் ஆற்றலால் ஜயித்தான்.

4. அவன் போர்ச் செல்வமான பசுக்களுக்குப் போராடி, மந்தையின் நடுவிலே திரிந்து யுவதிகளான தாரைகளை இங்கே செலுத்துகிறான். அவனுடைய நண்பர்களான நதிகள் கால்களில்லாமலும், தேர்களில்லாமலும் கலசங்களான குதிரைகளோடு சலத்தை நெய்யைப்போல் பொழிகிறார்கள்.

5. கேட்காமலேயே செல்வத்தை யளிப்பவனும், மகானும், குற்றமற்றவனும், தன் ஸ்தானத்திலிருந்து நீங்கியவனுமான இந்திரன் உருத்திரர்களோடு வருவானாக. சுரத்திலிருந்து நீங்கிய வம்ரனுடைய தாயையும், தந்தையையும் நான் நினைக்கிறேன். அவன்–வம்ரன்–பகைவனின் உணவைப் பெற்றான். அதை அபகரிக்குங்கால் கதறினான். 9943

6. தலைவனான இந்திரன் கர்ச்சிப்பவனும், ஆறு கண்களும், மூன்று தலைகள் உள்ளவனுமான தாஸனை எதிர்த்து ஜயித்தான். திருதன் அவனுடைய பலத்தால் பலமடைந்து அயக்கூர் உள்ள விரலால் சலமேந்திய மேகத்தை அடித்தான்.

7. அவன் உச்சத்தில் எழுந்து, துன்புறுத்துபவனும் தாக்குபவனுமான பகைவன்மீது தன் சரத்தைச் செலுத்தினான். போற்றத் தகுந்தவனும், மனிதர்களின் உத்தமத் தலைவனுமான அவன், எங்களுக்கு நலஞ் செய்யப் புலனாகி தஸ்யுக்களைக் கொன்றபோது பகைவர்களின் தேகங்களை அழித்தான்.

8. பசுந்தரையின் மீது பொழிய விரும்பும் திரண்ட மேகத்தைப்போல் அவன் எங்கள் மனைக்கு வழியைக் கண்டான். அவன் தன் அங்கங்களோடு ஸோமத்தை அணுகியபோது பருந்தைப் போலுள்ள அவன் இரும்புக் கால்களோடு தஸ்யுக்களைக் கொல்கிறான்.

9. அவன் வலியனை, வலிய படையால் வீழ்த்துவானாக. அவன் உதாரனான குத்ஸனுக்காக சுஷ்ணனைக் கொன்றான். அவன் போற்றப்பட்ட கவியைச் செலுத்தினான். அவன் கவிக்கும், அவனுடைய வீரர்களுக்கும் அத்கனை வசப்படுத்தினான்.

10. செல்வங்களைத் தருபவனும், மருத்துக்களோடு மனிதர்களுக்கு இதமாயிருப்பவனும், தேஜசுகளோடு துலங்குபவனும், வருணனைப் போல் பேரறிஞனும், விரும்பத்தகுந்தவனும், ருதுக்களைப் பாலிப்பவனுமான இந்திரன் நான்கு கால்களுள்ள அருவைக் கொன்றான்.

11. உசிஜனுடைய புதல்வனான ரிஜிசுவன் இந்திரஸ்தோமங்களோடு வச்சிரத்தால் பிப்ருவினுடைய கோசாலையை உடைத்தான். ஸோமத்தைப் பிழிந்து போற்றத்தகுந்த அறிஞன் இந்திரனுக்குத் துதிகளைக் கூறி பகைவனுடைய புரங்களை எதிர்த்துச் சென்று தன் தேகத்தால் எதிரிகளை ஜயித்தான்.

12. அசுரனே! இந்திரனே! வம்ரகன் மகத்தான மேன்மையைப் பெற இந்திரன் காலால் நடந்து சென்றான். அணுகப்படும் அவன் எங்களுக்கு சுவஸ்தியை அளிப்பானாக. அவன் எங்களுக்கு உணவையும், பானத்தையும், நிலையான மனையையும், எல்லா நல்ல பெருமைகளையும் அளிப்பானாக. 9950

## 100. விசுவேதேவர்கள்

### 937. துவஸ்யுவந்தனனுடைய புதல்வன்

1. செல்வனான இந்திரனே! பலத்திலே உனக்கு ஒப்பாயுள்ள பகைவனை எங்களுடைய போகத்துக்காகக்



கொல்லவும். இந்த யக்ஞத்திலே போற்றப்பட்டு ஸோமத்தைப் பருகுபவனான நீ, நாங்கள் செழிக்க அனுகூலமாகவும். ஸவிதா தேவர்களோடு எங்கள் யக்ஞத்தைப் பாலிப்பானாக. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை வரிக்கிறோம்-விரும்புகிறோம்.

2. அனைத்தையும் பாலிக்கும் இந்திரனுக்குப் பருவத்துக்குரிய பாகத்தை அளியுங்கள். வெண்மையான பாலின் பானத்தைப் பெறுபவனும், சுத்தமான ஸோமத்தைப் பருகுபவனும், சலனமாகுங்கால் சப்திப்பவனுமான வாயுவுக்கு உரிய பாகத்தை அளியுங்கள். நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

3. நாங்கள் தேவர்களோடு அனுகூலமாயிருக்க, எங்களுடைய சிரத்தையுள்ள யஜமானன் யஜிக்குங்கால் அவனுக்குத் தேவனான ஸவிதா நன்கு பக்குவப்பட்ட உணவைத் தோற்றுவிப்பானாக. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

4. இந்திரன் தினந்தோறும் எங்களிடம் நல்ல மனமுடனிருப்பானாக. அரசனான ஸோமன் எங்கள் துதியைத் தேவர்கள் எங்களுக்கு நட்புள்ள செல்வங்களை அளிக்க ஏற்றுக்கொள்வானாக. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

5. இந்திரன் தன்னுடைய துதியாருகமான பலத்தால் என்னுடைய அங்கத்தை ஏந்துகிறான். பிரகஸ்பதியே! நீ என்னுடைய ஆயுளை நீட்டுபவனாயிருக்கிறாய். யக்ஞமும் எங்களுடைய பாலகனாயிருக்கும் பேரறிஞனான மனுவும் எங்களை சுகப்படுத்துவார்களாக. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம். 9955

6. இந்திரனுடைய தெய்வபலம் நன்கு கற்பிக்கப்பட்டிருக்கிறது. தேவர்களைத் துதிப்பவனும், அவிகளைப் பெற்றுக்கொள்பவனும், கவியும், யக்ஞத்தில் யக்ஞாரு

கனும், அழகுள்ளவனும், எங்களிடம் மிக்க அருகில் இருப்பவனுமான அக்கினி எங்கள் மனையிலே வசிக்கிறான். நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

7. நாங்கள் உங்களுக்குத் தெரியாமல், மறைவிலே எந்தப் பெரிய தீமையையும் செய்யவில்லை. செல்வங்களைத் தருபவர்களே! தேவர்களின் கோபத்தை எழுப்பும் எந்த வெளிப்படைத் தீமையையுஞ் செய்யவில்லை. தேவர்களே! நாங்கள் அசத்திய வடிவத்தை ஏந்தாமலிருப்போமாக: நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

8. ஸவிதா எங்கள் நோயை நீக்குவானாக. இனிய ஸோமத்தைப் பிழியும் கல் மிக்கப் போற்றப்படும் இடத்திலே மலைகள் எங்களின் கொடிய பாவத்தை விலக்குக நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

9. தேவர்களே! நான் ஸோமத்தைப் பொழியுங்கால் கல் உயர்த்தப்படுக. என்னுடைய மறைந்துள்ள பகைவர்களையெல்லாம் விலக்குங்கள் தேவனான ஸவிதா எங்களுடைய துதியாருகபாலகனாயிருக்கிறான். நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

10. பசுக்களே! கோசாலையிலே யக்ஞத்தின் சதனத்திலே வண்ணஞ் செய்யப்பட்ட நீங்கள் பசுந்தரையிலே மிகுந்த புல்லைப் புசியுங்கள். உங்களுடைய தேகம் எங்களுடைய தேகத்துக்கு மருந்தாயிருக்க. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.

11. பாடுபவன் மனத் திட்பங்களை நிரப்புகிறான். இந்திரன் எல்லா மனிதர்களுடைய அன்பையும் அடைந்திருக்கிறான். ஸோமம் பொழிபவர்களைப் பாலிக்கிறான். செல்வமான அநுகூல எண்ணமுள்ளவன், இந்திரனுடைய பானத்துக்காக ஆபீனம் ஸோமத்தால் நிறைந்திருக்கிறது. நாங்கள் ஸர்வாத்மாவான அதிதியை விரும்புகிறோம்.



12. உன்னுடைய மனத்திட்பத்தை நிரப்பும் சோதி விரும்பத்தகுந்தது. உன்னுடைய படைகள் சிதைவிவிருந்து பாலிப்பவை. தடைபடாதவை. ஆதலால் துவஸ்யு நேரான கயிரோடு பசுக்களில் உத்தமமாயிருப்பதைப் பற்றத் துரிதமாகிறான். 9962

## 101. விசுவேதேவர்கள்

### 938. புதன்—ஸோமனுடைய புதல்வன்

1. நண்பர்களே! ஒருமனமுள்ள நீங்கள் எழுந்திருங்கள். ஒரு இடத்தில் வசிக்கும் பல சனங்களான நீங்கள் அக்கினியை சொலிப்பியுங்கள். நான் இந்திரனோடு சேர்ந்துள்ள உங்களை, ததிக்கிராவை, அக்கினியை, தேவியான உஷையை எங்கள் பாலனத்துக்காக அழைக்கிறேன்.

2 மதமளிக்கும் துதிகளைக் கற்பியுங்கள். செயல்களைப் பரத்துங்கள். துடுப்புக்களால் செலுத்தப்படும் கப்பலைக் கட்டுங்கள். உழுபடைகளை சுத்தப்படுத்துங்கள். சீர்படுத்துங்கள். நண்பர்களே! முன்னோடியும் யக்ஞாருகனுமான அக்கினியைச் செலுத்துங்கள்.

3. ஏர்களை இணையுங்கள். நுகங்களை இசையுங்கள். உழுத நிலத்திலே விதையைத் தெளியுங்கள். எங்கள் பாட்டால் மிகுந்த உணவு தோன்றுக. பக்குவ தானியத்தின் அருகே அரிவாள் செல்க.

4 தேவர்களிடமிருந்து சுகத்தை விரும்பும் கவிகளான தீரர்கள் ஏர்களை இணைக்கிறார்கள். நுகங்களைத் தனியாய் வைக்கிறார்கள்.

5. வாளிகளை அவற்றின் இடங்களிலே வரிசைப்படுத்துங்கள். அவற்றை வார்களோடு இணையுங்கள். நாம், சலம் நிறைந்திருப்பதும், இறைப்பதற்குத் தகுதியுள்ளதும், சீக்கிரம் வற்றாமலிருப்பதுமான கிணற்றிலிருந்து சலத்தை இறைப்போமாக. 9967

6. நான், நல்ல கயிறுகளால் இணைக்கப்பட்டவையும், இயங்குபவையுமான வாளிகளால் சலம் நிறைந்திருப்பதும், இறைக்கத் தகுந்ததும், சுலபமாய் வற்றுமலிருப்பதுமான கிணற்றிலிருந்து சலத்தை இறைக்கிறேன்.

7. குதிரைகளைத் திருப்தி செய்யுங்கள். உழும் நற்பணியை நிறைவேற்றுங்கள். ஸ்வஸ்தி ஏந்தும் தேரை சித்தப்படுத்துங்கள். சூரர்கள் பருகுவதற்குரிய பானமுள்ளதும், கவசத்தைப்போலுள்ள தொட்டியோடிருப்பதும், வாளிகள் விளங்குவதும், கற்சக்கரத்தோடுமுள்ள கிணற்றை இறையுங்கள்.

8. பசுச்சாலையைக் கற்பியுங்கள். ஏனெனில் உங்களுடைய வீரர்கள் அங்கு பருகுகிறார்கள். பரந்தவையும், பலவிதமாயுமுள்ள கவசங்களைத் தையுங்கள். எல்லாப் பகைவர்களிடமிருந்து பாலிப்பளிக்கும் இரும்புக்கோட்டைகளைக் கட்டுங்கள். உங்கள் பாத்திரம் ஒழுகாமலிருக்க அதைப் பலப்படுத்துங்கள்.

9. தேவர்களே! நான் என்னுடைய பாலனத்துக்காக உங்களுடைய துதியாருகமானதும், இங்கு யக்ஞத்துக்கும் வணக்கத்துக்குரியதுமான தெய்வ மனத்தை ஈர்க்கிறேன். அது எங்களுக்கு நன்றாக மேய்ந்து திரும்பிய ஆயிரம் பால் தாரைகளையளிக்கும் பெரிய பசுவைப்போல் கறக்க.

10. மரப்பாண்டத்தினுள் பொன் நிற ரஸத்தைப் பொழியுங்கள். கற்கோடரிகளால் அதைக் கற்பியுங்கள். பத்து கச்சைகளால் அதைச் சுற்றிக் கட்டுங்கள். இரு நுகங்களிலே சுமைக் காளையைப் பூட்டுங்கள்.

11. மனையிலே இரு மனைவிகளுடன் இயங்குபவனைப் போல் இரு நுகங்களின் நடுவே நெருக்கப்பட்டு சுமைக் காளை செல்லுகிறது. வனத்திலே வனஸ்பதியை ஸ்தாபியுங்கள். தோண்டாமல் ரஸத்தைச் சேருங்கள்—சேகரியுங்கள்.



12. தலைவர்களே! இந்திரன் சுகத்தை அளிப்பவன். சுகந்தருபவனை ஊக்கப்படுத்துங்கள். உற்சாகப்படுத்துங்கள். உணவைச் சம்பாதிக்க அவனோடு விளையாடுங்கள். அறிஞர்களே! நிஷ்டிரியின் மகனான இந்திரனை ஸோமத்தைப் பருக எங்களைப் பாலிக்க இங்கு கீழே அழைத்து வாருங்கள். 9974

## 102. துருகணன் அல்லது இந்திரன்

### 939. முத்கலன் — பர்மியசுவனுடைய புதல்வன்

1. முத்கலனே! உன்னுடைய குதிரையில்லாத, காளையில்லாத தேரை இந்திரன் தன் வச்சிரத்தால் பாலிப்பானாக. புருஹூதனே! எங்கள் செல்வத்தை மீட்கும் இந்தப் புகழ்பெற்ற போரிலே எங்களைக் காக்கவும்.

2. முத்கலானி ஆயிரம் தேர்ச்சுமை செல்வங்களை ஜயித்தபோது காற்று அவளுடைய ஆடையை உயர்த்தியது. அவள் பசுக்களைத் தேடிய தேரோட்டியாயிருந்தாள். இந்திரனுடைய படையான அவள், போரிலே பறித்த செல்வத்தைக் குவித்தாள்.

3. இந்திரனே! எங்களைக் கொல்ல விரும்பும் எதிர்ப்பவர்களின் நடுவே உன் வச்சிராயுதத்தைச் செலுத்தவும். மகவானே! எங்களுடைய பகைவன் ஆரியனாயிருந்தாலும் அல்லது தாஸனாயிருந்தாலும் அவனுடைய இரகசியமான ஆயுதத்தை விலக்கவும்.

4. காளை இன்பமாகி சலம் நிறைந்த ஏரியைக் குடித்தான். அவன் மலையின் உச்சியைப் பிளந்தான். அவன் பகைவனை எதிர்த்துச் சென்றான். வலியனான காளை புகழை விரும்பி துரிதமாய்ச் செல்லும் பகைவனை எதிர்த்து அவனைத் தன் இரு கைகளால் பிடித்தான்.

5. முத்கலன்: அவர்கள் காளையினருகில் வந்தார்கள். அவனைக் கர்ச்சிக்கச் செய்தார்கள். அவனைப்

போரின் நடுவே பொழியச் செய்தார்கள். முத்கலனுன நான் அவனுல் போரிலே நன்கு மேய்ந்திருந்த நூறும் ஆயிரங்களுமான பசுக்களை ஜயித்தேன். 9979

6. பகைவனை அழிக்கக் காளை இணைக்கப்பட்டது. கேசியான ஸாரதி காளையைக் கர்ச்சிக்கச் செய்தாள். இணைக்கப்பட்டுள்ள தடைபடாத காளையால் இழுக்கப் படும் தேரோடு பாயும் முத்கலானியை நோக்கி வந்த வீரர்கள் சென்றுர்கள்.

7. அறிஞனுன முத்கலன், தேர்த் தண்டைத் திருத்தி முற்படுத்தினுன். காளையைச் சரிப்படுத்தி தேரிலே இணைத்தான். இந்திரன் பசுக்களின் பதியைப் பாலித்தான். கம்பீர நடைகளோடு காளை முன்னே பாய்ந்தது.

8. நுகவாரால் தண்டில் இணைக்கப்பட்ட சடைக் காளை சாட்டையால் அடிக்கப்பட்டு ஊக்கமாய்ப் பாய்ந் தது. அவன் பல சனங்களுக்காக மகத்தான செயல்களை நடத்தி, பசுக்களைக் கவனித்து ஆற்றலைப் பெற்றுன்.

9. காளையின் நண்பனுயிருந்த இவ்வாயுதத்தைப் பார்க்கவும். போர்க்களத்தின் நடுவே சயனித்திருக் கிறது. அதனுல் முத்கலனுன நான் நூறும், ஆயிரங்களு மான பசுக்களை ஜயித்தேன்.

10. அவன் அருகிலிருக்கும் தீமைகளை, பகைவர்களை, இங்ஙனம்—இவ்வாயுதத்தைப் போல் பார்த்தான். ஆயு தத்தைத் தேரிலே சேர்க்கிறுர்கள். அதைத் தேரிலே ஸ்தாபிக்கிறுர்கள். அவர்கள் அதற்கு சலத்தையும் அறி யார்கள். உணவையும் அளியார்கள். காளைக்கு மேலுள்ள அது நுகத்தை ஏந்தி ஜயத்தைத் தருகிறது.

11. அவள் கைவிடப்பட்டவளைப் போல் கணவனைப் பெற்றுள். பால் நிறைந்த ஸ்தனமுள்ளவள் போலா னுள். துரிதமாய்ச் செல்லும் தேரோடு நாங்கள் ஜயிப் போமாக. உணவோடு செல்வம் எங்களுக்களிப்படுக.



12. இந்திரனே! உன் தேரிலே இணைக்கப்பட் டுள்ள இரு வலிய குதிரைகளை ஊக்கப்படுத்தி நீ களத் திலே போர் செய்யுங்கால் எல்லா உலகத்தின் கண் ணுக்குக் கண்ணுயிருக்கிருய். 9986

## 103. இந்திரன்

### 940. அப்பிரதிரதன்–இந்திரனுடைய புதல்வன்

1. துரிதனும், கொம்புகளைக் கூர்செய்து கொள்ளும் பயங்கரமான காளையைப் போலிருப்பவனும், பகைவர் களை அழிப்பவனும், மனிதர்களை ஊக்கப்படுத்துபவனும், நன்கு கர்ச்சிப்பவனும், சதா விழித்திருப்பவனும், வீரர் களின் தலைவனுமான இந்திரன், உடனேயே நூறு பகைப் படைகளை ஜயித்தான்.

2. நன்கு கர்ச்சிப்பவனும், விழித்திருப்பவனும், ஜய முள்ளவனும், போர்த் தன்மையிருப்பவனும், ஜயிக்கப் படாதவனும், தீரனும், சரங்களைச் செலுத்துபவனும், வர்ஷிப்பவனுமான இந்திரனேடு இணைந்து வீரர்களே! வெல்லுங்கள். தலைவர்களே! இப்பொழுது வீழ்த்துங்கள்.

3. கத்திகளை ஏந்துபவனும், ஜயிப்பவனும், பகைவர் களின் கூட்டத்தோடு போராடும் வீரனும், எதிர்ப்பவர் களை வெல்லுபவனும், ஸோமத்தைப் பருகுபவனும், வலிய கைகளுள்ளவனும், உக்கிர வில்லை ஏந்துபவனும், நன்கு இயங்கும் சரங்களைச் செலுத்துபவனும், சரமேந்தும் மருத் துக்களோடுமுள்ள இந்திரனுடைய உதவியோடு பகைவர் களை வெல்லுங்கள்.

பிரகஸ்பதி

4. பிரகஸ்பதியே! அரக்கர்களை அழிப்பவனுன நீ, எங்கள் பகைவர்களை விலக்கிக்கொண்டு உன்னுடைய தேரிலே இங்கு வா. அழிப்பவனும், போரிலே ஜயிப் பவனும், பகைப் படைகளை உடைப்பவனுமான நீ, எங்க ளுடைய தேர்களைப் பாலிப்பவனுயிருக்கவும்.

இந்திரன்

5. பலத்தால் விளங்குபவனும், மகானும், வீரமுள்ள வனும், ஜயிப்பவனும், வலியனும், சகிப்பவனும், உக்கிர னும், சூரர்களோடு சூழப்பட்டவனும், தீரர்களோடு சேர்ந்துள்ளவனும், பலத்தின் புதல்வனும், பசுக்களை ஜயிப்பவனுமான இந்திரனே! நீ உன்னுடைய ஜயமுள்ள தேரிலே ஏறவும். 9991

6. சகோதரர்களே! நண்பர்களே! மலைகளைப் பிளப்பவனும், பசுக்களை ஜயிப்பவனும், வச்சிரமேந்துபவ னும், படையை அடக்குபவனும், பலத்தால் பகைப் படையை அழிப்பவனுமான இந்திரனைப் பின்பற்றுங்கள். நீங்கள் வீரர்களைப் போல் இயங்குங்கள். இந்த இந்திர னைப் போல் உங்கள் வீரத்தைப் புலப்படுத்துங்கள்.

7. பலத்தால் மேகங்களை ஆக்கிரமிப்பவனும், இரக்க மற்றவனும், வீரனும், சதா கோபமுள்ளவனும், போரிலே ஜயிப்பவனும், தளராதவனும், தடைபடாதவனுமான இந்திரன் போரிலே எங்களுடைய படைகளைப் பாலிப் பானாக.

8. இந்திரன் இந்தப் படைகளின் தலைவனுயிருப் பானாக. பிரகஸ்பதியும், தட்சிணையும், யக்ஞமும், ஸோம னும் எங்கள் முன்னே செல்வார்களாக. மருத்துக்கள் தேவர்களுடைய அழிக்கும் ஜயிக்கும் படைகளின் முன்னே செல்வார்களாக.

9. வர்ஷிக்கும் அரசனான இந்திரனுடைய, வருண னுடைய, ஆதித்தியர்களுடைய, மருத்துக்களுடைய உக் கிரப் படை எங்களுக்குத் தோன்றுக. மகாமனமுள்ளவர் களும், புவனங்களை ஆட்டுபவர்களுமான தேவர்களின் கோஷம் எழுந்தது.

10. மகவானே! எங்களாயுதங்களை ஊக்கப்படுத்தி உயர்த்தவும். என்னுடைய போர் வீரர்களின் மனங்களை உற்சாகப்படுத்தவும். விருத்திரனை அழிப்பவனே! வலிய



குதிரைகளின் வலிமையை ஊக்கப்படுத்தவும். ஜயிக்கும் தேர்களின் கோஷங்கள் மேலே எழுக.

11. எங்கள் கொடிகள் சேருங்கால் இந்திரன் எங்களைப் பாலிப்பானாக. எங்கள் படையின் சரங்கள் வெற்றியுள்ளவையாகுக. எங்களுடைய வீரர்கள் போரிலே ஜயிப்பார்களாக. தேவர்களே! போர்களிலே எங்களைப் பாலியுங்கள்.

அப்வாதேவி

12. அபீவையே! எங்கள் பகைவர்களின் புலன்களைப் பிரமிக்கச் செய்து, அவர்களுடைய அங்கங்களைப் பற்றிக் கொள்ளவும். பிறகு நீங்கவும். அவர்களை எதிர்க்கவும். அவர்களுடைய இருதயங்களைத் துக்கத்தால் எரிக்கவும். அவர்கள் கனத்த இருளிலே வசிப்பார்களாக.

மருத்துக்கள்

13. வீரர்களே! முன்னேறுங்கள். வெல்லுங்கள். இந்திரன் உங்களுக்கு சுகத்தை அளிப்பானாக. உங்களை எவனும் துன்பப்படுத்தாமலிருக்க. உங்கள் புஜங்கள் பலமுடனிருக்க 9999

## 104. இந்திரன்

### 941. அஷ்டகன்—விஸ்வாமித்திரனுடைய புதல்வன்

1. புருஹூதனே! உனக்கு ஸோமம் பொழியப்பட்டி ருக்கிறது. உன்னுடைய இரு குதிரைகளோடு எங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாகவும். அறிஞர்களால் மொழியப் படும் எங்களை தோத்திரங்கள் விசைந்து உன்னிடம் சேர்கின்றன. இந்திரனே! பொழிந்திருக்கும் ஸோமத் தைப் பருகவும்.

2. குதிரைகளுள்ளவனே! இந்த யக்ஞத்திலே சலத் தோடு கலக்கப்பட்டுள்ள ஸோமத்தைப் பருகவும். அறி ஞர்களால் அளிக்கப்படும் ரஸத்தால் உன் வயிற்றை நிரப்பிக்கொள்ளவும். கற்கள் உனக்காகவே அதை

விரும்பிப் பிழிந்தன. இந்திரனே! துதிகளால் ஏந்தப் படும் நீ இந்த ஸ்தோமங்களால் உன் மதத்தை அதி கரித்துக்கொள்ளவும்.

3. குதிரைகளின் தலைவனே! வர்ஷிப்பவனே! நீ முன்னே செல்ல நான் உனக்கு உண்மையாயும் உக்கி ரமாயுமுள்ள பானத்தைச் செலுத்துகிறேன். இந்திரனே! உன்னுடைய ஆற்றலுக்காகப் புகழப்படும் நீ இந்த யாகத்திலே துதிகளாலும் எல்லாச் செயல்களாலும் மதப் படவும்.

4. சக்திவாய்ந்த இந்திரனே! உன் பாலனத்தாலும், வீரியத்தாலும், உணவையும் மக்கட்களையும் பெற்று உன்னையே விரும்பிய ருதமறிந்தவர்களான அங்கிரஸர் கள், யக்ஞ கர்த்தாவினுடைய மனையிலே உன்னையே புகழ்ந்து உன்னோடு மகிழ்ந்து நின்றார்கள்.

5. குதிரைகளின் தலைவனே! நன்கு போற்றப்பட்ட வனும், சுகத்தைத்தருபவனும், புகழுள்ளவனுமான உன் னுடைய சரியான ஆக்ஞைகளால் இந்திரனே! உன்னைத் துதிக்கும் மனிதர்கள், உன்னுடைய அனுகூல மனத்தால், துதிப்பதில் மற்றவர்களை முந்தியதால் உன்னுடைய மிக்க அன்பான பாலனத்தை அடைந்தார்கள். 10004

6. குதிரைகளிருப்பவனே! பிழியப்பட்டுள்ள ஸோம ரஸத்தைப் பருக உன்னுடைய இரு கபில நிறக் குதிரை களோடு எங்கள் ஸ்தோமங்களுக்கு வா. இந்திரனே! உன்னால் ஏற்கப்படும் யக்ஞம் உன்னிடம் வருகிறது. யக்ஞத்தை நன்கறியும் நீ, செல்வத்தைத் தருபவனாயிருக் கிறாய்.

7. எங்களுடைய தோத்திரங்கள், மிகுந்த உண வைத் தருபவனும், பகைவர்களை ஜயிப்பவனும், ஸோமத் தில் இன்புறுபவனும், செல்வமுள்ளவனும், நன்கு போற் றப்படுபவனும், தடைபடாதவனுமான இந்திரனை வண



ணப்படுத்துகின்றன. வழிபடுபவனுடைய துதிகள் அவ னைப் போற்றுகின்றன.

8. இந்திரனே! புரங்களை உடைப்பவனே! நீ எந்த பெருகும் தேவிகளான ஏழு நதிகளால் கடலை நிரப்புகி றாயோ அவை தடைபடாமல் பாய்கின்றன. நீ ஒன்பதும், தொண்ணூறுமான நதிகளையும், தேவர்களுக்கும் மனிதர் களுக்கும் அவற்றின் வழியையும் புலப்படுத்தினாய்.

9. நீ விருத்திரனிடமிருந்து மகத்தான சலங்களை விடுவித்தாய். நீ ஒரு தேவனே, அவற்றைக் கவனித்தாய். இந்திரனே! விசுவாசியான இந்திரனே! நீ எந்த சலங் களால் விருத்திரனைக் கொல்லப் பயன்படுத்தினாயோ அவற்றால் உன்னுடைய சுய தேகத்தைப் பாலித்துக் கொள்ளவும்.

10. இந்திரன் வீரர்களின் தலைவனாயிருக்கிறான். மகத் தான செயல்களை நடத்தும் அவனுக்குத் தோத்திரம் நன் களிக்கப்படுகிறது. புருஹூதனைத் துதியின் குரல் போற்று கிறது. அவன் விருத்திரனைக் கொன்றான். அவன் சோதியைக் கற்பித்தான். ஜயிப்பவனான சக்கரன் பகைப் படைகளை ஜயித்தான்.

11. நாங்கள் இந்தப் போரிலே, எங்கள் பாலனத் துக்காக சுத்தனும், செல்வனும், சமரிலே மிக்க வீர முள்ளவனும், செவிகொடுப்பவனும், உக்கிரனும், களங் களில் விருத்திரர்களைக் கொல்பவனும், பகைவர்களு டைய பொருளைப் பற்றுபவனுமான இந்திரனை அழைக் கிறோம். 10010

## 105. இந்திரன்

### 942. துர்மித்திரன் அல்லது துஸூமித்திரன் — குத்ஸனு டைய புதல்வன்

1. வசுவே! எங்களுடைய உன்னை விரும்பும் தோத் திரம் உன்னிடம் எப்பொழுது சேரும்? எப்பொழுது அவன் அணையைப்போல் தடுத்து, காற்றால் செலுத்தப்

படும் மழைக்காக மிக்கத் தாமதான ஸோமத்தை விடு
விப்பான் ?

2. நன்கு பழக்கப்பட்டவையும், ஊக்கமுள்ளவை
யும், துரிதமாயும், தீரமாயுமிருப்பவையும், இரு உலகங்
களைப்போல் பிரகாசிப்பவையுமான இரு கபில நிறக் குதிரை
களுள்ளவனும், அவற்றின் தலைவனுமான நீ, எங்களுக்குச்
செல்வத்தையளித்து எங்கள் துதிகளை விரும்பவும்.

3. இந்திரன், பாவத்திலிருந்து பிறந்த விருத்திரனோடு
போர் செய்தபோது, மனிதனைப்போல் கலங்கி, களைப்
படைந்து தளருங்கால் மருத்துக்களின் படைகளோடு
சேர்ந்து சிறப்புக்குரியவனானான்.

4. கனைப்பவையும், குதிப்பவையுமான இரு குதிரை
களைச் செலுத்தும் சூரனும், மனிதர்களின் நண்பனுமான
இந்திரன், தேரிலே ஏறி, மதத்துக்காக வருகிறான். துதிப்ப
வனுக்குச் செல்வத்தை அளிக்கிறான்.

5. வழிபடுபவனைப் புட்டிப்படுத்த, நீண்ட பிடரி
கேசமுள்ளவையும், எங்கும் செல்பவையுமான குதிரை
களிலே ஏறியுள்ள அவன், மகத்தான மோவாய்களுள்ள
அவன் தன் இரு தாடைகளின் ஸமிக்ஞையால் ஸோமத்
தைக் கேட்கிறான். 10015

6. புகழுள்ள பலமிருக்கும் அவன் புகழுள்ள மருத்
துக்களோடு சேர்ந்து புகழுள்ளவனானான். வானிலே
விளங்கும் வீரன் அற்புதச் செயல்களோடுள்ள ரிபுக்களைப்
போல் தன் வலிமையால் வீரச் செயலை நடத்தினான்.

7. தஸ்யுவை சுலபமாய்க் கொல்ல வச்சிராயுதத்
தைக் கற்பித்தவனும், பரந்த வானைப்போல் தடைபடாத
மோவாய்களுள்ளவனும், பொன்தாடியுள்ளவனும், கபில
நிறக் குதிரைகளுள்ளவனுமான நீ, வச்சிராயுதத்தைக் கூர்
செய்துகொள்ளவும்.

8. இந்திரனே! எங்களுடைய பாபங்களை விலக்கவும்.
எங்கள் ரிக்குக்களால் ரிக்குக்களற்றவர்களை நீக்குவோ



மாக. பிரம்மமில்லாத யக்ஞம் உன்னைத் திருப்தி
செய்யாது.

9. யக்ஞத்தின் நுகங்களிலே நிலைக்க உனக்கு
முவ்வகை சுவாலை மேலே எரியுங்கால் மனிதனின் நண்ப
னான நீ, உன்னுடைய புகழின் பாத்திரத்திலே ஏறுகிறாய்.

10. அழகிய பசு ஸோமத்தோடு கலக்கப் பாலைத்
தருக. கலந்த ரஸத்தை உன்னுடைய பாத்திரத்தினுள்
ஊற்றிக்கொள்வதற்கான சட்டுவம் குற்றமன்னியிலிருக்க.

11. தஸ்யுக்களைக் கொல்லுங்கால் குத்ஸனுடைய
புதல்வனைப் பாலித்தபோது மகத்தாயுள்ள இந்திரனான
நீ, நூற்றுக்கணக்கான செல்வங்களை அளித்தபோது
ஸௌமித்திரன் இங்ஙனம் உன்னைத் துதித்தான். துர்மித்
திரன் உன்னை இங்ஙனம் துதித்தான். 10021

## 106. அசுவினிகள்

### 943. பூதாம்சன்—கசியபனின் புதல்வன்

1. அசுவினிகளே! நீங்கள் இருவரும் அவியை
விரும்புகிறீர்கள் — நாடுகிறீர்கள். நீங்கள் ஆடைகளை
நெய்து பரத்தும் நெய்வோர்களைப்போல் யக்ஞச் செயல்
களைப் பரத்துகிறீர்கள். வழிபடுபவன் சேர்ந்துள்ள உங்
கள் இருவரையும் தன் விருப்பங்களைப் பூர்த்தி செய்து
கொள்ள துதித்தான். நீங்கள் இரு நல்ல தினங்களைப்
போல்—சூரிய [illegible]ரர்களைப்போல்—உணவைத் தருகிறீர்
கள்.

2. மெய்தரைகளுக்குச் செல்லும் இரு ஆர்வமுள்ள
காளைகளைப் போல் அவிகளால் உங்களை நிரப்புபவர்களி
டம் செல்லுகிறீர்கள். செல்வங்களை ஏந்தி வரப் பயன்
படுத்தப்பட போருக்குப் பிரயோகமாகும் இரு குதிரை
களைப் போல் நெருங்குகிறீர்கள். நீங்கள் சனங்களின்
நடுவே இரு புகழுள்ள தூதர்களைப்போல் விளங்குகிறீர்
கள். உங்களுக்கும் பானமளிக்கும் இடத்தைக் காளைகளைப்
போல் அணுகுங்கள்.

3. பறவையின் இரு சிறகுகளைப்போல் சேர்ந்துள்ள நீங்கள், விரும்பத் தகுந்த இரு பசுக்களைப் போல் யக்ஞத்துக்கு வந்தீர்கள். அக்கினியைப்போல் துலங்கும் உங்களை பக்தன் சொலிப்பித்தான். நீ பல இடங்களிலே சஞ்சரிப்பவர்களைப்போல் யஜிக்கிறீர்கள்.

4. நீங்கள் எங்களுக்குப் புதல்வர்களுக்குப் பெற்றோர்களைப்போல் பந்துக்களாயிருக்கிறீர்கள். நீங்கள் உக்கிரமாய்ப் பிரகாசிக்கும் இரு அனல்களைப் போலும் பாலனத்தை அளிக்கத் துரிதமாகும் இரு அரசர்களைப் போலும் விளங்குகிறீர்கள். மானிடர்களைப் புட்டிப்படுத்த உணவையளிக்கும் இருவரைப்போலும் துதிப்பவர்களின் போகத்துக்காக இரு ஒளிமண்டலங்களைப் போலுமுள்ள நீங்கள், இரு வேகமான குதிரைகளைப்போல் எங்கள் அழைப்புக்கு வந்தீர்கள்.

5. நீங்கள் இனிய நடையுள்ளவையும், புஷ்டாங்கமுள்ள காளைகளைப்போல் சுகத்தைத் தரத் தோன்றுகிறீர்கள். நீங்கள் மித்திராவருணர்களைப்போல் சத்தியவான்களாயிருக்கும் உங்களிடம் அபரிமித செல்வமுண்டு. புல்லால் புட்டியாகி சந்தோஷமாகும் குதிரைகளைப்போல் இருப்பவர்களும், வானில் விளங்குபவர்களுமான நீங்கள், யக்ஞ உணவால் மேஷங்களைப்போல் போஷிக்கத்தகுந்தவர்கள். அவிகளால் பாலிக்கத் தகுந்தவர்கள். 10026

6. நீங்கள், முன்கால்களை வளைத்து, எதிரியை மிதிக்கும் இரு மதம்பிடித்த யானைகளைப்போலும், நண்பர்களைப் பாலித்து, பகைவர்களை அழிக்கும் நிதோஷனுடைய இரு புதல்வர்களைப் போலும் தோன்றுகிறீர்கள். சலத்தில் தோன்றிய இரு இரத்தினங்களைப்போல் பிரகாசிப்பவர்களும், ஜயிப்பவர்களுமான நீங்கள், என்னுடைய தேயும் மானிட தேகத்தைத் தேயாமல் செய்யுங்கள்.

7. இரு வலிய வீரர்களைப்போல் உக்கிரர்களாயிருக்கும் நீங்கள் இந்த சலனமாகும் அழியும் மானிட



தேகத்தை நோக்கங்களுக்கு சலனத்திலிருந்து கடத்துவது போல் விபத்திலிருந்து கடத்திச் செல்லுகிறீர்கள்.

8. இரு கொப்பரைகளைப்போல் உங்களுடைய வயிறுகள் ஸோமத்தால் நிறைந்திருக்கின்றன. செல்வத்தைப் பாலிப்பவர்களும், பகைவர்களை அழிப்பவர்களுமான நீங்கள், கைகளிலே படைகளை ஏந்துகிறீர்கள். சந்திரனைப் போல் வடிவங்களுள்ள நீங்கள் பறக்கும் இரு பறவைகளைப்போல் சஞ்சரித்து, மனத்தால் ஜயத்தை அடைந்துள்ள நீங்கள், துதியாருகர்களான இருவரைப்போல் தோன்றுகிறீர்கள். நீங்கள் யக்ஞத்தை அணுகுகிறீர்கள்.

8. நெடியர்களைப்போலுள்ள நீங்கள், ஆழங்களில் நிற்கத் திரமாயுள்ள அடித்தளத்தை ஆழமில்லாத சலத்தைக் கடக்க, ஒருவனுக்குக் கால்களைப்போல் காண்பீர்கள். நீங்கள் இரு செவிகளைப்போல் துதி கூறுபவனுடைய குரலைத் தெரிந்துகொள்கிறீர்கள். நீங்கள் யக்ஞத்தைத் தாங்கும் இரு தோள்களைப்போல் எங்களுடைய விரும்பத் தகுந்த செயலுக்கு வாருங்கள்.

10. நீங்கள் கர்ச்சிக்கும் இரு மேகங்களைப்போல் இனிய மழையைச் செலுத்துகிறீர்கள். நீங்கள், பசுவின் கீழே வாயுள்ள ஆபீனத்திலே இரு தேனீக்களைப்போல் பாலைச் சேமிக்கிறீர்கள். இரு உழைப்பாளிகளைப்போல் நீங்கள் வியர்வையோடு நனைந்திருக்கிறீர்கள். உங்களிடம் வியர்வை சொரிகிறது. இனிய புல்லைத் தின்னும் களைத்தப் பசுவைப்போல் நீங்கள் யக்ஞத்தைப் பற்றுகிறீர்கள்.

11. அசுவினிகளே! நாங்கள் ஸ்தோமத்தைச் செழிப்பித்து ஆற்றலைப் பற்றுவோமாக. நீங்கள் ஒரே தேரிலே எங்களுடைய மந்திரத்துக்கு வாருங்கள். பக்குவத் தேனோடு புகழைப்போல் எங்களுடைய பசுக்கள் நிரப்பப்படுக. பூதாம்சன், அசுவினிகளின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தான். 10032

# 107. தட்சிணை

## 944. திவ்ய ஆங்கிரஸன் அல்லது தட்சிணை பிரஜாபதியின் புதல்வி

1. இந்த சனங்களின் மகத்தான தானமானது புலனுயிற்று. தமத்திலிருந்து உயிரின் உலகமெல்லாம் விடுவிக்கப்பட்டது. பிதாக்களால் அளிக்கப்பட்ட மகத்தான சோதி வந்தது. தட்சிணைக்குப் பரந்த வழி புலனுயிற்று.

2. தட்சிணை யளிப்பவர் சோதியின் உச்சியில் வசிக்கிருர்கள். குதிரைகளைத் தருபவர்கள் சூரியனேடு வசிக்கிருர்கள். பொன்னை யளிப்பவர்கள் அமுதத் தன்மையை அடைகிருர்கள். ஸோமனே! ஆடைகளைத் தருபவர்கள் தங்கள் ஆயுசை நீடித்துக் கொள்கிருர்கள்.

3. தேவர்களுக்குச் செய்யப்படும் யக்ஞத்துக்கு அங்கமாயிருப்பவளும், பூட்டிப்படுத்துபவளுமான தட்சிணை, தவறு செய்பவர்களிடம் — கருமிகளிடம் — தோன்ருள். ஏனெனில் அவர்கள் தேவர்களைத் திருப்தி செய்யார்கள். ஆனல் பலர்பாபத்துக்குப் பயந்து தாராளமாய்த் தட்சிணையையளித்து, தேவர்களைத் திருப்தி செய்கிருர்கள்.

4. அவர்கள் நூறு தாரைகளுள்ள வாயுவுக்கும், எல்லாமறியும் சூரியனுக்கும், நரர்களைக் காணும் தேவர்களுக்கும், அவியைத்தர அறிகிருர்கள். தேவர்களைத் திருப்தி செய்து சங்கமத்திலே, சங்கத்திலே, வைபவத்திலே அவிகளைத் தருபவர்கள் எழுவர்களின் தாயான தட்சிணையை அறிஞர்களுக்குக் கறக்கிருர்கள்.

5. அறிஞர்களால் அழைக்கப்பட்டு, தட்சிணையை ஏந்தும் வழிபடுபவன் முதலில் வருகிருன். கிராமத்தின் தலைவன் தட்சிணையை ஏந்தி முன்னே செல்லுகிருன். தட்சிணையை முதலில் ஏற்படுத்தியவனை சனங்களின் நடுவே அரசன் என மதிக்கிறேன். 10037



6. அவர்கள் அவனை ரிஷி எனவும், பிராமணன் எனவும், யக்ஞத் தலைவன் எனவும், ஸாமகாயகன் எனவும், தோத்திரத்தைக் கூறுபவன் எனவும் அழைக்கிருர்கள். தட்சிணையோடு முதலில் யஜித்தவன் சோதியின் மூன்று வடிவங்களை அறிகிருன்.

7. தட்சிணை குதிரைகளைத் தருகிருள். தட்சிணை பசுக்களைத் தருகிருள். தட்சிணை தங்கத்தையும் வெள்ளியையுந் தருகிருள். நம்முடைய ஆத்மா எல்லாப் பொருள்களையும் பகுத்தறிந்து தட்சிணையைக் கவசமாக அணிந்து கொள்கிறது.

8. போகத்தைத் தருபவர்கள் சாகார்கள். அவர்களுக்கு அழிவில்லை. அவர்களுக்குத் துன்பமில்லை. போகத்தைத் தருபவர்களுக்கு வருத்தமில்லை. தட்சிணை அவர்களுக்கு இந்த உலகத்தை யெல்லாம், சோதியை எல்லாம் தருகிருள்.

9. போகத்தைத் தருபவர்கள் உணவின் மூலமான பசுவை முதலில் ஜயித்தார்கள். போகத்தைத் தருபவர்கள் அழகிய ஆடைகளை அணிந்திருந்த மங்கையை ஜயித்தார்கள். போகத்தைத் தருபவர்கள் மதுவின் அடிப்பானங்களை ஜயித்தார்கள் போகத்தைத் தருபவர்கள் எதிர்க்காமல் தங்களைத் தாக்கவரும் பகைவர்களை ஜயித்தார்கள்.

10. போகத்தைத் தருபவனுக்கு அவர்கள் வேகமாயோடுங் குதிரையை அலங்கரிக்கிருர்கள். போகத்தைத் தருபவனுக்கு எழில் செய்யப்பட்ட மங்கையளிக்கப்படுகிருள். போகத்தைத் தருபவனுக்கு, தாமரைப் பூக்கள் நிறைந்த ஏரியைப் போல் அழகுள்ளதாயும், தேவர்களுடைய மனையைப்போல் இன்புறுத்துவதாயுமுள்ள இந்த மனையுண்டு.

12. கனத்த சுமைகளை ஏந்துமாற்றலுள்ள குதிரைகள் போகமளிப்பவனை ஏந்துகின்றன. தட்சிணையளிப்ப

வனுக்கு நன்கு கற்பிக்கப்பட்ட தேர் இயங்குகிறது. தேவர்களே! போகமளிப்பவனைப் போர்களிலே பாலியுங்கள். போகத்தைத் தருபவன் போர்களிலே பகைவர்களை ஜயிப்பவனாயிருப்பானாக. 10043

## 108. ஸரமையும் பணிகளும்

### 945. பணிகளும் ஸரமையும்

1. பணிகள் எந்த எண்ணத்தோடு ஸரமை இந்த இடத்துக்கு வந்தான்? வழி ஊக்கமுள்ளவனுக்குக் கடக்கக் கட்டமாயும், நீண்டதாயுமிருக்கிறது. நீ எங்களிடம் எந்த நோக்கத்தோடு வந்தாய்? உன்னுடைய சுற்றுப்பயணம் எவ்விதமிருந்தது? நீ ரஸத்தின் சலங்களை எங்ஙனம் கடந்தாய்?

2. ஸரமை; பணிகளே! இந்திரனால் நியமிக்கப்பட்டட்ட தூதனான நான், உங்களுடைய மகத்தாயும், மறைக்கப்பட்டுமுள்ள செல்வங்களை விரும்பி வந்தேன். கடக்கும் பயத்திலிருந்து சலம் என்னைப் பாலித்தது. இங்ஙனம் நான் ரஸத்தின் சலங்களைக் கடந்து வந்தேன்.

3. பணிகள்: தூரத்திலிருந்து இந்த இடத்துக்கு இந்திரனுடைய தூதனாக வந்த ஸரமையே! அவனுடைய பராக்கிரமம் எப்படி? அவனுடைய தோற்றம் — படை — எத்தன்மையுள்ளது? (பரஸ்பரம் பணிகள் பேசிக்கொள்கிறார்கள்:) அவள் நெருங்குவாளாக. நாம் அவளை சிநேகிதியாகச் செய்து கொள்வோம். அவள் நம்முடைய பசுக்களுக்குத் தலைவியாயிருப்பாளாக.

4. ஸரமை: நான் இந்திரன் ஜயிக்கப்படுவான் என நினைக்கவில்லை. தூரத்திலிருந்து இந்த இடத்துக்கு எவனுடைய தூதியாக நான் வந்திருக்கிறேனோ அவன் இந்திரன் பகைவர்களை ஜயிக்கிறான். ஆழமான நதிகள் அவனை மறைக்க, அமிழ்த்த ஆற்றலற்றவை. பணிகளே! நீங்கள் இந்திரனால் கொல்லப்பட்டு நித்தியமாய் சயனிப்பீர்கள்.



5. பணிகள்: சௌபாக்கியவதியான ஸரமையே! சோதியின் எல்லைகளுக்கு வந்து உன்னால் நாடப்படும் பசுக்கள் இவை தான் — பார்க்கவும். எவன் சமரன்னியில் இவற்றை உனக்களிப்பான்? எங்களுடைய ஆயுதங்கள் கூர் உள்ளவை. 10048

6. ஸரமை: பணிகளே! உங்களுடைய மொழிகள் படைகளின் இடத்தில் இல்லை. உங்களுடைய பாவமுள்ள தேகங்கள் சரங்களுக்குத் தகுந்தவையில்லை. உங்களுடைய வழி செல்லக் கடினமாயிருக்க பிரகஸ்பதி உங்கள் தேகங்களுக்கும், மொழிகளுக்கும் ஆதரவை அளிக்காமலிருப்பானாக.

7. பணிகள்: ஸரமையே! பசுக்களும், குதிரைகளும், செல்வங்களும் நிறைந்த இந்த நிதி மலையினுள் பத்திரமாய் வைக்கப்பட்டிருக்கிறது. நல்ல பாலகர்களான பணிகள் இதைப் பாலிக்கிறார்கள். நீ இந்தத் தனியான இடத்துக்கு வீணாகவே வந்தாய்.

8. ஸரமை: ஸோமத்தால் ஊக்கமடைந்து ரிஷிகளும், அங்கிரஸர்களும், நவக்வர்களும் தலைவனான அயாஸ்யனோடு இங்கு வருவார்கள். இவர்கள் இந்தப் பசுக்களின் மந்தையைப் பாகஞ் செய்வார்கள். பிறகு பணிகள் தங்கள் மொழிகளைக் கைவிடுவார்கள்.

9. பணிகள்: ஸரமையே! நீ தெய்வீகத் திண்மையால் வற்புறுத்தப்பட்டு இங்கு வந்தாய். நாங்கள் உன்னை எங்கள் சகோதரியாகச் செய்து கொள்வோம். நீ திரும்பிப் போகாதே. ஸுபனகயே! நாங்கள் உன்னோடு பசுக்களைப் பகிர்ந்து கொள்வோம்.

10. ஸரமை: நான் சகோதரத் தன்மையையும், சகோதரித் தன்மையையும் அறியேன். இந்திரனும் உக்கிரர்களான அங்கிரஸர்களும் அவற்றை அறிகிறார்கள். என்னுடைய தலைவர்கள் நான் இங்கு வந்தவுடன் உங்கள்

இடத்தைச் சூழ்ந்தார்கள். பணிகளே! நீங்கள் தூரமான இடத்துக்குச் சென்றுவிடுங்கள்.

11. பணிகளே! மிக்கத் தூரமான இடத்துக்கு இங்கிருந்து சென்றுவிடுங்கள். பிரகஸ்பதியும், ஸோமனும், ரிஷிகளும், அறிஞர்களும் கண்டுபிடித்த மறைத்து வைக்கப்பட்டிருந்த பசுக்கள் ருதத்தின் ஆக்ஞைக்கிசைந்து
புறத்தில் வருக. 10054

## 109. விசுவேதேவர்கள்

### 946. ஜுஹு - பிரம்மனுடைய மனைவி அல்லது பிரம்மனுடைய புதல்வனான ஊர்த்துவநாபனின் தாய்

1. முதல்வர்களான இந்த எல்லையற்ற சூரியனும், சல தேவனான வருணனும், காற்று தேவனான வாயுவும், இருளை நீக்கும் ஒளியும், தாபத்தால் உக்கிரனுமான அக்கினியும், சுகத்தைத் தருபவனுமான ஸோமனும், தேவிகளான சலங்களும், ருதத்தின் முதல் தோன்றிய புதல்வர்களும், பிரம்மனின் பாபவடிவாமான மனைவியாயுள்ள ஜுஹுவைக் குறித்துப் பேசிக்கொள்கிறார்கள்.

2. முதலில் அரசனான ஸோமன் வெட்கமெனக் கருதாமல் பிரம்மனுடைய மனைவியை மீண்டும் பிரகஸ்பதியினிடஞ் சேர்ப்பித்தான். மித்திரனும் வருணனும் அழைப்பவர்களாயிருந்தார்கள். அக்கினி ஹோதாவாகி அவளைக் கையால் பிடித்துக் கணவனிடம் செலுத்தினான்

3. தேவர்கள் பிரகஸ்பதியினிடம் சொன்னார்கள். அவளுடைய இந்தத் தேகம் கையால் பற்றத் தகுந்தது. இவள் பிரம்மனுடைய மனைவியாயிருக்கிறாள். அவள் தன்னைத் தேட அனுப்பப்பட்ட தூதனுக்குத் தன்னை, பகைவனுக்குத் தன்னால் பாலிக்கப்படும் இராச்சியத்தைப் புலப்படுத்தாத க்ஷத்திரியனைப் போல் புலப்படுத்திக் கொள்ளவில்லை.

4. இந்தப் பழைய தேவர்களும், தவத்தில் அமர்ந்திருந்த ஏழு ரிஷிகளும் அவளைக் குறித்து இங்ஙனம் பேசிக்



கொண்டார்கள். பிரமனுடைய பயங்கரமான மனைவி மீண்டும் அவளுடைய கணவனிடம் அழைத்துவரப்பட்டாள். தவம் பாவத்தைப் பரம நிலயத்துக்கு உயர்த்துகிறது.

5. ஜுஹு தனக்குள் பேசிக்கொள்கிறாள். அவன் பிரம்மசரியத்தை அனுசரிக்கிறான். அவன் எல்லாத் தேவர்களையும் போற்றுகிறான். அவன் தேவர்களுடைய ஒரு அங்கமாகிறான். பிரகஸ்பதி பூர்வத்திலே ஸோமனால் அழைக்கப்பட்டு வந்த ஜுஹுவை அவியைப் பெற்றுக் கொள்ளும் தேவர்களைப் போல் மனைவியைப் பெற்றுக்
கொண்டான். 10059

6. தேவர்கள் மீண்டும் அவளைத் திருப்பித் தந்தார்கள். மானிடர்களும், அவளை மீண்டும் திருப்பித் தந்தார்கள். அரசர்களும் அத்தானத்தை உறுதிப்படுத்தி பிரம்மனுடைய மனைவியை மீண்டும் திருப்பித் தந்தார்கள்.

7. தேவர்கள் பிரம்மனுடைய மனைவியை மீண்டும் திருப்பித் தந்தார்கள். அவளைப் பாவத்திலிருந்து நீக்கினார்கள். அவர்கள் புவியின் உணவிலே பாகத்தைப் பெற்று, பரந்து போற்றப்படும் பிரகஸ்பதியின் யக்ஞத்
துக்கு அமர்ந்தார்கள். 10061

## 110. ஆப்பிரீ சூக்தம்

### 947. ஜமதக்கினி–பிருகுவின் புதல்வன் அல்லது ஜமதக்கினியின் புதல்வன் பரசுராமன்

#### ஸமிந்தனம்

1. ஜாதவேதஸனே! மனிதனுடைய மனையிலே தேவனான நீ இன்று யஜிக்கப்பட்டு, தேவர்களை யஜிக்கிறாய். நண்பர்களைப் போற்றுபவனும், அறிஞனுமான நீ, அவிகளை ஏந்திச் செல்லவும். நீ தூதன். நீ கவி. நீ பேரறிஞனாயிருக்கிறாய்.

தநூநபாதன்

2. தநூநபாதனே! சுத்த நாவுள்ளவனே! வெற்றிக்குச் செலுத்தும் ருத வழிகளை இனிய ரஸத்தால் ஈரப்படுத்தி சுவைப்படுத்தவும். எங்கள் துதிகளையும், யாகத்தையும் செயல்களால் உயர்த்தி எங்கள் யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தவும்.

இளை

3. அக்கினியே! தேவர்களை அழைப்பவனும், துதிக்கத்தகுந்தவனும், வந்திக்கப்படுபவனுமான நீ, வசுக்களோடு சேர்ந்து வா. மகானுன நீ தேவர்களை அழைப்பவன். மிக்கப் போற்றத் தகுந்த நீ, எங்களால் விரும்பப்பட்டு, தேவர்களை யஜிக்கவும்.

உருப்பை

4. உஷைகளின் உதயததிலே கீழ்த் திசையிலே விதியோடு தருப்பைப் பரத்தப்படுகிறது. இது இந்தப் புவியை உடுத்தும் ஆடையாகிறது. அவர்கள் தேவர்களுக்கும் அதிதிக்கும் இனிய ஆசனமாகப் பரவலாகவும், விரிவாகவும் தருப்பையைப் பரத்துகிறுர்கள்.

கதவுகள்

5. விரியும் கதவுகள் தங்கள் கணவர்களுக்கு ..மூல செய்து கொண்டு இணங்கும் மனைவிகளைப் போல் இயங்குவார்களாக. பெரியவர்களும், அனைவரையும் திருப்தி செய்பவர்களும், தேவிகளுமான நீங்கள் தேவர்கள் நுழைய இனிமையாயிருங்கள்.

இரவும் பகலும்

6. உயர்ந்தவர்களும், சோதியில் பிறந்த மங்கைகளும், மிக்கப் பிரகாசிப்பவர்களும், ஒளி வடிவத்தின் அழகை ஏந்துபவர்களும், இனிய அமைதியையளிப்பவர்களும், துதியாருகர்களுமான இரவும் பகலும் நெருங்கி வந்து யக்ஞத்தின் ஸ்தானத்தில் அமர்வார்களாக.



ஹோதாக்கள்

7. மானிடனுக்கு யக்ஞத்தை நடத்துபவர்களும், சபைகளிலே எங்களை ஊக்கப்படுத்தப் போற்றுபவர்களும்' தங்கள் விதியால் கீழ்த் திசை சோதியைப் புலப்படுத்துபவர்களும், முதல்வர்களும், தேவர்களும், இனிய குரல்களுள்ள ஹோதாக்களுமான அக்கினியும் ஆதித்தியனும் அமருவார்களாக—வருவார்களாக.

மூன்று தேவிகள்

8. பாரதி எங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாய் வருவாளாக. இளையும் மனிதனைப் போல் எதைச் செய்ய வேண்டுமென்பதை நினைத்து வருவாளாக. ஸரஸ்வதியும், உத்தமச் செயல்களுள்ள மூன்று தேவிகள் இந்த இனிய தருப்பையின் மீது அமர்வார்களாக.

துவஷ்டா

9. அறிஞனே! போற்றத் தகுந்தவனும், அறிஞனுமான நீ, எங்களால் விரும்பப்பட்டு, இன்று இங்கு அவியைப் பெற்றேர்களான சோதியையும் புவியையும் எல்லா உலகங்களையும் உயிர் வடிவங்களோடு எழில் செய்தவனுன, தேவனுன துவஷ்டாவுக்களிக்கவும்.

யூபம்

10. யூபமே! நீயாகவே உரிய காலத்திலே தேவர்களின் உணவையும், துலக்கப்படுத்தி, அவற்றைத் தேவர்களுக்களிக்கவும். வனஸ்பதியும், சமித்திரியும், தேவனுன அக்கினியும், அவியைத் தேனுலும் நெய்யாலும் இனிமைப் படுத்துவார்களாக.

சுவாஹா

11. அக்கினி பிறந்தவுடன் யக்ஞத்தைக் கற்பித்தான். அவன் தேவர்களை முந்துபவனுயிருந்தான். பூர்வ திசையிலே நடைபெறும் யக்ஞத்திலே ஹோதாவின் குரலால் சுவாஹாவோடு அளிக்கப்படும் அவியைத் தேவர்கள் அருந்துவார்களாக. 10072

## 111. இந்திரன்

### 948. அஷ்டரதம்ஷ்டிரன் - விருபனுடைய புதல்வன்

1. அறிஞர்களான மனிதர்களே! இந்திரனுக்கு எண்ணங்களோடு இசைந்த தோத்திரத்தைக் கூறுங்கள். நாம் வீரனும், விருப்பத்தைப் பூர்த்திசெய்யும் ஆற்றல் உள்ளவனும், துதியை விரும்புபவனுமான இந்திரனை உண்மையான தோத்திரங்களால் இங்கு வர ஊக்கப் படுத்துவோமாக.

2. ருதத்தின் இடத்தைத் தாங்கும் அவன் மிக்கப் பிரகாசித்தான். ஒரே ஒரு தடவை ஈன்ற பசுவின் கன்றானது, பசுக்களோடு சேர்ந்தது. மகத்தான முழக்கத் தோடு உயர்ந்தது. அவன் பரந்த உலகங்களிலே பரவினான்.

3. இந்திரன் எங்கள் துதியைக் கேட்டு எங்கள் விருப்பங்களை அறிகிறான். ஜயமுள்ள அவன் சூரிய னுக்கு வழியைச் செய்கிறான். அவன் தானே மேதாவாகி யக்ஞத்துக்கு வந்தான். எதிர்ப்பற்ற அவன் பசுக்களின் தலைவன். சோதியின் தலைவனான அவன் நித்தியன். ஒப்பில்லாதவன்.

4. இந்திரன் அங்கிரஸர்களால் துதிக்கப்பட்டு மகத்தான மேகத்தின் விரதங்களைப் பங்கப்படுத்தினான். சோதியிலே தாங்கும் மேகத்தைத் தாங்கிய அவன் மிகுந்த மழைகளைக் கீழே செலுத்தினான்.

5. சோதி புவிகளின் பிரதிநிதியான இந்திரன் எல்லா யக்ஞங்களையும் அறிகிறான். அவன் சுஷ்ணனைக் கொல்லு கிறான். அவன் பரந்த சோதியைச் சூரியனோடு பரப்பினான். உத்தமத் தம்பமான அவன் சோதியைத் தம் பலத்தால் தாங்கினான். 10077

6. விருத்திரனைக் கொல்லும் நீ, அவனை வச்சி– ராயுதத்தால் கீழே சாய்த்தாய். தீரனான இந்திரனே! நீ தன் பலத்தால் வலிமையடைந்திருக்கும் அதேவனுடைய



மாயைகளை உன்னுடைய வச்சிரத்தால் இப்பொழுது விலக்கினாய். மகவானே! நீ வலிய கைகளுடனிருந்தாய்.

7. உஷைகள் சூரியனோடு சேருங்கால் அவர் களுடைய ரசிமிகள் அற்புதமான அழகைப் பெருகின்றன. நானாவித நிறங்களுடனாகின்றன. உதயத்துக்குப் பிறகு சோதியின் நட்சத்திரங்கள் தெரியாமலிருக்குங்கால் எவனும் சலனமாகும் சூரியனுடைய ரசிமிகளை அறியான்.

8. இந்திரனுடைய ஆக்ஞையால் முதற்தோன்றிய சலங்கள் மிக்கத் தூரம் பாய்ந்து சென்றன. சலங்களே! உங்களுடைய துவக்கமெங்கே? மூலமெங்கே? நடுவெங்கே? உங்கள் முடிவெங்கே?.

9. நீ அஹியால் குடிக்கப்பட்ட நதிகளை விடு– வித்தாய். அவை வேகமாய்ப் பாய்ந்தன. விடுவிக்கப்பட விரும்பிய சலங்கள் விடுவிக்கப்பட்டன. சுத்தமான சலங்கள் ஓயாமல் ஓடுகின்றன.

10. அவை, கணவனிடம் அன்புள்ள மனைவிகளைப் போல் ஒன்றுசேர்ந்து கடலுக்குப் பாய்கின்றன. பகை வர்களை யழிப்பவனும், கோட்டைகளை இடிப்பவனுமான இந்திரன், பூர்வத்திலிருந்தே சலங்களைப் பிரேரிக்கும் தலைவனாயிருக்கிறான். இந்திரனே! எங்களுடைய அவி களும், புவியின் செல்வங்களும், துதி தாரைகளும் உன்னுடைய இடத்துக்குச் செல்க. 10082

## 112. இந்திரன்

### 949. நாபாப்பிரபேதனன் – விருபனுடைய புதல்வன்

1. இந்திரனே! ஸோமத்தை உன் விருப்பம்போல் பருகவும். காலை யக்ஞத்தில் பொழியப்பட்ட அது உன்னால் பருகத் தகுந்தது. சூரனே! நீ எதிரிகளைக் கொல்ல இன்பமாகவும். நாங்கள் உன்னுடைய வீரச் செயல்களைத் துதிகளால் போற்றுவோம்.

2. இந்திரனே! உன்னுடை மனத்தைவிட துரிதமாயிருக்கும் தேரிலே வா. நீ துரிதமாய் இன்பத்தோடு செல்லும் உன்னுடைய வலிய கபில நிறக் குதிரைகள் உன்னை இங்கு ஏந்தி வருக.

3. நீ உன்னுடைய தேகத்தைச் சூரியனுடைய சொர்ண சோதியோடு உத்தம எழில்களோடு உன்னை அலங்கரித்துக்கொள்ளவும். இந்திரனே! மருத்துக்களோடு உள்ள நீ உன்னுடைய நண்பர்களான எங்களால் அழைக்கப்பட்டு நீ உட்காரவும். இன்பப்படவும்.

4. உன் மதங்களிலே புலனாகும் உன்னுடைய மகிமையை சோதியும் புவியும் உன்னிடமிருந்து தனிப்படுத்த சக்தியற்றவர்கள். இந்திரனே! உன் தேரிலே இணைக்கப்பட்ட அன்புமிகுந்த குதிரைகளோடு வா. உனக்கு இதமாயிருக்கும் யக்ஞ உணவைப் புசிக்க எங்கள் மனைக்கு வா.

5. இந்திரனே! ஸோமம் உன்னுடைய இன்பமான விருந்துக்குப் பிழியப்பட்டது. நீ அதை சதாப் பருகினாய். அதனால் ஒப்பற்ற படையோடு பகைவர்களை ஜயித்தாய். அது உன்னுடைய தானத்தை மகத்தாய்ப் பெருகச் செய்தது. 10087

6. இந்திரனே! உங்களுக்கு இந்தப் பாத்திரம் எங்களால் பூர்வ காலத்திலிருந்தே வைக்கப்பட்டிருக்கிறது. சதக்கிரதுவே! இப்பாத்திரத்திலிருந்து ஸோமத்தைப் பருகவும். எல்லாத் தேவர்களாலும் விரும்பப்படும் இனிய ஸோமம் இப் பாத்திரத்தில் நிறைந்திருக்கிறது.

7. இந்திரனே! வர்ஷிப்பவனே! மனிதர்கள் எல்லா இடங்களிலும் உனக்கு விரும்பத்தகுந்த அவியையளித்து உன்னை அழைக்கிறார்கள். இந்த யக்ஞங்களிலே மிக்க இனிய ஸோமங்கள் நிறைந்திருக்கின்றன. அவற்றிலே நீ இன்பமாகவும்.



8. இந்திரனே! நான் இப்பொழுது உன்னுடைய பழைய முதலில் நடத்தப்பட்ட வீரச் செயல்களை அறிவிப்பேன். நீ மழையைச் செலுத்த நினைத்து மேகத்தைப் பிளந்தாய். நீ பிராமணனுக்கு - பிரகஸ்பதிக்கு – பசுவை சுலபமாய்ப் புலப்படச் செய்தாய்.

9. கணபதியே! கணங்களின் தலைவனே! நீ கணங்களின் நடுவே அமரவும். அவர்கள் உனனை அறிஞர்களின் நடுவே மிகுந்த அறிஞன் எனக் கூறுகிறார்கள். நீ இல்லாமல் தூரத்திலும், அருகிலும் ஒன்றும் நடைபெறாது. மகவானே! நான் உனக்கு மகத்தான விரும்பத் தகுந்த தோத்திரத்தைக் கூறுகிறேன்.

10. மகவானே! பிரார்த்திக்கும் எங்களைப் பெருமைப்படுத்தவும். நண்பனே! வசுபதியே! உன் நண்பர்களின் விருப்பங்களைத் தெரிந்து கொள்ளவும். எங்களுக்காகப் போர் செய்யவும். பகைவர்களோடு போர் செய்பவனும், சத்திய பலமுள்ளவனுமான நீ. பங்கு செய்யப்படாமலிருக்கும் செல்வங்களிலே எங்களுக்குப் பாகத்தையளிக்கவும். 10092

## 113. இந்திரன்

### 950. சதப் பிரபேதனன்—விருபனுடைய புதல்வன்

1. ஒரு மனமுள்ள சோதியும் புவியும் எல்லாத் தேவர்களோடும் சேர்ந்து இந்திரனுடைய அந்தப் பலத்தைப் பாலித்தார்கள். அவன் தன் மகிமையையும் வீரியத்தையும் புலப்படுத்தி இயங்கியபோது அவன் ஸோமரஸத்தைப் பருகினான். மிக்க வலிமையோடு வலியனானான்.

2. விஷ்ணு ஸோமத்தின் அம்சத்தையளித்து, தன்னுடைய சொந்த வலிமையால் இந்திரனுடைய அந்த மகிமையைப் போற்றுகிறான். செல்வனான இந்திரன் இணைந்துள்ள தேவர்களோடு சேர்ந்து விருத்திரனைக் கொன்று போற்றத் தகுந்தவனானான்.

3. போருக்கு உன் படைகளை ஏந்தி நீ நாசமற்ற விருத்திரனோடு போர் புரிந்தபோது புகழை அடைந்தாய். இணைந்துள்ள எல்லா மருத்துக்களும் தாமாகவே உக்கிரனே ! உன்னுடைய மகிமையை மேம்படுத்தினர்கள்.

4. அவன் பிறந்தவுடன் பகைவர்களைத் துன்பப் படுத்தினான். வீரன் போரிலே தன் ஆற்றலையுங் கவனித்தான். அவன் மேகத்தைப் பிளந்தான். பெருகும் சலங்களை அதோமுகப்படுத்தினான். நல்ல செயலை நடந்த விரும்பி மகத்தான சோதியை ஏந்தினான்

5. இந்திரன் மகத்தான படையோடு முன்னேறினான். அவன் சோதி புவிகளின் நடுவிலுள்ள பகைவர்களைத் தன் வலிமையால் ஜயித்தான். தீரனான அவன் மித்திரனுக்கும், வருணனுக்கும், அவியளிப்பவனுக்கும் நன்மையைச் செய்யத் தன் இரும்புமய வச்சிராயுதத்தைச் செலுத்தினான். 10097

6. இருளால் சூழப்பட்டவனும், சலங்களைத் தடை செய்பவனுமான விருத்திரனை உக்கிரனான இந்திரன் துணித்தபோது இந்திரனுடைய பகைவர்களை அழிப்பவையும், முழங்குபவையுமான சலங்கள் அவனுடைய பலத்தைப் புலப்படுத்தப் பெருகிப் பாய்ந்தன.

7. மகிமையால் பரஸ்பரம் வெற்றி பெற இருவரும் கலந்தபோது தோன்றிய முதன்மையான வீரச் செயல்களிலே விருத்திரன் வீழ்த்தப்பட்டான். இருளும் நீக்கப் பட்டது. பலத்தால் ஜயமடைந்த இந்திரன் முதலில் அழைக்கத் தகுந்தவனானான்.

8. பிறகு எல்லாத் தேவர்களும் ஸோமத்தோடு சேர்ந்த துதியோடு உன்னுடைய வீரச் செயல்களைப் போற்றினர்கள். சனங்கள் இந்திரனுடைய அழிக்கும் ஆயுதத்தால் காயமடைந்தவனும், சலத்தைத் தடுத்தவனுமான விருத்திரனைத் தன் பற்களால் உணவைப் புசிக்கும் அக்கினியைப் போல் புசித்தார்கள்.



9. வலிய மொழிகளும், ருக்குக்களும், நட்புக்களோடுமுள்ள இந்திரனுடைய நட்புக்களைப் பலதடவை கூறுங்கள். இந்திரன் தபீதனுக்குத் துனியையும், சுமுரியையும் வசப்படுத்த அவனால் சிரத்தையுள்ள மனத்தோடு கூறப்படும் துதிகளைக் கேட்கிறான்.

10. இந்திரனே ! துதிகளை அளித்து, தேவர்களை மேம்படுத்த எங்களுக்கு மிகுந்த செல்வங்களையும் சிறந்த குதிரைகளையுமளிக்கவும். நன்கு பெற்ற செல்வங்களோடு நாங்கள் எல்லாத் தீமைகளையும் கடப்போமாக. இன்று எங்கள் தோத்திரத்தை மேன்மையோடு ஏற்றுக்கொள்ளவும். 10102

## 114. விசுவேதேவர்கள்

### 954. ஸத்திரி–விருபனுடைய புதல்வன்–தவத்தின் புதல்வனான கர்மன்

1. தாபத்தின் இரு மூலங்களான அக்கினியும், ஆதித்தியனும், மூவ்வுலகங்களிலும் வியாபகமானார்கள். மாதரிசுவான்–காற்று–அவர்களுக்கு இன்பத்தை அளிக்க வந்தான். தேவர்கள் ஸாமத்தோடுள்ள துதியாருகனான சூரியனிடம் வந்தபோது உலகத்தைத் தாங்கும் அவர்கள் — தேவர்களான ரசிமிகள் — சோதியின் சலத்தில் சேர்ந்தார்கள். சீவனும், ஈசுவரனும், மூன்று குணங்களோடுளுள்ள மாயையோடு சேர்ந்தார்கள். அவர்கள் தங்கள் வினைப்பயனைப் பற்ற பரமாத்மா இயங்கினான். அப்பரமாத்மா சூரியன் என அறிஞர்கள் அறிந்தார்கள் — ஸாயணர்.

2. மூன்று நிர்ருதிகள் அவிகளின் தானத்துக்காக வணக்கத்தை அளிக்கிறார்கள். மிக்கப் புகழுள்ளவர்களும், உலகத்தைத் தாங்குபவர்களுமான தேவர்கள்,

அவ்வணக்கத்தை அறிகிறார்கள். கவிகள் உத்தமமாகவோ மர்மமாகவோ உள்ள விரதங்களிலே இருக்கும் இந்தத் தேவர்களின் மூல காரணத்தை அறிகிறார்கள்.

3. நல்ல அங்கமுள்ளவளும், நெய்யங்கம் இருப்பவளும், நான்கு சடைகளுமுள்ள யுவதி—வேதி—அறியத் தகுந்தவையை அணிந்துகொள்கிறாள். இந்த வேதியிலே வர்ஷிக்கும், அவி சொரியும் இரு பறவைகள்—தம்பதிகள்—அமர்கின்றன. இங்கு தேவர்கள் தங்கள் பாகத்தைப் பெற்றுக்கொள்கிறார்கள்.

4. பறவைகளிலே ஒன்று - அக்கினி - சூரியனாக வானிலே நுழைந்தது. அது இந்த உலகத்தையெல்லாம் நோக்குகிறது. அருகிலிருக்கும் நான் அதைப் பக்குவமான மனத்தோடு பார்த்தேன். அதைத் தாய்-மொழி-சுவைக்கிறாள். அந்த அக்கினி தாயைச் சுவைக்கிறது.

5. விப்பிரர்களான கவிகள் ஒன்றாயுள்ள பறவையை—பரமாத்மாவை—மொழிகளால் பலவிதமாய்க் கற்பிக்கிறார்கள். அவர்கள் யக்ஞங்களிலே ஏழு சந்தங்களை ஏந்தி ஸோமனுடைய பன்னிரண்டு கிரகங்களை—பாண்டங்களை-அளக்கிறார்கள். 10107

6. முப்பத்தாறும் நான்குமுற்ற பாண்டங்களை நிறைத்து, பன்னிரண்டு வரை சந்தங்களை ஏந்தி, அறிவால் யக்ஞத்தை அளந்து, கவிகள் ரிக்குக்களாலும் ஸாமங்களாலும் யாகத்தைப் பூர்த்தி செய்கிறார்கள். அக்கினிஷ்டோமத்திலுள்ள 40 கிரகங்கள்-பாத்திரங்கள்-அளந்து உரிய சந்தத்தைக் கூறி யக்ஞத்தை நடத்துகிறார்கள்.

7. தேருக்கு—யக்ஞத்துக்கு — வேறு பதினான்கு மகிமைகள்—உலகங்கள்—இருக்கின்றன. ஏழு அறிஞர்கள் அந்த யக்ஞத்தைச் செலுத்துகிறார்கள். எந்த வழியால் தேவர்கள் ஸோமத்தைப் பருகுகிறார்களோ அந்தப் புண்ய தீர்த்தமான வழியை எவன் இங்கு அறிவிப்பான்? (யக்ஞத்துக்கு யக்ஞ புருஷனான பரமாத்மாவுக்கு)



8. ஆயிரம் இடங்களிலே தேகங்களிலே, பதினைந்து உத்தம இந்திரியங்கள் இருக்கின்றன. அவை தேகம். சீவன், சோதி புவிகளைப் போல் பரந்திருக்கிறது. ஆயிரம் இடங்களிலே தேகங்களிலே ஆயிரம் மகிமைகள் இருக்கின்றன. பிரம்மம் பரவியிருக்கும் இடத்தில் எல்லாம் வாக்கும் பரவியுள்ளது.

9. எந்த அறிஞன் சந்தங்களின் பிரயோகத்தை அறிகிறான்? எவன் இடங்களுக்கு செயல்களுக்குத் தகுந்த மொழிகளைக் கூறுகிறான்? எந்த ரித்விஜன் எட்டாவது தாய்—ஏழு பிராணன்களுக்கப்பாலுள்ளவன், ஏழு ஹோதாக்களுக்கு மேலுள்ள சூரன் எனக் கூறப்படுகிறான். எவன் இந்திரனுடைய கபில நிறக் குதிரைகளான ரிக்கையும் ஸாமனையும் அறிந்தான்? — மேம்படுத்தினான்.

10. சில குதிரைகள் புவியின் எல்லைக்குச் செல்லுகின்றன. அவை தேரின் சக்கரத்திலே இணைக்கப்பட்டு நிற்கின்றன. ஸாரதி — சூரியன் — தேரிலே குதிரைகளை அவற்றின் இடத்துக்குச் செலுத்த ஏற்றப்பட்டவுடன் தேவர்கள் அவற்றின் களைப்பைத் தீர்க்க புல் முதலியவற்றைத் தருகிறார்கள். 10112

## 115. அக்கினி

### 952. உபஸ்துதன் - விருஷ்டிஹவ்யனுடைய புதல்வன்

1. அக்கினியை ஆபீனமற்ற உலகம் பிறப்பித்தாலும் அவன் பாலைப் பருக பெற்றோர்களிடம் செல்லாமலிருக்கிறான். தருணனும் பாலனுமான அவனுடைய அவிகளை ஏந்திச் செலுத்தும் தன்மை அற்புதமாயிருக்கிறது. அவன் பிறந்தவுடன் மகத்தான தூதச் செயலை நடத்தத் தேவர்களுக்கு அவியை ஏந்திச் செல்லுகிறான்.

2. சுவாலையான பல்லால் வனங்களைப் புசிப்பவனும், செல்வத்தைத் தருபவனும் மிக்க ஊக்கமுள்ளவனுமான அக்கினி துதிப்பவர்களால் அளிக்கப்படும் நெய்யால் செழிப்பிக்கப்படுகிறான், உயர்த்திய அவி சொரியும் பாண

டத்தோடு அவன் போற்றப்பட்டு மேய் தரையின் நடுவே நன்கு போஷிக்கப்பட்ட தலைக் காளையைப் போல் பாலிக்கப்படுகிறான்.

3. துதிப்பவர்களே! நீங்கள் தேவனும், மரத்தின் மீது பறவையைப் போல் உட்கார்ந்திருப்பவனும், யக்ஞ உணவைக் கேட்பவனும், முழங்குபவனும், வனத்தைத் தகிப்பவனும், சலத்தைச் சொரிபவனும், வாயிலே அவியை ஏந்துபவன் போல் இருப்பவனும், ஒளியால் மகத்தாயிருப்பவனும், மேன்மையான செயல்களுள்ள சூரியனைப் போல் உடனே வழிகளை ஒளிப்படுத்துபவனுமான அக்கினியைப் போற்றுங்கள்.

4. அழியாத அக்கினியே! சலனத்தில் துரிதமாயிருப்பவனும், வனத்தைத் தகிக்க விரும்புபவனுமான உன்னைச் சுற்றிலும், தடைபடாத காற்றுக்கள் பரவுகின்றன. அவிகளை அளிக்க விரும்பும் அறிஞர்கள் வீரர்களைப் போல் முழங்கி, வலியனும், மூன்று வேதிகளிலே நிலைக்கப்பட்டுள்ளவனுமான உன்னைப் போற்றுகிறார்கள்.

5. இந்த அக்கினி கண்வர்களிலே மிக்க உத்தமனாயும், கண்வனின் நண்பனாயும், அருகிலோ தூரத்திலோவுள்ள பகைவனை ஜயிப்பவனாயிருக்கிறான். அந்த அக்கினி போற்றுபவர்களான எங்களைப் பாலிப்பானாக. அறிஞர்களைப் பாலிப்பானாக. அறிஞர்களும், போற்றுபவர்களுமான எங்களுக்குப் பாலனத்தை அளிப்பானாக. 10117

6. அக்கினியே! உத்தமப் பிதிர்க்களிடமிருந்து வந்தவனும், மிக்க வலியனும், ஆற்றலுள்ள வில்லால் துன்பத்திலிருந்து பாலிப்பவனும், மிக்கத் தாராளமாய் உணவை அளிப்பவனுமான ஜாதவேதஸனும் உனக்கு உத்தம அவியை அளிப்பவனுமான நான் உன்னைத் துதிக்கத் துரிதமாய் வந்தேன்.

7. இங்ஙனம் பலத்தின் மகனான அக்கினி அறிஞர்களும், செயலாளர்களும் வழிபடுபவர்களுமான எங்களால்



போற்றப்படுகிறான். அவனைத் துதிப்பவர்கள் இன்புற்ற நண்பர்களைப் போல் யக்ஞத்தை விரும்பி தேஜஸுள்ளவர்களைப் போல் அவனுடைய பலத்தால் பகைவர்களான மனிதர்களை ஜயிக்கிறார்கள்.

8. உணவின் மகன் ஆற்றலுள்ள அக்கினி என இங்ஙனம் உபஸ்துவின் வாக்கு அவிகளை வர்ஷித்து உன்னைப் போற்றுகிறது. நாங்கள் உன்னைப் போற்றுவோமாக. உன்னால் நாங்கள் நீண்ட ஆயுளை அடைந்து உத்தம வீரப் புதல்வர்களை அடைவோமாக.

9. அக்கினியே! இங்ஙனம் உன்னை விருஷ்டிஹவ்யனுடைய புதல்வர்களான உபஸ்துதரிஷிகள் போற்றினார்கள். நீ அவர்களையும் அறிஞர்களையும் பாலிக்கவும். ஊர்த்துவ முகங்களோடு — உயர்த்திய முகங்களோடு வஷட் என வழங்கும் அவர்கள் உன்னிடம் வந்தார்கள். வணக்கம் வணக்கம் எனக் கூறி அவர்கள் ஊர்த்துவ முகங்களோடு உன்னிடம் வந்தார்கள். 10121

## 116. இந்திரன்

### 953. அக்கினியுதன் அல்லது அக்கினிரூபன் ஸ்தூரனுடைய புதல்வன்

1. இந்திரனே! நீ உன்னுடைய இந்திரியங்களை பலஞ்செய்து கொள்ள ஸோமத்தைப் பருகவும். மிக்க வலியனே! விருத்திரனைக் கொல்லவும்; பருகவும். சக்திக்கும் செல்வத்துக்கும் அழைக்கப்படுங்கால் பருகவும். மதப்படுத்தும் ஸோமத்தைப் பருகவும். இந்திரனே! திருப்தியாகி — செல்வங்களை வர்ஷிக்கவும்.

2. இந்திரனே! துதியோடுள்ளதும், பிழியப்பட்டிருப்பதும், அளிக்கப்படுவதுமான இந்த ஸோமத்தின் உத்தம பாகத்தைப் பருகவும். ஸ்வஸ்தியளிக்கும் நீ, உன் மனத்திலே இன்பமாயிருக்கவும். செல்வத்தையும் சௌபாக்கியத்தையுமளிக்க எங்கள் முன்பாகவும்.

3. இந்திரனே! சோதியிலே தோன்றிய ஸோமம் உன்னை இன்புறுத்துக. புவியின் யக்ஞங்களிலே பிழியப் பட்ட ஸோமம் உன்னை மதப்படுத்துக. எந்த ஸோமத் தின் ஊக்கத்தால் நீ செல்வத்தை அளித்தாயோ அது உன்னை மதப்படுத்துக. எதனால் நீ பகைவர்களை விலக்கு கிருயோ அந்த ஸோமம் உன்னை மதப்படுத்துக.

4. இருவிதத் துதிகளுக்குத் தருந்தவனும், எங்கும் செல்பவனும், செல்வங்களை வர்ஷிப்பவனுமான இந்திரன், அளிக்கப்படும் யக்ஞ அவிக்குத் தன் இரு கபில நிறக் குதிரைகளோடு வருவானாக. பகைவர்களை அழிப் பவனே! கோசர்மத்திலே பொழியப்பட்டதும், பாண் டங்களிலே நிரப்பப்பட்டதுமான ஸோமத்தை எங்கள் யக்ஞத்திலே பருகி மதப்பட்டு ஊக்கமற்ற பகைவன் மீது காளையைப் போல் பாயவும்.

5. உன்னுடைய கூரிய காந்தியுள்ள ஆயுதங்களைச் செலுத்தி யாதுதானர்களின் கனத்த தேகங்களைக் குத்த வும். நான் உக்கிரனுன உனக்குப் பகை ஜயிக்கும் பலத்தைத் தருகிறேன். சங்கிராமங்களிலே சத்துருக்களை எதிர்த்து அவர்களைத் துணிக்கவும். 10126

6. தலைவனுன இந்திரனே! எங்களுக்கு உணவைப் பரத்தவும். பகைவர்களைத் தாக்கும் வலிய விற்களைப் போல் உன்னுடைய பலத்தைப் பரத்தவும். பலத்தால் வலிமையடைந்தவனும், தடைபடாமலுள்ளவனுமான நீ, உன்னுடைய தேகத்தை வலிமை செய்து கொள்ளவும்.

7. சக்கரவர்த்தியான மகவானே! உனக்கு இந்த அவி அளிக்கப்படுகிறது. அதிருப்தியாகாமல் இதை ஏற்றுக்கொள்ளவும். மகவானே! உனக்கு ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. உனக்குப் புரோடாசம் பக் குவம் செய்யப்பட்டிருக்கிறது. இந்திரனே! இதைப் புசிக்கவும். வேதியிலே பொழியப்பட்ட ஸோமத்தைப் பருகவும்.



8. இந்திரனே! வேதியின் மீது வைக்கப்பட்டுள்ள இந்த அவிகளைப் புசிக்கவும். உணவையும், புரோடாசங் களையும், ஸோமத்தையும் ஏற்றுக்கொள்ளவும். யக்ஞ உணவுகளுள்ள நாங்கள் உன்னை இன்புறுத்துகிறோம். யக்ஞக் கர்த்தாக்களின் விருப்பங்கள் பூர்த்தியாகுக.

9. நான் இந்திரனுக்கும் அக்கினிக்கும் உத்தமத் துதியைச் செலுத்துகிறேன். நான் என்னுடைய துதியைக் கடலின்மீது செலுத்தப்படும் கப்பலைப்போல் தோத்திரங் களால் செலுத்துகிறேன். செல்வங்களைத் தருபவர்களும், எதிரிகளைத் தாழ்த்துபவர்களுமான தேவர்கள், கர்த்தாக் களைப் போல் எங்களை மேம்படுத்துகிறார்கள். 10130

## 117. செல்வதானம் அல்லது அன்னதானம்

### 954. பிட்சு—அங்கிரஸனின் புதல்வன்

1. தேவர்கள் பசியை மரணத்துக்காக ஏற்படுத்த வில்லை. ஏனெனில் மரணங்கள் புசிப்பவனையும் பற்று கின்றன. அளிப்பவனுடைய செல்வங்கள் குறையா மலிருக்கின்றன. அளிக்காதவன் ஆற்றுபவனைக் காணுன்.

2. அன்னமிருந்தும் உணவை நாடி வரும் ஏழைக் கும், துணை நாடி வரும் துன்பப்படுபவனுக்கும் அளிக்கா மல், தன் மனத்தைக் கல்லாகச் செய்து கொண்டு ஏழை யின் முகப்பிலே போகங்களை அனுபவிப்பவன் ஆற்று பவனைக் காணுன்.

3. வருந்தித் திரிந்து உணவை விரும்பும் ஏழைக்கு அளிப்பவன் வள்ளல். அவனுக்குப் போரிலே வெற்றி தோன்றும். அவன் பகைவர்களோடு நட்பைச் செய்து கொள்கிறுன்.

4. நண்பனுக்கு, உணவையளிக்காதவன் நண் பனுகான். அவன் கருமியினிடமிருந்து நீங்குவானுக. அவனுடைய இடம் மனையாகாது. அவன் மிக்கப் பிரிய மாயிருக்கும் தலைவனை நாடுவானுக.

5. மிக்கச் செல்வமுள்ளவன் நாடிவரும் ஏழையைத் திருப்தி செய்வானாக. அவன் நீண்ட வழியை நோக்கு வானாக. ஏனெனில் செல்வங்கள் ஒருவனிடமிருந்து மற்ற வனிடம் உருண்டு செல்லும் தேரின் சக்கரங்களைப் போல் செல்லுகின்றன. 10135

6. அளிக்கத் தெரியாத அறிவிலி, உணவை வீணு யடைகிறான். நான் உண்மையைக் கூறுகிறேன். அதுவே அவனுக்கு அழிவாயிருக்கிறது. அவன் தேவர்களுக்கு அவியை யளிப்பதில்லை. நண்பனுக்கு உணவை அளிப்ப தில்லை. தனியாயுண்பவன் பாவத்தில் தனித்திருக்கிறான்.

7. கொழு உழுது உணவைத் தருகிறது. ஒருவன் வெகு தூரஞ் சென்று தன் முயற்சிகளால் தன் தலைவனுக் குச் செல்வத்தைச் சம்பாதிக்கிறான். வேதத்தை விளக்கும் பிராமணன் விளக்காதவனைவிடச் சிறந்தவன். அளிப் பவன் அளிக்காதவனிடம் பந்துவைப்போல் இருப்பானாக.

8. ஒரு காலுள்ளவன், மனிதனை—இரு கால்களுள்ள வனைக் கடந்து செல்லுகிறான். துவிபாதன் மூன்று கால் களிருப்பவனைப் பிடிக்கிறான். மனிதர்கள்—இரு கால்களுள் ளவர்கள் அழைத்தால் நான்கு கால்களுள்ள பிராணிகள் வருகின்றன. இவர் கூடும் இடத்திலே அவை நின்று உற்று நோக்குகின்றன.

9. இரு கைகள் ஒப்பாக இருக்கின்றன. ஆனால் அவை ஒரே வேலையைச் செய்யவில்லை. ஒரே சமயத்தில் ஈன்ற இரு பசுக்கள் ஒப்பற்ற பாலைத் தருகின்றன. இரட்டைகளுக்கு ஒரே வன்மையில்லை. குடும்பத்தில் இருவர் ஒப்பாயளிப்பதில்லை. 10139

## 118. அக்கினி ரட்சோகன்

### 955. உருக்ஷயன்—அமஹூயுனுடைய புதல்வன்

1. அக்கினியே! சுத்தத்தைப் பாலிப்பவனும், உன் னுடைய சொந்த இடத்திலே மனிதர்களின் நடுவே பிர காசிப்பவனுமான நீ, புசிப்பவனான இருளை அழிக்கிறாய்.



2. நீ நன்கு அழைக்கப்படும்போது எழுகிறாய். நீ உன்னருகில் சட்டுவங்கள் ஏந்தப்படுங்கால் நீ இன்புறு கிறாய்.

3. துதியோடு போற்றத் தகுந்த அக்கினி அழைக்கப் படுங்கால் பிரகாசிக்கிறான். மற்ற தேவர்களுக்கு முன்னால் அக்கினி துடுப்பின் நெய்யால் சொரியப்படுகிறான்.

4. தேன் முகமுள்ளவனும், அழைக்கப்பட்டவனும், பிரகாசிப்பவனும், அனைத்தையும் ஒளிப்படுத்துபவனு மான அக்கினி நெய்யால் பூசப்படுகிறான்.

5. அவிகளை வகிப்பவனும், வழிபடுபவர்களால் போற்றப்படுபவனுமான நீ, தேவர்களுக்காக சொலிப் பிக்கப்படுகிறாய். அத்தகைய உன்னை மானிடர்கள் அழைக்கிறார்கள். 10144

6. மானிடர்களே! தடைபடாதவனும், மனையின் தலைவனும், அமுதனுமான அக்கினியை நெய்யோடு போற்றுங்கள்.

7. அக்கினியே! நீ உன்னுடைய அழியாத சுவாலை யால் அரக்கர்களைத் தகிக்கவும், யக்ஞத்தைப் பாலிக்கும் நீ, பிரகாசிக்கவும்.

8. அக்கினியே! பரந்த இடங்களிலே பிரகாசிப்ப வனுயுள்ள நீ, உன் சோதிச்சுவாலையால் யாதுதானிகளைப் பற்பப்படுத்தவும்.

9. அக்கினியே! பல மனைகளின் தலைவர்கள் தங்கள் பாக்களால் மனிதர்களின் நடுவே மிக்கத் துதியாருகனும், அவி வகிப்பவனுமான உன்னை சொலிப்பித்தார்கள். 10148

## 119. இந்திரன்

### 956. லவனான இந்திரன்

1. என்னுடைய மனம் இங்ஙனம், இங்ஙனமே நினைத்தது. நான் என்னை வழிபடுபவர்களுக்குக் குதிரை

களையும் பசுக்களையும் அளிப்பேன். நான் ஸோமத்தைப் பருக வில்லையா ? நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

2. மரங்களை உக்கிரமாய் உலுக்கும் காற்றைப்போல என்னால் அடிக்கடி குடிக்கப்பட்ட ஸோம பானங்கள் என்னை உயர்த்தின.

3. கேசுரை இழுக்கும் துரித குதிரைகளைப்போல ஸோம பானங்கள் என்னை உயர்த்தின. ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

4. தோத்திரம், பிரியமான கன்றினிடம் கதறிச் செல்லும் பசுவைப்போல் என்னிடம் வந்தது. ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

5. நான் தேரோட்டியின் பீடத்தைக் கற்பிக்கும் தச்சனைப்போல் என்னுடைய மனத்தால் துதியைக் கற்பிக்கிறேன். இசைக்கிறேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப பருகினேன். 10153

6. என் கண்ணோட்டத்திலிருந்து பஞ்சசனங்கள் நீங்காமலிருந்தார்கள். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

7. சோதியும் புவியும் என்னுடைய பாதிக்கு ஒப்பானவையில்லை. நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

8. நான் மகிமையிலே சோதியை முந்துகிறேன். நான் இந்த மகத்தான பூமியை முந்துகிறேன். நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

9. அகோ ! நான் இந்தப் புவியை விரும்பும் இடத்திலே இங்கோ அங்கோ ஸ்தாபிப்பேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

10. நான் தாபப்படுத்தும் சூரியனை இங்கோ, அங்கோ விலக்குவேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.



11. என்னுடைய சிறகுகளில் ஒன்று சோதியிலிருக்கிறது. நான் மற்றதைக் கீழே செலுத்தினேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

12. மகத்தில் மகத்தான நான், வானிலே சூரியனாக உயர்த்தப்பட்டிருக்கிறேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன்.

13. வழிபடுபவர்களால் அலங்காரமான நான், அவியைப் பெற்றுக்கொண்டு அதைத் தேவர்களிடம் சுமந்து செல்லுகிறேன். ஏனெனில் நான் அடிக்கடி ஸோமத்தைப் பருகினேன். 10161

## 120. இந்திரன்

### 957. பிருஹத்திவன்–அதர்வணனுடைய புதல்வன்

1. அது எல்லா புவனங்களிலும் முதன்மையாயிருந்தது. உத்தமமாயிருந்தது. அதிலிருந்தே பிரகாசிக்கும் பலமுள்ள உக்கிரன் இந்திரன் பிறந்தான். அவன் பிறந்தவுடன் பகைவர்களை அழிக்கிறான். அவனில் எல்லாப் பிராணிகளும் இன்புறுகின்றன.

2. திறத்திலே வளர்ந்து மிக்க வலியனும், அழிப்பவனுமான இந்திரன் தாஸனுக்கு அச்சத்தை அளிக்கிறான். ஜடமும் சங்கமுமுள்ள உலகம் அவனால் சுத்தமாகிறது. உன் மதத்திலே பாலனமாகி எல்லாப் பிராணிகளும் ஒன்று சேர்கின்றன.

3. துதிப்பவர்கள் எல்லாம் இருவராயிருந்தாலும் மூவர்களாயிருந்தாலும் சரி உனக்கே துதியை, மனத்தையளிக்கிறார்கள். இனிமையில் இனிமையாயுள்ளதை இனிமையோடு இசைக்கவும். அந்தத் தேனைத் தேனோடு சேர்க்கவும்.

4. அறிஞர்கள் செல்வந் தருபவனான உன்னை உன்னுடைய ஒவ்வொரு மதத்திலும் போற்றுகிறார்கள். தீரனான இந்திரனே ! திரமாயும் திறமாயுமுள்ள செல்

வத்தை எங்களுக்குப் பரத்தவும். துட்டர்களான யாது-தானர்கள் உன்னைத் துன்புறுத்மாமலிருப்பார்களாக.

5. நாங்கள் போர் புரிவதற்காக பகைப் படைகளைக் கவனித்து உன்னால் எங்கள் பகைவர்களைப் போர்களிலே ஜயிக்கிறோம். நான் துதிமொழிகளால் உன்னுடைய ஆயுதங்களைப் ஊக்கப்படுத்துகிறேன். என்னுடைய பிரமத்தால் உன்னாற்றலைக் கூர்ப்பிக்கிறேன். 10166

6. நான் போற்றத் தகுந்தவனும், பல வடிவங்களுள்ளவனும், பரந்தவனும், உத்தமத் தலைவனும், ஆப்தியர்களின் நடுவே ஆப்தியனுமான இந்திரனைப் போற்றுகிறேன். அவன் தன் பலத்தால் ஏழு தானவர்களை எதிர்க்கிறான். அவன் எதிர்க்கும் பல படைகளை ஜயிக்கிறான்.

7. நீ அவியால திருப்தியடைந்த மனையிலே சிறிய செல்வத்தையும் பெரிய செல்வத்தையும் வைக்கிறாய். நீ சலனமாகும் இரு தாய்மார்களை — சோதியையும் புவியையும் - நிலைப்படுத்துகிறாய். நீ பல செயல்களை நிறைவேற்றுகிறாய்.

8. சூரியனுடைய சேவகனும், ரிஷிகளின் தலைவனுமான பிருஹத்திவன் இந்திரனைத் துதி செய்ய இந்தத் தோத்திரங்களைக் கூறுகிறான். அவன் மகத்தாயும் தானே துலங்குவதுமாயுமுள்ள பசுக்களின் மந்தையை நடத்துகிறான். அவன் சோதியின் கதவுகளையெல்லாம் திறந்தான்.

9. அதர்வணனுடைய புதலவனும், மகானுமான பிருஹத்திவன் இந்திரனுக்குத் தன்னுடைய சொந்த பரந்த தோத்திரத்தைக் கூறினான். தாயான புவியிலே இருக்கும் குற்றமற்ற ஏழு நதிகள் இந்திரனிடம் பாய்கின்றன. அவனைப் பலத்தால் பலப்படுத்துகின்றன. 10170



# 121. யார் பிரஜாபதி ?

## 958. இரண்யக்கருப்பன்—பிரஜாபதியின் புதல்வன்

1. இரண்யக்கருப்பன் துவக்கத்தில் இருந்தான். பிறந்தவுடன் எல்லா சிருட்டிப் பொருள்களின் ஒரே தலைவனாயிருந்தான். அவன் இந்தப் புவியையும் சோதியையும் தாங்கினான். நாம் அவியோடு தேவனான காவை பிரஜாபதியைப் போற்றுவோமாக.

2. ஆத்மாவைத் தருபவனும், ஆற்றலை அளிப்பவனும், எல்லா சீவர்களையும் விதிப்பவனும், தேவர்களைப் பணியச் செய்பவனும், அமுதத்தையும் அழிவையும் நிழலாக உள்ளவனும், தேவனும் காவுமான பிரஜாபதியை நாம் அவியோடு போற்றுவோமாக.

3. தன்னுடைய மகிமையால் சுவாசிப்பதும், இமைப்பதுமான உலகத்துக்கு ஒரு அரசனானவனும், இந்தத் திரண்ட இரு கால்கள் உள்ள, நான்கு கால்கள் உள்ள பிராணிகளை நடத்துபவனும், தேவனும் காவுமான பிரஜாபதியை நாம் அவியோடு போற்றுவோமாக.

4. தன மகிமையால் இந்தப் பனிமலைகளை நிலைக்கச் செய்பவனும், நதிகளோடுள்ள கடலைச் செல்வமாகவுள்ளவனும், இரு கைகளைப்போல் இத்திசைகளையடைந்திருப்பவனும், தேவனுமான காவை — பிரஜாபதியை — நாங்கள் அவியால் போற்றுவோமாக.

5. வானை உக்கிரமாயும், வையத்தை வலிமையாயும் செய்தவனும், சோதியையும் ஒளி மண்டலத்தை நிறுத்தியவனும், வானிலுள்ள சலத்தைக் கற்பித்தவனும், தேவனுமான காவை — பிரஜாபதியை — நாங்கள் அவியோடு போற்றுவோமாக. 10175

6. ஒளி வீசுபவையும், மனத்தால் காண்பவையுமான சோதியையும் புவியையும் தன் பாலனத்தால் ஸ்தாபித்தவனும் தன்னில் உதயமாகி ஒளி வீசும் சூரியனுள்ள

வனும், தேவனுமான பிரஜாபதியை நாங்கள் அவியால் போற்றுவோமாக.

7. மகத்தான சலங்கள் பொன் கருவைத் தரித்துள்ள விசுவத்திலே அக்கினியைப் பிறப்பித்தவுடன் தேவர்களின் ஒரு பிராணன் தோற்றுவிக்கப்பட்டது. நாம் தேவனுன பிரஜாபதியை அவியோடு போற்றுவோமாக.

8. யக்ஞத்தைத் தோற்றுவிப்பவையும், தட்சனை ஏந்துபவையுமான சலங்களைத் தன் மகிமையால் காண்பவனும், தேவர்களின் நடுவே ஒரு தலைத் தேவனுமான காவுக்கு – பிரஜாபதிக்கு – நாம் அவியோடு போற்றுவோமாக.

9. புவியைத் தோற்றுவித்தவனும், உலகத்தை சத்தியமாய்த் தாங்குபவனும், சோதியைப் பிறப்பித்தவனும், மகத்தாயும் இன்புறுத்துபவையுமுள்ள சலங்களைப் புலப்படுத்தியவனும், தேவனுமான பிரஜாபதியை நாங்கள் அவியோடு போற்றுவோமாக.

10. பிரஜாபதியே! உன்னைத் தவிர வேறு எவனும் இந்தப் பொருள்களையெல்லாம் தோற்றுவிக்கவில்லை. நாங்கள் உன்னை அழைக்குங்கால் நீ எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்யவும். நாங்கள் செல்வபதிகளாயிருப்போமாக. 10180

## 122. அக்கினி

### 959. சித்திரமகஸன் – வசிஷ்டனுடைய புதல்வன்

1. நான் சூரியனைப் போலிருப்பவனும், அற்புத ஒளியுள்ளவனும், விரும்பத் தகுந்தவனும், சுகத்தைத் தருபவனும், அதிதியும், துவேஷமற்றிருப்பவனுமான அக்கினியைப் போற்றுகிறேன். துக்கத்தை விலக்குபவனும், விசுவத்தைத் தாங்குபவனும், தேவர்களை அழைப்பவனும், கிரகபதியுமான அக்கினி, வழிபடுபவர்களுக்கு ஆற்றலை அளிக்கிறுன்.

2. அக்கினியே! நீ திருப்தியாகி என் துதியை ஏற்றுக் கொள்ளவும். உத்தமச் செயல்களுள்ள நீ அறிவதற்கான



அனைத்தையுமறிகிறுன். நெய்யால் அஞ்சனமான நீ, பிரம்மத்தின் வழியைச் செழிப்பிக்கவும். தேவர்கள் உன்னுடைய விரதத்தை அநுசரித்து அளிக்கிறுர்கள்.

3. அமுதனுன அக்கினியே! நீ ஏழு உலகங்களையுங் கடந்து வந்து, தாராளமாயளிக்கும் ஈகையனுக்கு – சுகிர்தனுக்கு — செல்வத்தையளிக்கவும். அக்கினியே! வீர மக்கட்களோடுள்ளதும், பயனுக்குரியதுமான செல்வத்தை நல்கவும். ஸமித்தனத்தோடு உன்னிடம் வருபவனைப் போற்றவும்.

4 அவிகளை ஏந்தும் ஏழு ஹோதாக்கள், யக்ஞத்தின் கொடியும், தேவர்களின் முதல்வனும், புரோகிதனும், வலிமையுள்ளவனும், செவியுறுபவனும், நெய்யாங்கமுள்ளவனும், வர்ஷிப்பவனும், போற்றுபவனைப் போற்றுபவனும், உத்தம வீரியனுமான அக்கினியைப் போற்றுகிறுர்கள்.

5. நீ போற்றத் தகுந்தவனும் முதல்வனுமான தூதனுயிருக்கிறுய். அமுதத்துக்காக அழைக்கப்பட்டுள்ள நீ, பருகி மதமுள்ளவனுகவும். மருத்துக்கள் உன்னை அவியளிப்பவனுடைய மனையிலே அலங்கரித்தார்கள். பிருகுக்கள் ஸ்தோமங்களால் உன்னைப் போற்றினுர்கள். 10185

6. அக்கினியே! உத்தமச் செயல்களை நடத்துபவனே! விசுவத்தைத் தாங்கும் உணவுக்காகப் பால் பெருகும் பசுவை யக்ஞப்பிரியனுன தலைவனுக்குக் கறந்து நெய்யால் ஸ்னனஞ் செய்யப்பட்டவனும், முவ்வுலகங்களை ஒளிப்படுத்துபவனுமான நீ, யக்ஞஸதானத்தின் தலைவனுகி யக்ஞத்தைச் சுற்றிச் சென்று ஒவ்வொரு யக்ஞத்தையும் நிறைவேற்றுகிறுய்.

7. அக்கினியே! மனிதர்கள் இந்த உஷையின் உதயத்திலே உன்னைத் தேவர்களுக்குத் தூதனுக நியமித்துப் போற்றினுர்கள். தேவர்கள் யக்ஞத்திலே உன் மீது நெய்யைத் தெளித்துப் போற்ற உன்னையும் மேம்படுத்தினுர்கள்.

8. அக்கினியே! விதிப்பவர்களான வசிட்டர்கள் யக்ஞச் சபைகளிலே வலியவனான உன்னைப் போற்றி அழைத்தார்கள். எங்களில் செல்வச் செழிப்பை ஸ்தாபிக்கவும். தேவர்களே! நீங்கள் எப்பொழுதும் எங்களை ஸ்வஸ்வதிகளோடு பாலியுங்கள். 10188

# 123. வேநன்

## 960. வேநன் — பிருகுவினுடைய புதல்வன்

1. சோதியில் பிறந்த இந்த வேநன் வானின் தேரிலே பிருசினியின் கன்றுகளை இங்கே செலுத்தினான். அறிஞர்கள் பாட்டுக்களோடு சலங்களும் சூரிய ஒளியும் சேருமிடத்தில் பாலனாயிருக்கும் அவனைச் சுவைக்கிறார்கள். போற்றுகிறார்கள்.

2. மேகத்தில் பிறந்த வேநன் வானிலிருந்து சலத்தைச் செலுத்துகிறான். அழகிய வானின் முதுகு தெரிகிறது. அவன் சோதியின் சலத்தின் உச்சியிலே பிரகாசித்தான். படைகள் தங்கள் சமமாயுள்ள ஜன்ம ஸ்தானத்தைப் போற்றிற்று.

3. தங்கள் ஸமமான குழந்தைக்கு – மின்னலுக்கு – சேர்ந்து வசிக்கும் பல தாய்மார்கள் சலங்கள் சந்தித்துக் கொண்டு இயங்கினார்கள். சலத்தின் உச்சியின் மேலே சலனமாகிப் பாடும் படைகள் அமுதத்தின் இனிமைகளைச் சுவைக்கின்றன.

4. அறிஞர்கள் வேநனுடைய வடிவத்தை அறிந்து அவனைத் துதித்தார்கள். அவர்கள் மகத்தான மிருகத்தின் கோஷத்தைப் பின்பற்றினார்கள். அவர்கள் யக்ஞத்தால் அவனை அணுகி, ஸிந்துவினிடம் சேர்ந்தார்கள். கந்தர்வன் சலங்களை ஏந்துபவன் — வேநன் — அமுதமான சலங்களை அறிகிறான்.

5. அப்ஸரசாகிய அந்த அணங்கு புன்முறுவலுடன் வேநனை மகத்தான சோதியில் தாங்குகிறாள். அவன் தன் தந்தையாகிய சோதியின் இருப்பிடத்தில் சோதியைப் போல் அலைகிறான். அவன் — வேநன் — அவளைப் பொன்மயமான தன் சிறகுகளில் அமர்த்துகிறான்.



6. இருதயங்களால் உன்னை விரும்பும் பக்தர்கள் உன்னை வானிலே பார்க்குங்கால் நீ நல்ல சிறகுகளுடன் பறப்பவனாயும், வருணனின் தங்கப் பக்கங்களுள்ள தூதனாயும், யமனுடைய மின்னலாக்கினியின் இருப்பிடத்திலே உலகத்தைப் புட்டிப்படுத்தும் பறவையாயுமிருக்கிறாய்.

7. மேலே இயங்கும் கந்தர்வன் எங்கள் முகப்பிலாகி வானிலே தன்னுடைய அற்புத ஆயுதங்களை ஏந்திக் கொண்டு நிற்கிறான். நமக்குப் புலனாக மங்களமாயும், இனிமையாயும், வியாபகமாயுள்ள வடிவத்தை–ஆடையை அணிந்து கொண்டு சூரியனைப்போல் அனுகூலமாயுள்ள மழைகளைப் பிறப்பித்தான்.

8. வேநன் மழையின் பிந்துவாக வானை அணுகி தாங்கும் வானிலிருக்கும் பருந்தின் கண்ணோடு எல்லாப் பொருள்களையும் பார்க்குங்கால் சூரியன் சோதியோடு பிரகாசித்து மூன்றாவது உலகத்திலே பிரியமான சலங்களை– மழை தாரைகளைக் கற்பிக்கிறான். 10196

# 124. அக்கினி முதலியவர்கள்

## 961. அக்கினி முதலியவர்கள்

### அக்கினி

1. அக்கினியே! எங்களுடைய ஐந்து அவிகளுள்ளதும், மூன்று குணங்களுள்ளதும், ஏழு இழைகளால் பரத்தப்பட்டதுமான இந்த யக்ஞத்துக்கு வா. எங்களுடைய அவிகளை வகிப்பவனாகவும், எங்களை முந்துபவனாகவும், நீ கணத்த இருளிலே வெகுகாலம் சயனித்திருந்தாய்.

2. தேவத்தன்மையற்ற நான் தேவர்களுடைய விருப்பத்துக்கிணங்கி குகையிலிருந்து தேவனாக வருகிறேன். நான் தூரத் திருட்டியாகி அமுதத்தை அடை

கிறேன். மங்களமற்ற நான், பிரகாசிக்காத நான், மங்கள மாகும் யக்ஞத்தைக் கைவிடுகிறேன். நான் பழைய நட்பால் இணைக்கும் அரணிக்கு வருகிறேன்.

3. நான் வேறு வம்சத்தின் அதிதியை —சூரியனை— பார்த்து, பருவங்களை அனுசரித்து, ருதத்தின் —யக்ஞத் தின்— பல இடங்களை— தேகங்களைக் கற்பித்தேன். நான் பிதாக்களாயும், பகையழிப்பவர்களுமான தேவ சனங் களுக்கு சுகத்தை விரும்பி, ஹோதாவகி, துதிகளைக் கூறு கிறேன். நான் யக்ஞாருகமில்லாத இடத்திலிருந்து நீங்கி யக்ஞாருக ஸ்தானத்துக்குச் செல்லுகிறேன்.

4. நான் இந்த வேதியினுள்ளே பல வருடங்களைக் கழித்தேன். நான் இந்திரனை விரும்பி, தந்தையினிட மிருந்து—அரணியிலிருந்து—நீங்குகிறேன். அக்கினியும், ஸோமனும், வருணனும் அவர்களுடைய ஆட்சியிலிருந்து சென்றுவிடுகிறார்கள். நான் திரும்பிவந்து என்னை நோக்கும் இராச்சியத்தைப் பாலிக்கிறேன்.

வருணன்

5. இந்திரன் : இந்த அசுரர்கள் — அக்கினியும், வருணனும், ஸோமனும்— தங்கள் ஆற்றல்களை என்னால் இழந்தார்கள். வருணனே ! நீ என்னை விரும்பினால் அரசனே! சத்தியத்தால் அசத்தியத்தைத் தனிப்படுத்தி, நீ வந்து என்னுடைய இராச்சியத்தின் மன்னனா யிருக்கவும். 10201

ஸோமன்

6. அக்கினியோ - வருணனோ : இங்கு சோதியின் ஒளியிருக்கிறது. இங்கு எல்லாம் அழகாயிருக்கிறது. இங்கு பிரகாசமிருக்கிறது. பரந்த வானிருக்கிறது. நாம் இருவரும் விருத்திரனைக் கொல்வோமாக. ஸோமனே! நீ புறப்பட்டு வா. நீ அவியாயிருக்கிறாய். நாங்கள் உன்னை அவியால் போற்றுவோம்.



வருணன்

7. கவி—மித்திரன்— தன் கவித்தன்மையால் சோதி யிலே தன் வடிவத்தை —காந்தியை— நிறுத்தினான். வருணன் அற்ப எத்தனத்தால் சலங்களை விடுவிக் கிறான். அச்சலங்கள் சுத்த நதிகளாகி மனைவிகளைப் போல் சுகத்தைத் தந்து, அவனுடைய -வருணனுடைய- நிறத்தை ஏந்துகின்றன.

8. சலங்கள் அவனுடைய -வருணனுடைய- மிக்க ஊக்கமான இந்திரியத்தைத் தாங்குகின்றன. வருணன் தன்னை சுவதாவோடு இன்புறுத்தும் சலங்களிடம் செல்லு கிறான். அவை அரசனைத் தேர்ந்தெடுக்கும் சலங்களைப் போல் வரித்து, பயத்தினால் நடுங்கி விருத்திரனிட மிருந்து ஓடிவந்தார்கள்.

இந்திரன்

9. அறிஞர்கள் சோதியின் சலங்களின் நட்பிலே இயங்கும் சூரியனைப் பயந்தவர்களுக்குத் துணைவனாக நண்பன் எனக் கூறுகிறார்கள். கவிகள் —அறிஞர்கள்— அநுஷ்டுபுவை அனுசரித்து, சதா செல்லும் இந்திரனைத் துதியால் மேம்படுத்துகிறார்கள். 10205

## 125. வாக்கு

### 962. வாக்கு — அம்பிருணனுடைய புதல்வி

1. நான் உருத்திரர்களோடும், வசுக்களோடும், ஆதித்தியர்களோடும், விசுவேதேவர்களோடும் சுற்று கிறேன். நான் மித்திரனையும், வருணனையும், அக்கினி யையும், இந்திரனையும், இரு அசுவினிகளையும் ஏந்து கிறேன்.

2. நான் பகையழிக்கும் ஸோமனையும், துவஷ்டாவை யும், பூஷாவையும், பகனையும் தரிக்கிறேன். நான் ஸோமத்தைப் பொழிபவனும், அவியையளிப்பவனும். நல்ல பாலத்துக்குரியனுமான யக்ஞக்கர்த்தாவுக்குச் செல் வத்தைத் தருகிறேன்.

3. நான் இராணி. நான் செல்வங்களைக் குவிப்பவள். நான் சத்தியத்தை அறிபவள். நான் யக்ஞாருகர்களின் நடுவே முதல்வி. பலவித நிலைகளில் வசிப்பவளும், பல வடிவங்களில் நுழைபவளுமான அத்தகைய என்னை, தேவர்கள் பல இடங்களிலே ஸ்தாபித்தார்கள்.

4. உணவை உண்பவன் என்னால் உண்கிறான். காணும் எவனும் என்னால் காண்கிறான். சுவாசிக்கும் எவனும் என்னால் சுவாசிக்கிறான். சொல்வதைச் செவியுறும் எவனும் என்னால் செவியுறுகிறான். என்னை அறியாதவர்கள் எல்லாம் அழிகிறார்கள். செவியுள்ள நீ செவியுறவும். நான் உன்னிடம் சிரத்தைக்குரியதைக் கூறுகிறேன்.

5. நான் சுயமாகவே தேவர்களாலும் மனிதர்களாலும் போற்றப்படும் இதை உன்னிடம் கூறுகிறேன். நான் எந்த மனிதனைப் பாலிக்க விரும்புகிறேனோ அந்த மனிதனை உக்கிரனாகச் செய்கிறேன். நான் அவனை அறிஞனாகச் செய்கிறேன். நான் அவனை ரிஷியாகவோ, மிக்க மேதாவியாகவோ செய்கிறேன். 10210

6. நான் உருத்திரனுடைய வில்லை, அவனுடைய அம்பு பிரம்மத்துவேஷியைக் கொல்ல வளைக்கிறேன். நான் பகைப் படைகளோடு போர் செய்கிறேன். நான் சோதியிலும் புவியிலும் பரவுகிறேன்.

7. நான் உலகத்தின் உச்சியிலே தந்தையை—சோதியை—பிறப்பிக்கிறேன். என்னுடைய ஜன்மஸ்தானம் சமுத்திரத்திலே சலங்களின் நடுவே இருக்கிறது. அங்கிருந்து எல்லாப் புவனங்களிலும் நுழைந்து பரவுகிறேன்—நிற்கிறேன். நான் இந்த சோதியை—சுவர்க்கத்தை—என்னுடைய தேகத்தால் பரிசிக்கிறேன்.

8. நானே கற்பிக்கப்பட்ட எல்லா உலகங்களுக்கும் வடிவத்தை அளித்து, காற்றைப்போல் சுவாசிக்கிறேன். நான் சோதிக்கப்பால் இந்தப் புவிக்கப்பாலிருக்கிறேன். மகிமையிலே இத்தகைய மகிமையுடனானேன். 10213



## 126. விசுவேதேவர்கள்

**963. குல்மலபர்ஹிஷன் — சிலூஷனுடைய புதல்வன். அம்ஹோமுகன்—வாமதேவனுடைய புதல்வன்**

1. தேவர்களே! எந்த மனிதனை அர்யமானும், மித்திரனும், வருணனும் சேர்ந்து அவனுடைய பகைவர்களிடமிருந்து கடத்திச் செல்கிறார்களோ அவனைப் பாவமோ புன்மையோ அணுகாது.

2. மித்திரனே! வருணனே! அர்யமானே! நீங்கள் எந்தப் பாலனத்தால் மனிதனைப் பாவத்திலிருந்து பாலித்து அவனுடைய பகைவர்களுக்கப்பால் அவனைக் கடத்திச் செல்லுகிறீர்களோ அந்தப் பாலனத்தை நாங்கள் உங்களிடம் விரும்புகிறோம்.

3. இந்த வருணனும், மித்திரனும், அர்யமானும் எங்களுடைய பாலத்துக்கு இயங்குவார்களாக. அவர்கள் எங்களைச் செலுத்துவதற்குரிய இடத்துக்குச் செலுத்துவார்களாக. அவர்கள் எங்களைப் பகைவர்களுக்கப்பால் கடப்பதற்குரிய இடத்துக்குக் கடக்கச் செய்வார்களாக.

4. மித்திரனும், வருணனும், அர்யமானுமான நீங்கள், விசுவத்தைப் பாலிக்கிறீர்கள். உத்தமத் தலைவர்களே! எங்களாலளிக்கப்படும் அனுகூலமான சுகத்திலிருப்போமாக. எங்களைத் துவேஷிகளிடமிருந்து கடத்திச் செல்லுங்கள்.

5. ஆதித்தியர்களும், வருணனும், மித்திரனும், அர்யமானும் எங்களைப் பகைவர்களிடமிருந்து கடத்திச் செல்வார்களாக. பகைவர்களிடமிருந்து நாங்கள் கடத்தப்பட மருத்துக்களோடுள்ள உக்கிரனான உருத்திரனையும், இந்திரனையும், அக்கினியையும் எங்களுடைய சுவஸ்திக்காக அழைப்போமாக. 10218

6. தலைவர்களான வருணனும், மித்திரனும், அர்யமானும், எங்களைத் தீமையிலிருந்து தனிப்படுத்துவார்களாக. மானிடர்களின் அரசர்கள் எங்களை எல்லாத்

துன்பங்களுக்கப்பாலும், எங்களுடைய பகைவர்களுக் கப்பாலும் கடத்திச் செலுத்துவார்களாக.

7. வருணனும், மித்திரனும், அர்யமானும் எங்களைப் பாலிக்க சுகத்தைத் தருவார்களாக. ஆதித்தியர்கள் நாங் கள் விரும்பும் அந்த செழிப்பான சுகத்தை எங்களுக்களிப் பார்களாக.

8. துதியாருகர்களான வசுக்களே! நீங்கள் கால் களைப் பிணைக்கப்பட்டிருந்த பசுவை விடுவித்தீர்கள். அப்படியே எங்களைப் பாவத்திலிருந்து நீக்குங்கள். அக்கினியே! எங்களுடைய நீண்ட ஆயுளை நீட்டுங்கள். 10221

## 127. இரவு

### 964. குசிகன்—ஸோபரியின் புதல்வன்
### இராத்திரி—பரத்வாஜனின் புதல்வி

1. தேவியான இரவு பல இடங்களை அணுகி தன் கண்களோடு பார்க்கிருள். அவள் எழில்களையெல்லாம் ஏந்துகிருள்.

2. அமுதமான தேவி பரந்த வானையும், உயர்ந்த இடங்களையும், தாழ்ந்த நிலங்களையும் நிரப்பினுள். அவள் ஒளியால் இருளை ஜயிக்கிருள்.

3. தேவி வருங்கால் தன் சகோதரியான உஷையை அவளுடைய இடத்திலே ஸ்தாபித்தாள். பிறகு இருள் விலகுகிறது.

4 எவள் வருங்கால் நாங்கள் மனைகளுக்கு-மரத்தின் மீதுள்ள கூடுகளுக்குப் போகும் பறவைகளைப்போல் செல்லுகிரேமோ அவள்-இரவு-இன்று எங்களுக்கு அனு கூலமாயிருப்பாளாக.

5. மனிதர்கள் தங்கள் மனைகளுக்கு மீண்டும் சென் ருர்கள். மிருகங்களும், பறவைகளும், துரிதப்பருந்துகளும், தங்கள் இடங்களுக்கு விரைந்தன. 10226



6. ஓநாயையும் பெட்டை ஓநாயையும் விலக்கவும். ஊர்மியே! இரவே! கள்ளனையும் நீக்கவும். நாங்கள் அவற்றைக் கடந்து செல்ல சுகப்படுத்துபவளுகவும்.

7. இருளைத் தன்னொளியால் எழில்படுத்தும் இரவு என்னிடம் தெளிவாய் வந்திருக்கிருள். உஷையே! நீ அந்தத் தமத்தைக் கடன்களைப்போல் தீர்க்கவும்.

8. நான் உன்னிடம் இந்தத் தோத்திரங்களைப் பசுக் களைப்போல் ஏந்தி வருகிறேன். இரவே! சோதியின் மகளே! ஜயிப்பவனுன என்னுடைய ஸ்தோமத்தைப் போல் அவியை ஏற்றுக்கொள்ளவும். 10229

## 128. விசுவேதேவர்கள்

### 965. விஹவ்யன் — அங்கிரஸனின் புதல்வன்

1. அக்கினியே! நான் போர்களிலே புகழைப் பெறுவேனுக. நாங்கள் உன்னை சொலிப்பித்து, உன் தேகத்தைப் புட்டிப் படுத்துவோமாக. நான்கு திசைகள் எனக்கு வணக்கமளிப்பார்களாக. நாங்கள் உன் தலைமை யிலே பகைப் படைகளை ஜயிப்போமாக.

2. எல்லாத் தேவர்களும், போரிலே என் பக்கத்தில் இருப்பார்களாக. இந்திரனேடு மருத்துக்களும், விஷ்ணுவும், அக்கினியும் என் பக்கத்திலிருப்பார்களாக. பரவும் வானம் என்னுடையதாகுக. என்னுடைய இந்த விருப்பத்துக்குக் காற்று, இனிமையாய் இயங்குவாஞக.

3. தேவர்கள் எனக்குச் செல்வத்தை யளிப்பார் களாக. அவர்களுடைய வாழ்த்து எனக்குத் தோன்றுக, தேவர்கள் அழைக்கப்படும் யக்ஞம் எனக்கு நன்மையை யளிக்க. தேவர்களை அழைக்கும் ஹோதாக்கள் அவர் களைப் போற்ற முதல்வர்களாயிருப்பார்களாக. நாங்கள் தேகத்தில் துன்பமற்ருகி வீரப்புதல்வர்களோடு இருப் போமாக.

4. என்னுடைய அவிகளை யெல்லாம் அறிஞர்கள் எனக்காகத் தேவர்களுக்கு அளிப்பார்களாக. என்னு

டைய மனத்தின் சங்கற்பம் உண்மையாயிருக்க. நான் எந்தவிதப் பாவத்திலும் விழாமலிருப்பேனாக. விசுவேதேவர்களே! நீங்கள் எங்களை வாழ்த்துங்கள்.

5. ஆறு மகத்தான தேவிகளான நீங்கள் எங்களுக்கு மகத்தான செல்வத்தை அளியுங்கள். விசுவேதேவர்களே! உங்களுடைய வீரியத் தன்மையை இங்கு புலப் படுத்துங்கள். நாங்கள் எங்கள் மக்கட்களையும் தேகங் களையும் இழக்காமலிருப்போமாக. அரசனே! நாங்கள் எங்கள் பகைவரின் வசத்திலாகாமலிருப்போமாக. 10234

6. அக்கினியே! தடைபடாதவனும் துணைவனுமான நீ, எங்கள் பகைவர்களின் கோபத்தைத் தடுத்து எங்களைப் பாலிக்கவும். அவர்கள் முணுமுணுத்துக்கொண்டு தங்கள் மனைகளுக்குத் திரும்புவார்களாக. விழித்திருக்கும் அந்தப் பகைவர்களின் சித்தம் உடனே அழிக்கப்படுக.

7. நான் படைப்பவர்களைப் படைப்பவனும், புவனத் தைப் பாலிப்பவனும், தேவனும், பாலகனும், பகைவர்களை அழிப்பவனுமான இந்திரனைப் போற்றுகிறேன். இரு அசுவினிகளும், பிரகஸ்பதியும், தேவர்களும், இந்த யக்ஞத்தைப் பாலிப்பார்களாக. யக்ஞஞ் செய்பவனை ஏமாற்றத்திலிருந்து பாலிப்பார்களாக.

8. பலரால் அழைக்கப்படுபவனும், பலரால் போற் றப்படுபவனும், மகானும், சர்வ வியாபகனுமான இந்திரன் எங்களுடைய இந்த யக்ஞத்தை வாழ்த்துவானாக. இந்திரனே! குதிரைகளிருப்பவனே! எங்கள் சந்தா னத்தை சுகப்படுத்தவும். எங்களைத் துன்புறுத்தாதே. எங்களைக் கைவிடாதே.

9. பகைவர்கள் விலக்கப்படுவார்களாக. நாங்கள் இந்திராக்கினிகளால் அவர்களை அழிப்போமாக. வசுக் களும், உருத்திரர்களும், ஆதித்தியர்களும் என்னை அனை வருக்கும் உத்தமனையும், உக்கிரனையும், அறிபவனையும், உயர்ந்த தலைவனையும் செய்வார்களாக. 10238



# 129. சிருட்டி

## 966. பரமேஷ்டி பிரஜாபதி

1. அப்பொழுது அஸத்து இல்லாமலிருந்தது; ஸத்து இல்லாமலிருந்தது; உலகமில்லாமலிருந்தது. வானமில்லை. அதற்கு — வானத்துக்கு — மேலுள்ளதுமில்லை. அங்கு போர்த்தும் போர்வை எங்ஙனமிருக்கும்? எங்கு இருக்கும்? எது இடமளித்தது? அளவிடத் தகாத ஆழமுள்ள சலம் எங்ஙனமிருக்கும்?

2. அப்பொழுது மிருத்யு இல்லாமலிருந்தது. அமி ருதத் தன்மையுமில்லை. இரவினுடைய அல்லது பகலி னுடைய சின்னமில்லாமலிருந்தது. அந்த சுவாசமற்ற ஒன்று தன் ஸ்வதாவினால் சுவாசித்தது. அதைத் தவிர வேறு எதுவும் இல்லாமலிருந்தது.

3. துவக்கத்திலே இருளால் மறைக்கப்பட்டிருந்த இருள் இருந்தது. இந்த உலகமெல்லாம் பகுத்தறிய இய லாத சலமாயிருந்தது. இருந்த அனைத்தும் சூன்யத்தால் மறைக்கப்பட்டிருந்தது. தவத்தின் மகிமையால் அந்த ஏகம் பிறந்தது.

4. துவக்கத்திலே மனத்தின் முதல் இரேதஸான காமமிருந்தது. கவிகள் தங்கள் இருதயத்தின் புத்தியால், தியானத்தால் தேடி ஸத்துக்கும், அஸத்துக்குமுள்ள பாந்தவத்தைக் கண்டார்கள்.

5. அவற்றின் ரசிமி பரத்தப்பட்டிருந்தது. குறுக் காகவா? மேலாகவா? கீழாகவா?—அவற்றில் சில இரேதஸைப் பொழிபவையாயிருந்தன. மற்றவை-மகத்தா யிருந்தன. சுவதா தாழ்ந்திருந்தது. புசிப்பவன் உயர்ந் திருந்தான்.

6. எவன் நிசமாய் அறிகிறான்? எவன் இந்த உலகத் திலே அதை-சிருட்டியின் உண்மையை—அறிவிப்பான்? எங்கிருந்து இந்த சிருட்டி? எங்கிருந்து, எக்காரணத்தால்

அந்த சிருட்டி பிறப்பிக்கப்பட்டது ? தேவர்கள் உலகத்தின் சிருட்டிக்குப் பிறகே தோன்றினார்கள். ஆதலால் அது எங்கிருந்து தோன்றியதென்பதை எவன் அறிகிறான் ?

7. எவனிடமிருந்து இந்த சிருட்டி தோன்றிற்றோ அவன் அதை ஏந்தலாம் அல்லது ஏந்தாமலிருக்கலாம். அவனை அன்றி அதை ஏந்த எவனாலும் இயலாது. பரம நிலையத்திலே எவனுடைய கண் இந்த உலகத்தை நடத்துகிறதோ அவன் நிஜமாய் அதை—சிருட்டியை—அறிகிறான். அவன் அறியவில்லையேல் வேறு எவனும் அறியான்
10245

## 130. சிருட்டி

### 967. யக்ஞும்—பிரஜாபதியின் புதல்வன்

1. சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களின் இழைகளால் எங்கும் பரத்தப்படுவதும், தேவ கருமங்களால் நூற்றொன்று வருடங்கள் நீட்டப்படுவதுமான இந்த யக்ஞத்தை முன்னே வந்துள்ள பிதாக்கள் நெய்கிறார்கள். அவர்கள் பாவு நூலினருகே அமர்ந்து முந்தி நெய்யவும், பிந்தி நெய்யவும் எனக் கூறுகிறார்கள்.

2. புருடன் இந்த ஆடையை விரிக்கிறான். புருடன் அதை மேலே சுருட்டுகிறான். அவன் அதை இந்த சுவர்க்கத்தின் மேலே பரத்துகிறான். அவனுடைய இந்த ரசிமிகள் யக்ஞத்தின் பீடத்திலே அமர்ந்தன. அவை ஸாமங்களை நெசவு செய்யும் நாடாக்களாக நெசவு நூல் நாழிகளாகச் செய்தன.

3. விசுவேதேவர்கள் தேவனை யஜித்தபோது யக்ஞத்துக்குப் பிரமாணம் எது ? பிரதிமானம் எது ? மூல காரணம் எது ? எது நெய்யாக இருந்தது ? எது பரிதியாக இருந்தது ? எது சந்தமாக இருந்தது ? எது பிரயுக மந்திரம் ?

4. காயத்திரி அக்கினியின் தோழியானாள். ஸவிதா உஷ்ணிக்கோடு சேர்ந்து இயங்கினான். துதிகளோடு



துலங்கிய ஸோமன் அநுஷ்டுவோடு சேர்க்கப்பட்டான். பிருஹதீசந்தம் பிரகஸ்பதியின் மொழியைப் பாவித்தான்.

5. விராடசந்தம் மித்திரா வருணர்களின் புகழாயிருந்தான். திருஷ்டுபு இந்த யக்ஞத்திலே இந்திரனுடைய நடுப்பகல் அவியின் பாகமாயிருந்தான். ஜகதி விசுவேதேவர்களுள் நுழைந்தான். இந்த யக்ஞத்தால் ரிஷிகளும் மனிதர்களும் சிருட்டிக்கப்பட்டார்கள்.

6. இந்தப் பழைய யக்ஞம் நிறைவேற்றப்பட்டவுடன் அதனால் ரிஷிகளும், மனிதர்களும், நம்முடைய பிதாக்களும் சிருட்டிக்கப்பட்டார்கள். நான் மனத்தின் கண்ணால் இந்த யக்ஞத்தின் முதல்வர்களைக் காண்கிறேன் என நினைக்கிறேன்.

7. தேவத்தன்மையுள்ள ஏழு ரிஷிகள் ஸ்தோமங்களையும், சந்தங்களையும், யக்ஞ விதிகளையும் நன்கறிந்திருந்தார்கள். தீரர்கள் முன்னோர்களின் வழியைக் கவனித்து, தேரோட்டிகளைப்போல் வாய்வடங்களை ஏந்தினார்கள்.
10252

## 131. இந்திரனும் அசுவினிகளும்

### 968. ஸுகீர்த்தி — கட்சிவதனுடைய புதல்வன்

1. சூரனே ! ஜயமுள்ள இந்திரனே ! நாங்கள் உன்னுடைய பரந்த சுகத்திலே இன்பமாக, நீ பூர்வ திசையிலும், மேற் திசையிலும், வட திசையிலும், தென் திசையிலும் வசிக்கும் எங்களுடைய எல்லா சத்துருக்களையும் விலக்கவும்.

2 இந்திரனே ! யவத்தைப் பயிர் செய்து தானியத்தைக் கதிரிலிருந்து யவத்தை முறையாய்ப் பிரிப்பவர்களைப்போல் நீ யக்ஞத்திலே பாராமுகமாயில்லாதவர்களுக்கு இங்கு உணவைத் தனிப்படுத்தி அளிக்கவும்.

3. உரிய காலத்தில் ஒரு குதிரையுள்ளவன் வராமலிருக்கிறான். அவன் போர்களிலே வெற்றியைக் காணும

விருக்கிறன். அறிஞர்களான நாங்கள் பசுக்களை விரும்பி, குதிரைகளை விரும்பி, உணவை விரும்பி, நட்புக்காக வர்ஷிப்பவனான இந்திரனை அழைப்போமாக.

அசுவினிகள்

4. அசுவினிகளே! சோதியின் தலைவர்களே! நீங்கள் இருவரும் இனிய ஸோமத்தைப் பருகி, இந்திரன் அசுரனான நமூசியோடு போர் புரியுங்கால் அவனைப் பாலித்தீர்கள்.

5. இந்திரனே! இரு அசுவினிகளும் உன்னைப் புகழுக்குரிய வீரச் செயல்களால் புதல்வனைப் பாலிக்கும் இரு தந்தைகளைப்போல் பாலித்தார்கள். வீரச் செயல்களிலே வெற்றியுடனாகி இனிய ஸோமத்தைப் பருகியவுடன், மகவானே உன்னிடம் ஸரஸ்வதி வந்தாள்.

இந்திரன்

6. உத்தமப் பாலகனும், மிகுந்த செல்வமுள்ளவனும் எல்லாமறிபவனுமான இந்திரன், தன் பாலனங்களோடு எங்களுடன் அனுகூலமாயிருப்பானாக. அவன் எங்கள் பகைவர்களை விலக்குவானாக. எங்களைப் பயத்திலிருந்து நீக்குவானாக. நாங்கள் வீரப் புதல்வர்களின் தலைவர்களாயிருப்போமாக.

7. நாங்கள் யக்ஞார்ஹனான அவனுடைய சுமதியிலே இன்புறுவோமாக. நாங்கள் அவனுடைய மங்களமாயுள்ள நல்ல மனத்தில் இயங்குவோமாக. நம்முடைய நல்ல பாலகனும், செல்வனுமான இந்திரன் எங்களை வெறுக்கும் அனைவரையும் நீக்குவானாக. 10259

## 132. மித்திராவருணர்கள்

### 969. சாகபூதன்—நிருமேதனுடைய புதல்வன்

### சோதியும் புவியும் அசுவினிகளும்

1. செல்வத்தையளிக்கும் ஈகையனான சோதி யக்ஞஞ் செய்பவனைச் செழிப்பிக்கிறன். புவி யக்ஞக் கருத்தாவை எழில்படுத்தச் செல்வப்படுத்துகிறள். தேவர்களான அசுவினிகள் யக்ஞக் கர்த்தாவைச் செல்வங்களோடு சிறப்பித்தார்கள்.



மித்திராவருணர்கள்

2. மித்திராவருணர்களே! மனிதர்களைத் தாங்குபவர்களும், சுகத்தைத் தருபவர்களுமான உங்களை நாங்கள் எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ளப் போற்றுகிறோம். நாங்கள் உங்கள் ஆதரவால் யக்ஞக் கர்த்தாவைப் பாலிக்க அரக்கர்களை அகற்றுவோமாக.

3. நாங்கள் உங்களுக்கு அவிகளை அளிக்குங்கால் விரும்பத்தகுந்த செல்வத்தை அடைவோமாக. செல்வத்தைப் பாலிக்கும் ஈகையனின் செல்வங்கள் அவனிடமிருந்து நீங்காமலிருக்க.

4. அசுரனே! சனங்களுக்கு உயிரைத்தரும் மித்திரன் சோதியிலிருந்து பிறந்தான். வருணனே! நீ எல்லா மனிதர்களுக்கும் அரசனாயிருக்கிறாய். உங்கள் தேரின் தலைவன் இந்த யக்ஞத்தை விரும்பினான். அழிப்பவனை எதிர்த்து, யக்ஞம் அற்ப பாபத்தாலும் பற்றப்படாமலிருக்கிறது.

5. சகபூதனில் தோன்றும் இந்தப் பாவம், மித்திரன் அனுகூலமாயிருக்குங்கால், அனுகும் ரிஷி பாலகனான மித்திரனின் பிரியமுள்ளவையும், துதியாருகங்களாயுமுள்ள தேகங்களிலே உணவை வைக்குங்கால் எதிர்க்கும் பகைவர்களை அழிக்கிறன்.

6. விவித அறிவுள்ள மித்திராவருணர்களே! உங்களுடைய தாயான தரணியாம் அதிதி, தன்னுடைய ரஸத்தால் மழையால் சுத்தப்படுத்தும் சோதியைப்போல் எல்லாப் பொருள்களையும் சுத்தப்படுத்த விளங்குகிறள். உங்களுடைய பிரியமான செல்வங்களை எங்கள் முன்னே புலப்படுத்துங்கள். சூரியனுடைய ரசிமிகளால் எங்களை சுத்தப்படுத்துங்கள்.

7. உங்கள் செயல்களால் சிறப்புள்ள நீங்கள் அமர்ந்தீர்கள். எங்களை எதிர்த்து முழக்கஞ் செய்யும் பகைவர்களை ஜயிக்க நீங்கள் ஒவ்வொருவராக வனங்களில் இருப்பதும், நுகத்திலிருப்பதும், உங்களுக்குரியதுமான அவரவருடைய தேரிலே ஏறுங்கள். நிருமேதன் பாபத்திலிருந்து பாலிக்கப்பட்டான். ஸுமேதன் பாவத்திலிருந்து பாலிக்கப்பட்டான். 10266

## 133. இந்திரன்

### 970. ஸுதாஸன்—பிஜவனனுடைய புதல்வன்

1. வழிபடுபவனே! அவனுடைய தேரின் முகப்பிலே இயங்கும் அந்த இந்திரனுடைய படையைப் போற்றவும், கைகலக்கும் சண்டைகளிலே எங்களை நிலைப்பிப்பவனும், போர்களிலே பகைப் படையிலிருக்கும் விருத்திரனைக் கொல்பவனும், எங்களை ஊக்கப்படுத்துபவனுமான இந்திரன், எங்களால் அளிக்கப்படும் துதியை அறிந்துகொள்வானாக. எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.

2. இந்திரனே! நீ நதிகளைக் கீழே செலுத்தினாய். நீ அஹியைக் கொன்றாய். நீ பகைவனில்லாமல் பிறந்தாய். நீ விரும்பத் தகுந்த அனைத்தையும் தருகிறாய். அத்தகைய உன்னை நாங்கள் தழுவுகிறோம். எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.

3. அவிகளை அளிக்காத எங்கள் பகைவர்கள் எல்லாம் துரிதமாயழிவார்களாக. எங்கள் செயல்கள் வெற்றியுடனாகுக. இந்திரனே! நீ எங்களைக் கொல்ல விரும்பும் சத்துருவின் மீது ஆயுதத்தைச் செலுத்துகிறாய். உன்னுடைய உதாரக் கை எங்களுக்குச் செல்வத்தையளிப்பதாயிருக்க. எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.

4. இந்திரனே! எங்களைச் சுற்றி ஓநாயைப்போல் வட்டமிடுபவனை எங்கள் கால்களின் அடியில் செலுத்தவும். நீ பகைவர்களைத் தடுப்பவன். நீ பகைவர்களை ஜயிப்பவன். எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.



5. இந்திரனே! எங்களை எதிர்ப்பவன் ஒப்பற்றவனாயிருந்தாலும், அல்லது தாழ்ந்தவனாயிருந்தாலும் அவனுடைய படை பரந்த சோதியைப்போலிருந்தாலும் அதை நீயே அழிக்கவும். எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.

6. இந்திரனே! உன்னை விரும்பும் நாங்கள் உன் நட்பை நாடுகிறோம். சத்தியத்தின் வழியால் எங்களை எல்லாத் தீமைகளிலிருந்தும் கடத்திச் செல்லவும். எங்கள் பகைவர்களுடைய விற்களின் நாண்கள் அழிக்கப்படுக.

7. இந்திரனே! தவறான ஆபீனமுள்ளதும், ஆயிரம் தாரைகளைப் பொழிவதும், துதிப்பவனுடைய விருப்பம் போல் பாலைத் தருவதுமான மகத்தான பசுவை எங்களுக்கு மிக்கப் பாலை நல்க அளிக்கவும். 10273

## 134. இந்திரன்

### 971. மந்தாதாயுவனாசுவனுடைய புதல்வன்

1. இந்திரனே! சோதியையும் புவியையும் உஷையைப்போல் ஒளியால் நிரப்புபவனும், மகத்தான தேவர்களுக்கு மகானாயிருப்பவனுமான உன்னை, தேவியான தாய் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

2. துன்புறுத்தும் மனிதனுடைய பலத்தைத் தாழ்த்தவும். எங்களைக் கொல்ல விரும்பும் பகைவனை உன் கால்களால் மிதிக்கவும். தேவியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

3. இந்திரனே! சக்கரனே! பகைவர்களை யழிப்பவனே! நீ உன்னுடைய ஆற்றல்களால், உன்னுடைய எல்லாப் பாலனங்களோடும், மகத்தாயும், எல்லாம் பிர

காசிப்பவையுமான உணவுகளை எங்கள் முன்னே குலுக்கி அளிக்கவும். தேவியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

4. இந்திரனே! சதக்கிரதுவே! நீ எங்களுக்கு எல்லா நலங்களைப் பொழியுங்கால் ஸோமத்தைப் பொழிப வனுக்கு ஆயிரம் பாலனங்களோடு செல்வத்தையுமளிக்கிருய். தேவியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

5. உன்னுடைய பிரகாசிக்கும் ஆயுதங்கள் வியர்வையின் பித்துக்களைப்போல் எங்கும் இயங்கி வீழ்க. பகைவன் துருவப் புல்லின் காம்புகளைப்போல் எங்களிடமிருந்து நீங்குவானுக. தேவியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

6. அறிஞுனை இந்திரனே! நீ நீண்ட அங்குசத்தைப்போல் உன்னுடைய படையைச் செலுத்துகிருய்.

கோதை: மகவானே! நீ உன்னுடைய பகைவர்களை, தன் முன் கால்களால் மரக்கிளையை இழுக்கும் ஆட்டைப்போல் இழுக்கிருய். தேவியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். செல்வியான தாய் உன்னைப் பிறப்பித்தாள்.

7. தேவர்களே! நாங்கள் உங்களை ஒருபோதும் துன்புறுத்தோம். நாங்கள் உங்களை எப்பொழுதும் வருத்தப் படுத்தோம். நாங்கள் சுருதி மந்திரத்தை அனுசரிக்கின்ருேம். நாங்கள் இந்த யக்ஞத்திலே உங்களைக் கைகளோடும் சிறகுகளோடும் பற்றுகிருேம். 10280

## 135. யமன்

### 972 குமரன்—யமகுலம்

1. நல்ல இலைகளுள்ள மரத்தினருகே யமன் தேவர்களோடு பருகுகிருன். யமன் மனையின் தலைவன். அவன் தம்முடைய பழைய மனிதர்களை விரும்பும் தந்தையாயிருக்கிருன்.



2. நான் அந்தத் தீய வழியிலே செல்லும் தந்தையை விருப்பமில்லாமல் பார்க்கிறேன். ஆனுல் பழையவர்களை விரும்பும் அவனிடம் திரும்பிச் செல்ல விரும்புகிறேன்.

3. யமன் பேசுகிருன்: பாலனே! நீ சக்கரமற்றதும், ஒரு நுகமுள்ளதும், பிராணனுள்ளதும், எங்கும் செல்வதும், உள் மனத்தால் கற்பிக்கப்பட்டதும், உன்னுல் காணப்படாததுமான புதிய தேரிலே நிற்கிருய்.

4. குமாரனைப் பிறப்பித்தவன் எவன்? புலன்களின் நிலையத்திலிருந்து தேரை வரச்செய்தவன் எவன்? அநுதேயம்—ஈடளிப்பு—எங்ஙனம் செய்யவேண்டுமென் பதை எவன் இன்று அறிவிப்பான்?

5. அநுதேயியைப்போல் வினைப்பயனுக்கேற்றவாறு முதலின் தோற்றமாகிறது. முன்புறத்திலே பரந்த அகாதமிருக்கிறது. பின்புறத்திலே வழிசெய்யப்பட்டிருக்கிறது.

6. தேவர்களால் கட்டப்பட்டது எனக் கூறப்படும் இது யமனுடைய ஸதனம். அவனை இன்புறுத்த இக்குழல் ஊதப்படுகிறது. அவன் பாக்களால் பாங்காகிருன். 10286

## 136. கேசினிகள்

### 973. பல ரிஷிகள்

ஜூதி — வாதரசனுடைய புதல்வன்

1. கேசீ – ரசிமியுள்ள சூரியன் - அக்கினியை, கேசீ சலத்தைத் தாங்குகிருன். கேசீ சோதியையும் புவியையும் தாங்குகிருன். கேசீ வியாபகமாயுள்ள அனைத்தையும் நாம் காண ஒளிப்படுத்துகிருன். இந்த சோதி கேசீ என அழைக்கப்படுகிறது.

வாத ஜூதி

2. வாதரசனுடைய புதல்வர்களான முனிவர்கள் மஞ்சள் நிறமாயும் மலினமாயுமுள்ள ஆடைகளைத் தரிக்கிருர்கள். அவர்கள் தேவர்களின் வடிவங்களை ஏந்துங்கால் வாயுவின் துரிதகதியைப் பற்றுகிருர்கள்.

விப்பிரஜூதி

3. நாங்கள் மௌனத்தன்மையோடு உன்மத்தமாகி காற்றுக்களின் மீது ஏறினோம். மானிடர்களே! நீங்கள் எங்கள் தூல தேகங்களையே பார்க்கிறீர்கள்.

விருஷாணகன்

4. முனி வானின் வழியிலே எல்லாப் பொருள்களையும் ஒளிப்படுத்துபவனுயும், ஒவ்வொரு தேவனின் நண்பனுயும், நல்ல செயல்களுக்கு நியமிக்கப்பட்டவனுயும் பறக்கிருன்.

கரிக்கிரதன்

5. காற்றின் குதிரையும் வாயுவின் நண்பனுமான முனி தேவனுல் ஊக்கமடைந்து கிழக்கிலும் மேற்கிலுமுள்ள இரு கடல்களுக்கும் செல்லுகிருன்.

ஏதசன்

6. அப்ஸரஸர்களுடையவும், கந்தர்வர்களுடையவும், மிருகங்களுடையவும் ஸ்தானத்தில் சஞ்சரிப்பவனும், அறிவதற்குரிய அனைத்தையும் அறிபவனுமான கேசீ என்னுடைய இனிய மிக்க இன்பமான நண்பனுயிருக்கிருன்.

ரிஷ்யசிருங்கன்

7. கேசீ – ரசிமியோடான சூரியன், சடையுள்ளவன் – ருத்திரனேடு – மின்னலாக்கினியோடு – தன் பாத்திரத்தால் – ரசிமி சமூகத்தால் சலத்தைப் பருகியபோது வாயு அவனுக்காகக் கடைந்தான். மிகக் கெட்டியாயுள்ளதைச் சூர்ணப்படுத்தினன். 10293

## 137. விசுவேதேவர்கள்

### 974. ஏழு ரிஷிகள்

பரத்வாஜன்

1. தேவர்களே! தாழ்ந்த மனிதனை மீண்டும் உயர்த்துங்கள். தேவர்களே! பாவஞ் செய்த மனிதனுக்கு மீண்டும் உயிரை அளியுங்கள்.



காசியபன்

2. இந்த இரு காற்றுக்கள் சமுத்திரத்துக்கப்பாலுள்ள தேசங்களுக்குச் செல்லுகின்றன. ஒன்று உங்களுக்குப் பலத்தை ஏந்தி வருக. மற்றொன்று எல்லாத் தீமையையும் அடித்துச் செல்க.

கோதமன்

3. காற்றே! சிகிச்சை செய்யும் மருந்தை வீசவும். காற்றே! எல்லாத் தீமையையும் அடித்துச் செல்லவும். நீயே ஸமஸ்த ஔஷதமாகும். நீ தேவர்களின் தூதனுகச் சலனமாகிருய்.

அத்திரி

4. காற்று பேசுகிருன்: நான் உன்னிடம் இன்பங்களோடும் பாலனங்களோடும் வந்திருக்கிறேன். நான் உனக்குச் செல்வத்தையும் சக்தியையும் ஏந்தி வருகிறேன். நான் உன்னுடைய நோயை நீக்குகிறேன்.

விசுவாமித்திரன்

5. தேவர்கள் எங்களுக்கு இந்த உலகத்தில் பாலனத்தை அளிப்பார்களாக. மருத்துக்களின் கணம் எங்களைப் பாலிக்க. எல்லாப் பொருள்களும், சீவர்களும், இவன் நோயிலிருந்து நீங்க பாலனத்தை அளிக்க.

ஜமதக்கினி

6. சலங்கள் ஔஷதமுள்ளவை. சலங்கள் நோயை நீக்குபவையாயிருக்கின்றன. ஒவ்வொரு வியாதிக்கும் சலங்கள் மருந்தாயிருக்கின்றன. அவை உனக்கு மருந்தாக இயங்குக.

வசிட்டன்

7. பிரஜாபதியின் பத்து கிளைகளுள்ள கைகளால் சுத்தப்பட்ட நாக்கானது பேச்சை முந்துவதாயிருக்கிறது. நோயை நோக்கும் அந்தக் கைகளால் நாங்கள் உன்னைப் பரிசிக்கிறோம். 10300

# 138. இந்திரன்

## 975. அங்கன் உருவின் புதல்வன்

1. இந்திரனே! குத்ஸனுக்கு உஷைகளை யளிக்க உனக்குத் துதி கூறப்பட்டு நீ சலங்களை விடுவிக்கும் போராட்டத்திலிருக்குங்கால், அஹியின் செயல்கள் தடைபட்டபோது அவியை ஏந்தும் அங்கிரஸர்கள்-யக்ஞத்தை மேம்படுத்தி உன் நட்பால் வலனைத் துண்டம் துண்டமாய்த் துணித்தார்கள்.

2. இந்திரனே! நீ பிறப்பிக்கும் சலங்களைப் பிரேரித்தாய். நீ மலைகளைப் பிளந்தாய். நீ பசுக்களை மீட்டாய். நீ இனிய ஸோமத்தைப் பருகினாய். வனத்திலுள்ள மரங்களை வளரச் செய்தாய். ருதத்திலிருந்து வந்த வாக்கினால் தோன்றிய இந்திரனுடைய வீரச் செயலால் சூரியன் பிரகாசித்தான்.

3. ஆரியன் — இந்திரன் — தாஸனை எதிர்த்தபோது சோதியின் நடுவே சூரியன் தன் தேரைக் கழற்றினான் நுகத்திலிருந்து பிரித்தான். ரிஜிஸ்வனனோடு சேர்ந்து மாயாவியான பிப்ரு அசுரனுடைய கெட்டியான கோட்டைகளை இடித்தான்.

4. இதுவரை எவராலும் எதிர்க்கப்படாமலிருந்த கோட்டைகளை அவன் தீரமாய் அழித்தான். அயாஸ்ய ரிஷியால் போற்றப்பட்டு அதேவர்களுடைய நிதிகளை ஒழித்தான். அவன் சூரியனைப்போலும், சந்திரனைப் போலும் அசுரர்களுடைய புரங்களிலிருக்கும் செல்வங்களைப் பற்றினான். அவன் போற்றப்பட்டு பகைவர்களை மின்னும் படையால் துடைத்தான்.

5. தடைபடாத ஆயுதங்களை ஏந்துபவனும், பரந்து பிளக்கும் படையால் வழிபடுபவர்களுக்குச் செல்வத்தைத் தருகிறான். எதிர்ப்பதற்குரிய அசுரர்களின் படைகளைக் கழிக்கிறான். இந்திரனுடைய மிக்க அழிக்கும் வச்சிராயுதத்துக்குப் பகையின் படையெல்லாம் பயந்தது. சுத்தப்படுத்தும் சூரியன் வந்தான். உஷை தன் தேரை விட்டாள்.



6. இந்திரனே! நீ ஒருவனாகவே யக்ஞாருகனை
முதல்வனைத் துன்புறுத்தியபோது நீயே இந்தப் போற்று
வதற்குரிய இந்தச் செயல்களையெல்லாம் நடத்தினாய்.
நீயே மாதங்களைக் கிரமப்படுத்தும் சூரியனை சோதியிலே
ஸ்தாபித்தாய். உன்னுடைய பாலனத்தால் தந்தையான
சோதி விருத்திரனால் பிளக்கப்பட்ட சூரியனுடைய தேரின்
சக்கரத்தின் வட்டத்தை ஏந்துகிறான். 10306

# 139. ஸவிதா

## 976. தேவகந்தர்வன்—விசுவாவசு

1. சூரியரசிமியும் பொன்கேசமுமுள்ள ஸவிதா தன் அழியாத சோதியைக் கீழ்த் திசையிலிருந்து மேலே செலுத்தினான். அவனுடைய ஆக்ஞையால் அறிஞனும் பாலகனுமான பூஷா, எல்லாப் புவனங்களையும் ஒளிப்படுத்திச் செல்லுகிறான்.

### கந்தர்வ விசுவாவசு

2. மானிடர்களைப் பார்ப்பவனாயிருக்கும் அவன், தன் ஒளியால் சோதியையும், நிலத்தையும், வானையும் தன் கதிரால் நிரப்பி ஒளி உலகின் நடுவே அமருகிறான். அவன் எங்கும் வியாபகமாகும் கீழ்த்திசைகளையும் ஒளியுடன் பரவும் இடைத் திசைகளையும், மிக்க நடுவிலுள்ள, முற்புறத்திலுள்ள, பின்புற வரம்பிலுள்ள வெளிகளையும் ஒளிப்படுத்துகிறான்.

3. செல்வ மூலனும் செல்வங் குவிப்பவனுமான அவன், தன் செயல்களால் எல்லா வடிவங்களையும் விளக்குகிறான். ஸத்தியத்தைத் தருமமாகவுள்ள தேவனைப் போலுள்ள ஸவிதா செல்வங்களுக்குப் போராடும் களத்திலே இந்திரனைப் போல் நிற்கிறான்.

4. ஸோமனே! சலங்கள் கந்தர்வனான விசுவா வசுவைப் பார்த்தவுடன் அவனிடம் யக்ஞத்தால் வந்தன. அவற்றைப் பிரேரித்த இந்திரன்—சலங்களின் வரவை அறிந்தான். அவன் சூரியனின் வரம்புகளைச் சுற்றிலும் கவனித்தான்.

5. சோதியில் தோன்றிய கந்தர்வனும் சலத்தை யளப்பவனுமான விசுவாவசு எங்களுக்குச் சத்தியம் எது என்பதையும், நாங்கள் அறியாததையும் அறிவிப்பானாக. விசுவாவசுவே! நீ எங்கள் துதிகளை ஏற்றுக்கொண்டு எங்கள் யக்ஞங்களைப் பாலிக்கவும்.

6. இந்திரன் நதிகள் சலனமாகும் இடத்திலே மேகத்தைக் கண்டான். மேகங்களிலே இருப்பிடமுள்ள சலங்களின் கதவுகளைத் திறந்தான். இந்திரன் கந்தர்வனுடைய வடிவத்தால் அமிருதங்களான சலங்களை அறிவித்தான். அவன் மேகங்களின் ஆற்றலை அறிந்தான். 10312

## 140. அக்கினி

### 977. அக்கினி பாவகன்

1. அக்கினியே! மிக்கப் போற்றத்தகுந்த உணவு உன்னுடையது. விபாசுவே! உன்னுடைய சுவாலைகள் உக்கிரமாய்ப் பிரகாசிக்கின்றன. அறிஞனே! பெரிய சோதியே! நீ போற்றத் தகுந்த உணவைப் பலத்தோடு அவியளிப்பவனுக்குத் தருகிறாய்.

2. சுத்தப்படுத்தும் சோதியும், மலினமற்ற காந்தியும் பூரண நகையுமுள்ள அக்கினியாம் நீ, பிரபையோடு எழுகிறாய். உன் தாய்மார்களிடம் புதல்வனைப்போல் சென்று நீ துதிப்பவர்களைப் பாலிக்கிறாய். நீ சோதியையும் புவியையும் இணைக்கிறாய்.

3. பலத்தின் மகனே! ஜாதவேதஸனே! எங்கள் ஸ்தோமங்களிலே இன்பமாகவும். எங்கள் அவிகளால் திருப்தியாகவும். பலவித வடிவங்களும், அற்புத சுவை



களுமுள்ள சுந்தரமாய்த் தோன்றியுள்ள உணவுகளை, துதிப்பவர்கள் உன் முன்னே வைத்திருக்கிறார்கள்.

4. அமுதனான அக்கினியே! நீ பகைவர்களோடு போராடி எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும். நீ அழகிய தேகத்தோடு பிரகாசிக்கிறாய். நீ போற்றத் தகுந்த செயலைப் பூர்த்தி செய்கிறாய்.

5. நாங்கள், யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவனும், பேரறிஞனும், மகத்தான செல்வத்தின் தலைவனும், விரும்பத் தகுந்ததை அளிப்பவனுமான உன்னைப் போற்றுகிறோம். நீ மங்களகரமான மிகுந்த உணவையும், அனுபவிப்பதற்குரிய செல்வங்களை அளிக்கிறாய்.

6. மானிடர்கள் தங்கள் முகப்பிலே சுகத்துக்காக சத்தியத்தைப் பேசுபவனும், மகானும், அனைத்தையுங் காண்பவனுமான அக்கினியை ஸ்தாபனஞ் செய்கிறார்கள். மநுவின் சந்ததிகள் இருவர் இருவராய்த் திறந்த செவிகளுள்ளவனும், மிக்கப் புகழுள்ளவனும், தேவர்களின் தூதனுமான உன்னைப் போற்றுகிறார்கள். 10318

## 141. விசுவேதேவர்கள்

### 978. அக்கினி தாபஸன்

1. அக்கினியே! நீ இங்கு எங்களிடம் பேசவும். எங்களோடு நல்ல மனமுள்ளவனாகவும். சனங்களின் தலைவனே! நீ எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும். ஏனெனில் நீ எங்களுக்குச் செல்வங்களைத் தருபவன்.

2. எங்களுக்கு அரியமானும், பகனும், பிரகஸ்பதியும், தேவர்களும், எங்களுக்குத் தாராளமாயளிப்பார்களாக. உண்மையைப் பேசும் ஸரஸ்வதியும் எங்களுக்குச் செல்வங்களை அளிப்பாளாக.

3. நாங்கள், எங்களைப் பாலிக்க அரசனான ஸோமனையும், துதிகளோடு அக்கினியையும் அழைக்கிறோம். நாங்கள் ஆதித்தியர்களையும், விஷ்ணுவையும், சூரியனையும் பிரகஸ்பதியையும் அழைக்கிறோம்.

4. எங்களுடைய எல்லா சனங்களும் நாங்கள் செல்வத்தைச் சம்பாதிக்க எங்களோடு அனுகூலமனமுள்ளவர்களாக நாங்கள் துதியாருகர்களான இந்திரனையும், வாயுவையும், பிரகஸ்பதியையும் இந்த யக்ஞத்திலே அழைக்கிறோம்.

5. அரியமானையும், பிரகஸ்பதியையும், இந்திரனையும், வாதனையும், விஷ்ணுவையும், ஸரஸ்வதியையும், உணவையளிக்கும் ஸவிதாவையும் ஈகைக்காக ஊக்கப்படுத்தவும்.

6. அக்கினியே! நீ உன் அனல்களால் எங்கள் யக்ஞத்தையும் பிரம்மத்தையும் பலப்படுத்தவும். நீ எங்களுடைய யக்ஞத்திலே எங்களுக்குச் செல்வத்தை அளிக்கத் தேவர்களை ஊக்கப்படுத்தவும். 10324

## 142. அக்கினி

### 979. நான்கு ரிஷிகள் — சார்ங்க கோத்திரம்

#### ஜரிக்திரி

1. அக்கினியே! இந்த மனிதன் உன்னைத் துதிப்பவனாயிருந்தான். பலத்தின் மகனே! உன்னைத் தவிர வேறு எவனும் அடையத் தகுந்தவனில்லை. உன்னிடத்திலிருந்து வரும்முக்காப்பான சுகமானது மங்களமளிப்பது. இம்சைக்குரிய எங்களிடமிருந்து உன்னுடைய கடுஞ் சுவாலையை வெகு தூரத்துக்கப்பால் செலுத்தவும்.

2. அக்கினியே! யக்ஞ உணவை விரும்பும் உன்னுடைய பிறப்பு மேன்மையானது. நீ படைக்கப்பட்ட எல்லா சீவர்களுக்கும் மந்திரியைப்போல் தலைவனாயிருக்கிறாய். எங்களுடைய துதிகள் வெற்றியுடனாகும். அவை தாமாகவே மந்தையைப் பாலிப்பவனைப்போல் முன்னேறுகின்றன.

#### துரோணன்

3. சொலிக்கும் அக்கினியே! நீ எரியுங்கால் பல செடிகொடிகளை அழிக்கிறாய். உழுத நிலங்கள் எல்லாம்



பாழாகின்றன. நாங்கள் உன்னுடைய உக்கிர சுவாலையைக் கோபத்துக்கு எழுப்பாமலிருப்போமாக.

4. நீ மலையிலும் பள்ளத்திலும் எரிந்து செல்லுங்கால் நீ அழிக்கும் படையைப்போல் எங்கும் பரவுகிறாய். காற்று உன் சுவாலையை வீசுங்கால் நீ தாடியை நீக்கும் நாவிதனைப் போல் புவியைச் சிறைக்கிறாய்.

#### ஸாரிஸிருக்வன்

5. அக்கினியே! நீ உன்னுடைய ஆயுதங்களைப் பிரகாசஞ் செய்து, கீழே பரந்துள்ள நிலத்தின் மீது முன்னேறுங்கால் அவனுடைய சுவாலையின் ரேகைகள் பல தேர்களின் பந்தியைப்போல் தெரிகின்றன.

6. அக்கினியே! இப்பொழுது உன்னுடைய பலம் எரியும் சுவாலைகள் மேலே எழுக. உன்னுடைய காந்தி எழுக. நீ போற்றப்படுங்கால் உன் துரித சலனங்களும் எழுக. நீ பலத்திலே பலமுடனாகி மேலே ஏறவும். கீழே இறங்கவும். இன்று எல்லா வசுக்களும் உன்னருகில் அமர்வார்களாக.

#### ஸ்தம்பமித்திரன்

7. அக்கினியே! இது சலங்களின் இடமாகும். கடலின் இருப்பிடமாகும். இந்த வழியிலிருந்து நீங்கி வேறு வழியாகச் செல்லவும். உன்னிஷ்டம்போல் அவ்வழியிலே போகவும்.

8. அக்கினியே! நீ வருங்காலும் போகுங்காலும் மலரும் துருவப் புற்கள் தோன்றுக. அங்கு ஏரிகளும் கமலங்களும் விளங்குக. இவை கடலின் மனைகளாகுக. 10332

## 143. அசுவினிகள்

### 980. அத்திரி—சாங்கியனுடைய புதல்வன்

1. தோத்திரஞ் செய்து களைத்துப்போன அத்திரியைக் குதிரையைப்போல் நோக்கத்துக்குத் துரிதப்படுத்தினீர்கள். நீங்கள் கட்சிவானைத் தேரைப் புதிப்பிக்கும் சிற்பியைப்போல் புதிப்பித்தீர்கள்.

2. வெல்லப்படாத அசுரர்களால் துரித குதிரையைப் போல் கட்டப்பட்டு இழுக்கப்பட்ட இந்த அத்திரியைக் கெட்டியான முடிச்சைப்போல் கட்டிலிருந்து அவிழ்த்து விடுவித்தீர்கள். புவியின் மீது புதியவனாய்ப் பிறந்த இளைஞனைப்போல் அவனை இயக்கினீர்கள்.

3. சுந்தரத் தோற்றமுள்ளவர்களும், ஒளியுள்ளவர்களும், தலைவர்களுமான நீங்கள் அத்திரியின் துதிகளை ஏற்றுக்கொள்ள விரும்புங்கள். துதிப்பவனுடைய தோத்திரம் தலைவர்களான உங்களுக்கு மீண்டும் கூறப்படும்.

4. வள்ளல்களான அசுவினிகளே! என்னுடைய அவியும் துதியும் உங்கள் கவனத்தை ஈர்க்க அளிக்கப்படுகின்றன. ஏனெனில் தலைவர்களான நீங்கள் இந்த யக்ஞத்திலே பரந்த ஸதனத்திலே எங்களைப் பாலிக்கிறீர்கள்.

5. உலகத்தின் எல்லையின் கடலிலே மூழ்கி கலக்கமடைந்திருந்த புஜ்யுவினிடம் சிறகுகளுள்ள குதிரைகளோடு வந்தீர்கள். ஸத்தியத்தின் தலைவர்களான நீங்கள் அவன் உங்களைத் துதிக்க அவனை மீட்டீர்கள்.

6. சர்வக்ஞர்களே! தலைவர்களே! மிக்கத் துதியாருகர்களான நீங்கள் எங்களிடம் வாருங்கள். வாழ்த்துக்களோடு எங்களை மிகுந்த பாலால் எழில்படுத்தப்படும் பசுவின் ஆபீனத்தைப்போல் வண்ணப்படுத்துங்கள். 10338

## 144. இந்திரன்

### 981. ஸுபர்ணன்—தார்ட்சியனுடைய புதல்வன் அல்லது ஊர்த்துவகிருசனன் — யம கோத்திரம்

1. இந்திரனே! விழிப்பவனான உன்னிடம் பலத்தையளிப்பவனும், அனைவருக்கும் நீண்ட ஆயுளைத் தருபவனும், இந்த அமுதனுமான ஸோமன் துரித குதிரையைப் போல் வருகிறான்.



2. எங்களின் நடுவே துதியாருகனும் துலங்குபவனுமான இந்த இந்திரன் ஈகையனுக்கு வச்சிராயுதமாகிறான். இவன் மதப்படுத்தும் ஊர்த்துவகிருசனனை ரிபுவாகப் பாலிக்கிறான். மதப்படுத்தும் கர்த்தாவைப் பாலிக்கிறான்.

3. அவனுடைய இந்த சொந்த சனங்களின் நடுவே காலையும், காந்தனுமான இந்திரன், கர்த்தாவான ஸுபர்ணனுக்காக எங்கள் வமிசத்தை ஒளிப்படுத்துவானாக.

4. நூறு செல்வங்களைத் தருவதும், அஹியை ஊக்கப்படுத்துவதுமான எந்த ஸோமத்தைப் பருந்தின் புதல்வனான ஸுபர்ணன் தூரத்திலிருந்து எடுத்து வந்தானோ?

5. எந்த அழகிய தடைபடாத பொன்னிறமான உணவை அளப்பதான ஸோமத்தைத் தன்னுடைய காலால் இந்திரனுக்குப் பருந்து ஏந்தி வந்தானோ அதனால் சீவர்களுக்கு உணவும் மூப்பும் நீடித்தன. அதனால் பந்துத் தன்மை எழுந்தது.

6. ஆதலால் இந்திரன் இந்துவால் தேவர்களின் நடுவே மகத்தான பாலனத்தை ஏந்துகிறான். பேரறிஞனே! அறிவு ஆயுளை நீட்டும் ஆற்றலைத் தருகிறது. அறிவு ஸோமத்தை எங்களிடம் எடுத்து வருக. 10344

## 145. ஸபத்தினிவாதனம்

### 982. இந்திராணி

1. நான் இந்த மிக்கச் சக்தியுள்ள மருந்தாயுள்ள கொடியைக் கெல்லி எடுக்கிறேன். இதனால் ஒருத்தி தன் சக்களத்தியை அழிக்கிறாள். இதனால் அவள் தன் கணவனைத் தனக்கே உரிமை செய்து கொள்கிறாள்.

2. ஓஷதியே! ஊர்த்துவ முகமுள்ள இலைகளுள்ளவனும், சௌபாக்கியவதியும், தேவர்களால் பிரேரிக்கப்

பட்டவளும் ஆற்றலுள்ளவளுமான நீ, என் சக்களத்தியை விலக்கி என் கணவனை எனக்கே உரிமைப்படுத்தவும்.

3. ஓஷதியே! நீ உத்தமி. நான் உத்தமியாவேனாக. நான் உத்தமிகளின் நடுவே உத்தமியாவேனாக. எனக்குச் சக்களத்தியாயிருப்பவள் அதமிகளின் நடுவே அதமியாயிருப்பாளாக.

4. நான் அவளுடைய பெயரையும் புகலேன். எவளும் அவளிடம் இன்பமாகாள். நாங்கள் வேறுயுள்ள சக்களத்தியைத் தூரத்திலே செலுத்துவோமாக.

5. நான் ஜயிப்பவள். நீயும் ஜயிப்பவள். ஜயிப்பவர்களான நாம் இருவரும் என்னுடைய சக்களத்தியை ஜயிப்போம்.

6. நான் ஜயிப்பவளான ஓஷதியாம் உன்னை என் தலையணையாகச் செய்து கொள்கிறேன். நான் அந்த மிக்க ஜயிக்கும் தலையணையால் உன்னைத் தாங்குகிறேன். உன்னுடைய மனம் கன்றிளிடம் செல்லும் பசுவை போல் என்னிடம் விரைக. அது இறக்கத்தில் பாயும் சலத்தைப் போல் பாய்க. 10350

## 146. அரண்யானி

### 983. தேவமுனி இரம்மத புதல்வன்

1. அரண்யானியே! காட்சியிலிருந்து மறைபவள் போல் தோன்றும் அரண்யானியான நீ, ஏன் கிராமத்தை நாடுவதில்லை? உன்னை அச்சம் அணுகுவதில்லையா?

2. கிறிச்சென்று சப்திக்கும் விருஷாரவத்துக்கு சிச்சிகம் பதிலளிக்குங்கால் தாளங்களைப்போல் சுருதி தோன்றி அரண்யானி போற்றப்படுகிறாள்.

3. அங்கு பசுக்கள் மேயுங்கால் காடு மனையைப் போல் தோன்றுகிறது. மாலையிலே அரண்யானி, சகடங்களை இனி வேண்டாம் என நீக்கிவிட்டவள் போல் தோன்றுகிறாள்.



4. வனத்தின் தேவியே! இங்கு ஒருவன் தன் பசுவை அழைக்கிறான். வேறொருவன் மரத்தை வெட்டுகிறான். மாலையிலே வனத்தில் வசிப்பவன் பறவைகளுடைய, மிருகங்களுடைய சத்தத்தைக் கேட்டு, ஏதோ திருடர்களுடைய குரல் எனப் பயமாகி சஞ்சலமாகிறான்.

5. வனம் எவனையும் துன்புறுத்தாது. ஆனால் வேறு எதுவோ, எவனோ அவனை எதிர்க்கலாம். அங்கு வசிப்பவன் விருப்பம் போல் இனிய பழத்தைப் புசித்து அங்கு சுற்றுகிறான்.

6. நான் கஸ்தூரி மணமுள்ளவளும், சுகந்தமாயிருப்பவளும், பல பழம் முதலியவை ஏந்துபவளும், பயிரிடப்படாதவளும், மிருகங்களின் தாயுமான அரண்யானியைப் போற்றுகிறேன். 10356

## 147. இந்திரன்

### 984. ஸுவேதஸன் – சிரீஷனுடைய புதல்வன்

1. வச்சிராயுதம் ஏந்துபவனே! உனக்கு சோதியும் புவியும் தாழ்ந்து உன்னுடைய பலத்திலே வானம் நடுங்கியபோது நீ எந்தக் கோபத்திலே விருத்திரனைக் கொன்று மானிடனுக்கு நட்புக்குரிய செயலை நடத்தினாயோ அந்த முதன்மையான கோபத்திலே இந்திரனே! நான் சிரத்தையுடனானேன்.

2. குற்றமற்ற இந்திரனே! நீ புகழை நாடிய மனத்தோடு உன் மாயைகளால் மாயாவியான விருத்திரனைக் கொன்றாய். வழிபடுபவன், அழைப்புக்களோடுள்ள எல்லா யக்ஞங்களிலும் இழந்த பசுக்களை நாடுங்காலும் உன்னையே வரிக்கிறான்.

3. இந்திரனே! புருஹூதனே! நீ இந்த அறிஞர்களை விரும்பவும். மகவானே! அவர்கள் உன் அன்பால் செழித்து செல்வத்தைப் பற்றுகிறார்கள். அவர்கள் சக்திமானான உன்னை யக்ஞத்திலே புதல்வனுக்கும்,

பேரனுக்கும் விருப்பப் பூர்த்திக்கும் குற்றமற்ற செல்வத்திற்கும் போற்றுகிறார்கள்.

4. இந்திரனுக்கு வேகமாயுள்ள மதத்தை அளிக்க அறிபவன் நன்கு பற்றுவதற்குரிய செல்வங்களை அடைகிறான். மகவானே! யக்ஞக்கர்த்தா உன்னால் செழித்து, தலைவர்களால் உணவையும் செல்வத்தையும் பற்றுகிறான்.

5. மகவானே! நீ மகத்தான துதியால் போற்றப்பட்டு உன் பலத்தைப் பரத்தவும். எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும். மித்திரா வருணர்களைப்போல் அறிஞனாயிருப்பவனும் செல்வங்களை வழங்குபவனும் அழகனுமுள்ள இந்திரனே! நீ உணவை எங்களுக்கு இப்பொழு
தளிக்கவும். 10361

## 148. இந்திரன்

### 985. பிருது – வேனனின் புதல்வன்

1. இந்திரனே! ஸோமத்தைப் பொழிந்துள்ள நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். நாங்கள் யக்ஞ அவியையளித்து மிகுந்த செல்வத்தையளிக்கும் உன்னைப் போற்றுகிறோம். ஒருவன் விரும்பப்படும் செல்வத்தை எங்களுக்கு ஏந்தி வா. உன்னால் பாவிக்கப்பட்டு ஏகனான உன்னாலேயே நாங்கள் செல்வங்களை அடைவோமாக.

2. சூரனே! இந்திரனே! மகானான நீ, சூரியனோடு சேர்ந்து, தாஸப்பிரசைகளையும், சலங்களில் மறைந்திருப்பவனும், இரகசியத்தில் பதுங்கியிருப்பவனுமான வலனை ஜயிப்பாயாக. நாங்கள் உனக்கு இப்பொழுது ஸோமத்தரைகளை அளிக்கிறோம்.

3. தலைவனும், விப்பிரனும், ரிஷிகளின் நல்மனத்தை விரும்புபவனுமான நீ, உன் ஸ்தோதாக்களை மேம்படுத்தவும். நாங்கள் உன்னை ஸோமபானங்களால் திருப்தி செய்பவர்களாயிருப்போமாக. நேரில் வரும் இந்திரனே! உனக்கு யக்ஞ அவிகளோடு தோத்திரங்களும் அளிக்கப்படுகின்றன.



4. இந்திரனே! உனக்கு இந்தத் துதிகள் கூறப்படுகின்றன. சூரனே! மானிடர்களின் தலைவர்களுக்குப் பலத்தை அளியுங்கள். நீ மகிழ்ந்திருப்பவர்களோடு ஒரு மனமுடனிருக்கவும். நீ உன்னைத் துதிப்பவர்களையும் உன்னைச் சூழ்ந்திருக்கும் வழிபடுபவர்களையும் பாவிக்கவும்.

5. சூரனே! இந்திரனே! பிருதுவின் அழைப்புக்குச் செவி கொடுக்கவும். உன்னுடைய நெய் நிறைந்த யக்ஞ ஸதனத்தைப் போற்றிய வேனனுடைய புதல்வனின் பாக்களால் நீ போற்றப்படுகிறாய். உன்னைத் துதிப்பவர்கள் செங்குத்தான கரைகளின் நடுவே பாயும்
காட்டாற்றைப்போல் உன்னிடம் பாய்கிறார்கள். 10366

## 149. ஸவிதா

### 986. அர்சன் – ஹிரண்யஸ்துபனின் புதல்வன்

1. ஸவிதா பாசங்களால் – மழை முதலியவற்றால் – புவியை நிறுத்தினான். ஸவிதா, ஏந்தப்படாத இடத்திலே சோதியைத் திரப்படுத்தினான். ஸவிதா நடுங்கும் குதிரையைப்போலுள்ள அழிவற்ற வெளிக்குப் பந்தமாயிருந்த வானின் மேகத்தைக் கறந்தான்.

2. வானின் எந்த இடத்திலே இங்ஙனம் மேகம் தடைபட்டு, பூமியின்மீது சலங்களைப் பொழிகிறதோ அந்த இடத்தை சலத்தின் பேரனே! ஸவிதா அறிந்தான். அங்கிருந்து புவி வந்தது. வானம் எழுந்தது. அங்கிருந்து சோதியும் நிலமும் பரவின.

3. அப்பால் இந்த வேறான யக்ஞாருகத் தேவதை அமுத உலகத்தின் படையோடு சேர்ந்து புலனாயிற்று. ஸவிதாவுக்கு முன்னே பிறந்த சுபர்ணன் கருத்மான் அவனுடைய ஸவிதாவினுடைய தர்மத்தை அனுசரித்தான்.

4. சோதியை ஏந்துபவனும், அனைவராலும் விரும்பப்படுபவனுமான ஸவிதா, எங்களிடம் கிராமத்துக்குத்

துரிதமாகும் பசுக்களைப் போலும், குதிரைகளிடம் செல்லும் வீரனைப்போலும், கன்றிடம் போகும் அன்பு மிகுந்த பசுவைப் போலும் விரைவானாக.

5. ஸவிதாவே! அங்கிரஸஹிரண்யஸ்தூபனைப் போல நான், இந்த உணவுக்கு, உன்னை அழைக்கிறேன். நான் உன்னுடைய பாலனத்துக்காக உன்னைத் துதித்து ஸோமலதைக்கு முன்னால் காத்திருக்கும் வழிபடுபவர்களைப்போல் உன் முன்னால் காத்திருக்கிறேன்.

10373

## 150. அக்கினி

### 987. மிருளிகவாசிட்டன்

1. அவிகளை வகிப்பவனே! நீ சொலிப்பிக்கப்பட்டு தேவர்களுக்காக சொலிக்கிறாய். நீ எங்களிடம் ஆதித்தியர்களோடும், ருத்திரர்களோடும், வசுக்களோடும் வருகிறாய். நீ எங்களை சுகப்படுத்த வா.

2. இந்த யக்ஞத்தாலும் இந்தத் துதியாலும் திருப்தியாகி நீ வரவும். நாங்கள் சொலிக்கும் அக்கினியான உன்னை அழைக்கிறோம். மனிதர்களான நாங்கள் உன்னை சுகந்துக்காக அழைக்கிறோம்.

3. நான் அனைவராலும் விரும்பப்படும் ஜாதவேதஸனான உன்னைப் போற்றுகிறேன். அக்கினியே! பிரிய விரதர்களான தேவர்களை இங்கு அழைத்து வா. பிரிய விரதர்களான தேவர்களை எங்களை சுகப்படுத்த அழைத்து வா.

4. தேவனான அக்கினி தேவர்களுக்குப் புரோகிதனாயிருந்தான். மனுவின் சந்ததிகளான ரிஷிகள் அக்கினியை சொலிப்பித்தார்கள். நான் மிகுந்த செல்வத்தை அடைய அக்கினியை அழைக்கிறேன். செல்வத்தைச் சம்பாதிக்க அவன் என்னை சுகப்படுத்துவானாக.

5. அக்கினி போரிலே அத்திரியையும், பரத்வாஜனையும், கவிஷ்டிரனையும், கண்வனையும், திரஸதஸ்யுவையும், எங்களையும் பாலிப்பானாக. வசிஷ்டன் புரோகிதனாக அக்கினியை அழைக்கிறான். புரோகிதன் சுகத்துக்காக அழைக்கிறான்.

10378



## 151. சிரத்தை

### 988. காம வம்சத்தில் வந்த சிரத்தை

1. அக்கினி சிரத்தையால் சொலிப்பிக்கப்படுகிறது. சிரத்தையால் அவியளிக்கப்படுகிறது. நாங்கள் எங்கள் துதியோடு பகனின் தலையின் மீது அமர்ந்துள்ள சிரத்தையைப் போற்றுகிறோம்.

2. சிரத்தையே! ஈகையனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும். சிரத்தையே! அளிக்க விரும்புபவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும். சுகத்தை நாடும் எங்களுடைய யக்ஞக்கர்த்தாக்களுக்கு நான் கூறிய மொழியைப் பூர்த்தி செய்யவும்.

3. அசுரர்களோடு போர் செய்யுங்கால் தேவர்களிடம் சிரத்தையிருந்தது. அத்தகைய சிரத்தையுள்ளவர்களும், சுகத்தை விரும்புபவர்களுமான என்னுடைய யக்ஞக்கர்த்தாக்களுக்கு நான் கூறிய மொழியைப் பூர்த்தி செய்யவும்.

4. தேவர்களும், துதிப்பவர்களும், வாயுவால் பாலிக்கப்படுபவர்களும் சிரத்தையை வேண்டுகிறார்கள். அவர்கள் இருதய சங்கற்பத்தோடு சிரத்தையைப் போற்றுகிறார்கள். சிரத்தையால் ஒருவன் செல்வத்தை அடைகிறான்.

5. நாங்கள் சிரத்தையைக் காலையிலே, மீண்டும் பகலிலே, சூரியனுடைய அத்தமத்திலே அழைக்கிறோம். சிரத்தையே! எங்களை இந்த உலகத்திலே சிரத்தைப் படுத்தவும்.

10383

## 152. இந்திரன்

### 989. பரத்வாஜ வம்சசாஸன்

1. சாஸனான நான் இங்ஙனம் இந்திரனைத் துதிக்கிறேன். நீ மகானாயிருக்கிறாய். நீ பகைவர்களை அழிப்பவன். நீ அற்புதன். உன்னுடைய நண்பன் கொல்லப்படான். எப்பொழுதும் வெல்லப்படான்.

2. சுவஸ்தியைத் தருபவனும், மனிதர்களின் தலைவனும், விருத்திரனைக் கொல்பவனும், போர் வீரனும், தாழ்த்துபவனும், வர்ஷிப்பவனும், ஸோமத்தைப் பருகுபவனும், அபயத்தைச் செய்பவனுமான இந்திரன் எங்கள் முகப்பில் வருவானாக.

3. இந்திரனே! அரக்கர்களைக் கொல்லவும். பகைவர்களை அழிக்கவும். விருத்திரனுடைய தாடைகளை உடைக்கவும். இந்திரனே! விருத்திரனைக் கொல்லும் நீ, எங்கள் சுமித்திரனுடைய கோபத்தை விலக்கவும்.

4. இந்திரனே! எங்கள் பகைவர்களை அழிக்கவும். எங்களை எதிர்க்க விரும்பும் மனிதர்களை வீழ்த்தவும். எங்களைத் துன்புறுத்த விரும்புபவனைத் தாழ்ந்த தமத்திலே செலுத்தவும்.

5. எங்களை வெறுப்பவனுடைய மனத்தை மாய்க்கவும். எங்களை ஜயிக்க விரும்புபவனுடைய ஆயுதத்தை விலக்கவும். அவனுடைய கோபத்திலிருந்து எங்களைப் பாலிக்கவும். உத்தம சுகத்தை அளிக்கவும். பகைவனுடைய படையை விலக்கவும். 10388

## 153 இந்திரன்

### 990. தேவ பத்தினிகள் - இந்திரனுடைய தாய்மார்கள்

1. தங்கள் கடமைகளைப் பூர்தது செய்ய விரும்பும் இந்திரனுடைய தாய்மார்கள், அவன் பிறநதவுடன் அவனை அணுகிப் போற்றினார்கள். அவனுடைய சுவீரியத்தைப் பகிர்ந்து கொண்டார்கள்.



2. இந்திரனே! நீ ஜயந்தரும் சக்தியிலிருந்தும் தீரத்திலிருந்தும் பிறந்தாய். வர்ஷிப்பவனே! நீ வர்ஷிக்கிறாய்.

3. இந்திரனே! நீ விருத்திரனைக் கொல்பவன். நீ வானத்தைப் பரத்தினாய். நீ உன்னுடைய பலத்தால் சோதியை ஏந்தினாய்.

4. இந்திரனே! உன்னுடைய மிக்கப் பிரியமான துதியாருகமான வச்சிரத்தை உன் வலிமையால் கூர் செய்து கைகளிலே ஏந்துகிறாய்.

5. இந்திரனே! நீ உன் தீரத்தால் எல்லாப் பிராணிகளையும் ஜயிக்கிறாய். நீ எல்லா உலகங்களிலும் பரவினாய். 10393

## 154. புதியசீவன்

### 991. யமி – விவஸ்வதனின் புதல்வி

1. ஸோமம் சிலருக்கு சுத்தஞ் செய்யப்படுகிறது. மற்றவர்கள் நெய்யை ஏற்றுக் கொள்கிறார்கள். நீ, எவருக்காகத் தேன் பாய்கிறதோ அவர்களிடம் செல்லவும்.

2. தபத்தால் எதிர்ப்பற்றவர்களிடம், தபத்தால் சோதிக்குச் சென்றவர்களிடம், மகத்தான தபத்தைச் செய்தவர்களிடம் இறந்தவனே! நீ செல்லவும்.

3. போர்களிலே போராடி தங்கள் சீவன்களை அளித்த சூரர்களிடம், ஆயிரந்தட்சிணைகளை அளித்தவர்களிடம் நீ செல்லவும்.

4. யமனே! சத்தியத்தைப் பற்றிய பழையவர்களும், சத்தியத்தைப் பேசுபவர்களும், சத்தியத்தைச் செழிப்பிப்பவர்களும், தவத்தோடு இருப்பவர்களுமான பிதாக்களிடம் செல்லவும்.

5. யமனே! சூரியனைப் பாலிப்பவர்களும், ஆயிரங்களின் தலைவர்களும், அறிஞர்களும், தவத்தோடிருப்பவர்களும், தவத்திலிருந்து தோன்றியவர்களுமான ரிஷிகளிடம் செல்லவும். 10398

## 155. பலதேவர்கள்

### 992. சிரிம்பிடன் – பரத்வாஜனுடைய புதல்வன்

அலட்சிமிக்கனம்

1. கருமியே! கீச்சுருபவளே! ஊனுங்கியே! எப்பொழுதும் நிந்திப்பவளே! நீ உன்னுடைய மலைக்குச் செல்லவும். நாங்கள் சிரிம்பிடனுடைய இந்த வீரச் செயல்களால் உன்னை விலக்குகிறோம்.

பிரம்மணஸ்பதி

2. கருக்களைச் சிதைப்பவளான அவள் இந்த உலகத்திலிருந்து நீக்கப்படுவாளாக. அந்த உலகத்திலிருந்து விரட்டப்படுவாளாக. கூரிய கொம்புள்ள பிரம்மணஸ்பதியே! நீ சென்று அராயியைத் துரத்து.

3. துட்டையே! கொல்லக் கடினமாயிருக்கும் நீ, கடற்கரையிலே மனிதனில்லாமல் மிதந்து வரும் கட்டையிலேறி தூரக்கரைக்குச் சென்றுவிடவும்.

அலட்சிமிக்கனம்

4. சுருதியற்ற சத்தங்களை எழுப்புபவர்களும், துரிதமாய்ச் செல்பவர்களுமான நீங்கள் சென்றவுடன், இந்திரனுடைய பகைவர்கள் எல்லாம் அழிக்கப்பட்டார்கள். அவர்கள் நீர்க்குமிழிகளைப்போல் மறைந்தார்கள்.

விசுவேதேவர்கள்

5. இந்த விசுவேதேவர்கள் திருடப்பட்ட பசுக்களை மீட்டு வந்தார்கள். அவர்கள் அக்கினியை ஸ்தாபித்தார்கள். அவர்கள் தேவர்களுக்கு உணவைச் செய்தார்கள். எவன் விசுவேதேவர்களை ஜயிப்பான்? 10403

## 156. அக்கினி

### 993. அக்கினியின் புதல்வனான கேது

1. எங்களுடைய யக்ஞங்கள் போரிலே துரித குதிரையைப் போல் இங்கு அக்கினியைப் பிரேரிக்க. நாங்கள் அவனால் எல்லா செல்வத்தையும் ஜயிப்போமாக.



2. அக்கினியே! நாங்கள் எந்தப் படையால் உன் பாலனத்தோடு பசுக்களை அடைவோமோ, அந்தப் படையை நாங்கள் செல்வத்தைச் சம்பாதிக்கச் செலுத்தவும்.

3. அக்கினியே! பசுக்களும் புரவிகளுமுள்ள பரந்த பருத்த செல்வத்தை எங்களுக்கு ஏந்தி வரவும். மழையால் வானைத் தெளிக்கவும். பனியை விலக்கவும்.

4. அக்கினியே! சனங்களுக்கு ஒளியை அளித்துக் கொண்டு வானிலே அழியாத நட்சத்திரமான சூரியனை உயர்த்தினாய்.

5. அக்கினியே! நீ சனங்களுடைய மிக்க அன்புள்ளதும், மிக்க மேலான துவஜனுயுமிருக்கிறாய். துதிப்பவனுக்கு உணவை அளிப்பவனாகி நீ எங்கள் துதியை அறிந்து கொள்ளவும். 10408

## 157. விசுவேதேவர்கள்

### 994. புவன ஆப்தியன் அல்லது ஸாதன புவனன்

1. நாங்கள் இந்திரனோடும் விசுவேதேவர்களோடும் சேர்ந்து இந்த உலகங்களையெல்லாம் வசப்படுத்துவோம்.

2. இந்திரன் ஆதித்தியர்களோடு எங்கள் யக்ஞத்தையும், எங்கள் தேகங்களையும், எங்கள் பிரஜைகளையும் சித்தப்படுத்துவானாக.

3. ஆதித்தியர்களோடும் மருத்துக்களோடுமுள்ள இந்திரன் எங்கள் தேகங்களைப் பாலிப்பவனாயிருப்பானாக.

4. தேவர்கள் அசுரர்களைக் கொன்று தங்கள் இடத்துக்குச் சென்றவுடன் தேவர்கள் தங்கள் தேவத்தன்மையைப் பாலிப்பவர்களாயிருந்தார்கள்.

5. வழிபடுபவர்கள் தங்கள் திவ்யச் செயல்களால் தேவர்களை மேம்படுத்த துதியையளித்த போது தங்களைச் சுற்றிலும் வேகமாய்ப் பெய்யும் மழையைக் கண்டார்கள். 10413

## 158. சூரியன்

### 995. கண்—சூரியனுடைய புதல்வன்

1. சூரியன் எங்களை சோதியில் வசிக்கும் பகைவர்களிடமிருந்து, வாயு, வானில் வசிக்கும் பகைவர்களிடமிருந்து, அக்கினி புவியிலிருக்கும் பகைவர்களிடமிருந்து பாலிப்பார்களாக.

2. ஸவிதாவே! நூறு யக்ஞங்களுக்கு ஒப்பான சுவாலையுள்ள நீ, எங்கள் துதிகளால் போற்றப்படவும், பகைவர்களால் செலுத்தப்படும் படைகளிலிருந்து எங்களைப் பாலிக்கவும்.

3. தேவனான ஸவிதா எங்களுக்குக் காட்சியை அளிப்பானாக. பர்வதன் எங்களுக்குக் கண்ணை—காட்சியையளிப்பானாக. தாதா எங்களுக்குக் காட்சியையளிப்பானாக.

4. சூரியனே! எங்கள் கண்களுக்குக் காட்சியையளிக்கவும், எங்கள் தேகங்களை ஒளிப்படுத்த காட்சியையளிக்கவும். நாங்கள் இந்த உலகத்தை அறிந்து நோக்குவோமாக.

5. சூரியனே! நாங்கள் அனைவரையும் மிக்கப் பிரகாசமாய்ப் பார்க்கும் உன்னை நாங்கள் காண்பவர்களாயிருப்போமாக மானிடர்களால் பார்க்கப்படும் பொருள்களை நாங்கள் பார்ப்போமாக. 10418

## 159. பௌலோமி ஸசி

### 996. ஸசி

1. சூரியன் உதயமானான். என்னுடைய சௌபாக்கியம் உதித்தது. நான் இதை அறிந்து ஜயிப்பவளாக என்னுடைய கணவனை எனக்கே உரிமை செய்து கொண்டேன்.

2. நான் துவஜம். நான் தலைவி. நான் உக்கிரமாய்ப் பேசினாலும் கணவனை என்னிடம் பிரியமாகப் பேசச் செய்வேன். நான் ஜயிப்பவள். என் கணவன் எனக்குப் பணிந்து என்னிஷ்டம் போல் நடப்பான்.



3. என் புதல்வர்கள் பகைவர்களையழிப்பவர்கள். என் புதல்வி பட்டமகிஷி. நான் ஜயிப்பவள். என் புகழ் என் கணவனுக்கு மேன்மையாயிருக்கிறது.

4. தேவர்களே! எந்த அவியால் இந்திரன் கர்த்தாவாகி, புகழுள்ளவனும் உத்தமனுமாகிருனே அத்தகைய இந்த அவி அளிக்கப்படுகிறது. நான் என்னைச் சக்களத்திகளிடமிருந்து விடுவித்துக்கொண்டேன்.

5. நான் சக்களத்தியை அழிப்பவள். தனிப் பத்தினி. ஜயமுள்ளவள். ஜயிப்பவள். நான் மற்றவர்களுடைய புகழை மெலிந்த ஸ்திரீகளின் செல்வத்தைப் போல் பறித்தேன்.

6. இந்த வீரனையும் அவனுடைய சனங்களையும் ஆட்சி செய்ய, ஜயமுள்ள நான், என்னுடைய இந்த சக்களத்திகளை ஜயித்தேன். 10424

## 160. இந்திரன்

### 997. விசுவாமித்திரனுடைய புதல்வன்

1. இந்திரனே! யக்ஞ உணவோடு சேர்க்கப்பட்டுள்ள இந்தத் தீவிர ஸோம ரஸத்தைப் பருகவும். உன்னுடைய துரிதமான தேரிலே இணைக்கப்பட்டுள்ள குதிரைகளை இங்கு அவிழ்த்துவிடவும். இந்திரனே! வேறு எவனும் உன்னைத் தாமதப்படுத்தாமலிருக்க. இந்த ஸோம ரஸங்கள் உனக்கே இயங்குகின்றன.

2. பொழிந்துள்ள ஸோம ரஸங்கள் உனக்கே. பொழியப்படுபவையும் உனக்கே. இந்தத் துதிகள் உன்னையே அழைக்கின்றன. அனைத்தையும் அறியும் நீ, இந்திரனே! நீ இந்த யக்ஞத்தில் இன்பமாகி இங்கு ஸோமத்தைப் பருகவும்.

3. விரும்பும் மனத்தோடும், பூரண இதயத்தோடும், ஸோமபானத்தையளிக்கும் தேவ பக்தனுடைய பசுக்களை

இந்திரன் அழிக்காமலிருக்கிறான். அவனுக்கு அழகாயும் மேன்மையாயுமுள்ள செல்வத்தையளிக்கிறான்.

4. அவன் ஸோமத்தைத் தரும் செல்வனைக் கவனிக்கிறான். செல்வமுள்ள அவன் தன் கைகளிலே அவனை ஏந்துகிறான். அவன் கேட்காமலேயே பிரம்மத் துவேஷியைக் கொல்லுகிறான்.

5. இந்திரனே! பசுக்களையும் புரவிகளையும் உணவையும் விரும்பும் நாங்கள், நீ வர உன்னை அழைக்கிறோம். இந்திரனே! உன்னுடைய புதிய ஸுமதியில் விளங்கும் நாங்கள் சுகத்தைத் தருபவனான உன்னை அழைக்கிறோம். 10429

# 161. இந்திரன்

## 998. பிரஜாபதியின் புதல்வனான யட்சமநாசனன்

1. நான், அவியால் நீ சீவிக்க, மறைந்திருக்கும் யட்சமத்திலிருந்தும் இராஜ யக்ஷ்மத்திலிருந்தும் உன்னை நீக்குகிறேன். பிடிப்பவள் இவனைப் பிடித்திருந்தால் இந்திராக்கினிகளான நீங்கள் இவனை விடுவிப்பீர்களாக.

2. இவன் அழியும் உயிரோடிருந்தாலும் அல்லது அழிந்திருந்தாலும் அல்லது மிருத்யுவினருகிலிருந்தாலும், நான் இவனை நிருதியின் அங்கத்திலிருந்து மீட்கிறேன். நான் இவன் நூறு வருடங்கள் வாழ இவனை வலிமைப் படுத்தியிருக்கிறேன்.

3. இந்திரன் அவனை எல்லாத் துன்பங்களுக்கப்பால் நூறு வருடங்கள் கடந்த ஆயிரங் கண்கள் உள்ளதும், நூறு வருடங்களை அளிப்பதுமான அவியால் நான் நூறு வருடங்களுக்கு உயிரையளித்து அவனை மீட்டேன்.

4. உன் பலத்தை மீண்டும் அடைந்து, நீ நூறு சரத்துக்கள், நூறு ஏமந்தங்கள், நூறு வசந்தங்கள் சீவிக்கவும். இந்திரனும், அக்கினியும், ஸவிதாவும், பிரகஸ்பதியும் இந்த நூறு வயதையளிக்கப் போற்றப்பட்டு எங்களுக்கு இந்த மனிதனை நூறு வருடங்கள் அளிப்பார்களாக.



5. நான் உன்னை மீட்டேன். நான் உன்னைக் கண்டேன். மீண்டும் இளைஞனாயிருக்கும் நீ, மறுபடியும் திரும்பி வரவும். ஸர்வாங்கனான உனக்கு எல்லாப் புலன்களையும் பூர்ணாயுளையும் பெற்றேன். 10434

# 162. கருப்பாலனம்

## 999. பிரம்மனின் புதல்வனான இரட்சோஹனன்

1. அரக்கர்களைக் கொல்லும் அக்கினி எங்கள் மந்திரத்தோடு ஐக்கியமாகி உன்னுடைய கருவை நோயின் வடிவமாக எதிர்ப்பவனும், உன்னுடைய கருப்பத்தைத் துர்நாமம் என்னும் நோயால் பீடிப்பவனுமான அரக்கனை நீக்குவானாக.

2. அக்கினி எங்கள் மந்திரத்தோடு ஐக்கியமாகி உன் கருவை நோயாகச் சிதைப்பவனும், துர்நாமம் என்னும் பிணியால் கருப்பாசயத்தை எதிர்ப்பவனுமான நரமாமிச பட்சகனை அழிப்பானாக.

3. நாங்கள் இங்கிருந்து பாயும் ரேதஸையும், நிலைக்கும் கருவையும், சலனச் சினையையும் அழிப்பவனும், பிறந்தவுடன் குழந்தையை அழிக்க விரும்புபவனுமான அரக்கனை அழிப்போமாக.

4. ஊர்களைப் பிரிப்பவனும், தம்பதிகளின் நடுவில் படுப்பவனும், அங்கத்தினுள் நுழைந்து ரேதஸைப் புசிப்பவனுமான அரக்கனை இங்கிருந்து நாங்கள் அழிக்கிறோம்.

5. நாங்கள் இங்கிருந்து சகோதரனைப்போலும், கணவனைப்போலும், காதலனைப்போலும் உன்னிடம் அணுகி உன் குழந்தையை அழிக்க விரும்பும் அரக்கனை அழிப்போமாக.

6. நாங்கள் இங்கிருந்து உன்னைத் தூக்கத்தாலும், இருட்டாலும் வஞ்சித்து அணுகி உன் குழந்தையை அழிக்க விரும்பும் அரக்கனை அழிப்போமாக. 10440

## 163. யட்சமநாசனம்

### 1000. விவிரிஹனன்—கசியபன்

1. நான் உன் கண்களிலிருந்தும், உன் நாசியிலிருந்தும், உன் செவிகளிலிருந்தும், உன் மோவாயிலிருந்தும், உன் தலையிலிருந்தும், உன் மூளையிலிருந்தும், உன் நாக்கிலிருந்தும் யட்சமத்தை நீக்குகிறேன்.

2. நான் உன் கழுத்திலிருந்தும், உன் தசைநார்களிலிருந்தும், உன் சந்திகளிலிருந்தும், உன் மேற்கைகளிலிருந்தும், உன் தோள்களிலிருந்தும், உன் முன் கைகளிலிருந்தும் க்ஷயத்தை நீக்குகிறேன்.

3. நான் உன் அந்திரங்களிலிருந்தும், உன் குதங்களிலிருந்தும், உன் இருதயத்திலிருந்தும், உன் நீரச் செயல்களிலிருந்தும், உன் கல்லீரலிருந்தும், ஈரல்களிலிருந்தும் க்ஷயத்தை நீக்குகிறேன்.

4. நான் உன் தொடைகளிலிருந்தும், உன் முழந்தாள்களிலிருந்தும், உன் குதிகால்களிலிருந்தும், உன் கால் விரல்களிலிருந்தும், உன் இடைகளிலிருந்தும், உன் நிதம்பங்களிலிருந்தும், உன் மர்ம அங்கங்களிலிருந்தும் க்ஷயத்தை நீக்குகிறேன்.

5. நான் உன் நீர் நீக்கும் வழியிலிருந்தும், உன் கலாசயத்திலிருந்தும், உன் உரோமத்திலிருந்தும், உன் நகங்களிலிருந்தும், உன் முழு தேகத்திலிருந்தும் நோயை நீக்குகிறேன்.

6. நான் உன் ஒவ்வொரு அங்கத்திலிருந்தும், உன் ஒவ்வொரு உரோமத்திலிருந்தும், அது தோன்றும் ஒவ்வொரு சந்தியிலிருந்தும் யட்சமத்தை நீக்குகிறேன். 10446

## 164. தீக்கனவுகள்

### 1001. பிரசேதா ஆங்கிரஸன்

1. மனத்தின் பதியே! நீ போகவும். நீ நீங்கவும். நீ வெகு தூரத்துக்குச் செல்லவும். நிருத்தியை இங்கிருந்து தூரத்திலே காணவும். சீவிக்கும் மனிதனுடைய மனம் பலவிதமாயிருக்கிறது.



2. மங்களமான பயனையே மனிதர்கள் விரும்புகிறார்கள். அவர்கள் மங்களமான செல்வத்தை அடைகிறார்கள். நான் வைவஸ்தனின் மங்கள தரிசனத்தை விரும்புகிறேன். சீவிக்கும் மனிதனுடைய மனம் பல விஷயங்களில் செல்லுகிறது.

3. நாங்கள் தூக்கத்திலோ விழிப்பிலோ மற்றவர்களிடம் பேசுவதால் மற்றவர்களைப் பழித்துப் பேசுவதால் மற்றவர்களைப் பற்றித் தீமையோடு பேசுவதால் எந்தப் பாவத்தைச் செய்திருந்தாலும் அக்கினி அந்த நலமற்ற பாவங்களையெல்லாம் எங்களிடமிருந்து நீக்குவானாக.

4. இந்திரனே! பிரம்மணஸ்பதியே! நாங்கள் செய்து வரும் துரோகச் செயல்களிலிருந்து எங்களைப் பாலியுங்கள். அங்கிரஸர்களின் பிரசேதஸர்கள் பகைவர்களின் துன்பத்திலிருந்து எங்களைப் பாலிப்பார்களாக.

5. நாங்கள் இன்று ஜயித்தோம். நாங்கள் ஜயித்தோம். நாங்கள் பாவத்திலிருந்து பிரிந்தோம். எங்களுக்குத் தூக்கத்திலோ விழிப்பிலோ தோன்றும் பாவ சங்கற்பங்கள் எங்களால் வெறுக்கப்படுபவனிடம் செலுத்தப்படுக. எங்களை வெறுப்பவனிடம் செலுத்தப்படுக. 10451

## 165. விசுவேதேவர்கள்

### 1002. நிருதியின் புதல்வனான கபோதன்

1. தேவர்களே! நிருதியின் தூதனான கபோதன்—புறு—எந்தத் தீமையை விரும்பி இங்கு வந்திருந்தாலும் நாம் அதைப் போற்றுவோமாக. நாம் பிராயச்சித்தத்தைச் செய்வோமாக. எங்கள் ஆட்களுக்கும் கால்நடைகளுக்கும் சுகம் தோன்றுக.

2. தேவர்களே! எங்கள் மனைகளுக்கு அனுப்பப்பட்ட பறவையான புறு சுகத்தைத் தருவதாகுக. விப்பிர

ஞன அக்கினி எங்கள் அவியால் இன்புறுவானாக. சிறகுகளில் ஏந்தப்படும் ஆயுதம் எங்களிடமிருந்து விலகுக.

3. சிறகுப் படை புறா எங்களைத் துன்புறுத்தாமலிருக்க. அது அக்கினியின் ஸ்தானமான அரணிக் கட்டையின் மீது அமருகிறது. எங்கள் பசுக்களுக்கும் சனங்களுக்கும் சுகம் தோன்றுக. தேவர்களே! புறா இந்த மனையிலே எங்களைத் துன்புறுத்தாமலிருக்க.

4. ஆந்தை வீணாகவே கத்துகிறது. ஏனெனில் புறா அக்கினியின் அருகே அமர்ந்திருக்கிறான். இந்த வணக்கம் புறாவைத் தூதனாக அனுப்பிய மிருத்யுவான யமனுக்கு அளிக்கப்படுகிறது.

5. தேவர்களே! நீங்கள் எங்கள் துதியால் துதிக்கப்பட்டு தூரத்துவதற்குரிய புறாவைத் துரத்துங்கள். எங்கள் அவியால் மகிழ்ந்து எங்கள் தீமைகளையெல்லாம் விலக்கி எங்களுக்குப் பசுக்களையும் உணவையும் அளியுங்கள். துரிதமான புறா எங்கள் உணவை விட்டு விட்டுப் பறந்து செல்க. 10456

## 166. ஸபத்னக்னம்

### 1003. விராஜனின் புதல்வன் ரிஷபன் அல்லது சக்வரனின் புதல்வன்

1. இந்திரனே! எனக்குச் சமமாயுள்ளவர்களின் நடுவே என்னை விருஷபனாகச் செய்யவும். என்னை எதிரிகளை ஜயிப்பவனாகவும், என் பகைவர்களை அழிப்பவனாகவும், அரசனாகவும், பசுக்களின் தலைவனாகவும் செய்யவும்.

2. நான் இந்திரனைப் போல் என் பகைவர்களை அழிப்பவன். துன்பமாகாதவன். ஊறுபடாதவன். என்னுடைய இந்தப் பகைவர்கள் எல்லாம் என் கால்களின் கீழே மிதிக்கப்படுவார்களாக.

3. நான் இங்கு உங்களை நாணால் வில்லின் இரு முனைகளைப் போல் கட்டுகிறேன். வாசஸ்பதியே! அவர்கள் என்னோடு தாழ்ந்து பேச அவர்களை அடக்கவும்.



4. நான் விசுவகர்ம வலிமையோடு ஜயிப்பவனாய் வந்திருக்கிறேன். நான் உங்களுடைய சித்தங்களையும், உங்களுடைய விரதங்களையும், சங்கிராமத்தையும் வசப்படுத்தினேன்.

5. நான் உங்களுடைய யோகத்தையும் க்ஷேமத்தையும் அடைந்து உத்தமனாயிருப்பேனாக. நான் உன் தலைவர்களின் மேலே நடக்கிறேன். என் கால்களின் கீழே இருந்து என்னிடம் பேசுங்கள். சலத்தின் கீழிருந்து தவளைகளைப் போல் பேசுங்கள். 10461

## 167. இந்திரன்

### 1004. விசுவாமித்திரனும் ஜமதக்கினியும்

1. இந்திரனே! உனக்கு இந்த ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. கலசத்திலுள்ள ஸோமம் உன் அதீனத்திலிருக்கிறது. எங்களுக்குப் பல மக்கட்களோடு செல்வங்களை அளிக்கவும். நீ தவத்தைச் செய்து சுவர்க்கத்தை ஜயித்தாய்.

2. நாங்கள் யக்ஞ உணவால் மகிழ்பவனும், சுவர்க்கத்தை ஜயிப்பவனும், மகானும், சக்தனுமான இந்திரனை ஸோமங்களுக்கு அழைக்கிறோம். எங்களுடைய இந்த யக்ஞத்தைத் தெரிந்து கொள்ளவும். இங்கே வரவும். நாங்கள் செல்வத்துக்காகப் பகைவர்களை ஜயிக்கும் மகவானான இந்திரனை அழைக்கிறோம்.

3. அரசனான ஸோமனுடையவும் வருணனுடையவும் ஆக்ஞையிலும், பிரகஸ்பதியினுடைய அநுமதியினுடைய காப்பிலிருப்பவனுமான நான், உன்னைத் துதிப்பதில் ஊக்கமாயிருக்கிறேன். மகவானே! தாதாவே! விதாதாவே! நான் கலசங்களை அனுபவித்தேன்.

4. உன்னால் பிரேரிக்கப்பட்ட நான் செய்யப்படும் யக்ஞத்திலே அவியைப் பக்குவப்படுத்தினேன். வழிபடும் முதல்வனாயுள்ள நான் இந்த ஸ்தோமத்தைக் கூறு

கிறேன். இந்திரன் பேசுகிறான். விசுவாமித்திரனே! ஜமதக்கினியே! உங்கள் மனைகளிலே ஸோமம் பொழியப் படுங்கால் நான் வழங்கும் செல்வத்தோடு வரும்போது போற்றுங்கள். 10465

## 168. வாயு

### 1005. அநிலன் — வாதவம்சம்

1. நான் உக்கிரமாயுள்ள வாயுவின் மகிமையைக் கூறுகிறேன். அவனுடைய கோஷம் எழுந்து இடித்துப் புடைத்துப் பரவுகிறது. அவன் வானிலே பரவி திசைகளைத் தங்கப்படுத்துகிறான். அவன் புவியின் புழுதியை எழுப்பி அதை எங்கும் பரத்திச் செல்லுகிறான்.

2. காற்றைக் காண கனத்த பொருள்கள் சலனமாகின்றன. போருக்குச் செல்பவன்போல் பெண் குதிரைகள் அவனிடம் வருகின்றன. இந்த எல்லாப் புவனத்தின் அரசனும் தேவனுமான அவன் — காற்று — அவற்றோடு சேர்ந்து ஒரே தேரிலே முன்னேறுகிறான்.

3. வானின் வழிகளிலே செல்லும் ஒரு தினங்கூட ஓய்வெடுக்காமலிருக்கிறான். சலங்களின் நண்பனும், முதல் பிறந்தவனும், சத்தியத்தைக் கூறுபவனுமான அவன் எங்கிருந்து தோன்றினான்? எந்த இடத்திலிருந்து வந்தான்?

4. தேவர்களின் ஆத்மாவும், புவனத்தின் கருவுமான இந்தத் தேவன் தன்னிஷ்டம்போல் சலனமாகிறான். அவனுடைய கோஷங்கள் கேட்கின்றன. அவனுடைய உருவம் காணவில்லை. நாம் அந்த வாயுவை அவியோடு போற்றுவோமாக 10469

## 169. பசுக்கள்

### 1006. சபரன் காட்சீவநன்

1. சுகப்படுத்தும் காற்று, பசுக்கள் மீது வீசுக. அவை இரஸமுள்ள புற்களைப் புசிக்க. அவை புட்டிப்



படுத்துபவையும் சீவனை ஏந்துபவையுமான சலங்களைப் பருகுக. உருத்திரனே! கால்களோடு உணவை — பாலையளிக்கும் பசுவை — சுகப்படுத்தவும்.

2. பர்ஜன்யனே! யக்ஞத்தால் எந்தப் பசுக்களின் நாமங்களை அக்கினி அறிகிறானோ, இவ்வுலகத்திலே தவத்தாலே எந்தப் பசுக்களை அங்கிரஸர்கள் சிருஷ்டித்தார்களோ அந்த ஒப்பான வடிவங்கள் உள்ள, பல ரூபங்களுள்ள, ஒரே உருவங்களுள்ள பசுக்களுக்கு மகத்தான பாலனத்தை அளிக்கவும்.

3. இந்திரனே! எந்தப் பசுக்கள் தேவர்களுக்குத் தேகங்களை அளிக்கின்றனவோ, எவற்றின் தன்மைகளையெல்லாம் ஸோமன் அறிகிறானோ, எவை பாலால் எங்களைப் புஷ்டி செய்கின்றனவோ, எவை கன்றுகளோடு இருக்கின்றனவோ, அப்பசுக்களை எங்கள் கோசாலைக்குச் செலுத்தவும்.

4. பிரஜாபதி எல்லாத் தேவர்களோடும், பிதாக்களோடும் ஒரு மனமுள்ளவனாகி எனக்கு இந்தக் கோக்களைத் தந்து எங்களுடைய கோசாலைக்கு மங்களகரமான பசுக்களைச் செலுத்தினான். அவை ஈனும் கன்றுகளுக்கும் நாங்கள் உரியவர்களாவோமாக. 10473

## 170. சூரியன்

### 1007. சூரியனுடைய புதல்வனான விப்ராஜன்

1. காற்றினால் பிரேரிக்கப்பட்டு தன் பிரஜைகளை சுயமாகவே பாலிப்பவனும், அவர்களைப் புட்டி செய்து பல இடங்களில் பிரகாசிப்பவனும், மிக்கத் துலங்குபவனுமான சூரியன் யக்ஞத்தின் தலைவனுக்கு இடையறாமல் ஆயுளை அளிப்பவனாய் மிக்க இனிய ஸோமரஸத்தைப் பருகுவானாக.

2. மிக்கப் பிரகாசிப்பவனும், மகத்தாயிருப்பவனும், புட்டிக்கப்பட்டவனும், மிக்க உணவைத் தருபவனும்

ஒளி உலகைத் தாங்கும் தருமத்தில் நிலைக்கப்பட்ட சத்தியனும், விருத்திரர்களைக் கொல்பவனும், தஸ்யுக்களை மிக்க அழிப்பவனும், பகைவர்களையும் அசுரர்களையும் நீக்கு பவனுமுள்ள சோதி பிறந்தான்.

3. சோதிகளின் நடுவே மிக்க மேன்மையாயிருப் பதும், மிக்கச் சிறந்ததாயுமாயுள்ள இந்த சோதி விசு-வத்தை ஜயிப்பது எனவும், செல்வத்தை ஜயிப்பது எனவும், மகத்தானது எனவும் கூறப்படுகிறது. விசு-வத்தை ஒளிப்படுத்துபவனும், பிரகாசிப்பவனும், மகானுமான சூரியன் அனைவரும் காண தன் பரந்த பலத்தையும், அழியாத காந்தியையும் புலப்படுத்துகிறான்.

4. உன் சோதியால் உலகத்தையெல்லாம் ஒளிப் படுத்தி, நீ வானின் ஒளி மண்டலத்துக்குச் சென்றாய். விசுவேதேவர்களை அடைந்திருப்பவனும், விசுவ செயல்களை நடத்துபவனுமான உன்னால் இந்த எல்லாப் புவனங்களும் போஷிக்கப்படுகின்றன. 10477

## 171. இந்திரன்

### 1008. இடோபார்கவன்

1. இந்திரனே! அவிகளை அளித்த இடனுடைய இந்தத் தேரை நீ பாலித்தாய். ஸோமத்தை அளிக்கும் என் அழைப்பைக் கேட்கவும்.

2. நீ நடுங்கும் யக்ஞத்தின் தலையை அவனுடைய சருமத்திலிருந்து நீக்கினாய். ஸோமமளிக்கும் என்னுடைய மனைக்கு வா.

3. இந்திரனே! நீ மானிடனான வேன்யனை துதியை விரும்பும் ஆஸ்ரபுத்னனுக்குப் பல தடவைகள் விடுவித்தாய்.

4. இந்திரனே! தேவர்களிடமிருந்து மறைந்திருப்பவனும், தேவர்களுக்குப் பிரியமாயிருப்பவனும், பின்னால் தயங்கியிருப்பவனுமான மாலை சூரியனை முன்னே — பூர்வத்திலே — செலுத்தவும். 10481



## 172. உஷை

### 1009. ஸம்வர்த்த ஆங்கிரஸன்

1. விரும்பத் தகுந்த எழிலோடு வா. பசுக்கள் பூரண ஆபீனங்களோடு அணுகி உன் வழியைப் பின்பற்றுகின்றன.

2. உஷையே! பிரியமான எண்ணங்களோடு வா. உத்தம ஈகையர்களால் மிக்கப் போற்றப்பட்டு யக்ஞத்தைப் பூர்த்தி செய்யும் தருணம் இது.

3. உணவை ஏந்துபவர்களை சிலர்களான நாங்கள், உஷையின் முன்னே யக்ஞத்தின் இழையைப் பரத்தி அவனைப் போற்றுகிறோம்.

4. உஷை தன் சகோதரியின் –இரவின்– இருளை நீக்குகிறாள். அவளுடைய பிறப்பிக்கும் அன்பு அவளுடைய தேரை இணைக்கிறது. 10485

## 173. அரசன்

### 1010. துருவன் — அங்கிரச வம்சம்

1. நீ எங்களோடு இருக்கவும். நான் உன்னைத் தேர்ந்தெடுத்துள்ளேன். உறுதியாக இருக்கவும். அசையாமலிருக்கவும். எல்லா மனிதர்களும் உன்னை விரும்புவார்களாக. உன்னுடைய அரசு விழாமலிருக்கவும்.

2. நீ இங்கும் இருப்பாயாக. விழாதே மலையைப் போல் அசைக்கக் கூடாததாக இருக்கவும். இந்திரனைப் போல் உறுதியாக இருக்கவும். உன்னுடைய அரசை உன் பிடிக்குள் வைத்துக்கொள்.

3. இம் மனிதனில் இந்திரன் ஸ்தாபிக்கப்பட்டான். உறுதியான ரிஷித்தன்மையால் அது பலப்படுத்தப் பட்டது. ஸோமனும் பிரம்மணஸ்பதியும் அவன் மீது மங்களங்களைப் பொழிவார்களாக.

4. சோதியும் புவியும் உறுதியானவை. இம் மலைகளும் உறுதியானவை. இவ்வுயிர்கள் எல்லாம் நிலையானவை. மனிதர்களின் இந்த அரசனும் நிலையானவன்.

5. அரசனான வருணனும், தேவனான பிரகஸ்பதியும், இந்திரனும், அக்கினியும் உங்களுடைய நிலையான அரசை உறுதியாக வைத்துக்கொள்ளுங்கள்.

6. நாங்கள் திரமான அவியால் திரமான ஸோமத்தைப் பயிலுவோம். இந்திரன் உன்னுடைய பிரசைகளை உனக்கே வரி செலுத்துபவர்களாக இயக்குவானாக. 10491

# 174. அரசன்

## 1011. அபிவர்த்தன் — அங்கிரஸ வம்சம்

1. போரிலே எந்த ஜயிக்கும் அவியால் இந்திரன் ஜயத்தை அடைந்தானோ, அந்த அவியால், பிரமணஸ்பதியே! நாங்கள் அரசாட்சியை அடைவோமாக.

2. எங்களை எதிர்ப்பவர்களையும், பகைவர்களையும் ஜயித்து எங்களை எதிர்ப்பவனையும் கோபப்படுத்துபவனையும் தடுக்கவும்.

3. தேவனான ஸவிதாவும் ஸோமனும் உன்னை அரசனாக ஸ்தாபிப்பார்களாக. புவியிலுள்ள அனைவரும் நீ தலைவனாயிருக்க உன்னை ஸ்தாபிப்பார்களாக.

4. இந்திரன் எந்த அவியால் வீரச்செயலை நடத்துபவனும், புகழுள்ளவனும், உத்தமனுமானானோ அந்த அவியை, தேவர்களே! நான் உங்களுக்களித்தேன். நான் பகைவரில்லாமலாவேனாக.

5. நான் இந்தப் பிராணிகளையும், என்னுடைய சனங்களையும் ஆட்சி செய்ய நான் பகைவரில்லாமலும், என் சத்துருக்களை அழிப்பவனாயும், அரசாட்சியை அடைபவனாயும், என் சத்ருக்களை ஜயிப்பவனாயும் இயங்குவேனாக. 10496



# 175. கிராவாணங்கள்

## 1012. சர்ப்பனான அர்ப்புதனின் புதல்வனான ஊர்த்துவக் கிராவணன்

1. கற்களே! ஸோமத்தைப் பிழியும் கற்களே! தேவனான ஸவிதா தன் தருமத்தால் உங்களைப் பிரேரிப்பானாக. நுகங்களுக்கு இணைக்கப்படுங்கள். இரஸத்தைப் பிழியுங்கள்.

2. கற்களே! துக்கத்தை விலக்குங்கள். துன்மதியை நீக்குங்கள். பசுக்களை எங்களுக்கு மருந்தாகச் செய்யுங்கள்.

3. உயரத்திலுள்ள கற்கள் இணைந்து விருஷபனுக்கு விருஷபத் தன்மையான தன்மையை அளித்துப் பிரகாசிக்கின்றன. போற்றப்படுகின்றன.

4. கற்களே! தேவனான ஸவிதா பொழியும் தலைவனுக்காக உங்களைத் தன் தருமத்தால் பொழியப் பிரேரிப்பானாக. 10500

# 176. அக்கினி

## 1013. ரிபுவின் புதல்வனான ஸூநு

### ரிபுக்கள்

1. ரிபுக்களின் புதல்வர்கள் போருக்குத் தீரமாய் முந்துகிறார்கள். அனைத்தையும் தாங்கும் அவர்கள் பசுவின் மீது கன்றைப்போல் புவியின்மீது பரந்தார்கள்.

### அக்கினி

2. தேவனான ஜாதவேதஸனை, தேவத்தன்மையுள்ள செயலால் முன்னே இயக்குங்கள். அவன் எங்களுடைய அவிகளைக் கிரமமாய்த் தேவர்களுக்கு எடுத்துச் செல்வானாக.

3. இந்த அக்கினி தேவர்களை விரும்புபவனாயிருக்கிறான். ஹோதாவாயிருக்கிறான். இங்கு யக்ஞத்துக்குச் செலுத்தப்

படுகிறன். துரிதமாய்ச் செல்லும் சூரியனைப்போல் பிரகாசிப்பவனும், அவிகளையும் தேவர்களையும் இணைப் பவனும், அறிஞர்களால் சூழப்பட்டவனுமான அக்கினி தேவர்களை எங்ஙனம் போற்ற வேண்டுமென்பதைச் சுய மாகவே அறிகிறன்.

4. இந்த அக்கினி மனிதனுல் தோன்றும் அமிருதர் களால் வரும் விபத்திலிருந்து பாலிக்கிறன். வலிமையை முந்தும் வலிய தேவன் சிவனைப் பிறப்பிக்கும் யக்ஞத்துக்காக சிருஷ்டிக்கப்பட்டான். 10504

## 177. மாயாபேதம்

### 1014. பிரஜாபதியின் புதல்வனுன பதங்கள்

1. ஆற்றலுள்ளவனுடைய ஞானத்தால் புலனுகும் பறவையை—சூரியனை—இருதயத்தில் இருப்பவனுக அறி ஞர்கள் மனத்தால் காண்கிறர்கள். கவிகள் சூரிய மண்ட லத்தின் நடுவிலிருக்கும் புருடனைப் பார்க்கிறர்கள். சூரியோபாசனையைச் செய்பவர்கள் ரசிமிகளின் இடமான சூரியமண்டலத்தை விரும்புகிறர்கள்.

2. பறவை—சூரியன்—மொழியை மனத்தால் ஏந்து கிறது. அந்த மொழியின் கருப்பத்தின் நடுவிலிருக்கும் கந்தர்வன்—பிராணவாயு—கூறுகிறன். கவிகள் ருதத்தின் —யக்ஞத்தின்—ஸ்தானத்திலே அந்த ஒளியுள்ளதும், சோதிமயமாயிருப்பதும், மனத்தை வசப்படுத்துவதுமான மொழியைப் பாலிக்கிறர்கள்.

3. நான் எப்பொழுதும் இறங்காதவனும், தன் வழி களால் கிழக்கிலும் மேற்கிலும் செல்பவனும், பாலகனு மான சூரியனைப் பார்த்தேன். தன் ஒளியால் சோதியின் நான்கு திசைகளையும் இடைவெளிகளையும் உடுத்துபவ னுன அவன், உலகங்களின் நடுவே சதா சுற்றி வருகிறன். 10507



## 178. தார்ட்சியன்

### 1015. தார்ட்சியன்—அரிஷ்டநேமியின் புதல்வன்

1. நாங்கள் இங்கு எங்களுடைய ஸ்வஸ்திக்காக வலியனும், தேவனுல் பிரேரிக்கப்பட்டவனும், ஜயிப்பவ னும், தேவர்களைக் கடப்பவனும், தடைபடாத தேருள்ள வனும், பகைப்படைகளை வெல்லுபவனும், துரிதனுமான தார்க்ஷியனை அழைக்கிறேம்.

2. இந்திரனுடைய தானத்தைப்போல் தார்க்ஷியனு டைய தானத்தை அடிக்கடி போற்றும் நாங்கள் எங்களு டைய சுவஸ்திக்காகக் கப்பலில் ஏறுவதுபோல் அவன் மீது ஏறுவோமாக. சோதியே! புவியே! பரந்தவர்களும்' விரிந்தவர்களும், பலவிதமாயுள்ளவர்களும், கம்பீரமாயு முள்ள உங்களிடம், தார்க்ஷியன் வரும்போதும் உங்களிட மிருந்து செல்லும்போதும் நாங்கள் துன்பமாகாமலிருப் போமாக.

3. எவன் தன் பலத்தால் பஞ்ச சனங்களுக்கு சலங் களைத் தன் ஒளியால் சூரியனைப்போல் பரத்துகிறனே அவனுடைய சலனம் நூறுகளையும் ஆயிரங்களையும் அளிக் கிறது. எவனுலும் தடுக்கமுடியாத தவருத சரத்தைப் போல் அவனுடைய கதி இயங்குகிறது. 10510

## 179. இந்திரன்

### 1016. மூன்று ரிஷிகள்

#### உசிநானின் மகன் சிபி

1. அறிஞர்களே! எழுந்திருங்கள். உரிய காலத்துக் குரிய இந்திரனுடைய பாகத்தை உற்று நோக்குங்கள். அது பக்குவமாயிருந்தால் அளியுங்கள். பக்குவமற்றிருந் தால் இந்திரனைப் பனுவலால் போற்றுங்கள்.

#### பிரதர்த்தனன் – காசிராஜன்

2. அவி பக்குவம் செய்யப்பட்டிருக்கிறது. இந்திரனே! எங்களிடம் வரவும். சூரியன் தன் வழியிலே பாதி சென்று

விட்டான். நண்பர்கள் தங்கள் நிதிகளோடு சுற்றிவரும் சனத் தலைவனுக்குக் காத்திருக்கும் குலபதிகளைப்போல் சுற்றிலும் அமர்ந்திருக்கிறார்கள்.

வசுமனன்—ரோஹிதசுவனுடைய மகன்

3. அவி. ஆபீனத்திலும், அனலிலும் பக்குவப் பட்டிருக்கிறது என நினைக்கிறேன். நான் இந்த சுத்தமான புதிய அவியை நன்கு பக்குவப்பட்டது என நினைக் கிறேன். இந்திரனே! வச்சிரமேந்துபவனே! பல செயல்களை நடத்தும் நீ, நடுப்பகல் யக்ஞத்தின் தயிரைப் பிரியத்தோடு பருகவும். 10513

## 180. இந்திரன்

### 1017. ஜயன் - இந்திரனுடைய புதல்வன்

1. இந்திரனே! புருஹூதனே! நீ உன்னுடைய பகைவர்களை ஜயித்தாய். உன்னுடைய பலம் முதன்மை யானது. உன்னுடைய தானத்தை இங்கு புலப்படுத்தவும். உன்னுடைய வலது கைகளிலே செல்வங்களை ஏந்தி வரவும். நீ செல்வங்கள் நிறைந்துள்ள நதிகளுக்குத் தலைவனாயிருக்கிறாய்.

2. நீ மலைகளிலே வசித்துத் திரியும் சிங்கத்தைப் போல் பயங்கரனாயிருக்கிறாய். மிக்கத் தூரமாயிருக்கும் உலகத்திலிருந்து வரவும். இந்திரனே! உன்னுடைய வேகமாயும் கூரியதாயுமுள்ள ஆயுதத்தைக் கூர்ப்பித்து, அதனால் எங்கள் பகைவர்களை அழிக்கவும். எங்கள் சத்துருக்களைப் புறப்படுத்தவும்.

3. இந்திரனே! நீ பாலிப்பதும் விரும்பத் தகுந்தது மான பலத்தோடு பிறந்தாய். விருஷபனே! நீ எங்களிடம் நட்பற்றிருந்தவனை நீக்கினாய். நீ தேவர் களுக்குப் பரந்த உலகத்தைச் செய்தாய். 10516



## 181. விசுவேதேவர்கள்

### 1018. (1) விரதவாசிஷ்டன் (2) ஸப்பிரபாரத்வாஜன் (3) கர்மன்சௌர்யன்

1. வசிஷ்டனுக்குப் பிரதன் என ஒரு மகனுண்டு. ஸப்பிரதன் என வேறு மகனுமுண்டு. அவன் அவர் களோடு தாத்ருவினிடமிருந்தும், ஒளியுள்ள ஸவிதாவினி மிருந்தும், விஷ்ணுவினிடமிருந்தும் அநுஷ்டுபு ரிக்கோடு அளிக்கப்பட்ட அவியின் ரதந்திர பாகத்தை எடுத்துக் கொண்டான்.

2. அவர்கள் ஒதுக்கப்பட்டிருந்தும், யக்ஞத்தின் மேன்மையாயும், மர்மமாயுமுள்ள ஸாரத்தை–பிரகத்தை– கண்டார்கள். பரத்வாஜன் தாத்ருவினிடமிருந்து, ஒளி யுள்ள ஸவிதாவினிடமிருந்து, விஷ்ணுவினிடமிருந்து, அக்கினியினிடமிருந்து பிருஹத்தைக் கைப்பற்றினான்.

3. அவர்கள் தங்கள் மனக்கண்களால் தேவர் களுக்குச் செல்லும் வழியாயிருப்பதும், இறங்கி யிருப்பதுமான முதன்மையான யஜுஸைக் கண்டார்கள். அறிஞர்களான அவர்கள் தாத்ருவினிடமிருந்தும், ஒளி யுள்ள ஸவிதாவினிடமிருந்தும், விஷ்ணுவினிடமிருந்தும், கருமத்தை —சூடான பாலை— பானத்தை — கைப் பற்றினார்கள். 10519

## 182. பிரகஸ்பதி

### 119. தபுர்மூர்த்தனன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. கட்டங்களைக் கடத்தும் பிரகஸ்பதி எல்லாத் தீமைகளையும் நீக்குவானாக. நிந்திப்பவனுடைய ஆயுதத்தை விலக்குவானாக. புகழற்ற பகைவனைக் கீழே வீழ்த்துவானாக. துன்மதியைத் தடுப்பானாக. யக்ஞக் கர்த்தாவுக்கு சுகத்தையும் செல்வத்தையுமளிப்பானாக.

2. நராசம்ஸன் எங்களைப் பிரயாஜ யக்ஞத்தில் பாலிப் பானாக. அழைப்புக்களிலே அநுயாஜன் – அக்கினி–எங்

களுக்கு சுகத்தைத் தருபவனாயிருப்பானாக. பிரகஸ்பதி புகழற்ற பகைவனைக் கீழே தள்ளுவானாக. அவன் துன்மதியைத் தடுப்பானாக. அவன் யக்ஞக் கர்த்தாவுக்கு சுகத்தையும் செல்வத்தையுமளிப்பானாக.

3. தபுர்மூர்த்தனன் பிரம்மத் துவேஷிகளான அரக்கர்களைப் பற்பப்படுத்துவானாக. பிறகு துன்புறுத்தும் அரக்கர்தனை அழிக்கச் செல்வானாக. பிரகஸ்பதி புகழற்ற பகைவனைக் கீழே தள்ளுவானாக. துன்மதியைத் தடுப்பானாக. யக்ஞக் கர்த்தாவுக்கு சுகத்தையும் செல்வத்தையுமளிப்பானாக. 10522

## 183. மூவர்கள்

### 1020. பிரஜாபதியின் புதல்வனான பிரஜாவான் யக்ஞக்கர்த்தா

1. மனைவி பேசுகிறாள் : நான் அறிஞனும், தவத்திலிருந்து பிறந்தவனும், தவத்திலே புகழுள்ளவனுமான உன்னை, என் மனத்தால் கண்டேன். புதல்வர்களை விரும்பும் நீ, இந்த உலகத்திலே பிரசைகளையும் செல்வங்களையும் அனுபவித்துப் புதல்வர்களைப் பிறப்பிக்கவும்.

மனைவி

2. தலைவன்—கணவன் பேசுகிறான்: நான் அழகோடு சொலிப்பவளும், பருவ காலத்தில் உன்னுடைய தேகத்துக்கு உன்னுடைய கணவனுடைய பரிசத்தை நாடுபவளாயிருக்கும் உன்னை, என் மனத்தால் கண்டேன்–அறிந்தேன். மிக்க யுவதியாயிருக்கும் நீ என்னிடம் வா. புதல்வர்களை விரும்பும் நீ, புதல்வர்களை ஏந்தவும்.

ஹோதா

3. ஹோதா பேசுகிறான் : நான் ஓஷதிகளிலும், எல்லா சீவனுள்ள பிராணிகளிலும் கருவை ஸ்தாபிக்கிறேன். நானே புவியிலே பிரசைகளை ஸ்தாபிக்கிறேன். நானே புவியிலே பிரசைகளைப் பிறப்பிக்கிறேன். நான் அந்நிய ஸ்திரீகளிலும் புதல்வர்களைப் பிறப்பிக்கிறேன். 10525



## 184. பலதேவர்கள்

### 1021. கருப்பத்தைச் செய்யும் துவஷ்டா அல்லது பிரஜாபதியின் புதல்வனான விஷ்ணு

1. துவஷ்டா ரூபங்களை உருவப்படுத்துவானாக. பிரஜாபதி ரேதஸைப் பொழிவானாக. தாத்ரு கருவை ஏந்துவானாக.

2. ஸநீவாலியே! நீ கருவை ஏந்தவும். ஸரஸ்வதியே! நீ கருவை ஏந்தவும். கமலமாலைகளை அணிந்த தேவர்களான அசுவினிகள் கருவை ஏந்துவார்களாக.

3. நாங்கள் எந்தக் கருவை அசுவினிகள் தங்கள் அரணிகளால் கடைந்தார்களோ அதை நீங்கள் பத்தாவது மாதத்திலே புலப்படுத்த நாங்கள் அழைக்கிறோம். 10528

## 185. ஆதித்தியர்கள்

### 1022. ஸத்தியதிருதி – வருணன்

1. மூன்று தேவர்களான மித்திரனுடைய, வருணனுடைய, அரியமானுடைய, பெரிய, பிரகாசமான எதிர்ப்பற்ற பாலனம் எனக்கு அளிக்கப்படுக.

2. அவர்களுடைய துன்புறுத்தும் பகைவன் மனைகளிலும், வழிகளிலும், ஆதானங்களிலும் அதிகாரமில்லாமலிருப்பானாக.

3. அதிதியின் புதல்வர்களால் நித்தியமான சோதியளிக்கப்பட்ட மனிதன் நீடூழி வாழ பகைவன் அவன் மீது அதிகாரமில்லாமலிருப்பானாக. 10531

## 186. வாயு

### 1023. வாதாயன உலன்

1. வாதன் நோயை நீக்குவதும், சுகத்தை, ஔஷதத்தை எங்கள் இருதயங்களுக்கு வீசுவானாக. அவன் எங்கள் ஆயுளை நீடிப்பானாக.

2. வாதனே! நீ எங்களுடைய தந்தை. நீ எங்களுடைய சகோதரன். நீ எங்களுடைய நண்பன். நாங்கள் சீவிக்க பலத்தையளிக்கவும்.

3. வாதனே! உங்களுடைய மனையில வைத்திருக்கும் அந்த அமுத நிதியிலிருந்து அமுதத் தன்மையை நாங்கள் வாழ அளிக்கவும். 10534

## 187. அக்கினி

### 1024. வத்ஸன் – அக்கினியின் புதல்வன்

1. மானிடர்களின் விருஷபனை அக்கினிக்குத் துதியைக் கூறவும். அவன் எங்களைத் துவேஷிப்பவர்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக.

2. எட்டாத தூரத்திலிருந்து நான் சென்றுள்ள பாலை வனத்திலே உக்கிரமாய்ப் பிராகாசிக்கும் அக்கி எங்களைத் துவேஷிப்பவர்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக.

3. பொழிபவனும், தன்னுடைய சுத்த காந்தியால் அரக்கர்களை அழிப்பவனுமான அக்கினி எங்களைத் துவேஷிப்பவர்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக.

4. இருக்கும் எல்லாப் பொருள்களைப் பார்ப்பவனும், அவற்றை நன்கு அறிபவனுமான அக்கினி, எங்களைத் துவேஷிப்பவர்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக.

5. வானுக்கப்பாலுள்ள தேசத்திலே பிறந்த பிரகாசமாயுள்ள அக்கினி எங்களைத் துவேஷிப்பவர்களுக்கப்பால் கடத்திச் செல்வானாக. 10539

## 188. அக்கினி ஜாதவேதஸன்

### 1025. அக்கினியின் புதல்வனான சியேகன்

1. உணவைத் தரும் ஜாத வேதஸனை அவன் எங்களுடைய இந்தத் தருப்பையின் மீது உட்கார குதிரையைப் போல் பிரேரியுங்கள்.



2. நான் பொழிபவனும், விப்பிரப் புதல்வர்களுள்ளவனுமான இந்த ஜாத வேதஸனுக்கு மகத்தான நல்ல துதியைக் கூறுகிறேன்.

3. தேவர்களுக்கு அவிகளை எடுத்துச் செல்லும் ஜாத வேதஸனுடைய சுவாலைகளோடு அவன் எங்களுடைய யக்ஞத்தைச் செழிப்பிப்பானாக. 10542

## 189. சூரியன்

### 1026. ஸார்பராஜ்னி

1. சலனமாகும் பல நிறமுள்ள இந்தப் பசு–சூரியன் வந்தது. அது தன் தாயின்–புவியின் முன்னே–அமர்ந்தது. அது தன் தந்தையான சோதிக்கு முன்னேறுகிறது.

2. அவனுடைய காந்தி பிராணனை சுவாசித்த பிறகு அதைப் புறப்படுத்தி தேகத்தின் நடுவிலே இயங்குகிறது. மகிஷனான அவன் சோதியைப் பார்க்கிறான்.

3. இரவு பகல்களின் முப்பது ஸ்தானங்கள் சூரிய ரசிமிகளோடு பிரகாசிக்கின்றன. துதியின் குரல் சூரியனுக்கு எழுகிறது. 10545

## 190. குறிக்கப்படும் தேவர்கள்

### 1027. அகமர்ஷனன் – மதுச்சந்தஸனின் புதல்வன்

1. ருதமும், உண்மையான சங்கற்பமும், சத்தியமும், உண்மையான மொழியும் கடுந் தவத்திலிருந்து பிறந்தன. அத் தவத்திலிருந்து இரவு பிறப்பிக்கப்பட்டது. அத் தவத்திலிருந்து சலமயக்கடலும் எழுந்தது.

2. சலமய சமுத்திரத்திலிருந்து பிறகு வருடம் பிறப்பிக்கப்பட்டது. காலன் இரவுகளையும் பகல்களையும் கற்பித்து ஒவ்வொரு நிமிடத்தையும் வசப்படுத்துபவனாயிருக்கிறான்.

3. தாத்ரு பூர்வத்திலே சூரியனையும் சந்திரனையும், சோதியையும், புவியையும், வானையும், சுகமான சோதியையும் கற்பித்தான். 10548

# 191. சபை

## 1028. ஸம்வனன ஆங்கிரஸன்

### அக்கினி

1. வர்ஷிப்பவனான அக்கினியே! தலைவனான நீ எல்லாப் பிராணிகளோடும் சேர்கிறாய். நீ இளையின் பதத்திலே சொலிப்பிக்கப்படுகிறாய். எங்களுக்குச் செல்வங்களை ஏந்தி வரவும்.

### ஸபை

2. நீங்கள் சேர்ந்திருங்கள். நீங்கள் ஒருமித்துப் பேசுங்கள். பழைய தேவர்கள் யக்ஞத்தின் தங்கள் பாகத்தை ஐக்கியமாய் ஏற்றுக்கொண்டார்கள். அங்ஙனமே உங்கள் மனங்கள் ஐக்கியமாய் அறிந்துகொள்க.

3. உங்களுடைய மந்திரம் சமமாயிருக்க. சபை சமமாயிருக்க. மனம் சமமாயிருக்க. விருப்பமும் இணைந்திருக்க. நான் உங்களுக்குச் ஸமமான மந்திரத்தைக் கூறுகிறேன். நான் உங்களுக்கு ஸமமான அவியோடு அளிக்கிறேன்.

4. உங்களுடைய சங்கற்பம் சமமாயிருக்க. உங்களுடைய இருதயங்கள் சமமாயிருக்க. அனைவரும் சந்தோஷமாய் ஐக்கியமாக உங்களுடைய எண்ணங்கள் எல்லாம் ஐக்கியமாயிருக்க. 10552

மண்டலம் 10:

சூக்தங்கள் 191 இருக்குக்கள் 1784

## பத்தாவது மண்டலம் – இரண்டாம் பாகம்

## இருக்கு வேதம் முற்றிற்று.

## PUBLISHED WORK OF SHRI M. R. JAMBUNATHAN

### Tamil Books :

Swami Dayananda Saraswathiyin Charithram — 1918.

Satyartha Prakasham — A Tamil translation of Dayananda Saraswathi, book of the same title.

Roja Thottam or a Tamil translation of Shaik Shadis Gulistan from English — 1926.

Tirumoorthi Unmai or Truth of Trinity — 1928.

Yoga Asanas — 1929.

Cheena Vedam or Maxims of Confuscious — 1928.

Life of Mazzini and Duties of Man — 1931.

Veera Sanyasi Shraddhananda Charithram — 1931.

Upanishad Stories — 1932.

Kathopanishad or Yama speaks — 1932.

Yajurveda Satha Patha Brahmana Stories — 1933.

Katha Ratham — A book of short stories — 1933.

Veda Chandrika or A. B. C. of Vedas — 1934.

Sama Vedam — A Tamil translation of Sama Veda from Sanskrit — 1935.

Yajur Vedam — A Tamil translation of manthras of Krishna Yajurveda and Sukla Yajurveda — 1938.

Atharva Vedam — A Tamil translation of Atharva Veda from Sanskrit — 1940.

Rig Vedam — Part I — A Tamil translation of Rig Veda from Sanskrit — 1977 (Posthumous)

### English Books :

1) Yoga Asanas — First Edition — 1938; Second Edition — 1943.

2) Yoga Body — 1941.

3) Swami Shraddhanand — Published by Bharatiya Vidya Bhavan — 1961.